# தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை

## 2

பதிப்பாசிரியர்

முனைவர் த.கோ. பரமசிவம்

முனைவர் வே.இரா. மாதவன்

புலவர் ப.வெ. நாகராசன்

திரு மோ.கோ. கோவைமணி



தண்டபாணி சுவாமிகள்

நினைவு நூற்றாண்டு விழா வெளியீடு

கோயம்புத்தூர்

1998

3-5

# தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை

## தொகுதி இரண்டு


பதிப்பாசிரியர்

முனைவர் த. கோ. பரமசிவம்
முனைவர் வே. இரா. மாதவன்
புலவர் ப. வெ. நாகராசன்
திரு. மோ. கோ. கோவைமணி





தண்டபாணி சுவாமிகள் நினைவு
நூற்றாண்டு விழா வெளியீடு
கோயம்புத்தூர்
1998

○ தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை
தொகுதி இரண்டு

○ தண்டபாணி சுவாமிகள் நிலைவு நூற்றாண்டு விழா
வெளியீடு
திருவள்ளுவராண்டு 2029, ஆனித்திங்கள் 5, 6, 7
(19, 20, 21—6—1998)

○ முதற்பதிப்பு : 1998 ஜூன் திங்கள்

○ விலை : உருபாய் 250/-

○ நூல் கிடைக்குமிடம் : தவத்திரு ஆதீன முதல்வர் அவர்கள்
கௌமார மடாலயம்
சின்னவேடன்பட்டி அஞ்சல்
கோயம்புத்தூர் – 641 006.
(0422) 86370, 866094.

○ அச்சாக்கம் : சபாநாயகம் பிரிண்டர்ஸ்
சிதம்பரம் – 608 001.

# ஆய்வு மலர்கள்

# சுவாமிகளும் தமிழலங்காரமும்

சா. அங்கயற்கண்ணி

'அலங்காரம்' என்பது, ஒரு பொருளைப் பற்றி விவரித்துப் பாடுவதாம். கந்தனின் சிறப்பியல்புகளைக் கூறிப் பாமாலையால் அலங்காரம் செய்தது 'கந்தரலங்காரம்' ஆதல்போல, தமிழ் மொழியின் பெருமைகளைக் கூறித் தமிழன்னைக்கு அலங்காரம் செய்வது தமிழலங்காரமாகும். வடமொழி, தென்மொழி இவற்றில் எது உயர்வு என்ற வாதம் எழுந்தபோது முடிவுகாண முடியாமல் சீட்டெழுதிப் பார்த்தபொழுது, 'தமிழே உயர்ச்சி' என்ற சீட்டு கிடைக்க, சுவாமிகள் இந்நூலைப் பாடினார். 100 பாடல்களாய் அமைந்த இந்நூல் தமிழின் சிறப்புக்களையும் பெருமைகளையும் விளக்குகின்றது. இறைவன், புலவர்கட்கு அருளிய செய்திகளும்; புராணச் செய்திகளும் இதன்பாலுள்ளன.

நூலின் நோக்கமும் பயனும், தமிழின் பெருமைகள் சுவாமிகளின் இயல்புகள் மற்றும் அவர்தம் புலமைத்திறனும் சமயப்பற்றும் இக்கட்டுரையில் கூறப்பெற உள்ளன.

## 1. நூலின் நோக்கமும் பயன்பாடும்

1964-இல் வெளியிடப்பெற்ற இந்நூல், நூறு பாடல்களும் உரைக்குறிப்புகளும் கொண்டுள்ளது. இறுதிப்பகுதியில் தமிழ்த் துதிப் பதிகமும் அமைந்துள்ளது.

"தமிழே உயர்ச்சி என்று சீட்டுக்கொடுத்த பெருமாளே" என்று திருப்புகழ்ப்பாட்டு ஓதினர் ஆசிரியர். பின்பு இந்நூலைப் பாடினர் என்பர். வடமொழியை இகழ்வது இந்நூலின் நோக்கமன்று; தமிழின் சிறப்பைப் பற்றிக் கூறுவதே இதன் நோக்கம் (பா. 23) என்று இந்நூல் எழப்புகுந்ததன் நோக்கத்தை ஆசிரியர் கூறுவார். இந்நிலையில் உள்ளோரும், அரசபதவியிலிருப் போரும் என இருதிறத்தாரும் விரும்பிய பயனைத் தருவது தமிழ் என மொழியுமிடத்து, 'இப்பதிகம் ஓடு கொள்ளினும் உயர்முடி

கொள்ளினும் உலகோர் நாடும் மெய்ப்புகழ்க் கடலினை நல்கிடும் அன்றே' (த.து. பதிகம்; 11) என்று நூற்பயன் உரைப்பார்.

## 2. தமிழின் பெருமைகள்

'தமிழலங்காரம் என்ற இந்நூலின் தலைப்பே தமிழின் பெருமைகளை நுவலுவது என்ற பொருளை உணர்த்தும். சுவாமிகளின் இறைப்பற்றைப் போலவே தமிழ் மொழிப்பற்றும் அமைந்துள்ளது. இந்நூல் போன்று, முத்தமிழ்ப்பாமாலை, தமிழைத் துதித்த பதிகம், தெய்வங்களுக்குத் தமிழாசை விளைத்த பதிகம் எனப் பல நூல்களும் எழுதி இருப்பது இவரது மொழியார்வத்தை விளக்கிடும்.

அருந்தமிழ், நறுந்தமிழ், பொருந்தமிழ், இன்தமிழ், ஒண்தமிழ், வெண்தமிழ், தண்தமிழ், பன்னுதமிழ், செந்தமிழ், செழுந்தமிழ், பைந்தமிழ், பசுந்தமிழ், வயங்குதமிழ் எனப் பலவாறு தமிழை விளிக்கின்றார். தமிழை இறைத்தொடர்பாகக் காட்டுமிடத்து, தமிழ்த்தெய்வம் (12), தெய்வத்தமிழ் (5) என்பார்.

### தமிழரும் வடமொழியும்

இம்மொழிகளைப் பற்றி உரைக்குமிடத்து, தமிழ் தனித் தியங்கும் வல்லமை உடையது. தேவையானால் வட சொல்லையும் சமத்துவ முறையில் கொள்ளலாம் என்பார். வண்ணத்தியல்பு என்ற சந்த இலக்கண நூலில், சந்தப்பாடலில் வடமொழிச் சொற்கள் சேரவாகாது. சேரின் அந்த இயல்பு கெடும் என்பார். வடமொழி கலந்திடாத தமிழென விளங்கு பாடல் எனத் தமது திருப்புகழ்ப்பாட்டு ஒன்றில் கூறுவார். எனவே, வடமொழிமீது வெறுப்பு உணர்ச்சி ஆகாது என்றும், தமிழோடு ஏனைய மொழி கலக்க வேண்டுவதில்லையென்றும் தெரிவிப்பதறிக' என்பார். தெய்வம் அருளுரை வழங்கும்போது, அசரிரி மொழியாகத் தமிழ்ச்சொல்லாகவே கூறியது என்பது தமிழின் சிறப்பு. (47) ஞானமொழி தமிழ்மொழியே (19) என்பார். சங்கராச்சாரியார், சம்பந்தரைத் 'திராவிட சிசு' என்று போற்றியது அவர்தம் தமிழால்தான் (20) என்பார்.

அகத்தியர் முதலாகப் பல புலவர்களை வாழ வைத்ததும், சமயக்குரவர்களும் ஆழ்வார்களும் இறையருள் பெற உதவியதும், இறைவனே புலவர்களை நாட வைத்ததும் தமிழே என்பன

போன்ற கருத்துக்களை இலக்கிய மேற்கோள்களுடன் எடுத்துரைக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

ஆக்கவல்ல தமிழ் அழிக்கவும் வல்லது என்பார். சான்றாகக் காளமேகப்புலவர், பல புலவர்களைச் சிறை வைத்த திருமலை ராயன் எனும் அரசனை மண்மாரிபெய்து மாயும்படியும் செய்தது தமிழ் (80) என்று கூறுவதைச் சுட்டலாம். இதுபோன்ற பல பாடல்களில் (74, 75, 80, 82-85, 91-92) அழிக்கவல்ல தமிழின் செய்திகள் கூறப் பெறுகின்றன.

சிறப்புமிக்க இத்தமிழ்மொழி எப்படிப்பட்டவரையும் தேவர் கட்கும் தேவராகச் செய்யவல்லது (96) என்ற தமிழின் பயன் பாட்டையும் கூறுவார்.

### 3. சுவாமிகளின் இயல்புகள்

'எடுத்துக்கொண்ட பொருளில் ஐயப்பாடில்லாது தெளிந்த அறிவு கொண்டிருத்தல், மிகுந்த தேர்ச்சி பெற்றிருத்தல், அணி நலம் வாய்ந்த சிறந்த சொற்களைக் கையாளுகின்ற புலமைத் திறம் படைத்திருத்தல்... போன்றவற்றினைப் புலவர் தம் தேவை களாகக் கொள்கிறார்' என்ற கருத்து சிவகாமி. ச, 'வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள்' 'தமிழ் இலக்கியக் கொள்கை' 6, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20, ஏப்பிரல், 1981, ப. 257. இவண் சுட்டுதற்குரித்து.

#### அ) தமிழார்வம்

தமிழின் சிறப்புக்களைக் கூறவரும் சுவாமிகள், 'தமிழே உயர்ச்சி' என்ற சீட்டினைக் கண்களில் ஒற்றி, தலைமீது தரித்து, பின் வாயிலிட்டு மென்று உண்டனர் என்ற கருத்து இவரது தமிழார்வத்தை உணர்த்தும். தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில் வெகுளியற்றிருப்போன் வெறும் புலவோனே எனத் தமிழ்மீதுள்ள உரிமை காரணமாக மொழி கின்றார்.

#### ஆ) நலம் பாராட்டல்

எப்புலவர்களையும் போற்றுதல் இவர்தம் இயல்பு. சான்றாக, அகத்தியர் மொழி உயர்வு என்பதை வடமொழிப் புராணமே கூறும் என்பார் (6) ஔவையின் அருள்வாக்கால்

பனைத்துண்டு பழம் தந்ததும் (43), வெட்டப்பட்ட பலா தழைத்ததும் (44) தமிழால் நடந்தது என்பார். குமரகுருபரர், கம்பர் (42, 73) இவர்களைக் காத்தது தமிழ் என்பார். இவ்வழி பிற புலவர்களையும் போற்றும் பண்பு இவரது இலக்கியப் பற்றினைப் புலப்படுத்தும்.

### இ) கருத்து வெளிப்பாடு

தனது படைப்பில் தனது விருப்பினையும் எண்ணங்களையும் வெளிப்படையாகவோ அன்றி மறைமுகமாகவோ உணர்த்துவது இவரது இயல்பு. உயிர்ப்பலி செய்வதை வெறுக்கும் ஆசிரியர் இதனை வெளிப்படுத்துமிடத்து, வேதம் தமிழ்மொழியிலும் உண்டு. ஆயின் ஆட்டை வதைத்து ஊனை உண்ணும்படித் தமிழ்வேதம் கூறவில்லை என்பார். இதற்கு அரணாக ஔவை, வள்ளுவனை மேற்கோளாகக் காட்டுவார்(4). மேலும், செயலற்ற புலவன் போலிப்பசு போன்றவன் (98) என்பதும் இவர்தம் கருத்து. எம்மொழிப் புலவர்க்கும் இல்லாச் சிறப்பு தமிழ்ப் புலவர்க்கு உண்டென்பார் (18, 24-27).

### ஈ) சமரச நோக்கு

வடமொழி அபிமானத்தால் தமிழைப் பழிப்போரும், தமிழபிமானத்தால் வடமொழியை இழிப்போரும் பகை காரண மாகப் பேசுபவராதலின், சண்டாளர் என்று கூறினார். இதனால் இவரது சமரச நோக்கு புலனாகும் (23).

## 4. புலமைத்திறன்

புலமையுடையவருக்கு மட்டுமே புரியக்கூடிய கடுநடை வழக்கிலிருந்து சிறப்புப் பெற்றிருந்த காலத்தில் மிக எளிய நடையில் இவர் படைத்திருப்பது குறிப்பிடற்பாலது. தன் படைப்புகள் பாமரர்க்கும் புரிதல்வேண்டும் எனும் கொள்கையே இதற்குக் காரணமாகலாம்.

### அ) நடையமைப்பு

சுவாமிகளை தன் புலமையில் கொண்டுள்ள நம்பிக்கை அளவிடற்கரியது. தன்னைத்தான் வாழ்த்துதலும், 'தன்மை' நிலையில் தன் கருத்தை மொழிதலும் இவரிடத்துண்டு. அருமைத் திருப்புகழோர் பாட்டும் வரைந்து தமிழலங்காரமும்

பின் பகர்க்தேன் என நூலின் முதலிலும் 'துணிந்து மொழிகுவனே' (1) என்றும் கூறுவார். 'நான் இந்தவாறு நவின்ற தமிழ் அலங்காரத்தின் கவிநூறும் கருதி அறிந்துய்மினே' (18) என்றும் உரைப்பார். 'நீடுசீர்த்திடு நெல்லையில் நிலவிய சிறுவன் பாடும் முதுதமிழ்' (11) என்று தன் வரலாறும் உரைப்பார்.

படிப்போரை உளப்படுத்தும் பாங்கும் உண்டு. சான்றாக, எலும்பின் குடத்திலிருந்து பூம்பாவை வரச் சம்பந்தர் பாடியது தமிழன்றி வேற மொழியா என வினவும் வினா நடையமைப் பினைக் காணலாம். 'செந்தமிழே அல்லவோ? அன்றி வேறுகலை நட்டவண் செய்ததுண்டேற் சொல்லுவீர் இங்கு நன்குணர்ந்தே' (25) என்பதாக இஃதமையும். இதுபோன்று 'என்கொல்லோ' (2), 'கொலோ' (18) என்ற வினாச்சொற்களுமுண்டு. செய்யுளும் உரைநடையும் கலந்த வடிவமாக இவர்தம் பாடல்கள் உள்ளன. தமிழின் சிறப்பைப் பல்வேறு புராணங்கள் வழியாகக் கதை கூறும்பான்மையில் கூறிச்செல்வார். இறைவன் தருமிக்காகக் 'கொங்குதேர்' என்ற பாடல் பாடிய செய்தியும் (31) வந்திக்காக வந்து அடிபட்ட செய்தியும் (16) இவ்விடத்துச் சான்றாகக் கொள்ளலாம்.

### ஆ) இலக்கிய நயம்பட உரைத்தல்

தனது கருத்துகளை உவமை போன்ற இலக்கிய நயமிக்க முறையில் விளக்குவார். தலைமகளின் வலதுமார்பு போல்வது தென்தமிழ். இடதுமார்புக்கு ஒப்பது வடசொல் என்பார் இதனை, ''வாணிமின்னாள் வலக்கொங்கையொப் பாம்தமிழ் மற்றும் ஒரு மாணிளங் கொங்கையொப்பாம் ஆரியம் (5) என்பது விளங்கும். பிறமொழிப் புலவர்க்குக் கிட்டாத பெருமை வான்வழியாகச் சம்பந்தர் பெற்ற அருள் போன்றில்லை என ஒப்புமை நடையும் உண்டு. 'மைக்ககனம் தரப்பெற்றார் மற்று இல்லை' (24) என்பதாக இஃதமையும்.

'ஆலிலை தன்னில் அணிப்பாம் பணையில் அசோதை யன்னார் பாலிலங்கு ஏணையிற்றன்வாய் சுவைத்த பதங்கள்' (41) எனத் திருமாலின் தோற்ற வருணனை அமைப்பும் உண்டு.

'காமாலைக் கண்ணிகர் நெஞ்சுடையார் அது காண்பரிதே' (38) என்று ஆண்டாளின் பெருமை கூறுமிடத்து வழக்கு தொடர் பயன்பாட்டைக் காணலாம்.

'சுவாமிகள் கற்பனைகள் வருணனைகள் போன்றவற்றிற்குப் பெரும்பாலும் இடமளிக்கவில்லை. இவற்றை அவர் விரும்பவில்லை என்பதனை (திருவா. 1.8, 17; 1.1, 27) போன்ற பகுதிகளில் வலியுறுத்தியுள்ளார். எனவே சித்திரகவிகள் தவிர ஏனைய பாடல்கள் நேரிடையாகவே அமைந்துள்ளன. அலங்காரங்களை மறுத்துப் பொருள் தெளிவினையும், சுருங்கக் கூறி விளங்க வைத்தலையும் முக்கியமானதாகக் கருதுகிறார் எனலாம்' என்ற கருத்திற்கேற்பவே இந்நூலும் அமைந்துள்ளது என்றாலும் நூல் முழுதும் தொடக்கம் முதல் இறுதி வரை சொற்சுவை, நடை முதலியன குன்றாமல் அமைந்தமை சிறப்பு.

## 5. சமயப்பற்று

இறைவன் ஒருவனே என்பது இவர் தம் கொள்கை. இந்நூலில் பல இடங்களில் தமிழ்க்கடவுளர்களின் சிறப்பு இயம்பப்படுகின்றது. சான்றாகத் திருமாலும் சிவபிரானும் தமிழ் காத்தமை (8) கூறப் பெறுவதைக் குறிக்கலாம். நூலின் பெரும்பகுதி முருகனின் சிறப்புகள் நுவலப் பெறுகின்றன. முருகனால்தான் இந்நூல் இயற்றப்பெற்றது என்பது (1) குறிக்கப் பெறுகிறது. மேலும் முருகன் நக்கிரரைக் காத்தது (51), முத்து வயிரவப் புலவர் கண்பார்வை பெற்றது (86), பகழிக் கூத்தரின் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றம் (87)என்பன தமிழால் நிகழ்ந்தன என்பார். இதுமட்டுமின்றி அம்பிகையின் அருள் (35), கணபதியின் கருணை (50), கலைமகளின் அருளாற்றல் (76) மீனாம்பிகையின் அருட்கருணை (95) என்பனவும் கூறப்படு கின்றன.

### சைவ, வைணவ சமயக் கருத்துக்கள்

சமயக் குரவர்களின் தமிழ்ப் பணியைப் பலவாறு இயம்பு கின்றார். சுந்தரர் கயிலையில் சேர்ந்தது (13), சிவபிரான் திருவாதவூரரை ஆண்டருளியமை (14), மணிவாசகர் பொருட்டுப் பரமன் குதிரை மீதேறி வந்தமை (15) என்பன சில சான்றுகள். மேலும் தேவாரத் தமிழின் சிறப்பும் கூறப்பெறும் (28, 30).

நம்மாழ்வாரின் திருவாய்மொழி (36), பெரியாழ்வாரின் பல்லாண்டு (37), ஆண்டாளின் திருப்பாவை (38),

திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வாரின் பக்தி உணர்வு (39,40) என்பன வைணவ சமயக் கருத்துக்களாய் இடம்பெறுகின்றன. இப்புலவர்களையெல்லாம் வாழ வைத்ததும் முக்தி பெற வைத்ததும் தமிழன்றி வேறில்லை என்பார்.

## முடிவுகள்

வடமொழி மீது வெறுப்புக் கொள்வது தவறு; தமிழோடு பிறமொழி கலக்க வேண்டுவதில்லை; தமிழே ஞானமொழி என்பது இந்நூலின் நோக்கமாக உள்ளது. தமிழார்வமும், நலம் பாராட்டுமியல்பும், தன் கருத்துக்களை வெளியிடப் படைப்பினைப் பயன்படுத்துதலும், சமரச நோக்கமும் சுவாமிகளின் இயல்புகளாக உள்ளன. பெரும்பாலும் வருணனை உவமை போன்ற இலக்கிய நயமிக்க நடைப்போக்கு இல்லையென்றாலும், படிப்போர்க்குப் புரியும் எளிய நடைப்போக்கு இவரிடத்துக் காணப் பெறுகின்றது. இறைவனது பெருமைகளுடன் தமிழின் சிறப்புக் கூறுமிடங்கள் இவரது சமயப்பற்றை உணர்த்துகின்றன. இலக்கிய மேற்கோள்களும், தமிழால் புலவர்கள் வாழ்ந்த கதைக் கூறுகளும் இவரது தமிழ்ப்புலமையை வெளிப்படுத்துகின்றன. சுவாமிகளின் இறைப்பற்று, மொழிப்பற்று, புலமைப்பற்று என்பன பிரிக்க இயலாதவாறு நூல் முழுமையும் அமைந்து, தொடக்கம் முதல் இறுதிவரை சுவை குன்றாமல் செல்லும் இந்நூல் படிப்போர்க்கு இன்பம் பயக்கும் என்பதில் ஐயமில்லை.

# தமிழும் சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடும்

வ. ச. அபிராமவல்லி

எல்லா உயிர்களிடத்தும் இறைவன் நீக்கமற நிறைந் துள்ளான் என்பது அறியத்தக்கது. இவ்வுண்மையை உணர்ந்த அருள்நெறியாளர் மன்னுயிரை இரக்கமின்றிக் கொல்லுதலும், அவற்றின் ஊனைத் தின்று தம்முடம்பைப் பெருக்குதலும் ஆகிய தீவினைகளை மனத்தாலும் எண்ணமாட்டார்கள்.

**சங்க இலக்கியத்தில் கொல்லாமை**

கொல்லா அறத்தினைப் பற்றி சங்க இலக்கியத்தில் – பட்டினப்பாலையில் செய்தி வருகின்றது. கொல்லாமையை மேற்கொண்டவர் பெரும்பாலும் வேளாளரே என்பது திண்ணம். இவர்களின் முழுமுதற் கடவுள் 'சிவன்' என்றும், இவர் சமயம் 'சைவம்' என்றும் உரைக்கப்பட்டமை அறியப்பெறும். கொல்லாமை பெரிதும் சமணரைச் சார்ந்ததாயினும், சிறப்பாகப் புலால் உண்ணாதவர் சைவர் எனப்பட்டார். புலால் உண்ணாமை, கொல்லாமை இரண்டும் தம் வாழ்வில் மேற் கொண்டோர் சைவரே.

புறாவுக்காகத் தன்னுடம்பினையே ஈந்த சிபியின் சிறப்பினைப் புறநானூறு,

> "தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
> தபுதி யஞ்சிச் சீரை புக்க
> வரையா வீகை யுரவோன் மருக" எனப் பேசுகின்றது.

ஞாயிற்றின் கதிர்களால் எங்கே வெப்பம் தாங்காது மன்னுயிர்கள் இறந்துபடுமோ என்றஞ்சி, வெப்பத்தைத் தணித்து வேண்டுமளவு குறைத்துத் தரும் விரிசடை முனிவர்களும் அக் காலத்தில் வாழ்ந்தமையைத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடு கிறது. "விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை".

மயிலுக்குப் போர்வை கொடுத்த பேகனையும், முல்லைக்குப் பெருந்தேர் கொடுத்த பாரியையும் சங்க இலக்கியங்கள் காட்டு கின்றன.

**சங்க மருவிய கால இலக்கியங்களில் கொல்லாமை**

சங்க மருவிய காலத்தில் புலால் உண்ணாமை வலியுறுத்தப் பெற்றது. நீதி நூல்கள் தழைத்த காலத்தில் கொல்லாமையும் கூறப்பட்டமை விளங்கும்.

''அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத் துண்ணாமை நன்று'' (குறள்–259)

என வள்ளுவர் கொன்று தின்னுதல் கூடாதெனக் கூறுகிறார். திருமூலரும்,

''பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே''

என மிக அச்சுறுத்தி அறிவு தெருட்டினர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இதற்கு மேலாக, ஔவையார் பதிகத்தில்,

''கொம்புடைய விலங்கினமும் குருகினமும்
உணவாகக் கொள்ளுவோரும்
வெம்புதுயர் புரியாராய்க் கருணை கொளச்
செய்திடல் என் விருப்பம் கண்டாய்!''

என அவர்கட்காக இவர் வேண்டுகின்றார்.

குறளின்கண் இல்லாததில்லை, வள்ளுவனார் சொல்லாத தில்லை. கொல்லாமை பற்றிக் கூறும்போது, கொல்லாத அறத்தை மேற்கொண்டானிடம் கூற்றுவனும் செல்லான் என்கிறார். தன் உயிர் நீங்கிப் போவதானாலும் அதைத் தடுக்கத் தான், வேறோர் உயிரை நீக்கும் செயலைச் செய்யக் கூடாது என்கிறார்.

நாலடியார் தீவினையச்சத்தில் தீய செயல்களைச் செய்வ தற்கு அஞ்சுதல் வேண்டும் என்கிறது (121) இதில் கொல்லாமை யும் புலால் உண்ணாமையும் வலியுறுத்தப் பெறுகிறது.

நான்மணிக்கடிகையில் புலால் மறுத்தல் வலியுறுத்தப் பட்டுள்ளது. செருயிரையும் கொல்லாது காய்கறியுணவையே உண்ண வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. "இனிது ண்பா னென்பா னுயிர் கொல்லா துண்பாக" (நான்மணிக்கடிகை: 59) மேலும் பிற உயிர்களை வருத்துதலும், ஊனை விலைக்கு வாங்கி உண்ணாதலும் குற்றம் என்று கூறுகிறது.

"அலைப்பான் பிறவுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டுன் மிலசதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்."

(நான்மணிக்கடிகை–26)

**காப்பியங்களில் கொல்லாமை**

சிலம்பிலும், மேகலையிலும் புலால் உண்ணாமையும், கொல்லாமையும் எடுத்துரைக்கப் பெறுகின்றமை விளங்கும். "ஊனூன் துறமின் உயிர்க்கொலை நீங்குமிம்மை" (வரந்தரு காதை அடி 189) என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

மணிமேகலையில், ஆதிரை பிச்சையிட்ட காதையில், சாதுவன் மனிதரையே கொன்று தின்னும் நாகர் தலைவனுக்குக் கூறும் அறவுரை அவர்களைத் திருத்தியது. அவ்விடத்திலும், நாகர்க் கேற்றாற் போல்,

"மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழி கென"

என்றான் சாதுவன். இங்குச் சாந்தலிங்க சுவாமிகளின் கொள்கை நினைக்கத்தக்கது. வேள்வி, திதி, மருந்து, உயிருய்யுமிடம் ஆகிய நான்கிடத்தும் ஊன் உண்ணலாம் என்று வேதாகம விதியிருப்பினும் வேள்வி யொழிந்த மற்ற இடங்களில் ஊன் உண்டல் தீது என்கிறார் சாந்தலிங்கர். இராமலிங்க அடிகளும், ஊன் உண்போரைப் புறவினத்தார் என்றே உரைக்கின்றார். வேள்வியின் கண்ணும் உயிர்ப்பலி கூடாது என்கிறார் இராமலிங்கர். தண்டபாணி சுவாமிகளும், திருவொற்றியூர் வெண்பாவில், காளியிடம்,

"ஒற்றியூர்க் காளி புனக் கேனோ வூன்விருப்பம்
வெற்றி மழுவானரு ட்சீர் வேண்டாமோ – சிற்றுயிரைக்

கொல்வார்க்குமின்பங் கொடாதா வைன்கண்டாய்
நல்வார்த்தை சொன்னே னிந்நாள்.''

என்றும், திருவான்மியூர்ப் பதிகத்தில்,

''நாவேறு மவள் கேள்வ னடுத்தலையிற் பலிகொள்வாய்
பாவேறப் புனைவார்க்குப் பரிசளித்த விதமியாதோ
தாவேறும் வல்லவுணர் தமக்கமருள் புரிவானே
சேவேறும் பெருமானே திருவான்மியூர்ச் சிவனே''

என்றும் பலியிடுதல் கூடாது என்கிறார்.

வளையாபதி, எல்லா உயிர்களையும் அருள் கூர்ந்து காப்பாற்ற வேண்டும் என்றும் பிற உயிரினங்களின் ஊனை விரும்பி உண்ணக் கூடாது என்றும் கூறுகிறது. ''உயிர்க் ளோம்புமின் ஊன்விழைந்துண்ணன் மின்''

**திருமுறையில் கொல்லாமை**

சுந்தரமூர்த்தி சுவாமிகள், தேவாரத்தில் உயிர்க்கொலை செய்பவர்க்குத் துன்பம் இம்மையே வரும் என்கிறார். கொலைப்பாவத்தின் கொடுமை நீங்குதற்கு வழிகாட்டினமையும் கிழ்வரும் பாடலில் காணலாம்.

''கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்றபாவ வினைக டாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின்றேவர் பிரானிடங்
கன்றினோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே''

தண்டபாணி சுவாமிகளும், வேலர் திருவருள் விநோத வகுப்பில்,

''அபரி மிதகலைமுழுது முயிர்வதை செய்திடல் கொடுமை
யம்மகோவென வோது மெனுமறிஞர் பாகமே
அசடரெனவுலகிகழ மிகுபுலைமிழுமவ
ரஞ்ஞுவாசனைமீறி யவமெனும் விரோதமே''

என்று உயிர் வதை செய்திடல் கொடுமையினைக் கூறுகிறார். சென்னையுறை கந்தனிருபாத வகுப்பில்,

''சற்றுமொருயிர்க்கிடர் வரிற்றுடி துடித்தழுது
தட்டழியு நன்மையினருண்டணாகு போதமே'' எனவும்,

"செற் கொலைமுதற் றவிர்த வத்தினர் நினைத்துனாதி
ருச்சகளமும் மருவ முங் கொளதிபேதமே"

எனவும் கொல்லாமை பற்றிப் பேசுகிறார்.

**சித்தர்களின் பாடல்களில் கொல்லாமை**

பட்டினத்தடிகள், கொலை, புலை முதலான தீவனினைக் கடிதல் வேண்டி இறைவனைத் தொழுதனர், அப்பாடல் வருமாறு.

"கொன்றனை அனைத்தும் அனைத்தும் நினைக்கொன்றன
தின்றன அனைத்தும் அனைத்தும் நினைத்தின்றன"

என்று கூறுகிறார். இவர்க்குப் பின்வந்த தாயுமானாரும்,

"கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே"

"கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே"

என்றவாறு கூறிக் கொல்லா அறத்தைப் பரவச் செய்தலிற்றமக்குள்ள விருப்பத்தையும், அதைக் கடைப்பிடித்தாரை அன்றிப் பிறரை நல்லார் எனக் கருதத் தமதுளம் ஒருப்படாது என்கிறார். தண்டபாணி சுவாமிகளும், கந்தசாமி திருப்புகழில்,

"சகல வுயிர்களு மகவினமெனுமுயர்
நினைவினொருமுது நெறிவழியரசு செய்"

"உயிரொன்றுழல வருந்தாமை தருமுன்பு சியானம்"

எனக் கூறுகிறார். ஔவையாரின் கொன்றை வேந்தனில், நோன்பு என்பது தன் உயிருக்காக இன்னொரு உயிரைக் கொன்று தின்னாமையே யாகும் என்கிறார். "நோன்பு என்பது கொன்று தின்னாமை". புலால் உணவு, கொலை, களவு இம்மூன்றையும் மனிதர்கள் தவிர்க்க வேண்டும் என்கிறார் ஔவையார். தண்டபாணி சுவாமிகள், கந்தசாமி பேரிற் பிள்ளைக்கவியில், சிற்றிற் பருவத்தில், "பொல்லார் நினைத்ததைக் கழுகாதி புசித்து மகிழுஞ் சமராடப் புலவர் பதியிலவுணர் குலம் புகுதாவண்ணம் புரந்துவக்கக் கொல்லாவிரதப் பெருந்தவமே குறியென்றுணராத சமையநெறி குலையத்திருவாய் மலர் திறக்க" என்று தவத்தினில் சிறந்தது கொல்லாமையே என்கிறார்.

புலால் உண்ணாமை ஒன்றே தவப்பயனைத் தரும் என்கிறது அறநெறிச்சாரம். இராமலிங்க அடிகளாரும், உயிர்ப்பலியிடு தலைக் கடுமையாகச் சாடுகிறார். சிறுதெய்வ வழிபாட்டினால் விளையும் கொடுமை இஃது எனவும், இதனால் சிறு தெய்வ வழிபாடே கூடாதென்கிறார்.

தண்டபாணி சுவாமிகள், முருகனைக் குழந்தையாக எண்ணிப் பாடப்பட்ட அம்புலிப் பருவத்தில், வஞ்சம் புரியும் தமையுடையாரை வென்று அம்புலி ஆடவருவாய் என்கிறார். வேலுமயிலுந் துணையெனுஞ்சொல் விளம்பியறியாக் கவிஞரை யும் வேதன் வகுத்த நெறியானும் விடுத்தோருயிர்கொன்றுணவு கொள்ளுமாலுந்திய பாழ்மதம் புகுந்து வஞ்சம் புரிவோர்தமை யும் வென்று அழகார் சென்னைப் பதிக்குகனோடாட வருவாய்'' சிற்றிற் பருவத்தில்,

''நீயின்றி வேறுமொரு தெய்வமுண்டென வெங்க
ணெஞ்சிற் குறித்துளமோ
நெறிதவறி யுயிர்வதைத் தூனூண்டு தடுமாறு
நீசரையடுத்துளமோ
பேயஞ்சிவம் பினிலுயிர்ப்பலி கொடுக்கின்ற
பித்தரைமதித்துளமோ''
''உயிர்வதையாதிய புன்மை கொள் வாரிட
முற்றுத்தவியாதே
புலகமெலாமிகழ துன்மதியாளரொ டொத்துப்பழகாதே''

என்றவாறு கொல்லாமை பற்றி உரைக்கின்றார்.

உயிருடம்பைத் தடிந்து உண்ணும் நெஞ்சுடையாரை ஞானியெனக் கூறுதல் ஒண்ணாது என்பதை குருவின் மீதும், சிவபரம்பொருளின்மீதும் ஆணையிட்டு கூறுகிறேன் எனத் திருவருட்பாவில் (3027) வள்ளலார் கூறுகின்றார்

மக்களில் பெரும்பாலோர் புலால் உண்ணும் பழக்கத்தினை எளிதிற் கைவிட்டு நீங்கும் ஆற்றலற்றவராயினும் இருவகைப் பற்றுக்களையும் துறந்து மெய்யுணர்வுடைய ஞானிகளாவர். அத்திய செயலினைத் தாம் உள்ளுதலும் தீதாகும் என்பதை இப்பாடல் உணர்த்தும். இதன் காரணமாகவே, புலால் மறுத் தலை துறவறவியலில் அருளுடைமையதிகாரத்தின் பின்னும், தவம் என்ற அதிகாரத்தின் முன்னும் வைத்தருளினார். எனவே

புலால் மறுத்தலாகிய விரதம் அருளுடைமையின் காரியமாகவும் தவத்தின் காரணமாகவும் அமைந்தது என்பது ஈண்டு நினைக்கத் தக்கது. வள்ளுவனார், கொல்லாமை, பொய்யாமை இரண்டும் கூறியுள்ளார்.

''ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று''

என்னும் குறளால் கொல்லாமைக்கே முதலிடம் தந்தமை விளங்கும், தண்டபாணி சுவாமிகளும், சிறு தேர்ப் பருவத்தில்,

''நம்பறிவின்றிய புன்மையர்தாமே நடுக்கமடையாரோ
நன்றியுணர்ந்துணை யெண்ணுநர் மேலா நலத்திலமிழாரோ
கொம்பவிர் கின்றவை யுண்ணவுநாணார் குதர்க்கமழியாதோ
கொன்றிடலஞ்சிய நன்னெறி சேர்வார் குதித்து மகிழாரோ''

என்று கொல்லாமை கொண்டு விளங்கிய நற்பண்பு பெற்றார் மகிழ்வர், நன்னெறி சேர்வார் என்கிறார்.

முடிவுரை

''கொல்லாமை''க் கோட்பாடு பண்டைக் காலந் தொட்டே இருந்து வருகின்றது. எகிப்து, கிரேக்க, ரோமானிய காலத்தில் இருந்துள்ளது. தொல்காப்பியம் இலக்கண நூலும், சங்க இலக்கியங்களும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் கொல்லாமைக் கோட்பாட்டினைக் கூறுகிறது. தேவாரத்திலும் சித்தர் பாடல்களிலும், கொல்லாமை பறைசாற்றப் பெறுகிறது. காட்சியங்களும் இவற்றிற்கு அரண் செய்கின்றன. இராமலிங்கர், சாந்தலிங்கர் முதலானோர் தண்டபாணி சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாட்டிற்குப் பெரிதும் துணை செய் கின்றனர். சாந்தலிங்கர் மட்டுமே வேள்வியில் உயிர்ப்பலியினை ஏற்பது நலமே என்கிறார். மற்றவரிடமிருந்து சாந்தலிங்கர் மட்டுமே வேறுபடுவது குறிக்கத் தக்கது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பிற இலக்கியங்கள் அரண் செய்ய சிறந்து விளங்குவதைக் காணலாம்.

# அறுவகை இலக்கணத்துள் சொற்கோட்பாடுகள்

இரா. அரங்கசாமி

என்றுமுள தென்தமிழ் என்று பாராட்டப் பெறும் உயர் தனிச் செம்மொழியாகிய தமிழ் மொழியின் பெருமை மிகவும் மேம்பட்ட ஒன்று. பன்னெடுங் காலமாகவே தமிழ் மொழியானது இலக்கியச் சீர்மையும், இலக்கண வளமும், சொல்லாட்சிச் சிறப்பும், உயர் வழக்கும் கொண்டு விளங்கும். தொன்மைத் தொல்காப்பியம் எழுத்தும், சொல்லும், பொருளும் நாடி உலக வழக்கினையும் பேச்சு வழக்கினையும் தழுவி மேம்பாடு பெற்றுத் திகழ்வது உண்மை. எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று இலக்கணங்களும் அதன்கண் மிக விரிவாகக் கூறப்பெறுகின்றன. பொருளதிகார செய்யுளியலின் வழியாக யாப்பும், உவமையின் வழியாக அணியும் விளக்கப் பெற, ஐவகை இலக்கணங்களும் முறையாகக் காணப்பெறும்.

பின்னர் காலப்போக்கில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்று இவை ஐந்தும் தனித்தனியே வளர்ச்சி பெற்று விளங்குதலைக் காணலாம். இவற்றோடு ஆறாவதாகப் புலமை இலக்கணம் என்ற ஒன்றினைக் கூட்டி 'அறுவகை இலக்கணம்' என்ற பெயரில் தனியே நூல் ஒன்றினைப் படைத்த பெருமைக்கு உரியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவர்.

### அறுவகை இலக்கணம் - இயற் பாகுபாடுகள்

இந்நூல் பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் ஆகியவை நீங்க, எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, புலமை என்னும் ஆறு இலக்கணங்களைக் கொண்டு விளங்கும். ஒவ்வொரு பகுதியுள்ளும் உட்பிரிவுகள் உள்ளன. அவற்றைக் கீழே காண்போம்.

1. **எழுத்திலக்கணம்:-** உரு ஓசையியல்பு, நிலையியல்பு, புணர்ச்சியியல்பு.

2. **சொல்லிலக்கணம்:-** பொதுவியல்பு, பிரிவியல்பு, சார்பியல்பு, திரியியல்பு,

3. **பொருளிலக்கணம்:- அகப்பொருள்:** உறுப்பியல்பு, குறிப்பியல்பு, பழமையியல்பு, துறையியல்பு.

**புறப்பொருள்:** நிலத்தியல்பு, உழியியல்பு, வேற்றுயிர் இயல்பு, கருவியியல்பு, தொகுப்பியல்பு, அகப்பொருள்நிலை.

4. **யாப்பிலக்கணம்:-** இயலிவிசைத் தமிழ் இயல்பு, நாடகத் தமிழ் இயல்பு, வண்ணவியல்பு, மோனையியல்பு, எதுகையியல்பு, நாற்கவி இயல்பு, பனுவலியல்பு.

5. **அணியிலக்கணம்:** உவமையியல்பு, உடைமையியல்பு, கற்பனையியல்பு, நிகழ்ச்சி இயல்பு, ஆக்கவியல்பு.

6 **புலமையிலக்கணம்:** தவறியல்பு, மரவியல்பு, செயல் வகையியல்பு, நடுநிலை, எதிர்நிலை, அருள்நிலை.

**கோட்பாடுகள்**

எழுத்துக்கள் தனித்தும், தொடர்ந்தும் பொருள்தரின் சொல்லாகும். அச்சொற்கள் பெயர், வினை, இடை, உரி என்று நான்கு வகைப்படும். தண்டபாணி சுவாமிகள் தம்முடைய அறுவகை இலக்கணத்துள் கீழ்க்காணும் நான்கு உட்பிரிவு களையும், 111 நூற்பாக்களையும் அமைத்துள்ளார்.

சொல் (1+111)

- பொதுவியல்பு (15)
- பிரிவியல்பு (14)
- சார்பியல்பு (25)
- திரியியல்பு (27)

**பொது இயல்பு**

ஆசிரியர் முதற்கண் சொல் பற்றிய விளக்கங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

'சொல்லெனல் எழுத்துத் தனித்தும் சிற்சில
புணர்ந்தும் வருவன ... ... .. ... ... (நூ. 2)

தமிழ் நெடுங்கணக்கினுள் அமைந்த றகரமும் ரகரமும், ழகரமும், ளகரமும், ஊகரமும், நகரமும் சிற்சில சொற்களில் திரிந்து வரும்.

எ.கா. தறை — தரை; உழி — உளி; வனம் — வநம்

எனவே நாம் சொற்பொருளுக்கு ஏற்றவாறு அவற்றிக்குரிய எழுத்துக்களைப் பயன்படுத்துதல் வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

### நிகண்டுகளின் செல்வாக்கு

தமிழ்ச் சொற்களை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டுமாயின் நிகண்டுகளை ஒருவர் நன்கு அறிந்து தெளிவு காணவேண்டும்.

'தமிழ்ச்சொற் பெருக்கைத் தரணியிற் புலவோர்
அவையில் சேந்தன் காங்கேயன் ஆகியர்
நூல்களில் தேறி நுவல்வது கடனே' (4)
(சேந்தன் திவாகரம்; காங்கேயன் உரிச்சொல் நிகண்டு)

### பேச்சு வழக்குச் சொற்களை ஏற்றுக்கொள்ளுதல்

பேச்சு வழக்கில் சில சொற்கள் திரிந்து வழங்க; அவற்றை இலக்கண நூலார் ஏற்றுக்கொள்வதில்லை. ஆனால் தண்டபாணி சுவாமிகள் பேச்சு வழக்கத்திற்கு இலக்கிய வாழ்வு தரும் புதிய முயற்சியில் ஈடுபட்டுள்ள நிலை மிகவும் போற்றத்தக்கது.

### சொற்களுக்கு நிறங் கூறுதல்

சொற்களுக்குப் பொது இலக்கணம் கூறும்பொழுது நிறம் கூறுதல் புதுமையானது சான்று: இயற்றமிழ்ச் சொற்கள்–கருமை நிறம்; இசைத்தமிழ்ச் சொற்கள் – சிவப்பு நிறம்; நாடகத் தமிழ்ச் சொற்கள் – வெண்மை நிறம்; பாமரர் சொற்கள் – வெண்ணிறம்; திருக்குறள் (நீதிகள்) – பளிங்கு நிறம்; திருமுருகாற்றுப்படை (மந்திர ஆற்றல்) – கருநிறம்; அருணகிரியார் பாக்கள் – செம்மை நிறம்; சித்த மருத்துவம், இசைப் புலமை இவற்றால் தூண்டப் பெற்றவர். ஆதலால், சொற்களுக்கும் புதுமையான முறையில் நிறம் கூறியுள்ளார் போலும்.

### பிரிவு இயல்பு: சுட்டுச் சொல் வகை

ஆசிரியர் நூற்பாக்களின் வழியே கோட்பாடுகளைக் கூறும் பொழுது, உரிய சான்றுகளையும் குறிப்பிடுதல் ஒரு புதிய பார்வையாக அமையும், வினைப்பெயரையும் குறிப்பிடுவார்.

| | |
|---|---|
| ஆண்பாற் சுட்டுகள் | : அவன், இவன், எவன் |
| பெண்பாற் சுட்டுகள் | : அவள், இவள், எவள் |
| அலிப்பாற் சுட்டுகள் | : அஃது, இஃது, எஃது |
| அருகி வருவன | : அவன், உவள், உது |
| ஒருமைப் பன்மைச் சுட்டுக்கள் | : அவர், இவர், எவர் |
| உயர்திணைப் பன்மைச் சுட்டுகள் | : அவர்கள், இவர்கள் |
| உயர்வுப் பன்மை | : முருகர் (சேய்ப் பெயர்) |
| பன்மை ஒருமை | : கடகம் (பன்னிரண்டு யானைப் பெயர்) |

**பெயர்ச்சொல் வகை**

நன்னூலார் காட்டும் இடுகுறி, காரணப் பெயர்களைச் சுவாமிகள் சொல்லிலக்கணத்தில் காட்டியுள்ளார்.

(எ.கா) இடுகுறி – வேல்; காரணக்குறி – வேலன்

**பால் காட்டும் ஈறுகள்**

ஆண்பால், பெண்பால், பலர்பால் ஈறுகளைக் கூறும்பொழுது நூற்பாவிலேயே சான்றுகள் தர, அவற்றினின்றும் அவருடைய தெய்வ ஈடுபாடு புலப்படும்.

(எ.கா) ஆண்பால் னகர ஈறு – பிரமன், பகவன், குகன், சிவன்
பெண்பால் ளகர ஈறு – உமையாள், கலைமகள்
பலர்பால் ரகர ஈறு – அடியார், பாவலர்

ஒரு சொல்லினை ஈறு மாறி வருவதை மட்டும் கொண்டு துணியாமல் பொருள் பற்றியே இன்ன சொல்லென்று கொள்ள வேண்டும் என்பார். இதனைப் 'பெயர் மாற்றம்' என்பர் சுவாமிகள். ஆனால் மொழியியல் கருத்தின்படி 'விகுதி மயக்கம்' என்று கூறுவது ஓரளவு சிறப்பாக அமையும்.

(எ.கா) உயர்திணைப் பன்மை போலும் அஃறிணைச் சொற்கள்– உம்பர் (உவ்விடம்); செக்கர் (செவ்வாணம்) அஃறிணை போலும் உயர்திணைப் பெயர்கள் - திரு, கணபதி, அரி ஆண்பால் போலும் அஃறிணைப் பெயர்கள் - கலன், புலன்.

**வினைச்சொற்கள்**

பொதுவினைகள் திணை, பால், இடம் ஆகியன உணர்த்தாமல் தொழில் மட்டும் உணர்த்தி வரும் வினைச் சொற்கள் என்று கூறியுள்ளார்.

(எ.கா) உண்ணல், உறங்கல், போதல் இவற்றை இலக்கணத்தார் தொழிற்பெயர்கள் எனக் குறிப்பிடுவர்.

**பிற வினைகள்**

முன்னையோர் மரபினைத் தழுவித் தன் வினைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

(எ.கா) நான் வந்தேன்; நான் இருந்தேன் முப்பாற் பிற வினைகளாக வருவனவற்றை அடுத்துக் கூறியுள்ளார்.

(எ.கா) அவன் வைத்தான்; அவள் சிரித்தாள்; அது ஓடியது.

**பெயரெச்சங்கள்**

வினைமுற்று எச்சமாக நின்று பெயரைக் கொண்டு முடிதலைப் பெயரெச்சம் என்போம். சுவாமிகள் விகுதியோடு யுணராமல் முக்காலங்களையும் தழுவி வருவன என்பர்.

(எ.கா) போன பசு, செய்த மகன்; வைத்த பொருள் – இறந்தகாலம்

ஆகிற காலம்; அழிகிற செல்வம் – நிகழ்காலம்

பிறக்கும் குழந்தை; பேசும் பிள்ளை; பிணங்கும் தலைவன் – எதிர்காலம்

**வினையெச்சங்கள்**

வினைமுற்று எச்சமாக நின்று வினையைக் கொண்டு முடிவது வினையெச்சமாகும்.

(எ.கா) சொல்லிச் சென்றான்; நின்று கண்டேன்; வந்து போனாள்.

**பல்வகைச் சொற்கள்**

ஏவற் சொற்கள் (ஏவல் வினை) செய், போ, நில் என்பன.

அமைதிச் சொற்கள் (பண்புப் பெயர்கள்) வளர்ச்சி, தளர்ச்சி, அகலம் என்பன.

தன்மைச் சொற்கள் (பண்பு) இனிப்பு, புளிப்பு, கசப்பு, கோபம், சாந்தம் என்பன.

ஒப்புச் சொற்கள் (உடன்படுதல்) ஓம், ஆம் என்பன.

வினைச் சொல் 'ஏ' என்பது.

இரக்கச் சொல் 'ஐயோ' என்பது

பலர் கூட்டுச் சொல் 'கூ கூ' என்பது

வியனச் சொல் (பெருமைக் குறிப்பு) ஆ, ஓ என்பன.

**சார்பு இயல்பு**

இலக்கணம் காட்டும் விகுதிகள் பிற சொற்களைச் சார்ந்து வரும் இயல்பை உடையன என்பதைக் கருத்தில் கொண்டு அவற்றைச் சார்பியல்பு என்று கூறியுள்ளார்.

**விகுதிகள்:** ஆன், அன், ஆள், அள், ஆர், அர், ஆம், என், ஏம் உம், ஓம் என்பனவாம்.

**அசைச் சொற்கள்:** அம்மா, அந்தோ, மாதோ, கொல், ஆல், ஐ, இல், இன், ஏ, ஓ, அன்று, அரோ என்று பன்மொழி ஈற்றிலும் இடையிலும் வரும் சொற்களை அசைச் சொற்கள் என்று கருதி இடையியல் எனத் தனியே வகுத்துக் கூறாமல் சார்பியலிலுள்ளே குறிப்பிட்டுள்ளார்.

**உவமைச் சொற்கள்:** தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் காட்டும் முப்பத்தாறு உவம உருபுகளைச் சுவாமிகள் இப் பகுதியில் ஒத்தல், உறழ்தல், கூடுத்தல், போலல், நிகரல், புரைதல், நேரல், மானல் என்று எட்டாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**மங்கலச் சொற்கள்:** ஒரு நூலின் முகப்பில் அமையும் சொற்கள் மங்கலமாய் இருத்தல் வேண்டும் என்பர். அவ்வாறு வரும் சொற்கள் மூன்று, ஐந்து, ஏழு ஆகிய எழுத்துக்களைக் கொண்டு விளக்குதல் வேண்டும். பூ, மலர், உலகு, திரு என்பன போல ஈறு திரியாமல் அமைதல் சிறப்பாகும்.

'மங்கலச் சொல்லின் எழுத்து மூன்று ஐந்து ஏழ்
ஆகியும் ஈறு திரியாமலும் அவிர்தரல்
இனிதே பிறழினும் எள்ளார் புலவோர்' (67)

'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்'

என்று சேக்கிழார் பாடும் பொழுது 'உலகெலாம்' என்பது

இறைவன் அருள்வாக்கு, அதை உலகு எல்லாம் என்று பிரித்துக் கூறுவது மரபன்று.

### பாட்டியல் செய்திகள்

நூற்பெயர், பாட்டுடைத் தலைவன், குலம், பெயர், நாள், கோள் ஆகியன குறித்தும் கூறியுள்ளார். இவை யாவும் பாட்டியல் செய்திகள், இவற்றை இடம் மாற்றி இங்கே கூறுவது ஒரு வகையில் புதுமையே.

### யாப்பியல் கருத்துக்கள்

யாப்பிலக்கணத்தில் காணப்பெறும் நேர், நிரை அசைகள், வாய்ப்பாடுகள், நாள், மலர் ஆகிய ஓரசைகள், ஈரசைகள், மூவசைகள், நான்கசைகள் அவற்றின் வாய்பாடுகள் ஆகிய வற்றைக் கூறுவது புதுமையே. தனியே யாப்பியல் அல்லது செய்யுளியல் என்று ஒன்றினை அவர் வகுத்துக் கொள்ள வில்லை.

யாப்பருங்கலக் காரிகையார் வெண்பாவில் நான்கசைகள் வரமாட்டா. அவ்வாறு வரின் நேர் நேர் என்பதை நிரையெனக் கொண்டு பாடலை அலகிடுமாறு ஒழிபியலில் குறிப்பிட்டுள்ளார். சுவாமிகள் சார்பியலில் அக்கருத்தைக் கூறும்பொழுது,

> 'செய்கை தன்மம் கல்வி தன்மை
> பொன்வில் எனுமிவை போன்ற நேர் நேரும்
> நிற்கு மிடத்தால் நிரையெனப் படுமே'

என்பர்.

### வடசொற்கள்

தொல்காப்பியர் காட்டும் செய்யுளீட்டச் சொற்கள் இயற் சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனும் நான்காம். சுவாமிகள் பிறமொழிச் சொற்களைத் தமிழ் மொழியில் சிலர் கூறுவது உண்டு. அவ்வாறு வழங்கப்பெறும் பொழுது அவற்றினை விளக்குதல் நலம் என்பர். இவ்வாறு தாம் கூறிய பின்னே அடுத்த நூற்பாவிலேயே 'சின்னம்' (துன்பம்) என்று அருணகிரியாரும். 'அமுதம்' என்று கம்பரும் பிற மொழிச் சொற்களைப் பயன்படுத்தியிருக்க, அவற்றைத் தமிழுணர் பெரியோர் தழுவுதல் நன்றென்று கூறியுள்ளார்.

'சின்னமென்று அருண கிரிப்பெயர் முனியும்
அமுதமெனக் கம்பனும் செப்பிய முறையில்
புதுமொழி சாரப் புகல்வார் புகலினும்
தமிழுணர் பெரியோர் தழுவுதல் இயல்பே' (84)

**திரிபியல்**

இறுதியாகச் சொல்லிலக்கணத்தில் எழுத்ததிகாரச் செய்திகளும் கூறப்பெற்றுள்ளன. இலக்கணத்தார் 'மரூஉ' என்று கூறுதலைச் சுவாமிகள் 'திரிபு' என்பார்.

(எ.கா) மருமகன் > மருகன்; துளவு (துளசி) > துழாய்

**அன்மொழித் தொகை:** ஆலுடைக் கடவுளை 'ஆல்' என்றும், முருகு நீங்காப் புலவனை 'முருகு' என்றும், மொய் குழல் வனிதையை 'மொய் குழல்' என்றும் கூறுவது தமிழ் மரபு. இவற்றுள் 'மொய் குழல்' என்பதை 'அன்மொழித் தொகை' என்பர் இலக்கணத்தார். முன்மொழி, பின்மொழி சார்ந்து 'மொய் குழல் வந்தாள்' என்று வரும் பொழுதுதான் இரு மொழிச் சார்பு எனப் பெயர் பெற்று இடமறிந்து ஒன்றாய் வழங்கும் என்பர்.

**ஒருபொருட்பெயர்:** ஒரு பொருளின் பெயரைக் குறிக்க அதன் குணத்தினைக் காட்டிக் குறித்தலுமுண்டு.

(எ.கா) யானை – மதமலை.

இவ்வாறு வருவதை இலக்கணத்தார் 'உருவகம்' என்பர், சுவாமிகள் இதனைப் 'பெயர்த்திரிபு' என்று கூறுவர்.

**ஒரு சொல் பல பொருள்:** ஓரே சொல் நால்வகைப் பொருளைத் தருதல் தமிழ் வழக்கம்.

(எ.கா) ஐயன் – அழகன்; ஐயனார் – தலைவன்: அரசன், கடவுள்.

**மொழி விகாரங்கள்:** ஒரு மொழி மூவழியிலும் குறைந்து வருதலும் விகாரமே என்பர்.

(எ.கா) தாமரை — மரை (முதற்குறை)
போலும் — போம் (இடைக்குறை)
நீலம் — நீல் (கடைக்குறை)

சுவாமிகள் கமலை (திருமகள்) என்ற சொல்லைக் கொண்டு விளக்குவார்.

| | | |
|---|---|---|
| மலை | — | முதற்குறை |
| கலை | — | இடைக்குறை |
| கம | — | கடைக்குறை |

**புணர்ச்சிகள்:** ஒரு சொல்லின் ஈற்றைத் திரித்தும், தான், திரிந்தும் வரும். அன், இன் என்பன உடைமையினைக் காட்டுவன.

(எ.கா) அது + அன் + பொருள் > அதனுடைய பொருள்
பசு + இன் + கன்று > பசுவினுடைய கன்று
ஆன், அன், ஒன் என்பது மூன்றும் ஆண்பால் உடைமையைக் காட்டுவன.

| | | | | |
|---|---|---|---|---|
| (எ.கா) மயில் | + | ஆன் | > | மயிலான் |
| முருகு | + | அன் | > | முருகன் |
| சேவல் | + | ஒன் | > | சேவலோன் |

**'இல்' எனும் சொல்:** 'இல் என்பதுவும் உடைமையையும், பிறவற்றையும் காட்டும்.

| | | |
|---|---|---|
| (எ.கா) மதியில் மறு | — | உடைமை |
| பாலில் வெண்பொடி | — | உவமை |
| அதில் நலம் | — | உயர்ச்சி |
| இதில் இழிவு | — | தாழ்ச்சி |
| அவையிற் பேசல் | — | வினை |

இனி, இல் > இன் ஆக வருதலும் உண்டு.

(எ.கா,) வேட்டலில் > வேட்டலின்

**'உம்' எனும் சொல்:** 'உம்' என்ற சொல்லும் 'இல்' என்பது போல் பல பொருள்களைத் தரும்.

| | | |
|---|---|---|
| (எ.கா.) வேலும் மயிலும் | — | கூட்டல் |
| தெய்வமும் பொய்யோ | — | உயர்ச்சி |
| நானும் உய்வேனோ | — | தாழ்ச்சி |

தன்மை யுணர்த்தும் விகுதிகள்: மறவேன், சென்றேன், வந்தோம், நின்றாம் என்பனவற்றில் முறையே ஏன், ஏம், ஓம், ஆம் என்பன அமையும்.

நான்காம் வேற்றுமை உருபு: நான்காம் வேற்றுமை யுருபாகிய 'கு' என்பது சொல்லிடைப் புணரும் நிலைகளைச் சுவாமிகள் காட்டியுள்ளார்.

(எ.கா.) அதற்கு நலம் (தனித்து வரும்)
ஆவுக்கு நீர் (உகரம் முற்கொண்டு வருதல்)
எனக்குச் சரி (ஒற்று மிகுந்து வருதல்)
வீரத்துக்கு வேல் (அத்துச் சாரியை பெற்றுப் புணர்தல்(

இவ்வாறு சுவாமிகள் சொல்லிலக்கணக் கோட்பாடுகளைத் தம் காலச் சூழலை ஒட்டிப் பல கோணங்களில் காட்டியுள்ளமை பின்னைய வளர்ச்சியே.

# நவநீதகிருட்டிணன் கலம்பகம் உரை மதிப்பீடு

ஜெ. அரங்கசாமி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 'வீரகேரளம்புதூர் நவநீதகிருட்டிணன் கலம்பகம்' என்னும் ஓலைச்சுவடியிலுள்ள படிவத்தை முதன்முதலில் விரிவான விளக்கவுரையுடன் முனைவர் வே. இரா. மாதவன் அவர்கள் நூலாகப் பதிப்பித்துள்ளார். அந்நூலைச் சுருக்கமாக இக்கட்டுரை மதிப்பீடு செய்கிறது. இம்மதிப்பீடு நூலுரையின் பொதுவான அமைவைச் சுட்டுவதுடன் நூலாசிரியர் மற்றும் உரையாசிரியர் களின் சிறப்புகளைப் பகுக்கிறது.

## உரையின் பொதுவான அமைவும் சிறப்பும்

பொதுவாக, உரையுடனான ஒரு நூலைப் பதிப்பிப்பதற்குக் கடைப்பிடிக்கப் பெறும் அணுகுமுறையின்படியே இப்பதிப்பும் அணிந்துரை, ஆசியுரை, வாழ்த்துரை, உரை என்று அமைந்து இருக்கிறது. இருப்பினும் இப்பதிப்பில் பாரபட்சமற்ற முறையில் அமைந்த ஒரு மதிப்புரையை (முனைவர் த. கோ. பரமசிவம்) முற்பகுதியிலேயே இணைத்திருப்பது இப்பதிப்பிற்குச் சிறப்பினைச் சேர்ப்பதுடன் நூலினைச் சீர்தூக்கிப் பார்க்க உதவுகிறது. இம்மதிப்புரை, உரையிலுள்ள ஒருசில குறைகளையும் சுட்டிக் காட்டுவதாய் இருக்கும் நிலையில், ஈண்டு அதனைச் சேர்த்து இருப்பது உரையாசிரியருடைய பெருந்தன்மையையும் பக்குவம் பெற்ற மனநிலையையும் கருதுவதாக அமைகிறது. இதைத் தொடரும் 'சிறப்புப் பாயிரத்தில்' புலவர் நாகராசன் அவர்கள், "கலம்பகப் பாக்கள் கருதிய பொருளை ......நெஞ்சினில் நிலைக்க வைத்திட்டான்" என்று உரையின் செம்மையை எடுத்துக்காட்டி யுள்ளமை இந்நூலை ஒவ்வொருவரும் படித்துப் பயன்பெறத் தூண்டுகிறது, அதனையடுத்துவரும் 'என்னுரை' என்ற பகுதியில் உரையாசிரியர் இப்பதிப்பை வெளிக்கொணர தாம் கொண்டிருந்த

தனிப்பட்ட ஆர்வத்தைக் குறிப்பிட்டுள்ளார். அதனைப் பார்க்கும் பொழுது, எத்தடையையும் தாண்டி எடுத்த காரியத்தை முடித்திடும் அவரது விருப்பத்தை அறிய முடிகிறது.

இவற்றையடுத்து உரையாசிரியர் ஆங்கிலத்தில் ஒரு முன்னுரை எழுதியுள்ளார். ஆங்கிலம் மட்டும் தெரிந்திருந்து தமிழ் தெரியாதவர்களுக்கும் இந்நூலைப் பற்றியக் குறிப்பை அறிந்துகொள்ள இப்பகுதி உதவும்.

இந்நூல் மிகவும் விரிவான மதிப்புரையைக் கொண்டுள்ளது. பதிப்புரையில் கலம்பகத்தின் இலக்கணம், பொதுவியல்பு மற்றும் நூலின் பின்புலங்கள் ஆகியன விளக்கமாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இவ்வுரையைப் படிக்கும்பொழுது ஒரு உண்மை உணரப் பெறுகிறது. பதிப்பின் மேற்கூறிய பகுதிகளையெல்லாம் கடந்து நூலின் முதல் பாட்டைத் தொடங்கவிருக்கிறோம் என்று எண்ணினால் அது முடியாது. ஏனெனில் உரையாசிரியர் 'நூலாராய்ச்சி' என்ற பகுதியை இவ்விடத்தில் இணைத்துள்ளார். இப்பகுதியில் நூலில் பயன்படுத்தப் பெற்றிருக்கிற கலம்பக உறுப்புகள், வீரையின் தலச்சிறப்பு, நூலில் கண்ணனைக் குறிக்கும் அவனுடைய திருப்பெயர்கள் மற்றும் குணநலன்கள், கையாளப்பெறும் இதிகாச, புராண வரலாற்றுப் பின்னணியில் அமையும் கதைகள் முதலியன இப்பகுதியில் விவாதிக்கப் பெற்றுள்ளன.

உரையாசிரியர் மூலநூலிற்கு உரையெழுதுவதற்கு முன் தனது இப்பணிக்கு இடையூறு நேரிடாத வகையில் அருட் கடாட்சம் வேண்டி கலைமகளை உரைக்காப்பு என்ற பகுதியில் பணிந்து வணங்குகிறார். இப்பகுதியில் அவர் பாடிடும்,

"குழறிடு மென்னுரைப் புன்மையுங் காக்கும் குறையிலவே
பழமறை யாதியாம் மாதவன் சேய்மகிழ்ப் பாமகளே!"

என்ற வரிகளில் தமது கவிதை நயத்தையும் பணிவுள்ளத்தையும் இரத்தினச் சுருக்கமாய் கூறிட்ட பாங்கு நூலிற்குப் பெருமை சேர்ப்பதாய் இருக்கிறது. பாடல் வரிகள் மரபுக்கவிதைக்குரிய அனைத்துக் குணநலன்களையும் கொண்டு சிறப்புப் பெற்றிருப்பது இங்கு நோக்குதற்குரியது.

உரையாசிரியரின் உரைக்காப்பைப் படித்து முடித்தபின் நமக்கு ஒரு ஆச்சரியம் கலந்த அறிவுச்சோம்பல் ஏற்படும்.

அதாவது, விக்கிரமாதித்தன் கதையில் 'ஏழுகடலையும் தாண்டி' என்பதைப் போல மேற்கண்ட பகுதிகளைப் படித்து முடிக்க வேண்டும் (62 பக்கங்கள்). 'பிறகு ஏழுமலையைத் தாண்டி' என்றவாறு மூலநூலிற்கான காப்பு, அவையடக்கம் (10 பக்கங்கள்) என்னும் பகுதிகளுக்கான உரைகளைப் படித்த பிறகே நூற்பகுதி ஆரம்பமாகிறது. ஒருவர் இதுவரை எல்லாப் பகுதிகளையும் கருத்தூன்றிப் படிப்பின் அதன்வழி தண்டபாணி சுவாமிகளை இடம்-பொருள்-காலம் என்னும் வரையறைகளைக் கடந்து நேரில் தரிசனம் கிடைத்து அருளாசியைப் பெற்றோம்! என்ற ஆனந்தக்களிப்பை அடைவது திண்ணம்.

நூலாசிரியரின் உட்கிடையை உணர்ந்து உரையாசிரியர் இக்கலம்பகப் பாடல்களின் பொருளை எளிதாகவும் தக்கப் பின்புலங்களுடனும் விளக்குகிறார். ஓவ்வொரு பாடல் தொடர் பான உரையின் இறுதியிலும் அவர் விரிவான குறிப்புரையை இணைத்துள்ளார். ஒருவர் இக்குறிப்புரையை கருத்தூன்றிப் படித்தால் ஆச்சரியம் விஞ்சும். உரையாசிரியர் இப்பகுதியில் பாடலின் கருவைப் பின்னணியுடன் அறிந்திடும் பொருட்டுப் பொழிப்புரையில் கூற முடியாததையும், பாடலுடன் தொடர் புடைய பிற செய்திகளையும் தத்துவக் கருத்துக்களையும் இணைத்துள்ளார். அத்துடன் தக்க எடுத்துக்காட்டுகளுடனும் ஆழ்வாராதிகளுடைய தேனொழுகும் பனுவல்கள் மூலமும் மற்றைய கலம்பக, அந்தாதிகளின் உதவியுடனும், சங்ககாலப் பாடல்களிலிருந்தும் மேற்கோள்களைச் சுட்டி, எடுத்தாளும் உண்மையை ஆணித்தரமாக நிறுவியுள்ளார். இவ்வகையில் அமையும் இக்குறிப்புகளை உசாவிடும்பொழுது உரையாசிரியரு டைய பல்துறை சார்ந்த அறிவையும் நுண்மாண் நுழைபுலத் தையும் அறியமுடியும். மேலும் அவர் எடுத்தாளும் பொருளை நனி விளக்கிட காலத்தைக் கருதாது பொறுமையுடன் தக்கத் தகவுகளைச் சேகரித்துப் பூமாலை தொடுப்பதைப்போல தன் கருத்துக்களை ஈண்டு எடுத்தியம்பியிருப்பது படிப்பவரை மலைக்கச் செய்கிறது.

இக்கட்டுரையாளர் இதுபோன்று வேறு நூல்களுக்கு மற்ற வர்கள் எழுதியுள்ள உரைகளுடன் இதனை இணைத்துப் பார்க்கும் நிலையில் ஒரு உண்மையைப் பட்டவர்த்தனமாக எடுத்துக்கூற விரும்புகிறார். உரையாசிரியர் ஒவ்வொரு பாடலின்

முடிவிலும் அப்பாடல் எவ்வகையான பா வகையைச் சேர்ந்தது என்பதைத் தக்க குறிப்புகள் கொடுத்தும், ஓசை நயங்களைச் சுட்டியும், பயின்றுவரும் அணியினைக் காட்டியும் சந்தங்களைக் குறித்தும் விளக்கியிருப்பதைப் பார்க்கும்பொழுது அன்னாரது இலக்கண அறிவைப் பாராட்ட வேண்டும். எ.கா: 1) "இது முதற்சிரும் விளச்சீரும் இரண்டு ஐந்து ஆறாஞ் சீர்கள் காய்ச்சீர் களும், மூன்று நான்கு ஏழு எட்டாஞ்சீர்கள் மாச்சீர்களுமாகிய எண்சீர் ஆசிரிய விருத்தம்" (பாடல் 51). 2) "இது, முழுவதும் ஈரசைச் சீர்களாலானதும் 'தான தனதன தத்தன தனனா' என்னும் சந்தத்திலமைந்த எண்சீர் வண்ண விருத்தம்" (பாடல் 17).

### பதிப்பில் இடம்பெற்றுள்ள மாறுபாடுகள்

பேராசிரியர் மாதவனுடைய இப்படைப்பில் ஆங்காங்கே காணப்பெறும் ஒருசில மாறுபாடுகளையும் சுட்டிக்காட்டுவது தவிர்க்க முடியாததாகிறது. ஈண்டு, மாறுபாடுகள் என்பன கட்டுரையாளரது அறிவுப் பின்புலத்தின்வழி அமைவது. அதே சமயம் உரையாசிரியரின் பின்புலத்தைப் பார்க்கும்பொழுது அவை சரியானதாகவும் இருக்கலாம்:

உரையாசிரியர் 'எம்பெருமான் அருளாலே' என்ற மூன்றாவது பாடலுக்குக் குறிப்புரை எழுதும்பொழுது, 'எம்பெருமான்' என்ற சொல் ஸ்ரீஇராமாநுசரைக் குறிக்கும் என்கிறார் (ப. 47). ஆனால் ஸ்ரீவைணவ மரபுப்படி எம்பெருமான் என்பது எம்முடைய + பெருமான் என்று கொண்டு ஸ்ரீமன் நாராயணனான ஸ்ரீரங்கநாதனையே குறிக்கும். அதே சமயம் ஸ்ரீவைணவர்கள் ஸ்ரீஇராமாநுசரை, 'எம்பெருமானார்' என்று உரைப்பர். அதனை இவ்வுரையாசிரியரும் அடுத்து வரும் பகுதியில் சரியாகவே குறிக்கின்றார். அதற்கிடையே 'எம்பெருமான்' என்பதனை 'எம்பெருமானார்' என்று கொண்டு, எம்பெரு மானார் அருளால்' என்பதாக உரையாசிரியர் கருதுகிறார். ஆனால் 'எம்பெருமான் அருளாலே' என்பதற்கு 'எம்முடைய பெருமாளான ஸ்ரீமன் நாராயணனுடைய அருளாலே' என்று புான் பொருள் கருத வேண்டும். இதே பகுதியில் இன்னுமொரு தைற தென்படுகிறது. உரையாசிரியர் 'தஸ்ய யதா கப்யாஸம் குண்டரீகம் ஏவம் அக்ஷிணி:' என்ற சாந்தோக்கிய உபநிடத

(1.6.6 & 7) வரியை ஸ்ரீஇராமாநுசர் காஷ்மீரத்திலுள்ள சாரதா பீடத்தின் சரசுவதி தேவியோடு தொடர்புபடுத்தி, அவர் திருமாலின் கண்கள், "நீரைத் தன்னுடைய கிரணத்தாற் கவர்கின்ற சூரியனால் மலர்த்தப்பட்ட செந்தாமரைப் பூவில் முன்னிதழும் பின்னிதழும் அல்லாத நடுவிதழ் போலப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்கள்" (ப. 48) என்று பொருள் கருதினார் என்ற கருத்தைச் சுட்டுகிறார். ஈண்டு உரையாசிரியர் இக்கருத்தை எதிலிருந்து எடுத்தார் என்று சுட்டத் தவறிவிட்டார். ஆனால் இவ்வகையான உபநிடத வரிகளுக்குக் கருதும் பொருள் ஒன்றே எனினும், உரையாசிரியர் ஒரு பின்புலத்தின் அடிப்படையில் அப்பொருளைச் சுட்டுகிறார். ஆனால் இக்கட்டுரையாளர் வேறொரு பின்புலத்தைக் குறித்து அதே பொருளை நிறுவிட விரும்புகிறார். இந்நிலையில் இருவரும் வேறுபடுகின்றனர். அதாவது இவ்வுபநிடத வரிக்குப் பொருள் கருதும் நிலையில் ஸ்ரீஇராமாநுசரும் அவருடைய ஆசிரியர் ஸ்ரீயாதவப் பிரகாசரும் கருத்து வேறுபடுகின்றனர் என்ற உண்மையை கட்டுரையாளர் இங்குச் சுட்ட விழைகிறார். ஆசிரியர், இவ்வரியிலுள்ள 'கப்யாஸம்' என்ற சொல்லைக் 'கபி (குரங்கு)' என்றும் 'ஆஸம் (அதன் பின்பகுதி)' என்றும் பிரித்து "எம்பெருமானுடைய தாமரை போன்ற கண்கள் குரங்கின் பின்பகுதியைப் போல சிவந்து இருந்தன" என்று பொருள் கொண்டார். மாறாக, மாணவர், 'கப்யாஸம்' என்பதை 'கம் பிபதி இதி கபி:' என்று பிரித்து 'கபி:' என்பதற்குச் சூரியன் என்று கொண்டு "எம்பெருமானுடைய கண்கள் சூரியனால் மலரும் தாமரையின் இதழைப் போல சிவப்பாகப் பிரகாசிக்கின்றன' என்று பொருள் கண்டார். ஈண்டு ஸ்ரீஇராமாநுசரின் பெருமை என்னவென்றால், உபநிடத வரிக்குப் பலவிதமாகப் பொருள் கருதினாலும் அவற்றில் எது அனைவராலும் ஏற்றுக்கொள்ள முடியுமோ, உண்மையை நேரடியாக இடர்பாடின்றி உரைக்குமோ அதனை ஏற்க வேண்டும்' என்ற கருத்தில் அவர் நிலை நின்றார் (Lata 1980 : 49-50).

உரையாசிரியர் 'அதிருஷ்டம்' என்ற சொல்லிற்கு 'நல்வினைப்பயன்' என்று பொருள் கருதுகின்றார். ஆனால் இவ்விளக்கத்தை அப்படியே ஏற்க இடமில்லை. அதிருஷ்டம்,

'ந + திருஷ்டம்' (பார்க்க முடியாதது) என்று பொருளைச் சுட்டி, தற்செயலாக நிகழ்ந்ததைக் குறிக்கிறது. இங்குத் தற்செயலாக நிகழ்ந்தது நல்லதாகவும் (நல்வினை) இருக்கலாம்; அதே சமயம் தீயதாகவும் (தீவினை) இருக்கலாம். இவ்வகையில் அதிருஷ்டம் நல்வினையையும் குறிக்கலாம்; தீவினையையும் சுட்டலாம். ஆனால் இன்றைய வழக்காற்றில் 'அதிருஷ்டம்' என்ற சொல் நல்ல செயலையும் நல்வினையையுமே சுட்டுவதாக ஆகிவிட்டது. ஆகவே இந்நூல் நுணுகிய பல கருத்துக்களைக் கொண்டிருப்பதால் உரையாசிரியர் இச்சொல்லையும் தீர்க்கமாகச் சிந்தித்துப் பொருள் கருதியிருக்கலாம்.

உரையாசிரியர் முதல் பாடலுக்குரிய குறிப்புரையில், 'பன்னிரு சமயம்' பற்றி விளக்கப் புகுகிறார் (ப. 62). அவர் அகச்சமயம் ஆறும் புறச்சமயம் ஆறும் சேர்ந்து பன்னிரு சமயம் என்று குறித்து, புறச் சமயத்தை உலகாயதம், சமணம், பௌத்தம், தார்க்கிகம், பூர்வ மீமாம்சை, மாயாவாதம் என்று குறிக்கிறார். இது சரியன்று. உரையாசிரியர் வழிநின்று பார்க்கும்பொழுது புறச்சமயம் என்பது மீமாம்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என்ற ஆறு பிரிவையே சுட்டும்.

உரையாசிரியர் 24-ஆவது பாடலின் 'அரங்கம்' என்ற சொல்லிற்குக் குறிப்பெழுதும்பொழுது, "திருமால் திருவுள்ளமு வந்து எழுந்தருளியிருக்கும் இடமானது பற்றி 'ரங்கம்' என்று இத்தல விமானத்திற்குப் பெயர் உண்டாயிற்று" (ப. 139) என்று குறிக்கின்றார். இக்கருத்து இடர்பாட்டை ஏற்படுத்துகிறது. ரங்கம் 'ரங்க;' என்ற சமஸ்கிருதத்தின் தமிழாக்கம். அதற்கு நிரம், மேடை, நாடகக் கொட்டடி என்பன போன்ற பொருளே அன்றி, 'கோபுரம்' என்ற பொருளில் வழங்கவில்லை. இவரே 61-ஆவது பாட்டில் (ப. 221) அரங்கு என்பதற்குச் 'சபை' என்று சரியாகச் சுட்டுகிறார். இருப்பினும், உரையாசிரியரின் கவனத்தின்மீது கட்டுரையாளருக்கு முழு நம்பிக்கை உள்ளதால், ஏன்? அவர் இவ்வாறாகக் கருதினார் என்று ஆழ்ந்து யோசிக்கும் பொழுது தக்க விடை கிடைத்தது. திருவரங்கத்துக் 'கோயிலொழுகில்', "ஆதிப்ரஹ்மா ஸ்ரீரங்கவிமாநத்தை லபித்து ஸத்யலோகத்திலே அநேக நாள் ஆராதித்தநந்தரம்" (ப. 1) என்ற வரி வருகிறது. ஒருவேளை உரையாசிரியர் இவ்வரியைப்

படித்ததால் மேற்கண்டவாறு கருதியிருக்கலாம். ஆனால் இதற்கு ஒரு மாற்றுக்கருத்து உண்டு. அதாவது, 'கோயிலொழுகு' 18-ஆம் நூற்றாண்டினது ஆகும். ஆனால் அதற்கு முந்தைய ஸ்ரீவைணவ ஆழ்வார்களோ ஆச்சாரியப் பெருமக்களோ இவ் விதமாகப் பொருள் கருதியதாகச் சான்றுகளில்லை மேலும் இந்நூல் பிற்காலத்ததாய் அமைந்து அன்றைய நிலையிலான வழக்காறுகளைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. ஆகவே இதனை இவ்வாய்விற்கு ஆதாரமாகக் கொள்ள இடமில்லை. இந்நிலையில் 'ஸ்ரீரங்கவிமானம்' என்னும் சொல்லாட்சியும் கருத்தமைவும் வழக்காற்றில் மட்டும் புழங்கி வருவதைக் கொண்டு அதனை இவ்வாய்வுப் பொருளிற்கு முடிந்த முடிவென்று கொள்ள இயலாது.

இறுதியாக, இவ்வகையில் அமையும் இம்மதிப்பீட்டை ஒன்று படுத்தி அதன் பிழிவைக் கருதலாம். இந்நிலையில் இவ்வுரை மிகவும் விரிவானது, விளக்கமானது, ஆய்வின் விடிவாய் அமைவது. பேராசிரியர் மாதவன் அவர்கள் அனைவரும் போற்றிடும் வகை யிலும் மற்றவர்களுக்கு வழிகாட்டிடும் நிலையிலும் கடுமையாக உழைத்து இப்பணியை நிறைவாக முடித்துள்ளார், ஆகவே அறிவுலகில் இனிவரும் உரைகளுக்கு இவ்வுரை எடுத்துக் காட்டாய் அமையும் என்றால் இக்கருத்தைப் 'போற்றுதல்' என்று இல்லாமல், 'பாராட்டு' என்று கொள்ள வேண்டும்.

**உசாத்துணை நூல்கள்**

கிருஷ்ணஸ்வாமி. 1990. **கோயிலொழுகு.** திருச்சிராப்பள்ளி.

மாதவன், வே. இரா. (பதி). 1993. **திவ்விய தம்பதியர் புகழ்மாலை**, தஞ்சாவூர்.

......... ...... (பதி. & உரை). 1994. **நவநீதகிருட்டிணன் கலம்பகம்**, தஞ்சாவூர்.

Prem Lata. 1980. **Mystic Saints of India: Ramanuja**, New Delhi.

# மனுநெறித் திருநூல்

## பா. அருள்செல்வி

**முன்னுரை**

19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானியர்களுள் இராமலிங்கர், தண்டபாணி சுவாமிகள், பாம்பன் அடிகள் ஆகியோர் சிறப்பான இடத்தை வகித்தவர்கள். தம்முடைய ஆன்ம ஈடேற்றம் மட்டுமன்றிச் சமுதாய முன்னேற்றத்தையும் இவர் தம் பாடல்களில் விளக்குவர். கவிபுனையும் ஆற்றல் பெற்ற இம்மூவருள் தண்டபாணி சுவாமிகள் ஏறத்தாழ 50,000 பாடல்களைப் பாடியுள்ளார். பல ஆன்மீகம் தொடர்பான நூல்களை எழுதியுள்ள இவர், சமுதாயம் உய்ய சில நீதி நூல்களையும் இயற்றியுள்ளார். (அருளாட்சி, மனுநெறித் திருநூல்) இங்கே குறிப்பிடப்படும் இவ்விரு நூல்களும் திருக்குறளைத் தழுவியவை. இவற்றுள் 'மனுநெறித் திருநூல்'[1] என்பது இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. பல்வேறு கோணங்களில் ஆய்வதற்கு இடம் அளிக்கும் இந்நூலின் முழுமையான ஆய்வை இக்கட்டுரையில் காண இயலாது. இந்நூலைப் பற்றிய பொது அறிமுகமும், இது நுவலும் முப்பால் பகுப்புகளில் அறத்துப்பால் பற்றிய செய்திகளுமே இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. இவையே இங்கு முழுமையான நோக்கமாகவும் அமைகின்றன. திருக்குறளைத் தழுவிய இந்நூலை அதனுடன் ஒப்பிட்டுப் பார்க்கவும் வழியுண்டு. ஆயினும் இக்கட்டுரையில் குறட் கருத்துகளை இந்நூலுடன்சில இடங்களில் மட்டுமே ஒப்பிடப்பட்டுள்ளது. அது நீண்ட ஆய்வு என்பதால், இங்கே அம்முறை விரிவு அஞ்சிக் கையாளப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆயினும் இருநூல்களின் ஒரு சில அதிகார ஒப்புமை பற்றி பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

**மனுநெறித் திருநூல் - அறிமுகம்**

திருக்குறளைப் போன்றே குறள் வெண்பாவால் இது யாக்கப் பெற்றுள்ளது. குறளைப் போல எழுத வேண்டும் என்ற

முனைப்புடன் ஆசிரியர் இதனை எழுதியுள்ளார். அறம், பொருள், இன்பம் எனும் முப்பால் பகுப்புகள் இதனுள்ளும் இடம் பெறுகின்றன. ஆயினும் பொருட்பாலைத் தவிர அறத்துப்பால், காமத்துப்பால் ஆகியவற்றிற்கு உரிய தலைப்புகள் இதில் காணப்படவில்லை. நூலைப் பதிப்பித்தோர் இவ்வாறு பதிப்பித்திருப்பார்களோ என்ற ஐயமும் எழுகின்றது.

133 அதிகாரங்கள் திருக்குறளில் காணப்பட இந்நூலில் இரு அதிகாரங்கள் குறைந்து 131 அதிகாரங்களே எழுதப் பெற்றுள்ளன. (அறத்துப்பால் 53; பொருட்பால் 43; காமத்துப்பால் 35). அறத்துப்பாலில் முதல் மூன்று அதிகாரங்கள் தவிர (தெய்வ வணக்கம், குரு வணக்கம், உலக வாழ்த்து) ஏனையவை பெரும்பாலும் உலக நீதிகளை எடுத்துக் காட்டுகின்றன. பொருட்பாலில் அரசனைச் சார்ந்த செய்திகள் (அரசாட்சி, படை, அரண், அமைச்சு போன்றவை) விளக்கம் பெறுகின்றன. காமத்துப்பாலில் அகப் பொருட் செய்திகளும், தத்துவக் கருத்துகளும் பெரும்பாலும் காணப் பெறுகின்றன.

இக்கட்டுரையில் அறத்துப்பால் நுவலும் செய்திகள் மட்டுமே ஓரளவு ஆராயப் பெறுகின்றன. எஞ்சியவை பற்றிய குறிப்புகளும் கட்டுரையின் இறுதியில் சுட்டிக் காட்டப்படுகின்றன.

### அதிகாரப் பெயர்களில் திருக்குறளும், மனுநெறித் திருநூலும்

திருக்குறளில் வள்ளுவப் பெருந்தகையால் கையாளப்பட்ட அதிகாரப் பெயர்களை அப்படியே இவர் தம் நூலில் சேர்த்துள்ளார். எடுத்துக்காட்டாக, கொல்லாமை (அதி.4) கண்ணோட்டம் (அதி. 34), கல்வி (அதி. 14) ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

அடுத்து திருக்குறளின் அதிகாரங்களைப் பொருள் நிலையில் ஏற்றுக் கொண்டு, தாமே சில புதிய பெயர்களை அவற்றிற்குத் தருகின்றார். கோபம் (அதி. 19), மறப்பு (அதி. 23) போன்றவை இத்தன்மையன. இவற்றை வள்ளுவர் வெகுளாமை (அதி. 31), பொச்சாவாமை (அதி. 33) என்னும் தலைப்புகள் இட்டு வழங்குவார்.

இவ்வாறு இரு வேறு தன்மைகளில் அதிகாரப் பெயர்களை வைக்குமிடங்களில் தண்டபாணி சுவாமிகள் கையாளுகின்றார்.

மேலும் திருக்குறளில் கூறப்பெறாத சிலவற்றை இவர்தம் நூலில் இணைத்துள்ளார். எடுத்துக்காட்டாகப் பதிபுண்ணியம், (அதி 38), பாச புண்ணியம் (அதி. 39) எழுத்து (அதி. 54), மை (அதி. 87) போன்றவற்றைச் சுட்டிக் காட்டலாம்.

### மனு நெறித் திருநூலில் அறத்துப்பால்

இந்நூலின் முதற் பிரிவாக அறத்துப்பால் அமைந்துள்ளது. ஏற்கெனவே இக்கட்டுரையில் கூறியபடி 53 அதிகாரங்களைக் கொண்ட இப்பகுதியில் முதல் மூன்று அதிகாரங்களில் (தெய்வ வணக்கம், குரு வணக்கம், உலக வாழ்த்து) இறைவன், குரு இவர்களை வணங்கல், உலகம் உய்ய வாழ்த்தல் எனும் கருத்துகள் வெளியாகின்றன. எஞ்சிய அதிகாரங்கள் (அதி. 4, 131 தவிர) தனிமனித ஒழுக்கச் சிந்தனைகளைத் தருகின்றன. திருக்குறளில் ‘கடவுள் வாழ்த்து’ என ஒரே ஒரு அதிகாரம் மட்டுமே தொடக்க நிலையில் இடம் பெறுகின்றது. இவ்விடத்தில் இந்நூல் ஆசிரியர் இக்கருத்தைச் சற்று மாற்றி அமைத்துள்ளார் என்பது நோக்கத்தக்கது.

அடுத்து இந்நூலின் சிறப்பினை ‘நூன்மாட்சி’ எனும் ஒரே தலைப்பில் இரு அதிகாரங்களில் (அதி. 4, 131) குறிப்பிடுகின்றார். நூலின் தொடக்கத்தில் உலக வாழ்த்துப் பகுதியினை அடுத்தும், நூலின் இறுதியிலும் இவற்றை வைத்துள்ளார். நூற்பெயரினை, முற்பகுதியில் வரும் (அதி. 4) நூன்மாட்சியில், முதல் குறளிலேயே,

> முன்பனந்தம் நூல்கள் மொழிந்தேன் மனுநெறிப்பேர்
> இன்பத் திருநூல் இது (அதி. 4, பா 1).

எனத் தெளிவாகத் தருகின்றார். இந்நூலுக்கு முந்நூலாகக் கொல்லா நெறியைக் கூறும் அனைத்து நூல்களையும் குறிப்பிடுவார். (அதி 4, பா 4). இது இவருக்கு இந்நெறிமீது இருந்த ஆழ்ந்த பற்றினை வெளிப்படுத்துகின்றது. இக்கருத்தினை இக் கட்டுரையில் ‘கொல்லாமை’யை விளக்குமிடங்களில் காணலாம்.

### அறத்துப்பாலில் பொருண்மைப் பாகுபாடுகள்

இப்பகுதியில் தனி மனிதன் மேற்கொள்ள வேண்டியவை, கடைப்பிடிக்கக் கூடாதவை, பற்றிய செய்திகள் தெளிவாக இரு அதிகாரங்களில் தரப்பட்டுள்ளன. செயல்வகை (அதி. 9),

செய்யாமை (அதி. 12) எனும் தலைப்புகளில் இவை அமைந்துள்ளன. இறுதியாக, இவற்றைக் கடைப்பிடிப்பதால் ஏற்படும் நன்மைகள், அல்லாத வழி ஏற்படும் தீமைகள் பற்றியும் இவர் எடுத்துரைக்கத் தவறவில்லை. (அறத்தின் ஆற்றல், பாவத்தின் தன்மை, அதி. 52, 53)

இவை தவிர குடும்ப உறுப்பினர் தம் ஒழுக்கச் சிந்தனைகட்கென தனித் தனி அதிகாரங்களை இவர் எழுதியுள்ளார். தாய், தந்தை, மனைவி, மக்கள், உடன்பிறப்பு, சுற்றம் (அதி. 43-48), மேலும் புண்ணியம் எனும் தலைப்பில் நான்கு அதிகாரங்கள் இதில் காணப்படுகின்றன. (அதி. 38 – 41), இவற்றுடன், உடல் வகை, உயிர் வகை (அதி. 50, 51) என்ற இரு அதிகாரங்களையும் இணைத்து நோக்கலாம்.

இவை பற்றிய விளக்கங்களைப் பின்வரும் தலைப்புகளில் ஓரளவு ஆராயலாம். அறத்துப்பாலில் முதன்மைக் கருத்துகளாகக் கொள்ளப்படும் ஒரு சிலவே இங்கே எடுத்துக்காட்டப் பெறுகின்றன. விரிவு அஞ்சி இவை நுணுகி ஆராயப்படவில்லை என்பது சுட்டிக் காட்டத்தக்கதாகும்.

1. **கொல்லாமையும், புலால் உண்ணாமையும்**

19-ஆம் நூற்றாண்டில் கொல்லாமை, புலால் உண்ணாமை பற்றிய கோட்பாடுகளை அதி தீவிரமாக வலியுறுத்தியவர்களில் தண்டபாணி சுவாமிகள் முக்கிய இடத்தை வகிக்கின்றார். மனுநெறித் திருநூலில் கொல்லாமையை இவர் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். புலையாடாமை (அதி. 6), இரக்கம் (அதி. 28) கண்ணோட்டம் (அதி. 34) ஆகிய அதிகாரங்கள் இதனோடு தொடர்புடையனவை. அனைத்து உயிர்களிலும் இறைவன் உள்ளான் என்பதால் உயிர்க்கொலை ஆகாது என்பது இவரது முடிந்த முடிபாகும். இதனை,

> "எவ்வுயிரும் ஈசற் கிருப்பிடமாம் என்றுணரான்
> நௌவு பெழ்வாய் நாயிற் கடை (அதி. 5, பா. 6)

என்ற பாடலில் விளக்குகின்றார். மேலும் தெய்வத்தின் பெயரால் உயிர்ப் பலி இட்டு உணவு படைத்தலையும் நீக்க இவர் முயன்றார். (அதி. 34, பா. 6). இவற்றுடன், பல கொலைகள்

செய்தவனுக்கு உதவி புரிதல் என்பது அறமாகாது எனும் கருத்தை,

> பல்கொலைசெய் தானைப் பணங் கொடுத்து மீட்டல் முதல்
> சொல் கொடுமை பாவத்தொழில். (அதி. 41, பா. 8)

எனும் பாடலில் விளக்குவர். இக்கருத்து புதியதாகின்றது. இவ்வாறே புலால் உண்பவரை புலையாடாமை (அதி. 6) என்னும் அதிகாரத்தில் பலவாறு இழித்துக் கூறுவார். இவ்விடத்தில் வள்ளுவப் பெருந்தகையின் கருத்தை இவர் அப்படியே ஏற்றுக்கொண்டுள்ளார்.

### இறைவுணர்வு

இறைவன் ஒருவன் உள்ளான் என்பதைப் பல பாடல்களில் இவர் வலியுறுத்துவர். இந்நூலின் முதல் அதிகாரமே 'தெய்வ வணக்கம்' எனத் தொடங்குவதைக் காணலாம். செயல் வகை எனும் அதிகாரத்தில் (அதி. 9) ஒரு பாடலில் இறையருளைப் பெற முயல்வதே நன்று என்பதை,

> எவ்விதத்தா லேனும் இறைவன் அருட்பேறுடைய
> வெளவி முயல் வாரே மனு. (பா. 9)

என்ற பாடலில் விளக்கிக் காட்டுவர். மேலும் வஞ்சனை, ஆசை முதலியன இறையருள் நாடினார்க்கு இல்லை என்ற கருத்தையும் இவர் நிறுவுவர். (அதி. 18, பா. 7, அதி. 20, பா. 6) இவ்வாறு சமுதாயத்திற்கு அறக் கருத்துகளைக் கூறும் பல இடங்களில்[8] இறைவுணர்வை தண்டபாணி சுவாமிகள் புகட்டும் பான்மையை இவர் பாடல்கள் காட்டுகின்றன. ஒரு சிலவே இவண் தொட்டுக் காட்டப் பெற்றுள்ளன.

### மகளிரிலரைப் பற்றியவை

பெண்டிர் தம் ஒழுக்கத்தைப் பல பாடல்களில் குறிப்பிட்டாலும், 'பெண்மைச் செயல்' எனும் ஓர் அதிகாரத்தை (அதி. 11) சிறப்பாக இவர் எழுதியுள்ளார். மாதரின் கற்புத் திறன், (பா 2) குடும்பத்தார் அனைவரும் விரும்பாத மணாளனை மண முடிக்காமை (பா.1), கல்வி அறிவுடையவனைக் கணவனாகப் பெறல், (பா. 4), தாயிலும் தயை உடைய கணவன் சொற் கேட்டல் (பா. 5), கணவனின் பிழையைத் திருத்தல் (பா. 7), பல நூல்களைக் கற்றல் (பா. 8) போன்ற கருத்துகளை

இவ்வதிகாரத்தில் புகட்டிய ஆசிரியர், பெண்ணின் தகாத ஒழுக்கத்தையும் கண்டிக்கத் தவறவில்லை. இதனை,

> வழுநடையில் செய்யும் மகக்கொலையில் மற்றோர்
> கொழுநனைக் கைக்கொள்ளல் குணம். (பா. 9)

எனும் பாடல் வலியுறுத்தும்.

மேற்கூறியவாறு பெண்ணினச் சிந்தனைகளைக் கூறிய தண்டபாணி அடிகள் ஓரிடத்தில் கணவன் இறந்த பின் மனைவி உயிர் வாழ்தல் கூடாது எனும் கருத்தைக் கூறுவது பெண்ணை இழிவுபடுத்துவதாய் அமைகின்றது. பின்வரும்,

> 'தன்உயிரில் சேர்த்த கொண்கன் தன்னை இழந்த தையல்
> பின்னும் உயிர் வாழ்க்கைப் பிழை' (அதி. 11, பா. 10).

எனும் பாடலடிகள் இக்கருத்தை உறுதி செய்கின்றன.

## 4. குடும்ப உறுப்பினர்கள் மற்றும் நண்பர் தம் செயற்பாடுகள்

தாய், தந்தை, உடன் பிறந்தார், மனைவி, மக்கள், சுற்றம், நண்பர்கள் ஆகியோருக்குத் தனித் தனி அதிகாரங்களை (அதி. 43–50) அமைத்தவர் தண்டபாணி அடிகள். தந்தை, மகன் உறவு முறைகளை தந்தை எனும் அதிகாரத்தில் (அதி. 44) சிறப்பாகக் கூறுவர். தாய் (அதி. 43) என்பதில் தாயின் பெருமைகளை விளக்குவார். அவள் 'கல்வி' கற்றிருந்தால் தந்தை எனவும் அழைக்கப்படுவார் எனும் புதிய கருத்தை,

> நிந்தை அறுங் கல்வி நெறியும் அறிதாயைத்
> தந்தை என்னும் சொல்லத் தகும். (அதி. 43, பா. 7)

எனும் பாடலடிகள் வழி அறியலாம். அடுத்து 'சுற்றம்' எனும் தலைப்பில் (அதி. 48) சுற்றத்தோடு இணைந்து வாழ்தலின் நன்மைகளை எடுத்துக்காட்டுவர். திருவள்ளுவர் சுற்றம் தழால் எனும் (குறள், அதி 53) ஒரு அதிகாரமே எழுதியிருப்பது இவண் எண்ணத்தக்கது. இவ்வாறே நட்பர் (அதி. 49) எனும் தலைப்பில் இந்நூலில் உள்ளதை திருக்குறள் நெறிகளோடு இணைத்து நோக்கலாம்.

## 5. 'புண்ணியம்' எனும் தலைப்பில் அமைந்தவை உணர்த்தும் பொருண்மைகள்

அறத்துப்பாலில் பதி புண்ணியம், பசு புண்ணியம், பாச புண்ணியம், போலிப் புண்ணியம், (38–41) எனும் தலைப்பு

களில் நான்கு அதிகாரங்கள் உள்ளன. அவை குறித்தவை இங்கே தொட்டுக் காட்டப் பெற்றுள்ளன. திருக்குறளில் இல்லாத இப்புதிய அதிகாரங்கள் இங்கே அறிமுகப்படுத்தப் பெறுகின்றன.

**பதி புண்ணியம் (அதி.38):** 2 நாம் புரியும் நற்காரியங்கள் அனைத்துமே இறைவனுக்குப் புரிவன எனும் கருத்தை இங்கே நிறுவுகிறார்.

**பசு புண்ணியம் (அதி. 39):** இதில் பல்வேறு வகையாக மக்கட்கு உதவி புரிதலைக் குறிப்பிடுவர். இதில் சிறப்பாக, திருமணத்திற்குப் பொருள் ஈதலைச் சுட்டலாம். இதனைப் பின்வரும்

> மங்கைப் பருவ மகளை நல்ல மைந்தன் எய்த
> அங்கையின் பொன் ஈதல் அறம். (பா. 2)

என்னும் பாடல் வழி அறியலாம்.

**பாச புண்ணியம் (அதி. 40):** இதில் தந்தை, தாய், தமர் போன்றோரைக் காத்தலும், பலருக்கு அறச்செயல்களைச் செய்தலும் முக்கிய இடத்தைப் பெறுகின்றன.

**போலிப் புண்ணியம்:** அறிவில்லாதவர்கள் செய்யும் மறச் செயல்கள் இதில் எடுத்துக் காட்டப்பெறும்.

**உடல், உயிர்வகை: (அதி 56, 57)**

**உடல் வகை:** இவ்வுடலின் அருமையும், அதனால் செய்யும் தருமங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. தன் உடலை புறாவிற்கு ஈந்த சிபி மன்னனின் புகழும் இதில் பேசப்பட்டுள்ளது. (அதி. 56, பா. 3).

**உயிர் வகை (அதி. 57):** உயிரின் அருமை இவ்வதிகாரத்தில் எழுதப் பெற்றுள்ளது. இதில் நஞ்சருந்தி இறக்கின்ற நிலையை ஒரு பாடலில் சாடுகின்றார். (பா. 7). பெண்கள் அக்காலத்தில் கணவனுடன் அக்கினியில் உயிர்விட்டதையும் ஒரு பாடலில் இவர் குறிப்பிட்டுள்ளார். (பா. 47). இப்பகுதிகள் புதியனவாக அமைந்துள்ளன.

**நூல் நுவலும் பிற செய்திகள்.**

1. **கலைகள்:** கலைகட்கு என இரு அதிகாரங்களை ஆசிரியர் பரதம், சிற்பம் எனும் இரு தலைப்புகளில் (அதி: 57, 88) குறிப்பிடுகின்றார்.

2. **புலன்கள்:** ஐம்புலன்களுக்கு எனத் தனித்தனி அதிகாரங் களை முறையே மெய், வாய், கண், மூக்கு, செவி என அழைத்துள்ளார் ஆசிரியர்.

3. **அதிகாரங்களில் புதிய சொல்லாட்சிகள்:** இந்நூலில் திருக்குறளில் பயிலப் பெறாத புதிய சொல்லாட்சிகள் அதிகாரத் தலைப்புகளில் இடம் பெறுகின்றன. சித்தி என் முடியும் அதிகாரங்கள் நான்கும் (112-115), ஞானம் என முடியும் அதிகாரங்கள் ஆறும், (16-21) புண்ணியம் என முடிவன நான்கும் (38-41) சில எடுத்துக்காட்டுகளாக இவண் காட்டப்பெறுகின்றன. இவற்றுடன் 'மை' எனும் ஓர் அதிகாரத் தலைப்பில் (அதி. 87) பழம்தமிழ் மக்களிடையே இருந்த நம்பிக்கையை விளக்கு கின்றார். இத்தலைப்பும் புதுமையானதே. மேற்கூறியவை மட்டுமன்றி, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் (124-126) ஆகிய தலைப்புகள் ஆசிரியரின் சைவ சித்தாந்தப் புலமையைக் காட்டுவன.

**தற்குறிப்புகள்**

இந்நூலின் இரு பாடல்களில் இவர் தான் நெல்லையி லிருந்து வந்ததாகவும், (அதி. 4, பா. 6) முருகதாசன் என்பது தன் பெயர் என்றும் (அதி. 6, பா. 7) தன் வரலாற்றுக் குறிப்பாக இவர் பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

**முடிவுரை**

திருக்குறளை அடியொற்றிய நூலாயினும் அதில் கூறப் படாத புதிய செய்திகளும் இதில் இடம் பெற்றுள்ளன. பாடல் களை நோக்கில் திருக்குறளைவிட இந்நூலில் சற்றுக் கடினமான சொல்லாட்சிகளையே இவர் பயன்படுத்தியிருப்பது நோக்கத் தக்கது. எனினும் திருக்குறளோடு இதனை ஒப்பு நோக்கி ஆய்ந்தால் மேலும் பல கருத்துகள் புலப்பட வாய்ப்புண்டு.

பின்னிணைப்பு

**அதிகாரத் தலைப்புகள்:-** இவை தலைப்பு ஒப்புமை கருதி மட்டுமே இவண் தொகுக்கப்பட்டுள்ளன. (பொருளமைதி நோக்கி அன்று).

| திரனுநெறித் திருநூல் | | | திருக்குறள் | |
|---|---|---|---|---|
| வ. எண். | அதி. எண். | தலைப்பு | அதி. எண். | தலைப்பு |
| 1. | 27 | அச்சம் | 107 | இரவச்சம் |
| 2. | 33 | அடக்கம் | 13 | அடக்கமுடைமை |
| 3. | 75 | அரண் | 153 | அரண் |
| 4. | 52 | அறத்தின் ஆற்றல் | 4 | அறன்வலியுறுத்தல் |
| 5. | 31 | அறிவு | 43 | அறிவுடைமை |
| 6. | 71 | அமைச்சு | 64 | அமைச்சு |
| 7. | 22 | அழுக்காறு | 17 | அழுக்காறாமை |
| 8. | 29 | அன்பு | 8 | அன்புடைமை |
| 9. | 18 | ஆசை | 37 | அவாஅறுத்தல் |
| 10. | 14 | இன்சொல் | 10 | இனியவை கூறல் |
| 11. | 48 | சுற்றம் | 53 | சுற்றத்தழால் |
| 12. | 1 | தெய்வ வணக்கம் | 1 | கடவுள் வாழ்த்து |
| 13. | 55 | உழவு | 104 | உழவு |
| 14. | 72 | உளவு அறிவிப்பான் | 59 | ஒற்றாடல் |
| 15. | 36 | ஊக்கம் | 60 | ஊக்கமுடைமை |
| 16. | 107 | ஊடல் | 133 | ஊடல் உவகை |
| 17. | 69 | ஒழுக்கம் | 14 | ஒழுக்கமுடைமை |
| 18. | 34 | கண்ணோட்டம் | 28 | கண்ணோட்டம் |
| 19. | 16 | கல்வி | 40 | கல்வி |
| 20. | 110 | கனவு | 122 | கனவு நிலை உரைத்தல் |
| 21. | 81 | குடி | 103 | குடிசெயல்வகை |
| 22. | 66 | குடியோம்பல் | 103 | குடிசெயல்வகை |
| | | | 96 | குடிமை |
| 23. | 68 | கொடுங்கோல் | 56 | கொடுங்கோன்மை |
| 24. | 5 | கொல்லாமை | 23 | கொல்லாமை |
| 25. | 19 | கோபம் | 31 | வெகுளாமை |
| 26. | 28 | இரக்கம் | 58 | கண்ணோட்டம் |

| வ. எண். | அதி. எண். | தலைப்பு | அதி. எண். | தலைப்பு |
|---|---|---|---|---|
| 27. | 67 | செங்கோல் | 55 | செங்கோன்மை |
| 28. | 12 | செய்யாமை | 52 | வெருவந்த செய்யாமை |
| 29. | 24 | சோம்பல் | 61 | மடியின்மை |
| 30. | 37 | தவம் | 27 | தவம் |
| 31. | 60 | தீத் தொழில் | 21 | தீவினை அச்சம் |
| 32. | 49 | நட்பர் | 79 | நட்பு, 80 நட்பு ஆராய்தல் |
| 33. | 17 | பயனிலா சொல்லாமை | 20 | பயனில் சொல்லாமை |
| 34. | 63 | பெரியோர் சொற்கேளல் | 45 | பெரியோரைத் துணைக் கோடல் |
| 35. | 26 | பேதமை | 84 | பேதமை |
| 36. | 105 | புணர்ச்சி | 111 | புணர்ச்சி மகிழ்தல் |
| 37. | 108 | புலவி நீக்கம் | 131 | புலவி |
| | | | 132 | புலவி நுணுக்கம் |
| 38. | 6 | புலையாடாமை | 26 | புலால் மறுத்தல் |
| 39. | 15 | புறங்கூறாமை | 19 | புறங்கூறாமை |
| 40. | 13 | பொய்யாமை | 30 | வாய்மை |
| 41. | 90 | பொருட் பெருமை | 76 | பொருள் செயல்வகை |
| 42. | 30 | பொறை | 16 | பொறையுடைமை |
| 43. | 7 | மக்கள் | 7 | மக்கட்பேறு |
| 44. | 23 | மறப்பு | 54 | பொச்சாமை |
| 45. | 46 | மனைவி | 6 | வாழ்க்கைத் துணைநலம் |
| 46. | 32 | மானம் | 97 | மானம். |

# வண்ணச்சரபரின் திருவருணைப் பாடல்கள்

அ. அறிவுநம்பி

''வளமோங்குந் திருவருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே''

என்று ஆறுமுகப் பெம்மானை அன்றாடம் ஏத்திவாழ்ந்த அன்பர்கள் பலருடைய வரலாறுகளைத் தமிழிலக்கியம் கொண்டுள்ளது. திருமுருகனின் அருளினால் சந்தநயம் வழியும் பண்ணமர் பாடல்களை எழுதியவர்கள் சிலரே. அவருள்ளும் வேலை வணங்குவதே வேலை எனக் கொண்டு அவனடி மறவா அடியாராகவே வாழ்ந்து மறைந்தோர் குறிக்கத் தக்கோராவர். அவ்வாறு வாழ்ந்து சிறந்த இறையன்பர்களில் ஒருவரே தண்டபாணி சுவாமிகள். பல்வேறு தலங்கட்குச் சென்று, முருகன் திருப்புகழை எழுதியும் ஓதியும் வாழ்ந்த சுவாமிகளின் வரலாறு பல செய்திகளைக் கூறவல்லது. அவருடைய எழுத்துகள், அவரின் இலக்கியப் பெற்றியையும், கந்தன்மீது கொண்டிருந்த காதலையும், வரலாற்றுக் குறிப்பு களையும் உள்ளடக்கியவை.

## அண்ணாமலையில் ஆறுமுகன்

பல்வேறு திருப்பதிகளில் பன்னிருவிழியானைப் பாடிப் பரவிய சுவாமிகள் ''திருவண்ணாமலையில் கோபுரத்திளையனார் சந்நிதியில் முருகன் ஆணைப்படி, தங்கித் தவமியற்றினார்''. ''கோபுரத்து இளையனார் திருமுன் வந்த சமயம் முகப்பில் சுவர் வைத்து மறைக்கப்பட்டு, வேறு சிறு வாயில் வைத்து, சில சாதனங்கள் உள்ளே சேமிக்கப் பெற்றிருந்தது கண்டு இவர் மனம் வருந்தினர்... சுவரை எடுப்பித்தனர்... கோபுர மாடத்தில் முருகப்பெருமான் திருவுருவம் காணப்பட்டது... முருகனுக்கு இன்றியமையாத வேலாயுதம் இல்லை. தன் வழிபாட்டிலிருந்த வேலாயுதம் சாத்த முடியாதபடியால் பக்கத்தில் சார்த்தினர்'' இச்செய்திகளை உள்ளடக்கிய இரண்டு பதிகங்கள் உட்படப் பல

பாடல்கள் கொண்ட தொகுப்பு நூலே 'திருவருணைப் பாடற்றிரட்டு'' என்பதாம். இதனோடு 'சகத்திரதீபம்' என்ற நூலொன்றையும் எழுதிய சுவாமிகள் 'தன் அபிமானத் தலங்கள் மூன்றில் ஒன்றாகக் கோபுரத்திளையனார் சந்நிதி ஒன்று' என்கின்றார் (தண்டபாணி சுவாமிகள் திருவருணைப் பாடற்றிரட்டு) கோபுரத்திளையனாரைப் புகழும் இந்த நூலில் ஏறத்தாழ 17 பதிகங்கள் உள. ஓர் அந்தாதியும், நூற்பயன் நுவலும் பாடலொன்றும் காணப்பெறுகின்றன. திருவண்ணா மலை ஏழிளையனார் திருப்புகழ் என்ற பெயரிலமையும் ஏழுபாடல்களையும் இந்நூலில் காணவியலுகின்றது. பதிகங்களில் சிலவே, ''அண்ணாமலையார் பதிகம்'' ''உண்ணாமலையம்மை பதிகம்'' என்று பெயர்களுடன் அமைகின்றன. ஏனையவை 'பதிகம்' என்ற பொதுச் சொல்லாலே தலைப்பிடப் பெற்றிருக் கின்றன. காப்புப் பாடல்களும், நூற்பயன் கூறும் பாடல்களும் உள. பதிகங்களில் சில பதினோரு பாடல்களால் உருவாக்கப் பெற்றிருக்க வேறுசில பன்னிரண்டு பாடல்களால் வடிவமைக்கப் பெற்றுள்ளன. இதற்கான காரணம் புரியுமாறில்லை. ஒவ்வொரு பதிகத்தின் நிறைவுப் பாடல்களில் தன் ஊர்ப்பெயர், சிறப்புப் பெயர் கூறித் தன்னையமைத்துப் பாடியுள்ளமை கவனித்துப் போற்றத் தக்கது.

'தேறுதமிழ்ப் புலவோர் பலராலுயர் திருவருணைக் குகனே' எனப் படைவீட்டுப் பதிகத்தில் அவரே கூறுமாப்போல் குகனைப் பற்றித் தம் இறைஞ்சுதல்களை இந்தப் பாடல்களில் மொழிகின்றார் சுவாமிகள்.

> ''திரைநீங்கப் பாடியதும், சீறியவெள
> வாலொழியச் செப்பும் பாட்டும்
> தரையோரும் அறியஇங்கு பலித்ததுபோல்
> உன்கருணை தழைய என்றும்
> புரைதீர்த்துன் செவிக்குணர்ச்சி உண்டாக
> என்றும் எண்ணிப் புகன்றபாடல்
> உரைவீணே இடப்பதென்ன?''

என்ற பாடலில் அண்ணாமலையில் தாம் ஈடுபட்ட செயல்களை வரைகின்ற சுவாமிகள் முற்றிலும் புதிய வழிகளைப் பின்பற்றி இந்நூலை யாத்துள்ளமை எண்ணி மகிழத்தக்கது.

**நூலின் மொழிவுகள்:** 'வல்லாளன் கோபுரத்தின் தென்புறமுள்ள கணபதி பதிகம்' என்ற தலைப்புடன் நூல் தொடங்குகின்றது. முதற்பாடலிலேயே,

> "பொன்றாப் புலவர் புகழும் தமிழ்ப்பெருஞ்சீர்
> குன்றாத் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே"

எனத் தமிழை முதன்மைப்படுத்தும் சுவாமிகள்,

'கள்ளுண்ட வண்டிசைக்கக் கானமயிலாடு பொழில்' என்பது போன்ற கற்பனை கலந்த வரிகளை இடைசெருகித் தந்திருப்பது கருதுதலுக்குரியது.

"திருவருணை - கோபுரத்திளையனார் திருப்புகழ்" என்ற தலைப்புடன் கூடிய இரண்டாம் பகுதியில் 'குழிப்பு' என்ற தலைப்பிட்டும், "தானதத்ததன தனதன தனதன - தனதானா" என்று இசைக்கட்டுமானத்தை மொழிந்தும் அமைத்துள்ள பகுதிகள் கவனத்திற்குரியன. அருணகிரியாரைப் போன்று சந்தங்கலந்து பாடுவதில் சுவாமிகள் பெற்றிருந்த வல்லாண்மை இதனால் புலனாகின்றது. 'திருப்புகழ்'என்று பெயர் தந்திருப்பதும் கணக்கில் எடுக்கப் பெற வேண்டிய கூறு. இதனுடன் இணைத்துக் காணவேண்டிய பகுதிகள் இரண்டு. அவரே சில பதிகங்களின் நிறைவுப் பாடலில் ஊர்ப்பெயருடன் திருப்புகழ் என்ற பெயரையும் இணைத்து

> "நெல்லைநகர் வருமுருக தாசனென்று
> நிலவுதிருப் புகழ்க்காரன் நிகழ்த்தும் பாடல்" (33)

எனப் பாடுவது முதலாவது. இரண்டாவதாகச் சுவாமிகளின் முன் முருகன் தோன்றி "நீ அருணகிரியின் மறுபிறவி" எனச் சாற்றியதாக வரும் அகச்சான்று வரிகள், குறிப்பாக இந்நூலின்கண் உள்ள 'வழக்குப் பதிகம்' தொடக்கத்திலேயே இதனை எடுத்துரைக்கும். அவ்வரிகள்:

> 'எத்தனையோ தரம் அருணகிரியென் றென்னை
> இயம்பியநீ அறியார்போ லிருக்கக் கண்டு
> பித்தன்மக வாகையினால் உனக்கும் பித்துப்
> பிடித்ததுவோ என்றுமனம் பெரிதும் நொந்தேன்'. (41)

அண்ணாமலையார் பதிகத்தில் முக்கண்ணுடையானையும் உண்ணாமலையம்மை பதிகத்தில் பார்வதியையும் திருவருணை

முருகப்பெருமான் பதிகத்தில் முருகனையும் முறைப்பட ஏத்து கின்ற வண்ணச்சரபர் அடுத்து ஒரு புதுமையான முயல்வில் இறங்குகின்றார். முதற்பதிகமாகக் கோபுரத்து முருகக்கடவுள் பதிகம் என்ற தலைப்பில் 12 பாடல்களைப் பகர்கிறார் அடுத்துக் ''கம்பத்திளையனார் பதிகம்'' என்ற தலைப்பில் 12 பாடல்கள் வருகின்றன. முதற்பதிகத்தில் அண்ணாமலைக் கோபுரத்தில் இடம்பெற்ற முருகனையும், பிறகு தூணொன்றில் காணப்பெறும் முருகனையும் ஏத்தக் காணலாம். மூன்றாவதாகக் ''கோபுரம் கம்பம் பொதுப்பதிகம்'' என்ற தலைப்பிட்டு மேலும் 12 பாடல்களை இயற்றியுள்ளார். இதனால் அருணைக் கோவில் திருமுருகன்பால் அவர் கொண்ட ஈடுபாடு ஒருசேரப் புலனாகிறது.

> ''..... அருணைக் கோபுரத்தின் கீழ்யில்
> வாயிலுக்கு வடவருகில் மருவுகுருபரனே''

என்பன முதற்பதிக ஈற்றடிகள்.

> ''........ திருவருணைக் கம்பத்தில்
> இளையோனாம் எம்பிரானே''

என்பன இரண்டாம் பதிக ஈற்றடிகள்.

''கோபுரத்தும் தூணினும்வாழ் குமரவேளே'' என்பது மூன்றாம் பதிக ஈற்றடி. அத்துடன் நில்லாது அண்ணாமலையூரின் காராளர் வீதி முருகக் கடவுளுக்கு ஒரு பதிகம் வரையக் காணமுடிகிறது ஆக, எங்கே முருகு தென்படினும் உருகி நின்று பதிகம் பாடும் போக்கினராகச் சுவாமிகளைக் காணலாம்.

**வேலனுக்கே வேல்:** கண்ணில் தெரிந்த முருகனின் திருவுருவில் வேல் காணப்பெறாமை சுவாமிக்கு மனக்கவலையை உண்டாக்கிற்று. வழிப்பாட்டிற்கெனத் தாம் வடிவமைத்திருந்த வடிவேலை முருகனுக்கு வழங்குகின்றார்.

> 'சூரன்முதல் தானவரைத் தொடர்ந்தடர அன்றுவந்த
> வீரமிந்நாள் இல்லையென்று விதிர்வேலை
> வெறுத்தாயோ'' (39)

என்பன போன்ற வரிகளால் முருகனைக் கேள்விக்கணைகளால் துளைக்கும் சுவாமிகள் 12 பாடல்களில் வேலனை வேலேற்க வேண்டுகிறார். முருகன் வேலணிந்து நின்றதாக அடுத்து வரும் 12 பாடல்களில் பாடி நிறைவு கொள்கின்றார். வேலேற்ற

வேலவன் தம் குறைகளையெல்லாம் நீக்கவில்லை என்று வழக்குப் புனைகின்றார். அவை வழக்குப் பதிகத்தின் 12 பாடல்கள்.

முருகனைப் பாடுங்கால் தேவையான பிற தெய்வங்களையும், சமயக் கருத்துகளையும் சொல்லுங்கால் மரபில் நின்றும் மாற்றங் கொண்டும் சுவாமிகள் பாடுகின்றார். வாய்ப்பு வருமிடங்களில் சமணரைச் சாடுகின்ற சுவாமிகள் ''இழிவுபெறு புலையர் நெறி'' ''வள்ளூரம் புசித்துவக்கும் ஈனர்'' போன்ற சொற்களில் புலால் உண்ணுவாரைக் கடுமையாக எதிர்க்கின்றார். அவருடைய எதிர்ப்பிற்கு இறையன்பர்கள் மட்டுமின்றி இறையே இலக்காக அமைவதுண்டென்பதைப் பலரும் பலகாலும் சொல்லுவார். அதற்குச் சான்றாக, ஓரிடம். விழுப்புரத்தை அடுத்த கோலியனூரில் 'கொலைப்பூசை' நடப்பதாக அறிந்ததும் சுவாமிகளின் எழுதுகோல் சினங்கொள்கிறது. பாடற்கணை ஒன்று பாய்ந்து வருகிறது.

> ''கோலியனூர் மாரி! குணங்கெட்ட சண்டாளி!
> நீலி! உனக்கோர் சொல்நிகழ்த்தக்கேள் – தாலி
> அறுத்தமுண்டை யானாலும் ஆடுதின்னலாமோ?
> வெறுத்துவிட்டால் நன்று மிக.'' (பக். 5)

'சரவணபவ' என ஆறெழுத்து மந்திரத்தில் அனுதினமும் கரைந்து நின்ற வண்ணச்சரபர் தம் பாடல்களில் இறையடியார்களையும், இதிகாசச் செய்திகளையும் ஊடு கலக்கக் காணலாம். ''புளியமர நீழலுற்ற நண்பன்'' எனச் சடகோபரையும், முனிவன் என அகத்தியனையும் சுந்தரர் கவிதைக்காகப் (10) பரவையாரிடம் தூது நடந்த இறைவனையும் (73) 'கற்றூண் திரைநீரில் மிதப்பவும்' என்ற இடத்தில் அப்பரையும் (75) 'காழிநகர்க் கவுணியனே' எனுமிடத்தில் சம்பந்தரையும் (47) தொட்டுக் காட்டும் சுவாமிகள் நரசிம்மமூர்த்தி (23) அயோத்திராமன் (22) அருச்சுனன் (66) கண்ணன் (66) போன்ற இதிகாச மாந்தர்களை நினைந்து பாடியதும் நோக்கவியலுகின்றது.

> ''போனப்பிறப் பினில் அருணகிரியாய் நாயேன்
> பூதலத்தில் வாழ்ந்த விதம்'' (43)

என்ற வரிகளில் தம்மையும் சுட்டி நிற்கின்றார் சுவாமிகள்.

முத்திரைச் சித்திரங்கள்: திருப்புகழ்ச்சாமி என்று புகழப் பெற்ற தண்டபாணி சுவாமிகளின் திருவருணைப் பாடற்றிரட்டில் அவர்தம் தனிமுத்திரைகள் ஆங்காங்கே மிளிர்கின்றன.

'தெள்ளியசெந் தமிழ்க்குருகும் உணர்வுன் றன்பால்
சிறிதேனும் உள்ளதென்றால் தெய்வயானை
வள்ளிமுதற் பலரறியத் தமியேன் வேண்டும்
வரமனைத்தும் கொடுத்தருள'' (42)

வேண்டுகின்ற வண்ணச்சரபர் ''மதுவாரி யமுதுஎனும் செந்தமிழ் மேலாணை'' எனத் தமிழ்மீது ஆணையிடக் காணலாம். அதற்கும் மேற்சென்று முருகனே தமிழுக்காகப் புலவர்களை இரங்கி நின்றதாகப் புகலுவார்.

'கீரனைப் பொய்யாமொழியைப் பகழிக் கூத்தனைக்
குருகைக் கிழவன் தன்னை
நேரனத்தம் புலவர்களை நீயிரந்து
தமிழ்கேட்ட நீர்மையாவும்'' (54)

என்ற புனைவுகள் மேலதற்குச் சான்றாம்.

முருகனை ஏத்தும்போதும் முருகன் மசியவில்லை, மாறாக ஏசும்போதும் அவன் மனமிரங்கி வரவில்லை.

'புகழ்ந்தாலும் இரங்குகில்லாய், இகழ்ந்திட்டாலும்
பொறுக்கின்றாய்! என்ன செய்வேன்''

என்று அரற்றும் சுவாமிகள் பள்ளி எழுச்சி மரபில் நின்று, 'நித்திரை நீங்குபதிகம்' என்ற தலைப்பில் பன்னிரு பாக்களைப் படைத்துள்ளார். முருகனை எழுப்பும் விதத்தில் புதிய நிலையைக் கையாளும் வித்தகத்தை இவண் உணரலாம்.

பதிகம் என்ற பொதுத் தலைப்பிலமையும் பகுதியொன்றில்,

'பழையதிருப் புகழ்க்காரன் பதம்பரவிப்
புதியபுகழ் பாடும் தொண்டன்'' (51)

என்று அறிமுகம் செய்து கொள்கின்றார் தண்டபாணியார். திருப்புகழ் என்ற தலைப்பிட்டு எழுதியும், அருணகிரிநாதரின் மறுவடிவு என முருகனே மொழிந்ததாகப் பன்முறை பகன்றும், ஏறத்தாழ முன்னவரின் சந்தங்களைக் கையாண்டும், திருப்புகழ்ச் சாமி என மற்றையோர் புகழுமாறு நடந்து கொண்டும் வாழ்ந்த சுவாமிகள் முன்னவர்மேல் கொண்ட மதிப்பை மேல்வரிகள் மொழிகின்றன.

"விழிநிரையில் ஒழுகுதிரு - வருள்கருதி உருகுமவர்
விதியழிய நடனமிடும் — இருதாளா"

என்ற அவரின் வரிகட்கு விளக்கம் எழுதும்போது "முருகனுக்கு ஆறு திருமுகங்களிலும் முகமொன்றிற்கு மூன்று கண்வீதம் பதினெட்டுக் கண்கள் உண்டு. வடமொழிக் காந்தத்தில் கூறப் பட்டிருக்கிற உண்மை" (8) என உரைப்பர். முருகனைப் பதினெட்டுக் கண்ணுடையானாகக் கருதும் சுவாமிகளின் புதுப் பார்வையை இவ்வுரை எடுத்துக்காட்டும், திருவண்ணாமலையில் அவதரித்த அருணகிரிநாதர் கிளிவடிவுபெற்றார் என்பது பொதுச் செய்தி. அக்கிளியே அம்மன் கையில் இருக்கின்றது என்ற கூற்றை மறுதலிக்கின்றார் சுவாமிகள். வாழ்நாள் முழுவதும் ஆறுமுக னையே எண்ணி வாழ்ந்த, இறைவனாம் முருகனால் ஆட்கொள்ளப்பெற்ற, அருணகிரியார் கிளிவடிவில் அந்த அறுமுகனிடமே உறைவதுதான் முறைமை என்பது வண்ணச் சரபர் வாதம். அதனால்

"அலகைக்கு ஆர்வம தாகிட நிணமலி
களவித் தாரமெ லாம்நுவல் கிளியுடன்
அவிர்பொற் புயமீதெனதுரையையும் அணிவோனே"

என்கின்றார். (15)

வள்ளியம்மனை எடுத்துக் காட்டுமளவிற்குத் தெய் வானையைச் சுட்டாமை, முருகனைத் தோழமையுணர்வுடன் அழைத்தமை, இறைவன் இறைவிகளையே (புலைநெறிக்கு ஆட்படும் தோற்றங் கொள்ளுங்கால்) சாடுகின்றமை, எவ்விடத்தும் தமிழின் மாண்பை மனங்கொள்ளுமாறு கூறிப் போந்துள்ளமை போன்ற இடங்களில் சுவாமிகளின் தனித்துவம் புலனாகின்றது.

இவ்வாறாக வண்ணச்சரபரின் பல்விதமான பெற்றிமைகளை உணருதற்கு அவருடைய 'திருவருணைப் பாடற்றிரட்டு' வாய்ப்பு நல்கிறது. அவர் பெற்றிருந்த அனுபவங்களை அவருடைய சொற்களிலே உய்த்துணர இப்பாடல்கள் உதவுகின்றன. மரபிலிருந்து விலகாதும், மரபுகளைப் புறந்தள்ளியும் இருவகைப் போக்கில் அவருடைய எழுதுகோல் பயணித்திருப்பதை இந் நூலும் எடுத்து மொழிகிறது. சுவாமிகளின் இலக்கிய அறிவு, இசையறிவு, இலக்கண அறிவு போன்றவற்றுடன் அவருடைய முருகநெறியை ஓரளவு விரிந்த நிலையில் அறிய இந்தத் திரட்டு பயன் தருகின்றது. அவரைப் பற்றிய பல்விதச் செய்திகளை உள்ளடக்கிய இந்த நூல் வண்ணச்சரபரின் சதுரப்பாட்டிற்கு மற்றுமொரு எல்லைக்கல்.

# புலமையிலக்கணம் உணர்த்தும் கவிதைக் கருத்தும் பாடும் முறையும்

அ. ஆலிஸ்

சென்ற நூற்றாண்டின் தமிழ்ப் பெருமகனார் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் (28-11-1839 — 5-7-1898) தம் 'அறுவகை இலக்கணம்' என்ற நூலில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முதலியவற்றிற்கு இலக்கணம் வகுத்ததுடன் ஆறாவதாகப் புலமைக்கு இலக்கணம் வகுத்துள்ளமை பிற இலக்கண நூல்களில் காணக் கிடைக்காத ஒன்று ஆகும். புலமை இலக்கணம் என்ற பகுதியில் புலவன் என்னென்ன இயல்புகளைக் கொண்டிலங்க வேண்டும்? அவன் எத்தகையவனாய் இருந்தால் சிறந்த ஆளுமை பெற்றிலங்க முடியும்? எவ்வெவ்வாறு நடந்து கொண்டால் அவன் புலமை பெற முடியும்? கவிதை வடிவங் களைக் கையாளுவதில் வல்லமை பெற எவ்வெப் பாக்களை என்னென்ன வரிசை முறைகளில் கற்க வேண்டும்? என்னென்ன தவறுகளைப் புலவர்கள் செய்யக்கூடாது? தமிழ்ப் புலவர்களின் சுருக்கமான-வரலாறு போன்ற பல செய்திகளைத் தொகுத்துத் தருகிறார். புலவன் பற்றியும், புலமை பற்றியும் தனி இயலைத் தொல்காப்பியர் போன்றோர் சிந்திக்காது இருந்த நிலையில் தண்டபாணி சுவாமிகள் மட்டும் சிந்தித்துப் பார்க்க வேண்டியதன் அவசியம் யாது? புலவர் பலர் செல்வந்தர்களின் அடிவருடிப் பிழைத்துக் கொண்டிருந்த அவர்தம் காலகட்டத்தில் ''முச்சந்தியிலே உழன்று கொண்டிருந்த தமிழ்ப் புலவர்களுக்குத் தமிழ் மொழியின் தொன்மை, புனிதத்தன்மை, தனித்தியங்கும் ஆற்றல் ஆகியவற்றை எடுத்துக்காட்டி புலவர்களுக்குள் இணக்கம் ஏற்பட வேண்டும் என அறிவுறுத்தி ஒரு நல்லவையில் கூறமுடியாதபடி ஆபாசமாகக் கொட்டுதல் தரமன்று எனத் தெளிவுறுத்தித் தமிழ்ப் புலவர்களைச் சமுதாயத்திற்குப் பயன் படுமாறு மடைமாற்றம் செய்தாக வேண்டிய வரலாற்று இன்றியமையாமை ஏற்பட்டுவிட்டது. காலத்தின் இக்கட்டாயம்

தான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் புலமை இலக்கணம்'' என்பார் இந்நூலுக்கு உரை வகுத்த புலவர் ப. வெ. நாகராசன். இவ்வாறு புலமை குறித்துப் புலவர்களுக்குத் தக்கவாறு அறிவுரை கூற விழையும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் கண்ணோட்டத்தில் செய்யுளின் பாடுபொருள், கவிதை பாடும் முறை முதலியவற்றைப் பற்றிய கருத்துக்களைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

புலமை இலக்கணம் என்ற இயலினைத் தேற்ற இயல்பு, தவறு இயல்பு, மரபியல்பு, செயல்வகை இயல்பு என்று நான்காகப் பிரித்துப் பேசும் இப்பகுதிகளில் நூலாசிரியரின் தமிழ்ப் பற்றையும், தெய்வ பக்தியையும், தெளிவாகக் காண இயலுகிறது. தேற்ற இயல்பு, தவறு இயல்பு ஆகிய இரு பகுதி களிலும் அதிகமாகப் புலவர்களின் ஆளுமை குறித்துச் சிந்திக்கப் படுகிறது. அறிகருவிகளின் உதவியால் அறிந்த பொருளின் தன்மையை ஐயம் திரிபற இன்னதெனத் துணிந்து தெளிதலே தேற்றம் என்பதை,

தேற்றம் என்பது புலவன் ஆம்ஆறு
ஆதலின் அம்முறை முதற்கூடதுமே (நூற்பா. 646)

என்று குறிப்பிடுகிறார். ஐயம் திரிபற 'இது இன்னது' என்ற தெளிவு புலவனுக்குத் தேவை; அதுவே புலவன் ஆவதற்கு வழி என்று விளக்குவது புலமை பற்றிய ஒரு கருத்து விளக்கம் ஆகிறது.

''காரணம் காரியம் காணாப் புலமையைப்
பூரணம் என்னப் புகலவொண் ணாதே'' (694)

என்ற நூற்பாவில் கூறப்படும் நிகழ்ச்சிகளினுடைய காரண காரியத் தொடர்பை அறியாவொருவரின் கல்வியாற்றலும் முழுமையான புலமை அன்று என்ற விளக்கமும் புலமை பற்றிய ஒரு கருத்து விளக்கமாகிறது.

**கவிதைக் கருத்து**

புலவர்கள் தாம் பாட எடுத்துக்கொண்ட பொருள் அல்லது கவிதைக்கு உள்ளடக்கமாக எடுத்துக்கொள்ளும் உள்ளடக்கம் எத்தகையதாய் இருக்க வேண்டும் என்பதைக் கூறவரும்போது யாருடைய புகழைப் பாடுபொருளாகக் கொள்ளக் கூடாது?

அவ்வாறு தெரிந்துகொண்ட பாடுபொருளை எம்முறையில் பாடக் கூடாது? என்று குறிப்பிடுகிறார்.

செல்வந்தர்களின் புகழ்பாடி ஒன்றுக்கும் உதவாத வகையில் அவர்களைப் பற்றி இல்லாதன எல்லாம் கூறிப் பொய்யுரைப்பது தவறு; இது கவிதையின் உட்பொருளாகக் கூடாது என்று விளக்க வருமிடத்து,

"மாய்வாரிப் போற்றி மகிழும் பாவலோர்
வன்னச் சிவிகையில், வையகம் படைத்தோற்
கழறும்பாவலர் கையோடு உயர்வே" (689)

என்று குறிப்பிடுகிறார். சின்னாள் இருந்து இறந்தொழிகின்ற மனிதர்களை அவர் தரும் பரிசில்களுக்காகப் புகழ்ந்து பாடி அதனால் பெரும் வரிசைகளைப் பெற்றுக் களிக்கின்ற கவிஞர் களின் செல்வச் செழிப்பைக் காட்டிலும் தனு, கரண, புவன, போகங்களைப் படைத்தளித்த பரம்பொருளின் வள்ளன்மையைப் போற்றும் புலவரின் வறுமை நிலையே பாராட்டிற்குரியது என்பார் உரையாசிரியர். பிறிதொரு நூற்பாவில்,

"சேவித்து ஒருவர்பின் செல்வார் புலமையில்
பாடல்விற்று அலைவார் பரிசுகேடு இனிதே" (763)

என்று குறிக்குமிடத்தும் ஒரு செல்வனுக்கே சற்றேறக்குறைய அடிமைப்பட்டு அவன் கருத்தின் வண்ணமே ஒழுகுகின்ற ஒரு கவிஞனின் புலமையைவிடப் பற்பல தலைவர்களின் மீது பாடல் களைப் புனைந்து அவர்கள் தரும் பரிசில்களால் வாழ்க்கை நடத்தும் இரவலரின் இழிவும் உயர்ந்ததே ஆகும் என்று இதே பொருளைக் கூறுகிறார்.

"இடைக்காலத் தமிழகத்தின் பிற்பகுதியில் (அதாவது கி.பி. பதினான்காம் நூற்றாண்டு முதல்) தமிழ் இலக்கிய வளர்ச்சி தடைப்படலாயிற்று; தமிழரின் படைப்பு இலக்கிய ஆற்றல் குன்றியது; சிந்தனையில் குழப்பமும் செயலில் தயக்கமும் உண்டாயின... உயர்ந்த நோக்கங்களைக் கொண்டு தொடக் கத்தில் சிற்றிலக்கியங்கள் இயற்றப்பட்டன. காலப்போக்கில் அவற்றின் நோக்கும் போக்கும் மாற்றமிழந்தன. வாழ்க்கையோடு ஒட்டாத செய்திகளும் கற்பனைகளும் 'தத்தம் தலைவரே எல்லாரினும் உயர்ந்தவர்' என்ற உயர்வு நவிற்சியாகப் புகழ் பாடும் இயல்புகளும் மேலோங்கி நிற்கின்றன... சமயத்துறையில்

இடம்பெற்றிருந்த சிற்றிலக்கிய முயற்சிகள் பின்னர் பிரபுத்துவ வழிபாட்டிற்குரியதாக மாறிவிட்டதைப் பிற்கால இலக்கியங் களால் அறிகிறோம்'' என்ற சே. இராசேந்திரனின் (தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பக். 12'-124) கூற்று இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ''மிகப் பிற்பட்ட காலத்தில் தமிழக வரலாற்றில் பல மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. தமிழ்ப் பண்பாட்டையும் கலைகளையும் போற்றிப் பாதுகாத்து வந்த தமிழ் மன்னர்களின் ஆட்சி மறைந்தது... சான்றோனாதலும், இறைவன் திருவடியை யடைதலுமே கல்விப் பயன் என்னும் நிலை மாறிக் கல்வியும் ஒரு தொழிலாகிவிட்டது 'வயிற்றின் கொடுமையால் நாழி அரிசிக்கே பாட்டிசைத்துப்போய் விற்கும்' அவல நிலையைப் பல புலவர்களின் வரலாற்றில் காணலாம்... தமிழ்ப் புலவன் அரசன், சிற்றரசன், பெருநிலக்கிழார் என விளங்கிய செல்வர்களை அண்டி வாழவேண்டியவன் ஆனான்'' என்று ப. வெ. நாகராசன் இந்நூலின் தம் முன்னுரையில் கூறும் கூற்றும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

இத்தகு சூழ்நிலைகளின் வளர்ச்சி நிலையைத் தம் காலத்தில் 19-ஆம் நூற்றாண்டிலும் கண்ட தண்டபாணி சுவாமிகள் மனம் வருந்திப் புலவர்களுக்கு இன்னின்னாரைப் பாடும் நோக்கில் கவிதைகளை அமைத்துக் கொள்ளாதீர்கள் என்று அறிவுறுத்துவது தமிழ்ப் புலவர் சமுதாயத்தின் மீது அவருக்குள்ள அக்கறையைக் காட்டுகிறது. மேலும்,

> கொல்லல் ஊன்சமைத்தல் ஆதிய விரித்துக்
> கழறுந் துணிவுடைக் கவிப்புலவோரைப்
> பேயர் என்று உலகம் பெரிது இகழ்ந்திடுமே (690)

என்ற நூற்பாவிலும் கொல்லாமை, புலால் உண்ணாமை முதலிய வற்றை பிரித்துப் பாடுவோரைக் கண்டிக்கிறார்.

> கால வேற்றுமை கருதாப் புலவன்
> சிலனே எனினும் சிறுமை யினனே (693)

என்ற நூற்பாவில் காலத்திற்கேற்பப் புதிய உள்ளடக்கம் மற்றும் புதிய வடிவத்தைப் புலவர்கள் கருத்தில் கொள்ள வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கிறார். இது அவர்தம் காலத்திற் கேற்பப் பாப் புனையும் புதுமை விரும்பும் உள்ளத்தையே நமக்குக் காட்டுகிறது.

எந்த உள்ளடக்கத்தை எடுத்துக் கொண்டாலும் அதனை ஆபாச நோக்கில் சித்திரிக்கும் பான்மையினை முற்றிலும் வெறுக்கிறார் சுவாமிகள்.

"காமக் கடலே கதிஎனக் கருதிப்
போவோர் புலமையிற் புண்ணியம் இன்றே" (687)

என்ற நூற்பாவில் தமிழ்ப் புலமையை வெளிக்காட்டக் காமச் சுவையை மிக விரித்தும் பச்சையாகவும் கொச்சையாகவும் பாடுதலே சிறந்த நெறியாகும் என்று எண்ணி அவ்வழியில் ஈடு படுவதைக் கண்டிக்கிறார். "இந்நூலாசிரியர் காலத்தும் அதற்குச் சற்று முன்னும் பின்னும் குறுநில மன்னர் நிலக்கிழார்கள் பெருஞ் செல்வர்கள் ஆகியோர் மீது எழுந்த-அகத்துறை என்னும் போர்வையில் அமைந்த சிற்றிலக்கியங்களையும் தனிப்பாடல் களையும் பார்த்தால் இந்நூற்பாவின் இன்றியமையாமை தெற்றென விளங்கும். விரித்திலேன். மகாகவி பாரதியாரும் தன் சின்னச்சங்கரன் கதையில் இவ்வவல நிலையைக் கோடிட்டுக் காட்டியுள்ளார்" என்று (பக். 473-474) உரையாசிரியர் தம் உரையில் குறிப்பிடுகிறார். இவ்வாறு செல்வந்தர்களைப் பாடுதல், கொல்லல், ஊன் உண்ணுதல் முதலியவற்றைப் பாடுதல், காமச்சுவையோடு பாடுதல் முதலிய அனைத்தும் உள்ளடக்கமாக மிளிர்தல் இலக்கியத்துக்கு அழகு சேர்க்காது என்று கண்டித்துப் புதியன புனைதல் தவறில்லை என்று புதியவற்றை ஆதரித்தும், சுவாமிகள் பாவின் கருத்து பற்றிய தம் கருத்தை புலமை இலக்கணத்தில் முன் வைக்கிறார்.

**பாடும் முறை**

"பொதுமொழியினை இலக்கிய மொழியாக மாற்றும்போது ஏற்படும் மரபுப் பிறழ்ச்சிகளே நடையியல் சிறப்புக் கூறுகள்" என்பார் ஹாலிடே என்னும் அறிஞர். இதற்கிணங்க இலக்கிய மொழியாக்கத்தில் புலவர் தகுந்த கவனம் செலுத்த வேண்டும் என்று அக்கறை கொள்கிறார் சுவாமிகள். அவ்வாறு கவிதை மொழியை உருவாக்கும் செயற்பாட்டில் முக்கியம் வாய்ந்த ஒன்று புலவனின் சொல்லாட்சி முறை. "கருத்திற்கேற்ற வடிவத்தைத் தருவது சொற்களின் தேர்வு முறையாகும். சொற் களின் தேர்வு முதலானவை பல நிலைகளில் நடைபெற்றாக வேண்டும். இலக்கிய வகைக்கேற்ற சொற்கள், காலத்திற்கேற்ற சொற்கள், பாத்திரங்களுக்கேற்ற சொற்கள் என்று இவை

வேறுபடும்'' என்பதற்கிணங்க சொற்களைத் தரம் பிரித்தும் அவற்றை எவ்வாறு கையாள வேண்டும் என்பது பற்றியும் சுவாமிகள் தரும் கருத்துக்கள் பின்வருவன:

''கொண்ட துறையினைக் கோதுபடக் கூறின்
மண்டலத் தாரும் மதியார் அன்றே'' (695)

என்று தவறியல்பில் தாம் பாடத் தொடங்கிய துறை எதுவாயினும் சொல்ல வந்ததைக் குற்றமில்லாமலும் தெளி வாகவும் கூற வேண்டும் என்று பிழைபடா உள்ளடக்கத்தையும் தெளிவாக கூறும் முறையையும் சிந்திக்கிறார்.

''வீணே விரிப்பினும் விரித்தலைச் சுருக்கினும்
மாணார் புலவோர் மதியார் அன்றே'' (698)

என்ற நூற்பா சொல்ல வேண்டிய 'கருத்திற்கேற்ப வடிவம்' அமைவதைச் சுட்டுகிறது. சுருக்கமாகச் சொல்ல வேண்டிய வற்றைப் பயனின்றி மிக நீட்டி விரித்துக் கூறினாலும், விளக்க மாகக் கூற வேண்டிய இடங்களில் தெளிவு ஏற்படாதவண்ணம் மிகவும் சுருக்கமாகக் கூறினாலும், கல்விச் சிறப்புடைய அறிஞர்கள் போற்ற மாட்டார்கள் என்று விளக்குகிறார்.

சொல்நிறம் தன்நெஞ்சு அறியத் தோன்றும்
அளவும் புலமையின் அவா அடங்காதே (664)

என்று சொற்களின் நிறத்தைத் தன் உள்ளம் உணரும்படியான மொழித் தெளிவு பிறக்கும் வரை இனியும் புலமையைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்னும் வேட்கை தீராது என்று குறிப்பிடுகிறார். சொற்களை அவற்றின் இயல்பு உணர்ந்து பயன்படுத்தும் ஆற்றல் ஒரு புலவருக்குக் கைவந்துவிட்டால் புலமையைப் பெருக்கிக் கொள்ளும் ஆவல் தீர்ந்துவிடும்; அதாவது அத்துடன் புலமையின் எல்லையை அவர் அடைந்து விட்டார் என்று பொருள் என்பார். சொல்லிலக்கணம் பகுதியில் சொற்களை இனம் பிரித்து அவற்றிற்கு நிறப்பெயரைச் சூட்டு கிறார். கரிய நிறம், செந்நிறம், வெள்ளை நிறம் ஆகிய நிறப் பெயர்களைச் சொற்களுக்குச் சூட்டி மகிழ்கிறார்.

''இயல் இசை நாடகம் என்னும்முத் தமிழ்ச்சொல்
பொதிய மால்வரைப் பொழில் என இருண்டும்

உலவா முனிவோர் உடைஎனச் சிவந்தும்
வீழ்புனல் அருவியில் வெளுத்தும் தோன்றும் என்று
அறிவார் மலர்த்தாள் அணிதலை எமதே'' (171)

என்பதுவே அந்நூற்பா. சொற்கள் பொதிய மலைச் சோலையைப் போல இருண்டு கரிய நிறமாகவும், தவசிகளின் ஆடையைப் போலச் செந்நிறமாகவும், மலையருவியைப் போன்று வெண்மை யாகவும் இருக்க வேண்டும் என்பது இதன் விளக்கம்.

எழுத்துஉரு அறியா இயல்பினர் தாமும்
அறியும் மாற்றம் அனைத்தும்வெண் ணிறமே (172)

என்று வெண்சொல்லுக்கு விளக்கம் தருகிறார். எழுத்தறிவற்ற பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய சொற்கள் வெண்ணிறத்தன. அன்றாட வாழ்வில் அனைவரும் பயன் படுத்துவன வெண்ணிறம் வாய்ந்தவை.

கொல்லா விரதக் குருவாம் குறள்போல
புந்தியின் அளவில் பொருள்தரும் சொற்கள்
பளிங்கு நிறம் எனப் பகர்வது முறையே (173)

என்று திருக்குறளைப் போன்று கற்பவர்கள் தம் அறிவாற்றலுக்கு ஏற்ற அளவு பொருள் கொள்ளும் வகையில் அமைந்த சொற் களைப் பளிங்கு நிறம் உடையன என்கிறார்.

பேயொடு குன்றும் பிளக்குமாறு
கழறும்நூல் ஆதிய கருத்த நிறமே (174)

பொருள் காண அருமை உடைய (கடினச் சொற்களைப் போல) திருமுருகாற்றுப் படை போன்ற நூற்கள் கருஞ்சொற்களாவா யவை என்று கருஞ்சொற்கள் என்று ஒரு பிரிவை வகைப்படுத்து கிறார். அருணகிரிநாதரின் திருப்புகழ், கவிராச பண்டிதரின் சௌந்தரியலகரி மொழிபெயர்ப்பு, அவ்வையாரின் விநாயகர் அகவல் போன்ற பனுவல்கள் அமைக்கப்பட்டுள்ள சொற்கள் செந்நிறமுள்ள சொற்கள் (நூற்பா 175).

நால்வரும் பதின்மரும் நவின்ற சொற்கள்
பொன்மை நிறம் எனப் புகலத் தகுமே (176)

என்று பக்தி இலக்கியச் சொற்கள் பொன்னிறத்தின என்பார். ''ஒளியும் உயிரும் கொண்ட சொற்களை எவன் லாவகமாகவும்

உயிரோட்டத்துடனும் கையாளுகிறானோ அவனே சிறந்த் கவிஞன்; உயர்ந்த படைப்பாளி. இதனால்தான் கவிஞர்களைத் தமிழ் உலகம் "சொல்லேருழவர்கள்" என மிக அருமையாகக் கூறிச் சென்றுள்ளது" என்பதற்கிணங்க சுவாமிகள் கவிஞனின் புலமைச் சிறப்புக்குச் சொற்களைத் தெரிவு செய்தல் இன்றியமையாத தனித்த ஆற்றல் ஆகும் என்று வலியுறுத்த எண்ணியே இவ்வாறு சொற்களை அவற்றின் தன்மைக்கேற்ப நிறம் பிரித்துக் காட்டுகிறார். புலவனது ஆளுமை பற்றிப் பல வகைகளில் சிந்தனை செய்வதாய் அமையும் புலமை இலக்கணம் இவ்வாறு உள்ளடக்கம் மற்றும் சொல்லாட்சி பற்றிச் சிந்திக்கிறது. இனி வரும் காலங்களிலும் இதுபோல் அவ்வக் காலச் சூழலுக்கேற்பப் புலமை இலக்கணம் எழுதப்படலாம் என்பதற்கு நல்லதொரு முன்னோடியாகப் புலமை இலக்கணம் என்ற இயல் திகழ்கிறது என்ற பெருமை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளுக்கு என்றும் உண்டு எனில் பொருத்தமே ஆகும்.

# பழநித் திருவாயிரம்

## இராகவன் முத்து

திருமுருகப் பெருமானை முழுமுதல்பரம் என்று கொண்டு ஆறெழுத்து அருமறையை உருவியற்றி வழிபடுதலால் அளப்பரிய வளங்களை எய்தியவரும் எய்துபவரும் ஆய மெய்யடியார்கள் எண்ணற்றவர். அவர்களின் சமயக் கொள்கை கௌமாரம் எனப் பெறும். (அது, சைவப் பெருஞ்சமயத்தின் அகப்புறம் அல்லது உள்கிளையே). சங்க காலம் முதற்கொண்டே தமிழர் முருகவேளை வழிபட்டு நலனும் பயனும் கொண்டு வாழ்ந்தனர். அவர்களிற் பற்பல புலமைச் செல்வர்கள் எண்ணற்ற பாமாலை களையும் இலக்கியங்களையும் முருகவேள் எழில்தாள்களிற் படைத்துக் களித்தனர். அவ்வண்ணம் முருக இலக்கியங்கள் படைத்துக் குவித்த பெருஞ் செல்வர்களில் குறிப்பிடத்தக்க ஒருவர், வண்ணச்சரபம் தண்டபாணியடிகள் ஆவார்.

வண்ணச்சரபம் அடிகள் அருளிய நூல்களில் ''ஆயிரக் கவிகள்'' என்பது ஒரு வகை. அவற்றில், ''பழநித் திருவாயிரம்'' என்ற நூல் பற்றிச் சில செய்திகளை இங்குத் தொகுத்துள்ளேன்.

### ஆயிரக் கவிகள்

தனிப் பாடல்கள், வணக்கப் பாடல்கள், பதிகங்கள் (10 பாடல்) பாடும் வழக்கத்திற்குப் பின் மாலைகள் (மும்மணி, நான்மணி), பிள்ளைத்தமிழ் முதலாய (100 பாடல்) சிற்றிலக் கியங்கள் பாடும் பழக்கம் தமிழ் இலக்கிய உலகில் எழுந்தது. அதன்பிறகு, ஒரு தலைவனை (பாடுபொருளைப் பற்றிப் பெருந் தொகையில் (100க்கும் மேலாக) பாடல்கள் செய்யும் மரபு வந்தது. ''சந்நிதிமுறை'' என்ற தலைப்பில் வந்த தோத்திரப் பாடல் தொகுப்புகளும் ''ஆயிரக் கவிகள்'' என்ற பேரெண்ணிக்கைப் பாடல் தொகுப்புகளும் இந்நிலையில் வந்தவையே. திருப்போரூர், கம்பை, திருச்செந்தில், திருத் தணிகை, திருவரங்கம் முதலிய தலங்களின் சந்நிதி முறைகள்

ஒவ்வொன்றும் ஆயிரம் பாடல்களினும் மிகுந்த பாடல்களை உடையன. அவ்வரிசையில் ஆயிரம் பாடல்களை உடைய நூல்களாகிய ''ஆயிரக்கவிகள்'' செய்தருளிய புகழாளரில் தண்டபாணியடிகள் ஒருவர். தில்லை, பழநி, திருவரங்கம் என்ற தலங்களின் பெயரால் மூன்று ஆயிரக் கவிகளையும், ''தெய்வத் திருவாயிரம்'' என்ற ஆயிரம் பாடல்களையும், ஏழாயிரப் பிரபந்தம், ஐயாயிரப் பிரபந்தம் என்ற பெரு நூல்களையும் அடிகள் அருளியுள்ளனர்.

**பழனித் திருவாயிரம் - பாடல் வகைகள்**

இந்நூலில் பற்பல வகை யாப்புக்களை உடைய பாடல்கள் மொத்தம் ஓராயிரம் உள்ளன. வெண்பா மாலை, வெண்பா அந்தாதி. இரண்டு மாலைகளும் நூறு நூறு வெண்பாக்கள் கொண்டவை. பிள்ளைத்தமிழ் நூலும் கலம்பக நூலும் என்ற இரு சிற்றிலக்கியங்கள் ஒவ்வொன்றும் நூறு பாடல்கள் கொண்டுள்ளன. கட்டளைக் கலித்துறை வகையால் ''அலங்காரம்'' என்ற நூறு பாடல் மாலை ஒன்றும், யமக அணி விளங்க யமக அந்தாதி மாலை (நூறு பாடல்) ஒன்றும் திரிபு என்ற அணி விளங்கும் திரிபு மஞ்சரி (நூறு பாடல்) மாலை ஒன்றும் பதிற்றுப்பத்து அந்தாதி என்ற நூறு பாடல் மாலை ஒன்றும் இதில் இடம் பெறும். நடுஓலியல் அந்தாதி என்ற பகுதி சந்தப் பாடல்களைக் கொண்டது. கலவி மகிழ்தல் வண்ணம் என்ற பகுதி அகப்பொருள் துறையில் அமைந்த சந்தப் பாடல் களை உடையது. 'திருவகுப்பு' என்ற மூன்று நெடும் பாடல்கள் அருணகிரியாரின் 'வேல்வகுப்பை' ஒத்தவை.

**இலக்கிய வழக்கம்**

நூலின் நுழைவாயிலில் அடிகள் பிற நூலாசிரியர்களைப் போலவே, கணபதிக்கும் கலைமகளுக்கும் துதிப்பாடல் வழங்கு கிறார். உள்ளடக்கமாகிய மாலைகள், சிற்றிலக்கியங்கள் படைக்கத் தொடங்கும்கால், முதற்(காப்புச்) செய்யுளில் பாட்டுடைத் தலைவனாம் பழநிப் பரமனையே வணங்கிப் பாடு கிறார்.

தண்டபாணியடிகள், பழநிப் பிள்ளைத்தமிழ் நூலின் காப்புப் பருவம் பாடும் காலத்து, மரபு வழியில் பிற பிள்ளைத்தமிழ்

ஆசிரியர்களை அடியொற்றி, திருமால், சிவனார், அம்பிகை, கணபதி, திருமகள், கலைமகள் முதலிய கடவுளர் முருகனைக் காக்க வேண்டும் என்று பாடுகிறார். ஆயின், புதுமைகளும் மிளிரப் பாடுகிறார் அடிகள், அதே பருவத்தில், செங்கீரைப் பருவம் பாடும்பொழுதும், முதல் நூல் ஆசிரியர்களின் மரபைப் பின்பற்றி, பற்பலரும் உடன் ஆடவும், பற்பலர் நெஞ்சில் மகிழ்வு ஆடவும்,

''அருள் கூர் பழநிக் குருபரனே ஆடுக செங்கீரை''

என்றும்,

''அறிவினை அறிபவர் வழிபடும் இறையவ ஆடுகசெங்கீரை
அழகிய பழனியில் அமர்சிவ குருபர ஆடுக செங்கீரை''

என்றும் பாடியருளுவார். இதே போன்று, சப்பாணிப் பருவத்திலும்,

''சீலத் தபோதனர்கள் ஆனந்தம் மீறித்
திருக்கண்ணீர் அருவி கொட்ட .......
அறநீதி மன்னர் மனைதோறும் முரசம் கொட்ட
அசலம் தொறும் களிப்பால்
கோலக் குறச்சிறுவர் தொண்டகம் கொட்ட'',

பழநியாண்டவன் சப்பாணி கொட்டியருளப் பாடும் அடிகள் தமக்கு முன் வந்த புலவர்களை அடிஒற்றுவார்.

அலங்காரப் பாடல் மாலையில், புலவர்களை நோக்கிப் ''பழனிப் பெருமானைப் பாடிப் போற்றுங்கள்; சிற்சுக வாரியும் எய்தலாம்'' என்று பாடுங்காலத்தில், சுந்தரர் தேவாரத்தை (தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும் என்ற திருப்பாடலை) நினைவுகூரச் செய்வார்.

''சொற்சுவை தேறிய தூய புலமைத் தொழிலுடையீர்!
... ... ... ... ... ... பழநியைப் போற்றுமினோ
சிற்சுக வாரியும் எய்தும்'' (அலங்காரம் 20)

என்பதே அத் திருப்பாட்டு.

மற்றுமொரு பாடலில், சொல் அமைப்பிலும், பொருள் தொடர் வைப்பிலும் பட்டினத்தடிகளைப் பெரிதும் நினைவிற் கொண்டு வருவர் அடிகள்.

"காம்பினைப் போலும் துணைத்தோட் குறத்தி
கணவன்விடப்
பாம்பில்நின் றாடும்மயிலோன் பழனிப் பருப்பதத்தான்
சோம்பினர் ஒவ்வொருக்கால் எழுத்தாறும் சொல்லித்
தொழினும்
சாம்பிணியோடு பிறப்பாம் பிணியும் தவிர்ந்திடுமே."
(அலங்காரம் 47)

மேலும், பிற இடங்களிலும் "தேவர்க்கினிய பெருமாள்" (அலங்காரம் 40) என்றும் "காலாயுதக் கொடியாடும் பழனிக் கடவுள்" (அலங்காரம் 42) என்றும் முருகனைப் போற்றும் பாடல்களில் அருணகிரியார் திருவாக்கை நம் அடிகள் நினைப் பூட்டுவார்.

**இலக்கணச் செழுமை**

அந்தாதி வகை மாலைகள் சில, பழநித் திருவாயிரத்தில் இடம் பெற்றுள்ளன. வெண்பா அந்தாதி, பதிற்றுப்பத்து அந்தாதி, யமக அந்தாதி, நடுஒலியல் அந்தாதி என்பன அவை. அவற்றில் நடுஒலியல் அந்தாதி, சந்தப்பாடல்களால் அமைந்தது. யமக அணியில் அமைந்த அந்தாதி நூறு பாக்களும் திரிபு மஞ்சரி நூறு பாக்களும் இலக்கணச் செழுமை வாய்ந்த அடிகளின் பெரும் புலமைக்கு உயர்சான்று ஆகும், திருவகுப்பு மாலைகளும் கலவி மகிழ்தல் வண்ணமும் அருள் நலனும் பத்திச்சுவையும் கனிந்தமை போல இலக்கணச் செழுமையும் இணைந்த இலக்கியங்களாகும். அக்கரங்கள் ஐம்பத்தொன்றை நினைப்பூட்டும் ஐம்பத்தொரு பாடல்களால் ஆகிய குருபர மாலை நூல், அடிகளின் கை வண்ணத்தை உலகுக்கு உணர்த்தும் வகையில், பல்வேறு யாப்பு வகைகளைக் கொண்டு மிளிர்கிறது.

**கற்பனை நயங்கள்**

வண்ணம் பாடுவதில் வல்லவராகிய பெருமை காரணமாக "வண்ணச்சரபம்" என்ற சிறப்பு விருதினைப் பெற்ற அடிகள், கற்பனைக் காட்சிகள் பாடும் திறத்திலும் மிக உயர்ந்த ஆற்றல் உடையவர்.

"கண்டார் களிக்கும் கனிஒன்(று) உள(து)அதனை
உண்டவரே வீட்டுள் உறைகுவோர்"
(வெண்பா மாலை 47)

"ஆறு சமயமும் நின் ஆனனங்கள் ஆகும்"
(வெண்பா மாலை 68)

"மனமான பேய்க்குரங்கு மாயை வனத்தில்
தினமோடிப் பாய்த் திகைத்தேன்" (வெண்பா அந்தாதி 39)

என்ற பாடற் பகுதிகள் கூறும் உருவகங்கள், அடிகளின் கற்பனை நயங்காட்டும் சில சான்றுகளாம்.

**பெரியவரைப் போற்றுதல்**

அருள் நூல்கள் இயற்றிய அருளாளர்கள் யாவரும் பணிவுச் செல்வத்தும் மிகமிக உயர்ந்தவர்கள். அவர்கள் அற்புதங்கள் செய்யவல்ல ஆற்றல்கள் கைவரப் பெற்றாலும், முன்னவர்களும் மூத்தவர்களுமாகிய பிற அருளாளர்களை, மெய்யடியார்களை வாயார வாழ்த்தி வணங்கிப் பணியும் பண்பு நலம் கொண்டிலங்குதலை அவர்கள் வாய்மொழியாலேயே உணரலாம். பட்டினத்தடிகள், அருணகிரியார், தாயுமானவர் முதலிய அவ்வனைய அருளாளர்கள் நிரலில் நம் தண்டபாணியடிகளும் நடுவிருக்கும் தகவுடையவர்.

"தொண்டன் பெருவிருப்பால் அவன் வேண்ட
ஒரு தோகை முன்போய்ப்
பண்டு அன்புரை பயின்றான் தரும் பாலன் பழனி"
(அலங்காரம். 85)

என்ற வரிகளில் சுந்தரர் சிவபிரானைத் தூதனுப்பிய பெருமையை அடிகள் சுட்டுவார்.

"முன்னம் நின்அருளால் போகமாமுனியும்
முரண் புலிப்பாணியும் முதலோர்
அன்ன வாகனன் விதியினைக் கடந்தாங்கு"
(குருபரமாலை 19)

என்ற பாடலில் போகமுனிவரையும் புலிப்பாணியையும் விதியினை வென்ற மெய்யறிஞர் என்று அடிகள் புகழ்வர்.

உமை முலைப்பாலுண்ட சம்பந்தரால் சமணர் கழுவேறிய செய்தியைக் கூறி மகிழ்வர் அடிகள். (நவமணி மாலை 75)

"ஆகம ஞானப் பொதுஞான தேசிகன் ஆகி நிற்கும்
ஏகனைத் தென்பழனி" (அலங்காரம் 4)

என்ற திருப்பாட்டில் அகத்தியர், அருணகிரியார், போகர், புலிப்பாணி இவர்கட்கு முருகப்பிரான் கருணையினால் ஞானம் வந்த பெருமையை வாய் மணக்க அடிகள் பரவுவார்.

இன்னும், இவர்களுடன் நாரதர், முசுகுந்தன், பகீரதன், முருகம்மையார், நக்கீரர், பொய்யாமொழிப் புலவர், சிவஞான பாலைய அடிகள், சிதம்பர சுவாமிகள் முதலிய மெய்யடியார்கள் முருகன் திருவருள் செல்வத்தை எய்தி உய்ந்தமையைப் (பிள்ளைத்தமிழ் – 14) பாடி மகிழ்வர் அடிகள். பிள்ளைத்தமிழின் வருகைப் பதிகத்தில் ''அந்தண் பொதியை'' என்ற பாட்டில் (வருகை – 3) பகழிக்கூத்தர் செந்திலம்பதிக்குப் பிள்ளைத்தமிழ் சொல்லிப் பொற்பதக்கம் பெற்றமையை விதந்து மகிழ்ந்து புகழ்வர்.

சிறுதேர்ப் பருவத்தில் முருகன் சிறுதேர் உருட்டும் நன்னலத்தால் ''வாதவூர் முனியனைய புனிதர் விழிகளில் அன்பு மலி கண்ணீர் மணிகள் உருள'' என்று பாடும் பாட்டில் (பிள்ளைத் - 93) மணிவாசக அடிகள் அழுதடியடைந்த அன்புத் திறத்தை அமுதூறப் பாடி நெகிழ்வார் தண்டபாணியடிகள்.

**முருகன்பால் விண்ணப்பம்**

வேண்டத் தக்கது அறிவோனாயும் வேண்ட முழுதும் தருவோனாயும் இலங்கும் திருமுருகன்பால் அடிகள் பற்பல சித்திகளையும் பொருட்களையும் வேண்டி நிற்கிறார். அவ் வேண்டுதலிலும் பற்பல புதுமைகளும் புரட்சிகளும் உள.

சித்திமாலை என்ற சத்தக் கவிமாலையில் எல்லா மொழிகளையும் அறியும் வேட்கை, சொற்பலித வேட்கை, இவற்றை வெளியிடுவார். ரசவாத சித்தி, வான்வழி செல்லும் வன்மை, பிணிதீர்க்கும் ஆற்றல், நினைத்த வடிவு கொளும் வன்மை, யோகசித்தி, பரஞான சித்தி இவற்றை வழங்கும்படி முருகனை வேண்டுகிறார் அடிகள். வசியவித்தை, மோகன சித்தி, தம்பன சித்தி இவற்றையும் பெற விழையும் அடிகள், எலும்பு பெண்ணான வித்தை, கடலிற் கல் மிதக்கும்வித்தை, முதலைவாய் மதலை மீளும் வகை, பட்டமரம் தழைக்கும் வித்தை, எட்டுத் திருவும் இசையும் பேறு, சாரதா பீடம் ஏறும் வல்லமை இவற்றையும் வழங்கியருளும்படி முருகப் பெருமானை வேண்டு

கிறார். வியப்பூட்டும் வகை, தான் அனலிலும் புனலிலும் விடுத்தழித்த தன் தமிழ்ப்பாடல் ஏடுகளை மீட்டும் பெற உதவும்படி வேண்டுவார் அடிகள்.

அடிகள் பெற விரும்பும் வேட்கைப் பட்டியலில் கலைஞான முழுமை, நால்வகைப் பேறுகள், பகைவர் அஞ்சும் ஆண்மை முதலியனவும் முத்தாய்ப்பாக மயில் மீது செவ்வேட்பரமன் திருவுருக் காட்சியும் இடம்பெறும்.

இவ் வடிகள் வேண்டிக் கொண்ட திருவருள் வண்ணங்களில் புதுமையாகிய ஒன்று, உயிர்க்கொலை தவிர்க்கும் அருள் ஆண்மை ஆகும்.

**பாடற்கரிய பகுதிகள்**

புலவர்க்கு வெண்பாவும் பிள்ளைத்தமிழுக்கு அம்புலியும் புலி என்பது தமிழறிஞரின் பழுத்த துணிபு. ஆயின், திருவருள் நலத்தால் எண்ணற்ற கவிகளை எண்ணியவுடன் எழுதாமலும் (extempore) வழங்கவல்ல அடிகள், வெண்பாவை விளையாட்டாக எளிமையும் இனிமையும் கமழப் படைத்தனர்; அது போலவே, அம்புலிப் பருவப் பாடல்களில் நான்கு (சாம, தான, பேத, தண்டம்) உத்திகளையும் அற்புதமாகப் பயன் கொண்டு வெற்றி பெற்றுள்ளார். (வெண்பா மாலை, 26, வெண்பா அந்தாதி. 18, 65).

பிள்ளைத் தமிழின் அம்புலிப் பருவத்தில், தானம் கூறி யழைக்கும் அடிகள், முருகப் பிரான் கருணையினாற் கிடைக்கும் நன்னலப் பேறுகள் இன்னின்னவாம் என்று அடுக்கிப் பட்டியலிடு கிறார் (பிள்ளை. 77).

**அடிகளின் பத்திமைத் திறம்**

அடிகளின் பத்தித் திறமும், முருகனடியார் மாட்டு அவர் கொண்ட காதல் நெகிழ்வும் கடலனைய ஆழமும் விரிவும் உடையன. அவற்றை விளக்கி முடிக்க இவ்வேடு இடம் தராது. "ஆறெழுத்து ஓதும் அன்பர் தீதறுக்கும் தொழில் செய்யும் பழனி நாயகன்" (பிள்ளை. 95) என்றும், "வண்தமிழ்ச் சந்தக் கவிப்புலவர் சங்கத்தில் மாறாத உவகை வளர" (பிள்ளை. 92) வும், "தெருமந்து நல்லோர் வருமந்த முயல் பாதகர் சிரம்

படுகளத்தில் உருள'' (பிள்ளை.93) வும் முருகப்பிரான் பழனியிற் சிறுதேர் உருட்டுகிறான் என்றும் அடிகள் பாடி மகிழ்வார். அவ்வடிகள், நம் அடிகள் நெஞ்சுக்குள் ஊற்றெழும் தமிழ்க் காதலை, தமிழ் முருகன் பாற் பத்திமையை, முருகனடியார் மேற்கொண்ட பத்திமையையும் பாசத்தையும் விளக்குவன ஆகும்.

''பழனாபுரிக் கோயில் எந்தை, தீதாளர் தொண்டு புரிந்தாலும் வேண்டிய சீர் நல்குமே'' –(அலங்காரம் 10) என்ற பாடல் வரிகளும்,

''தானா நிறைந்த தனிஞானத் தெய்வம்...
... வானாடர் போற்றிய பழனிமலைத் தெய்வமே''
(அலங்காரம் 14)

என்ற திருப்பாடலும்,

''பண்டு விண்ணோர் குலம்வாழப் புரந்து, பழனியில்ஓர்
தண்டுடன் நின்று விளையாடும் மாண்புடைச் சற்குரவற்
கண்டு தொழுது துதிபாடி நெஞ்சில் கருதும் உண்மைத்
தொண்டு செய்வார்க்கு அவன் வேலுமயிலும் துணை
செய்யுமே''
(அலங்காரம் 20)

என்ற திருப்பாட்டும் அடிகளின் அன்பு, பத்திமை, வைராக்கியம் இவற்றைத் தெள்ளிதின் காட்டும் சான்றுகளிற் சிலவாம்.

பாகைப் புரையும் தமிழால் துதித்து, பலர்மனைக்கும்
ஏகைக்கு நாணி, எழுத்தாறும் ஓதி, இலகுபசுந்
தோகைப் பரிக்குகன் வாழும் பழனித் தொழும்பரைச்சேர்
ஓகைக் கடற்படியார் தமக்கு ஊழ்வினை ஒன்றும்இன்றே.
(அலரங்காரம் 26)

என்ற திருப்பாடலால் பழனியாண்டவர்தம் அடியார்க்கு அடியார்களை ஊழ்வினை வெருட்டாது என்று கூறி வாழ்த்துவார் அடிகள்.

**பேதமின்மை**

ஆறு சமயக் கடவுளர்க்கும் வேறு வேறு நூல்களும் நிறையப் பாடல்களும் செய்தருளியவர் நம் அடிகள். எல்லா பேதமும் கடந்த தனிப் பரம் பொருளாகிய முருகனே ஆறு சமயக்

கூறுகளிலும் உள்ளுறை கடவுள் ஆவான் என்ற தெளிவினை உணர்த்துவார் தண்டபாணியடிகள்.

"குருவும் கணபதியும் கொற்றமழு வானும்
திருமடந்தை காவலனும் சேணில்—வருசுடரும்
தேவினத்தின் தாயான சிற்சத்தி யும்முருகோன்
மூவிரண்டாய்க் காட்டும் முகம்"

என்பதனால் சமய பேதமின்மையை அடிகள் தெளிவுறுத்துவார். இக் கருத்தை அரண் செய்ய எண்ணற்ற சான்றுகள் கூறலாம். அதே போன்று, வடசொல், தென்சொல் என்ற பிரிவுக் காழ்ப்பும் இல்லாமல், அடிகள் "மணிப் பிரவாள நடை" போல மிக அதிகம் வடசொற் பெய்த தமிழ்மாலைகளைத் தந்துள்ளார். ஆனனம், கேதனம், அதுலம், அயம் (ஆடு), அட்சம் (கண்), பட்சம் (இரு வாரம்), அனியம் அனனியம் (உள், புறம்) முதலிய வடசொற் கலப்பை அடிகள் விலக்கக் கருதிடாமல், செறிவாய்ப் பெய்து பாடல் புனைந்துள்ளமை நோக்கற் பாற்று.

### அகச் சான்றுகள்

தம் வாழ்வில் முருகப் பிரான் பங்கு பற்றிய வண்ணம், பாடல் புனைந்து அணிவிக்கும்படி ஆணையிட்டமை, எழுத்தாணி தந்தமை, காட்சி கிடையாக் காலத்து விடலைச் சிறு தேங்காய் எனத் தன்னைத் தான் உருட்டி மாய முற்பட்டது, முருகன் பழுது நேராமற் காத்தமை, ஊடல் காரணமாய்த் தான் படைத்த பாடல்களில் சரி பாதியை அனல்வாயிலும் புனல் வாயிலும் இட்டு அழித்தமை — முதலிய வாழ்வியற் செய்திகளே அடிகள் பற்பல இடங்களில் அகச்சான்றுகளாய்ப் பன்னிப் பன்னிப் பாடியுள்ளார்.

### புதுமைகள்

பிள்ளைத் தமிழ் பாடும் அடிகள் காப்புப் பருவத்தில் நவ கோள்களும் மெய்யடியார்களும் முருகக் குழவியைக் காத்தருள்க எனப் பாடுந்திறம் ஒரு இலக்கியப் புதுமையாம்.

தெய்வங்களில், கள், ஊன் படையல் கொள்ளும் புலைப் பூசையை ஏற்பவை கெட்ட தெய்வங்கள் என்று சுட்டி ஒதுக்கு வதும், அவை நீங்கிய நல்ல தெய்வங்கள் முருகப் பிரானைக் காக்க என்று பாடுவதும் ஒரு புதுமையே.

முருகப் பிரான்பால் விண்ணப்பப் (வேண்டுதல்) பட்டியல் தொடுக்கும் காலத்து, அனைத்துச் சித்திகளும் பன்மொழியறிவும் வேண்டுவதும் புதுமையே. இதுபோலவே, சம்பந்தர் முதலிய நால்வரைப் போல் இயற்கையை வெல்லும் ஆற்றலையும் சாரதா பீடம் ஏறும் தகுதியையும் வழங்கும்படி வேண்டுவதும் புதுமையானவை. சொற்பலிதம் வேண்டும் என விரும்பும் அடிகள், கொலைக் கொடுமையை மாற்றிவிடும் அருளாண்மையை வேண்டி விண்ணப்பித்தலும் ஒரு புதுமையே.

''பழனித் திருவாயிரம்'' என்ற ஆயிரம் பாடல் கொண்ட தமிழ்த் திருநூல் முருகப் பெருமான் பெருமைக்கு ஒரு முரசம்; ஆசிரியர் தண்டபாணியடிகளின் பல்துறை வித்தகப் புலமை (Versatile genius)க்கு ஒரு கட்டியம். இந்நூலிற் பற்பல செழுமைகளும் புதுமைகளும் மேலோட்டமாகவும் அடியாழத்தும் இலங்கக் காணலாம். செம்பாகமான அரிய திருப்பாடல்களும், எளிய இன்பாகு போல் பாடல்களும் செறிந்த ஒரு நவமணிப் பேழை என்றும் தமிழ்ப் பொன்மணிச் சுரங்கம் என்றும் பழனித் திருவாயிரத்தைப் போற்றிப் புகழ்ந்தால் அது மிகையன்று. இந்நூலின் பாடல்களை ஓதி உணர்வார்க்குத் தமிழ்ப்பெரும் புலமையும் முருகன் திருவருளும் எளிதில் கைகூடும். அது மட்டுமில்லை; முருகனே எல்லா நலமும் தந்து மலமறுக்கும் பரங்கருணை முழுப்பொருள் என்ற தெளிவு கைகூடும். பழநித் திருவாயிரம் பொலிக! பாடிய அடிகளின் புகழ் மேன்மேல் நின்றிலங்கி ஒளிர்க!

# சுவாமிகளும் சூரியக்கடவுளும்

மா. இராமச்சந்திரன்

நெல்லைச் சீமை தந்த நிறையறிவுப் பேராசான் தண்டபாணி சுவாமிகள் ஆவார். கருவிலே திருவுடையவராக விளங்கிய இவர் சமயபேதம் இல்லாப் பெருநெறிக் கொள்கையுடன் வாழ்ந்து வந்தார். இவ்வுலகின் முதலும் முடிவுமாக விளங்கும் பரம்பொருள் ஒன்றே என்பதை உணர்ந்தவர். இதனால் வாரத்தின் ஏழுநாட்களையும் இறைவனைப் பாடும் பெருநாட்களாகக் கொண்டு விளங்கியவர். இந்த வகையில் ஞாயிற்றுக்கிழமையில் சூரியமூர்த்திக்கும், திங்கட்கிழமையில் சிவபெருமானுக்கும், செவ்வாய்க்கிழமையில் சக்திக்கும், புதன்கிழமையில் திருமாலுக்கும், வியாழக்கிழமையில் கணபதிக்கும், வெள்ளிக் கிழமையில் முருகனுக்கும், சனிக்கிழமையில் சமயங்கடந்த பொதுக்கடவுளுக்கும் என்று ஒரு பதிகம் பாடினார். ஞாயிற்றுக் கிழமை அவர் சூரியக்கடவுளைப் பற்றிப் பாடியதுவே "சூரிய மூர்த்தியின் துதிக்கவி ஆயிரம்" என்பதாகும். இதில் அமைந்துள்ள ஆயிரம் பாடல்களில் சூரிய பகவானின் பல்வகை ஆற்றலை வெளிப்படுத்துகின்றார். சூரிய பகவானின் பெருமைகளாகச் சுவாமிகள் கூறுவதைத் தொகுத்துத் தருவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சூரியனும் சுவாமிகளும்

நாள்தோறும் சூரியக் கடவுளைத் தரிசித்துப் பெருமை பெற்றவராகத் தண்டபாணி சுவாமிகள் விளங்கியுள்ளார். இதனை, "தினமும் உச்சிவேளையில் சூரியன் முன்னின்று சிலநேரம் தியானித்துப் பின் அடியவர் பாத தூளியென்று திருத்தரங்களின் வீதி மண்ணின் புழுதியைச் சிறிதளவு சிரசில் தரிப்பர்" (ஞாயிறு ஆயிரம், ப.15) என்று தி. செ. முருகதாச சுவாமிகள் குறிப்பிடுவது உணர்த்தும். சூரிய பகவானைத் தனிப் பெருஞ் சுடர்த் தெய்வமாகவே சுவாமிகள் போற்றிப் பணிந்து பாடியுள்ளார்.

### சூரியனின் திருநாமங்கள்

சூரியன் என்னும் சொல்லருஞ் சக்தி மீது உயர்ந்த பக்தி கொண்டு சுவாமிகள் விளங்கினார். செங்கதிரோனின் பெருமைகளை எல்லாம் அறிவியல் நோக்கில் எடுத்துரைக்கும் விருப்புடையவராகத் திகழ்ந்தார். அறிவியல் தன்மையில் மட்டுமன்றிப் புராணக் கதைகளையும் எடுத்துரைத்தார். அவ்வாறு சூரியனின் பெருமைகளைக் கூறுவதோடு கதிரோனுக்குப் பல பெயர்களையும் சூட்டியுள்ளார். "நிகண்டு களில் காணாத புதுப்புதுப்பெயர்கள் ஒரு நூற்றினை உருவமாக்கி ஞாயிற்றுக்கு இடுகிறார்" (ஞாயிறு ஆயிரம், ப.11) என்று த. கோவேந்தன் குறிப்பிடுவார். சூரியனைப்பற்றிச் சுவாமிகள் பாடிய பாடல்கள் 'ஞாயிறு ஆயிரம்' என்ற பெயரில் புத்தகமாகத் தொகுக்கப்பட்டுள்ளது. இந்நூலில் அமைந்துள்ள நூறு பதிகத்தில் சூரியனுக்குரியதாகத் தொண்ணூற்று மூன்று பெயர்கள் காணப்படுகின்றன. திவாகரமூர்த்தி, பானுமூர்த்தி, செஞ்சோதி, ஆதித்தன், புனிதச்சோதி, பரிதியம்பகவன், பானுபுங்கவன் என்ற பெயர்களை ஒருமுறைக்குமேல் பயன் படுத்துகின்றார். ஒளிப்பிழம்பாக, சோதி வடிவாகத் தோன்றும் சூரிய பகவானுக்கு 'கதிர்' என்ற நாமத்தைச் சூட்டுவதோடு அதனைக் கனல் கதிர், செங்கதிர், கொழுங்கதிர் என்று பல அடைகள் கொடுத்துச் சிறப்பிப்பதையும் காணமுடிகின்றது. 'சுடர்' என்ற நாமஞ் சொலிக்கும் வண்ணம் ஒண்சுடர், முழுச்சுடர், பொதுச்சுடர் என்று சிறப்பிக்கவும் செய்கின்றார்.

### கண்காணும் தெய்வம்

ஒரு நாமம் ஒருருவம் இல்லாதவன் இறைவன் என்று இந்து சமயம் உணர்த்தும். அவ்விறைவன் கண்ணால் காணும் தன்மையனாக உருவத்தோடு அமைகிறான் என்றும் அது நம்பும். கண்ணால் காணும் வகையில் சூரியக் கடவுள் விளங்குகின்றார் என்பதைச் சுவாமிகள் பலவகைகளில் விளக்குகின்றார். மனிதர்களில் பண்புடையோர், பண்பிலாதவர் என்று உள்ள இருபிரிவினர்க்கு மட்டுமல்லாது பிற உயிரினங்கள் எல்லா வற்றிற்கும் கண்காணும் தெய்வமாகச் சூரிய பகவானே விளங்குகின்றார் என்பது சுவாமிகளின் கருத்து. இதனை,

"மண்ணில் மானிடம் விலங்கு, புள் ஆதிய வகையும்
கண்ணினால்தினம் காணுறக் குலவுசெங் கதிரே" (3)

என்னும் அவருடைய பாடல் வரிகள் உணர்த்தும்.

**மூவர் ஆனதும் சூரியனே**

முனிவர்களும் உள்ளத்துள் நாள்தோறும் துதிக்கும் கடவுளாகச் சூரியனே விளங்குகின்றார். மும்மூர்த்திகளாகப் போற்றப்பெறும் பிரமன், விஷ்ணு, சிவன் ஆகியோராகச் சூரிய பகவான்தான் காட்சியளிக்கின்றார் என்பது சுவாமிகளின் கருத்து.

"அமல யோகியர் உளத்தினும் இலங்குவாய் அலர்பூங்
கமலன் ஆதியர் மூவரும் ஆயசெங் கதிரே" (2)

என்று போற்றுவது இதனால் புலப்படும். பிற தெய்வங்களான கணபதி, முருகன், சிவன், திருமால், சக்தி முதலியோர் இச்சூரிய பகவானிடம் அடைக்கலம் அடைகின்றனர் என்பதை,

"குஞ்ச ரானனன், சேய், சிவன், நெடுமால்,
கோல வேல்விழிக் குமரியா தியர்க்கோர்
தஞ்ச மாமெனச் சதுர்மறை முதல்நூல்
சாற்று மாறொளிர் தபனநா யகனே" (13)

என்று விளக்குகின்றார்.

**குந்தியின் கொழுநன்**

கொடை என்று சொன்னாலே கர்ணன் என்று போற்றும் அளவுக்குக் கொடைத்திறத்தால் உயர்ந்தவன் கர்ணன். கர்ணனை ஈன்றெடுக்கும் பெருமையைக் குந்திக்கருளியவன் சூரிய பெருமான். குந்திக்குக் குழந்தை கொடுத்த குவல நாயகனாம் சூரியனின் பெருமைகளை ஒவ்வொரு பதிகத்திலும் சுவாமிகள் புகழ்கின்றார். ஒவ்வொரு பதிகத்தின் பத்தாவது பாட்டிலும் இச்செய்தியைக் குறித்துச் செல்வதைக் காண முடிகின்றது.

"குந்தலநாட் டொருபேதை கூவும்நாள் கொடைப்பெருஞ்சீர்
மைந்தனும் பெற் றிடத்தந்த மார்த்தாண்ட
வானவனே" (54)

என்று குறிப்பிடுவது இதனை உணர்த்தும். இச்செயலைப் புகழும் வண்ணம் தனிப்பதிகம் (56) அமைந்துள்ளமையும் கருதத் தக்கது.

**அனுமன் ஆசிரியன்**

அனுமனுக்கு ஆசிரியனாக இருந்து அவனுக்கு இலக்கணம் கற்பித்த பெருமை சூரிய பகவானுக்கு உண்டு. இதனை உணர்த்தும் வகையில்,

> "கால்மகற்கு இலக்கணம் கழறிய கதிரே" (385)

என்று குறிப்பிடுகின்றார். ஒவ்வொரு பதிகத்தின் பதினோராவது பாடலிலும் இதனைக் குறிக்கின்றார். மேலும் இதனைச் சிறப்பிக்கும் வகையில் தனிப்பதிகம் (60) ஒன்றும் அமைப்பதைக் காணமுடிகின்றது.

**சந்திரனை உண்டு உமிழ்தல்**

இவ்வுலகுக்கு ஒளிகொடுத்துக் கொண்டிருப்பவன் கதிரவன். சந்திரனை உண்டு உமிழ்வது அவனுடைய செயல் என்று சுவாமிகள் கருதினார். இதனை,

> "வருமமில் அன்பினால் மதியை நாடொறும்
> பருகியும் உமிழ்தரு பரிதி வட்டமே" (162)

என்று பொருள்பட ஒவ்வொரு பதிகத்தின் எட்டாவது பாட்டிலும் விளக்குகின்றார். இவ்வுலகம் செழுமை பெறுவதற்காக கதிரவன் மேற்கொண்ட செயல் இது என்பதையும் விளக்குகின்றார். (140).

**மழைதருவோன்**

நீரின்றியமையாது இவ்வுலகு என்பர். நீருக்கு அடிப்படை மழை. இம்மழையைத் தருபவன் கதிரோன் என்பதை,

> "மாரிமிகப் பெய்து மகிதலத்தை வாழ்விப்பான்
> பாரினம்சூல் கொள்ளும் கதிரா யிரத் தானே" (356)

என்று குறிப்பிடுகின்றார்.

**வலக்கண்**

இவ்வுலகக் காட்சிகளைக் காண உயிர்களுக்கு உறுதுணையாக இருப்பது கண்ணாகும். இவ்வுயிர்களின் வலக்கண்ணாகக் கதிரவனே விளங்குகின்றான் என்பதைச் சுவாமிகள்,

"ஆலமர் கடவுள்முன் சிதல்எறும்பு ஈறாம்
அனைவர்க்கும் வலக்கண்என் றமைந்தபண்
ணவனே" (330)

என்று விளக்குகின்றார்.

**வேண்டுதல்**

சுவாமிகள் சூரிய பகவானிடம் பல வேண்டுதல்களை வைக்கின்றார். அவற்றுள் மிக முக்கியமானதாக உயிர்க்கொலை வெறுப்பு, சத்தியவாழ்வு விரும்புதல், பெண்ணாசை தவிர்ப்பு, சமரச ஞானம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். உயிர்க்கொலை புரிந்து புலால் உண்பவர்களைப் பாதகன் என்று சாடுவதை,

"இளங்கன் றோடுபல் பசுக்கொலும் பாதகர் எய்தும்
வளங்கள் குன்றிடக் காண்பதே விழைவது வம்போ" (8)

என்பதால் உணர முடிகின்றது.

"சத்தியம் எனும் பொருள் சார்வதின் றாகில்
இந்திரன் வாழ்க்கையும் இழிவெனத் தெளிந்தேற்கு" (384)

என்னும் வரிகள் அவருடைய சத்திய வேட்கையைக் காட்டுகின்றன.

"மாணிழை மாதர்ம யற்கடல் மூழ்க
நாணில்என் மேலருள் நாட்டம்வை யீரோ" (210)

என்று பெண்ணாசை ஒழிப்பை வேண்டுகின்றார்.

"தந்திர யோகர்க் கெய்தரிதாம்
சமரச ஞானம் தரல்பொய்யோ" (651)

என்று தம்முடைய சமரச ஞான விருப்பைச் சுவாமிகள் புலப் படுத்துகின்றார்.

ஒளிகொடுத்து இவ்வுலகைப் பாதுகாக்கின்ற சூரிய பகவானுக்குத் தண்டபாணி சுவாமிகள் பல பெயர்கள் சூட்டியுள்ளமையும், கதிரவன் பலருக்கு அருள்புரிந்த தன்மையும் பெருமையும் சூரியபகவானிடம் சுவாமிகள் வேண்டுவனவும் மேற்கூறியவற்றால் புலப்படுகின்றன.

# கணபதி ஆயிரம்

சீ. இலட்சுமணன்

பௌத்த சமயத்திலிருந்து இவ்வழிபாடு வந்ததாக திரு நா. வானமாமலையும், திருமயிலை சீனி. வேங்கடசாமியும் கொள்வர்.

ஆய்வறிஞர் டாக்டர். ஏ. வி. ஜெயச்சந்திரன் அவர்கள் கி.பி 5 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமிக் கல்வெட்டைச் சுட்டிக் காட்டியும், கி.பி. 4, 5 ஆம் நூற்றாண்டுகளில் வெங்கியை யாண்ட சாலங்காயனர் ஆட்சியில் இருகை விநாயகர் திருவுருவங்கள் மிக்கிருந்ததைக் குறிப்பிட்டும் கணேசர் வழிபாட்டின் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டென்பார்.

**கணபதியாயிரம்**

தண்டபாணி சுவாமிகள் ஞாயிறு முதல் சனிவரை ஏழு நாட்களுக்கும் முறையே சூரியன், சிவன், அம்பிகை, திருமால், கணபதி, முருகன், பொதுக்கடவுள் என ஒவ்வொருவருக்கும் ஆயிரம் பாடல்கள் பாடினார். இந்நூல் பதிகம் ஒன்றுக்குப் பத்துப் பாடல்கள் வீதம் நூறு பதிகங்களில் ஆயிரம் பாடல்கள் கொண்டது.

**கணபதி**

மாலை நிறச்சிவனாரும் மைப்புயல் நேர்உமையும்
வாரணம் போல் உருவெய்தி மரு வியஅக்கணமே
காலைச்சூரியன் போன் கவின்றநன் போதகம். (பா. 291)

இப்போதகப் பெருமான், "மூலமுதற் பொருளேயாகி" (பா. 22) பூரணமாய் பிரணவத்தில் பொலிந்த கணபதியாகி (பா. 5) மாவுருப்பும், தேவுருப்பும், வன்பூதத்துருப்புமாய் (பா. 111) வானவர் மானிடர், மிருகம், வன்குறளான நாற்கோலமும் கொண்டு (பா. 823) கோயில்தொறும் முதற்பூசை கொண்டருளி

(பதிகம். 16) செக்கடியாகிய புன்தலத்தில் பலர் செய் பூசையை ஏற்று (பா. 26, 38) மறுகுதொறும் சந்திதொறும், நன்மையிலும், (பா. 38) சாமனையிலும் (பா. 406) சாணி வுருண்டையிலும் தங்கிடுவார். மக்களும் எளிய கொன்றையும் தும்பையும் அறுகும் (பா 193) அணிவித்து மோதகம், பாயாசம், எள்ளுருண்டை, பிட்டு, வாழைக்கனி, மாங்கனி, வருக்கைக் கனி ஆகியவற்றைப் படைத்து வழிபடுவர் (பா. 65, 234, 334, 711) தாங்கள் நினைத்த காரியம் கைகூட சிதர் தேங்காய் உடைப்பதும் பண்டுதொட்டு வரும் வழக்கமாகும் (பா. 36, 57, 161) மூன்றுகண் நால்வாய் ஐங்கரனுக்கு சித்தி, புத்தி, வல்லபை என மூன்று மனைவியரு முண்டு (பா. 324, 674) தொழில் துவக்குவார் முதலில் இவரையே தொழுதிரஞ்சுவர் (பா. 109).

### அகச் சான்றுகள்

சுவாமிகளின் இளம் வயதிலேயே களிற்றுமுகக் கணபதி காட்சியருளினார் என்பதை 'கைவேளும் எனப் பலகால் கனவில் வருவோனே, கனவில் வந்த சத்தியம் பொய்க்காமல், என் கனவில் வந்தன்று ஓதியதோர் பயன் வலித்தருளே'(பா. 13, 82) எனக் குறிக்கிறார். அம்மட்டோ துதிக்கை புனல் நீராட்டி தூநீறும் சாத்தியருளினார் (பா. 6, 11, 14) ஆகவே கந்தனைக கந்தப்பா வென்றழைத்ததுடன், கரிமுகனை 'செவ்வேற்கை தந்தையின் முன்னுதித்த பெரியப்பா' எனவுமழைத்தார் (பா. 13, 257) முந்தும் ஒருநாள் அருணைச் சிவகிரி எதிர் தோன்றினார் விநாயகர் (பா. 293, 420).

### கணபதியின் திருவிளையாடல்கள்

'நிருத்தேசன் தானு முதல் வழிபடவிட்டதனால் நெட்டுயிர்த்து திருத்தேர் அச்சு இறப்புரிந்தார் (பா. 15, 29) கச்சியின் மால் ஆடல் கண்டு உடன் சக்கரமீந்தார் (பா. 93, 501) பானலங்குட் குறப்பேதை படுத்திய பாட்டயர் வேலன் ஏனலில் இன்புறக் காண்பான் இபக்களிறாச் சென்றார் (பா. 329, 379, 419) கும்பமுனிவன் வேண்ட பொருநை நதியும் காவிரியும் அளித்தார். இந்திரனுக்கும் ஆறு அளித்தார் என்பதை "நல்காவிரியொடு தாம்பிரவருணியும் தரு (பா. 188, 818) ......புணரி உண்டுமிழும் பொதிகை நாதனும், புரந்தரனும் ஏதமில் இசையோடின் புறமேனாள் இருநதியளித்ததோர் இலமே (பா. 178) எனும்

அடிகளால் அறியலாம். வியாசருக்காக கொம் பொடித்தொரு கதை பொற்குவட்டின் மிசை வரை தரும் தெய்வமும் இவரே. (பா. 113) ஔவை துதிக்கும் ஓர் அகவல் விரும்பி, (பா. 30, 180) அகமிழவிவாய் தமிழ்பா கேட்டு மயிலாம் உருவம் போய் நரை மலி கொக்குருவான நாள் கயிலை தனில்விட்ட கணநாதரீ இவரன்றோ (பா. 190) சிற்பர் செய் விக்கிரகத்தில் இருந்தொரு சிறுவன் உவப்புறவே முற்படு உண்டி அருந்தியே (பா. 965) நம்பியாண்டார் நம்பிக்குதவினார். குரு சாபத்தால் தளர்ந்த மதியம் உய்யச் சடைக்கணிந்து சந்திரனைக் (பா. 32) காத்தருளிய சந்திரசேகரனும் அவரேயாவார்.

### தண்டபாணியும் தண்டபாணி சுவாமிகளும்

சுவாமிகள் தமக்குரிய வயலில் மடாலயமும், ஆலயமும், நந்தவனமும் அமைக்க விரும்பினார். அதற்காக முருகன் குறித்த இடத்தில் ஒரு கிணறும் தோண்டினார். அதனால் துன்பமும், பொருளிழப்பும் ஏற்பட்டன. கிணற்றில் தண்ணீர் ஊறவில்லை. நகத்தலையில் குகன் செயலால் நான் தொடும் கற்கிணறொன் றால் இகத்தினர் வசை கூறினர் (பா. 8). நாடு மென்னைப் பலர் கூடி நக, ஒரு கற்கிணற்றால் வெம்பு துயர் விளைத்தனையே இனி சகிக்கிமோ விதிப்படி நின்பூசை செயல்விடுத்து முயன்றேனோ (பா. 18) என மனம் வருந்தினார். குறுமுனிக்கு ஆறு இரண்டு கொடுத்ததுண்மையானால் என் கற்கூபத்தூடொர் சிறு நதியாலும் உதிக்கச் செயல் வேண்டும் இன்றேல் நான் திருத்தி எய்தேன் (பா. 38) நீசர் கிணற்றிலும் நீர் வருமுலகில் கன்றி நின்றேங்குமென் கற்கிணற்றொரு நீர்கால் வருமளவும் நின் கருணை மெய்ப்படுமொ (பா 76) எனக் கணபதியை நினைந்து பாடினார். கைப்பொருளெல்லாம் செலவாயிற்று. பண உதவி வேண்டி தக்காரை நாடி தான் பாடும் தமிழையும் தான் வணங்கும் கணபதியையும் முருகனையும் துணைக் கொண்டு புறப்பட்டார். சாரமுணராரிடத்தும் தமிழ் கொடு போய் இரந்தார் (பா. 20) மிடி கொண்டு பல் படிறர்கள் மாலினும் ஏகியே பைம்பொன் இரந்தும் பதைத்தார் (பா. 21) சேரநாட்டு மன்னரையும் கொச்சி அரசரையும் அணுகியும் பயனில்லை. பொருள் வேண்டிப் புதுவைக்குச் சென்ற இடத்தில் சில புலவர்கள் இவரோடு வாதிட்டு தோற்றனர். மாதவராதியர்க்கு உணவிட்டு உபசரிக்கைக் குறித்து ஓர் மடங்கட்டத் துவங்கியதால் மனமிக

நொந்துள்ளேன் (பா. 293) அங்கையாற்றிரு நீறு நீ எனக்கினிது அணிந்தும் சங்கையின்றி நான் ஊர்தொறும் இரப்பது தகுமோ (பா. 331) என வினாவினார். இனி பிறர்பால் இரவேன் என உறுதி கொண்டார் பதிகம் 35-ல் 10 பாடல்களிலும் ஈற்றடியில் இனி பிறர்பால் இரவேன் எனக் கூறுகின்றார். சான்றாக,

வண் கணர் பாலும் பலகாற்போய்
வாழ்த்துரை கூறியும் மாழ்க விடும்
என் கலிநோய் வேர் கெல்வாயேல்
இனிமேற் பிறர்பால் இரவேனே (பா. 342)
இத்தனை நாள் இரந்தாற் போல்
இனி மேற் பிறர்பால் இரவேனே (பா. 343)

**நூல் நயம்**

தேனை நேர் தமிழால் தினந்தினம் சிறியேன் செப்பும் கனியும் தீயனதாமோ (பா. 211) அமிழ்தை நேர் சுவைத் தமிழ் (பா. 378) எனத் தமிழ் மொழியின் பெருமையை, சுவையைப் பாராட்டுகிறார்.

நாவேறுமகள் என்ன அவள் மாமி விளையாத
நவை யெய்தும் நான்
பாவெண்படி பாடல் அணிகின்ற
நீயாது பரிசிவை யோ (பா. 398)

என விநாயகரை வின்வுகின்றார். தீ சுட்டால் தான் சுடும் ஆனால் தம்மினத்தவராய துயரோ'' முன்னினும் சுடுங் கொடுங் குணம் பொலிதரு மூர்க்கர் தம் பகையால் ஈண்டு என் இனத்தினர் உறுந்துயர் முழுமையும் ஈர்தாற இரங்காயோ என வினவுகிறார் (பா. 412) முப்பால் முனியாகிய அகத்தியர்க்கு இரு நதிகள் ஈந்ததைச் சிலேடையாகக் கூறுகிறார்.

முப்பாற்றமிழ் முனியால் மூவாமகவானால்
செப்பாடக நதிசெய் தெய்வக் கணபதியே (பா. 928)

செப்பு – ஆடக நதி செம்பொன்னாறு ஆகிய தாமிரவருணி
ஆடககநதி – பொன்னி – காவிரி (பா. 1000)

தமிழ் பாண்டிய மன்னர்களால் சங்கம் வைத்து வளர்க்கப் பட்டது. ஆனால் நால்வரின் தமிழை வெளியுலகிற் களித்துப் புகழ் பெற்றவர்கள் சோழர்கள்.

பாண்டியனால் வளர்ந்தமிழ்க்கு உரையாணி
யெனச்சதுரர் பகர்தீம் பாடல்
தூண்டியுல குயச் சோழன் புகழ்பெறச் செய்
தவிர்பெரிய துதிக்கை யானே (பா. 554)

எனப் பாடுகிறார். மேலும் சமயக் குரவர் நால்வரில் அப்பரும் சம்பந்தப் பெருமானும் நிகழ்த்திய அற்புதங்களையும் நினைவுடன் சுட்டுகிறார். ஆழிமிசைக் கல் மிதப்பில் மிதந்தவர் நாடு போற்றும் நாவுக்கரசர். சம்பந்தன் எழுதிய தமிழ்ப் பாடல்கள் வெந்தழலில் வேகாது, வேகவையைத் தண்ணீரை எதிர்த்துச் சென்றன. இதனையும் நீரினிற் கல் மிதக்கக் கனல் ஏடு.

நிலைத்திடச் செத்தவர் நேர் வரச் செய்து (பா. 687)

எனக் குறிக்கிறார். "ஏகம்பரம் என்பார்க்கும், பல பல்கோடி" என்பார்க்கும் பொதுவாகி இமையா முக்கண்" (பா. 526) எனும் அடிகள் "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க" எனும் திருவாசக அடியை நினைவூட்டுகிறது.

சைவ சித்தாந்தம் உலகில் தலைசிறந்த சித்தாந்தமாகக் கருதப் பெறுகிறது. சுவாமிகள் நெல்லைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவராதலால், சைவ சித்தாந்தத்தில் இயற்கையாகவே ஈடுபாடு மிகவும் கொண்டவர்கள் கணபதியாயிரத்தில் தம் கருத்தைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

அவன் அவள் அது எனும் மூன்றும் நின் ஆட்
டென்று அறிந்து கொண்டேன் (பா. 805)
அவன் அவள் அது என்றுள்ள அனைத்தும் நீ (பா. 812)
இருண் மலங்கள் மூன்றும் வேரொடு இடறச்
செய்கின்றவாம் கருணை (பா. 912)
பதி பசு பாசம் எனத்திகழ் பாரசமட்டியும் (பா. 968)

### வினாவி வேண்டல்

ஒரு பொருளை எனக்குத் தந்தருள்க என வேண்டுவதை விட, எனக்கு அதனை அருளக் கூடாதா என வினாவி வேண்டல் ஒருமுறை. இது நயமானது. சுவாமிகளும் தனக்கின்னருள் புரியுமாறு கீழ்க்கண்டவாறு வினாவுகிறார் சான்றாக,

செக்கடி பிண்ணாக்கினும் என் சொல் தீதோ (பா. 105)
சகளமும் நிட்களந்தானும் சத்திய மென்றுண
ராமல் இகல்மதவாதிகளே போன்று யானும்
வருந்திடல் முறையோ (பா. 124)

**கணபதியைக் கைதொழுவோர்**

''சித்தர் குழாமும் தேவர்களும் திசைசூழ்
புவியும் சிரியரும் பக்தர்களாக'' (பா. 343)

தினம் ஐயனை ஏந்துகின்றனர்.

பாருலகில் மானிடரும் கடலுள் வாழும்
பலதருவார் அரக்கர்களும் பழுதில் பைம்பொற்
சீருலகிற் றேவர்களும் பிறரும் போற்றுவர் (பா. 442)

**புதிய காரணம்**

பசுக்களை நாம் தெய்வமாக வழிபடுகின்றோம். கோ பூசை இல்லங்களிலும், ஆலயங்களிலும் நடைபெறுகின்றன. பசுவிற்குப் பசுந்தழைகளை வழங்குகின்றோம். ஆனால் அவை வீதியோரங்களில் வீணாக எறியப்பட்ட, கழிக்கப்பட்ட பொருள் களை உண்கின்றன. அதற்குக் காரணமென்ன?

பைக்கணம் பரிக்கும் பாரில் பாவமிக்கதனால் ஆன்கள்
குக்குல்போல் மலமும் தின்னும் கொடுமையையான்
சகிக்கின்றில்லேன் (பா. 455)

**இறைவனிடம் வேண்டல்**

அடிகளின் இந்நூலைப் பார்க்கும் போது முருகன் குறிப்பால் கிணறு தோண்டிக் கைப்பொருள் இழந்தமையையும், மிகவும் கடன் பட்டுத் துன்புற்றதையும் அறிய முடிகிறது. ''கிணற்றில் ஊற்று எடுக்க வேண்டும்'' என்ற குறிப்பை ஏறக்குறைய 200-க்கு மேற்பட்ட பாடல்களில் குறிக்கிறார். அதனால் ஏற் பட்ட இழப்பை ஈடுசெய்ய திருவனந்தபுரம், கொச்சி மன்னர் களையும், பொருள் மிக்கவர்களையும், செட்டி மார்களையும் சந்தித்தும் பயனில்லை. கடல் கடந்து ஈழம் சென்றதையும் அவரது வரலாற்று நூலிலிருந்து அறிய முடிகிறது.

# சுவாமிகளும் சித்திமாலையும்

## க. இனமதி ஜானகிராமன்

'சேயோன் மேய மைவரை உலகம்' என்ற தொல்காப்பிய வரி தமிழக மலைப் பகுதிகளில் முருக வழிபாடு தொன்று தொட்டு நிகழ்ந்து வந்தனக் குறிப்பதாகும். முருகனின் அருளைப் பெற 'வெறியாட்டு நிகழ்த்தியனவும் சங்கப் பாடல்களின்வழி அறியலாம். நக்கீரர், அருணகிரிநாதர் எனுமிவர்களைத் தொடர்ந்து முருகனின் அருளைப் பெற்றவர்களில் குறிப்பிடத் தக்கவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவர்.

பல்வேறு யாப்புகளில் பல்வேறு கடவுளர்களைப் பாடினாலும்கூட முருகப்பெருமான் மீது இவர் பாடிய பாடல் களே மிக அதிகமானவை. அவற்றுள் பழனிமலை முருகப் பெருமான் மீது பாடிய பழனித் திருவாயிரத்தில் உள்ள சித்தி மாலைப் பகுதி இவண் ஆய்வுக்குரிய பகுதியாகின்றது. வண்ணச் சரபம் குறித்தும் அவர் பாடிய பழனித் திருவாயிரம் குறித்தும் சித்திமாலைத் தருகின்ற சுவாமிகளின் வேட்கைகள் குறித்தும் அவ்வேட்கைகளின் பாகுபாடுகள் குறித்தும் ஆய்ந்து வெளியிடுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**பழனித் திருவாயிரம்:** இப்பழனித் திருவாயிரம் தண்டபாணி சுவாமிகள் தலயாத்திரைகள் செய்து பழனிக்கு வந்து தங்கிய போது பாடப் பெற்றதாகும். இளம் பருவ முதலே முருகப் பெருமானை வழிபட்டு வந்த சுவாமிகள் அப்பெருமானது திருவுருவ பேதங்கள் பதினாறனுள் பழனிமலைக் கோயிலில் விளங்கும் தண்டபாணி வடிவமே மிகச் சிறந்ததெனக் கொண்டார். அவனிருப்பிடம் பழனிமலையே என்றும் மனதில் பட்டதால் பழனித் திருவாயிரம் பாடுகின்றார்.

பழனியில் தங்கியிருந்தபோது அன்பர்களது உதவியினால் சரவணப் பொய்கையை அடுத்து ஒரு மடாலயம் நிறுவி வேற்பூசைகள் செய்து தவமியற்றி வந்தார்.

**அமைப்பு முறை:** பழனித் திருவாயிரம், வெண்பாமாலை, வெண்பா அந்தாதி, அலங்காரம், குருபரமாலை, பதிற்றுப் பத்தாந்தாதி ஒருபா ஒருபஃது, நவமணிமாலை, சித்திமாலை, நவரசம், நடுஒலியந்தாதி வகுப்பு, கலவி மகிழ்தல் வண்ணம், பிள்ளைத்தமிழ், கலம்பகம், யமக அந்தாதி, திரிபுர மஞ்சரி என்ற பதினாறு பகுதிகளையுடையது. 1007 பாடல்களை யுடையதும் பல்வேறு யாப்புகளையுடையதுமாம்.

**சித்திமாலை:** சங்கப் பாடல்களில் அறிவர் என்றும் நிறை மொழி மாந்தர் என்றும் பேசப்பெற்ற சித்தர்களின் பெருமை களையும் அவர்கள் சமுதாயத்திற்கு ஆற்றிய பணிகளையும் உணர்ந்த சுவாமிகள் அவர்கள் பெற்ற அளவற்ற சித்திகளைப் போல தானும் பெற்றால்தான் இச்சமுதாய மக்களைத் திருத்த முடியும் என்பதை நன்குணர்ந்து கொள்கின்றார். எனவே முருகப்பெருமானிடத்துத் தனக்கு வேண்டிய சித்திகளைக் குறித்து பட்டியலே இடுகின்றார். அப்பட்டியலைக் கொண்ட இச்சித்தி மாலை அறுபத்து நான்கு பாடல்களைக் கொண்டது. இப்பாடல் களை தனக்காக வேண்டியவை, சமுதாயத்திற்காக வேண்டியவை என்று இரு நிலைகளில் பாகுபடுத்தலாம்.

**தனக்கென வேண்டியவை:** ஆண்டிக் கோலத்தில் நிற்கும் அவர் தமக்கென வேண்டினார் என்று கூறுவதே தவறு என்று உரைப்பாரும் உளர். உண்மையில் இச்சித்திமாலையையும் மற்றும் அவரது பிற பாடல்களையும் பார்க்கும் பொழுது தன்நிலை கருதியும் அவர் வேண்டியுள்ளது புலனாகிறது. ஆசையாலும் அனுபவிக்கும் நோக்கத்தினாலும் இவர் கேட்டார் என்பதில்லாமல் ஒவ்வொன்றையும் அறிந்து கொள்ள வேண்டும்: புரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தின் வயப்பட்டே அவர் கேட்டுள்ளார் என்று கொள்ளலாம்.

**எல்லா மொழிகளையும் அறிய விரும்பல்:** ஒருவரது உளத்தை அறிய வேண்டுமேல் அவர் பேசுகின்ற மொழியினை அறிந்து கொள்ளுதல் வேண்டும் என்ற எண்ணத்தினால் எல்லா மொழிகளையும் தான் அறியும் வகை செய்ய வேண்டும் (எல்லாக் கலைகளையும்) என்ற தனது வேட்கையை முதலாவதாக அமைத்திருக்கின்றார்.

**உயிர்களின் ஒலிக்குரிய பொருள்களை அறிதல்:** பரவையாரை மணந்த சுந்தரரிடத்து நட்பு கொண்ட சேரமான் பெருமாள் போல் உலகத்து உயிர்கள் பேசும் ஒலிக்குரியப் பொருள்களை அறிந்து கொள்ள அருள வேண்டும்.

**சொன்ன சொல் பலித்தல்:** அசுரர்கள், வானவர்கள் கற்பக நாட்டை அழிக்க தவம் செய்தாலும் அழிப்பவர் சிவன். அவர் சொன்ன வாக்கு பலிக்கும் படியாக நீ அருள் செய்ய வேண்டும். இந்திரர், தேவர்கள் முதலானோர் வாழ்கின்ற ஊர்கள் வரையில் (தேவலோகத்திற்கும்) இந்த உடலோடே வான்வழியாக செல்லும் கவனகுளிகையை நீ அருள வேண்டும்.

**பரமஞானசித்தி வேண்டல்:** அனைத்து உயிர்களையும் ஆக்குதலும், காத்தலும், அழித்தலும் செய்கின்ற உண்மைத் தன்மையினை அறிந்து கொள்ளும் பரமஞான சித்தியினை அருளல் வேண்டும்.

**வசிய வித்தை வேண்டல்:** சிறிய நெஞ்சுடைய மக்கள் என்னை ஏசாமல் அவர்கள் அனைவரையும் வசியபடுத்தும் சித்தி முழுவதையும் கொடுத்து என்னை காக்க வேண்டும்.

**மோகன சித்தி:** இவ்வுலக வாழ்வில் தினமும் வாடி நொந்து அழியாமல் உன் அருளால் அனைத்து மோகனங்களும் சித்தியாக வேண்டும்.

**தம்பன சித்தி:** நிந்தை மொழிந்து என்னை நெருங்கும் பகைவரால் என் மனம் மிகவும் துன்பப்படுகின்றது. அப்படி நிகழாமல் ஒத்து நிலைபெறும் உணர்வால் தம்பிக்கத்தக்கச் செயலை எளிதாக நீ தருதல் வேண்டும்.

**உச்சாடனம் உழைதல்:** மண், பெண், பொன் முதலான ஆசைகளில் மயங்காமல் அவையனைத்தும் பொய் என்று உணர்ந்து அவற்றை நீக்குகின்ற வகைகளைச் செய்ய வேண்டும்.

**வித்துவேடணம் விரோதித்தல்:** சிந்தையீனம் எனும் அற்ப குணங்கள் அகல – அனைத்து வித்தைகளிலும் உயரியதாகிய வித்துவேடணம் விளைக்க அருள் புரிய வேண்டும்.

**சருவ பேதனம் செய்தல்:** ஆதி முதல் முடிவு வரைக் கண்ட மேலோர்களின் மணம் மிகுந்த பாசுதூளிகளை அணிந்து வாழ்கின்ற இவ்வுலகமும் வான உலகமும் நாகலோகமும் அனைத்தும் நம்புமாறு சருவ பேதனம் செய்கின்ற சித்தியை எனக்குத் தந்தருள வேண்டும்

**உருவம் தெரியாது உலவும் பேறு:** மலை, வானம் முதலான வற்றுள் உள்ளவர்களும் மற்றும் யோக நிலை வல்லார்களே அல்லாது மயக்கம் பொருந்திய பிறர் எவரும் காணாதவாறு உலவுகின்ற சக்தியை எனக்குத் தரவேண்டும்.

**சொரூப சித்தி வேண்டல்:** யாகத்தில் உயிர்களைக் கொல்வது பாவம் என்று உணர்ந்தும் அதனால் பெறுகின்ற முத்தியும் துன்பம் என்பதை அறிந்தும் நான் இருக்க என்னை கிளி என்று நீர் சொல்வது உண்மையானால் எனக்குச் சொரூப சித்தி தந்தருள்.

**எலும்பு பெண்ணான வித்தை:** திருஞானசம்பந்தப் பெருமான், சுட்டு எலும்பாக இருந்ததைப் 'பூம்பாவை'யாக ஆக்கித் தந்தாரே அத்தகைய வித்தையை நானும் செய்ய அருள் தரவேண்டும்.

**எட்டுத்திருவும் இசையும் பேறு:** எனது உள்ளம் தன் கட்டுப் பாட்டையும் மீறி நொந்து வெதும்புகின்றது. அப்படிப்பட்ட என்னை இந்திரர் முதலானோர் வியந்திட எட்டு இலக்குமிகளும் சேருதற்குரிய நலத்தினை நான் பெறும் வகையில் தந்தருள்.

**சாரதா பீடம் ஏற விழைதல்:** இந்திரன் வாழ்வும் இழிவே என்று இகழ்ந்து ஆறு சமயங்களையும் பணிந்து அதீதமான சமரச ஞானம் பெற்றவர் ஆதிசங்கராச்சாரியார் அன்று வாதில் பலரை வென்று ஏறியது சாரதா பீடம். அதுபோல நானும் சன்மார்க்க சமயத்தவரை அழித்து சாரதாபீடம் ஏற அருள்புரிய வேண்டும்.

**வள்ளி நாயகி ஓதிய குறி மெய்யாக விரும்பல்:** தில்லைச் சித்தனாகிய சிவன் அன்று எனக்கு உரைத்த சொல் வீணாகுமா! தெய்வதட்சணைக் கொண்டு திருப்பணிகள் செய்ய மாட்டேனா! அன்று என்னைக் கிளி என்று சொன்னாயே அந்தச் சொல் வீணாகுமா! வள்ளி நாயகி உரைத்ததும் பொய்யாகாமல் காத்திடுக!

**மாயைத் துயர் தீர்த்தல் வேண்டல்:** உனது ஞானக் கருணனை என் நேர் வைத்து எனது மானம் குறைவுபட பேசுகின்ற பலரது பேச்சுக்களை மாற்றி மனக்கவலை அனைத்தையும் நீக்குவாயாக! மாயைத் துயர்களை போக்குவாயாக!

**அனலினும் புனலினும் விடுத்த பாடல்களைப் பெற விழைதல்:** இதயம் ஒன்றுபட வேண்டும் என்று நான் நினைத்து தவம் செய்த போது இவ்வுலகத்தும் மறு உலகத்தும் உள்ள சுகங்களை இகழ்ந்தவர்கள் தம் கதையனைத்தும் நன்கு அறிந்து அவற்றை விரும்பியதால் துணிவாக அனலினும் புனலினும் நான் எழுதிய பாடல்களை எறிந்து விட்டேன். அவை அனைத்தையும் நான் பெறும்படி நீ அருள்புரிதல் வேண்டும்.

**புலவனிச்சை போக வேண்டல்:** கெடுதல் ஒழிந்த சிந்தை வலிவடையும்படி அன்று நீ தனியனாக வந்து என்னிடம் பேசிய சொல் வீணாகுமா. என்னுடைய புலன்களின் வழிப்படுகின்ற ஆசைகளை போக்க நீ அருள் புரிய வேண்டும்.

**எமன் முதலான இகல் நீங்க வேண்டும்:** மண், பெண், பொன் எனும் இந்த மூன்று ஆசைகளும் என்னை வந்து சூழாமல் இவ்வுலகில் உள்ள அனைத்துச் சமயங்களும் உன்னுடைய ஆடல்களே என்று நம்புகின்ற தன்மை சிறிதும் தேயாமல் சந்திரனை தன் தலையில் பெற்ற சிவபெருமானொடு கும்பன் என நானும் வாழ்வேன் என்னைக் கண்டாலே எமன் முதலான பலரும் நடுங்குகின்ற வலிமையைத் தரவேண்டும்.

**புராண இதிகாசப் பயன் கைவருவது வேண்டல்:** கள் குடித்து மயங்கியவர்கள் கொடை பெற விரும்பி அயர்தலைப் போன்று அயராமல், உயிரையே பரம் என்று எண்ணுகின்ற மாயாவாதிகளுடன் சேராமல் தேவ உலக மகளிர் மாட்டு ஆசை கொண்டு அலையாமலும் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலானவை உரைக்கும் பயனை அருளுதல் வேண்டும்.

**கீர்த்தி வேண்டல்:** நாள்தோறும் மலரிட்டு பூசைகள் செய்யும் உன்மீது கொண்ட அன்பினால் உனது அருட்செயல் மாறிடுமோ என்று சந்தேகப்படுதலும் நீ அறிய மாட்டாயா? என்னுடைய சஞ்சலத்தைப் போக்கி மெய் புகழை அடையச் செய்வாய்.

**மனச்சான்று மெய்யாக விரும்பல்:** எனக்காச்சு உனக்காச்சு என்று பேசும் வீம்பு மொழிவாணர்களையும் நாய் போன்ற நான் வனக்காட்டை ஒத்த இந்த உலகில் வாழ்வேன். இதனைத் தவிர்த்து மனசாட்சிபடி மெய் பேசுகின்ற தன்மையே அருள்வாய்.

**சூரிய சாட்சி உண்மையாவது விழைதல்:** யாகத்தி முன்பு உயிர்களைக் கொன்றுத் தின்பதற்குத் துணிந்தவர்களின் பகையினைக் கொண்டவன் என்று இவ்வுலகத்தவர்கள் சொல்வது உனக்குத் தெரியாதா! என்னை ஆட்கொள்ள வேண்டாமா! சூரியக் கடவுள் அழிந்த சத்தியம் பாழ்படலாமா! பாழ்படாமல் உண்மையாக்க வேண்டும்.

**தில்லைச் சிவன் சொல் மெய்யாக விரும்பல்:** தில்லைப்பதி யுடைய சிவபெருமான் அருமைப் பேறுகள் அனைத்தையும் பெறுக! – என்று உரைத்த சொற்கள் திகழும்படியாக அருள்க!

**அம்பிகை அருளிய சொல் உண்மையாக:** பிரமபுத்திரர் களுக்கு தலைவனான பிரமனும் திருமாலும் உண்மை உணரா தன் நிலையை சிவனார் காட்டிய அக்காலத்தில் அம்பிகை கூறிய அந்தச் சொல் உண்மையாக வேண்டும்.

**சொன்ன சொல் பலிக்க வேண்டும்:** இந்திரர்களுக்குத் துன்பம் வராமல் எட்டு திசைகளும் தாழாமல் கொடுமைகள் செய்பவர்கள் வாழாமல் அன்று சொன்ன சொல் உண்மையாக வேண்டும்.

**கணபதி சொல் உண்மையாக:** குருபர தத்துவத்தினை உணராதவர்கள் தங்களது குலைவுறு சித்தத்தினைக் கொண்டு அலைவதை மனசாட்சியுடன் பார்க்கின்றேன் நான். கணபதி உரைத்த சொல் உண்மையாக வேண்டும்.

**முருகன் மொழி நலமாக:** தந்தையும் தொழ மகிழ்ந்து ஆடு கின்ற தண்டைகளை உடைய திருவடிகளை நினைந்து அடியவர்கள் அன்பு பற்றிக் கூறும் ஊடல் மொழிகளையும் புனைந்து கொள்பவனே! நீ கூறிய சொல் என்று உண்மைதான் அல்லவா!

**மயில்மீது சேவை தர வேண்டல்:** உண்மைச் சித்திகள் கைவரப் பெறுதலே உண்மையான வாழ்வு என்று எனது உள்ளம் நாடுகின்றது. இவ்வுடல் அருள் நிலை பெறாமல் வீணே அழிந்தால் அது இழப்பல்லவா! எந்தத் தேவரும் நீதான் உண்மை என்று நாடுவது தவறல்லவே... இப்போது என் எதிரில் தோகை மயில் மீது வர வேண்டும்.

**நால்வகைப் பேறு பெறல்:** பரகாயப் பிரவேசம் என்னும் கூடு விட்டுக் கூடு பாயும் சித்தி பெற்றவர்களானாலும் உடல் இருக்க உயிர் பிரிந்ததெனில் வீடுபேறு கிடைக்காது என்ற உண்மையை நான் அறிவேன். எனவே அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகை பேறுகளையும் பெற அருளுதல் வேண்டும்.

**பிரயோக சித்தி பெறல்:** மாதர்பால் செல்லும் மனத்தை அகற்றி நன்னெறிக்கண் விழிக்கும் பிரயோக சித்தியருள வேண்டும்.

**கலைஞானம் முற்றும் பெற விழைதல்:** தருக்க வாதங்களைப் பேசி உன்னுடைய அருளினை எள்ளி நகையாடாமல் அனைத்து உலக சித்தர்களும் கூறியவற்றை கருத்தில் கொண்டு என் உயிர் நாடி நிற்கும் சிறிதுகூடக் குறைவு படாமல் கலைஞானம் முழுமையும் அடையும் சித்தியினைத் தருதல் வேண்டும்.

**பகைவர் அஞ்சும் ஆண்மை பெற விழைதல்:** மகரந்தம் பொருந்திய கடம்ப மலர்களைப் போன்றப் பாடல்களைத் தொகுத்து அணிவிப்பேன். என் எதிர் வந்து நீ பேசிய மொழிகள் வீணாகுமா! நீயே என்னை விரும்பவில்லையானால் நான் எப்படி விரும்புவேன். எனது பகைவர்கள் நடுங்கும்படியான ஆண்மையை நீ தந்தருள வேண்டும்.

**எவ்வுலகும் போற்றும் இசை பெற விழைதல்:** முன்பு ஒரு நாள் தீர்க்க தரிசனமாக என் உள்ளத்தின் ஊடே கூறிய அந்தச் சொல் உண்மையானால் சிறமாலை கூடிய சிவ பெருமானுக்கு நிகரான செய்கையால் எவ்வுலகத்தவரும் போற்றுகின்ற புகழினை நான் பெற நீ அருளல் வேண்டும்.

**தடையறு பேரானந்தம் வேண்டல்:** பெண்ணாசை என்பது சிறிதுகூட இல்லாமல் மாறன் கைக் கம்புகள் என்னைத்

தொடாமல் சகச ஞானம் என்னிடத்தில் பொலிதலால் தடையில்லாத பேரானந்தம் அருளுதல் வேண்டும்.

**சருவ பிரசாத முக்தி வேட்டல்:** உண்மைக் குணமுடைய தவத்தவர்களோடு அளவற்ற பல கோயில்களுக்குச் சென்று இறைஞ்சினேன். நீ தமியனான என் மனவெளிக்கண் வந்த நாளன்று தந்த சருவ பிரசாத சித்தியினை இப்பொழுதும் தந்தருள்வாய்.

தமக்கு வேண்டியவையாக முப்பத்தெட்டு வேட்கைகளை வைத்தவர் சமுதாய நலன் கருதியும் தம்முடைய வேட்கைகளை முருகப் பெருமானிடத்து எடுத்துரைக்கின்றார்.

**சமுதாய நலன் கருதியவை:** பல்வேறு சமயத்தினரும் சமுதாய மக்களிடத்து குழப்பத்தை ஏற்படுத்த பிறிதொரு சாரார் பலி கொடுக்கும் முறைகளை பின்பற்ற இவற்றைக் கண்ட சுவாமிகள் அவர்களை திருத்தும் நோக்கில் தமது வேட்கைகளை வெளிப்படுத்துகின்றார்.

**இரசவாத சித்தி:** மனிதர் வானர் என்னும் இருபாலருக்கும் உரிய துயர்களை நீக்கி அடியாரோடு இனிய வாழ்வு கொண்டு மகிழ்வதற்காக இரசவாத சித்தி அருளல் வேண்டும்.

**சரியை சித்திக்க:** சரியைத் தொண்டு செய்பவர்களின் செயல்கள் சித்திக்க அருளல் வேண்டும்.

**கிரியை சித்திக்க:** வேத வேள்விகளைச் செய்பவர்களை அத்திமையினின்றும் விளக்குதற்குக் கிரியை சித்திக்க வேண்டும்.

மேலோர்களின் விருப்பங்களை நிறைவேற்ற **யோகம்** சித்திக்க வேண்டும். எல்லா சமயத்தினரும் நட்பாக மாற **சமரச விநோத சித்தி** கைவரவேண்டும். பொல்லாதவர்களாகிய அரசின் கீழ் நசுக்கப்படாமல் கலிகால நிலையை நினைத்து மயங்காமல் சமுதாய மக்கள் நடைபோட விரும்பியவற்றை வரவழைக்கும் சித்தி தர வேண்டும். பகைவர்களை அழிக்கின்ற சித்தியினைப் பெற வேண்டும். ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் மாற்றுகின்ற சித்தியினை அருளல் வேண்டும். நல்லவர்களைத் துன்புறுத்துகின்ற கள்வர்களைத் தண்டிக்கின்ற ஆண்மையைத் தர வேண்டும். சந்தக்கவி பாடுகின்ற இக்காலப் புலவர்களையும் இருத்திட சங்கப் பலகை வேண்டும். உயிர்வதை

செய்வதற்கு இடமான கோயில்களை அழிக்கும் சக்தியை அருளல் வேண்டும். எல்லா சமயத்தினரும் என்னை சர்குரு எனப் போற்றுகின்ற தலைமையினைத் தந்தருள வேண்டும். எம்மதமும் போற்றும்படி பொது வாழ்வு தந்திட வேண்டும். உயிர்களை பலி கொல்லுகின்ற சிறுதேவதைகளை அழிக்க தண்டாயுதமும் வேலும் தந்தருள வேண்டும். கொலைக் கொடுமைகளைத் தவிர்க்கும் ஆண்மையைத் தந்தருள வேண்டும். என் தவ வலிமை யால் தேவர்களும் தானவர்களும் மனிதர்களும் மதிக்கும் படியான பேற்றினை எனக்குத் தந்தருள வேண்டும்.

இவ்வாய்வுகளின்வழி, வேள்விகளை வெறுத்ததால் சுவாமிகள் இராமலிங்க அடிகளைப் போன்றே பலராலும் வெறுக்கப்பட்டிருக்கின்றார்; சமுதாய ஆன்ம நேயம், உயிர் இரக்கம், மக்களை நன்னெறிக்கண் உய்த்தல் முதலானவற்றால் சமுதாயச் சிந்தனையாளராக இருந்துள்ளார்; மனித உடல் அழிந்துவிட்டால் மீண்டும் பிறவிக்கே வித்தாகும், என்ற சித்தர் கொள்கையால் ஈர்க்கப்பட்டு வீடுபேற்றினையும் விரும்பியுள்ளார்; சமுதாயக் கொடுமைகளை வேரறுக்க தண்டாயுதமும் சூலமும் சித்திகளும் தேவை என வேண்டியதால் சமுதாயப் புரட்சியாள ராகவும் வாழ்ந்துள்ளார், என்பவை தெளிவாகின்றன.

# வேலூர்ப் பதிகங்கள்

## ந. கடிகாசலம்

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்களில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் ஒருவர். மிக அதிக எண்ணிக்கையில் பாடல்களைப் பாடியவர் எனும் பெருமை இவருக்கு உண்டு. ‘தன் வரலாற்றை’ முதன் முதலில் படைத்தவர் இவர். இவர் பாடியவற்றுள் வேலூர் எனும் தலத்தின் மீது அமைந்த பதிகங்கள் மட்டும் இங்கு ஆய்வுப் பொருளாகின்றன.

**வேலூர்ப் பதிகங்கள்**

பதிகம் என்பது பத்துச் செய்யுட்களாலான சிறு பிரபந்தம் ஆகும். தலத்தின் சிறப்பையும் இறைவன் சிறப்பையும் பண்ணோடு இவ்வகை இலக்கியம் எடுத்துக் கூறுகின்றன. இத்தகைய பக்திப் பதிகங்கள் பல்லாயிரக்கணக்கில் தமிழில் தோன்றுவதற்கு வித்திட்ட நிலையில் காரைக்காலம்மையாரும் திருஞானசம்பந்தரும் நினைவுகூரத் தக்கவர்கள். தலம் மற்றும் இறைவன் பெருமையைப் பண்ணோடு பேசுவதால் பக்தர்களை இப்பதிகங்கள் பெரிதும் ஈர்த்தன. இவ்வகையில் அமைந்துள்ள ‘வேலூர்ப் பதிகங்’களில் நான்கு பதிகங்கள் இடம் பெற்றுள்ளன.

1. வேலூர்ப் பதிகம்
2. வேலூர்க் குகவேள் பதிகம்
3. வேலூர்க் குகவேள் திருப்புகழ்ப் பதிகம்
4. வேலூர் அமுதச்சித்தர் பதிகம்

ஆகிய நான்கும் ‘வேலூர்ப் பதிகங்கள்’ எனக் குறிக்கப்படுகின்றன.

**தலம்**

வேலூரின் பெருமை பேசும் பதிகமாக ‘வேலூர்ப் பதிகம்’ அமைந்துள்ளது. தொண்டை வளநாட்டைச் சேர்ந்த வேலூர்

குறிஞ்சி நிலப்பகுதியாகும். முருகன் திருக்கரத்தில் ஒளிரும் வேலின் காரணமாகவே இவ்வூர் 'வேலூர்' – வேலுடையான் பட்டினம் – என அழைக்கப்படுவதாக சுவாமிகள் குறிப்பிடுகிறார். வேல் வழிபாட்டில் ஈடுபாடு கொண்ட சுவாமிகளுக்கு இதுவே சிறந்த பெயர்க் காரணமாகத் தோன்றுவதில் வியப்பில்லை. வேல மரங்கள் நிறைந்திருந்த காரணத்தால் வேலப்பாடி என்றும், பின்னர் வேலூர் என்றும் வழங்கப் பெற்றது என்பாருமுளர்.

வேதம், ஆகமங்கள் ஆகியவற்றின் பொருளை உணர்ந்த பெரியோர்கள் வாழும் இடமான வேலூர் (1.1) வந்தாரை இரு கரம் நீட்டி வரவேற்று ஆதரித்துப் போற்றும் பான்மை படைத்தது (1.2) என்கிறார் சுவாமிகள்.

> வேதமுடன் ஆகமத்தின் மிக்கபொருட் சிருணர்ந்த
> நாத முனிமுதலாம் நல்லோர்கள் வாழுமிடம்;
> வந்தார் மனத்தகத்தில் வாஞ்சித்த வண்ணம் எல்லாம்
> தந்தா தரிக்கும் தகையுடையார் சாருமிடம்

என்பது அவர் வாக்கு. தமிழ் நூல்களின் பயனை உணர்ந்து சுவைத்த அறிவுடையோர் சேருமிடம் (1.4); முத்தமிழ் வித்தகர்கள் மகிழ்ச்சியுடனே விளங்குதல் வேண்டும் எனும் உணர்வுடையோர் வாழுமிடம் வேலூர் (1.6) என்கிறார். இல்லறம் துறவறம் எது வாயினும் அவற்றில் ஈடுபடுவோர்க்கு நாளும் களிப்பை வழங்குவது வேலூராம் (1.7).

> இல்லத்து இருப்பார்க்கும் ஏற்றருந்தச் சென்றார்க்கும்
> நல்அற்புதக் களிப்பை நாடோறும் நல்குமிடம்

எனப் பெருமிதத்துடன் பாடுகிறார். மேலும், அங்குள்ள சலகண்டேசுவரரின் பொன் மலை போன்ற தோள்களைக் கொண்ட வீரர்கள் வாழுமிடம் (1.11) என்கிறார். நெல்லையில் பிறந்த சுவாமிகளுக்கு, வேலூரின் மீதான ஈடுபாட்டை இப் பதிகம் தெளிவாக எடுத்துரைக்கிறது.

வேலூரின் இயற்கை வளத்தை அவர் பாடும் பாங்கே தனி.

> நீரழியாக் குன்றம்முதல் நீணிலத்தோர் கூறும்வளம்
> சேர விளங்கும் திருவார்ந்த வேலூரே (1.9)
> தேன்துளிக்கும் சோலையொடு தெள்ளருவி கொள்ளல்
> கண்டு (1.10)

மிளிரும் ஊர் வேலூரே என்கிறார் சுவாமிகள்.

அரண் ஒரு நாலால் வளைந்து புவிமுகமே போல்
விளங்கும் அணிதிகழ் வேலூர் (3.3)

என்பது ஈண்டு சுட்டத்தக்கது.

இமையவர் கண்டுகண்டு ஏங்க
எண்ணில்சீர் அமையும் வேலூர் (4.9)

என்பது சுவாமிகளின் வாக்கு.

**இறைவன்**

வேலூரில் குடிகொண்டிருக்கும் முருகன் மீது வேலூர்க் குகவேள் பதிகம், வேலூர்க் குகவேள் திருப்புகழ்ப் பதிகம் ஆகிய வற்றை வண்ணச்சரபம் படைத்துள்ளார். ஆடும் மயிலேறி அன்பர் முன் தோன்றும் ஐயன் (1.4) எனப் பாடப்படும் முருகன்–

மூன்றுவகைத் தேவர்களும் மூவர் முருகோனை
என்று தொழல் மெய்தானே (1.10)

என்பது சுவாமிகளின் நம்பிக்கை.

விருப்புடையார்க்கு இன்பம் நல்கும் வேலூர்க் குகனிடம் சுவாமிகள் விண்ணப்பம் செய்கிறார். 'ஏன் இவ்வாறு மெழுகு போல் என் உளம் அழியச் செய்கிறாய்?' (2.1) என்று வினா தொடுத்துவிட்டுத் தான் கோரிக்கையை முன்வைக்கிறார். நயமார்தரு தமிழ் பாடிய நல்லோரொடு வைப்பாய் (2.3) என்கிறார்.

மூவாதுஉயர் ஒருமுத்தொழில் முழுதும்செயும் மூவர்
நாவார அழுத்துன் பதம் நானும் பெறுவேனோ? (2.10)

என ஐயம் கொள்கிறார். 'அவன் அருள் வேண்டும்' என்பது கருத்து.

வேலூர்க் கோட்டையில் உள்ள சலகண்டேசுரர் கோயிலில் பூசை வழிபாடு இல்லாதது கண்டு மனம் வருந்தும் சுவாமிகள்,

கண்சேர்நுதல் காணும்சல கண்டேசுரர் கோயில்
வண்சேர்வது செய்யத்தகும் வல்லார் எவர் சொல்லாய்? (2.7)

என்று இறைவனுக்கே வினாக் கணை தொடுக்கிறார்.

**அறிவுரை**

தலம், இறைவன் சிறப்புரைக்கும் பதிகங்கள் எனினும் நல்வாழ்வு வாழ்வதற்கான சில அறிவுரைகளையும் சுவாமிகள் அருளுகின்றார்.

சுவர்க்கம் பெறவேண்டும் யாகத்தில் உயிரைப் பலிகொடுப் போரைத் தீயோர் என்று கடிந்துரைக்கும் சுவாமிகள், அத்தகை யோர் நடத்தும் வேள்வியை மதிக்க வேண்டாம் (3.9) என்கிறார்.

நாணாத வேசியர் மாமோக லீலையில்
நாய்போல் சலாவிசன் மெலியாதே (3.9)

என்பதும் அவர்தம் அறிவுரையாகும். மேலும்,

பொற்குவடு போல்நீடு கொங்கை
உற்றமட மானார்கள் விண்ட
புத்திவழி போம்மூடர் செம்பொன் விழையாதே (3.11)

என அவர் அறிவுறுத்துவது சுட்டத்தக்கது.

**அமுதச் சித்தர்**

வேலூரில் தங்கி வாழ்ந்ததாகக் கூறப்படும் சித்தர் பலரில் அமுதச் சித்தர் என்பாரும் ஒருவர். அவரைப் பற்றிய சுவாமி களின் கருத்து 'வேலூர் அமுதச் சித்தர் பதிகமாக' வெளி வந்துளது. 'ஆலுடைக் கடவுள்நேர் அமுதச் சித்தர்' என்று அவர் பாராட்டுகிறார்.

தன்படை அறிகிலார் சழக்க ரோடுழன்று
இன்பம் வேண்டிடும் எனக்கு இரங்கில் பாவமோ? (4.6)

என்று இரங்கிப் பாடுகிறார் சுவாமிகள்.

பொய்யர்கண் டிகழ்தலில் புலரும் நாயினேன்
மெய்யடி யவர்பணி விரும்பல் வீண்கொலோ? (4.5)

என்று வினாவும் தொடுக்கிறார் அமுதச் சித்தரை நோக்கி. வேலூர், முருகன், சித்தர் பெருமை பேசும் பதிகமாக இது அமைந்துள்ளது உணரத்தக்கது.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய 'வேலூர்ப் பதிகங்கள்' நான்கும் இங்கு அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. பக்தி இலக்கியம் எனும் நிலையில் இலக்கிய நயம் மிக்க படைப்பாக அவை விளங்குகின்றன. சுவாமிகளின் புலமைக்கும் முருகன் மீது கொண்ட பக்திக்கும் தமிழ்ப்பற்றுக்கும் சான்றாக அமைவது அவர்தம் 'வேலூர்ப் பதிகங்கள்' என்று கூறலாம்.

# சுவாமிகள் கூறும் மத நல்லிணக்கமும் சமயப் பொதுமையும்

## ஆர். கண்ணன்

உலகிலுள்ள உயிர்களைப் பக்குவப்படுத்தி முக்தியடையச் செய்வதே சமயங்களின் நோக்கம். சமயம் என்பது ஒரு நெறிப் பாட்டைக் காட்டும். ஆறுசமயங்கள் என்னும் கருத்து நம்மிடையே உண்டு. ஆறு சமயங்களாவன 1. சௌரம் 2. சைவம் 3. சாத்தேயம் 4. வைணவம் 5. காணாபத்தியம் 6. கௌமாரம். கௌமார சமயமே முதலில் தோன்றியது எனவும், முருகப் பெருமான் ஒருவனே முழுமுதற் பரம்பொருள் எனவும், ஏனைய சமயங்கள் யாவும் அவனுள் அடக்கம் எனவும் தண்டபாணி சுவாமிகள் கூறுவார். வண்ணச்சரபம் இந்த முறையில்தான் வழிபட்டும், தவமியற்றியும், சண்மத சமரச சமயாதீத அனுபவம் உற்றார். ஒவ்வொரு சமய வரலாறும் தத்தமக்குரிய ஒவ்வொன்றையே தலைமையாக வற்புறுத்திக் கூறும். ஒரு சமய வழிபாட்டினர் பிறசமய வழிபாட்டினரை நட்புறவுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும். அவ்வாறின்றி தன் சமயம் உயர்வு, பிறசமயம் தாழ்வு. 'இது என் சமயம்', அது உன் சமயம்' என்று கூறும்பொழுது சமயப் பூசல்கள் தோன்றும். எல்லாச் சமயங்களும் கடவுள் ஒன்றின் வடிவபேதங்கள் என்பதையறிவோம். எல்லா மூர்த்தி அனுபவமும் ஏகபரத்தின் விளையாட்டாகும். இவ்வாறு சமய சமரசத்தைக் கூறி மத நல்லிணக்கத்திற்கு வித்திட்டவர் வண்ணச்சரபம் ஆவார். ஆறு சமயங்களும், பொதுப் பரம்பொருள் ஒன்றின் ஆறு குணங்களேயாம். இவ்விவரத்தை

''பரம் பொருளின் பிரகாசம் பரிதிப்புத்தேள்
பலவுலகும் ஒடுக்குகின்ற பண்பே ஈசன்
கரந்தவற்றை உதவுவது சத்தி, யாவும்
காப்பதுமால், அடியவர் தாம்கருதும் செய்கைக்கு

உரங்கொடுத்து முடித்திடுதல் கணேசன், ஞான
உபதேசம் புரித்திடுதல் ஒள்வேற் கையான்
வரம்பெறுமட் டுபாசித்துப் பெற்றோர் இந்த
வகையுணர்வார், மற்றையர்க்கு வம்பான் அன்றே''

என்றும்

''சூரியனே பிரமம்எனச் சொல்லல் ஒன்று
சுடர்மழுவான் கடவுளெனத் துதிப்ப தொன்று
வீரியசத் தியைப்பெரிதா விளம்பல் ஒன்று
விட்டுணவே யாகுமென விள்ளல் ஒன்று
சீரியக ணேசன்எனத் திகழ்வ தொன்று
செவ்வேற்கைச் சேந்தனெனச் செப்ப லொன்று
ஆரியநூற் றலைவர்புகல் சமயக் கூட்டம்
ஆறும்எங்கள் கவுமாரத்துள் அடக்கம் தானே''
(கௌமார முறைமை)

என்றும் தண்டபாணி சுவாமிகள் கூறுவார்.

குமாரக் கடவுளுக்கு பரத்துவம் கூறிய தண்டபாணி சுவாமிகள், பரத்துவத்தை உணர்வதற்கு உபாசனை மிகவும் இன்றியாமையாதது என வலியுறுத்துகின்றார். உருவ வழிபாடே தொடக்கம். இதிலிருந்துதான் அருவ நிலையை தியானித்து நிலைக்குச் செல்லவேண்டும். பக்தியில் தொடங்கி, ஞானத்தில் முடியும்.

''சித்திமுர்த்தி யென்னும் இருபெரும் பெற்றுத்
திரும்பாத வீட்டினிற்போய்ச் சேருவதற்குப்
பத்திவை ராக்கியம் ஞானம் என்னும் முன்றும்
பக்குவதே, அவர் நடக்கும் பாதை தன்னைச்
சாத்தியமா யோசிக்கில் தியானம் ஒன்றே
சகுணமே அதற்கு இசைவாம்; சார்ந்து நின்றால்
புத்தியினுக் கடங்கா நிர்க்குணமும் தோன்றும்
பூர்வதவப் பயனில்லார் பொருந்தி டாமே''
(தியானானுபூதி)

அறுசமயம் என்ற கருத்துடன், சமயாதீதம் என்ற ஒன்றும் சேர்த்து ஏழு சமயங்கள் என்று சுவாமிகள் குறிப்பிடுவதைக் காணலாம். இனி ஒரு சமயம் புதிதாகத் தோன்றினால் அது

அறுசமயத்தின் ஒரு கூற்றைச் சார்ந்தே இருக்கும் என்கின்றார் சுவாமிகள். இதனை,

"கானமுறை நெறி ஆறே அவைக லந்தே
கழிக்கும்அ கிதம்ஒன்றும் கவினும் கண்டீர்
ஈனமிகும் புலைச்சமயம் இனிஒன்று உண்டா
யினும் அதுவும் இவ்விருமூன் றினது சார்பே"
(சத்திய சூத்திரம்)

என்று சுவாமிகள் தெளிவுபடக் கூறுகின்றார்.

ஒரு வாரத்தின் ஏழு நாட்களிலும், எந்தெந்த தெய்வத்தை வழிபட வேண்டும் என்பதை சுவாமிகள் குறிப்பிட்டு உள்ளார்கள்.

"அறந்த பேதத்து அறுவகைச் சமயமும்
அன்பமுழு தொருவலும் தழுவ லுமாகும்
ஆதிதம் ஒன்றும் ஆன ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம்ஏ ழாய்வே"
(சத்திய சூத்திரம்)

**தண்டபாணி சுவாமிகள் கண்ட வழிபாட்டு முறை**

| | கிழமை | கடவுள் | சமயம் |
|---|---|---|---|
| 1. | ஞாயிறு | சூரியன் | சௌரம் |
| 2. | திங்கள் | சிவன் | சைவம் |
| 3. | செவ்வாய் | சக்தி | சாந்தம் |
| 4. | புதன் | விஷ்ணு | வைணவம் |
| 5. | வியாழன் | கணபதி | காணாபத்திய |
| 6. | வெள்ளி | முருகன் | கௌமாரம் |
| 7. | சனி | குரு | சமயாகிதம் |

சுவாமிகள் தனது ஐந்து, ஆறு வயதிலேயே ஆறு எழுத்து உபதேசம் பெற்று, வேல் வழிபாடு தொடங்கினார் முருகனைத் தூலக் கண்ணால் காணவேண்டும் என விரும்பினார். திருமலைக் கோயிலுக்கும் சென்றார். முருகன் காட்சி கிடைக்கப்பெறாவிடில் மலையிலிருந்து கீழே உருண்டு விழுந்து உயிர்விடுவேன் என்றார். இதனை மிக எளிமையாகப் பாடுகின்றார்.

"எத்தனையோ பாடுபட்டும் என் கண்எதிர் எஃகவை வேறு
கைத் தலத்தான் வாராத கன துயரத்தால் இனி நான்
இத்தரையில் வாழ்கிலேன் யாக்கை விடுகிற்பேன், என்று
உத்தமச்சீர் வைராகம் என்றுளத்திற் றேற்றியதே''.

அதன்பின் மலையிலிருந்து உருண்டனர். வடதிசையிற் றலை வைத்து மறலி திசைக் கால்நீட்டி உடலை யந்தர் திரு மலையின் உச்சியில் நின்று ருட்டி விட்டேன் விடலையிடும் தேங்காய் போய்ட வேறுபட்டுச் சிதறாமல் மடமடெனக் கொண்டு அங்கோர் மண் தனுயில் வீழ்ந்ததுவே உருண்ட நான் ஐந்தாறு ஏழ் உருளையினில் உணர்ச்சி யின்றி மருண்டு விட்டேன் உடன் கனிந்த வாழையின் ஒன்று கனி போன்றது'' ஆனால், கண் முன் காட்சி தராத முருகன் கனவிற் றந்தான் (திருமலைச் சருக்கம்)

முருகன் காட்சி கிடைத்த பிறகே சுவாமிகள் சமய சமரச ஞானம் பெற்றார். சமயங்கடந்த சமயாதீத அனுபவம் பெற்றார். முருகனே அனைத்து வடிவங்களும் எடுக்கின்றார். யார் எந்த உருவம் வேண்டினும், அவர்களுக்கு அந்தந்த உருவமாக காட்சி தருபவன் முருகனே என்பார் சுவாமிகள். இதனை

''ஓதல் கேட்(டு) உடன் உன்சிறுமதியளவு
உரைத்தனை என நக்கு
வேதம் ஆயிரம் கோடியுண்(டு) அவையெலாம்
வெறுத்திடா வெளியாய், நீ
காதல் கூர் அறுவடிவம் ஆய், எங்கு எவர்
கருதும் எவ் வுருவத்தானும்
ஆதல் தோன்ற நின் உருவமும் காட்டுதும்
அறிகுதி எனச் சொல்லி''

என்ற பாடலால் அறியலாம்.

முருகனே சூரியன், சிவபிரான், சக்தி, விஷ்ணு, கணபதி என்ற பல தெய்வங்களாக சுவாமிகளுக்கு காட்சி கொடுத்து உள்ளான். எங்கும் எதிலும் முருகனைக் காணும் காட்சி சுவாமிகளின் காட்சியாகும். ''பரமத்துவத்தை முருகனே சுவாமி களுக்கு போதிக்கின்றான். இதனை, ''என்றும் உகந்த கோலமுற் றெடுத்துஅருள் புரியம் நாம், ஒருவனென் றுணர்'' என்ற வரிகளால் அறியலாம். புறத்தே இருப்பவன் மட்டும்

இறைவனல்ல. மனிதனின் அகத்தேயும் அவனே உள்ளான். ''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்'', என்பதற்கேற்ப, மானுடயாக்கை தாங்கி நிற்கும் மனிதனின் வடிவிலும் முருகன் காட்சி தருகின்றான். சுவாமிகளுக்கு அவருடைய வடிவத்திலேயே முருகன் காட்சி தந்து, ''எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம் பொருள் தான்'' என்பதை உறுதிப்பட சொல்லி மறைந்தனன். இதனை,

''அனக் கொ ணாவிதம் பகர்ந்தனன், உடன் அவன்
அடியவர் அடியார்சீர்
கிறக்கு மாண்பும் இல் கொடியனேன் உருக்கொடு
கிளர்ந்தெழு வலக்கையால்
உளத்தின் வாழ் இட மாமெனத் தக்கதன்
உரத்தில்முக் கால் தட்டித்
துனக்கு றேல், அருள் ஈதும் என்று அங்ஙனம்
சொல்லினன் மறைந்தானே''

என்ற பாடலால் அறியலாம்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் நாள்தோறும் நீராடி பின் உடல் முழுவதும் திருநீறணிந்து, உச்சிவேளையில் சூரியனை வழிபடுவார். தியானம் செய்வார். சூரியனைப் பற்றி சௌர சூத்திரம் 7, சூரிய மாலை 30 கவி, இரவியெழுபது கவி 70, சூரியன் பதிகம் 10 (120 கவி), சூரியன் எழு கூற்றிருக்கை!, ஏழாயிரப் பிரபந்தம், என்ற துதி நூலில் 100 பதிகம், கவி 1000 ஆகியவற்றை சுவாமிகள் பாடியுள்ளார்.

சுவாமிகள் நித்தமும் திருமேனி முற்றும் வெண்ணீறணிந்து கல்லாடை பூண்டு சைவக் கோலத்திலிருப்பார். சிவசமய விளக்க மாக, சைவ சூத்திரம் 7, சைவப்பதிகம் 100 (1000 கவி), தில்லைத் திருவாயிரத்திலுள்ள 1000 கவி, சதகப் பதிகம் 1000, பதிகச் சதகம் 1000, பதிகவருடம் என்ற நூலில் 60 பதிகம் (600 கவி), பதிகமணி மாலையில் கவி 300, சிவனேகப் பாதம்-யமகம்-திரிபு-சிலேடையினில் அந்தாதிகள், பொதுப்பதிகம் 60 ஆகியவற்றைச் சுவாமிகள் பாடியுள்ளார்.

சுவாமிகள் சக்தி வழிபாட்டைப் போற்றக் கூடியவர்கள். ஒருசமயம் மலையிலிருந்து கீழே உருண்டபொழுது சக்தி வள்ளி நாயகி சுவாமிகளுக்கு திருநீறு பூசிவிட்டாள். இவரது

தோற்றத்துக்கே காந்திமதியம்மையின் திருவருள் தான் காரணம் என்பர். வள்ளிநாயகியைப் பெற்ற தாயாகப் பாராட்டினார். ஒரு சமயம் பகைவன் ஒருவன் பகைமை எண்ணத்தில் இவரைக் கொல்லும் நோக்குடன் உமையை மந்திரமாக ஏவினான். ஆனால் தாய் இவர் கண்முன் தோன்றி, "அவன் அனுப்பினான் வந்தேன்", "நீ ஒரு பாட்டுப்பாடு", "கேட்டுச் செல்கிறேன்", என்றார். சக்தியின் மீது சாக்தேய சூத்திரம் 7, ஏழாயிரப் பிரபந்தத்துப் பதிகம் 100 (1000 கவி), சக்தி கவசம் 100 கவி, சக்தி விசயம், பிள்ளைத் தமிழ் நடை கவி 144, பூமிதேவி, கங்கை, கலைமகள், திருமகள் மீது பதிகம், அந்தாதிகள், மீனாட்சியம்மைப் பதிகம், வள்ளியம்மைப் பிள்ளைத்தமிழ், குஞ்சரிமாலை, தேவி எழுகூற்றிருக்கை ஆகிய பாடல்களைப் பாடியருளினார்.

சுவாமிகள் திருமால் அம்சம் என அவரது சீடர்கள் கூறுவர். இவரது அவதார நட்சத்திரம் அஸ்தம், முடிவு திருவோணம். இது திருமால் அம்சம் ஆகும். சுவாமிகள் உடல் முற்றும் திருநீறு பூசி, வலது தோளில் தென்கலையும், இடது தோளில் வடகலையும் ஆகிய திருமண்காப்பும், நெற்றியில் பழைய முறை யான கோபியும், துளசி மாலை அணிந்திருந்தார். உருத்திராக்க மாலையும் இவரது கழுத்தை அலங்கரித்தது. இதனால் சைவ, வைணவ சமரச நோக்கம் விளங்கும். வைணவர்கள் ஒரு திரு நாமக் குறியை மட்டுமே அணிவார்கள். ஆனால் சுவாமிகள் தென்கலை, வடகலை ஆகிய இரண்டு கலைத் திருநாமங்கில் சேர அணிந்து, புரட்சி செய்து, மதநல்லிணக்கத்தை வெளிக் காட்டினார். திருமாலைப் பற்றி சமய சூத்திரம், திருவரங்கத் திருவாயிரம் கவி 1000, ஏழாயிரப் பிரபந்த நூலில் திருமால் பாடல் 1000, திருமால் அந்தாதி கவி 100, அரியேக பாதத்தந்தாதி, எழுகூற்றிருக்கை, அனந்த சயனத்துடன் யமக அந்தாதி, தனி பதிகங்கள் முதலியவற்றைப் பாடியருளினார்.

சுவாமிகள் கணபதி மீது பற்றுடையவர், தமது ஐந்தாறு வயதிலேயே கணபதி பூசையை ஏற்றார். இவரிடம் பகைமை கொண்ட ஒருவன் உச்சாடன முறையில் கணபதியை ஏவினான். ஆனால் யானையாக வந்த கணபதி துதிக்கையால் இவரை ஆசிர்வாதம் செய்ததாக வரலாறு உண்டு. தான் எழுதும் பனையோலை யேட்டில், பாடலின் தொடக்கம், இறுதி இவற்றில்

பிள்ளையார் சுழி அமைப்பது சுவாமிகளின் வழக்கமாகும். கணபதியைப் பற்றி சமய சூத்திரம் 7, கணபதி மாலை கவி 100, எழுகூற்றிருக்கை 1, ஏழாயிரப் பிரபந்தத்தில் கணபதி பதிகம் 100, (கவி 1000), ஐந்துபதிகம் தொகுப்பு கவி 50, தனிப்பதிகம் 5 கவி 50, பிரணவ விநாயகர் பதிகம், ஆவண வீதி விநாயகர், மும்மணிக்கோவை கவி 30 முதலிய பாடல்களை சுவாமிகள் பாடியருளினார்.

சுவாமிகள் முருகனை வழிபடு கடவுளாக ஏற்றுக் கொண்டவர். முருகன் சிவபிரானுக்கு உபதேசித்த ஞானாசிரியன். ஞானபண்டிதன் என்பதும் அவனது ஒரு பெயர். முருகன் மீது கௌமார சாத்திரங்களாக கௌமார முறை, கௌமார லகரி, கௌமார தீபம், நானிரைச்சதகம், தியானாநுபூதி, சதகவுந்தி, பதிகவுந்தி, ஞானவந்தாரி, பிராணவாநுபூதி, சமய சூத்திரம், திருப்பொதுச்சூத்திரம், ஏழாயிரப் பிரபந்தத்தில் கௌமாரபதிகம் 100, (கவி 1000), திருப்புகழ் வகுப்பு வண்ணங்கள், யமகம், திரிபு, ஏகபாதம், இதழகல், கலம்பகம், மயிலலங்காரம், வேலலங்காரம், ஆறெழுத்தலங்காரம், முருகானந்தலகரி, பழனித் திருவாயிரம் கவி 1000, போன்ற பாடல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன.

சுவாமிகள் ஆறு சமயங்களின் கடவுள்களை வழிபடும் பொழுது தனித்தனி பரத்துவம் (தலைமை) கூறி உபாசிக்கும் முறையையும், அதற்குரிய மந்திர வகைகளையும் கூறியுள்ளார். ஆதலால் மனிதர்கள் தங்களுக்குள் தன்னுடைய தெய்வமே உயர்ந்தது, மற்றவை தாழ்ந்தது என்ற உணர்வும் வெறியும் கொள்ளக்கூடாது. இதனையே ஒரு தனிக்கவியில்,

"எத்தலமும் எத்தேவும் ஏகமெனத் தேர்ந்த பின்னும்
இத்தலமேல் அத்தலமேல் என்றிடேன்"

என்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.

சுவாமிகள் சமயங்கடந்த சமயாதீத நிலையையும் குறிப்பிடு இன்றார். தெய்வமில்லையென்பவனும் கூட ஏற்றுக்கொள்ளக் கூடிய தெய்வம், பெரிய தெய்வம் குரு ஒன்றே என்பார் தண்டபாணி சுவாமிகள், "குருவருள் விட்டு உலகில் ஒரு சமய மில்லை" என்று கௌமார முறை கூறும். சுவாமிகள் சமயாதீதச் சூத்திரம் 7, ஏழாயிரப் பிரபந்தத்தில் சமயாதீதப் பதிகம் 100 (கவி 1000), பொதுப்பதிகம் 17, திருப்புகழ் 100, சண்டத

சிலேடைப் பதிகம் 7, சமரச முன்னிலை கவி 102, நிரோட்ட அந்தாதி கவி 100, சமரசப்பதிகம் 16-க்கு (கவி 108), திருவருள் நாட்டம் கவி 1000, சிவகுருநாத வெண்பா கவி 100, தெய்வத் திருவாயிரம் கவி 1000, மெய்விரோதய சதகம் 100 கவி, வண்ணக் கவி பெரிது-1 போன்ற பல பாடல்களைப் பாடியுள்ளார்கள்.

சுவாமிகள் எந்த மதத்தின் மீதும் காழ்ப்புணர்ச்சியின்றி, அனைத்தையும் போற்றி, பாமாலை புனைந்துள்ளார்கள். மதவாதமற்ற ஒரு சமயக் கொள்கையை அருளியுள்ளார்கள். இதனை,

''தன்கடவு ளன்றிமற்றுஓர் சமயத்தே வுண்டென்னும்
வன்குணத்தோன் வாய்பகர்பொய் வழக்கிடை யான்
மயக்கெய்தேன்
என்கடவுளே நினைவார்க் கெத்தேவும் ஆமென்ன
நன்குணவார்க் கெந்நாளும் நானடிமை யாவேனே.''

என வரும் பாடல் மூலம் தெளிவு படுத்துகின்றார். ஆதிசங்கரர் போன்று தண்டபாணி சுவாமிகளும் ஆறு சமயங்களைப் போற்றி சமரசங் கண்டு மகிழ்கின்றார். எனவே மதநல்லிணக்கத்திற்குப் பாடுபட்டு, அவ்வழியில் வாழ்ந்து காட்டிய பெருமகனார் தண்டபாணி சுவாமிகள் ஆவார். அவரது கருத்துக்கள், சமயப் பூசல்கள், சாதிக்கலவரங்கள் நிறைந்துள்ள இன்றைய கால கட்டத்திற்கு ஏற்புடைய கருத்தாகும். சுவாமிகளின் கருத்தைப் புரிந்து கொண்டவர்கள் உறுதியாக சமரச ஞானம் பெறுவர் என்பது திண்ணம். அவர் கூறும் சமயப் பொதுமையைப் போற்றி, மனிதகுலம் சாதி, சமய பூசல்களின்றி வாழ்வாங்கு வாழ வேண்டும்.

# சுவாமிகளின் சீர்திருத்தச் சிந்தனைகள்

மு. கண்ணன்

தமிழ் மொழியின் இலக்கிய வளத்திற்குத் துணை நின்றவர்கள் ஏராளமானவர்கள் என்றாலும் அவ்வனைவருமே நம் உள்ளங் களில் இடம் பெற்றிலர். மேலை நாட்டவர்கள் தங்களின் மதத்தைப் பரப்ப வேண்டும் என்பதற்காகவே தமிழகம் வந்தாலும் மதத்தைப் பரப்பியதோடு தங்களால் இயன்ற இலக்கியப் பணிகளைத் தமிழ்மொழிக்கு ஆற்றியே சென்றனர். ஆனால் தமிழ்நாட்டிலே பிறந்து தன் வாழ்நாள் முழுவதையும் இலக்கியப் பணிக்காகவே அர்ப்பணித்தவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். தன்னுடைய எட்டாவது வயதிலேயே சந்தப்பாடல்களால் எழுத்துப் பணியைத் தொடங்கியவர். தன் வாழ்நாளில் 135-க்கும் மேற்பட்ட நூல்களைத் தமிழன்னைக்குத் தந்துள்ளார். 19ஆம் நூற்றாண்டில் சமூக மரபுகள், மூடப்பழக்க வழக்கங்கள், ஆணாதிக்கப்போக்கு போன்றவைகள் எழுதாச் சட்டங்களாகச் சமூகத்தால் கடைப் பிடிக்கப்பட்டு செயற்பாடுகளாக விளங்கிய காலத்தில் தண்டபாணி சுவாமிகள் சமுதாய மறுமலர்ச்சிக் கருத்துக்களைப் புரட்சிகரமாக எடுத்துச் சொன்னார். கவிஞர் சுரதா

> "சாதனை நாயகர் சரித்திர நாயகர்
> தண்டமிழ் நாயகரே" என்று குறிப்பிடுவது

(தேன்மழை,ப.207) இங்கு நோக்கத்தக்க ஒன்றாகிறது. சமயத்தின் பால் ஈடுபாடு இருந்தாலும் தமிழ்மொழியின் மீதும் தீராக்காதல் கொண்டு திகழ்ந்துள்ளார். இவருடைய படைப்புகள் சந்தங்களை ஆடையாக்கிச் சீர்திருத்தக் கருத்துக்களை மூச்சாகக் கொண்டு விளங்குகின்றன. இவருடைய சீர்திருத்தக் கருத்துக்கள் அனைத்தையும் ஆய்வு செய்ய வேண்டும் என்ற அவா இருந்தாலும் கட்டுரையின் பக்க வரையறை இடம் தராததால் நான்கு கருத்துக்கள் மட்டுமே இங்கு ஆய்வு செய்யப்படுகின்றன.

**தண்டபாணி சுவாமிகளின் படைப்பிலக்கியம்**

தண்டபாணி சுவாமிகள் பிறப்பால் ஏழையாக இருந்தாலும் அறிவால், அறக்கருத்துக்களால், சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனைகளால் செல்வந்தராகவே விளங்குகிறார். 1878ஆம்ஆண்டில் வெளிவந்த "கந்த கோட்டம் முருகக்கடவுள் பிள்ளைத்தமிழ்" என்ற நூல் தொடங்கி 1988 ஆம் ஆண்டில் வெளிவந்த "வருக்கக்குறள் மூலமும் உரையும்" என்ற நூல் முடிய மொத்தம் 135 நூற்கள் இன்று நமக்குக் கிடைத்துள்ளன. அனலிலும், புனலிலும் அழிந்த நூற்கள் போக எஞ்சியவையே இந்நூற்களாகும் இவருடைய படைப்பாற்றலாலும், கருத்துச்செறிவாலும் முருகதாசஅடிகளார் திருப்புகழ் அடிகளார், ஓயாமாரி என்ற சிறப்புப் பெயர்களையும் பெற்றுத் திகழ்ந்துள்ளார்.

தண்டபாணி சுவாமிகள் எழுத்தால் எல்லாத் துறைகளையும் தொட்டுச் சென்றாலும் மிகுதியாக முருகனைப்பற்றிய செய்தியே மேலோங்கிக் காணப்படுகின்றன. காரணம் முருகனே உலகிலுள்ள அனைத்திற்கும்ஆதாரம் என்பதுடன் முருகனை வழிபட்டால் பிற அனைத்துத் தெய்வங்களையும் வணங்கியதற்குச் சமம் என்ற உணர்வையே தம்முடைய படைப்பிலக்கியங்களில் இழையோடச் செய்துள்ளார். இறை நம்பிக்கையை எடுத்துச் சொல்ல வந்த தண்டபாணி சுவாமிகள் தாம் வாழ்ந்து வந்த சமுதாயத்தில் நடைபெற்ற தீமைகளைச் சாடவும் தவறவில்லை. அறியாமையைக் கடிந்து பேசுவதுடன் உயிர்ப்பலி மறுத்தல், கலப்புமணத்தை ஆதரித்தல், விதவைத் திருமணத்தை வரவேற்றல் கள்ளுண்ணாமையை வலியுறுத்தல் ஆகிய செய்திகளே இங்கு எடுத்தியம்பப்படுகின்றன.

**உயிர்ப்பலி மறுத்தல்**

அச்சத்தின் அடிப்படையில் தோன்றிய வழிபாட்டில் உயிர்ப்பலி என்பது இன்றியமையாத இடத்தைப் பிடித்தது எனலாம். இச்செயற்பாடு தமிழர்களிடம் தொன்றுதொட்டு நடந்து வந்துள்ளது என்பதனை,

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து" (திருமுருகா.218)

"மறிக்குர வறுத்துத் தினைப்பிரப்பிரீஇ" (குறுந். பா. 263)

"உருவச் செந்தனை குருதியொடு தூஉய்" (அகம். பா. 22)

''மலைவான் கொள்கென உயிர்பலி தூஉய்'' (புறம். பா. 143)

''கொழப்பா எறிந்து குருதி தூஉய்'' (அகம். பா. 309)

என்ற சங்க இலக்கியச் சான்றுகளால் அறிந்து கொள்ள முடிகிறது.

உயிர்ப்பலியைச் சமுதாயச் சீர்திருத்தவாதிகள் எதிர்த்துப் பேசினாலும் சமயச் சான்றோர்கள் எதிர்த்ததாகச் செய்திகள் கிடைக்கப்பெறவில்லை எனலாம். காரணம் சமயச்சான்றோர்கள் மண்ணிலிருந்து விண்ணைப் பார்த்தவர்கள். ஆனால் தண்டபாணி சுவாமிகள் ஆன்மீகத்தை ஏற்றுக் கொண்ட போதிலும் மண்ணிலிருந்து மண்ணையே நோக்கியவர் எனலாம். காரணம் மண்ணில் இறைவன் பெயரால், மூடப்பழக்கவழக்கத்தால் அறியாமையால் நடந்து கொண்டிருந்த உயிர்ப்பலி என்னும் தீய செயலைச் சுட்டிக் காட்டியதுடன் அதனை எந்தப் பொருளில் யார் செய்தாலும் தவறு என்று கடிந்து சாடினார். இதனை,

''வேதஞ் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம் என்று

(சத்திய சூத்திரம். 81)

குறிப்பிடுகிறார். இறைவனால் படைக்கப்பட்ட உயிர்கள் அனைத்தும் இவ்வுலகில் வாழப் பிறந்தவைகளேயன்றி கொல்லப் படுவதற்காகப் படைக்கப்பட்டவைகள் அல்ல. அவ்வுயிரைக் கொன்று ஊன் ஊண்பதோ, இறைவனுக்குப் படைப்பதோ மூடத் தனமான செயல் என உணர்த்திக் காட்டுகிறார். இதனை,

''ஒருயிரின் தேகத்துறு நோயொழிய மற்றோர்
சிருயிரைக் கொல்வார் சிலமாந்தர் – பாருலகில்
இத்தனைநாள் தாம்வாழ்வ தென்றுமறி யார்தெண்ணிற்
சுத்தமுழு மூடத் தொழில்'' என்று கூறுவது தண்டபாணி சுவாமிகள் உயிர்களிடத்தில் கொண்ட அன்பையே காட்டுகிறது எனலாம். தன்னுடைய நோய்குணமாக வேண்டும் என்பதற்காகப் பிற உயிரைக் கொல்வது எவ்வகையில் நியாயம் என்று வினா எழுப்புகிறார். ஒவ்வொரு உயிரும் உலகில் இவ்வளவு காலம் வாழவேண்டும் என்ற நியதியில் படைக்கப்பட்டவை. அதனை இயற்கை நெறிமுறைக்கு மாறாகக் கொல்வது தவறானது என்பதுடன் அறிவுகெட்ட செயல் என்று மிகுந்த கோபத்துடன் கூறுகிறார். ஆனால் சங்க இலக்கியங்களில் உயிர்களைக் கொன்று

அதன்இரத்ததைதயோ அல்லது மாமிசத்தையோ இறைவனுக்குப் படைப்பதை வீரமாகவும் பெருமையாகவும் கருதியுள்ளனர் என்பதனை,

"குருதியோடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇச் (திருமுருகா. 233-234)

"பச்சூன் பெய்த பைந்தினை வல்சி
பொலம்புனை கலத்தில் தருகுவெள் மாதோ" (ஐங்-391)

"செஞ் சோற்றுப் பலிமாந்திய
கருங் காக்கை" (பொருநர் 183-184)

என்ற சான்றுகளால் அறிய முடிகிறது.

மேலும் மதத்தின் பெயரால் நிகழும் உயிர்ப்பலியைத் தண்டபாணி சுவாமிகள் வன்மையாகக் கண்டிக்கிறார். குறிப்பாக கீழ்ப்படிதல், சோதித்தறிதல், திருவிளையாடல் என்ற நிலைகளில் இறைவனே பக்தனிடம் நேரடியாகவோ அல்லது கனவிலோ தோன்றி உன் மகனை எனக்குப் பலிகொடு அல்லது உன் மகனைக் கொன்று அவன் மாமிசத்தைச் சமைத்து விருந்து வழங்கு என்று கேட்டதாகவோ கிறித்தவம் இசுலாம், இந்துமதம் ஆகிய மூன்றிலுமே கதைகள் உள்ளன. இச்செயலை நியாயப்படுத்தி இறைவன் தன் பக்தனின் பக்தியைச் சோதித்ததாகவும், தன் பக்தனின் பக்தியை உலகறியச் செய்ததாகவும், இறைவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிதல் என்றும் கூறப் படுகிறது. இச்செயலை இறைவனே வந்து செய்யச் சொன்னாலும் அது தவறு என்று துணிவுடன் எடுத்தியம்புகிறார் தண்டபாணி சுவாமிகள்.

சிறுத்தொண்டர் புராணத்திலே சிவபெருமான் பிள்ளைக்கறி கேட்ட செய்தியைக் கடுமையாகச் சாடுகிறார். இறைவன் கொல்லாமையைப் போதிக்க வேண்டும். அதை விடுத்து சிவபெருமானே உயிர்ப்பலி செய்யத் தூண்டினால் அதை எப்படி ஏற்றுக் கொள்ளமுடியும் என்று வினவுகிறார். காப்பதுதான் இறைவனின் கடமை. அதை விடுத்து பிள்ளைக்கறி கேட்டது மன்னிக்க முடியாத ஒன்று. அப்படிப்பட்ட இறைவனை வணங்க வேண்டுமா? என்று கேள்விக்கணை தொடுக்கிறார். இதனை,

''சிறுத்தொண்டன் வீட்டில்வரும் ஈசனையும்
தானா இகழத் தலைப்பட்டார்''

என்ற வரிகளால் அறிய முடிகிறது. (அருளாட்சி. பா. 21) வேலியே பயிரை மேய்ந்தால் எப்படிப் பொறுக்க முடியும் என்றும் வேண்டுகோள் விடுக்கிறார்.

உயிர்ப்பலி செய்பவர் யாராக இருந்தாலும் அவர்களை மன்னிக்கவே முடியாது என்கிறார். நல்ல பூசையாக இருந்தால் பேயையும்கூட தெய்வமாக ஏற்றுக் கொள்ளலாம். அதே வேளையில் உயிர்ப்பலி கொடுத்துத்தான் பூசை செய்ய வேண்டும் என்ற நிலையில் தெய்வம் இருக்குமாயின் அத்தெய்வத்தைப் பேய் என்று ஒதுக்கி வைக்க வேண்டும் என்கிறார். இதனை,

''சுத்த பூசை தோய்தரு மாயிற்
பேயும் தெய்வமாம் யினப்பலி யேற்கிற்
தெய்வமும் பேயாம்'' என்று (சத்திய சூத்திரம் நூ. 81)

குறிப்பிடுவதின் மூலம் கொல்லாமையின்மேல் கொண்டுள்ள அவர் தம் ஈடுபாட்டைக் காணமுடிகிறது.

கொலை பாதகச் செயலை எவர் செய்தாலும் அது கண்டிக்கத்தக்கது என்பது தண்டபாணி சுவாமிகளின் உன்னத மான கருத்தாகத் தெரிகிறது. இராமாயணத் தலைவன் இராமன் பிறர் சொல்லுக்கு அஞ்சித் தன் மனையாளைக் காட்டிற்கு அனுப்பிவைத்தது மட்டுமின்றி வனத்திடைத் தவம் புரிந்தவனைக் கொன்றதும் இழிவான செயல் என்பதனை,

''வண்ணான்சொற் கஞ்சி மனையை வனத்தினிடை
எண்ணாமல் விட்ட இராமன்தான் – விண்ணாடர்
போற்றத் தவசு புரிந்தானைக் கொன்றவிதம்
ஏற்றமெனச் சொல்லறியேம் யாம்''

என்று (அருளாட்சி பா. 50) குறிப்பிடுவதிலிருந்து அவருடைய சமதர்மச் சிந்தனையைக் காணமுடிகிறது. செய்வது இறைவன் என்ற போதிலும் தவறு என்று தெரியவந்தால் துணிந்து தவறுதான் என்று குறிப்பிடும் தண்டபாணி சுவாமிகளின் நெஞ்சத்துணிவைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

**கலப்பு மணம்**

பாரதியும் பாரதிதாசனும் இருபதாம் நூற்றாண்டுச் சீர்திருத்தச் சிந்தனையாளர்கள். பெண்களுக்கு கல்வி வேண்டும்,

என்பதுடன் காதலையும் வரவேற்றனர். ஆனால் இவர்களுக் கெல்லாம் முன்னோடியாக 19ஆம் நூற்றாண்டிலேயே புரட்சிக் கருத்துக்களை வெளியிட்டவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளாவார். இதனை த. கோவேந்தன் அவர்கள் தம்முடைய முன்னுரையில் "பாரதி, பாரதிதாசன் ஆகிய இருவருக்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் செக்கர் ஒளிக்காலத்தில் சிறந்தெழுந்த இராமலிங்க வள்ளலாரும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் வழிகாட்டிகள் ஆவர்" என்று (மூவாயிரம் முருகன்) குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும்.

கலப்பு மணம் தான் சாதித்தீயை அணைப்பதற்கான நீர் என்பது தண்டபாணி சுவாமிகளின் அசைக்க முடியாத நம்பிக்கையாகத் திகழ்கிறது. இதனை,

"தவமும் சமயமும் சாதியும் பொருளும்
அங்ககன் தொடுங்கணைக் காற்றா தலமரும்
மயலாற் கழிவது மாநிலத் தியல்பே" என்று

(அறுவகை இலக்கணம், நூ. 45) குறிப்பிடுகிறார். அத்தை மகள் மாமன் மகள் என்ற உறவுமுறை மாறி, திருமணமானது சாதி, சமயம், பொருளாதாரம், போன்றவைகளுக்குக்கெல்லாம் அப்பாற்பட்டு கலப்பு மணமாக அமைந்தால் நாட்டில் சாதிய நிலைப்பாடு மறையும் என்றும் இது தான் உண்மையான இல்லற இன்பத்தைக் கொடுக்கும் என்றும் வலியுறுத்துகிறார்.

**விதவைத் திருமணம்**

மனிதன் இல்லறத்தில் இணைந்து அறம் செய்து வீடுபேறு அடைய வேண்டும் என்பது வாழ்க்கை நெறியாகும். ஆனால் இவ்வில்வாழ்க்கையில் இணையும் கணவன் மனைவி இருவருள்ளும் முதன்மையானவர் யார் என்ற வினாவிற்கு விடையாகச் சங்க காலம் தொட்டு இருபதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் "ஆண் தான் என்று போதிக்கப்பட்டு வருகிறது. காரணம் ஆணாதிக்கச் சமுதாயம் அன்று தொட்டு இன்றுவரை பெண்ணை அடிமைப்படுத்தி ஆள்வதுடன் ஆணை உயர்த்திப் போற்றும் நோக்கில் "சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை" என்ற வழக்காற்று மொழிகளையும் உலா வரச்செய்து பெண்ணை மதிப்பில்லா நிலைக்குத் தள்ளிவிட்டது என்றால் மிகையாகாது. இது ஆண்களின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் வெளிப்படத்

தொடங்கியது எனலாம். சான்றாக கணவன், மனைவி இருவருள்ளும் கணவன் இறந்துவிட்டால் அப்பெண் விதவைக் கோலம் தாங்கி, சமுதாயத்தின் மதிப்பிழந்து, இருட்டறையில் வாழ்க்கை நடத்த வேண்டியது கட்டாயமாக்கப்பட்டது. விதவைப் பெண் பிறர் கண்ணில் படாமலும், உப்பில்லா உணவையே உண்ண வேண்டும். வண்ண ஆடைகளை அணியக் கூடாது, தலையணை வைத்துப் படுக்கக்கூடாது என்பன போன்ற தடைகளைக் கடமையாக்கித் தனிமைப்படுத்தியது.

வயது முதிர்ந்த காலத்தில் விதவைக்கோலம் தாங்குவதே இயலாத காரியமாக இருக்கும்போது இளம்வயதுப் பெண் மணமாலை வாடும்முன் மணாளனை இழந்த நிலையில் அவள் மறுமணம் செய்வதில் தவறில்லை என்பதே தண்டபாணி சுவாமிகளின் கருத்தாகும். 19 ஆம் நூற்றாண்டில்,

"நூலிழந்தும் கேளிச்சை நூறாதாள் மற்றுமொரு
தாலிகட்டிக் கொள்ளத் தகும்"

என்று குறிப்பிடுவது (வருக்கக்குறள் பா. 121) இங்கு புரட்சியிலும் புரட்சி என்றே கூறத் தோன்றுகிறது. திருமணம் முடிந்த நிலையில் எந்த ஒரு சுகத்தையும் அனுபவிக்காமல் கணவனை இழந்த இளம்பெண் மறுமணம் செய்து கொள்வது நியாயமானது என்று குறிப்பிடுவது எத்தனைத் தடைகளை மீறிய விடை என்பது வரலாற்றை நன்கு தெரிந்தவர்கள் உணர்வர். தண்டபாணி சுவாமிகளைப் பின்பற்றித்தான் பிற்காலத்தில் பாரதிதாசன்,

"வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால் பின்மணத்தல் தீதோ
பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு பார்த்த துண்டோ"

என்று (பாரதிதாசன் கவிதைகள் ப. 178) கூறியிருப்பது இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

### கள்ளுண்ணாமை

தமிழன் காதலையும் வீரத்தையும் தன்னுடைய இரண்டு கண்களாகப் பாவித்தான். வீரத்தின்பால் தோன்றும் காதலே உயர்வானதாகக் கருதப்பட்டது. பண்டைய தமிழர்களின் காதல் வாழ்க்கையை அகநானூற்றிலும் போர் முறையைப்

புறநானூற்றிலும் படிந்துத் தெரிந்து கொள்ள முடிகிறது. போருக்குச் செல்லும் வீரன் கள்ளுண்டு சென்றதையும் போரில் வெற்றி பெற்ற பின்னர் தங்களுடைய மகிழ்ச்சியைக் கொண் டாடும் வகையில் கள்ளுண்ட செய்தியையும் புறநானூற்றில் காண முடிகிறது. அக்காலச் சமுதாயம் கள்ளுண்ணுதலைத் தவறாக எண்ணவில்லை. ஒழுக்கம் மேலானது என்ற உணர்வு தலைப்பட வில்லை. அதனால் தான் பிற்காலத்தில் பதினெண்கீழ்க்கணக்கு நூற்கள் தோன்றி அறத்தைப் போதித்ததுடன் நல்லொழுக்கத் தையும் வலியுறுத்தின. திருக்குறள், நாலடியார் போன்ற நூற்கள் மனிதனைச் சிந்திக்கத் தூண்டும் ஆழமான கருத்துக் களை எளிதாகச் சுட்டிக் காட்டியது. அவ்வகையைப் பின் பற்றியே தண்டபாணி சுவாமிகள்,

"கள்ளுக் குடித்தூண் தின்போர்
பிறர்தம் மனைதோட் கலப்போர்
எள்ளுப் படநூ லிழந்த
மடவார் கல்விக் கிசைந்தோர்"

என்று (குருபர தத்துவம் ப. 258) குறிப்பிடுகிறார். எல்லாத் தீமைகளையும் மனிதன் விட்டொழிய வேண்டும் என்பதே தண்டபாணி சுவாமிகளின் தலையாய விருப்பமாகத் தெரிய வருகிறது எனலாம்.

மனிதன் மனிதனாக வாழவேண்டும். எப்படியும் வாழலாம் என்ற நிலையை மாற்றி ஒழுக்க நெறிகளைத் தாங்கிய வாழ்க் கையையே மேற்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறார். இறைவன் உயிர்களை வாழப்படைத்தானே தவிர அவற்றைக் கொன்று படைப்பதற்கும், உண்பதற்கும் அல்ல என்பதைத் தெளிவுபடுத்துகிறார். மேலும் தான் வாழ்ந்த காலத்தில் நடந்த தீமைகளை, கொடுமைகளை எதிர்த்துக் குரல் கொடுத்ததுடன் மனிதன் இறை நம்பிக்கையுடன் வாழவேண்டும் என்பதையே தம் படைப்புக்களால் அறியத் தருகிறார்.

# அரசாட்சி நூலில் சமூகநீதி மற்றும் மனிதநேயம்

## எஸ். கதிர்வேலு

உலகம் தோன்றிய காலமும் வேதமும் மிகத் தொன்மை யானவை. வேதம் எல்லாவற்றிற்கும் முதன்மையானதாகும். வியாச முனிவர் ஒன்றாக இருந்த வேதத்தை ரிக் (தோத்திரம்), யசுர் (யாகம்), சாமம் (இசை அல்லது பண்), அதர்வணம் (மாந்திரிகம்) என்று நான்கு வகைப்படுத்தினார் என்பர். இவர் பதினெட்டுப் புராணங்களையும் கூறினார். வேதம் தெய்வ நிலைகளைக் கூறும்போது அறுவகைச் சமயங்களைப் பற்றிச் சிறப்பாக விவரிக்கின்றது (1). இதில் இறுதியாகக் கூறப்படுவது கௌமார சமயம்.

கௌமார சமயத்தினர் முருகப் பெருமானே முழு முதற் பொருள் என்பர். கௌமாரம் என்றால் குமார வழிபாடு உடையவர் என்று பொருள். கௌமாரர் நெறி முதலில் சிவகுமாரனான முருகனை வழிபட்டோர் கௌமாரர் என்று புராண வரலாற்றில் தொடங்கி, படிப்படியாய் உயர்ந்து, அருவ பரம்பொருளினின்றும் தோன்றிய உருவமெல்லாம் குமரன் என்றாகியது. (2). அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழில் அறுசமய நீதி என்றும், அறுசமய சாத்திரப் பொருளோனே என்றும் கூறுகிறார். தமிழ்ப் பெரியார் வண்ணச்சரபம் அருள்திரு. தண்டபாணி சுவாமிகள் இந்த முறையில்தான் வழிபட்டும் தவம் இயற்றியும் சமயாதீத அநுபவமுற்றவர் (3). சுவாமிகள் ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட கவிகள் புனைந்துள்ளார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களுள் தலைசிறந்தவர் தண்டபாணி சுவாமிகள் ஆவார். இவர் தம் எட்டாவது வயதிலேயே தமிழ்ப்பாக்களை இயற்றும் ஆற்றல் கைவரப்பெற்றவர். இந்த ஆய்வுக் கட்டுரையில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய 'அரசாட்சி' என்ற நூலை

மட்டும் (50 கவிகள் கொண்டது) ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு உள்ளேன்.

**நூல் ஆய்வுரை**

அரசாட்சி எனும் நூல் காப்பு வெண்பா உள்ளிட்ட ஐம்பத்தொரு கவிகளைக் கொண்டது. திருவிளையாடற்புராணம் (7, 42) இராமாயணம் (8, 26, 43, 46, 48), கந்தபுராணம் (24), விஷ்ணு புராணம் (27), மகாபாரதம் (28, 43;) திருக்குறள் மற்றும் தமிழ் மூதாட்டியின் (35) செய்திகளை பன்னிரண்டு பாடல்களில் கையாண்டுள்ளார். சுவாமியவர்கள் ஆட்சியாரை அல்லது ஆள்பவரை, அரசன், வேந்தர், ஏகசக்ராதிபதி, சிற்றரசன், பேரரசன் போன்ற சொற்களால் குறிப்பிடுகிறார்.

இந்நூலில் ஆட்சியாளர்கள் எவ்விதம் நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் பெற்றிருக்க வேண்டிய குணநலன்களைப் பற்றிய கனவு பொதிந்த சிந்தனை ஓட்டத்தை பெற்றிருந்தார் கௌமார மடாலயத்தின் ஆதிகுரு முதல்வர் மகான் தமிழ்ப் பெரியார் தண்டபாணி சுவாமிகள் அவர்கள் அருளிய அரசாட்சி எனும் நூலில் மனிதநேயம் மற்றும் சமூகநீதி கருத்துக்கான வித்துக்களை அருளியுள்ளார் என்பதை முத்தாய்ப்பாகக் கூறலாம்.

**ஆட்சியாளர்கள் பற்றி வண்ணச்சரபம்**

தண்டபாணி சுவாமிகள் ஒரு தீர்க்க தரிசியைப் போன்று ஆட்சியாளர்கள் பற்றிய சிந்தனையைக் கொண்டுள்ளார். இதனைப் பின்வருமாறு காணலாம்:

1. ஆட்சியாளரும் கடவுளும், 2. ஆட்சியாளருக்கு அறிவுரை 3. ஆட்சியாளரும் குடிமக்களும், 4. ஆட்சியாளரும் உளவுத் துறையும், 5. திறமையும் ஆட்சியாளரும், 6. ஆட்சியாளரின் பொறுப்புக்கள் (அட்டவணை 1). சுவாமிகளின் எண்ண ஓட்டம் தற்காலத்துக்கும் பொருந்தும் வகையில் அமைந்துள்ளது

**ஆட்சியாளரும் கடவுளும்**

ஆட்சியாளர்கள் கடவுளுக்குப் பயந்து நடந்து கொள்ள வேண்டும் (பா. 1) கடவுள் பக்தியினால் கிடைக்கும், தெய்வக்

கருணையையும் பெற்று இருத்தல் வேண்டும் (23) பெரியோர் களையும் கடவுளையும் நிந்தனை செய்தல் ஆகாது (25) நீதி வழங்குவதில் உள்ள விவரம் 'சரியானதுதான்' என்று கூறி நிதி வழங்குவதில் கடவுளின் துணையை நாடல் நலம் (7) ஆட்சி யாளர்கள் பழைய வரலாற்றை மதித்துத் தெய்வ பக்தியுடன் வாழ வேண்டும் (27).

### ஆட்சியாளருக்கு அறிவுரை

ஆட்சியாளர்கள் பெரியோர்க்கும், சாதகர்களுக்கும், பயந்து ஆட்சி செய்தல் வேண்டும் (3); வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து நீதியாக நடக்கவேண்டும் (பா. 4); நீதி வழுவாமல் வழக்கை முடித்து வைக்கவேண்டும் (5) குறிப்பாகத் தலையீட்டைத் தவிர்த்தல் நலம்; தக்க பெரியோரின் (Advisor) அறிவுரையைக் கேட்டு நடத்தல் வேண்டும் (2); பெரியோரைத் (Advisor) துணைகொள்ளாத ஆட்சியாளர் ஆட்சியைக் கண்டு நிலமகள் பயமடைவாள் (8) ஆகவே பெரியோரைத் துணை கொள்க என்று சுவாமிகள் அறிவுறுத்துகிறார். மேலும் ஆட்சியாளர் ஆணவம் இன்றியும் நீதியுடனும் ஆட்சி புரிதல் வேண்டும் (24); அறிஞர் பெருமக்களையும் (Advisor) வீர மறவர்களையும் தம்முடன் வைத்துக் கொள்ளவேண்டும் (10); அறத்தைப் போற்றிப் பாதுகாவாதவர்கள் ஆட்சிப்பொறுப்பை இழப்பர் (11) ஆகவே அறம் போற்றுக இதனைப் பாடல் 29-ல் அறம் காப்பவர்களாக ஆட்சியாளர் திகழ வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்; ஆட்சியாளர் அனைத்துத் தரப்பு மக்களையும் ஒருமித்து நோக்கவேண்டும் (13); ஆட்சியாளர் யாகம் செய்தால் உயர் பலன் பெறலாம் என்று கூறும் நூல்களின் வழி செல்லல் ஆகாது (15); ஆட்சியாளர் பின்வரும் செயல்களைத் தவிர்த்தல் நலம் என்று சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்கள். வேறு நாட்டின் நிர்பந்தத்திற்குப் பணிந்து போதல். இச்சூழலில் உலகப் பெரும் வல்லரசான அமெரிக்கா பல்வேறு முகத்தான் பிற நாடுகளை நிர்பந்தத்திற்கு உள்ளாக்குகிறது, அதனது ஆட்சிக் காலத்தில் தனது நாட்டின் புகழைக் கொண்டு செலுத்தாமல் வாளா இருத்தல், மாதர் தொடர்பு (16). உலகின் பல நாட்டின் அதிபர்களும் அமைச்சர்களும் தங்கள் பதவியை விட்டு விரட்டப்பட்டுள்ளனர்; பேரரசர் கொடுங்கோலாட்சி செய்தான்

எனில் அந்த ஆட்சியாளர் ஆட்சி முடிந்து விடும் (22). எனவே ஆள்பவர்கள் செம்மையாக ஆளுதல் வேண்டும்.

### ஆட்சியாளரும் குடிமக்களும்

ஆட்சியாளர் குடிமக்களின் காட்சிக்கு எளியராய் இருத்தல் வேண்டும் (31). மக்களின் குறைகளை உடனுக்குடன் கவனித்துத் தீர்வு காணவேண்டும் (33). தன் குடிமக்களைத் தாய் போல் பாதுகாக்கும் ஆட்சியாளரைத் தரும தேவதை உடன் இருந்து பாதுகாவல் செய்யும் (40). காட்சிக்கு எளியராய் இல்லாமல் இருக்கும் ஆட்சியாளருக்கு 'இகழ்ச்சி தான் கிடைக்கும்' (32). குடிமக்களுக்கு நல்ல காவலனாக விளங்கவேண்டும் (35), குடிமக்களுக்குக் காவலனாக விளங்காத ஆட்சியாளர் ஆட்சி விரைந்து முடிவுக்குக் கொண்டு வரப்படும் (37). குடிமக்களில் அறிஞர் பெருமக்களுக்குச் சிறப்புச் செய்யும் ஆட்சியாளர் நிலைத்த புகழ் கொண்டு விளங்குவர் (38).

### ஆட்சியாளரும் உளவுத்துறையும்

ஆட்சியாளர் தலை சிறந்ததும், மற்றும் தனித்துச் செயல் படுவதுமான உளவுத்துறையைப் பெற்றிருத்தல் வேண்டும் (21). மேலும், குடிமக்களின் நாடித்துடிப்பை (பிரச்சனை) அறிந்து தீர்வு காண ஆட்சியாளரே உளவுத்துறையாகச் செயல்பட வேண்டும் (30). அரசன் மாறுவேடத்தில் நகர்சோதனை மேற்கொள்ள வேண்டும். இதில் உளவுத்துறையின் பங்கு மகத்தானது. ஆட்சியாளர் துரோகம் செய்யவிழையும் அதிகாரிகளை 'தளகர்த்தர் (படைத்தலைவர்) ஒற்றர் வாயிலாக அறிந்து அத்தகைய அதிகாரிகளை நீக்குதல் வேண்டும் (45) ஆனால், சுவாமிகள் தீய எண்ணம் உடைய தளகர்த்தரைக் கொல்லவேண்டும் என்று வேகம் காட்டுகின்றார்.

### திறமையும் ஆட்சியாளரும்

திறமையான ஆட்சியாளரை முழுநிலவுக்கும் திறமை அற்ற ஆட்சியாளரை விண்மீனுக்கும் ஒப்பு கூறுகிறார். மேலும், ஆட்சியாளர் எல்லா மதத்தினரையும் தனது இரு தோள்கள் போன்று கருதவேண்டும் (9); திறமையற்ற ஆட்சியாளர் ஆட்சியில் குடிமக்கள் பெரும் துன்பத்தை அடைவார்கள் (6); ஆட்சியாளர்கள் குற்றமற்ற கூர்மையான அறிவைப் பெற்று

இருத்தல் வேண்டும். காரணம், கட்சி மாறிகளை ஏற்காது தண்டனை விதிக்க வேண்டும் (47).

### ஆட்சியாளரின் பொறுப்புக்கள்

உலகில் உண்மை நிலைபெறுதலும், பருவமழை அளவாகப் பெய்தலும், பருவமழை பொய்த்ததும், தீய சக்திகள் ஓங்குதலும் ஆகிய இவை நான்கிற்கும் ஆட்சியாளரே பொறுப்பு எனச் சுவாமிகள் அருளியுள்ளார் (34) குடிமக்கள் செய்கின்ற தண்ணிய பாவங்களில் ஒரு சிறுபங்கு தனக்குச் சேரும் என்பதை ஆட்சியாளர்கள் உணர்ந்து இருத்தல் வேண்டும் (30); மேலும், 'வேதநீதி பொய்த்தல் குடிமக்களுக்குத் துன்பம் அதிகரிப்பு' ஆகியவற்றிற்கும் ஆட்சியாளரே பொறுப்பு என்று சுவாமிகள் சுட்டுகிறார் (36) ஆட்சியாளர்கள் தங்களின் போர்க்கடமை உள்ளிட்ட அனைத்துக் கடமைகளையும் சிறப்பாகச் செய்தல் வேண்டும் (17); ஆட்சியாளர் தங்கட்கு வழங்கப்படும் யோசனையின் நன்மை தீமையைச் சீர்தூக்கிப் பார்த்துச் செயல்படவேண்டும் (41, 42); மேலும், இது தொடர்பான வரலாற்று உண்மைகளையும் ஆட்சியாளர் அறிதல் வேண்டும் (43). பின்வரும் செயல்களை ஆட்சியாளர்கள் கண்காணிக்க வேண்டும்.

பணியாளர் கையூட்டு (லஞ்சம்) பெறுதல், பணியாளர் மக்களின் பிரச்சனைகளைக் கண்டுகொள்ளும் திறமை இல்லாமல் இருத்தல், குடிமக்கள் குறைகளைப் பணியாளர் கண்டும் காணாதது போன்று இருத்தல் (49); குற்றம் செய்பவரிடம் லஞ்சம் பெற்று அவர்களின் குற்றத்தை மூடி மறைத்தல். சொந்த உறவினர்களின் அன்மையைத் தவிர்த்தல் (50) ஆட்சியாளர்கள் பிறன் மனை விழையாத பெருந்தகையாய் வாழ வேண்டும் (26)

இது வரையில் ஆறு தலைப்புக்களின் கீழ் ஆட்சியாளர்கள் பற்றிய தண்டபாணி சுவாமிகளின் தீர்க்கமான பார்வையை ஆராய்ந்தோம்.

### வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பிற கருத்துக்கள்

தண்டபாணி சுவாமிகள் வாழ்ந்த காலகட்டத்திற்கு முன்பும் பின்பும் வாழ்ந்த அறிஞர்களின் கருத்துக்களை நுணுகி அறிந் திருந்தார். இதனைப் பின்வருமாறு காணலாம்.

1. சமுதாயச் சிந்தனைகள்
2. மனித நேயச் சிந்தனைகள்
3. சமூக நீதிச் சிந்தனைகள் (அட்டவணை 2)

**1. சுவாமிகளின் சமுதாயச் சிந்தனைகள்**

பார்ப்பனர்களை அரசன் சமமாக கருதக்கூடாது (12) என்கிறார். அவ்வாறு கருதுவது சமுதாய மாற்றத்திற்குத் தடைக்கல்; அரசன் 'காதலர் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவு பட்டதே இன்பம்' என்னும் கருத்தை உணர்ந்து செயல்படல் வேண்டும் (19) இதனைக் கூறுவதன் வாயிலாகச் சுவாமிகள் சமுதாயச் சிந்தனையாளராக வெளிப்படுகிறார்; "ஆகா எழுந்தது பார் யுகப்புரட்சி" என்றார் பாரதி. சுவாமிகள் தவறு செய்யும் அரசனைக் குடிமக்கள் பதவியிலிருந்து நீக்கிவிட்டு வேறு ஒரு ஆட்சியாளரைப் பதவியில் அமர்த்திவிடுவர் என்பதை ஆட்சி யாளர் உணர்ந்திருத்தல் நலம் விளைக்கும் (39) இவ்வாறாகச் சமகாலத்துப் புரட்சி கருத்துக்களை வெளியிட்டு உள்ளார்; குடிமக்களுக்குக் காவலனாக விளங்காத அரசனின் ஆட்சி விரைந்து முடிவுக்குக் கொண்டு வரப்படும். (37) இக்கருத்து புரட்சிகரக் கருத்தின் வெளிப்பாடாகத் தெரிகின்றது.

**2. மனித நேயச்சிந்தனை**

அரசன் தன்னோடு போரிட்டு இறந்து படாமல் சிறையில் அடைபடும் எதிரி அரசர்களின் மனதுக்கு இதம் தரும் 'அவர் களுடைய மனைவியரையும் புதல்வர்களையும், அவர்களோடு சேர்ந்து வாழச்செய்யும் கருணை உள்ளம் கொண்டிருத்தல் வேண்டும் (20); போரில் தன்னால் சிறைப்படுத்தப்பட்ட அல்லது இறந்துபோன மன்னர்களின் இல்லத்தரசிகள் தங்களின் உயிரை விட விரும்பாமல், உயிர்வாழ நினைத்தால், பத்தினிகளுக்குப் பணிவிடை செய்யும் தொழிலைக் கொடுத்துப் பாதுகாப்பது அரசர்களில் நல்லோர்கட்கு மகிழ்ச்சி தரும் செயலாகும். (18); மேலே சொல்லப்பட்ட மூன்று கருத்துக்களும் தண்டபாணி சுவாமிகளின் மனித நேயச் சிந்தனை ஓட்டத்தை உணர்த்து கின்றது.

**3. சமூக நீதிச் சிந்தனை**

சுவாமிகள் பின்வருமாறு சமூகநீதிச் சிந்தனையைக் கொண் டிருந்தார் என்பதைப் பின்வரும் விளக்கத்தின் மூலம் அறியலாம். "ஒரே குற்றத்தை மேற்குலத்தோனும், கீழ்க்குலத்தோனும் செய்தார்கள் எனில் – மேற்குலத்தானுக்குக் குறைவான தண்டனையும் கீழ்க்குலத்தானுக்கு அதிக தண்டனையும் விதிக்க

வேண்டும்'' என எழுதி வைத்துள்ள வஞ்சகச் சாத்திரங்களை ஆட்சியாளர்கள் பின்பற்றலாகாது என்று அருளியுள்ளார் (14) இக்கருத்து சமூக மாற்றத்திற்கான சுவாமிகளின் எண்ண ஓட்டத்தைக் கூறுகின்றது.

**முடிவுரை**

தற்காலத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக வெடித்து வரும் வன்முறை நல்லதை அழித்துவிடலாம். ஆனால், வன்முறை தானே அழியும். இந்த நூற்றாண்டின் அவசர யுக வாழ்க்கை முறையில் சுவாமிகளின் சிந்தனை ஓட்டம் பங்குபற்ற முடியுமா? என்றால் முடியும் என்று உறுதிபடக் கூறலாம்.

சங்கப்பாடல் நற்றிணை...275 கூறுவது போன்று மக்களிடத்தில் சகிப்புத்தன்மை வளர்ந்தால் ஆட்சியாளர்களின் வாழ்க்கை வரவு செலவுக் கணக்குகள் காலகழிவு சித்தாந்தங் களாகிவிடும். இறுதியாக இந்து மதம் ஆன்ம விடுதலை பெறுவதற்காக துறவு நிலை உயர்வாகப் பேசுவதால் ஆதிகாலம் முதல் இந்தியாவில் துறவிகள் இருந்து வந்து இருக்கின்றனர். அவர்களில் தண்டபாணி சுவாமிகள் உயர் தனி இடம் பெறுகின்றார்.

**அரசாட்சி**

**அட்டவணை 1 ஆட்சியாளர்கள் பற்றி வண்ணச்சரபம்**

1. ஆட்சியாளரும் கடவுளும் பாடல் – 1, 23, 25, 7, 27
2. ஆட்சியாளருக்கு அறிவுரை பாடல் – 3, 4, 5, 2, 8, 24, 10, 11, 29, 13, 15, 16, 22.
3. ஆட்சியாளரும் குடிமக்களும் பாடல் – 31, 33, 40, 32, 35, 37, 38.
4. ஆட்சியாளரும் உளவுத்துறையும் பாடல் – 21, 30, 45.
5. திறமையும் ஆட்சியாளரும் பாடல் – 9, 6, 47.
6. ஆட்சியாளரின் பொறுப்புக்கள் பாடல் – 30, 34, 36, 17, 41, 42, 43, 50, 26.

**அட்டவணை 2 வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பிற கருத்துக்கள்:**

1 சமுதாயச் சிந்தனைகள் பாடல் – 12, 19, 39, 37.
2. மனிதநேயச் சிந்தனைகள் பாடல் – 20, 18.
3. சமூக நீதிச் சிந்தனைகள் பாடல்– 14.

# பழனித் திருவாயிரம்

க. கதிரேசன்

ஏழாயிரம், ஆயிரங்கள் கொண்ட நூல்களும் புராணம், வரலாறு, இலக்கணம் தொடர்பான நூல்களும், பிரபந்தங்களும் தனித்தனியே அந்தாதி, கலம்பகம், மாலை, திருப்புகழ், யமகம், திரிபு, நாடகம், நீதி நூல்களும், கௌமார சமய நுட்பம் கூறு வனவுமாக வண்ணச்சரபரின் நூல்கள் கடல் போல் பல்கிப் பெருகி உள்ளன.

"எப்படிப் பாடினரோ" என்று திகைக்க வைக்கும் இந்நூற் பெருக்கில் ஒன்று பழனித் திருவாயிரம். அருட்சுரங்கமாக விளங்கும் இந்நூலுள் நாம் கண்ட சில செய்திகளை முன் வைப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

### பழனித் திருவாயிர நூல்கள்

இதில் 1. வெண்பா மாலை, 2. வெண்பா அந்தாதி, 3. அலங்காரம், 4. குருபர மாலை, 5. பதிற்றுப்பத்து அந்தாதி, 6. ஒருபா ஒருபஃது, 7. நவமணி மாலை, 8. சித்திமாலை, 9. நவரசம், 10. நடு ஒலியல்அந்தாதி, 11. வகுப்பு, 12. கலவி மகிழ்தல் வண்ணம், 13. பிள்ளைத் தமிழ், 14. கலம்பகம், 15. யமக அந்தாதி, 16. திரிபுமஞ்சரி என்று 16 பேறுகளைப் போல 16 அருள் நூல்கள் உள்ளன.

### நூற் கொள்கைகள்

#### குடி, புலால் உண்ணல்

கட்குடி, கொலை, பலி, அவிமூலம் புலால் உண்ணல் இரண்டும் இவர் அறவே வெறுப்பன. கௌமாரர்களின் தலைக் கொள்கையாம் இவை இந்நூலெங்கும் உரைடையும் பாவுமாக நெருங்கியுள்ளன.

கள்ளும் தசையும் கருதும் கடுங்குணத்தோர்

(வெண்பா மாலை – 75)

ஐயன், பிடாரிக்கு எனச்சொல்லி நிணம்உண்ணும் ஆபாசர்
(பதிற்றுப்பத்தந்தாதி – 90)

திசைதொறும் மதுவும் இறைச்சியும் கொடுசெய்
தீமகம் திருத்துமாண் பருள்வாய் (குருபரமாலை – 48)

கொல்வாரும் கொன்றதனைத் தின்பாரும் ஏனைக்
குணம்பொருந்த வெல்வான் முயலும் கவுமாரர்
(அலங்காரம் – 39)

முதலியன அப்பகுதிகள்.

### பிழை களைதல்

செய்தக்க வல்ல செய்தல் துர்ப்புத்தியாகும். செய்தக்க செய்தலே நற்புத்தி. முன்னதால் கருமக்கொத்தே விளையும்.

களையத் தக்கன விழைதுர்ப் புத்திசெய்
கருமக் கொத்தற – நீற்றேனோ
(நடுஒலியல் அந்தாதி – 27:1.:4)

கருமக் கொத்தினையும், அதற்குக் காரணமான துர்ப்புத்தியையும் அதன் விழைவையும் நீறாக்க வேண்டும் என்கிறார்.

### சமயப் பொறை

தன் சமயநெறியில் ஆழங்கால்பட்டு நிற்றலும், பிற சமய நெறி தூற்றாது நல்லன ஏற்றலும் சமயப் பொறையாகும். இன்றைய இன்றியமையாத் தேவை இது. கௌமார நெறியில் திளைக்கும் அடிகள்,

நூலின் ஆறும தங்களில் ஒன்றைஅ
வாவி யேனைய ஐந்தினை யும்பெரி திகழாதே
(நடுஒலியல் அந்தாதி – 29:1.:4)

என்பார்.

### அடிகள் விருப்பம்

விருப்பும் வெறுப்பும் உயிர்களின் பண்பு. இவை நல்லன வாயின் நலமும், அல்லனவாயின் அவமும் விளையும். அடிகளின் தூய உள்ளம் நல்ல விருப்பங்கள் அனைத்திற்கும் நிலைக்களனாய் விளங்கியது.

**சித்திகள் பெற விரும்புதல்**

சகல கலைகளும் அருள்வாயே, கழறிற்றறிவார் போல் எந்த உயிரும் கழறுவன முற்றும் தெரிதல், வாக்குச் சித்தி, இரசவாத சித்தி, கவன குளிகை வேண்டுதல், எந்த ரூபமும் கொள்ளும் வலி, இந்திரனே எதிர்ப்பினும் அடக்கும் வலி, சமரச விநோத சித்தி என்று அடிகள் வேண்டும் சித்திகள் பலப்பலவாக விரிந்து செல்லும். இவையெல்லாம் எதற்காக? யாருக்காக?

> உலகூடே பிறர்நோய்களும் களையும் விறல் ஈவாயே
> (சித்திமாலை)...

என்கிறார். பிள்ளைத்தமிழில்

> தெருமந்து நல்லோர் வருத்தமுயல் பாதகர் சிரம்படு
> களத்தில் உருள சிறுதேர் உருட்டி அருளே (சிறுதேர்-3)

என்று களைகட்டிப் பயிர் வளர்க்கவே வேண்டுகிறார்.

**அறிஞரை அகலாமை**

சிற்றினம் சேராமையும், பெரியாரைத் துணைக்கோடலுமே அடிகள் விருப்பம்.

> தயையும் பொறையும் தவமும்உளார் தம்மொடு
> இயையும் படியெனைக்கை ஏற்பாய்;
> (வெண்பா அந்தாதி - 93)

எனும் இவர் விருப்பத்துடன்,

> அடியேன் உன்
> அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்.
> (திருவா... கோயில்... – 1)

என்னும் மாணிக்கவாசகர் பாடல் ஒப்பு நோக்கத்தக்கது.

அடியாருடன் இயையும் வகை என்ன? விரலும் விரலும் பொருந்தினாற் போலவா? அரிசியும் பருப்பும் விரவினாற் போலவா? இல்லை இல்லை. பாலும் நீரும் கலந்தாற் போல என்பார்.

> நீரது பாலிற் கலந்தவா றெனநான்
> நின்னடி யாரொடு கூடி
> மாரதத் திரளில் ஒருவனும் ஆகி வயங்கும்
> நாள் வருத்தல் வல் லாயோ (குருபரமாலை - 7)

தம்மையும் தம் சேனைகளையும் காத்துக் கொண்டு பொருதும் தேர்வீரர்களாக அடியார்களை அடிகள் குறிக்கிறார். அடியார் களை வீரர்களாகவும், தன்னயப்பில்லா அவர் செயலை வீரமாகவும் போற்றும் மரபினை,

ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணியல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதும் குறைவிலர்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ.

(பெரியபுராணம் - 144)

என்னும் சேக்கிழார் வாக்கினால் அறியலாம்.

**தலந்தோறும் வணங்கல்**

தலந்தோறும் அடியார் கூட்டத்தோடு சென்று வணங்க விரும்பும் அடிகள்

உவகைமலிந்(து) உன்திருக்கூத்(து) ஓங்கு மலைதோறும்
தவரொடும்போய்ப் போற்றவரம் தாராய்;

(வெண்பா அந்தாதி - 97)

என்று வேண்டுவதுடன்

முத்தமிழால் போற்றி முகுளமலரா வருச்சித்(து)
அத்தமிரண் டும்குவிப்பேன் (வெண்பா அந்தாதி - 98)

என்று தான் வணங்கும் முறை கூறுகிறார்.

இவர்க்கு இவ்வகை விருப்பம் விளைந்ததேன்? முருகன் சித்தன், தமிழ்ப் புலவன், ஞானவடிவினன் ஆதலின் அவனிடம்.

சித்தாடும் ஆசையுற்(று) ஆசுமதுரமும் சித்திரமும்
வித்தார மும்பகர் பாவாண ரோடென்னை மேவ வைத்துச்
சுத்தாங்க ஞான அனுபூதி வெள்ளத்தில்
தோய்த்தருள்வாய் (அலங்காரம் - 82)

இம் மூன்றும் ஏன்? முறையே உலகவரைத் தன்பால் ஈர்க்கவும், ஆற்றுப்படுத்தவும் ஞானஅனுபூதியில் திளைக்கச் செய்யவுமே என்பதை உணரலாம்.

**முருகனை நனவுக்காட்சிதர வேண்டுதல்.**

பன்முறை கனவில் முருகனைக் காணும் பேறுபெற்ற அடிகள் நனவில் காண விரும்பி,

வெறிகமழ் கடப்ப மாலிகைப் புயத்தில்
மிளிர்தரு வேலொடென் விழிமுன்
பொறிமயில் பரிமேல் நனவில்வந் தருளில்
புகழ்க்கடல் வறக்குமோ (குருபரமாலை - 42)

என்று வேண்டுகிறார்.

**அடியாரைப் போற்றுதல்.**

அடியார்களைப் போற்றியதில் முன்னவர் சுந்தரர். அவரை அடியொற்றி

அகத்தியர் (சித்தி-10), நக்கீரர் (பதிற்று - 87), அருணகிரியார் (ஒருபா-9), திருஞானசம்பந்தர் (நவமணி-31), திருநாவுக்கரசர் (சித்தி-30) சுந்தரர் (அலங்-85), மாணிக்கவாசகர் (நடுஒலியல்-17: 3/4) சாக்கியர் (பதிற்று-94) கழறிற்றறிவார் (சித்தி-2) வெண்காடர் (சித்தி-4), முருகம்மையார் (கலவி மகிழ்தல் வண்ணம்-3/8) முதலிய அடியார் பலரைப் போற்றுகிறார்.

**தத்துவம்.**

**மயில்**

முருகன் ஊர்தியாகிய மயிலை ஓங்காரமாகக் கூறுவது மரபு

ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்(டு)அ(து)
ஆடுமயில் என்ப(து) ...... அறிவேனே
(அருண...திருப்...சேய்மலை)

அடிகள் கண்ணபிரானைக் குறிக்கும் போது

ஓங்காரப்புள் இறகணிந்தவன்...... (நவரசம்-9)

என்று குறிப்பார்.

**திருமுகங்கள்.**

திருமுருகாற்றுப்படையும், கந்தர் கலிவெண்பாவும் முருகனின் திருமுகங்களது செயல் கூற இவர் அவை, எவை என்று கூறுகிறார்.

நிலமுதலாம் பூதங்கள் நீடறிவில் கூடிக்
குலமுகங்கள் ஆம்பழனிக் கோமான்.
(வெண்பா அந்தாதி-57)

**திருமுகம் - குறியீடு**

திருமுகங்கள் ஆறும் சைவம், சாக்தேயம், காணாபத்யம், கௌமாரம், சௌரம், வைணவம் என்ற ஆறு சமயங்களின் குறியீடுகள் என்பதை

பொதுநிலை நின்று சமயம்ஓ ராறும்
பொருவில்நின் முகங்கள்என் றுணர்ந்தேன்.
(குருபரமாலை-50)

என்பார்.

**உறுப்புகள்.**

முருகப்பெருமானின் அவயவங்களைக் கூற வந்த அருட்டிரு, குமரகுருபர அடிகள்

அண்டம் உருவாகி அங்கம் சராசரமாய்
(கந்தர் கலிவெண்பா கண்ணி - 83)

என்பார். அடிகள் இதனை வழிமொழிந்து

பலபலபல் கோடிஅண்டம் உந்தன்
அவயவமெ னாஎழுந்து நின்ற.......மெய்ஞ்ஞானா
(நடுஒலியல் - 28.3.:4)

என்பார்.

**பன்னிரு திருக்கை**

திருமுருகாற்றுப்படையும், கந்தர் கலிவெண்பாவும் திருக் கைகளின் அருட்செயல் கூற அடிகளோ

மழுவினொடு மான்அ ணிந்த விர்ந்த
பதினொருவர் தாமும் ஒன்று திண்கை..... முந்நாலா
(நடுஒலியல் - 28:1)

என்பார்.

**திருக்கண்கள்**

முருகப்பெருமானின் திருக்கண்கள் பன்னிரண்டா? பதினெட்டா? புதுவை முருகன் பதிக அரங்கேற்றத்தில் விவாதம் எழுந்தது.

பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளைதோன்றும்
(அப்பரடிகள் திருமுறை - 6)

என்று கூறி மறுத்தனர் பிறர். முருகனுக்குக் கண் பன்னிரண்டு என்பது சார்பு (தடத்த) நிலை. அவன் கண் பதினெட்டென்பது உண்மை (சொரூப) நிலை என்று விவாதித்து வென்றார். அதனையொட்டி,

குவளை ஒண்மலர் வனந்தாமரை
மலரிடை இடைபெறும் சீர்கொடு
குளிர்அருள் எரிசினம் தோய்பதி னெண்கணாளா
(நடுஒலியல் 7:3.:4)

குளிர்தோய் குவளை ஒண்மலர் - இடது திருக்கண் 6
அருள்தோய் வனந்தாமரைமலர் - வலது திருக்கண் 6
இடைபெறும் சீர்கொடு ஏரிசினம் தோய்வன -
நுதல்திருக்கண் 6

என்று அழகுறக் கூறுவார்.

இரண்டு குணமுறு பதினெண்விழிகளும்
(கலவிமகிழ்தல் வண்ணம் 3:8)

என்பது அவர் வாக்கு.

முச்சத்திகள்

முச்சத்திகளும் ஒருசேரப் பெற்றவன் முருகன் என்பதை

கோவை வாய்க்கனிக் குஞ்சரப் பிடியும்வன்
குரவர் தங்குல மாதும்
தூவை வேலுமாம் சத்திகள் உடையவா
(பதிற்றுப்பத்தந்தாதி - 27)

என்று உணர்த்துவார்.

குடைக்கூத்து

கொடுகொட்டி ஆடுங்கால்...... பண்டரங்கம்
ஆடுங்கால்...... காபாலம் ஆடுங்கால்......
(கலித்தொகை கடவுள் வாழ்த்து)

என்று சிவபெருமானின் திருக்கூத்துகளை நெய்தல்கலி நல்லந்துவனார் கலித்தொகைப் பாயிரத்துள் குறிப்பார். முருகனுக்குரிய கூத்து குடைக்கூத்து என்பதை

உடையார் பலர்சூழ ஒண்பழனிக் குன்றில்
குடையாடும் பூந்தாட் குகா (வெண்பாமாலை - 55)

என்பார்,

**இருமை நலம் அருள்வான்**

முழுமுதலாம் சிவனை வழிபடுவதால்,

இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயற வில்லையே (சுந்தரர் திருப்புகலூர்)

என்பது 7ஆம் திருமுறை. முழுமுதலின் வேறல்லன் முருகன் ஆதலின்

என்றும் துணையாய் இகபரங்கள் தாங்குவதும்
(வெண்பாமாலை – 41)

என்பார்.

**அன்பா? அரக்கும் பலியுமா?**

வழிபாட்டில் தூய அன்பும் அதன் வெளிப்பாடான பூவும் நீருமே அகத்தியம் என்பது முன்னோர் நெறி.

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்.
(திருமந்திரம் – 1828)

என்பார் திருமூலர். ஆனால் காலக்கொடுமையால் கள்ளும் அரக்கும் பலியும் வழிபாட்டில் புகுந்ததை வெறுக்கும் அடிகள்

நாயும் நரியா தியபிறவும் நச்சி அருந்தத் தகும்ஊனும்
தோயும் கொடும்பூ சையின் விருப்பம் துகள்ஒன் றளவா
யினும் பொருந்தாத்
தூய கடவுள் இனம்முழுதும் (பிள்ளைத்... காப்பு – 8)

அது கொடும் பூசை, தூய கடவுளர்க்குப் பொருந்தாது என்று வெறுப்பார் – விதிப்பார்.

**தேவர்கள் நிலை**

புண்ணியப் பயனால் வானுலகம் பெற்றவரே வானவரனை வரும். அவர்கள் முத்திபெற மண்ணில் பிறக்கவேண்டும் என்பதை

புவனியில் போய்ப்பிற வாமையின் நாள் நாம்
போக்குகின் றோம்அவ மேயிந்தப் பூமி
சிவனுய்க் கொள்கின்ற வாறு
(திருவா... திருப்பள்ளி – 10)

என்று மாணிக்கவாசகர் குறிப்பார். இதனை அடிகள்

> வாசவன் முதலோ ராயிருந்(து) அப்பால்
> மனிதரா வருமவர் எவர்க்கும்
> பாசநோய் முழுதும் அறக்களைந் திடுசீர்
> பழனிமா மலைக்குரு பரனே (குருபரமாலை – 4)

என்று கூறுகிறார்.

**எப்பிறப்பாயினும் நன்று**

விடுபேறு பெற மண்ணிலே பிறந்த பிறவியே வாலிதாம் இன்பமாம்ஆதலின் புல்லாகிப் பூடாய்ப் புழுவாய்... அமையும் எப்பிறப்புமே வீட்டுக்கு வாயில் என்பர்.

> புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
> வழுவா திருக்க வரந்தர வேண்டும்
> (அப்பர். திரு. – 4 திருப்பாதிரி)

இதனையொட்டி

> எப்பிறப்பாயினும் நன்றேநின் ஆணைசற்(று) ஈந்தருவாய்
> (அலங்காரம் – 97)

என்று வேண்டுகிறார்.

**ஊழா? அருளா?**

ஊழ் வலிமையுடையதாய் முந்துற்றபோதிலும் அதனை உப்பக்கம் காணவியலும் என்பார் திருவள்ளுவர்.

> செய்வினை வந்தெம்மைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்
> (திருமுறை – 1. பொது திருநீலகண்டம்)

> நாளென்செயும் வினைதான் என்செயும் எமைநாடிவந்த
> கோளென்செயும்... (கந்தர் அலங்காரம் – 38)

என்பன அருளாளர் வாக்குகள். அடிகள் இதனை,

> ஊழ்வினைக் கட்டே பெரிதாம்எனச் சொல்தோய்பவர்
> ஊதை யிற்பட்டு ஆய்சருகு ஒத்திட இகழ்வாய்
> (நடுஒலியல் அந்தாதி 15:1)

என்று வழிமொழிவார்.

**இருபற்று**

வினைக்குக் காரணம் இருவகைப்பற்று. இவற்றுள் அகப்பற்றே புறப்பற்றுக்குக் காரணமாவது.

நானே கருதின்அவர் நாடார்சும் மாயிருந்தால்
தானே அணைவர்அவர் தன்மைஎன்னோ பைங்கிளியே
(தாயுமா... பைங்கிளி... - 33)

நான் எனும் அகப்பற்றின் கொடுமை பற்றி அடிகள்

நான்நான் எனப்பிதற்றி நாசமடைந் தார்பலரென்று
ஆனாத நூல்கள் அறைந்தனவால்
(வெண்பா அந்தாதி - 92)

என்பார்.

**திருவாறெழுத்து**

இருவகைப்பற்றும் எளிதில் அறுக்க முருகனின் ஆறெழுத்து மந்திரம் உதவும் இதனை ஓங்காரம் முன்னர்ப் பெய்து ஓத வேண்டும் என்று அடிகள் நெறிப்படுத்துகிறார்.

சரவணப வாஎன்னுரை பிரணவம தோடுபகர் தவம்
(பதாரவிந்த வகுப்பு 1.:2)

**முத்திப்பேறு**

பேராஇயற்கையாம் முத்தி பெற்றார் மற்றீண்டுவாரார். மீட்கவியலா – மீண்டுவாரா நிலையை

இரும்புண் நீரினும் மீட்டற் கரிது (புறம் - 21:8)

என்று உவமை காட்டி விளக்கும். இவ்வுவமையையே அடிகள்

விரும்பும் மனமயல்போய் மேதகுநின் தாளில்
இரும்புண்ட நீராவ தென்றோ (வெண்பா அந்தாதி - 40)

(பழுக்கக் காய்ந்த இரும்பு உண்ட நீர் மீளாது) என்பார்.

**உக்கிரகுமார பாண்டியன் திருஞானசம்பந்தர் – முருகனா?**

முருகனே உக்கிரகுமார பாண்டியனாகவும் திருஞான சம்பந்தராகவும் பிறந்ததாகச் சிலர் கூறுவர். அடிகள் இதனை ஏலார். இருவரும் முருகனின் கலை பெற்றவரே என்பர்.

பரவையின் அறல்வற்ற அயில்விடும் இறைமுற்சொல்
பலபல ரதுசித்தம் ஆர்கலைக் கூறனோ
(வகுப்பு. ஞானசித்தேசன் 2:1)

வேம்என்பில் பெண்அழைத்தோன் மிலைந்தகவல
உடையோனே (நவமணிமாலை - 31)

**சர்வகுருதேசிகன்**

குளிரோட்டும்தீ தன்னை நண்ணினார்க்கு நலனும் நண்ணார்க்கு நலமின்மையும் தருவது போன்றதே திருவருளும் என்பதை

நலமிலன் நண்ணார்க்கு நண்ணினார்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன். (திருவருட்பயன் – 9)

என்பதால் அறியலாம். அடிகள் இதனை

அவர்அவர்தம்
பான்மை அளவில் அருள்புரியும் சருவ குருதே சிகமுருகா
(பிள்ளைத் . தால் ... 3)

என்பர்.

**சச்சிதானந்தன்**

குருமார்களுள் ஞான குருவே முதன்மையர். இவர் சிவமேயாவார்.

குருவே சிவமெனக் கூறினன் நந்தி (திருமந்திரம் – 1581)

என்பது திருமுறை. முருகன் சிவகுரு, சச்சிதானந்தன் அவனன்றித் தெய்வம் வேறில்லை.

சத்தாகிச் சித்துடன் ஆனந்தமாகித் தழைத்தஉன்னை
மெய்த்தா ரகப்பொருள் சற்குருவா நண்ணல்
வீண்படுமோ (அலங்காரம் – 68)

என்பார்.

**சமுதாயம்.**

**வேண்டுதல் யார்பொருட்டு?**

பராசக்திபிடம் பாரதியார் காணிநிலம் வேண்டியது எதற்காக?

பாட்டுத் திறத்தாலே இவ்வையம் பாலித்திட வேண்டும்
(காணிநிலம்)

என்று தன் உள்ளம் திறந்து காட்டுவார். இவரின் இத்தகு சமுதாய நோக்கிற்கு முன்னோடிகள் மிகப் பலர். அவர்களுள் அடிகளும் ஒருவர் எனலாம்.

இத்தரை மகள்கோ எனக்குத றிடல்ஓர்ந்து
இரங்கும்மெய் உணர்விலார்தாமும்
பித்தனென் றிகழப் பரதவித் திடும்நான்
பெருங்களிப் புறச்செய்நாள் உளதோ
(குருபரமாலை - 13)

என்பது அடிகள் திருவுள்ளம்.

**அச்சம் தீது**

எவ்வகையிலும் அச்சம் தீது நம்மைக் கீழ்ப்படுத்துவது அது என்பது உளவியல். அச்சம் தீர்ந்தால் விளைவது இன்பம் என்பதை,

அச்சத் தைச்சுட்(டு) அதிகஉ லாசம்வி ளைத்து
(நடுஒலியல் அந்தாதி - 22:1.:2)

என்பதால் உணரலாம்.

**எளியது எது?**

சித்தி முத்தி பெறக் காடு சென்று கடுந்தவம் செய்யவா வேண்டும்? பெருமானை வழிபடு. தாமே வாய்க்கும், எளியவழி இது என்பதனை

பரிந்து தவம்புரிதல் பாரமே ஆகும்
சுரிந்தகுழல் குறத்தி தொண்டன் - விரிந்தபுகழ்
பாடிப் பழனி வெற்பில் பக்தி சித்தி முத்தி இன்பம்
தேடிக்கொண் டாடல்இலே சே
(வெண்பா அந்தாதி - 52)

பரச லேஅரு மைத்தவ மாம்எனும்
உணர்வு றாத சிலர்க்கும்...
(நடுஒலியல் அந்தாதி - 6:1)

என்று கூறுவார்.

**கேத மதங்கள்**

மதமான பேய் பிடியா திருக்க வேண்டும் என்று வேண்டிய வடலூர் வள்ளலாரின் நண்பராகிய அடிகள்,

சீரியும் வெங்குண மாசுண மும்புரை
கேத மதங்கள் (நடுஒலியல் அந்தாதி – 14:1)

என்று கேத மதங்களைச் சாடுகிறார்.

**சமயப் பொறை**

மதச்சண்டை ஒழிய அடிகள் காட்டும் வழி, தம் சமயத்தில் ஊன்றி நிற்றலும், எம்மதமும் சம்மதம் என்பதும் ஆகும்.

எம்மதத் தோர்கள் எனினும் அவர்சொல்
சம்மதம் என்னும் தகைமையும் எய்தி
ஆறெழுத் துரைக்கும் அடியனேன் (ஒருபாஒருபஃது – 6)

என்று நடந்து காட்டியவர் அடிகள்.

**எல்லாரையும் வாழ்வி**

எந்தப் பிணியும்எனைச் சார்ந்தவர்க்கும் அஞ்ச
வந்(து)அற் புதக்கருணை வாழ்வளிப்பாய்
(வெண்பா மாலை – 70)

என்று வேண்டுகிற இவரது மலர்ந்த உள்ளம், மேலும் மலர்ந்து விரிந்து

என்றற்(கு) அருட்பெருஞ்சீர் ஈயா விடினும் நல்கற்(கு)
உன்றற் கினியான் ஒருவனின்றோ...
(வெண்பா மாலை – 17)

என்று மணம் பரப்பும் கருணையை நுகரலாம்.

**ஆங்கில ஆட்சி – வெறுப்பு**

அன்று ஆங்கில ஆட்சியை ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோணத்தில் வெறுத்து விரட்ட முற்பட்டனர். அடிகளின் பார்வை இது.

ஈனர் குடைத்தீங்கு ஒழித்து எமைஆள்
(பிள்ளைத். தால் – 2)

பசுவும் மற்றைய பல்லுயிர்க் கூட்டமும்
கயங்கு றக்கொடுங் கோல்ஒச்சும் பாதர்
கார்நி றக்குடை யேனும் கழித்திடாய்...
(நவமணிமாலை – 60)

(குடைத்தீங்கு, கார்நிறைக்குடை – கொடுங்கோல் குறிப்பன)

கௌமார சமயச் சிகரமாய், சமரசத் தென்றலாய், சமுதாயக் காவலராய், இலக்கணப் பேரறிஞராய், இலக்கிய இமயமாய், ஞானத்தின் திருவுருவாய் விளங்கும் அடிகள் அருளியுள்ள இப்பழனித் திருவாயிரம் தொடச்சுரக்கும் தாய்மார்பாய், தொட்டனைத்தூறும் மணற்கேணியாய், நவில் தொறும் நயம் பயப்பதாய் அமைந்துள்ளமை நாடிப் படித்து இன்புறத்தக்கது.

# சுவாமிகளின் தமிழுணர்வும் படைப்பாற்றல் பாங்கும்

தி. கமலி கஜேந்திரன்

முருகப்பெருமான் முன்பு நீ பாடத் தொடங்கிய புலவர் புராணத்தை இப்போது நீ பாடுவாயாக என்று உத்தரவு கொடுத்ததன் பின் பாடியதாகக் கூறப்படுகிறது.

> "ஆதார முன்னோர் நவின்மொழியுங்
> கலைவாணி நடம்புரியு நாவும்
> வேற்பிடித்து மலைதொறும் போய்த்
> திருவருட்பேராடல் விளைக்கு முழுதுணர்
> புலவன் விரைமலர்த்தாள்களுமே"

என்று புலவர் புராணப் பாயிரத்தில் கூறும் தண்டபாணி சுவாமிகள் முருகனால் தடுத்தாளப்பட்டமையால், 'முருகதாச சுவாமிகள்' எனப்பட்டார்.

முழுநீறும், உருத்திராக்கமும், லங்கோடு கௌபீனமும், தண்டமும் பூண்டிருந்தமையால், தண்டபாணி சுவாமிகள் எனவும் வழங்கப் பெற்றார்.

தமிழ்ப் புலவர்களது நாடு, நகரம், குலம், பிதாமகர்களது பெயர், மனைவி, மக்கள், வாழ்க்கை வரலாறு போன்ற தகவலை உலகினர்க்கு விளங்கக் கூற வேண்டும் என்ற நோக்குடன் இவர் இயற்றிய நூல், புலவர் புராணம் ஆகும்.

அகத்தியர், சடகோபர், திருவாதவூரர், விட்டணுசித்தர், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், திருமங்கையாழ்வார், சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான், ஔவையார், காரைக்காலம்மையார், சிவவாக்கியர், திருமூலர், இடைக்காடர், திருவள்ளுவர், பட்டினத்துப்பிள்ளை, சேந்த நாயனார், பத்திரகிரியார், பாணாழ்வார், கல்லாடர், நக்கீரர், பொய்யா மொழிப் புலவர், அருணகிரிநாதர், வில்லிபுத்தூரார்,

தொண்டரடிப் பொடியாழ்வார், மூன்றாழ்வார், இரட்டைப் புலவர், குகநமசிவாயர், தத்துவராயர், திருச்சிற்றம்பல நாடிகள், சிவப்பிரகாச சுவாமி, சோலையசுவாமி, தாயுமானவர், குமர குருபர சுவாமி, ஆறுமுக சுவாமி, முத்துதாண்டவ சுவாமி, நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், மெய்கண்ட தேசிகர், உமாபதி சிவாசாரியார், கச்சியப்பர், இரட்டைக் குரவர், பகழிக் கூத்தர், இருவயிணவர், வரதுங்க பாண்டியர், கவிராச பண்டிதர், அபிராம பட்டர், புகழேந்திப் புலவர், ஒட்டக் கூத்தர், கம்பர், காளமேகம், வசைகவியாண்டான், வீரபாண்டியர், கந்தசாமி, ஆறுமுகப் புலவர், ஸ்ரீனிவாசர், நமசிவாயர், முதுகுளத்தூரார், நெற்குன்றவாணர், தலைமலைக் கண்ட தேவர், பிள்ளைப் பெருமாள் அய்யங்கார், முத்துவயிர புலவர், பாணப் புலவர், சத்திமுற்றப் புலவர், பல தெய்வப் புலவர், அறிவுத் தன்மைப் புலவர், கண்கண்ட புலவர் என்று 72 புலவர்களது வரலாறு புலவர் புராணத்தில் இடம் பெற்றுள்ளது.

கவிஞர்கள் தெய்வ அருள் பெற்றவர்கள் என்ற கருத்தை உணர்த்தும் வகையில் கதைகள் வழங்குவதியல்பு. முருகன் அருள் பரிபூரணமாகக் கைவரப் பெற்றவர் தண்டபாணி சுவாமிகள் என்பது அவரது வரலாறால் அறியக் கிடக்கிறது.

புலவர் புராணத்தின் செயல்கள், வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள் குறித்த தரவுகள் அறிவியல் முறைப்படி சேகரிக்கப் பட்டு ஆய்ந்தளிக்கப்படவில்லை என்று ஒப்பிலக்கியம் நூலில் சச்சிதானந்தம் கூறுவார், தமிழ்ப் புலவர்தம் வரலாறுகளைத் திரட்டி நிலைபெறும் வகையில் நூலாக்கம் செய்தளித்தமையே தமிழறிஞர்பால் சுவாமிகள் கொண்ட அக்கறையின் வெளிப் பாடாய் இலங்குகிறதெனலாம். அலங்காரம் என்பது ஒரு பொருளைப்பற்றி விவரித்து பாடுவதாம். தமிழலங்காரம் தமிழின் சிறப்பை விதந்தோதுவதாய் தண்டபாணி சுவாமிகளால் எழுதப் பட்டதாம்.

இராயவேலூரில், வடமொழியே உயர்ந்ததென்று வாதிட்ட இருவரை மறுத்து தமிழின் உயர்வை வெளிப்படுத்த இவர் பாடியது தமிழலங்காரம் ஆகும்.

> "தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில்
> வெகுளியற் றிருப்போன் வெறும் புலவோனே"

என்கிறார்.

'வாத முடிந்த திலையிரவு மாறிப்பகலும் வந்ததுவே' என்று சொற்போர் தொடர்ந்த நிலை உரைக்கிறார்.

'வண்ணத்தியல்பு' என்ற சந்த இலக்கண நூலில், சந்தப் பாடலில் வடமொழிச்சொற்கள் சேரலாகாது. சேரின் சந்தவியல்பு கெடும், அப்படி சேருமானால், சந்தம் தமிழ் இவற்றாலாய சுவை குறையும் என்கின்றார்.

தமிழ்த் துதிப்பதிகத்தில் தமிழில் உள்ள 18 மெய்கள் 18 மொழிகளைக் கொண்டது எனவும், 12 உயிர்கள் 12 சமயங்கட்கும் ஆய்தத்தின் மூன்று சுழிகள் சந்திர, சூரிய அக்கினிக்கு ஒப்பதெனவும், கலைமகள், திருமகள், உமை என்ற முச்சக்திகள் போல மூன்று நிறம் உடையது எனவும், ஆறுசமயக் கடவுளரது சம்பந்தமுடையது எனவும் கூறுவார்.

"வடமொழி தாயெனில் வண்தமிழ் தந்தையாம்
அகல் நிலத் துள்ள கலையாவும், தென்சொல் லதுவும்,
எதிர் திகழ்வட
சொல்லும் கலந்தே விளங்கும் தெரிந்திடினே"

என்று எம்மொழியாக இருப்பினும் அதில் தென்சொல்லும் சேர்ந்திருப்பதைச் சுட்டுகின்றார்.

"கும்பன் குதத்தில் தமிழ்தோன்றிற் றென்னக் குளறுகின்ற
வம்பரும் கொன்றன்றி வாழா மிலேச்சர்தம் வாய்உமிழும்
தம்பல மேலுக்கும் ஆரிய மென்னும் சழக்கர்களும்
வெம்பகை யால் இகழ் சண்டாளர் தாமென்கை
மெய்ம்மொழியே"

என்று தமிழ் உயரியது என்று சண்டையிடுதலின் பொருந்தாத் தன்மையைப் புலப்படுத்துகின்றார்.

"... ... ... ... வண்டமிழ்ச்சொல்
பாமாலை யால்மிகப் பாடிய மங்கை
... ... ... ... அந்த ஔவை
உளப்பது மத்தும் தமிழ்தோய்வ தோரும் உணர்ச்சி நன்றே!
... ... ... ... பாமாலை ஒன்றையும் மேதகுசீர்த்
திருப்பரங் குன்றில் ஒருதமிழ்ப் பாவலன் செய்தனனே"

என்று ஆண்டாள் பாடிய செந்தமிழ், ஔவை பாடிய ஒண்தமிழ், ரேன் ஆற்றுப்படை கிளத்திய தமிழ் என்று – தமிழின் அலங்கார

வியல்பினை சுவையாக அடுக்கிச் செல்கிறார். முன்னோர் மொழி பொன்னேபோல் போற்றும் அவர் பண்பு புலப்படுகின்றது.

சித்திரகவிகள் என்ற இவரது நூல் செய்யுள் வகைகளில் இவரது பயிற்சியையும், கைவந்த ஞானத்தையும் வெளிப் படுத்துவது. சித்திரகவிகள் தமிழ்மொழிக்கே உரித்தான செய்யுள் வகையாகும். கூற்றிருக்கை, மாலைமாற்று, சதுரங்க பந்தம் முதலானவற்றை இவர் அருளிச் செய்துள்ளார்.

யானைமுகன் எழுகூற்றிருக்கை, முருகவேள் எழுகூற்றிருக்கை- 1. முருகவேள் எழுகூற்றிருக்கை – 2. என்பதன் நகல் இத்துடன் தரப்பட்டுள்ளது.

ஆசு கவி, மதுர கவி, வித்தார கவி, சித்திர கவி என்பன நால்வகைக் கவிகள். பாடு என்ற உடனே பாடுவது ஆசுகவியாகும். எதுகை மோனைகளுக்காக ஏங்கித் தவம் கிடக்காமல் இலக்கணப் படி சொற்கள் அமைய வேண்டுமே என்று தலையைப் பிய்த்துக் கொள்ளாமல் எழுதுவது ஆசுகவியாகும். தேனினும் இனிய பாடல் களை எழுதுவது மதுரகவி – இனிய கவியாகும். ஒரு பொருளை விரித்தும், தொகுத்தும் விளக்கமாகவும், அடுக்காகவும், வருணித்துப் பாடுவது வித்தார கவியாகும். சித்திர கவி என்றால் சித்திரங்கள் போட்டு, அந்தச் சித்திரங்கள் நடுவே கட்டங்கள் போட்டு, அந்தக் கட்டங்களுக்கு ஒவ்வோர் எழுத்தாக எண்ணிப் போட்டு, நிரப்பிக் கவி பாடுவது சித்திரக் கவியாகும்.

சக்கரம் போட்டு அதற்குள்ளே எழுத்துக்களை அடுக்குவதும் தாமரைப் பூப்போல் படம்போட்டு இதழ்களுக்குள் எழுத்துக் களை அடுக்கி வைத்து, 'கமலபந்தம்' என்றும், 'மாலைமாற்று' என்றும், ஒற்றெழுத்து வராமலே பாடுவது என்றும், குற்றெழுத்து வராமலே பாடுவது என்றும், நெட்டெழுத்து வராமலே பாடுவது என்றும், உதடு ஒட்டாமலே பாடுவது என்றும், பாடுபொருள் எளிதில் புரியாத வண்ணம் பாடுவது கரந்துறை என்றும் சித்திரகவிக்கு இலக்கணமே வகுக்கப் பட்டுள்ளது.

எழுத்துக்களே தூரிகையாய், எண்ணங்களே வண்ணங்களாய், கற்பனையே கவின்திரையாய், கருத்துக்களே சித்திரமாய் வரையும் திறன் பெற்றவன் கவிஞன். தான் சொல்ல வந்த

பொருளைக் கேட்பவர் மனத்தில் பதிய வைப்ப சொல்ல வந்த பொருளைக் கேட்பவர் மனத்தில் பதிய வைப்பதற்கு அணியலங் காரங்களைக் கையாள்வது வழக்கமாகும்,

* உச்சியில் 1 அமைத்துப் பின் 1, 2, 1 என முறையே வருமாறு எண் அமைய பாடியுள்ள புதிய முறை எழுகூற்றிருக் கையில் சுவாமிகள் செய்த புதுமையாகும். இவருடையது தவிர ஏனைய யாவையும் 1, 2, 1 என வருவனவாகவே உள்ளன.

* சூரியன், சிவன், அம்பிகை, திருமால், விநாயகர், முருகன் என்ற அறுசமயக் கடவுளர் மீதும் தனித்தனியே கூற்றிருக்கைப் பாடல் இயற்றியுள்ளார்.

ஏனையோர் எழுகூற்றிருக்கை மட்டும் பாடியிருக்க, இவர் எண், ஒன்பது, தசாங்கக் கூற்றிருக்கை என்றருளியிருப்பது குறிக்கத் தக்கதாகும்.

'க' என்ற வர்க்கத்தில் அமைந்துள்ள, 'ஒரு வருக்கப்பா' பாடியுள்ளார்.

முதுநெறிப் பனுவல் பலః
புதுநெறிப் பனுவல் பல:

என்று இவர் கூறுவது போல், 'குவிபா மோழை வெண்பா' எனும் புதுநெறிப் பனுவல்களைப் பாடியிருப்பதுடன் மாலைமாற்று, சதுரங்க பந்தம், தனிக்குறில் வெண்பா, தனிநெடில் வெண்பா முதலியன பாடியுள்ளார்.

8. எழுகூற்றிருக்கைகள் : யானைமுகனுக்கு ஒன்று: திருமாலுக்கு ஒன்று : முருகனுக்கு இரண்டு : பரா சக்திக்கு ஒன்று : திருவரங்கத்திற்கு ஒன்று : சூரியனுக்கு ஒன்று :

1. எண் கூற்றிருக்கை : சண்முகனுக்கு ஒன்று

2. ஒன்பது கூற்றிருக்கை : சிவபெருமானுக்கு ஒன்று:திருமாலுக்கு ஒன்று :

1. தசாங்கக் கூற்றிருக்கை : பொதுவாகக் கடவுளர்க்கு ஒன்று என்று பன்னிரு கூற்றிருக்கைப் பாடல்கள் தவிர வேறு பலவும் இவரால் உருவாக்கப்பட்டுள்ளன.

* திருவரங்கநாதன். முருகன் பேரில் எழுதப்பட்ட மாலை மாற்றுச் சித்திர கவிகள்.
* தகர வர்க்கத்தில் அமைந்த ஒருவருக்கப்பா,
* திருவரங்கத்தின் மேலான மும்மண்டில வெண்பா,
* திருவரங்கத்தின் மேலான சதுரங்க பந்தம்,
* எண்வகைச் சந்தமும் இயந்த பாடல்

"தத்தவும் தாத்தவும் தந்தவும் தாந்தவும், தனவும் தானவும் தன்னவும் தய்யவும், தத்தாவன் பதி னீடலும் அடங்கும், எண்வகைச் சந்தமென்பர் பெரியோர்".

என்று தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார்.

* கலிவிருத்தத்தில் அமைந்த ஏகபாதம்,
* தனிக்குறில் வெண்பா, தனிநெடில் வெண்பா.
* மற்றும் நிரனிரைப் பொருள்கோள் வெண்பா ஆகியவற்றை ஆக்கியுள்ளார்.

திருவள்ளுவருக்கு பெருமை சேர்ப்பது 'திருக்குறள்' 'எல்லாப் பொருளும் இதன்பாலுள' என்ற போற்றுக்குரியது திருக்குறள். குறள் வடிவத்தைக் கைக்கொண்டு வண்ணச்சரபம், ஸ்ரீதண்டபாணி சுவாமிகள் எழுதியது 'வருக்கக் குறள்' என்பதாகும்.

தமிழ்மொழியின் கண் உள்ள உயிர், மெய், உயிர்மெய் ஆகிய எழுத்துக்களை முதலில் கொண்டு அமையும் வண்ணம் குறட்பாவினால் ஆக்கப்பட்டது இந்நூல் ஆகும்.

மொழி முதலில் வராத ங, ஞ, ட, ண, ய, ர, ல, ழ, ன வற்றின் வருக்கம் போன்றுள்ள எழுத்துக்களை உயிர் எழுத்துக் களை ஏற்றபடி ஆசிரியர் அமைத்துள்ளார்.

மெய்யெழுத்துக்கள் எப்படியும் மொழி முதலில் வராது. சான்று.

'க்' எனும் எழுத்து.

இதை 'இக்' என்றே சொல்ல வேண்டும். இது 'இக்கன்ன சொல்வார்' என்று ஆசிரியரால் எடுத்தாளப்பட்டிருப்பது தனிச்சிறப்பாகும்.

''இக்கன்ன சொல்லார் இனத்தும் புருடரினும் மிக்கவர் உண்டென்றுரைக்கை மெய்''

என்று, 'இக்கன்ன சொல்லார் - கரும்பு போன்ற சொல்லினராய பெண்கள் இனத்தில், ஆடவரினும் சிறந்தவர் உண்டென்பது உண்மை' என்று குறிப்பிடுகிறார்.

ஆண் - பெண் எனும் . இருபாலருக்கும் குணங்கள் பொதுவானவை: என்னதான், 'ஆண்மைக் குணங்கள்' 'பெண்மைக் குணங்கள்' என்று வரையறுத்திருந்தாலும், 'குணங் களுக்கு பால் வேறுபாடு கிடையா: பெண்மைக் குணமுடைய ஆடவரும், ஆண்மைக் குணமுடைய பெண்டிரும் இருத்தல் இயல்பே' எனவே குணங்கள் முறையே, மனித 'குணங்கள்' என்றழைக்கப்பட வேண்டுமென்பது இன்றைய பெண்ணிய வாதியர் கருத்தாகும். 'ஆணின் மிக்கோர் பெண்டிருள் உண்டு' என்று இயல்பாகத் துறவிகள் குறித்துள்ளது கருதத்தக்கது.

''இண்ணுறுப்பிற் நோய் சுழிபோல் ஈசன் முதல் மூவரையும் நண்ண வல்லார்க்கு இல்லை நவை''

என்று ணகர ஒற்றிடத்து அமைந்துள்ள சுழி போல் சிவன், பிரம்மா, விஷ்ணு எனும் மும்மூர்த்திகளையும் தெரிந்து கொள்ள வல்லவருக்கு மயக்கம் என்பது இல்லை என்று மொழியின் எழுத்தமைப்பைக் காணும்போது இறைச் சிந்தனை, மொழிச் சிந்தனையும் கலந்திருக்கக் காணலாம்.

'ஙகர' மென இனத்தை நன்கு தழுவும்
மகனெடுமா லென்ன மகிழ் வான்'

என்று 'ஙகரத்தைப் போல் தன் இனத்தை நன்றாகப் பேணுகின்ற ஆடவன் மகாவிஷ்ணு போல் மகிழ்ச்சியடைவான்' என்று கூறுகின்றார்.

''நாவிற் பயனில்லாதவன் நற்றாயர் தந்தையின(து)
ஆவிக் குதவா தவன்''

''ஙிகர மதுபோல்வான் நீதி மன்னன் வண்மைப் புகழ் மறைக்கும் மாற்றம் விரும்பும்''

''ஙீகார மன்னான் நிலத்தி னொரு வருண்ணும்
ஆகார மீந்துமறி யான்''

"நுவ்வனையார் தம்மை நுவலின் நுடங்குமின்னற்
பௌவ மதிற்றாழ் பவர்"

என்று எழுத்துக்கள் மொழியில் கையாளப்படுகின்ற இயல்பினை,

'நு எனும் எழுத்து பயனற்றுள்ளது
ஙிகரம் போல் ஒளித்துச் சொல்லும்
ஙீகாரம் பயனற்ற முழுலோபத் தன்மையுடையது
நுவ்வெனும் எழுத்து இரண்டுபட்ட கருத்துடையது'.

என்று எடுத்துரைத்து, மாந்தர் இயல்புடன் இணைத்துக் காணும் போக்கு குறிக்கத்தக்கது.

"இடௌகாரத் திள்ளுருவம் ஏய்ந்தாங் கொருநீர்
கொடுவிளங்கல் முன்னூழ்க் குறி"

'டௌ' எனும் எழுத்திடத்துள்ள ளகரம் போன்று ஒருவர் தமக்கு பொருந்தாத குணத்தை அங்கமாகக் கொண்டு விளங்கு வாராயின், அது முன் ஊழ் அவர் வினைப்பயன் என யாவரும் அறிதற்குரிய அடையாளமாகும்.

* ளகரம் 'டௌ' வில் இருந்தும் பொருத்தமற்ற 'வகர' ஒலியை பெற்றியங்குகிறது என்று குறிப்பிடுகின்றார்.

"நாரியருங் கற்கைநலமென் றுரைக்குநரைப்
பாரில் இகழ்வார் பலர்'

என்று பெண்கல்வியை நிந்திக்கும் மூடர் அனேகர் இருத்தலைச் சொல்லி,

"நூலிழந்தும் கேளியிச்சை நூறாதாள் மற்றொருவன்
தாலிக்கட்டிக் கொள்ளத் தகும்"

என்று புணர்ச்சி அவாவை வெறுக்கச் சக்தி இல்லாதவள் வேறொரு நாயகனை மணப்பது நன்மையேயாகும் என்று விதவை மறுமணம் பற்றியும் கூறியிருப்பது அவர்தம் சமூகப் பாங்கினை வெளிப்படுத்துகிறது.

ஆன்ம ஞானக் கருத்துக்களைக் கவிதைகளில் வடித்தளித்த தன் மூலம் ஞானியாக ஜியார்ஜ் ஹெர்பாட்டை ஆங்கில இலக்கியத்தில் குறிப்பிடுதல் போல் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளைக் குறித்தல் பொருந்தும்.

ஆங்கில இலக்கியத்தில் இசையொருங்குடன் கூடிய 14 வரிக் கவிதைகள் (Sonnets) புகழ் மிக்கவை. 16-வது நூற்றாண்டில்

வியாட் (Wyatt) சர்ரே (Surrey) ஆகியோரால் அறிமுகப்படுத்தப் பட்டவை பெட்ராச் எனும் இத்தாலியக் கவிஞனிடத்திலிருந்து நகலாகப் பெறப்பட்ட வடிவம் இது. எட்டுவரிகள் கொண்ட முற்பகுதியும், ஆறுவரிகள் கொண்ட இரண்டாம் பகுதியும் ஆக.

abbaabba
cd cd cd (அல்லது)
cde cde
எனவும் அமைவது மரபு. இவ்வடிவத்தை
ababbcbc
cd cdee
என மாற்றிய ஸ்பென்சரும்,
ab ab
cd cd
ef ef
gg

என்று 4 பகுதியாக அமைத்தளித்த ஷேக்ஸ்பியரும் பெரிதாக வியந்தோதப்படுகின்றனர்.

வடிவ அமைப்பில் மகத்தான மாற்றங்களைச் செய்த வண்ணச்சரபத்தாரது கவி வடிவங்கள் ஆராயப்பட்டு, அதன் கலை நுட்பம், ஆக்குவதிலுள்ள அருந்திறன், முயற்சி பொருளை உயர்த்தும் பாங்கு பற்றி உணர்த்தப்பட வேண்டுவது இன்றியமையாததாகும்.

நுட்பமாக மொழியைக் கையாளும் திறன் கைவரப் பெற்றிருந்தால் மட்டுமே இத்தகு சித்திர கவிகளை உருவாக்கி அதிசயிக்கச் செய்யவியலும். அடிமனதில் தமிழ் தமிழறிஞர் பால், கொண்ட பற்றும், அன்புமே தமிழுணர்விற்கு சான்றா கின்றன. பல சமய அறிவும், சகிப்புணர்வுமே அவரை பொதுமையியல்பினராய் – மானிடரினம் முழுமைக்கும் உறவின ராய் இனங்காட்டுகிறது.

# கந்தகோட்டம் கந்தப் பெருமான் பதிகங்கள்

பி. கரிகாலன்

முருக தாசர் ஆகிய தண்டபாணி சுவாமிகள் தம் மிகுதியான இறைப்பற்றினால் இறை அருள் வாய்க்கப் பெற்றவர். பல் வகைப் படைப்புகளைப் படைத்தவர். இலக்கணம், இறைமை, தத்துவம் போன்ற பல்துறை ஞானம் பெற்றவர். இவரின் படைப்புகளில் ஒன்றான சென்னை கந்தகோட்டம் கந்தப் பெருமான் பதிகங்கள் என்ற நூலில் ஆய்வுக்குட்படுத்தி இக் கட்டுரை அமைந்துள்ளது.

## நூல் அமைப்பு

இந்நூல் மயிலிற் காட்சி தந்த பதிகம், தேரின் மீது காட்சி தந்த பதிகம், உதாரசீலப் பதிகம் உள்ளிட்ட 6 பதிகங்களைக் கொண்டு அமைந்துள்ளது. ஒவ்வோர் பதிகத்தின் துவக்கத்திலும் 'காப்பு வெண்பா' காணப் பெறுகின்றது. காப்பு வெண்பா நீங்க லாக ஒவ்வொரு பதிகமும் 12 பாடல்களைக் கொண்டிலங்குகிறது. ஒன்றாம், ஐந்தாம், ஆறாம் பதிகங்கள் அறுசீர் விருத்தத்திலும், இரண்டாம் பதிகம் எண்சீர் விருத்தத்திலும், மூன்றாம் பதிகம், வெண்டளைக் கலிப்பாவிலும், நான்காம் பதிகம் எழுசீர்த் தாழிசையிலும் அமைந்தவையாகும். ஒவ்வொரு பதிகத்திலும் இறுதிப் பாடலின் மூன்றாவது அடியில் சுவாமிகள் தன்னை முன்னிருத்திப் பாடும் முறைமை காணப்பெறுகின்றது. இந்நூல் குறிப்புரையுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

## முருகன் பிறப்பு

கந்த புராணத்தில் முருகன் பிறப்பு விளக்கமாகச் சுட்டப்படு கின்றது. தேவர்கள் சூரபதுமன் முதன் கொண்ட அரக்கர்களின் தீச் செயல்களினின்று தங்களைக் காக்க வேண்டி "முதல், இடை, முடிவு, அருவம், உருவம், சமம், காரணம், பிறப்பு, இறப்பு,

இன்பம், துன்பம் ஆகிய இவற்றில் எதுவும் இல்லாமல் கடந்து நிற்கும் இறைவனே உனக்கு நிகராகுமாறு ஒரு புதல்வனை உன்னிடமே தோற்றுவிக்க வேண்டும்'' என்று சிவபெருமானிடம் வேண்டினர். அதன்படியே சிவபெருமான் தான் கொண்டுள்ள ஆறு திருமுகங்களிலும் உள்ள நெற்றிக்கண்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் அக்கினிப் பொறியைத் தோற்றுவித்தான். அத்தீப் பொறி பிரம்மன் முதலாக உள்ள தேவர்கள் அனைவரும் நெருங்க முடியாதபடி வெம்மை கொண்டன. சிவபெருமானின் இடப்பாகத்தில் இருக்கும் பார்வதியும் அப்பொறிகளின் வெம்மையைப் பார்த்து உடல் வியர்த்தாள், உள்ளம் கலங்கினாள். அத்தீப்பொறிகளைச் சிவபெருமானின் அருள் திறத்தால் வாயு தேவனும், அக்கினி தேவனும் சுமந்து சென்று கங்கையில் சேர்த்தனர். கங்கை தீப்பொறியைச் சரவணப் பொய்கையில் சேர்க்க அங்கு பிரம்மன், திருமால், தேவர்கள் காவலிருக்க முருகன் தோன்றினான். சிவபெருமானின் ஆறு குணங்களான 1. முற்றறிவு (சர்வஞ்ஞதை); 2. வரம்பில் இன்பம் (திருப்தி); 3. இயற்கை அறிவு (அனாதிபோதம்); 4. தன்வயம் (சுதந்திரம்); 5. குறைவில் ஆற்றல் (அலுப்த சக்தி); 6. வரம்பில் ஆற்றல் (அனந்த சக்தி) என்பவற்றை ஆறுமுகங்களாய்ப் பொருத்த முருகன் அவதரித்தான். என்று உற்பத்திக் காண்டம் வழி அறியலாம் (கந்தபுராணம் உற்பத்திக் காண்டம்) இப்புராணச் செய்தியைத் தண்டபாணி சுவாமிகள் 5 – ஆம் பதிகத்தின் இரண்டாம் பாடலில்

''மின்தரும்வேல் முதலாம் அடையாளம்
விளங்கின னோடுறவாய்
அன்றம ராதிபன் ஆதியர் நாண
அறைந்தசொலும் பிழையோ?
மன்றல்மதிச் சடையார்விழி யூடுமை
மாழ்கவ ரும்புதல்வா!'' (5.2)

### சம்பந்தரே முருகன்

சைவ சமயக் குரவருள் ஒருவராகச் சீர்காழிப்பதியில் தோன்றி உமை முலைப்பாலை உண்டவர் ஆளுடைப் பிள்ளை ஞான சம்பந்தர். இவர் முருகனின் அவதாரமாகக் கருதப்பெறல் மரபாகும். பெரிய புராணத்தில் சம்பந்தர் பிறப்பைத் தொடர்ந்து

சம்பந்தருக்குப் பெயர்சூட்டும் விழாவில் சம்பந்தரைத் தொட்டிலில் இடும்பொழுது

"நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யில்திகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதன்குழவி அன்னத்
தூமணி நிகரத்தணி செய் தொட்டில் அமர் வித்தார்".
(பெரியபுராணம் 1939)

என்ற பாடலில் சம்பந்தரை முருகனின் அவதாரமாகக் கருதப் பெறும் குறிப்பு காணப்பெறுகின்றது. சுவாமிகள் இச் செய்தியைத் தம் நூலின் மூன்றாவது பதிகமான தேரின் மீது காட்சி தந்த பதிகத்தில்,

"ஆகாத தீவினைகள் அத்தனையும் போக்கியன்பர்க்(கு)
ஏகாந்தச் சேவைநல்க இன்றுதான் எண்ணினனோ
நாகாதி பன்விரும்பும் நல்ல சென்னை மாநகரிற்
சீகாழி அந்தணனைத் தேரின் மிசை கண்டேனே"

என்று முருகனை சீகாழி அந்தணனாக கண்ட காட்சி அறியலாம் (3.8).

**சம்பந்தருக்கு பொருள் உதவியது**

சம்பந்தரின் தந்தை நிரம்பிய சிவபக்தர். இவர் ஒரு யாகம் செய்தல் வேண்டி பொருள் வேண்ட சம்பந்தரும் தன் தந்தை யாரின் யாகத்திற்காக திருவாவடுதுறை இறைவனிடம் தந்தையின் அடித்தலங்களே அந்தமில் பொருள் என்று எண்ணிப் பதிகம் பாடுகின்றார். இறைவன் ஆயிரம் பொற்காசுகள் கொண்ட கிழியை அளித்தான் என்று சம்பந்தர் தேவாரத்தில் செய்தி அறியப்படுகின்றது.

"இடரினும் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உன்கழல் தொழுதெழுவேன் (தேவாரம் 4.1)

இச்செய்தியை சுவாமிகள் முதற் பதிகத்தில்,

"சாரணர்வாழ் வறக்கடந்தான் தனக்கு(ம்) மற்றும்
சிலர்க்கும் உந்தை தனமிக் கீந்து" (1.8)

எனக் குறிக்கின்றார்.

**சுந்தரர் தூது**

திருவிளையாடற் புராணத்தில் சங்கிலி நாச்சியாரிடம் தூது சென்ற செய்தி குறிக்கப் பெறுகின்றது. சுவாமிகள் இச் செய்தியை இரண்டாம் பதிகத்தில்,

> ''சங்கிலிகண் வலையில்விழும் சுந்தரற்கா உந்தை
> தாள்வருந்தத் தூது சென்ற தன்மைமுதற் பிறவும்
> இங்கிருக்கும் மானிடரும் சொல்வது கேட்டியேன்
> இளைக்கு விதம் அறியாயோ?'' (2.3)

என்று குறிக்கிறார்.

**சூரனை வதைத்தல்**

முருகனின் அவதாரச் சிறப்பின் நோக்கமே சூரனை வதம் செய்வதாகும். இதனை சங்கப்பாடல், சிலம்பு முதற்கொண்ட இலக்கியங்கள்வழி அறியலாம். சுவாமிகள் இச்செய்தியை தன் பதிகத்தில் பல இடங்களில் கையாளுகின்றார்.

> ''காவனங் கண்குளம் ஒல்கி நடுநடுங்கச் சிறிக்
> கடலிடை முன் முளைத்(து) அதுவும் கதறியழப் படுத்தும்
> மா, அறச் சென்றுயர் வேலே தஞ்சமெனப் போற்றி'' (2 9)

**பிற செய்திகள்**

முருகன் வாகனமாக ''பசுற் தோகைப் புரவியுடை'' (1.4) என்றும் ''தகரூர்ந்து திரியும்'' என்றும் குறிப்பதால் முருகன், மயில், ஆடு இரண்டையும் வாகனமாகக் கொண்டவன் என்ற செய்தி அறியலாம். மேலும், ''குமரா வெண் சேவல் கிள்ளை, தந் நகத்தாள் கிறியதோட் சரவணனே'' (1.5) என்ற வரியில் முருகன் தோளில் சேவலும், கிளியும் இருப்பது அறியலாம். முருகன் துடிகூத்து ஆடுபவன் என்றும் (1.7); முருகன் வள்ளி நாயகியையும், தேவர்பிரான் மகளையும் மணந்த செய்தியும் (2.9);முருகன் மதுரை அரசன் முன்பு செட்டி மகனாக அவதரித்து வழக்குரைத்த செய்தியும் (3.12) அறியலாம்.

**கொடைச் சிறப்பு வேண்டல்**

நூலின் 4-ஆவது பதிகம் உதாரசிலப் பதிகம் ஆகும். இதன் குறிப்புரையில் ''உதாரசிலம் - கொடைச் சிறப்பு.'' இவ்வுதாரம்

இதுவரை முருகனிடமில்லை இனியேற்படுமென்று கூறியது என்று கூறப்பெறுகின்றது. சிவபெருமான் அருள் குணம் கொண்டவன் என்பதற்குச் சான்றாகப் பல நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கும் ஆசிரியர் இரண்டாவது பதிகத்தில், ''சிவன் மகன் என்றிடும் குணத்தை இனியேனும் காட்டாய்'' (2,5) என்று இயம்புகிறார். மேலும் உதாரசீலப் பதிகத்தின் 121 பாடல்களிலும் ''உலோபம் நீங்கி உதாரசீலம் உதிக்குமே'' என்ற வரியைக் கையாளுகின்றார்.

இப் பதிகத்தில் சென்னை நகர் பற்றிய வருணனையும் முருகன் பிறப்பு, முருகன் சூரனை வதைத்தது, முருகன், வள்ளி தெய்வானையை மணம் செய்தது ஆகிய செய்திகள் அறியப்படுகின்றன. முருகக் கடவுளைப் பற்றிய செய்தியைக் குறிப்பிடுகையில் அவன் தந்தை சிவபெருமானுடன் இயைபுபடுத்தி சிவனின் திருவிளையாடற் சிறப்பும் உரைக்கப்படுகின்றது. இப்பதிகங்கள் பொதுப்பட புராணச் செய்திகள் பலவும் உடையதாய் இறைவன் பெருமையைப் போற்றிப் பரவுவதாய் அமைந்துள்ளன.

## தமிழலங்காரத்தில் திருத்தொண்டர்

### கருவூர் எறிபத்தன்

நமது வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் தமிழ்மொழியைத் தம் தாயினும் மேலானதாகக் கருதினார்கள். தமிழைத் தாழ்வாகப் பேசுவோர் கயவரினும் மேலான கயவர் ஆவார் என மதிப்பிட்டுள்ளார்கள்.

சுவாமிகள் இன்றைக்கு நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன் (1839) தென்பாண்டிநாட்டுத் திருநெல்வேலி தலத்திலிருந்து புறப் பட்டு அடியார்கள் புடைசூழ வேலாயுத பூசை செய்துகொண்டு பல தலங்களுக்கும் சென்றார்கள். அப்போது இராயவேலூர் என்ற தலத்திற்கும் சென்றார்கள். அங்குள்ள முருக கடவுளுக்குப் பதிகம், திருப்புகழ் முதலியவற்றைப் பாடி அரங்கேற்றினார்கள். பின் அப்பதியில் கோயில் கொண்டுள்ள அமுதலிங்கசாமி மடத்தில் தங்கியிருந்தனர்.

அப்போது வடமொழிப் புலமையில் சிறந்த வேதியர் ஒருவரும் அவரது நண்பர் வேளாளர் ஒருவரும் வந்தனர். சுவாமி களின் தமிழ்ப்புலமை மீது பொறாமை கொண்டனர். பல செய்திகள் பேசினர். இடையில் அவர்கள் வடமொழியே சிறந்தது என வாதமிட்டனர்.

சுவாமிகள் தாமியற்றிய "அறுவகை இலக்கணத்தில் ஆறாவதான புலமையிலக்கணத்தில் புலவரியல்பு" கூறும்போது,

> "தமிழ் மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில்
> வெகுளியற்றிருப்போன் வெறும் புலவோனே"

என்று கூறியுள்ளார். ஆதலால் தமிழின் மீதுள்ள உரிமை காரணமாக அவர்களுடன் வாதத்திற்கு இசைந்தனர்.

அவர்கள் : வேதம் வடமொழியில் தானே உள்ளது. அதனால் வடமொழியே உயர்ந்தது.

சுவாமிகள் : வேதம் தமிழ் மொழியிலும் இருக்கிறதே. ஆட்டையும், மாட்டையும் அடித்துப் போட்டு மாமிசத்தை அவியாகப் பெய்து உண்ணும் படி சொல்லுகின்ற உங்கள் வடமொழி வேதத்லதைப் போல எங்கள் தமிழ் வேதம் சொல்லவில்லையே. தமிழ் வேதம் என்ன சொல்லுகின்றது தெரியுமா?

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுக்கு உண்ணாமை நன்று"

ஆடு, மாடுகளை வெட்டி அவற்றின் ஊனை அவியாக பெய்து ஆயிரம் யாகங்களைச் செய்வதைவிட ஒரு உயிரைக் கொன்று அதன் ஊனைத் தின்னாத செயல் மிகவும் நல்ல காரியமாகும் என்று எங்கள் தமிழ் வேதம் சொல்லுகின்றதே!

இவ்வாறு பலவாக அவர்கள் வாதம் செய்து கொண்டே போனார்கள். பகல் முடிந்து இரவும் வந்தது. இருவரும் ஒரு முடிவுக்கு வந்தனர். அது என்ன முடிவு? இறைவனுடைய தீர்ப்பை ஏற்றுக்கொள்வது என்பதுதான். அது எப்படி? திருவுளச் சிட்டை எழுதி ஈசன் திருமுன் வைப்பது, எது எடுக்கப் படுகின்றதோ அந்த முடிவை ஏற்றுக்கொள்வது. முடிவு என்ன ஆயிற்று?

சுவாமிகள்,

1. தமிழே உயர்ச்சி
2. வடமொழியே உயர்ச்சி
3. இரண்டும் உயர்ச்சி
4. காலத்திற்கேற்ப உயர்ச்சி
5. குலத்திற்கேற்ப உயர்ச்சி
6. நாட்டுக்கேற்ப உயர்ச்சி
7. பெருமைக்கேற்ப உயர்ச்சி

என்று 7 விதமாகச் சீட்டுகளை எழுதி வேலாயுதத்தின் திருமுன் இட்டனர். அவர்கள் ஒருவனை அழைத்து ஒரு சீட்டை எடுக்கச் சொன்னார்கள். நமது சுவாமிகள் ஒரு கன்னிப்பெண்தான் சீட்டை எடுக்க வேண்டும் என்று கூறி கலைமகளைச் சிந்தித்தார்கள்.

அப்போது ஒரு அழகிய பெண் அவ்விடம் வந்தாள். ஒரு சீட்டை எடுக்கச் சொன்னார்கள். அவள் ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்தாள். அச்சீட்டில் இருந்தது "தமிழே உயர்ச்சி".

வடமொழி வாதக்காரர்கள் "உங்கள் வழிபடும் தெய்வம் உங்களுக்கு உதவினார்" என்று கூறி சுவாமிகளை வணங்கிச் சென்றனர். சுவாமிகள் அந்தச் சீட்டைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, தலைமீது தரித்துப் பின் வாயிலிட்டு மென்று உண்டனர். என்னே இவருக்குத் தமிழின் மீதுள்ள அன்பும், ஆர்வமும்!

சுவாமிகள் அந்தச் சொல்லையே ஈற்றடியாக வைத்து "தமிழே உயர்ச்சி என்று சீட்டுக் கொடுத்த பெருமாளே" என்று ஒரு திருப்புகழ் பாடியருளினார்கள். பிறகு சுவாமிகள் 100 கட்டளைக் கலித்துறைகளை இயற்றித் தமிழின் சிறப்பை வரலாற்றுச் சான்றுகளோடு நிலை நாட்டினார்கள். அந்த நூலே "தமிழலங்காரம்" ஆகும்.

கந்தனின் சிறப்பியல்புகளைக் கூறி அருணகிரிநாத சுவாமிகள் "கந்தரலங்காரம்" பாடியுள்ளார்கள். அதுபோல நமது தண்டபாணி சுவாமிகள் தமிழ் மொழியின் பெருமைகளைக் கூறி "தமிழலங்காரம்" பாடியுள்ளார்கள்.

**மதலையை எழுப்பும் வண்டமிழ் மொழியே**

> மந்தரக் கொங்கைப் பரவைதன் கேள்வனும் மற்றையராம்
> வந்தனக் காரரும் இன்புறு மாறு மறைபயிலும்
> அந்தணச் சேயை அவிநாசி யூரில் அழைத்ததெண்ணில்
> சந்தனக் குன்றின் தலைமேற் பிறந்த தமிழ்த்தெய்வமே.

பரவையாரின் கணவரான சுந்தரர் உடனிருந்த பலரும் வியக்குமாறு அவிநாசியூர்க் குளத்தினிடமாக மூன்றாண்டுக்கு முன் முதலையால் இறந்த அந்தணச் சிறுவனை உரிய வளர்ச்சி யுடன் வறண்ட குளத்தில் நீர்வந்து, முதலை தோன்றி, அதன் வாயினின்றும் உமிழச் செய்தனர். ஆயின் பொதியையினின்றும் தோன்றிய தமிழின் ஏற்றமேயாம் என்றார்.

**வந்திக் காளாய் வரச்செய்யும் தமிழ்**

எவ்வுயி ருக்கும் உயிரா நிறையும் இறைவன் தன்னை
வெளவும் ஒருவன் தமிழ்துதிக் காக்கிற வந்தியின் ஆள்
ஒவ்வும் வடிவம் எடுத்து மண் கூடை யுடன்சுமந்து
வெவ்வுர கம்பொரும் வேத்திரத் தாக்கும் மிலைந்தனனே.

சகல உயிர்களிடத்தும் உணர்வு வடிவாய் உள்ள சிவபிரானை அன்போடு வழிபட்ட திருவாதவூரருக்காக வந்தியின் ஆளாக வந்து மண் எடுத்து அடிபடவும் செய்தது தமிழ் எனச் சிறப்பித்தார்.

**வாசகத் தமிழ் அரன் மன்றினிற் பேணுதல்**

வண்மைப் பராசன் மகன்சொல் ஐந் தாமறை வாசகத்தை
அண்மைப் புதல்வன் கரத்தால் வரைவித்த அண்ணல் அருள்
உண்மைத் தமிழ்த் திரு வாசகப் பாடல் ஒருங்கெழுதிப்
பெண்மைக்(கு) உவகை தரும்அரங் கூடுறப் பேணினனே.

பராசர முனிவர் மகனான வியாசர் கூறிய வடமொழிப் பாரதத்தை அண்மையிலிருந்த விநாயகரைக் கொண்டு மேரு மலையின் மீது எழுதும்படி கூறினார் இறைவன். அன்புருவான திருவாதவூரடிகள் பாடிய தென்மொழித் திருவாசகத்தைத் தன் கரத்தால் எழுதியும் பொன்மயமான கனக சபையில் உமாதேவி மகிழப் பாதுகாப்பாகவும் வைத்தனர் என்பதாம்.

**மணிவாசகர் முக்தி மாண்புறச் செயும்தமிழ்**

மன்னும் தமிழிற் றுதிசெய்த மாணிக்க வாசகரும்
பன்னும் பெருமை உணர்ந் தேத்தும் கீர்த்தனைப் பாவலனும்
துன்னும் கதிமற்றை யோரடைந் தாரெனச் சொல்லும்
உன்னும் கடற்றிரைப் பைந்தானை சூழ்தரும் ஒண்புவியே.

திருவாசகமும் திருக்கோவையும் பாடிய திருவாதவூரர் போலவே அவரது புகழையுணர்ந்து போற்றிய நாடகத் தமிழ்ப் புவவரான முத்துத்தாண்டவரும் பரவெளியிற் கலந்தனர். இதுபோல எம்மொழிப் புலவராவது அத்தகைய முக்தியைப் பெற்றவருண்டா? என வினாமுகத்தாற்றெளிவித்தார்.

**ஞானசம்பந்தர் நவின்றது தமிழே**

சிகாரி யூர்த்தடம் பொய்கைக் கரையிற் சிறிதழுத
வாகாரும் சேய்க்(கு) உமை நல்கிய பாலின்மதுரம்; அன்பர்
சோகாந்த காரம் கெடத்தமி ழோடு துவங்கிற்றன்றி
ஏகாரத் தின்குறில் இல்லாக் கலையொ(டு)இலங்கிற்றன்றே

சீர்காழியில் உள்ள பிரமதீர்த்தக்கரையில் அம்மா அப்பா என்றழுத அந்தணச் சிறுவனரான ஞானசம்பந்தருக்கு உமையவள் உதவிய ஞானப்பாலின் இனிமையானது அடியவரது அஞ்ஞான இருள் நீங்கும்படி தேவாரத் தமிழாக வெளி வந்ததேயல்லாமல் ஏகாரக் குறிலான எ. ஒ போன்ற அக்கரங்கள் இல்லாத வடமொழி மூலமாக வெளிவரவில்லை. எனவே ஞானமொழி தமிழ் என்பதாம்.

**சம்பந்தர் தமிழ்ச்சீர் சங்கரர் புகன்றனர்**

வேதவி யாசனைக் கைதூக்கி அங்கு விடப்பகர் மெய்ப்
போதமு டைச்சங்க ராசா ரியனும் பொருவில் அருள்
மாதரி பாலுண்ட செவ்வாய்க் கவுணியன் வண்டமிழ்ச்சீர்
ஓதலுற்றான்வட சொல்லால்என் றால்நன்
குணர்ந்துய்ம்மினே.

வேத விற்பனரான வியாசரைப் போற்றிய சங்கராச்சாரியார் உமாதேவியின் ஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தரை தாம் இயற்றிய சௌந்தர்யலகரி நூலில் 75வதான சுலோகத்தில் ‘திராவிட சிசு’ என்று போற்றுகின்றார் என்றால் தமிழின் பெருமை கூறாமலேயறியலாம். (திராவிட சிசு—தமிழ்க்குழந்தை)

**பாலறா வாயர் பரிசுறச் செயும் தமிழ்**

எக்கலையாலும் இறைவனைப் போற்றினர்
எண்ணிலர்தாம்
மெய்க்கவின் ஆர்தமி ழாற்றுதி பாடொரு மென் குருந்திற்
கைக்கனி தாளமும் வெண்முத்துப் பந்தரும் காளமும்
மைக்கக னம்தரப் பெற்றார்மற் றில்லையிவ் வையகத்தே.

ஏனைய பல மொழிகளில் பலர் இறைவனைத் துதித்து அருளடைந்துள்ளனர். இருப்பினும் அவை அரசராலும் தெய்வ மூலமாகவும் பெற்றிருப்பர். முத்துச் சின்னமும் முத்துக்காளமும்

முத்துப்பந்தரும் வான் வழியாக சம்பந்தமூர்த்தி பெற்றது போன்ற தாயில்லை. ஆகவேதான் "மைக்ககனம் தர பெற்றார் மற்று இல்லை" என்றார்.

**எலும்பு பெண்ணா வர இசைக்கும் தமிழ்மொழி**

சுட்டவெள் என்பின் குடத்தூ டிருந்தொரு தோகை
நல்வாள்
கட்டழ கோடு மயிலைத் தடாகக் கரையில் வர
விட்டது செந்தமி ழேஅல்ல வோ? அன்றி வேறுகலை
நட்டவண் செய்ததுண் டேற்சொல்லு வீர்இங்கு
நன்குணர்ந்தே.

ஞானசம்பந்தர் மயிலாப்பூர் குளத்தின் கரையில் சுடப்பட்ட எலும்பின் இடத்திலிருந்து பூம்பாவை வரப்பாடியது. செந்தமிழ் மொழியா? வேறு எந்த மொழியாகிலுமா? என்பதைத் தேர்ந்து கூறுக என்பதாம்.

**அனல் புனல் வென்(று) அமண் அழித்தது செந்தமிழ்**

கதிர்பூத்துக் காய்ந்(து) உதி ரும்பனை காய்த்துக்
கனியுடன் அங்(கு)
எதிர்தோன்றச் செய்ததும் தீயைவென் றிட்டதும்
ஏடெதிர்ந்து
நதிநீர்தக் காட்டலும் கூன்பாண்டியன் நன் னலம்பொருந்தி
அதி கோரச் சாரண ரைக் கழுவேற்றும் அருந்தமிழே.

கதிர்கள் முதிர்ந்தும் உலர்ந்தும் பயனற்று இருந்த ஆண் பனைகள் யாவும் பெண்பனையாகிக் குறும்பையும் காயும் கனியுமாகவும் தீயிலும், நீரிலும் இட்ட ஏடுகள் வேகாமலும் எதிர்த்துச் செல்லவும் கூன் பாண்டியன் சைவ சமயத்தமையவும். சமணர்கள் கழுவேறவும் செய்தது ஞானசம்பந்தரது நற்றிமிழேயாம் என்பதாம்.

**மணத்தில் முத்தி வழங்கிடும் தமிழ்**

எத்திசை யிற்கலை யாதாலும் போற்றினர் ஈசன்
உண்மைப்
பத்தி செய் தேத்திப் பணிந்தாலும் காழிப் பனவர்பிரான்
சித்திபல் கோடி விளையாடி நன்மணம் செய்த அன்றே
முத்தியைத் தானம் இடச் செய்த வான்கலை முத்தமிழே.

எந்தத் திசையிலும் எந்த மொழியிலும் பலர் இறைவனைப் பாடியிருப்பினும் காழியிற்றோன்றிய ஞானசம்பந்தரைப் போல அரிய அருளாடலைச் செய்து திருமணம் பெற்ற அன்றே வந்திருந்த அனைவருக்கும் மேலான முத்தியை வழங்கச் செய்த சிறப்பு தமிழுக்கன்றி வேறு எந்த மொழிக்கும் இல்லை என்று ஓதினாராயிற்று.

### அப்பர் அருட்செயல் அளவில் செயல் தமிழ்

கடல் நீரிற் கல்மிதக் கும்படி செய்து களி(று) உறுக்கும்
அடல்யாவும் குன்ற அடக்கிவெள் நீற்றறை அம்புயப்பூந்
தடமாகக் காட்டி அரவால் இறந்த தனயனையும்
உடலோ டெழச்செய்த தன்றோ ஒருவன் சொல் ஒண்
தமிழே.

கருங்கல்லிற் பிணித்துக் கடலிற் செலுத்தப்பட்டனர், திருநாவுக்கரசர். அப்போது அதையே தெப்பமாகக் கொண்டு கரையேறச் செய்து, எதிர்த்த யானையை அஞ்சப்புரிந்து, நீற்றறை குளிர வைத்து, அரவால் இறந்த அப்பூதியார் மகனை எழுப்பச் செய்தது. திருநாவுக்கரசரது தமிழ்ப் பாடலே என்பதாம்.

### கயிலைக் காட்சி கதிதரும் கவின்தமிழ்

காணரி தாய கயிலாயக் காட்சியைக் காட்டி எழிற்
சேணகத் துள்ள மடவாரைப் பொன்னெச் செழுமணி தோய்
பூணனந் தத்தைப் புறம்நீக்கும் ஆர்வம் பொருந்தி முத்தி
மாணடை யச்செய்த தன்றோ ஒருவற்கு வண்தமிழே.

அப்பர் பெருமானுக்கு எளிதிற் காணமுடியாத திருக் கயிலாயக் காட்சியையுதவி தேவலோக மாதர்களையும் பொன் முதலியவைகளையும் வெறுக்கச் செய்து இறைவனோடு ஒன்று படும் முத்திப்பேற்றைக் கொடுத்தது தமிழ்மொழியேயாம்.

### சுந்தரர் தமிழ்க்காத் தூதாய் அரன் செலல்

பல்கோடி மங்கையர் கண்டுகண் டேங்கும் படிஒருக்கால்
புல்கோலத்(து) ஈசன்முன் ஆரூரிற் போற்றும் புலவன் உள்ளம்
மல்கோதை வேண்டி ஒருவிலை மாதெதிர் வாய்திறப்ப
வெல்கோ மனச்சுவை நீங்காத தாகும் வியன் தமிழே.

தாருகாவனத்து முனிவரது வாழ்க்கைத் துணையான மாதர்கள் ஏங்கும்படி பிட்சாடனராக அன்று சென்ற சிவபெருமானை இடையில் வந்த சுந்தரர் தன்னால் விரும்பப் பட்ட பரவையாரிடம் தூதாகச் செல்ல ஏவினார் என்றால் இளமையும் இனிமையும் உடைய தமிழ்த் துதியின் சிறப்பேயாம் என்க.

**ஆரூரர் கயிலைசென் றறைந்ததும் தமிழே**

எள்ளாத ஆதிசை வக்குலத் தோர்மனை யிற்பிறந்தும்
வள்ளாரும் வேல்மன் மகவாயி னானை வயங்குதமிழ்;
கொள்ளாஅளவில் அடங்காத இன்பம் கொடுத்துப் பின்பு
வெள்ளானை யேற்றிக் கயிலாய மீதுற விட்டதுவே.

ஆதிசைவராகத் தோன்றிய சுந்தரரை நரசிங்க முனை யரையர் தனது அபிமானப் புதல்வராக வளர்க்கலானார். பின் அருட்பேறு பெற்றனர். 'பித்தா பிறை சூடி' என்ற பதிகம் முதல் 'தானெனை' என்ற பதிகம் வரை பாடிய தேவாரத் தமிழ்ப் பாடலின் பயன் பல அருட்தொடர்ச்சி செயல்களைச் செய்தது மட்டும் அல்லாமல் இந்திரனின் யானையான 'ஐராவதம்' என்ற வெள்ளை யானையின் மீதேறச் செய்து கயிலையில் சேர்த்தது எது? தமிழேயாம் என்றவாறு.

# தஞ்சைக் கோயிற் பாடல்கள்

த. கலா

தண்டபாணி சுவாமிகள் 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். சிறந்த தமிழ்க் கவிஞராக மதிக்கப்படுகிறார். மிக அதிகமான பாடல்களை ஓலைகளில் தம் கைப்பட எழுதி வைத்த பெரும் புலவர். இவரைப் பற்றியும், இவர் தமிழுக்கு ஆற்றும் தொண்டு பற்றியும், இவர் கூறும் தஞ்சாவூர்த் திருப்புகழ்ப் பதிகங்களைப் பற்றியும் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தண்டபாணி சுவாமிகள் திருநெல்வேலியில் செந்திநாயகம் பிள்ளை–பேச்சுமுத்தம்மைக்கும் மகனாகப் பிறந்தார். இவரது இயற்பெயர் சங்கரலிங்கம். இவர் இளமையிலே இறைவழி பாட்டில் ஈடுபாடு உடையவர். இவருக்கு தண்டபாணி சுவாமிகள், முருகதாசன் என்ற சிறப்பு பெயர்களும் திருப்புகழ் பதிகங்கள் அதிகம் பாடியதால் திருப்புகழ் சுவாமிகள் என்ற பெயரும் மற்றும் வண்ணச்சரபம் என்ற பெயரும் இவருக்கு உண்டு. இவர் நால்வரைப் போன்று தலங்கள் தோறும் சென்று பாடியுள்ளார். இவர் சென்ற ஊர்களுள் தஞ்சாவூரும் ஒன்று. சுவாமிகள் தஞ்சைக்கு நேரடியாக வந்து தஞ்சையின் சிறப்பை யும் தஞ்சைக் கோயில் சிறப்பையும் பாடியுள்ளார்.

## தஞ்சாவூர்

தஞ்சமென வந்தவர்களை வரவேற்பது தஞ்சசுரண் என்ற அசுரன் அழிக்கப்பட்டதாலும் தஞ்சாவூர் என்ற பெயர் ஏற்பட்டது என்று கூறுகிறார்கள். தஞ்சையின் சிறப்புக்கு முக்கிய கருப்பொருளாக விளங்குவது கோயில்களே. இங்கு எண்பதுக்கும் மேற்பட்ட கோயில்கள் உள்ளன. இவற்றுள் தண்டபாணி சுவாமிகளால் பாடப்பெற்ற தஞ்சைப் பெரிய கோயில், காமாட்சி அம்மன்கோயில், சங்கரநாராயணன் கோயில், தஞ்சை நாராயணன் கோயில் ஆகியவை அடங்கும்.

## தண்டபாணி சுவாமிகளால் பதிகம் பாடப்பெற்ற தஞ்சைக் கோயில்கள்

பத்து செய்யுட்களாலான ஒரு சிறு பிரபந்தம் பதிகம் எனப் பெறும். காரைக்கால் அம்மையாரால் இயற்றப்பெற்ற பதிகங்களே இவ்வகை இலக்கியத்திற்கு முன்னோடியாகும். திருஞான சம்பந்தர் இந்த இலக்கியத்தை மிகுதியாக படைத்துள்ளார். இவை இசையுடன் பாடும் பா வகைகளால் இயற்றப்பெறுவதால் யாவரும் பண்ணோடும் பாடலாம். தண்டபாணி சுவாமிகள் ஆறு சமயக் கடவுளர்கள் மீதும் பொதுக் கடவுள் மீதும் பல்லாயிரம் பாடல்கள் பாடியுள்ளார். சமயபேதமற்ற சமரச கருத்துடைய சுவாமிகள் பல தலங்கள் தோறும் சென்று ஆங்காங்குள்ள கடவுளர் மீது துதிப்பனுவல் பாடியுள்ளார். அந்த முறையில் தஞ்சாவூருக்கும் வந்து இங்குள்ள தஞ்சைப் பெரியகோயில், தஞ்சை பங்காரு காமாட்சியம்மன் கோயில், சங்கரநாராயணன் கோயில், நாராயணன் கோயில் ஆகிய கோயில்களுக்கு நேரடியாக வந்து பதிகங்கள் பாடியுள்ளார். சுவாமிகள் அருளிய பதிகங்கள் யாவும் சொற்சுவையும், பொருட்சுவையும் சந்த நயமும் பெற்று விளங்குவனவாகும். இவர் தஞ்சாவூர் கோயில்கள் பற்றி எழுபத்திமுன்று பாடல்களை பதிகங்களாகப் பாடியுள்ளார். இவர் தஞ்சை நாராயணன் என்ற வைணவக் கோயிலைப் பற்றியும் பாடியுள்ளார். அந்த நாராயணன் இரண்டு கோயில்களில் உள்ள சுவாமிகளைக் குறிப்பதாலும், சந்தேகத்திற்கு இடமளிப்பதாக இருப்பதாலும், இந்த கோயிலைத் தவிர்த்து மற்ற மூன்று கோயில்களை மட்டுமே இக்கட்டுரை விளக்குகிறது.

### தஞ்சைப் பெரியகோயில்

தஞ்சைப் பெரியகோயிலைப் பற்றித் தண்டபாணி சுவாமிகள் மூன்று பதிகங்கள் பாடியுள்ளார். அதாவது தஞ்சை கணபதி பதிகம், தஞ்சை பெரியசிவனார் பதிகம், தஞ்சை சுப்பிரமணியர் திருப்புகழ்ப் பதிகமாகும். இப்பதிகங்களைப் பற்றிக் கூறுவதற்கு முன் கோயிலைப் பற்றிக் கூறுவது முறையானதாகும். இக்கோயில் சிவபாதசேகரன் என்னும் சிறப்புப் பெயர்பெற்ற மாமன்னன் முதலாம் இராசராசன் கி.பி. 985-1014 இல் கட்டுவித்த மாபெரும் கலைக்கோயில். இந்தியாவிலேயே முதன் முதல் முழுவதும் கருங்கல்லால் கட்டிய பெரியகோயில். இதுவே என்பார் ஆராய்ச்சி

யாளர். கி. பி. 1004 இல் கட்டத் தொடங்கி ஏறத்தாழ ஏழு ஆண்டுகளில் இராசராசன் இக்கோயிலைக் கட்டி முடித்தான். குடமுழுக்கு இராசராசனின் இருபத்தி ஐந்தாம் ஆட்சியாண்டில் நடைபெற்றது. இக்கோயிலின் சிறப்பு கருவறை கோபுரம் இராஜகோபுரத்துடன் உயர்ந்து காணப்படுவது தஞ்சையில் உள்ள எந்தக் கோயிலிலும் காணப்படாத சிறப்பு ஆகும். இக் கோயிலைச் சோழர்கள், நாயக்கர்கள், மராட்டியர்கள் முதலா னோர் இக்கோயிலின் பிற பகுதிகளைக் கட்டி நன்கொடைகள் பலவும் அளித்துள்ளவர் என்பதை கல்வெட்டு செய்திகள் கூறு கிறது. இத்தகு சிறப்பு வாய்ந்த இக்கோயிலைப் பற்றி தண்டபாணி சுவாமிகள் பாடியிருப்பதால் இக்கோயிலின் சிறப்பும் பெருமையும் மேலும் உயர்ந்துள்ளது.

**கணபதி பதிகம்**

''விஞ்சைக் கெல்லாம் விதையாய் வேழமுகங் கொண்டி லங்கும்
தஞ்சைக் கணபதியாந் தத்துவனே – தஞ்சை
அடக்கியுனை நாடாதகிலத் தலைந்தேன்
இடக்கினர்க்கஞ் சாதாரம் எனை'' (காப்பு)

என இவரைத் தண்டபாணி சுவாமிகள் குறிப்பிடுகிறார். இப் பிள்ளையார், கோயிலின் தென்மேற்கேயுள்ளது. நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டதாகும். இக் கணபதியை மகாகணபதி என்று போற்றுகின்றனர். இக்கணபதியை தண்டபாணி சுவாமிகள்,

'மெயக்குழு சொற்படி முயல்வார்
சஞ்சல முற்றுந் தணப்பவனே' (1:5)

என்றும்,

'பொன்னியும் தாம்பிர வன்னியும் தந்தருள் புகழே' (1:8)

என்றும் இக்கணபதியைச் சுவாமிகள் போற்றுகிறார்.

'நுண்மதி பூண்டு சந்திதொறும்
வாழ்ந்த தொந்தி யிறையோன்' (6:10)

எனச் சிறப்பித்துக் கூறும் தண்டபாணி சுவாமிகள் தமக்கு இக் கணபதி அருளுமாறு வேண்டும் பாடல் இனிய நயம் மிக்கது.

**பெரிய சிவனார்ப் பதிகம்**

'பீடாரும் தஞ்சைப் பெரிய சிவனாரே!
தொடர்பொற் கொன்றைத் தொடைத்தோளீர்-நாடாமுன்
என்கனவின் வந்தண்மை ஏழுலகூ டுந்துலங்க
நன்கருள் செய்தாள்வீர் நயந்து' (காப்பு)

கருவறையிலுள்ள இலிங்க உருவம் தனிப்பெரும் சிறப்புடையது ஆவுடையார். ஐம்பத்து நான்கு அடி சுற்றளவும் ஆறடி உயரம் கொண்ட பாணம் இருபத்து மூன்றரை அடி சுற்றளவும் கொண்டு மிகப்பெரிய இலிங்க வடிவில் இறைவன் காட்சியளிக்கிறார். இங்குள்ள இறைவனை இராசராசேசுரமுடையார் என்றும் தட்சிணமேரு விடங்கன் என்றும் பிரகதீஸ்வரர் என்றும் அழைக்கின்றோம். ஆனால் தண்டபாணி சுவாமிகள், 'பீடாரும் தஞ்சைப் பெரிய சிவனாரே' (காப்பு 1) என்று கூறுகிறார். பிரகதீஸ்வரர் என்ற வடமொழிச் சொல்லை இனிய தமிழ் மொழியில் பெரியசிவனார் என்று இவர் பாடியிருப்பது சுவாமிகள் தமிழ்மொழியின் மீது காட்டும் பற்று வெளிப்படுகிறது. பெரிய சிவனாரே என்பது தண்டபாணி சுவாமிகளால் மட்டுமே முதன் முதலாக அழைக்கப்பட்ட பெயர் என்பது குறிப்பிடத்தக்கது.

முப்புரம் ஒலித்தது (2:1) இடபவாகனத்தில் உமையோடு விண்ணில் வந்தது (2:1) திருமாலின் பூசைக்கு உகந்து சக்கராயுதம் அளித்தது (2:2) சக்திக்குத் தன் இடப்பாகம் அளித்தது (2:2) மேருமலையை வில்லாக வளைத்தது (2:2) அகத்தியரைப் பொதிகைக்கு அனுப்பியது (2:3) காரைக்கால் அம்மையாருக்கு மாங்கனி அளித்தது (2:4) யானையைக் கொன்றுரித்துப் போர்த்தியது (2:5) பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டது (2:5) எருது ஏறி எரிச்சுடுகாட்டில் ஆடியது (2:6) சக்தியுடன் நடனமாடிப் போட்டியிட்டது (2:7) அடிமுடி காணாது திருமாலைத் திகைக்கச் செய்தது (2:7) இராவணனை அடக்கியது (2:7) முக்கண் தறித்தது (2:8) மன்மதனுக்குப் பாணம் வழங்கியது இரசவாதம் செய்தது (2:9) பிரசம், கொன்றை, எருக்கு அணிந்தது (2:9) பிறவா யாக்கைப் பெரியோன் என்பது (2:10) கங்கையும் என்பையும் அணிந்தது (2:10) தமிழ்ப் புலவனுக்கோர் தூதனானது (2:11) சண்டனை உதைத்தது (6:9) இவ்வாறு பல வரலாற்றுச் செய்திகளை தண்டபாணி சுவாமிகள் தனது பதிகத்தில் நயம்படப் பாடியுள்ளார்.

### தஞ்சை சுப்ரமணியர் திருப்புகழ்ப் பதிகம்

(தந்த தானன தானன தந்த தானன தானன தனதானா
தந்த தானன தானன)

நெஞ்சை கவர்ந்ததனுள் நின்ற செவ்வேள் முன்ப முறத்
தஞ்சைத் திருப்புகழ்ப்பாச் சாற்றுகின்றேன்-மஞ்சையெதிர்
காண்டோறும் ஆடுங் கலாபமயில் வாகனமும்
ஒண்டோய்வே லுந்துணை கொண்டே - (காப்பு-1)

பெரிய கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் வடகோடியில் அமைந்துள்ள முருகன் கோயில் ஐம்பத்தைந்து அடி உயரமுள்ள அழகிய கோபுரத்துடன் கூடிய இக்கோயில் அற்புதமான சிற்ப வேலைப் பாடுகளுடன் அமைந்துள்ளது. கருவறையில் உள்ள ஆறுமுக உருவம் மயில் திருவாச்சியாகவும் ஒரே கல்லில் செதுக்கப்பெற்று அழகுப் பொலிவுடன் விளங்குகிறது. தஞ்சாவூரில் உள்ள சைவ ஆலயங்களில் முருகன் ஆறுமுகத்துடன் காணப்படுவது இக் கோயிலில் மட்டுமே ஆகும், தஞ்சமென நாடி வருவோர்க்கு அஞ்சேல் என்று காக்கும் கடவுளாக இங்கு முருகன் காட்சி யளிப்பதை அருணகிரிநாதரும் தம் திருப்புகழால் போற்றிப் புகழ்வர். இப்பெருமை வாய்ந்த முருகனைப் பற்றி தண்டபாணி சுவாமிகள் பதிகம் மட்டும் பாடாமல் திருப்புகழ்ப் பதிகமாகப் பாடியுள்ளார்.

ஒலி நயமும் இசை நயமும் ஒருங்கே பெற்று அமைவது திருப்புகழ்ப்பாடல். சந்தக்கவி என்றும், புதிய அமைப்பில் இது அமையும் தன, தான, தாத்த, தந்த,தாந்த, தன்ன, தய்ய என்னும் எட்டு அடிப்படை ஒலி அலகுகளைக் கொண்டு யாக்கப்பெறும். இத்திருப்புகழ்ப்பா இசையோடு பாடற்குரிய நான்கடிகளும் அளவொத்து வந்த விருத்தத்தின் பாற்படும். இத்தகைய வண்ணச் சந்தங்களை முதன்முதலாக அமைத்துப் பாடிய பட்டினத் தடிகளின் யாப்பமைதியினைப் பின்பற்றி அடிதோறும் ஈற்றில் 'தொங்கல்' என வழங்கும். தனிச் சொற்களை அமைத்துப் பாடித் திருப்புகழ் வரலாறு படைத்தவர் அருணகிரிநாதர் ஆவர். இவரைப் பின்பற்றி வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பல திருப்புகழ்ப் பாடல்களை இயற்றியுள்ளார். திருப்புக்காவூன் (2:11) திருப்புகழோன் (4:11 5:11) என இவர்தம் பதிகந்தோறும் குறிப் பிட்டுள்ளார். தஞ்சைச் சுப்பிரமணியர் பேரில் அமைந்த பதிகப்

பாடல்களை திருப்புகழ்ப் பாக்களால் அமைத்துத் திருப்புகழ் பதிகம் பாடிச் செந்தமிழ்வேளின் சிறப்புரைக்கிறார் தண்டபாணி சுவாமிகள். மேலும் சுப்பிரமணியர் திருப்புகழ் பதிகத்தில் முருகனைத் தமிழோடு சேர்த்துக் கூறி மகிழ்வதில் இவருக்குள் ஈடுபாடும் ஆர்வமும் சுவைத்து இன்புறத் தக்கதாகும்.

'தமிழ்ச்சந்த மிட்ட தோள்கள் உடையானே' (6:2)
'துகளறு சமரச விஞ்சைச் செஞ்சொற் புலவனே' (6:7)
'தகவின ருளமகிழ் சந்தத் தொங்கற் குமரேசா' (6:7)

என முருகன் புகழைத் தமிழோடு இயைந்து கூறியுள்ளார்.

முருகன் தந்தைக்குபதேசம் செய்தது (6:1), முருகம்மைக்குக் கைவரைச் செய்தது (6:3), முரட்டுக் கீரனுக்கு அருளியது (6:3), பிரமனைச் சிறையிலிட்டது (6:4), குறமகளிடம் தேனும் தினை மாவுமுண்டது (6:5), அருணகிரியைப் கிளியாகக் கையில் அமர்த்தியது (6:8), குன்றுதோராடியது (6:8), சிவன் நெற்றிக் கண்ணிலிருந்து பிறந்தது (6:9) ஔவைக்கு அருளியது (6:11) என இவ்வாறு பல புராண வரலாற்றுச் செய்திகளை இப்பதிகங்களில் கூறியுள்ளார். மேலும் முருகப் பெருமான் தன் கனவில் தோன்றி நீ முற்பிறப்பில் அருணகிரியால் அவதரித்திருந்தாய் எனக் கூறி மகிழ்ந்ததாக இவர் தஞ்சைச் சுப்பிரமணியர் திருப்புகழ்ப் பதிகத்தில் கூறியுள்ளார்.

அந்திபகலுங்கவி வனைந்தணையும் ஒன்றனை
நின் அஞ்சுக மெனுந்தயையும் அவமாமோ? (6:8)

என முருகனிடம் இவர் முறையிடும் பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது.

**காமாட்சியம்மன் கோயில்**

'சத்தியசீர் மன்னுமொழிற் தஞ்சைநகர்க் காமாட்சி
அத்தியுரி போல்த்தானை ஆட்சிகொண்டாய்-
சித்திமுற்றும்

இக்கணமே நல்கி எனதாசை யாயபெரும்
பொக்கணம்மெய் யாகப் புரி' (காப்பு-1)

இத்தகு சிறப்பு வாய்ந்த காமாட்சியம்மன் கோயில் சிறப்புக்குக் காரணம் காஞ்சியில் முகலாயர்களின் படையெடுப்பின் காரண மாக (16-ஆம் நூற்றாண்டு) காஞ்சி காமாட்சியம்மன் கோயிலில் இருந்த இவ்வம்மன் முகலாயர்களால் கவரப்பட்டுவிடும் என்று

கோயிலைச் சார்ந்தவர்கள் இத்தங்கத்தாலான பிம்பத்தைப் பல இடங்களுக்கு எடுத்துச் சென்று இறுதியில் தஞ்சையில் இக்கோயிலில் பிரதிட்டை செய்து வழிபட்டனர். இக்கோயிலின் நீள அகலம் 22 22 மீட்டர் ஆகும்.

முகலாயர்களின் படையெடுப்பின்போது காஞ்சியிலிருந்த இத்தங்கச் சிற்பத்தை அக்கோயிலைச் சார்ந்தவர்கள் செஞ்சிக்குக் கொண்டு சென்று பதினைந்து வருடங்கள் மறைத்து வைத்தனர். பின்பு உடையார்பாளையத்தில் ஐம்பது வருடங்களும் திருவாரூரில் ஐம்பது வருடங்களும் அணக்குடியில் பதினைந்து ஆண்டுகளும் இவ்வம்மன் தங்கிவிட்டு இறுதியில் மன்னர் பிரதாபசிங் (1739–1763) ஆட்சிக் காலத்தில் இப்பங்காரு காமாட்சியம்மன், பாதுகாப்பின் பொருட்டு காஞ்சிபுரத்திலிருந்து இங்குக் கொண்டு வந்து வைக்கப்பட்டது. மன்னர் துளசா -1 காலத்தில் இக்கோயில் விரிவுபடுத்திக் கட்டப்பட்டது. இதைத் தவிர பச்சையப்ப முதலியார் என்பவர் இக்கோயிலுக்குக் கொடையளித்துள்ளார் மற்றும் தஞ்சையிலிருந்த புகைப் படக்காரர் ஒருவரின் மனைவியான அம்மாள் அவர்களால் மகாமண்டப வடக்கு வாயில் கட்டப்பட்டுள்ளது. இரண்டாம் சரபோசி மன்னர் 1805 ஆம் ஆண்டு இக்கோயிலுக்கு பல திருப்பணிகள் செய்துள்ளார். 1874–ஆம் ஆண்டு சிவாசி மன்னரின் மனைவியார் காமாட்சியம்பா பாயிசாகிப் அவர்களால் சில கொடைகள் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டுள்ளன. இவைகள் கல்வெட்டுச் செய்திகளாகும்.

இக்கோயில் அம்மனின் புராணம் காஞ்சிபுராணத்தில் விளக்கப்பட்டுள்ள காமாட்சியம்மன் கோயில் தலவரலாறோடு தொடர்புடையது. தேவர்கள் வேண்ட பண்டகாசுரனை அழிக்க காமாட்சி தோன்றினாள். காமாட்சியானவள் பங்காரு காமாட்சியாகவும், மூலவராகவும் பிலாபாசத்திலும் ஸ்ரீசக்கரத் திலும் தபஸ்காமாட்சி நிலையிலும் காணப்படுகிறாள். பங்காரு காமாட்சி தஞ்சைக்கு வந்து சேர்ந்து விட்டாள். பிற காமாட்சி வடிவங்கள் காஞ்சி காமாட்சியம்மன் ஆலயத்திலேயே வீற்றிருக் கின்றன. பங்காரு காமாட்சியானவள் காஞ்சிக்காமாட்சியம்மன் கோயிலின் தற்போதைய மூலவர் காமாட்சி அமர்ந்துள்ள காயத்ரிமண்டபத்தின் தெற்கில் அமைந்துள்ள மேடையில் தனிச் சன்னதியில் வீற்றிருந்தார். தற்போது அங்கு பங்காரு காமாட்சி

இருந்த இடத்தில் அவளது பாதங்கள் செய்விக்கப்பட்டு 1942-ல் காமகோடி பீடாதிபதி ஸ்ரீசந்திரசேகரஸ்திர சரஸ்வதியால் பிரதிட்டை செய்யப்பட்டு வைக்கப்பட்டது.

**காமாட்சியம்மன் பதிகம்**

சிங்க வாகன மேற்றது (3:1) சம்பந்தருக்கு முலைப் பாலூட்டியது (3:2) அபிராம பட்டருக்கு அருளியது (3:7) ஐவரும் தொழும் அன்னையாக திகழ்வது (3:8) முருகனுக்கு வேள் வழங்கியது (3:9) விநாயகனுக்கு படைக்கலங்கள் வழங்கியது (3:10) இத்தகு சிறப்பு வாய்ந்த காமாட்சி அம்மனை தண்டபாணி சுவாமிகள் தம் காமாட்சியம்மன் பதிகத்தில்,

'தஞ்சை நகர் ஆளவரு காமாட்சி'

என்னும் மகுடத்தோடு கூடிய பத்துப் பாடல்களால் அம்மையின் சிறப்பை எடுத்துரைக்கக் காணலாம். அத்துடன்,

"அணிமேவு கச்சிநகர் வெட்குறத் தஞ்சை
நகர் ஆளவரு காயாசி (3:11)

என்னும் பாடலடிகளில் காமாட்சியம்மன் காஞ்சியிலிருந்து தஞ்சை வந்த வரலாற்றை இவர் கூறுவது கல்வெட்டு ஆதாரங் களுடன் ஒத்துப்போகிறது.

**சங்கரநாராயணர் கோயில்**

"மக்களுருப் பெற்று பரைபோலும் வன்புசெய்வார்
திக்கனைத்தும் வென்றுவக்கும் தீங்கறுப்பது என்நாளோ?
செக்கரோடு சூன்முகிலும் சேர்ந்த லெனத்திகழ்வாய்
தக்கபுகழ்த் தஞ்சை நகர் சங்கர நாராயணனே" (1)

இக்கோயில் சிவகங்கை கோட்டை வாயிலுக்கு அருகாமையில் அமைந்துள்ளது. சைவ, வைணவ ஒற்றுமையின் பொருட்டு மராட்டிய மன்னர் காலத்தில் சங்கரநாராயணன் வழிபாடு பின்பற்றப்பட்டுள்ளது. சோழ மன்னர்கள் வைணவ ஈடுபாடு மிக்கவர்கள். இவர்களது காலத்தில் சமயப் பூசல்கள் இல்லாமல் இருந்ததில்லை. சைவசமயச் சார்பு மிக்க சோழ மன்னர்களுள் இரண்டாம் குலோத்துங்கன் வைணவ சமயத்தைப் புறக்கணித்து உள்ளான். அது மட்டுமின்றி தில்லை நடராஜ பெருமானுடன் இடம்பெற்றிருந்த கோவிந்தராஜப் பெருமானுடைய கோயிலை மூடியதோடு அவரது சிலையை கடலில் வீசச் செய்தான்.

இச்செய்தியைத் தக்கயாகப் பரணி குலோத்துங்க சோழனுலா இராஜராஜ சோழனுலா ஆகியவற்றில் குறிப்பிட்டிருக்கக் காணலாம். தஞ்சையின் நாயக்க மன்னர் காலத்தின் ஒரு பகுதியில் சிவாலயமான தஞ்சைப் பெரியகோயில் சிறு கோட்டையால் சூழப்பட்டு நுழைவாயிலும் மூடப்பட்டிருந்த குறிப்பு கிடைக்கப் பெற்றுள்ளது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் கி.பி. 1200ஆம் ஆண்டில் அந்தணர்கள் தென்னாட்டுச் சைவத் துறவியரின் மடங்களை அழித்தனர். இத்தகைய பாகுபாடுகளை அகற்றுவதற்காக சங்கரநாராயணர் வழிபாடு தோன்றலாயிற்று. தஞ்சையில் அமைந்துள்ள பழமையான இக்கோயில் இறைவனின் இடது பகுதி திருமாலாகவும் வலது பகுதி சிவபெருமானாகவும் அமைந்திருக்கக் காணலாம்.

இங்கு எழுந்தருளியிருக்கும் சங்கரநாராயணர் பார்வதி லட்சுமி சமேத சங்கரநாராயணர் ஒன்று கல்வெட்டு செய்தி கூறுகிறது. இத்தகு சிறப்பு வாய்ந்த சங்கர நாராயணனை தண்டபாணி சுவாமிகள்,

> "எத்தடையாலேனும் இதயக் கலக்க மென்றும்
> தத்தடையார் தஞ்சைநகர் சங்கர நாராயணனைச்
> சித்தடைய வேண்டுந் திருப்புகழோன் செப்புகவி
> பத்தடையப் போற்றிப் பயன்பலவும் எய்திடுமே" (11:4)

என்று சங்கர நாராயணனைப் போற்றும் இப்பதிகத்தைப் பாடித் துதிப்போர்க்கு எல்லாப் பயன்களும் கிடைக்கும் என சுவாமிகள் கூறுகிறார். தஞ்சையை மட்டுமின்றி தஞ்சையைப் போல் உள்ள பல சிறப்பு வாய்ந்த ஊர்களையும், புண்ணிய தலங்களையும் பற்றி சுவாமிகள் பல்லாயிரம் பாடல்களை, தமிழ் வளத்துடனும், இசை நயத்துடனும், படிப்பவர் எளிதில் புரிந்து கொள்ளும் எளிய நடையிலும் பல பக்திப்பாடல்களைப் பாடியுள்ளார். வளர்க அவர் வகுத்த தமிழ்; வாழ்க அவர் புகழ்.

**துணைநின்ற நூல்கள்**


1. தஞ்சைக் கோயிற்பாடல்கள், வே. இரா. மாதவன், பாவை வெளியீட்டகம், தஞ்சாவூர், 1995
2. தஞ்சை நகரிய சக்திக் கோயில்கள், க. குளத்தூரான், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1994.
3. தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள், செ. இராசு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1983.
4. நெஞ்சை அள்ளும் தஞ்சை, செ. இராசு., கொங்கு ஆய்வு மையம், தஞ்சாவூர், 1994.

# வருக்கக் குறள் - அமைப்பும் வண்ணச்சரபத்தின் மறுமலர்ச்சியும்

கா. கவிதா

தமிழ்மொழியில் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும், மெய் யெழுத்துக்கள் பதினெட்டும், உயிர்மெய் எழுத்துக்கள் இருநூற்றுப் பதினாறும், ஆய்த எழுத்து ஒன்றும் ஆக இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்களையும், நெடுங்கணக்கு எனப் பெயரிட்டு தமிழ் மொழி இலக்கண ஆசிரியர்கள் பட்டியலிட்டுக் காட்டுவார்கள். அது பிற்கால இலக்கண ஆசிரியர்கள் காட்டும் நிலையாகும். ஆனால் தொல்காப்பிய உயிர் எழுத்துக்களையும், மெய்யெழுத்துக்களையும் முதன்மை எழுத்துக்கள் என்றும், குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் ஆகிய எழுத்துக்களைச் சார்பெழுத்துக்கள் என்றும் கூறும். உயிர்மெய் எழுத்துக்களை அது தனித்துப் பேசாது. ஆனால் நன்னூல் இலக்கணம் சார் பெழுத்துக்கள் பத்து வகைப்படும் என்றும், அவற்றுள் உயிர்மெய் எழுத்துக்களாகிய இருநூற்றுப் பதினாறும் சார் பெழுத்துக்கள் ஆகும் என்றும் அவ்விலக்கணம் வரையறுக்கும். நன்னூல் இலக்கண அடிப்படையில் தமிழ் மொழியில் இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்கள் உள்ளன. (உயிர் 12 + மெய் 18 + உயிர்மெய் 216 + ஆய்தம் 1 ஆக மொத்த எழுத்துக்கள் 247).

தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்கள் எல்லாம் சொல்லுக்கு முதல் எழுத்தாக வருவதில்லை. ஆகவே சொல்லுக்கு முன் வரும் ஒலி எழுத்துக்கள், சொல்லுக்கு முன்வாரா எழுத்துக்கள் என்பனவற்றை இலக்கண நூல்கள் வரையறுத்துக் காட்டும். எனினும் காலப்போக்கில் சொல்லுக்கு முதல் வராத எழுத்து என்று இலக்கண நூல்களால் விலக்கப்பட்ட முதல் ஒலிகள் காலப்போக்கில் முதலாகவும் வரத் தொடங்கிவிட்டன. "ய" என்ற உயிர்மெய் எழுத்து முதலில் வாராது என்று தொல் காப்பியம் விலக்கினும், யவனர் என்ற சொல்லை சங்க

இலக்கியங்கள் கையாண்டு, தொல்காப்பியம் விலக்கிய "ய" என்ற ஒலியை முதலாகக் கொண்டு வருவதை நாம் பார்க்கிறோம். இதே போல சில ஒலிகள் காலந்தொறும் உள்ளே நுழைந்துள்ளன.

ஆயினும் சில ஒலிகள் - எழுத்துக்கள் - முதல் ஒலியாக வாராமல் உள்ளன.

இவ்வாறு முதலில் வரும் என இலக்கண ஆசிரியர்கள் கூறிய ஒலிகளும், அவற்றை மீறிவந்துள்ள சில ஒலிகளும் இருந்தாலும், இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்களும் சொல்லுக்கு முதலாக வரும் எனக் காட்டுவதற்கு, இல்லறத்துறவி, வண்ணச்சரபம், தவத்திரு. தண்டபாணி சுவாமிகள் முயன்றுள்ளார். அகர வருக்கம் என்றும், ககர வருக்கம் என்றும், இந்த ஒலிகளை - அதாவது உயிர்வருக்கம், மெய்வருக்கம், உயிர்மெய் ககரவருக்கம் ...ஆய்த வருக்கம் என இவற்றைப் பிரித்துப் பேசுவோர் உண்டு. வருக்கம் என்பது சார்ந்து வருதல், பரம்பரை என்னும் பொருள்களைத் தரும் சொல்லாகும். அந்த வருக்கம் என்ற சொல்லைப் பயன்படுத்தி இந்த எழுத்துக்களை முதன்மையாக வைத்து செய்யுள் வடிவில் ஒன்றாகிய குறள் வடிவைத் தேர்ந் தெடுத்து இந்த வண்ணச்சரபம் இருநூற்று நாற்பத்தேழு குறள்களை அமைத்து, மொத்தம் இருநூற்று நாற்பத்தேழு குறள்களையும் சேர்த்து, வருக்கக் குறள் என்ற தலைப்பிட்டு, ஒரு நூலை யாத்துள்ளார். குறட்பா என்பது பா வடிவங்களுள் மிகக் குறுகிய வடிவமாகும். ஏழுசீர்களால் ஒன்றே முக்கால் அடியில் கவிநயத்தோடு வரையப்படும் பாவிற்கு குறட்பா எனப் பெயராகும். ஆக இருநூற்று நாற்பத்தேழு குறட்பாக்களால் தமிழ் வருக்கம் காட்டப்பட்டு செய்யுள் வடிவில் நூலாகக் கிடைக்கப் பெற்றுள்ளது.

தமிழ் நெடுங்கணக்கு வரிசையையொட்டிப் படிப்படியாகப் பாக்களை யாத்தவர் முதன்முதலில் தமிழில் "தலைமைப் புலவராய்" விளங்கிய ஔவையார் ஆவார். அவர் ஓரடிப் பாட்டில் அந்த நூலைச் செய்தார். "ஆத்திசூடி" என்ற இறை வணக்கம் பாடி, அவர் அகர எழுத்தில் ஓரடிப்பாவைத் தொடங்கி, வரிசையாக உயிர் எழுத்திற்கும். மெய்யெழுத்திற்கும் ஆத்திசூடி என்ற தலைப்புக் கொடுத்து ஓரடிப் பாட்டால் நூல்

யாத்துள்ளார். அவர் காலத்தில் "ங" என்ற எழுத்து மொழிக்கு முதலில் வரவில்லை. ஆயினும் அவர் அந்த எழுத்தை முதன்மையாக வைத்து, உவமையாக்கி "ங"ப் போல் வளை என்று ஓரடிப் பாட்டை எழுதியுள்ளார். அவ்வாறு எழுதி, அந்த அகர வரிசையில் ஏதும் விடுபடாமல் எழுதியிருப்பது குறிப்பிடத் தக்கது.

இந்த அகரவரிசை முறை அயல் நாட்டறிஞர்கள் தமிழ் நாட்டில் கொண்டு வந்து புகுத்தி, Alphabetical Order என்று அவர்கள் வழங்கி வந்ததை நாம் அகரவரிசை என்று இப்போது மிகுதியாக வழங்கி வருகிறோம். இவ்வாறு அவர்கள் கூறுவதைப் போல தமிழ்நாட்டில் தமிழ்மொழியில் அகரவரிசை முறை என்று என்று ஏற்பட்டு வழங்கவில்லையானாலும், ஔவையார் அவர்களால், இந்த அகரவரிசை முறை நினைக்கப்பட்டு, நூல் உருவாக்கப்பட்டதை அறிந்து நாம் பெருமிதம் கொள்ளலாம். மேல்நாட்டார் தாக்கம் தமிழில் நுழைந்த பிற்பாடு தோன்றிய தண்டபாணி சுவாமிகள், அகரவரிசையில் அகராதிகள் தோன்றியதைக் கண்டவர், ஒவ்வொரு தமிழ் எழுத்தையும் முதன்மையாகக் கொண்டு, தமிழில் உள்ள எழுத்துக்களை, அறிவுறுத்துவதற்கு அகர வரிசையில் குறட்பாக்கள் எழுதி உள்ளார்.

தமிழ் இலக்கண நூல்கள் இருநூற்று நாற்பத்து ஏழு எழுத்துக்களைச் சொன்னாலும், அவற்றுள் அவர்கள் தொண்ணூற்றைந்து எழுத்துக்களே மொழிக்கு முதலில் வரும் என்றும், நூற்று ஐம்பத்து இரண்டு எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வரமாட்டா என்றும், குறிப்பிட்டுள்ளார்கள். ஆகவே மொழிக்கு முதலில் வரமாட்டா என்ற எழுத்துக்களை எப்படி மொழிக்கு முதலில் பயன்படுத்த முடியும்? தண்டபாணியார் அதற்கு இரண்டு வழிகளைக் கண்டுபிடித்துள்ளார். ஒன்று. அந்த எழுத்தை முதலாக வைத்து, அதனை உவமையாக்கிக் குறள் யாப்பது. இம்முறையை இவருக்கு முன்பே ஔவையார் தொடங்கி வைத்துள்ளார். மற்றொருவகை முதலில் வாரா பிற எழுத்துக்களை இரண்டாம் எழுத்துக்களாக வைத்து, அதாவது எதுகைக்குரிய இடத்தில் வைத்து இரு பத்து குறள்களை ஆக்கியுள்ளார். இவர் அவற்றை முதல் எழுத்து ஆக்குவதற்குப்

பெருமுயற்சி செய்திருத்தல் வேண்டும். மொழிப்பற்று அவரை அவ்வாறு ஆக்குவதற்குத் தூண்டியது போலும்!

இவ்வாறு அவர் முயன்று வருக்க எழுத்துக்களுக்கு சொற்களைத் தேடிக்கொண்டு வந்ததால் திருவள்ளுவருடைய திருக்குறள்கள், ஒரு கருத்தைக் கட்டுரை வடிவில் பத்துப்பத்துக் குறள்களால் தருவது போல, ஏதாவது ஒரு கருத்தை வைத்துக் கொண்டு, அல்லது சில கருத்துக்களை ஒன்றுபடச் செய்து கட்டுரை அமைப்புப் போல மனங்கொள்ளுமாறு அவரால் தம் குறள்களைப் பாட இயலவில்லை. ஒரே கருத்துத் தொகுப்பு நோக்கம், இந்தத் தொகுப்பில், இல்லை. ஆனாலும் மொத்த மாக இந்த வருக்கக் குறள்களை நோக்கினால் அவருக்கு முன் நின்ற கருத்துக்கள் இவையென ஓரளவு சொல்ல இயலும்.

வாழ்க்கைத் துணைநலத்தையொட்டிப் பெண்ணின் பெருமையும், கற்பின் வலிமையும், ஆங்காங்கே சுட்டப்பட்டு உள்ளன. அருளுடைமையை அடிப்படையாகக் கொண்ட கொல்லாமை, புலால் மறுத்தல், சீவகாருண்யம் போன்ற ''உயிர்க்காதல்'' ஆங்காங்கு அழகாக தமிழ்ச் சுவையுடன் நெய்யப்பட்டுள்ளன. ஔவையாரும், வள்ளுவரும் பிறசான்றோர் களோடு சேர்த்து குறட்பாவால் போற்றப்படுகின்றனர். இவைகளை ஒட்டிய குறள்கள் பெரும்பாலும் இருபதுக்கு மேல் அமையவில்லை. அருள் தன்மையைக் காட்ட குறள்கள் ஒரே கருத்தில் வரக் கூடியனவாக இல்லை. இந்த இல்லறத் துறவி, தவத்தின் பெருமையை ஒரிரு குறள்களில் புகழ்ந்து பேசியுள்ளார் இக்கருத்துக்களில் எல்லாம் இப்பெரியார் தோய்ந்துள்ளார் என்பதில் ஐயமில்லை. ஆயினும் ''உயிர்க் காதலை'' அடிப்படையாகக் கொண்ட சீவகாருண்யத்தின் மேல் எழும்பிய கொல்லாமை எண்ணமும், புலால் மறுத்தல் வேகமும் இவருடைய அருளுள்ளத்தைக் காட்டிப் பெரும்பாலும் மேலோங்கி நிற்கின்றன. அவற்றையெல்லாம் முழுமையாக இங்கு விரித்து ஆராயவில்லையானாலும், அவர் கூறிய கருவை விளக்கச் சில குறள்களை எடுத்துக்காட்டி, அவரது மனப்போக்கைச் சமுதாயத்திற்கு உருவாக்க வேண்டிய நிலையைக் கூறி, அவர் சமுதாய மறுமலர்ச்சியாளராக இருந்துள்ளார் என்பதை வற்புறுத்திச் சொல்ல இக்கட்டுரை விரும்புகிறது.

பேரறிஞர்களால் வற்புறுத்தப்பட்ட சமுதாய ஒழுகலாறுகள், அரசியல் படையெடுப்புக்கள் போன்ற காரணங்களால் அந்த ஒழுக்கங்கள் கெட்டு, சமுதாய அமைப்பில் சீர்குலைவு ஏற்பட்டு, பொருளாதாரத்தில் மந்த நிலை தோன்றியதாலும், பல்வேறு சமயங்களின் நடவடிக்கைகளினாலும், அந்த நல்ல ஒழுக்கங்கள் நலிந்து, மாறி, சமுதாயக் கட்டுக்கோப்புத் தளர்ந்து, வறுமை தோன்றித் தொல்லைப் படுத்தத் தொடங்கிய காலத்தில், மீண்டும் அந்த நல்ல சீரிய ஒழுக்கங்களைப் பெரியோர்கள் தோன்றி சமுதாயத்திற்கு அறிவுரை கூறி, சமுதாயத்தை மறுபடியும் மலரச் செய்வதை "மறுமலர்ச்சி" என்கிறோம். தமிழகத்தில் திருவள்ளுவர் கூறிய நல்லொழுக்கங்கள் உலக முழுமையும் போற்றப்படுகின்றன. அறம், பொருள், இன்பம் ஆகியவற்றை அவர்தம் குறட்பாக்களால் வரையறுத்து விளக்கி உள்ளார்.

அறவினை என்றால் என்ன? வள்ளுவரே இக்கேள்வியை எழுப்பிக்கொண்டு பதில் சொல்கின்றார்.

"அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்."

எனவே, கொல்லாமைதான் அறச்செயல் ஆகும், என்பது வள்ளுவர் முடிபு. அதுமட்டுமா? நல்ல வழி எது? அவர் கூறுவதைக் காண்போம்.

"நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி."

எனவும் வினா-விடை முறையில் குறள் யாத்துள்ளார். எந்த உயிரையும் கொல்லாதிருத்தலே நல்ல வழி. இந்த வழிகள் பெண் தலைவியான ஔவையாராலும் போற்றி வற்புறுத்தப்படுவதை,

"நோன்பென்கை கொன்று நுகராமை என்றுரைத்தாள்
தான்பெண் இனத்தின் தலை." (126)

என நம் தண்டபாணியார் காண்கிறார்.

இந்த அறத்தையும், நல்லாற்றினையும், பிற சமயங்கள் தமிழகத்தில் நுழைந்து மாற்ற முயற்சித்தன. இசுலாமியரும், ஐரோப்பியரும், இங்குள்ள இந்த நற்செய்கைகளுக்கு மாறாக,

உயிர்களைக் கொன்று, புலாலை உணவாக வைத்து, மக்கள் தமிழகத்தில் தாண்டவமாடிய நிலையை, நம் தண்டபாணி சுவாமிகள் கண்டார். வள்ளுவர் கொள்கையும், ஔவையின் போற்றுதலும் சீரழிந்த நிலை கண்டு அவர் மனம் வருந்திற்று. அவ்விருவர் சொற்களும் பயனில்லாமல் இருந்தன. ஆகவே,

"ஔவையொடு வள்ளுவனும் ஆராய்ந் துரைத்தநெறி
செவ்வையெனத் தேர்ந்தோர் சிலர்." (12)

ஆராய்ந்து தெளிந்த உரையை தண்டபாணி சுவாமிகள் வற்புறுத்த முயன்றார். ஆகவே அக்காலச் சமுதாயத்திற்குக் கொல்லாமையையும், புலால் உண்ணாமையையும் அறிவுறுத்தி மறுமலர்ச்சி ஏற்படுத்த குறள்வழி முயன்றார்

அருள் என்பது கொல்லாமை, ஊன் தின்றல் கொல்லுதலே யாகும், கொல்லாதவனையும், புலால் மறுத்தவனையும் எல்லா உயிரும் தொழும் என வள்ளுவர் கூறிய வாக்குகள் அவருடைய நெஞ்சை அழுத்தின. நூலோர் தொகுத்தவற்றுள் தலையானது பல்லுயிர் ஓம்புதலும், பகுத்துண்ணுதலும் அல்லவா? இவ்வாறு செய்ய வேண்டியவர் ஓர் உயிரைக் கொல்லலாமா? பல நூல்களும் சொல்வது என்ன? அவர் கூறுவதைக் கேட்போம். பன்னூல் துணிவைத் தொகுத்துக் கூறுகிறார்,

"கொல்லும் தொழிற்போல் கொடும்பாவ மில்லையெனச்
சொல்லும்சொல் பன்னூற் றுணிவு." (41)

வள்ளுவர் நூலோர் தொகுத்தவற்றுள் தலையாயதை எடுத்துக் காட்டியதைப் போலவே, பல்லோர் பனுவல்களிலும் உயிர்க் கருத்தாய் உள்ளதை தண்டபாணி சுவாமிகள் எடுத்துக்காட்டி யிருப்பது போற்றிப் பாராட்டுதற்கு உரியதாகும். இதுவல்லவா மறுமலர்ச்சி.

சமுதாயத்தில் இல்லறம் பெருமையாகக் கருதப்படாமல், துறவறம் உயர்வாக பேசப்பட்ட நிலையில், மாற்றம் கண்டு, பெண்களைப் பெருமைப்படுத்திப் பேச எண்ணி, அவர் எழுதிய குறள்களும் மறுமலர்ச்சி எண்ணம் கொண்டவையே ஆகும். உயர்ந்த கவிஞராக ஔவையாரைப் – பெண்ணின் தலை – என்று குறிப்பிடுவது (126) வியப்பூட்டவும் செய்யலாம். பெண்ணைப் பெருமைப்படுத்தும் வருக்கக் குறள்களையும் காணலாம். கற்பின் வலிமையையும் அவர் புகழ்கிறார். இல்லறத்தாலும் துறவியாகி,

உயர்ந்து வாழக்கூடும் என வாழ்ந்து காட்டிய அவர், இரு அறங்களையும் போற்றுகிறார் எனச் சொல்லலாம் அல்லவா? எனவே அவர் வாழ்க்கையே புரட்சி வாழ்க்கை அன்றோ!

நூல்களில் பெண்களைப் பற்றிக் கூறப்படாமல் இருந்தால் அந்நூல் இனிக்காது என்று சொல்லும் அவர் கருத்து, நூல் இலக்கணத்தை அவர் கண்ட நெறியை நமக்குக் காட்டுகிறது· அவர் கூறும் குறள்,

"நௌவி விழியார் நலஞ்சிறிதும் நாட்டாத
செவ்வியநூற் பாஇனியா தே" (127)

சிறந்த பாக்களை உடைய நல்ல நூலானாலும், சிறிது கூட மான்விழியாராகிய பெண்களுடைய நலம் சிறிதும் பாராட்ட வில்லையானால், அந்நூல் இனிக்காது எனத் துணிந்து சொல்கிறார் இத்துறவி. இந்த நயத்தைச் சுவைத்த தண்டபாணி சுவாமிகள், மன்மதனைப் பற்றி மோனைகளோடு கூடிய, கவிநயம் சான்ற "கிஞ்சுகவாய்க் கிள்ளைக் கிழவோன்" (34) என்று கூறுவது நோக்கத்தக்கது. மகளிர் சொல் கைத்ததாக கருதுவோரும், உருகக்கூடிய வண்ணத்தமிழுக்கு உருகுவார் என்கிறார் இந்த வண்ணச்சரபம். இந்தத் துறவி சிறிதும் கூசாமல் பெண்ணின் மார்பகத்தைக் கூடச் சுட்டுகிறார். அவர் கூறும் குறள்.

"சுண்ணந் திமிர்ந்தமுலைத் தோகையர்சொற் கைப்போரும்
வண்ணத் தமிழ்க்குருகு வார்." (60)

எனவே வண்ணத்தமிழின் உருக்கம் உலகில் கிடைக்கும் இன்பங்களுக்கு எல்லாம் மேலானது என்று தமிழைச் சுவைத்து, வண்ணத்தமிழ் பாடிய கவிஞர் கூறுவது அக்கால நிலைக்கு மறுமலர்ச்சியேயாம்.

**ஔவை குறள்**

"மாசற்ற கொள்கை மனத்தமைந்தக் கால்
ஈசனைக் காட்டு முடம்பு"

என இறைவனை உடம்பே காட்டும் என்றும், உள்ளத்தில் இறைவன் உள்ளான் என்றும், மனசில் மாசற்ற கொள்கை அமைய வேண்டும் என்றும் கூறிய, ஔவை குறள் பாரதியாரின் நெஞ்சை அப்படியே அள்ளிக் கொண்டுள்ளது. உள்ளத்தில்

''சுத்தமான, பயமற்ற, கபடமற்ற, குற்றமற்ற, பகைமையற்ற, எண்ணங்களை நிறுத்திக் கொண்டால், உடம்பில் தெய்வத் தன்மை – அதாவது (சாகாத்தன்மை, அமரத்தன்மை) விளங்கும்'' என்ற பொருளை இந்த ஔவை குறள் தருவதாக பாரதி எண்ணுகிறார். இவ்வாறான பெருமையைப் பெண்ணுக்குத் தந்துள்ளார் நம் வண்ணச்சரபம் எனில், அவருடைய மறுமலர்ச்சி எண்ணம் தெள்ளத் தெளிவாகிறதல்லவா? வண்ணச்சரபத்தின் இரு கண்கள் வள்ளுவரும், ஔவையாரும் எனக் கூறின் மிகையாகாது.

வண்ணச்சரபம், இல்லறத்துறவி, தண்டபாணி சுவாமிகள், இல்லற இன்பம் துய்த்து, அதைவிட உயர்ந்த இன்பமாகிய வண்ணத்தமிழில் உருகி, வருக்கக் குறளில் மறுமலர்ச்சி எண்ணங் களைத் தூவி, ஔவையையும், வள்ளுவரையும் துய்த்துப் போற்றி, தமிழுலகிற்கு தமிழ் எழுத்துக்களின் வரிசை முறையைக் காட்டி, அதிலும் மறுமலர்ச்சியும், புரட்சியும் செய்து வருக்கக் குறளைத் தமிழுலகிற்குத் தந்துள்ளார்.

செந்தமிழ் செல்வனான செவ்வேளை பாடி, ஏறுமயில் ஏறி விளையாடும் முருகனை வணங்கி, முருகு நிறைந்த பாடல்களைப் பாடி, தமிழ் வரலாற்றில் அழியாப் புகழ்பெற்ற வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் போற்றுதலுக்கு உரியர். அவருடைய நூல்கள் பலவற்றையும் கற்றும், ஆய்ந்தும், நுகர்ந்தும் பயன் பெறுவோமாக.

# ஆய்வு நோக்கில் அருணகிரிநாத அடிகள் புராணம்

இரா. காஞ்சனா

"அடிக்கும் முன்னோர் விதிக்கும் இன்சொற் சுவைக்கும் ஒரு
குறைவு வராது அமைத்தோர் பாட்டு
முடிக்கு முன்னே தாய் கொடுத்த சேனையெல்லாம்
வாங் குதையோ முதிரக் கல்வி
படிக்கு முன்னே தொடுத்தடுத்துக் கேட்போர்கள்
பிரமிக்கும் படிக்கும் ஒவ்வோர்
நொடிக்கு முன்னற் இனிய கவி முருகதாச
னைப் போல வல்லார் யாரோ"

என்று அழகிய சொக்கநாத பிள்ளையால் பாராட்டப் பெற்ற பாநலம் படைத்தவர் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்.

### அருணகிரிநாத அடிகள் புராணம்

தமிழ்ப்புலவர்களின் தலைவரான அகத்தியமாமுனிக்கும், தமிழ்க்குருவான செந்தமிழ் நூலோனான செவ்வேளின் அருள் பெற்ற அவனது அநுபூதி பெற்ற அருட்கவிஞர் அருணகிரிநாதர், முருக, தத்துவத் தனிப்பெருங்கவிஞர்.

### ஸ்ரீதண்டபாணி சுவாமிகளின் அருணகிரிநாத அடிகள் புராணம்

தனக்கு முன் வாய்மொழிக் கதைகளாகவும், உரைநடை யிலமைந்த வரலாற்று நூல்களாகவும் வழங்கி வந்த அருணகிரியாரின் வரலாற்றைப் பெரியபுராணம் போல, செய்யுள் வடிவில் புராணமாக இயற்றியுள்ளார். இப்புராணத்தைத் தாமே பாடவில்லையென்றும், ஆறுமுகக் கடவுளின் அருளால் அவன் அவரது உள்நின்று உணர்த்த, உணர்த்தியவாறு தாம் பாடியதாகவும் இவர் குறிப்பிடுகிறார்.

தன்னை உள்ளிருந்து இயக்கும் ஒருவன் முருகன் என்றும், தம் மனதினில் இருக்கும் கருத்தை எழுதப்புகும்போது அவன்

அதை மற்றொரு வண்ணம் மாற்றிக் கூறுவதால், அவன் கூற்றுப் படியே தன் கை எழுதுகிறது என்றும் கூறுகிறார் தண்டபாணி அடிகள்.

"என்பாட லேயென யான்பாடும் பாடல்கள் யாவையும் சேய்
தன்பாட லேயெனச் சாற்றுகின்றானெந்தத்
தன்மைகொண்டா',

என்றும், "என் மனதில் ஒன்றெண்ண என் கை மற்றொரு வண்ணம் எழுதிடும் என்றும்", கூறியவர்.

பொதுப்பாயிரத்தின் கண், முருகக் கடவுள் வணக்கத்திலும்

"குகப் பெருமானே எனை நீ அன்பாற்
கூறுகெனச் சொன்னபடி நின் அருணகிரி
சரிதம் குலவச் செய்யே"

என வேண்டுகிறார். இதே போன்று கலைமகள் வணக்கத்திலும்,

"வடிவேல் கொண்ட,
சாமியாம் தந்தைமாற்றம் தவறிடா துரைக்கலுற்ற(து)
ஆமிதில், பிழைவா ராமல் அருள்வதுன் கடன்கண்டாயே"

எனக் கூறும்பொழுதும் முருகப் பெருமானின் அருள்மொழியைக் கொண்டே இந்த வரலாறைப் பாடத் தொடங்கியதைச் சுட்டுகிறார்.

**புராணம் பாடியதன் நோக்கம்**

அருணகிரியாரை வணங்கும் பாடலில் "உன்சரிதந் தனைப் பலவாறுலகத்தார் பகர்வது கேட் டுளம் பொறாமல்முன்சரிதந் தனைக் கூட்டிச் சொலப்புகுந்தேன். அவையாவும் முறையிற் றந்தாள்" எனக் குறிப்பதுடன்,

"யானிதிற் பகர்ந்த வாற்றுக், கிசைந்திடா வாதமும் சில்லோர்
நானிலத் துரைப்ப துண்டு நலந்திகழ் அருணைநாதன்
கானிடைக் குறத்தி கோன்றன் கழல்பணிந் துய்த்த வாற்றை
வானின் மென் மலர்கொண் டுற்ற வண்மையை மறுத்திடாரே".

என்றும் கூறுவதால் வழக்கிலிருந்த சில உண்மைகளைத் தான் புராணத்தில் அமைத்துப் பாடியதை உணர்த்துகிறார்.

**கருத்து வேறுபாடுகள்**

அருணகிரியாரின் வரலாற்று நிகழ்வுகள் பற்றியும், அவரது பிறப்பு, குலம், இல்லற வாழ்வு, காமநாட்டம், சுகவடிவு

பெற்றமை, திருப்புகழ் பாடுமுன் முருகன் தம் வேலால் அருளியமை, "முத்தைத்திரு..... என வோது" என அடியெடுத்துக் கொடுத்தமை போன்ற கூறுகள் பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

**அருணகிரியாரின் தந்தை பற்றிய கருத்து வேறுபாடு**

திருவெண்காடர் எனும் பட்டினத்தடிகள் காலமும் அருணகிரியார் காலமும் வேறுபட்டன. இடையே நானூறு ஆண்டு இடைவெளி உள்ளது. எனவே இக்கருத்து சரியன்று என்பது சிலர் கருத்து. பட்டினத்தாரின் காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி. அருணகிரியாரின் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டின் இறுதியும் 15–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியு மாகும். எனவே இது பின்னாளில் புனைந்து சேர்க்கப்பட்ட ஒரு கற்பனைக் கதை எனவும் இது பட்டினத்தாரின் தூய துறவு நெறிக்குக் களங்கம் கற்பிப்பது எனவும் ஆய்வாளர் கருதுவர். (பி. ஸ்ரீ. அருண கிரிநாதரின் வாழ்க்கை வரலாறு ப. 85)

மேலும் அருணகிரியார் தம் பெற்றோரைப் பற்றிக் குறிப்பிடுகையில் சீலமுள தாயார் தந்தை என்றே கூறுகிறார். எனவே கல்வி செல்வம் மிக்க ஒரு பெருங்குடியில் தோன்றி இளமையில் தக்க புலவர் பெருமக்களிடத்தில் தமிழும் வடமொழியும் பயின்று, இருமொழிகளிலும் புலமை எய்திப் பெற்றோரால் இளமையிலேயே மணம் செய்விக்கப் பெற்று, மனைவியோடு இல்லற வாழ்க்கை நடத்தி வரும் நாட்களில் ஊழ்வினை பயத்தால் இன்பத் துறையில் எளியராகிப் பரத்தையர் பலரொடு உறவாடித் தம் முன்னோர் தேடிவைத் திருந்த பொருளையெல்லாம் அழித்தனர் என்று திரு. சதாசிவப் பண்டாரத்தார் கூறுகிறார். இதற்கான ஆதாரம் திருப்புகழிலும் கிடைக்கிறது. (மேற்படி ப. 86)

பிறிதொரு சாரார் இதற்கு மாறுபட்டு பட்டினத்தடிகளென ஒருவரே இருந்தார் எனச் சொல்வதால் ஏற்படும் சிக்கல்தான் இது எனவும் திருவள்ளுவரில் இருவர், ஔவையாரில் மூவர், பிரபுட தேவ மன்னரில் மூவர் என்று கொள்வது போல திருவெண்காடரும் இருவராகலாம் எனக் கூறி தண்டபாணி சுவாமிகளின் கூற்றை அரண் செய்கிறார் தி. செ. முருகதாச

அடிகள். (அருணகிரிநாத அடிகள் புராணம் - தெளிவுரை ப. 50)

மு. அருணாசலமும் பதினோராம் திருமுறையில் உள்ள 5 பிரபந்தங்களைப் பாடியவர் ஒரு பட்டினத்தார் எனவும், பட்டினத்தார் பாடல்கள் என்ற திரட்டுப் பாடல்கள் பாடியவர் ஒருவர் எனவும், முறையீடு, புலம்பல், இரங்கல், ஞானம் எனப் பாடியவர் (பட்டினத்தார் ஞானம்) பிறிதொருவர் எனவும் கூறுகிறார். (தமிழ் இலக்கிய வரலாறு பத்தாம் நூற்றாண்டு ப. 364). திருப்புலம்பல் பாடிய பத்திரகிரியார் (மன்னனாக இருந்து, பின் பட்டினத்தாருக்கு அடியாராகிச் சித்தர் பாடல்கள் பாடியவர்) காலம் பதினான்காம் நூற்றாண்டு. ஆகையால் பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு பட்டினத்தார் உண்டு என்ற உண்மையை உணர முடிகிறது. (ஆதாரம், மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 14ஆம் நூற்றாண்டு, பக். 384, 389)

எனவே இவரே அருணகிரியாரின் தந்தையாகலாம். திருவெண்காடன் என்ற பெயரில் பட்டினத்தார் வாழ்ந்த போகம் நிறை பெருவாழ்வு புலப்படுகிறது என்பார், ச. வே. சுப்பிரமணியன் (தமிழ் இலக்கியக் கொள்கை .6. ''பட்டினத்தார்'', ப. 209 மேற்கோள் திருவிடை மருதூர் மும்மணிக் கோவை 19.)

> ''பட்டைக் கிழித்துப் பரு ஊசி தன்னைப் பரிந்து எடுத்து
> முட்டச் சுருட்டி என்மொய் குழலாள் கையின் முன்
> கொடுத்து
> கட்டியிருந்த கன மாயக்காரி தன் காமம் எல்லாம்
> விட்டுப் பிரிய என்றே இங்கனே சிவன் மீட்டதுவே''

(பொது.8) எனும் தன் வாழ்க்கை அனுபவப் பாட்டும் மாயை வலைப்பட்டு, இவர் இன்ப வாழ்வு நாட்டம் பெற்றிருந்த செய்தியைச் சுட்டுகிறது எனலாம்.

ஆயின் இங்கு சுட்டப்படும் திருவெண்காட்டடிகள் பற்றிய குறிப்புகள் யாவும், தவச் சிறப்பால் ஆற்றிய அருட்செயல்கள் யாவும் பட்டினத்தடிகள் என்று அறியப்படும் கி.பி. 9-இல் வாழ்ந்த திருவெண்காடரைக் குறித்தனவே என்பதால் இவ்வமைதியை ஏற்க இயலாது எனலாம்.

**அருணகிரியார் பற்றிய கதைகளும் கருத்து மாறுபாடுகளும்**

திருவண்ணாமலை நகரத்தில் சக்திவேல் குமரனை நித்தியம் பக்தி செய்யும் முத்து என்னும் ருத்திர கணிகையின் குலவிளக் கெனப் பண்டைய தவத்தின் பயனாக கலி 46 ஆம் நூற்றாண்டில் கொற்றவேல் குமரன் தொண்டர் தம் அணிகலம் அருணகிரி நாதர் அவதரித்த தருளினார் என்று அருணகிரியார் சரித்திரத்தைத் தொடங்குவது மரபு. (மேலது ப. 65)

அருணகிரியாரின் பாட்டியும் தாயும் இறக்க 'தமக்கை சலியாமல் தரும் பொருளை வாங்கி வாங்கிப் புயல் பொழிந்தா லெனக் கொடுத்துக் கணிகையர்தம் மனை தோறும் புகுந்து மீண்டார். தமக்கை இவரைக் கும்பியில் வைத்து ஆதரித்தார். பலதாயர் கூடி ஒருருவம் கொள்ளல் போன்றாள் அவள். தான் பெருநோயால் பீடிக்கப் பட்ட பின்னரும், தன்வீட்டு மேடை சிறு குச்சான விதம் கருதாதிருந்த அருணகிரியார் கணிகையர் இல்லம் போக மாடை கொடுத்தனுபுமாறு தமக்கையிடம் கேட்கிறார். அப்பொழுது அவர் தமக்கை,

> "யானுமொரு கணிகையன்றி வேறிலன் நீ
> விரும்பு நலம் என்பாற்றுய்ப்பாய்
> ஏனுனக் கத்தனை தூரம் செலும் வருத்தம்"

எனக் கேட்க அம்மொழித் தீயாய் அவர் காதில் புகுந்தது. மனதின் மின்னார் வானுடலில் கொள்ளும் மையலை ஒருங்கறச் சுட்டது. தம்பியின் மனம் செம்மையுற வழிகாட்டியது, தமக்கையின் சொல். அதனால் மனம் வருந்தித் தன் தவறுக்குப் பரிகாரமாக திருவருணைக் கோவிலில் அமைந்துள்ள வல்லாளன் கோபுரத்தில் ஏறி கீழே குதித்துத் தன் உயிரைவிட எண்ணினார்.

> "முழு நீற்றுப் பொலிவும் கொற்றத்தண்டும்
> நல்லாடைக் கோவணமும் கொண்டிருந்த"

முருகன் அவரைக் கீழே விழாது தங்கி, கொல்லாமல் கீழ் விடுத்து ஆறெழுத்து மந்திரத்தை உபதேசித்து அருளினார்.

> "யாம் உனக்குச் சொல்லல் கவுமாரச் சடாச்
> சரமதனை இயம்பச் சோம்பேல்
> பாமுழுதும் இயற்றும் நலம் பாலிக்கும்
> உலக முற்றும் பரவச் செய்யும்

நீ முனைநாள் இருந்தவிதம் தனையுணர்த்தும்
சில நாளில் நெடுவேற் செவ்வேள்
தூமுறுவற் கனிவாயர் தம்மோடு
மயில் மீதில் துலங்கச் செய்யும்''

என்று உபதேசிக்க, தனக்கு உபதேசித்த அவன் குமர குருபரவேள் என அறியாது தன்னையொத்த தவசி எனக் கருதினார் அருணகிரியார் எனக் கூறுகிறார் தண்டபாணி சுவாமிகள்.

அருணகிரியார் குதித்து அருள்பேறு பெற்றமை பற்றிய கதையில், அருள் ஒழுகு கண்ணும் அறம் கிடந்த நெஞ்சுமாய் நின்று ஆறெழுத்து மந்திரத்தை உபதேசித்து முருகன் அல்ல. அது கற்பனையே. இக்கற்பனைக்கு அடிப்படையாய் இருப்பது ''அருணைத் திருக் கோபுரத்தே அந்த வாயிலுக்கு வட அருகில் சென்று கண்டு கொண்டேன்'' என்றும் ''பெரிய கோபுரத்தின் வடபால் அமர்ந்த அறுமுருகப் பெருமானே'' என்றும் ''கோபுர முகப்பில் அருணாபுரியில் நிற்கும் அடையாளக் காரன்'' என்றும் ''அடியன் இடஞ்சல் பொடிய முன்பு உற்று'' என்றும் இவ்விதமாக வரும் அருணகிரியாரின் பாடலடிகள் தாம் எனக் கூறுவாரும் உளர். எனவேதான் தண்டபாணி சுவாமிகள்

''என்னுமொழி உரைத்தான் அன்னவன் குமர
குருபர வேள் எனத் தேர்ந்தில்லான்
தன்னுருவத் தவசி எனப் பணிந்தான்''

எனக் கூறுகிறார். அத்துடன் முன்னர் தவசிக் கோலத்தில் இருந்து கூட்டிய வட புறத்து மாடத்துள்ள முருகன் உருவிற்குள் சென்று மறைந்தான் எனக் கூறுவதன் மூலம் அவ்வாறு வந்து தடுத்தாட் கொண்டவர் அம்முருகப் பெருமானே என்ற தன் எண்ணத்தையும் வெளிப்படுத்துகிறார்.

பிறிதொரு நாள் முருகன் ''குலிசம் திகழ் சூலம் முதல் குளிர்தோள் வலி கண்டு வழுத்து'' எனத் தன் சிறப்பைப் பாட்டுப் பாடிடக்கூறி, ஒப்பறு மலிசீர் செந்தமிழ் வண்மையளித்து அருளினான். அந்நாள் முதல் செந்நாவலர் மெச்சு திறத்தின வாய் அருமைப் பனுவல் பல இசைத்திட்டார் அருணகிரியார் என்று இங்கு கூறுகிறார் தண்டபாணி அடிகள்.

ஆயின் முருகன் தன் வேலாயுதத்தால் அருணகிரியாரின் நாக்கில் எழுதி, ''முத்தைத்தரு'' என்று அடியெடுத்துக் கொடுக்க

முதல் திருப்புகழ் பாடல் பிறந்தது என்பது கர்ணபரம்பரைக் கதை.

இறையருள் இவ்வாறு அடியெடுத்துக் கொடுத்த செய்தியை அநுபூதி பெற்ற புலவர் பலர் வாழ்வில் நிகழ்ந்ததாகக் கூறுதல் பண்டைய பழமரபுக் கதை வழக்கம். சுந்தரர்க்கு 'பித்தா' எனவும், சேக்கிழார்க்கு 'உலகெலாம்' எனவும், அடியெடுத்துக் கொடுத்த அக்கதைகளில் இருந்து உருவானது தான் 'முத்தைத் தரு' என அடியெடுத்துக் கொடுத்த கதையும் எனலாம். ஆயின் தண்டபாணி சுவாமிகள் அருணகிரிநாத அடிகள் புராணத்தில் இவ்வநுபூதியைச் சுட்டவில்லை. ''ஒப்பறுசீர்மலி செந்தமிழ் வண்மையளித்தனனே'' என்றும் அந்நாள் முதல் ''தெள்ளு தமிழ் கொண்டு திருப்புகழே என்னும் பிழையின்றி மிகப் பகர்ந்தார் அருணகிரியார்'' என்றும் தான் குறிப்பிடுகிறார்.

**அருணகிரியார் புராணத்தில் வல்லாள ராஜன் கதை**

அருணாசல மகாத்மியம் போன்ற தல புராணங்களில் குறிப்பிடப்படும் வல்லாள இராஜன் கதையைக் குறிப்பாக எடுத்தாள்கிறார் தண்டபாணி சுவாமிகள். ஹொய்சள மன்னனான வல்லாளன் 14 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். மல்லம்மை / செல்லம்மை என்ற இரு பட்டத்தரசிகள் இருந்தும் புத்திரப்பேறு இல்லாது வருந்திய அவனைச் சோதிக்க அருணா சலேசுவரரே தவவேடம் கொண்டு வந்து, தான் ஒரு விலை மாதுடன் பொழுது போக்க விரும்புவதாகக் கூற, அரசன் அவன் விருப்பத்தை நிறைவேற்றக் கருதி, தனித்திருக்கும் கணிகை யொருத்தியைக் கண்டு அழைத்து வரும்படி ஏவலர்களை ஏவ, ''உயிர்த்தொகையின் உள்ளம் தோறும் மருவும் அருணாசலர், மனைதோறும் தனித்தனியே போய் மாடை நல்கி, இருவருமாய் அமளிமிசை இருந்த'' செயல் காரணமாக அவ்வாறானத் தனித்த ஒரு கணிகையை எங்கு தேடியும் காண இயலவில்லை என்பதால் செல்லம்மையே மன்னனின் வாக்கைக் காக்க எண்ணி அவனிடம் உன்னெறியில் நிற்பேன் என்றாள். இக்கதைக்கும் மூலமாக இயற்கை நாயனார் கதை முன்னரே உள்ளது. அந்த அடிப் படையில் தோன்றியது தான் இக்கதையும் எனலாம். வல்லாள மன்னனின் இக்கதையைத் தனி ஒரு சருக்கத்தில் அருணகிரியார் கிளியுரு எடுத்து வல்லாளன் கோபுரத்தில் திருவருட்பேறு

பெற்றதைக் கூறிய பின்பு, அக்கோபுரத்தின் சிறப்பைக் கூறுவ தாக 'கோபுரத்துச் சருக்கம்' என அமைக்கிறார்.

### அருணகிரியாரும் சார்வ பூமன் என்ற பெயர் பெற்றிருந்த வில்லிப்புத்தூராரும்

வில்லிப்புத்தூரார் ஊர் ஊராகச் சென்று சந்தம் பாடி, தமக் கெதிராகப் பாடித் தோற்றவர்களின் செவிகளைக் கொய்து வந்தாராம். வாட்படையதனால், செந்தகைச் செவி துணையறக் கொய்தலில் சிறந்தோன்'' என்கிறார் சுவாமிகள்.

அருணகிரியாரின் புகழ்கேட்டு அவரையும் தோற்கடிக்க எண்ணி அருணாசலம் வந்தார் வில்லிப்புத்தூரார். அரசனை நடுவராகக் கொண்டு அருணகிரியாருடன் வாதப்போர் தொடங் கினார். இருவரும் ஒருவர் பாடிய பாடலுக்கு மற்றவர் தவறாது பொருள் உரைக்க வேண்டும் என்பது விதி. முதலில் வில்லி பாட, அருணகிரியார் பொருள் கூறி முடித்தார். அடுத்து அருணகிரியார் கந்தரந்தாதி பாடலானார். 53 பாடல்களுக்குச் சரியாகப் பொருள் உரைத்தவர், ''திதத்தத்தத் தித்தத் திதி தாளை'' எனத் தொடங்கும் 54 ஆவது திருப்புகழ் பாட, பாடல் முழுவதும் ஒருவருக்கப் பாடலாக (தகா வருக்கம்) அமைய வில்லிப்பபுத்தூரார் பொருள் கூற முடியாது வருந்தியதை,

> ''திதத்த வென் நுவலோர்பாட்டு
> வந்ததொரு வருக்கத்தால் அருத்தம் சொல்ல
> மாட்டாமல் வேதியன் தான் மாழ்கிச் சோர்ந்தான்''

எனச் சுட்டுகிறார். அரசன் பிரபுட தேவன் அருணகிரியாரே பொருள் விளக்கம் தர வேண்ட, அவ்வாறே கூறிய அவர், வில்லிப்புத்தூராரின் செவியினை அறுக்க ஒப்பவில்லை. 'அவ்வாறு கொய்தலின் பயன் யாது? நான் கொடுத்த காதாக இருக்கட்டும்' என்றார். ''என்னபயன் கொய்ததனால் கொய்யா விட்டால் யான் கொடுத்த காதெனப் பேரிருக்கும் என்றான்'' எனக் குறிப்பிடும் அடிகள் பழங்கதைகளினுள் ஒரு மாற்றத்தை யும் செய்கிறார். ''உம் செவியுடன் உம் வாளையும் உமக்கே தானமாகக் கொடுத்தேன்'' என வில்லியாரிடம் கூறும் அருண கிரியார், 'இனி நீ யாரையும் செவி கொய்யாது விடவேண்டும்' என்று கண்டிப்பாக கட்டளையிட்டார் எனவும் தாம் பாடிய

கந்தரந்தாதிக்கு இனி அவரே உரையை எழுதி முடிக்க வேண்டும் எனவும் கூறியதாகச் சுட்டுகிறது. பழமரபுக்கதை (பி. ஸ்ரீ. முந்துநூல் ப. 74)

ஆயின் தண்டபாணி அடிகள் கருணைக்கு அருணகிரி என்று புகழ்ந்தமையைத் தம் பாடலில் அமைத்தவர் சற்றே இக்கதையை மாற்றி, "அந்தணனும் களி கூர்ந்தான் அவன்கை வாளைப் பின்னு மற்றோனுக்காகாதென்று வாங்கிப் பிரபுட தேவனுக் கனுப்பிப் பேணென்றானே'' என்று கூறுகிறார்.

**அருணகிரியாரும் சம்பந்தாண்டனும்**

சமண மதத்தவனான சம்பந்தாண்டான் பிரபுடதேவ மன்னனின் அரசவையில் இருந்த புலவன். மற்றோர் புகழ்ச்சி கேட்கின் மனமிக வருந்தும் இயல்பினன். மலைமகள் மலர்க் கண் நாடும் திறம் கொண்டவன், அதனால் புவியில் யாரும் திடுககுறத்திகழ்ந்தவன், அன்னவன் ஆவ்வூராரும், அரசனும், தென்னன் நாட்டாழ்வான் மெச்சும் திறத்தினனாக யாரும் கண்டு புகழும் புலவராக அருணகிரியார் இருப்பது கண்டு பொறாமை கொண்டான். உமையம்மையை வழிபட்டுச் சில சித்திகள் பெற்றிருந்த அவன் மன்னனிடம், "நான் உமையம் மையை உன் கண் முன் காட்டுவேன். அது போல் அருணகிரி நாதரை உன் கண் முன் முருகப் பெருமானைக் காட்டச் சொல்'' என்றான். அருணகிரியாரும், செவ்வேட் காட்டலுக் கிசைந்தார்.)

சம்பந்தாண்டான் குறித்த நாளில் அருணசலர் கோவிலில் அம்பிகையைக் காட்சி தருமாறு பல வேள்விகள் வழி, மந்திரம் வழி அழைக்க, "இன்று நீ யழைத்திடில் பிறர் காண வந்து இலங்கிடேன்'' எனக் கூறிவிட்டாள். உயிர் விடுவது போல நாணி அம்பிகை வராவிதத்தை அரசனிடம் கூறினான்.

பிரபுட தேவ மன்னன் முன்னிலையில் மணிரெங்கு இராகத்தில் திசிரதுருவதாளத்தில் பாடத் தொடங்கினார் அருணகிரி. (பி.ஸ்ரீ. மு.நு. ப. 71)

"அதல சேடனாராட, அகிலமேரு மீதாட
அபின காளி தானாட, அவளோடன்று
அதிர வீசி வாதாடும் விடையிலேறுவார் ஆட
அருகு பூத வேதளம் அவையாட

மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவு வானுளோராட மதியாட
வசை மாமியாராட, நெடிய மாமனாராட
மயிலு மாடி நீயாடி வரவேனும்''
... ... ... ... ... ... ... ... ... ...
உதய தாம மார்பான் ப்ரபுட தேவ மாராஜன்
உளமுமாட வாழ்தேவர் பெருமானே''

எனப்பாட உடனே முருகன் அணிமயில் இவர்ந்து ஏறி, தூணிடை வந்து தோன்ற, அருணகிரியார் அக்கணத்தில் மிக வெதும்பி ஏங்கிக் ''கூறியபோதெதிர் வரும் நீ இன்றெனக்கு வருத்தமிகக் கொடுத்தாய்'' என்றார். ஏழுதிரைகளையும் நீக்கி தன் அடியாரின் திருவுள்ளம் அறிந்து கம்பத்தில் காட்சி தந்த முருகனை மன்னன் இரண்டு கண்களாலும் காண, இறைப் பேரொளியைக் காணும் ஆற்றல் இல்லாமல் கண்கெட்டது. அருளொளிக்குத் தூலக்கண் தாங்கவில்லை. இதையறிந்த அருணகிரியார் ''குகன் மலர்த்தால் பேணித் தொண்டு செயவல்லான் கண் கெடலாமோ? உனைக் கண்டதால் பார்வை போயிற்று என்ற பழி வரக்கூடா தல்லவா!'' என முருகனை வேண்ட செவ்வேற் கைக்குமரனும் அந்த வேளையில் அருள்கூர்ந்து வேந்தர்க்குக் கண் கொடுத்தான். அவ்வளவில் மறைந்தான், எங்கே மறைந்தான் என்பதைத் தண்டபாணி அடிகள் கூறுகிறார். அடிகளின் மனம், கோபுரத்து மாடம், பல மலைக் கோயில்கள், வேத ஆகமங்களில், எங்கும் எவற்றிலும் இருப்பது என்று கூறும்படி உருக்கரந்தான் என்கிறார், (சம்பந்தாண்டான் பகைமைச் சருக்கம் பா. எண் 43 – 44)

இனி சம்பந்தாண்டான் இருக்கும் இடம் இந்த மதிலுக்குள் ஆகாது எனக் கூற அம்மொழி கேட்ட அருணகிரியார் அவனை அவ்வாறு அவமதிப்பது கூடாது. அவன் அம்பிகை வழிபாட்டில் சிரியனே. அழுக்காறு காரணமாக அழிந்தான். அவன் இருந்த இடத்தில் திருக்குளம் ஒன்று செய்தி என்றார். ஆனால் சம்பந் தாண்டானோ அருணகிரியார் வேண்டுகோள் படி கம்பத்துக் கந்தனுக்குக் கோவில் கட்ட திருப்பணிகளை ஆரம்பித்த அரசனிடம் சென்று என்ன வித்தை அவன் செய்தான் அரண்மனைப் பொருளை இப்படி இழக்கத் துணிந்தாயே உலகில் எங்கேனும் தூணுக்குக் கோவில் கட்டுவார் உண்டோ? என

மீண்டும் பொறாமையால் பல கூறலுற்றான். அரசன் நான் யாவும் அறிவேன். உமக்கு ஏதும் ஐயம் இருப்பின் அருணகிரி யாரைச் சென்று காண்க என்றான். அடிகளிடம் சென்ற சம்பந்தாண்டான், 'வின்னூர்த் தரும் மலரைக் கொணர்தி' என வினவினான். அருணகிரியார், கனகமலர்த் தருமலரும் காட்டுதும், இவன் மனையிற் கவின் ஆர்வாவி புனலோடு செய் இளையனார்க் கபிடேகம் செய்து இவன் முன் புகன்றவாறு இவனை வேறு நகர்க்கு ஏகிடச் செய் எனவும் மன்னனிடம் கூறினார். சம்பந்தாண்டான் பாரிஜாத மலரைக் கொணர்ந்த அன்று கூப்பிட்டு அனுப்பினால் வருவேன் என்று கூறி வெளியேறினான். மலர்க் கொணரும் பொருட்டு அருணகிரியார் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தையினால் இறந்த ஓர் கிளியின் உடலில் புகுந்து வான் உலகம் சென்றார். கோபுரம் மீதுள்ள அருணகிரியாரின் வெற்று உடம்பைக் கண்டு, சம்பந்தாண்டான் சூழ்ச்சியாக, வானுலக மலர்க் கொண்டு வருவதாக உறுதி சொன்ன படி முடியாமையால் நஞ்சுண்டு அருணகிரியார் இறந்தார் போலும் என்று கூறி அவ்வுடலுக்குத் தீயூட்டும் படி செய்தனன். ஆனால் மன்னன் அவைக்களத்தில் கொலுவிருக்கும் பொழுது கிளிரூபத்தில் இருந்த அருணகிரியார் அமரரூர் மலர் ஈதென்று ஈய வாங்கிய மன்னன், அவர் உடலை அழித்தமைக்கு வருந்தினான். கிளிரூபத்து அருணகிரியார் மானுட உடலின் இழிவையும், கிளிரூபத்தின் மேன்மையையும் கூறி, கிளிகளின் உற்ற உறவாகவே தான் இருக்க விழைந்தமையையும் கூறி, தன் மனித உடலின் காலம் முடிந்ததையும், தன் உயிரைக் காக்கவே வேறு கிளி உடலில் புகச் செய்தது முருகன் அருளே எனவும் கூறி மன்னனைச் சமன் படுத்துகிறார்.

அருணகிரியாருக்கு மேலும் துன்பம் தர விரும்பி சம்பந்தாண்டான் வாம மார்க்க முறையில் பூசனை செய்ய, சத்துருவான சம்பந்தாண்டானைச் சம்காரம் செய்யும் படிக்கு அருணகிரியாரைத் தன் அன்னையின் மீது திருப்புகழ் ஒன்று பாடச் சொல்கிறான் முருகன். ஆனால் அவரோ 'உன்றனக் கல்லால் விளம்பிடேன்' எனக் கூறி 'அம்பிகையின் பாலன். வேலாயிருக்கும் இயல்பினை' என்ற முடிவுடன் முற்பகுதியில் அம்பிகையைப் புகழ்ந்து பாடினார். கெடுவான் கேடு, நினைப்பான் என்ற படி சம்பந்தாண்டான் அருணகிரியார் மீது

கொண்ட அழுக்காறு அவனுக்கே தீதாய் எரிபட்டது. ஆயிரம் தலை 2000 கரங்களுடன் யாளி மீது வந்த காளி "தேளினும் கொடும் குணத்தனான சமணன்மேல் சினந்து அடித்து உயிருண் டாள் என்று படைத்துக் காட்டுகிறார் தண்டபாணி சுவாமிகள். இவ்வரலாற்றை அருணகிரியாரின் வாழ்க்கையுடன் இணைத்துக் காட்டுவதற்கு முதற்காரணம் இறையருள் பெற்ற உயர் நிலையில் இருப்போரேயாயினும் ஆணவம் வஞ்சம் அழுக்காறு உடையவர்கள் திருந்தாமல் அழிவது திண்ணம் என்பதை உலகோர் அறியச் சொல்வது.

இரண்டாவது நோக்கம் இறைவழிபாட்டில் வேள்வியின் பொழுது மதுவும் இறைச்சியும் படைத்துச் செய்யும் வாம முறைத் தவறானது என்பதை மக்களுக்கு உணர்த்த வேண்டும் என்பது. நன்மையே செய்து வாழ விரும்புவோருக்கு இடுக்கண் செய்பவர் களுக்கு, இப்படித்தான் இன்னல் வரும் என்ற அறிவுரையும் இதில் அடங்கியுள்ளது.

கிளியுருவில் இருந்த படியே அருணகிரியார் கந்தரநுபூதி, கந்தரலங்காரம், முதலான பைந்தமிழில் நறுந்தொடையாம் பற்பல வனைந்து செவ்வாய் கொண்டு சில பாடல்கள் வரைந்து சென்றார். பின்னர் கையிலையில் உள்ள கந்த மாதவ வெற்பைச் சேர்ந்து ஞானஅநுபூதி என்ற நூலைப் பாடியது, அக்கிளி.

இந்த ஞானனாநுபூதியைக் கௌமாரச் சபையினர் தம் வேதமாகக் கொள்வர்.

இதற்குப்பின் நிகழ்ச்சியைக் கூறும்முகமாக "அப்புறம் நடந்த காதை, யதிற் சிறிதறிந்துற்றாலும் இப்புராணத்தில் நாயேன் இயம்பிடும் இயல்பின் பாற்றன்று" எனக் கூறி, அக்கதையைக் கூறும் ஆற்றல் உடைய புலவன் வருவான். அது யார் என்பதை முருகனே அறிவான் என்றார். தனது தோற்றம் அருணகிரி நாதரின் தொடர்பு உடையது என்பது முருகன் திருவாக்கு. இவ்விவரம் பாட ஒருவன் வருவான் அதுவும் முருகன் அருளால் வருவான் என்கிறார்.

கிளிரூபக் கதைக்கும் நம் பழமரபுக் கதையில் ஆதாரத்தைக் காண முடியும். திருமூலர் கதையிலும் அவர் கூடுவிட்டுக் கூடு பாய்ந்த பின் உடல் மறைந்ததையும் அந்த மறைவு ஈசனருளால்

நிகழ்ந்தது என்றே திருமூலநாயனார் உணர்ந்தார் என்பதையும் பெரியபுராணக் கதை சுட்டுகிறது. இக்கதையுடன், அருணகிரியாரின் பாடல் அடிகளும் சேர்ந்து சுகரூபக் கதைக் கற்பனை உருவாகக் காரணமாகலாம் என்கிறார் பி.ஸ்ரீ. (ப. 82–83 முந்துநூல்)

"ஏழையின் இரட்டை வினை ஆயதொர் உடற்சிறை இராமல் விடுவித்தருள் நியாயக் காரனும்" என்பது அருணகிரியார் பாடல் அடிகள்.

"சுகரூபத்தை யுற்று அடைவேனோ?"
என்ற இவரது வேண்டுதலும் இக்கருத்துக்கு அரண் சேர்க்கிறது.

ஆனால் கிளிரூபம் எடுத்தது வெறும் கற்பனையே என்ற கருத்தை வலியுறுத்த விரும்பும் பி ஸ்ரீ. அருணகிரியார் கிளியுருக் கொண்டு பாரிஜாத மலர் கொணர்ந்தற்கும் கந்தரநுபூதியைக் கிளிரூபத்தில் இருந்து பாடியதற்கும் திருப்புகழில் சான்று ஏதும் இல்லை. அருணகிரியாரைப் பாராட்டிய பாடிய தாயுமானவர், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள், வரகவி மார்க்க சகாய தேவர் முதலான பெரியோர்கள் கிளியுருப் பெற்ற தன்மையைச் சுட்டவே இல்லை எனவும் ஆய்வு முடிவாக வெள்ளைவாரணர் கூறியதை எடுத்துரைக்கிறார் பி.ஸ்ரீ.

**முடிவுரை**

இவ்வாறு வழக்கில் இருந்த பல பழமரபுக் கதைகளையும், அருணகிரியார் வாக்கில் இருந்து சில கருத்துக்களையும் இணைத்து அருளியல் கதைகளாகவும், சில தத்துவங்களை முன் நிறுத்தும் கதைகளாகவும் மாற்றி, தன் தேவைக்கேற்ப தண்டபாணி சுவாமிகள் அருணகிரியார் வரலாற்றைப் புராணமாகப் பாடியுள்ளார். ஆயின் ஒரு கருத்தும் இங்கு மனம் கொள்ளத் தக்கது. இப்புராணத்தைத் தான் பாடவில்லை எனவும் தன்னை ஒரு கருவியாகக் கொண்டு முருகனே ஆக்கியோன் எனவும் தண்டபாணி சுவாமிகள் கூறியுள்ளார். அத்துடன் தான் அருணகிரிநாதரின் மறுபிறப்பு என்பதை முருகன் உணர்த்த உணர்ந்திருப்பதாகவும் பல பாடல்களில் கூறியுள்ளார். இதன் வன்மை மென்மைகளைப் பக்தி, அநுபூதி என்ற எல்லைகளைக் கடந்த நிலையிலேயே உணரமுடியும்.

# அணி நோக்கில் தண்டபாணி சுவாமிகள்

ந. காந்திமதிலட்சுமி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தாம் இயற்றியுள்ள 'அறுவகை இலக்கணத்துள்' ஐந்தாவதாக அமைவது அணியிலக்கணம். இந்த அணி இலக்கணத்தையும் தண்டியலங்காரம் கூறும் அணி இலக்கணத்தையும் ஒப்பிட்டு ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

கவிதை சிறப்புற்று விளங்க உதவுவன 'உவமை, உருவகம்' முதலிய அணிகளாகும். உவமை, உருவகம் முதலியன அணியிலக்கணத்துள்ளேயே காணப்பட்டாலும் அவை ஏனைய அணிகளைப் போலல்லாமல் மிகவும் சிறப்புடையனவாக உள்ளன. ஆதலின் தொல்காப்பியத்தில் உவமையணி ஒன்றே அணியாகக் கொள்ளப்பட்டுப் பொருளதிகாரத்தில் தனி இயலாக இடம் பெற்றுள்ளது. வீரசோழியமும், தண்டியலங்காரமும் 35 பொருளணிகளை விளக்குகின்றன. மாறனலங்காரம் 64 அணிகளைக் கூறுகிறது. சந்திரலோகம் 100 அணிகளைக் குறிப்பிட, குவலயானந்தமோ 120 அணிகள் வரைப் பட்டியலிட்டு விளக்குகிறது. இவ்வாறு பல்வேறு நூல்கள் பல்வேறு வகையான அணிகள் பற்றிக் கூறினாலும் அணிகள் இத்துணைதான் என்னும் எண்ணிக்கைக்குள் அடங்காது.

கவிஞனின் ஆற்றலுக்கேற்றவாறு அணிகளின் அளவு விரிவடையும் என்பது தண்டபாணி சுவாமிகளது கொள்கையாகும்.

"அணி எனல் புலவோன் அறிவு அளவாமே"

என்பது அவர்தம் வாய்மொழி.

"அணிநிலை அளப்பரிது; ஆயினும் உவமை,
உடைமை, கற்பனை, நிகழ்ச்சி, ஆக்கம் என்று
ஐவகை வாய்பாடு அறைகுதும் அன்றே" (2)

என்கிறார் தண்டபாணி சுவாமிகள். அணியை உவமை, உடைமை, கற்பனை, நிகழ்ச்சி, ஆக்கம் என்று ஐந்து வகையாகப் பகுத்துக் கூறுகிறார்.

**உவமையியல்பு**

இலக்கியங்களில் பொருளைத் தெளிவாக்க, அழகுபடுத்த, பொருட்களிடையே ஒப்புமை காட்டுவதற்காக உவமை இடம் பெறுகிறது. உவமையையும், பொருளையும் இணைக்கும் சொல்லை 'உவம உருபு' என்பர். இவ்வுவமை உருபு இலக்கண இலக்கியங்களில் காலந்தோறும் தம்முள் பல்கியும், மறைந்தும், திரிந்தும் வந்துள்ளன. உவமையணி இல்லாதன சிறந்த கவிதையே இல்லையெனவாம். ஏனைய அணிகள் எல்லாம் அழிந்து இவ்வொன்று மட்டும் எஞ்சி நின்றாலும் கவிதை சிறப்போடிலங்கும் – தொல்காப்பியர் உவமத்தை வினை, பயன், மெய், உரு என வகைப்படுத்தியுள்ளார். தண்டியாசிரியரோ,

''பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை'' (31 நூற்பா)

என்கிறார். வண்ணமும் வடிவும் ஒன்றாகக் கொண்டு பண்பு, தொழில், பயன் எனும் மூவகைக் காரணிகளைச் சுட்டுகிறார். பண்பு, தொழில், பயன் என்பன காரணமாக ஒன்றாகியும், பலவாகியும் வரும் என்கிறார். இக்கருத்தினையே சுவாமிகள் ''உவமை அதனில் உள்ள பல விகற்பம் ஒன்றே அணியென உணங்குனர் பலரே'' என்கிறார். உவமையும், பொருளும் பொருந்தியிருக்க வேண்டும் என்ற விதிக்கு ஏற்ப உவமைப் பொருள் தொகுப்படவைத் தருகின்ற முயற்சியில் சுவாமிகள் ஈடுபட்டுள்ளார். இதற்கு இஃது உவமைப் பொருளாக வரும் என்று கூறும் பாங்கினைப் பிற்கால அணியிலக்கண நூலான தண்டியலங்கார விளக்கங்களிலிருந்து சுவாமிகள் பெரிதும் வேறுபட்டு விலகிச் சென்றுள்ளார்.

சுவாமிகள், 'உவமையியல்பு' என்ற பிரிவில் மூன்றாவது நூற்பா முதல் பதினேழாவது நூற்பா வரை தெய்வங்களுக்கு உரிய உவமைப் பொருள்களையும், பதினெட்டாவது நூற்பா முதல் நாற்பத்து மூன்று வரை பெண்டிர்க்கும், ஆடவர்க்கும் உரிய உவமைப் பொருள்களையும் வகுத்துரைக்கின்றார்

உவமையியல்பில் பெண்களின் உறுப்புகளே மிகுதியாக இடம் பெறுகின்றன. பெண்களைக் கேசாதி பாதமாகவே வருணிக்கும் மரபு பற்றி இவ்வாறு கூறினார். உவமையாக உயர்ந்த பொருள்களே கூறப்பட வேண்டும் என்பது மரபு என்கிறார். மரபு வழு இன்றிப் புதிய உவமைகளைப் படைப்பவர்கள் எமக்கினியர் என்கிறார். தண்டியாசிரியரோ,

''மிகுதலுங் குறைதலுந்தாழ்தனு முயர்தலும்
பான்மாறு படுதலும் பாகுபாடுடைய'' என்கிறார்.

'மன்னவர்க்கு நாய்போல் வனப்புடையர் வாள்வயவர்'

என்று கூறும்போது இழிந்த உவமையோடு உயர்ந்த பொருள் உவமையினைக் கூறுகிறார். 'தாழ்தல், உயர்தல், பான்மாறு படுதல் முதலியன குற்றமேனும் குணம் மிக்குழிக் கொள்க' என்கிறார் தண்டியாசிரியர். சுவாமிகள் உவமானம், உவமேயம், பொதுத்தன்மை, உவம உருபு ஆகியன பற்றியோ அல்லது விரி, தொகை, உவமைகளின் பாகுபாட்டைப் பற்றியோ ஒன்றும் கூறவில்லை. ஆயின் தண்டியாசிரியரோ உவமையலங்காரம் விரியுவமை, தொகையுவமை, இதரவுவமை, சமுச்சயவுவமை, உண்மையுவமை, மறுபொருளுவமை, புகழுவமை, நிந்தையுவமை, நியமவுமை, அநியமவுமை, ஐயவுவமை, தெரிதரு தேற்றவு வமை, இன்சொறுவமை, விபரீதவுவமை, இயம்புதல் வேட்கையுவமை, பலபொருளுவமை, விகாரவுவமை, மோகவுவமை, அபூதவுவமை, பலவயிற்போலியுவமை, ஒருவயிற் போலியுவமை, கூடாவுவமை, பொது நீங்குவமை. மாலையுவமை என்னும் 24 பாகுபாட்டினைக் கூறுகிறார்.

தண்டியாசியர் ஒரு பொருட்குக் கூடாதவதனைக் கூடுவதாகக் கொண்டு அதனையொன்றற்கு உவமையாக்கியுரைப்பது கூடாவுவமை என்கிறார். தண்டபாணி சுவாமிகள், பாதங்களைச் செந்தாமரையாகவும், கால்நகங்களைச் சந்திரனாகவும் உவமித்துக் கூறுதல் கடவுள் தன்மைக்குப் பொருந்துவதாகும் என்று சிற்சில புலவர்கள் மேற்கொள்வர் எனக் கூறி மனிதர்க்கு இவ்வுவமை கூடாதென விலக்கப்பட்டது என்கிறார்.

கவிஞன் தன்னால் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குத் தக்க பிறிதொன்றினைச் சொல்லின் அது ஒட்டென்னும் அரங்கார மெனகிறார் தண்டியாசிரியர்.

இதனை உவமைப்போலி எனவும், பிறிது மொழிதல் எனவும், நுவலாநுவற்சி எனவும் குறிப்பிடுகிறார். இதில் உவமேயம் மறைந்து உவமானம் வரும்.

> "ஒந்தி போனும் ஒள்வனை மூக்குஎன்று
> உரைத்தல் ஆதிய ஒருவலும், உணர்வால்
> அட்டமிச் சந்திரன் அகத்திப் பூஇணை
> ஆம் எனல் ஆகிய சேர்த்தலும் அழகே"

என்கிறார் சுவாமிகள். கவிஞன் தான் பார்த்து உணர்ந்த பட்டறிவால் அவள் நெற்றிக்கு எட்டாம் பக்கத்திங்களையும், அகத்திமலரையும் உவமையாகக் கூறுகிறார். இதில் உவமான மாகிய அட்டமிச்சந்திரன், அகத்திப்பூ என்பனவற்றைக் கொண்டு உவமேயமாகிய நுதல் வருவிக்கப்பட்டது என்கிறார்.

ஒரு பொருளுக்குப் பலபொருள் உவமையினை இருவருமே கூறுகின்றனர். "அவ்வான், இலங்குபிறையன்ன விளங்குவால் வையெயிறு" என்கிறார் தண்டியாசிரியர்.

> "மேகமும், நதிகளும், விண்ணுந் தருவும்
> சிந்தா மணியும், தேனுவும் தெய்வமும்
> தினந்தொறுங் கொடுப்போன் செங்கைக்கு இணையே"

எனும் நூற்பாவில் முகிலும், சங்கம், பதுமம் முதலிய நிதிகளும், வானுலகிலுள்ளகற்பகமரமும், வேண்டியதை எல்லாம்கொடுக்கும் கல்லாகிய சிந்தாமணியும், தெய்வலோகப் பசுவாகிய காமதேனுவும், கடவுளும், இரவலர்க்கு வாரி வழங்கும் வள்ளல் களுடைய சிவந்த கரங்களுக்கு உவமை என்கிறார் சுவாமிகள்.

## உடைமை இயல்பு

உடைமை இயலினை, தேவருடைமை, மாந்தருடைமை, பனுவலுடைமை என்று மூன்றாகப் பகுத்துக் கூறுகிறார். தேவருடைமையிலுள்ள பன்னிரண்டு நூற்பாக்களும் கடவுளரின் உடைமைகள் இன்னின்னவை எனச் சொல்கின்றன. மாந்தர் உடைமை இயல் ஒன்பது நூற்பாக்களைக் கொண்டுள்ளது. இப்பிரிவில் மனிதர்களில் சிற்சிலர்க்கு இவை இவை உரியன எனக் கூறப்பட்டுள்ளது. எட்டு நூற்பாக்களானியன்ற பனுவல் உடைமை இயலில் நூல்களின் பாடுபொருள்களைப் பற்றிய

செய்திகள் கூறப்பட்டுள்ளது. தண்டியலங்காரத்தில் இத்தகைய செய்திகள் இல்லை.

**கற்பனை இயல்பு**

இப்பிரிவில் கற்பனை பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. இவ்வியலில் பன்னிரண்டு நூற்பாக்கள் இடம் பெறுகின்றன. கற்பனையின் அடிப்படையாக உவமையே அமைகிறது. உவமை யணியின் சார்புடையதாகிக் கவிஞனின் சிந்தனை சக்தியுடன் சேர்ந்து விளங்குவது கற்பனை என்று வரையறுக்கிறார்.

‘மறுஉறா மதியம் ஆறு போலும்
முகம்உறு குகவேள் என்கையும் ஒருவகைக்
கற்பனை ஆம்எனக் கருதுநர் சிலரே’ (78)

என்ற நூற்பாவில் களங்கம் இல்லாத திங்கள் இல்லாத ஒன்று. அதுபோல ஆறு மதிகளும் இல்லை. இல்லாதனவற்றை உள்ள தாகப் பாவித்து இங்கே உவமை கூறுகிறார் சுவாமிகள். இதனையே தண்டியாசிரியர் ‘அபூத உவமை’ என்கிறார். ‘இல்பொருள் உவமை’ என்றும் கூறப்படும்.

‘எல்லாக் கமலத் தெழிலுந் திரண்டொன்றின்
வில்லேர் புருவத்து வேனெடுங்கண் — நல்லீர்
முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழும்
அகம் போலு மெங்க ளகம்’

என்ற பாடலில் எங்குமுள்ள கமலப்பூக்களின் செவ்வியும் செறிந் தொன்றுமாயின், அது பெண்களின் முகம் என்று உவமை கூறப் பட்டுள்ளது. எல்லாத் தாமரையிடத்தும் உள்ள அழகு எல்லாம் திரண்டு ஒரு பொருள் மேல் இராது. எனவே இது இல்பொருள் உவமையாகும் என்று தண்டியாசிரியர் விளக்குகிறார்.

இன்னின்ன விதமாகச் செய்யுள் இயற்றினால் அவை இன்னின்ன அணிகள் ஆகும் என்று அணி நூலார் கூறியுள்ளனர். நாம் அதனைச் சிந்தித்துப் பார்த்தபோது அந்நூலாசிரியர் இட்ட பெயர்களும் அவர்கள் கற்பனையில் தோன்றி எழுந்தனவே யாகும் என்பது தெளிவாகப் புலப்பட்டது என்கிறார் சுவாமிகள்.

**நிகழ்ச்சி இயல்பு**

எந்த எந்தக் காலத்தில் என்னென்ன இயற்கைச் செயல்கள் நடைபெறும் என்பனவற்றைத் தொகுத்துரைக்கின்றார்.

இவ்வியல் பன்னிரண்டு நூற்பாக்களைக் கொண்டுள்ளது. சிறுபொழுது, பெரும்பொழுது ஆகிய இரண்டும் இடம் பெறுவதுடன், நல்லாட்சிக் காலம், கொடுங்கோன்மைக் காலம் பற்றியும் சுவாமிகள் கூறுகிறார். அதிகாலைப் பொழுது, காலை நேரம், நண்பகல், மாலைப்பொழுது, நள்ளிரவு,இளவேனிற்காலம், முதுவேனிற் காலம், கார்காலம், பனிக்காலம் முதலிய காலங்களின் பண்புகளையும், அக்காலத்தே நடைபெறும் நிகழ்ச்சிகளையும் தொகுத்துக் கூறுகிறார் சுவாமிகள். தண்டியலங்காரத்தில் இக்காலங்கள் பற்றிய செய்திகள் எதுவும் இல்லை.

**ஆக்க இயல்பு**

பன்னிரண்டு நூற்பாக்களால் இயன்ற இவ்வியல் யார் யார்க்கு அல்லது எதெதற்கு எதனால் சிறப்புண்டாகும் என்று கூறுகிறது.

''அணியினுக்கு அணியாம் ஆக்கம் கூறுதற்கு
அமையா; ஆயினும் அறைகுதும் சிறிதே.

செய்யுள் அலங்காரத்திற்கு அழகு தருவதாகிய சிறப்பியல்புகள் இன்னின்னவை என முற்றிலும் சொல்ல முடியா விட்டாலும் சிலவற்றின் சிறப்பியல்புகளைக் கூறுவாம் என்கிறார் சுவாமிகள்.

'அடிதொழும் தொண்டர் அட்டமா சித்தியும்
முத்தியும் பெறச் செயல் முதல்வற்குஆக்கமே'

தன்னைப் பணிகின்ற அடியார்கள் எண்வகையான சித்திகளையும் பேரின்ப வீட்டையும் அடையுமாறு அருள்பாலித்தல் பரம் பொருளுக்குச் சிறப்பு என்கிறார். இறைவன் கொடுக்குமவை எல்லாவற்றும் 'ஆசு அகன்ற முத்தி அதே' ஆதலின் முதல்வற்கு ஆக்கம் எனப்பட்டது என்கிறார் தண்டபாணி சுவாமிகள்.

''தேனியாம் எனச் சேர்த்த பொருளைக்
காரியம் அறிந்து களிறு எனச் சிதறல்
வணிகர் ஏறு அண்ணான் மாண்புஎனல் வழக்கே''

என்ற நூற்பாவில், சிறுஅளவு பொருளாயினும் ஈட்டுங்கால் இகழ்ச்சியின்றி ஊக்கத்துடன் சேர்க்க வேண்டும் என்பதும், அது நன்கு சேமிக்கப்படவும் வேண்டும் என்பதும், தேனீயின் உவமை யால் தெளிவாக்குகின்றார். வழங்கும் முறையை விளக்க இவ்வாசிரியர் கூறும் புத்துவமை ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும்.

வள்ளல்கள் சிலர் தங்கள் மனதிற்குப் பிடித்த கலைஞர்களுக்குத் தாராளமாகப் பொருளை வழங்குவர். ஆனால் அதே துறையில் ஈடுபட்டு நன்கு உழைக்கின்ற பிற கலைஞர்களை ஏறெடுத்தும் பார்க்க மாட்டார்கள். அவ்வாறு செய்யாமல் பொருளைக் கலைஞர்கள் பலர்க்கும் பயன்படுமாறு பரவலாக வழங்க வேண்டும் என்ற அறிவுரை 'களிறு எனச் சிதறல்' என்ற உவமையால் பெறப்படுகிறது. இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் தமது அணியிலக்கணத்துள் பல சிறந்த உவமைகளைக் கையாள் கின்றார். தண்டியாசிரியர் இந்த பாகுபாட்டினைக் கூறவில்லை.

உவமைக்குப் பண்பு - குணம் - இயல்பு ஒன்றே ஒப்புமைக் குரிய காரணியாகும். பண்புகள் எண்ணிறந்தனவாதலால் வினை, பயன், மெய், உரு என நால்வகைப்படுத்தல் பொருந்துவதன்று. நிலைக்களம் உவமைப் பிறப்புக்கு வித்துப் போன்றது. வெளியில் தெற்றென வெளிப்படாத போதிலும் ஆழமான புலவனின் மனவுணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. ஒத்த பண்பின தாய பல பொருளுள்ளும் ஒரு குறிப்பிட்ட பொருளை உவமையைத் தெரிவு செய்யத் தூண்டும் அகவுணர்வை நிலைக் களமாகக் கூறுகிறார் தொல்காப்பியர்.

'உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்' என்ற தொல் காப்பிய நெறியினைப் பின்பற்றிச் சுவாமிகள் அணிக்கோட் பாட்டை வளர்க்க எண்ணியிருக்கின்றார். அந்த எண்ணத்தின் விளைவே அறுவகை இலக்கணம் கூறுகின்ற உவமையியல்பு எனும் பகுதியாகும். சுவாமிகள் பொருந்துமாறு கூறுகின்ற புதிய உவமைச் சொற்களை ஏற்றுக் கொள்கின்றமையால், சுவாமிகளின் புதிய சிந்தனையோட்டம் நமக்குப் புலனாகின்றது.

# சுவாமிகள் காட்டும் குடும்பவியல்

த. காமராஜ்

மனையறம் அல்லது இல்லறம் என்பதாகப் பேசப்பெற்றது குடும்ப வாழ்வியல். இல்லறம் என்பது பொதுவாக கணவன், மனைவி, மக்கள், சுற்றம், நட்பு ஆகியவற்றைப் பேசுவதுடன் அன்புடைமை, விருந்தோம்புதல், இனியவை பேசுதல், செய் நன்றி, அடக்கம், ஒழுக்கம் முதலான பண்புகளும் விரிவாக விளக்கிக் காட்டப்படும். அத்தன்மையைத் திருக்குறளில் 'இல்லறவியல்' என்ற இயலமைப்பில் திருவள்ளுவர் விளக்கி யுள்ளமையைக் காணமுடிகிறது. தண்டபாணி சுவாமிகள், மனு நெறித் திருநூல் என்ற பெயரில் செய்த நூலானது தெய்வ வணக்கந் தொடங்கி திருவருள் சார்பு ஈறாக நூற்றுமுப்பது தலைப்புகளைக் கொண்டது. மனுநீதி என்பதாக ஒரு நீதி நூல் வடமொழியில் உள்ளது. அந்நூல் நீதிநெறிகளை விளக்கியே அடிப்படையில் மனுநெறித் திருநூலை தண்டபாணி சுவாமிகள் அமைக்கவில்லை. தண்டபாணி சுவாமிகள் கொல்லாமை என்பதை அடிப்படையாக வைத்து எல்லா நெறிகளையும் விளக்குபவர். வேள்வி அடிப்படையில் கொள்கின்ற மனுநீதிச் செயல்களை தண்டபாணி சுவாமிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது.

தமிழகத்தில் மனுநீதிச் சோழன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனைப் பற்றி சேக்கிழாரும் வள்ளலாரும் விளக்குவர். அவனால் பசுவுக்கு வழங்கப்பட்ட நீதி மனுநீதி எனப்படும். பசுவை விலங்கு என்பதாக நோக்காமல் இறைவன் இருக்குமிடம் என்பதைத் தேர்ந்து, எல்லா உயிரும் இறைவனைக் கொண்டிருக்கும் வகையில் பொதுயென நோக்கி கன்று இறந்த தற்காக பரிகாரம் போன்றவை செய்தல் கூடாது என்று மகனின் உயிரை பறித்தலே நீதி என்று இறைவனை நோக்கி நீதி செய்ததாக வள்ளலார் விளக்குவார். மனுநீதிச் சோழன், இறைவன் எல்லா உயிருள்ளும் பொதுவாக இருக்கின்றான்

என்ற அடிப்படையில் நீதியைக் கருதியது போலவே எல்லா உயிருள்ளும் "நிலைத்தப் பொருளாக" உள்ள இறைவனை அடிப்படையாகக் கொண்டு கொல்லாமையை வலியுறுத்திப் பல நெறிகளை விளக்கி மனுநெறித் திருநூலைச் செய்தார்.

மனுநெறித் திருநூலில் இல்லறம் என்பதைப் பொதுவியல் நோக்கில் காணும் வண்ணம் கூறப்படும் பலவிதமான பண்பு களையும் பல தலைப்புகளில் தண்டபாணி சுவாமிகள் விளக்கிக் கூறியுள்ளார். இல்லறம் என்ற பொது வாழ்வை உறுப்பினர் களுடைய தொகுப்பில் காணும்போது குடும்பம் என்ற பெயரால் அறிகின்றோம். குடும்பம் என்ற நிலையத்தின் மூலமாக இல்லறம் என்ற பொதுமைப் பண்பு விளக்குகின்றது. அதனைச் செயல் படுத்தும் அல்லது வெளிப்படுத்தும் உறுப்பினர்கள் குடும்பம் என்ற சொல்லால் தொகுதியாகக் கூறப்பட்டாலும் தாய், தந்தை, உடன்பிறந்தார், மனைவி, மக்கள், சுற்றம், நட்பர் ஆகிய வகைகளாகப் பிரித்து உணர முடிகிறது. பொதுமைப் பண்புகளை விரிவாகக் காணுவதைவிடவும் உறுப்பினர் மூலமாக விளக்கப்படும் கூறுகளைக் குடும்பம் என்ற தலைப்பில் கொண்டு இங்கு ஆராயப்படுகின்றது.

தண்டபாணி சுவாமிகள் தாய், தந்தை, உடன்பிறந்தார், மனைவி, மக்கள், சுற்றம், நட்பர் ஆகிய ஏழு தலைப்புகளில் முறையே 43-லிருந்து 49-வரை எழுபது குறட்பாக்களில் பாடி யுள்ளார். அவற்றை முறையே தனித்தனியே கண்டு குடும்ப இணைப்பைத் தண்டபாணி சுவாமிகள் அறிவுறுத்தும் வண்ணம் இவண் ஆராயலாம்.

**தாய்**

தண்டபாணி சுவாமிகள் தாய் என்ற ஓர் அதிகாரத்தைத் தனித்தன்மையாகப் படைத்துள்ளார். தாய் பெருவகைப் பெற வேண்டுமானால் மகன் சான்றோனாக இருக்க வேண்டும் என்று மகனுடைய செயலில் தாயும் மகிழுமாறு அமைந்த செயலாகத் திருவள்ளுவரால் விளக்கப்பெற்றது. ஆனால், தண்டபாணி சுவாமிகள் தாய் என்ற ஓர் அடையாளத்தையே மகன் மூலமாக முன்னிறுத்தப்பட்ட அடையாளமாக எடுத்துக்கொண்டு விளக்கி யுள்ளது தனித்தன்மை நிலையினது. அதாவது, தாய் என்ற ஒரு சொல்லே மக்கள் அல்லது புதல்வர் இல்லை என்று சொன்னால்

தாய் என்ற சொல்லே இல்லை என்னுமாறு தாய் என்னும் ஓர் அதிகாரத்தைப் படைத்துள்ளார்.

"தாய் அறத்தின் இன்பம்" என்பதாக அடையாளங் காட்டிய பெருமை தண்டபாணி சுவாமிகளுக்கு மட்டுமே உரியது.

"அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல" (திருக்குறள்: 39)

என்று சொன்னார். அறத்தின் அடிப்படையில்-அற அனுபவமே இன்பமாக அமைவது எனக் கூறியவர் திருவள்ளுவர், அதற்குச் செயல்நிலைக்கலம் காட்டியவர் தண்டபாணி சுவாமிகள்.

"அறத்தின் இன்பம் கற்பின் அருந்ததியே போல்வாள்
பெறத்தகும்சே யாகும் பிறப்பு" (குறள்–121)

என்பது தண்டபாணி சுவாமிகள் அருளிய குறட்பா. "அறத்தின் இன்பம்" என்று நேரடியாகத் தாயைச் சுட்டுகின்றார். "பெறத் தகும் சேயாகும்" என்று அவளை சேயின் மூலமாக விளக்கப் படுத்துகின்றார். தாயின் மூலமாக சேயானது அற அனுபவ மாகிய இன்பத்தைப் பெறுவதற்குத் தகுதியுடையதாக ஆகும் என்பது கருத்து. பெறுவதற்குத் தகும் சேயாக அதனை ஆக்கு பவளாக பிறப்பைத் தாயின் மூலமாக நாம் பெறுகின்றோம் என்கின்ற கருத்தை விளக்கியுள்ளார். தாயானவள் அறச்செயல் களையெல்லாம் செய்பவளாக – செயல்படுத்துபவளாக விளங்கி சேயை அவற்றைப் பெறுவதற்காக ஆளாக்குந் தன்மையினள் என்றவாறு தாயை அடையாளப்படுத்துகின்றார். பாரதிதாசன், நல்ல புதல்வர்கள் அமைய வேண்டுமாயின் தாய் கல்வியுடைய வளாக அமைய வேண்டும் என்று கூறுகின்றார். தண்டபாணி சுவாமிகளோ அறத்தின் அடிப்படையில் எல்லாவற்றையும் தாயின் மூலமாகச் சேய்க்கு அமைகின்றது என்பதைக் காட்டித் தாயை அறத்தால் புதல்வரை நல்வழிப்படுத்தும் நிலையினளாகக் கூறுகின்றார். சேய் என்பதைத் தகுதியுடையதாகப் பெறுதற்குத் தாய் அறச்செயலினளாக அமைய வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார்.

பாரதிதாசனைப் போலவே தாயை கல்வியடிப்படையில் தந்தை என்பதாக அறிமுகப்படுத்திக் கூறுகின்றார் தண்டபாணி சுவாமிகள். "நிந்தைஅறுங் கலவிநெறியும் அறிதாயைத் தந்தை என்றும் சொல்லத் தகும்." (குறள்–427) கல்வி நெறியை

அறிவிக்கிற தாயானவள் தந்தை என்றும் சொல்லதகுதியுடையள் என்னும் குறட்பாவினை அமைத்துள்ளார். மேலும், அவள் மூலமான கல்வியே பழியின்றி வருவதாயும் பழிகளை அழிப்ப தாயும் அமைந்த கல்வி என்பது சுவாமிகளின் கருத்து.

தாய் இயல்பில் எத்தகையவளாய் இருந்தாலும் சேய்க்காக-சேயை நன்னெறியில் செலுத்தும் செயல் மேற்கொள்ள வேண்டும் என்று கூறி அவளையே தாய் என்பதாகச் சுட்டி,

''தீயநெறி யாள்எனினும் சேய்விரும்பும் நன்னெறியில்
சாய இயைந் தாலவளே தாய்'' (குறள்-429)

என்ற குறட்பாவினை அமைத்தார்.

அறத்தின் இன்பம் என்று தாயை அறிமுகப்படுத்தியவர் நல்லறத்தின்பேறு என்பதாகவும் கூறி சேய் அவள் மூலமாக பிறந்ததாக அமைவதே சிறந்தது என்றவாறு,

''வறந்தகுணம் சாரா வளமுலையாள் சேயாப்
பிறந்திடலும் நல்அறத்தின் பேறு.'' (குறள்-422)

என்னும் குறட்பாவை அமைத்தார்.

அறத்தின் செயல்கள் அன்பின் மூலமாக வெளிப்பட்டு எல்லாவுயிர்களோடும் இரக்க உணர்வில் தொடர்புப்படுத்தி அமைவதாக இருக்க வேண்டும். அவ்வாறு அறத்தை அன்பின் மூலமாகச் செயல்படுத்திய ஒரே பொருட்தன்மை தாய்மை என்பதாகக் கூறப் பெறுகின்றது. தாயின் அன்புத் தன்மை பால் சொறிதலின் மூலமாக – அன்பு வற்றாத முலையினதாக வெளிப்படும் அமைப்பில் தண்டபாணி சுவாமிகள் மேற்காட்டிய குறட்பாவினை அமைத்தார். அத்தகைய அன்பில் குறைவுபடாத தாயின் மூலமாக பெறப்படுவதாக மக்கட்பேறு அமையவேண்டும் என்பதால், தாயானவள் அறத்தினைப் பெற்றெடுப்பதுபோல அன்பால் மக்களைப் பெறவேண்டும் என்பதாகக் கூறினார்.

**தந்தை**

தாயைப் போலவே தந்தையையும் மைந்தன் மூலமாக விளக்கப்படுத்தியுள்ளார் தண்டபாணி சுவாமிகள். மைந்தன் ஆவது தவமாக அமைய வேண்டுமானால் நல்ல சிந்தையும், கல்வியும், தெய்வ பக்தியும் சேர்ந்த ஒருவன் தந்தையாக இருக்க வேண்டும் என்று முதற்கண்,

"சிந்தைநலம் கல்வி, தெய்வபக்தி ஆகியசேர்
தந்தைதமைந்தன் ஆதல் தவம்." (குறள்-431)

என்ற பாடலில் கூறுகின்றார். தந்தை நற்சிந்தனை, கல்வி, தெய்வபக்தி உடையவனாக இருக்க வேண்டும் என்பது இப் பாடலின் கருத்து. தாயும் செய்கைக் கல்வி கற்பித்தல் அமையுமானால் அவள் தந்தை என்பதாகக் கூறப்படும் என்று முன்னர்க் கூறினார். இங்கு தந்தை குரு என்னும் தன்மையில் அறியத்தக்கனவாக ஞானம் எய்துவிக்கும் தன்மையினனாக அமைய வேண்டும் என்றவாறும்,

"தந்தை குரவன்எனும் தன்மைஅறி தக்கோனே
நிந்தை இல்சீர் எய்தும் நிலத்து" (குறள்-434)

என்னும் குறட்பாவில் கூறுகின்றார். மேலும், முருகப் பெருமான் போல குருவாக தகுந்த மொழி சொல்லி ஞானமும் இன்பமும் வாய்க்கச் செய்பவனாக தந்தை அமைய வேண்டும் என்ற கருத்தை,

"தகப்பன் களிகூரத் தக்கமொழி சொல்வன்
குகப்பெருமான் போலுங் குரு." (குறள்-436)

என்பதாகக் கூறினார். தந்தையானவன் ஒரு காலத்தில் தவறான நெறியில் சென்றுவிட்டால் மகன் நன்னெறிக் கூறினால் ஏற்க வேண்டும் என்ற கருத்தைக் குறிப்பினால் உணர்த்தி,

"புன்னெறியில் தந்தை புகுந்தால் பொதுவில்நற்சேய்
நன்னெறிகூ றித்திருத்த லாம்." (குறள்-439)

என்ற குறட்பாவைக் கூறுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

**உடன் பிறந்தார்**

ஒரு உடம்பில் உடலுறுப்புக்கள் ஒவ்வொன்றும் இன்றியமை யாமை போல ஒவ்வொருவரும் தத்தமக்குள் நிறைவு படுத்திக் கொள்கின்ற அறிவுடையவர்களாக உடன் பிறந்தோர் திகழ வேண்டும் என்று சுட்டினார் தண்டபாணி சுவாமிகள். இதனை,

"உடன்பிறந்தார் தம்மை உடலுறுப்பில் தாங்கும்
கடன்பிறழார் கற்றறிந்தோர் கள்." (குறள்-442)

என்ற குறட்பாவில் காண முடிகின்றது.

''கொம்பொன்றில் காய்த்தபைங்காய்க் கொத்தனைய
பாலர்தம்மில்
வம்பொன்ற லேஅறத்தின் மாறு.'' (குறள்-441)

என்பது முதற்பாடல் ஒரு கொம்பில் கொத்தாகக் காய்கள் காய்த்தது போல உடன்பிறந்தார் குடும்பத்தில் விளங்குபவர். அவர்கள் தமக்குள் எந்த வம்பும் இல்லாது இருக்க வேண்டும். அவர்களுக்குள் வம்பு வருமானால் அது அறத்திற்கு மாறான செயல் என்று அக்குறட்பாவில் சுவாமிகள் கூறினார். உடன் பிறந்தார்கள் உள்ள குடும்பத்தில் மூத்தவன் தந்தையைப் போல செயல் உடையவனாக இருக்க வேண்டும் என்றும், மூத்தவள் தாயைப் போல செயலினை உடையவளாக இருக்க வேண்டும் என்றும், பின்னோர் அவர்களின் மூலமாக செயல் மேற்கொள்ள வேண்டும் என்று கூறி அதுவேகுடும்பத்திற்குப் பெருமை என்றும் கூறினார்.

''முன்னானைத் தந்தைஒப்ப மூத்தாளைத் தாயள்ஒப்பல்
பின்னோர் நினைத்தொழுகல் பீடு'' (குறள் – 443)

குடும்பத்தில் ஒருவர் உயர்ந்தாலும் அவனை மருவி அவர் நன்மையில் குடும்பமே பெரிய மாண்பையுடையதாக ஆகுமென்று,

''ஒருவன் உற்ற நன்மை உடன்பிறந்தார் எல்லரம்
மருவ முயால்பெரு மாண்பு.'' (குறள் – 444)

என்ற குறட்பாவில் கூறினார். குடும்பத்தில் பிறந்த மக்களில் ஒருவரேனும் நன்மையுடைய செயல் உடையவராக இருத்தல் வேண்டும் என்று குறித்துக் காட்டினார். அதுவே குடும்பம் உயர்வதற்கு வழிவகுக்கும் என்பதாகும். குடும்பத்தில் உடன் பிறந்தார்க்குள் கலகம் இல்லாது இருந்தால் உலக அதிசயம் என்றவாறு குடும்பம் விளங்கும் என்ற தன்மையில்,

''கலகம்இன்றி முன்பின் கலந்திருப்பக் காணல்
உலகத் ததிசயத்தில் ஒன்று.'' (குறள் – 446)

என்ற குறட்பாவினை அமைத்துக் காட்டினார்.

**மனைவி**

குடும்பத்தில் கணவனும் மனைவியும் குடும்பத்திற்கு ஓர் உயிர் எனத் திகழ்பவர்கள். மனைவி பாதிவுயிர் ஆவாள் அவள் இருப்பதாலேயே மனை வாழ்கின்றது என்று,

"தன்னுயிரில் பாதி தனைஇழந்த பின்னும்உயிர்
மன்னுலகில் வாழாள் மனை." (குறள் - .51)

என்ற குறட்பாவில் கூறினார். குடும்பத்திற்கு உலகிலுள்ள மக்கள் யாரும் மனைவியை விடவும் மிக்க ஆற்றல் உடையவர் களாக இருக்கமாட்டார் என்று,

"மனையினுமிக் காரும் மானிலத்துண் டென்பார்
தினையுமுணர் வில்லாச் சிலர்." (குறள் – 453)

என்றவாறு சுட்டினார். சிறிதேனும் உணர்வு செயல்படுபவர் களாக இருந்தால் அவர்கள் மனைவியே குடும்பத்திற்குத் தலையாயவள் என்று கூறுவார்கள் என்பதை அப்பாடலில் குறித்துக் காட்டுகின்றார்.

மானம் என்பதன் அடிப்படையில் தண்டபாணி சுவாமிகள் குறித்துக் காட்டியதை,

"மனம் புரக்கும் மனைதோள் அணைவானே
ஈனம் சிறிதும் இலான்." (குறள் – 456)

என்ற பாடலால் அறியலாம். இப்பாடலில் மானத்தைக் காப்பவள் மனைவி என்றும் அவளால் கணவனுக்கு இழிவு சிறிதும் இல்லையென்றும் இரண்டு செயல்களையும் மனைவி யென்ற பெண்ணிற்கே இணைத்துக் காட்டினார்.

தவ அடிப்படையில் பெண்களை இணைத்துக் காட்டும் சுவாமிகள்,

"தவம்பெருக்கும் ஆடவரில் தாழ்ச்சிஅன்று கற்பின்
நவம்பெருக்கும் மாதர்நல் லார்." (குறள் – 459)

என்ற குறட்பாவில் தவமுடைய ஆடவர்களை விடவும் உயர்ந்த வர்களாக பெண்கள் (மனைவி) அமைகிறார்கள் என்றும் அவர் களாலேயே புதுமையைப் பெருக்கும் தவநிலைச் செயல்கள் விளைகின்றன என்றும் கூறுகின்றார்.

**மக்கள்**

மக்களைத் தாய் என்ற அதிகாரத்திலும், தந்தை என்ற அதிகாரத்திலும் இணைத்துக் காட்டிய தண்டபாணி சுவாமிகள் ஆண், பெண் ஆகிய இருவகை மக்களையும் ஈன்றெடுத்து உவத்தலே தவம் என்றும், அதுவே குடும்பத்திற்கு உயர்வு என்றும் கூறினார். மகன் குடும்பப் புகழை நிலைநாட்டுபவனா கவும், மகள் சிறந்த ஆடவனைக் கணவனாகப் பெறத் தகுதியுடையவளாக ஆக்குவதும் குடும்பத்தில் மக்கள் தன்மையாகக் காட்டப்பட்டுள்ளன.

"கொண்கன்ஒரு வற்குக் கொடுக்கினும்பின் போம்அவரே
பெண்கள்அவர் மாட்சி பெரிது." (குறள் - 458)

"தன்ன தவயவம்நேர் தன்மையுறு தையல்நல்லாள்
பின்னமுறக் காண்பவனோர் பேய்." (குறள் - 460)

மேற்கண்ட குறட்பாக்களும் பக்தி, கல்வி இரண்டை பயிற்சிப் படுத்திச் செயல்படுத்த வேண்டும் என்று மக்களைக் காட்டி அவர்கள் அறத்தில் வழுவாமல வாழவேண்டும் என்று குடும்பத்தில் தக்கவர்கள் ஆக்க வேண்டும் என்று கூறினார். மக்களைச் சமுதாய நிலையில் வைத்துக் காட்டினார் சுவாமிகள்.

**சுற்றமும் நட்பும்**

விருந்து உண்ணுகின்ற காலத்திலும் புலால் உண்ணாத வருடைய வீட்டில்தான் உண்ணவேண்டும் என்று தண்டபாணி சுவாமிகள் முதற்கண் வலியுறுத்துகின்றார். குடும்பம் ஊன் உண்ணக்கூடாது என்பதும், அவர் வீட்டில் உணவு உண்ணக் கூடாது என்பதும்,

"நாயருந்தும் ஊன்விழையா நல்லசுற்றத் தார்நடுவில்
மேயவன்தன் புண்ணியமே மேல்." (குறள் - 471)

என்ற குறட்பாவில் உணர முடிகிறது. ஒரு குடும்பம் சுற்றத்தையும், தூய்மையுடையதாக ஆக்குவதற்குச் செயல்பட வேண்டும் என்பதை,

"சுற்றம் முழுதினையும் தூய்தாக்க நாடுமனம்
உற்றவனை எள்ளா துலகு." (குறள் - 474)

என்பதால் சுட்டினார்.

“செல்வன் இனத்தார்போம் தீய வழி அடைத்து
நல்வழியில் ஒச்சும் நயந்து.” (குறள் – 480)

என்ற குறளில் குடும்பமானது சுற்றங்களையெல்லாம் உள்ளடக்கியதாக அமைந்து தீய வழிகளை அடைந்து நல்வழி செயல்களை மேற்கொள்ள வேண்டுமென்று கூறினார். செல்வக் குடும்பத்தின் மூலமாக அவர்களைச் சார்ந்த சுற்றங்கள் இனம் என்பதாகத் தொகுதிப்பட்டு அவையெல்லாம் நல்வழிப்படுதற்கு குடும்பமே அடிப்படை என்பதைக் காட்டினார் சுவாமிகள்.

உறவுமுறையால் சுற்றம் விளக்கிய சுவாமிகள் அயலவராக உள்ள ஒருவரின் அன்புத் தொடர்பை நட்பு என்பதால் கொண்டு அவர் மூலமாகவும் குடும்பம் சிறத்தலைக் காட்டி ‘நட்பர்’ என்ற ஓர் அதிகாரத்தில் நட்புப் பற்றிப் பேசுகிறார்.

“நட்பர் நலம்தீது நம்மவென நாடும் அவர்
பெட்பசல வேந்திற் பெரிது.” (குறள் – 482)

என்ற குறட்பாவில் நன்மை தீமை நட்புடையவர்க்கு அமையுமேயானால் தன்னுடையது எனக் கொள்ளும் நட்பரே, நாட்டினுடைய நன்மை, தீமைக் கருதிச் செயல்மேற்கொள்ளும் வேந்தனைவிடச் சிறந்தவர்கள் என்று கூறுகின்றார் சுவாமிகள். ஒருவனுடைய விருப்பத்தையறிந்து அவ்விருப்பத்தின் மெய்ப் பொருள் அடிப்படையில் செயல் மேற்கொள்பவனுடைய நட்பே அருமையுடைய நட்பு என்பதை,

“எப்பொருள்ஈண் டெய்திடினும் இச்சை வழிஒழுகும்
மெய்ப்பொருளாம் நட்பரிதா மே.” (குறள்–484)

என்ற குறட்பாவில் குறித்துள்ளார்.

கள்வர், வெறியர், கவற்றாளர் ஆகியவர்களுடைய நட்பால் நரகமே கிடைக்குமென்று கூறுகின்றார். தீயவழியில் செலுத்தி வருகின்ற, தீயவழியிலிருந்து திருப்பாத நட்பரைப் பிரிவது நல்லது என்று கூறுகின்றார். பாவம், உயிர்க்கொலை என்பதை உணராத புலால் உண்பவர்களுடைய உறவு பெருந்தீது என்றும் கூறுகின்றார்.

“வஞ்சகஞ் சிறிதுமிலா மாதவத்தோர் தம்உறவே
தஞ்சமெனக் கொள்ளத் தகும்.” (குறள் – 488)

என்றும் பாடலில் வஞ்சம் சிறிதும் இல்லாதவன் மாதவத்துவம் என்றும் அவனுடைய உறவைத் தஞ்சமாக அடைந்தேனும் பெற வேண்டும் என்றும் கூறுகின்றார். பகையை உள்ளே வைத்துக் கொண்டிருக்கின்ற நிலையே நண்பருடைய பிழைகளை நாள்தோறும் தீர்க்க முயலாதவனை நண்பனாகக் கொண்டிருப்ப தாகும் என்று,

> ''நட்பர் பிழைதீர நாளும் முயலாதான்
> உட்பகைஉற் றார்களையொக் கும்.'' (குறள் - 490)

என்ற குறட்பாவில் கூறினார்.

> ''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது.'' (திருக்குறள் 45)

அன்பு நிலையமாக குடும்பம் விளங்க வேண்டும். அப்போதே குடும்பத்தின் பண்பு, அன்பு எனப்பெறும். அந்தக் குடும்பத்தில் விளையும் அறமே- வாழ்வின் பயன் ஆகும். அன்பால் எல்லாச் செயல்களையும் செய்து அறத்தை நிலைநாட்டுதல் வேண்டும். அவ்வாறு, எடுத்துக்காட்டாக விளங்கும் வாழ்க்கை வாழ்ந்து காட்டுதல் வேண்டும். அதற்காகத்தான் குடும்ப வாழ்க்கை தேவை.

சமுதாயத்தில் பல்வேறு நிறுவனங்கள் ஒழுக்கத்தை வலி யுறுத்தினாலும் குடும்பமே ஒழுக்கத்தைக் கட்டிக்காக்கும் தலையாய சமுதாய நிறுவனமாகும். ஒவ்வொரு மனிதனின் பிறப்பு முதற்கொண்டு தேவைகள் எல்லாம் குடும்பத்தின் மூலமே குடும்பத்திலேயே நிறைவேற்றப்படும். எனவே, எந்த ஒரு துன்பத்திற்கும் இடந்தராத இன்ப இருப்பு நிலையமாக குடும்பத்தை ஆக்கிக்கொள்ள வேண்டும். அதற்கு முதல் அடிப்படை தலைவன், (தந்தை), தலைவி (தாய்), மக்கள் (உடன் பிறந்தோர்) போன்றோரின் தொடர்பு உறவில் குடும்பம் வலிமை பெற்றதாகத் திகழ்தல் வேண்டும். அக்குடும்பமானது உறவு முறையால் சுற்றம் காத்து இனம் என்பதாக விரிந்தமைய வேண்டும். மேலும் உறவாகா வேறு சமூக நபர்களையும் நட்பால் உறவு கொண்டு குடும்ப நலத்தொடர்பால் சமூகநலமும் பேணுவதாகக் குடும்ப நலம் விரிந்து தழைக்க வேண்டும். மேற்கண்ட விளக்கங்களில் தாய், தந்தை, உடன்பிறந்தார், மனைவி, மக்கள், சுற்றம், நட்பு ஆகிய எழுவகை இணைப்புக் களில் தண்டபாணி சுவாமிகள் குடும்பம் கட்டியமை தெளியலாம்.

# அறுவகை இலக்கணத்தில் சொல்லாக்கக் கூறுகள்

சா. கிருட்டினமூர்த்தி

ஒரு மொழியின் இலக்கணங்கள் அம்மொழியின் அமைப்பை விளக்குவதோடு மட்டுமல்லாமல் மொழியில் காலந்தோறும் ஏற்படும் மாற்றங்களையும் சுட்ட வல்லனவகும். மொழியில் ஏற்படும் மாற்றங்களைச் சுட்டுதற்குரிய காரணிகள் பல இருந்தாலும் புதுச்சொற்களின் சேர்க்கை அல்லது வரவு என்பது இன்றியமையாத காரணியாகக் கருதப்படும். இதற்குச் சமுதாய பொருளாதார, அறிவியல் சூழல்கள் அடிப்படையாக அமையலாம்.

**மொழி முதல் எழுத்துகள்**

ஒரு மொழிக்குக் கூறப்படும் மொழி முதல் எழுத்துகள் பற்றிய இலக்கணம் அவ்வக்காலத்து மொழிக்குள் நுழைந்த சொல் வரவை விளக்குவதாகும். தொல்காப்பியர் கூறிய மொழி முதல் எழுத்துகளுக்குரிய இலக்கணம் பின்னால் வந்த இலக்கண நூல்களில் மாற்றம் பெற்றிருப்பதை நாம் காண முடியும். சான்றாக,

> ''கதநபம என்னும் ஆவைந் தெழுத்தும்
> எல்லா உயிரொடுஞ் செல்லுமார் முதலே'' (தொ.எ.61)

என்றும்

> ''சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
> அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே'' (தொ.எ.62)

என்றும் கூறப்பட்டதிலிருந்து கதநபம என்னும் ஐந்து மெய்கள் மட்டுமே எல்லா உயிரெழுத்துகளோடும் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும் என்பதையும், ச என்னும் மெய் அ, ஐ, ஔ ஆகிய மூன்று உயிரெழுத்துகள் நீங்கலாக ஏனையவற்றோடு சேர்ந்து மொழிக்கு முதலில் வரும் என்பதையும் உணரலாம்.

ஆனால் நன்னூலார் 'ச' என்னும் மெய்யையும் சேர்த்து ஆறு மெய்களும் பன்னிரண்டு உயிரெழுத்துகளோடும் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும் என்று கூறினார். இதனால் 'ச' 'சை', 'சௌ' – வை முதலாகவுடைய சொற்கள் தொல்காப்பிய காலத்திற்கு முன் மொழி வழக்கில் இல்லையென்பதை அறியலாம். இலக்கணப்படி நன்னூலார் காலத்திற்கு முன் அத்தகைய சொற்கள் வழக்கில் இருந்தன என்பதை உய்த்துணரலாம். ஏறத்தாழ 10 நூற்றாண்டுக்கால மொழி வளர்ச்சியில் மொழி முதல் எழுத்துகளில் இம்மாற்றம் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது. இதற்குப் பின்னால் வந்த இலக்கண விளக்கம்,

> ''பன்னீ ருயிரும் கதந பமஎனும்
> ஆவைந்து எழுத்தொடு சவஞய உளப்பட
> அவ்வொன் பான்உயிர் மெய்யும் மொழிமுதல்''
>
> (இலக். விளக். 26)

மேலும் மூன்று மெய்களையும் சேர்த்துப் பொதுப்பட இலக்கணம் கூறியுள்ளதைக் காண முடிகின்றது. ஆயினும் வ, ஞ, ய ஆகிய மூன்று மெய்களுக்கும் சிறப்பு விதிகள் உண்டு. இவை இன்னின்ன உயிரெழுத்துகளோடு மொழி முதலில் வருவ தில்லை என்பதை மேற்கண்ட இலக்கணங்கள் வழி அறியலாம்.

ஆனால் தண்டபாணி சுவாமிகள் தாம் எழுதிய அறுவகை இலக்கணத்தில் மொழிமுதலாகும் எழுத்துகள் பற்றி இலக்கணம் கூறாமல் மொழிக்கு முதலாகாத எழுத்துகள் பற்றி இலக்கணம் கூறியிருப்பது சிந்தனைக்குரியதாகும். மேலும் அவர் எந்தெந்த உயிரெழுத்துகளோடு சேர்ந்து எந்தெந்த மெய்யெழுத்துகள் மொழிக்கு முதலில் வரும் என்பதைக் கூறாமல் தவிர்த்திருப்பதும் நோக்குதற்குரியதாகும். மேலை நாட்டவரின் வருகையாலும் அதன் காரணமாக நிகழ்ந்த அறிவியல் தொழில் நுட்பத்தாக்கத் தாலும் நாடு பாதிப்பிற்குள்ளான நேரத்தில் வாழ்ந்தவராதலால் தண்டபாணி சுவாமிகள் மொழியில் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்களைக் கண்ணுற்ற நிலையில் அம்மாற்றங்களுக்கு வழி வகுக்கும் நோக்கில் மொழி முதல் எழுத்துகளைக் கூறாமலும் அவற்றிற்குச் சிறப்பு விதிகள் சுட்டாமலும் சென்றிருப்பார் என்பதை உணர முடிகின்றது.

"ஆய்தமும் ஒற்றும் ஙகரமும் டகரமும்
ணகரமும் ரகரமும் லகரமும் ழகரமும்
ளகரமும் றகரமும் னகரமும் மொழிமுன்
நில்லா என்று நிகழ்த்திடல் மரபே" (அறுவகை 112)

இந்நூலுக்கு உரையெழுதிய புலவர் ப. வெ. நாகராசன் அவர்களும், "சிறப்பு விதிகள் இந்நூலில் கூறப்படவில்லை. நிகழ்த்திடல் மரபே என்றதனான் புதியன புகுதலாகச் சில சொற்கள் நூல் வழக்கிலும் இடம்பெற்று விட்டால், 'கடி சொல்லில்லைக் காலத்துப் படினே' என்னும் விதி பற்றித் தக்கவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது உணர்த்தப் பட்டது" எனக் கருதிக் கூறியுள்ளமையையும் இங்கு எடுத்துக் காட்டலாம்.

அடிப்படையில் தண்டபாணி சுவாமிகள் ஆன்மீக வாதி என்பதாலும் உலக வாழ்வில் தொடர்புறாது, துறவு வாழ்க்கையை மேற்கொண்டவர் என்பதாலும் மொழியை ஆன்மீக நோக்கில் பெரிதும் ஆய்ந்ததைவிட அறிவியல் நோக்கில் ஆய்ந்தது குறைவென்றே கூறலாம். இதனை அவர் நூற்பாக் கூறும் முறையிலிருந்தும் நூற்பாக்களில் எடுத்துக்காட்டுகளைச் சுட்டும் நிலையிலிருந்தும் அறியலாம். இருப்பினும் அறுவகை இலக்கணத்தில் கூறப்பட்டுள்ள ஒருசில செய்திகள் சொல்லாக்கக் கூறுகளாக எடுத்துக் கொள்ளத்தக்கனவாகும்.

**உடைமைப் பெயர் விகுதி**

ஒன்றை உடைத்தாதலைச் சுட்டுதற்கு இவ்விகுதி பயன் படும். இலக்கணத்தில் கூறப்படும் விகுதிகள் அனைத்தும் சொல்லாக்கத்திற்குரிய கூறுகளாகும். பெயர் அடியில் சேர்க்கப் படும் விகுதிகளாக இருந்தாலும், வினையடியில் சேர்க்கப்படும் விகுதிகளாக இருந்தாலும் அவ்வவ் விகுதிகளின் சேர்க்கைக்குப் பிறகு வேறுவேறு சொற்கள் உருவாக்கப்படுவதை நாம் காண முடியும்.

*சான்றாக*

வறு → வறுத்தல் → வறுக்கை → வறுவல்
ஆடு → ஆடுதல் → ஆடல் → ஆடுகை
கண் → கண்ணி

காண் → காணுதல் → காணுகை → காட்சி காண்டல்

போன்றவற்றைக் கூறலாம்.

இவற்றுள் 'இ' என்பதை உடைமைப் பெயர் விகுதியாக அறுவகை இலக்கணம் கூறுகின்றது. இதனை

"இகரம் அணித்தாம் பொருளினைச் சுட்டி
உடைமை காட்டும் கடைநிலை ஆகும்;
இப்பணம் கண்ணி எனும் இவை உதாரணம்"

என்னும் நூற்பா சுட்டுகின்றது. இந்த 'இ' என்னும் விகுதியை நன்னூல்

1. பெண்பாற் பெயர் விகுதியாகவும் (எ.டு: அரசி)
2. தெரிநிலை வினைமுற்று விகுதியாகவும் (எ.டு: நடத்தி)
3. குறிப்பு வினைமுற்று விகுதியாகவும் (எ.டு: வில்லி)
4. தெரிநிலை வினையெச்ச விகுதியாகவும் (எ.டு: ஓடி)
5. வினை முதற்பொருள் விகுதியாகவும் (எ.டு: அலரி)
6. செயப்படுபொருள் விகுதியாகவும் (எ.டு: ஊருணி)
7. கருவிப் பொருள் விகுதியாகவும் (எ.டு: மண்வெட்டி)

ஏழு நிலைகளில் எடுத்துக்காட்டுவதைக் காணலாம். இவற்றுள்ளும் பின் கூறப்பட்ட மூன்றும் சொல்லாக்கத்திற்குப் பெருந்துணை புரிவனவாகும்.

'இ, ஐ, அம் என்னும் மூன்று விகுதிகளும், வினை முதற் பொருளையும் செயப்படுபொருளையும் கருவிப் பொருளையும் உணர்த்தும்.

அலரி, பறவை, எச்சம் என்பன வினை முதற்பொருளை உணர்த்தின. இவை முறையே அலர்வது, பறப்பது, எஞ்சுவது எனப் பொருள்படும்.

ஊருணி, தொடை, தேட்டம் என்பன செயப்படுபொருளை உணர்த்தின. இவை முறையே ஊராலுண்ணப்படுவது, தொடுக்கப் படுவது, தேடப்படுவது எனப் பொருள்படும்.

மண்வெட்டி, பார்வை, நோக்கம் என்பன கருவிப் பொருளை உணர்த்தின. இவை முறையே மண்வெட்டற் கருவி, பார்த்தற்

கருவி, நோக்கற் கருவி எனப் பொருள்படும்' என்பார் நன்னூல் காண்டிகையுரைகாரர்.

இம் மூன்று பொருண்மைகளோடு குறிப்பு வினைமுற்றுப் பொருண்மையையும் ஒருங்கிணைத்த நிலையில், தண்டபாணி சுவாமிகள் 'இ' என்ற விகுதியை உடைமைப் பெயர் விகுதியாகக் கொண்டுள்ளார் என்பதை நன்கறியலாம். ஏனெனில் இவ்விகுதி ஒன்றே சொல்லாக்கத்தில் பெரிதும் பயன்படும் என்பதைச் சொல்லாக்கவியலார் நன்கறிவர்.

எ.டு: நிறமி, உயிரி, நீரி, தின்னி, உயிர்க்கொல்லி, கணினி, வேரி, மெல்லுடலி, கணுக்காலி

இவை போன்று பல சொற்கள் 'இ' விகுதிகளைக் கொண்டு உருவாக்கப்பட்டு இன்று நடைமுறையில் உள்ளன. இவ்வகையில் இதன் தேவையை நன்கறிந்து சுவாமிகள் இவ்விகுதியை விதந்து கூறியுள்ளார் என்று கருதலாம்.

**தொகை இலக்கணம்**

தொகை இலக்கணம் ஒரு மொழியின் சொல்லாக்கச் சிறப்பை எடுத்துக் கூறுவதோடு சொல்லாக்கத்திற்கு அடிப்படையானதுமாகும். கலைச்சொல்லாக்க முறைகளில் இரண்டு சொற்கள் சேர்ந்த கூட்டுச் சொற்களை உருவாக்குதற்குத் தமிழில் அமைந்துள்ள தொகையிலக்கணங்கள் குறிப்பிடத்தக்க பங்கு வகிக்கின்றன. பண்புத்தொகை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, வினைத்தொகை, ஆகுபெயர், வண்ணச் சினைச்சொல் போன்றவை சொல்லாக்கத்தில் நெறிமுறைகளை உணர்த்துவனவாகும். அவ்வகையில் உடைமைப்பொருள் வேற்றுமையாகிய ஆறாம் வேற்றுமையும், அதன் தொகையும் சொல்லாக்கத்தில் குறிப்பிடத்தக்க இடம் பெறுகின்றன. இவ் ஆறாம் வேற்றுமைத் தொகையை,

> "ஒரு பொரு ளுடன்அதன் உடைமையைப் பொருத்தில்
> இன் எனும் மொழியிடை தோன்றாது இசைவுறும்
> உமை மகன் எனும்சொல் உதாரணம் ஆமே"
>
> (அறுவகை : 109)

எனும் நூற்பாவில் ஆறாம் வேற்றுமைப் பொருள் நோக்கிச் சேர்த்து உருவாக்கப்படும் எந்த ஒரு சொல்லிலும் 'இன்' என்னும் சொல்லுருபு இடையில் இடம் பெறாது என்று கூறுகின்றார். இன் என்பது உடைமைப் பொருள் குறிக்கும் சொல்லுருபு என்பது பிற்கால வழக்கு.

இலைத்துளை
ஆவியழுத்தம்
மூலக்கூறு
குரோமோ புரதம்
ஒளிமடக்கம்
மரக்கிளை
பூந்தாது

மேற்கூறப்பட்டவை போன்று பல சொற்கள் ஆறன் தொகையின் பாற்பட்டனவாகப் பேரளவில் பயின்று வருவதால் அவற்றின் பயன்பாடு நோக்கிச் சொல்லாக்கக் கூறாக இந் நூற்பாவைச் சுவாமிகள் கூறியுள்ளார் என்று கருதலாம்.

இவை போன்ற குறிப்பிடத்தக்க சில இலக்கணக் கூறுகள் அறுவகை இலக்கணத்தில் காணப்பட்டாலும் அவை சொல்லாக் கத்திற்குப் பெரிதும் பயன்தருவனவாக அமையும் என்பதில் ஐயமில்லை. இது போன்று பிற இலக்கண நூல்களிலும் உரைகளிலும் காணப்படும் சொல்லாக்கக் கூறுகளைத் தொகுத்துக் காண்பது இன்றைய நிலையில் இன்றியமையாத தாகக் கருதப்படுகின்றது.

# திருமயிலாசலக் கலம்பகம்

## அ. கிருபானந்தம்

கலம்பகங்கள், இதழகல், ஏகத்தாள், திரிபு, யமகம் முதலான யாப்பு அணி நலன்களையும்வண்ணப் பாடல்களையும், நாற்கவிப் பாடல்களையும் பாடுவதில் வல்லமை பெற்றிருந்த சுவாமிகள் சமய பேதமின்றி எண்ணற்ற நூல்களை இயற்றியருளியுள்ளார் கள். அவற்றில் திருமயிலாசலக் கலம்பகமும் ஒன்று. இந்நூலில் பாயிரம், கலம்பகத்தின் உறுப்புகள் குறித்த பாடல்கள், எண்சீர் விருத்தம் உள்ளிட்ட நான்கு பாடல்களும், நூலின்கண் நூறு பாடல்களும், நூலின் இறுதியில் நூற்பயன், நூலாசிரியர், நூல் எழுதப்பெற்ற நாள் ஆகிய மூன்று வெண்பாக்களுமாக 107 பாடல்கள் இந்நூலின்கண் அமைந்துள்ளன. இவற்றில் புயவகுப்புப் பாடல் நீண்ட வண்ணப் பாடலாக அமைந்துள்ளது. சொல், பொருள், யாப்பு, அணி, சந்த, கற்பனை நயங்கள் செறிந்து விளங்குகின்றது. இந்நூலில் மயிலமலைச் சிறப்பு, சிவஞானி, முருகன் அருட் சிறப்புகள், அகப்பொருள் மரபுகள், சுவாமிகள் வேண்டும் வரங்கள் முதலியன குறித்து ஓராற்றான் இக்கட்டுரையின்கண் காண்போம்.

### நூல் தோன்றிய வரலாறு

சிவப்பிரகாசரும், சாந்தலிங்கரும் சந்தித்துக் கொண்ட போது, மயிலம் பொம்மபுர ஆதினம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளைப் பற்றிப் பாடுமாறு, சாந்தலிங்கர் கூற 'யாம் நரர்தமைப் பாடுவதில்லை' எனச் சிவப்பிரகாசர் மறுத்தார். அவர்கள் புத்துப்பட்டில் தங்கியிருந்தபோது முருகப் பெருமான் சிவப்பிரகாசர் கனவில் தோன்றி, விடு பூக்கள் சில தந்து மாலை தொடுக்குமாறு கூறி மறைகின்றார். இது குறித்து சாந்தலிங்க ரிடம் உரையாடிய சிவப்பிரகாசர் முருகனே சிவஞானி என உணர்ந்து பாடித் துதிக்கலாயினார். இதனை,

"கரையிற்பா லையற்குவகை பெருகவோர் கவிக்குரிய
கனவினார் மலர்க்கொடுசெல் வாரத்த மிழ்ந்தன" (12)

என வரும் புய வகுப்புப் பாடற்பகுதி தெரிவிக்கின்றது.

தம்மைப் பாட முருகன் அருளியமை நினைந்து, சிவஞான பாலய சுவாமிகள், முருகப் பெருமான் வீற்றிருக்கும் மயிலாசலத்தின் மீது கலம்பகம் பாடுமாறு தண்டபாணி சுவாமிகளைப் பணித்தருள்கின்றார். பாயிரப் பாடலின் இச்செய்தி இயங்குகின்றது.

"அன்றுசிவப் பிரகாசர் அரியதுதி தனக்கெய்தச்
சென்றுபகர்ந் தமைநாடிச் சிவஞான பாலையன்
குன்றுளுயர் மயிலமலைக் குமரனுக்குக் கலம்பகம் ஒன்(று)
இன்றுசொலத் திரும்புகழோன் இடத்திலிது இசைத்தானே"

ஐம்முகச் சிவனும், அறுமுகச் சிவனாரும் வேறல்லர் என்பதும், கயிலைச் சிவனே, மயிலைச் சிவஞானி என்பதும் நாம் இங்குக் கருதற்குரியன.

### நூல் தோன்றிய காலம்

தமிழ் உலகில் எண்ணற்ற நூல்கள் தோன்றியிருப்பினும், பெரும்பான்மையான நூல்களுக்கு ஆசிரியர், தோன்றிய காலம் முதலியன விளக்கம் பெற்றில. புலவர் புராணம் எழுதுவான் வேண்டி விழைந்த சுவாமிகளுக்கு இவற்றால் பெரிதும் இடரேற்பட்டது. ஆகவே கலம்பக நூல் எழுதப் பெற்ற நாளினை தெள்ளிதின் ஒரு நூற்பாவான் எடுத்தியம்புகின்றார்.

அந்தப் பாடல் மூலம் பிரமாதியாண்டு, ஆவணித் திங்கள் 17 ஆம் நாள் திங்கட்கிழமை, திருவோண நட்சத்திரம் சில நாழிகைலிருந்து பின்பு அவிட்டம் வந்த நாளில் இந்நூல் எழுதப் பெற்றதை அறிய முடிகிறது.

### முருகன் ஆட்கொண்டமை

சிவபெருமான் தானே வந்து வலிய ஆட்கொண்டதாய் மாணிக்கவாசகர் குறிப்பிடுவதைத் திருவாசகத்தில் காண்கிறோம். அதே போன்று வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளையும் முருகப்பெருமான் தானே வலிய வந்து ஆட்கொண்டருளியுள்ளான்.

''மாட்டாத என்னை வலியவந்து ஆட்கொண்டு வண்கமலத்
தாள்தா மரைத்தொண்டு செய்என்ன முன்பு தடுத்து
நின்றான்'' (14)

என்று அவர் பாடுகின்றார். மேலும் மலையின்மீது முன்பு தன்னைக் காத்தருளியதையும்

''வைவதற் கஞ்சாத கொடியோனை அன்று திரு
மலைமீது காத்த தெய்வம்'' (78) எனவும்

''ஈரம் பொருந்தா இதயத் தேனை
வாரம் பெருந்த வலிதாண்டான்'' (94)

எனவும் அருணகிரியே வண்ணச்சரபமாக அவதரித்துள்ளார் என்பதை முருகப் பெருமான், சுவாமிகளின் கனவில் கூறியுள்ளார். வள்ளற் பெருமான் தாயுமானவர் சுவாமிகளின் அவதாரம் என்பது முதலானவற்றையும் இவ்வாறே தம் கனவில் வந்து சொன்னதாகவும் குறிப்பிடுகின்றார்.

''அஞ்சல்அளித் தாண்டபெருங் கருணைச் சீரும்
அருணகிரி தான்எனநீ அறைந்த சொல்லும்'' (10)

''வரும்பல கனவில்நல் ஒருவா சகமே
மகிழ்வுடன் உரைசெயும் முருகோன்'' (97)

என்பன அப்பாடலடிகள்.

**மயில மலைச் சிறப்பு**

மயில மலையானது, மற்ற எல்லா மலைகளையும் விடச் சிறப்பினில் உயர்ந்திருக்கிறது. குறளனாகி வந்து மாவலி பால் அன்று மூவடி நிலம் கேட்டு, திரிவிக்ரம அவதாரம் எடுத்து, மூதண்ட கூட முகடுமுட்ட அளந்தபோது திருமால் வளர்ந்த நிலை போல, மயில மலை வளர்ந்து திகழ்கின்றது. இவற்றை,

'கோட்டினத் துயர்ந்தவன்மை கொண்டதான மயிலம்' (83)

'தாமரைக்கண் முகுந்தன் என வளர்ந்து காட்டும்
தனிமயிலா சலக்குவடு' (42)

என வரும் தொடர்களால் எடுத்துரைக்கிறார்.

மயில மலையை வணங்குவோர், கோள்களால் பீடிக்கப்பட மாட்டார்கள். 'கோள் விலக்கும் மயில மலைக்கோயில் (31)

என்று குறிக்கப்பட்டிருப்பது, 'நாளென் செயும்? வினைதான் என் செயும்? என்னை நாடி வந்த கோள் என் செயும்?' என அருணகிரிநாதர் முருகனைப் பற்றிப் பாடியிருப்பதை நினைவுறுத்துகின்றது.

இயற்கை வளம், மலை வளம், பொழில் வளம், நீர் வளம், மழை வளம் முதலியன அனைத்து வளங்களும் கொண்டதாக மயில மலை திகழ்கின்றது (61) மாலைகளாய் அருவி பொங்கிப் பெருகுகின்றது (2) தென்னை, மா, செருந்தி, குருந்தை, புன்னை முதலான மரங்கள் மயில மலைச் சாரலில் செறிந்து காணப்படுகின்றன. குயிலினங்கள் பாடவும், குரங்கினங்கள் கொட்டவும், மயிலினங்கள் ஆடும் அருமையான காட்சியினதாகத் திகழ்கின்றது (24).

மேகமாகிய குளிர்ந்த நீரினை யானையானது பவளம் போன்ற புள்ளிகள் பொருந்திய தன் நீண்ட துதிக்கையைத் தூக்கி – உறிஞ்சி மகிழ்கின்றது. இத்தகு சிறப்பமைந்த பொழில் வளத்தையும், பொன் மதில் சூழ்ந்த கோயிலையும் உடையதாக விளங்குகின்றது. (97) என்பது அப்பாடல்.

மயில மலையை வழிபடும் அன்பர்களைக் காலன் அணுக மாட்டாத வரம் அளிக்க வேண்டுமென முருகனை வேண்டு கின்றார்.

'வண்ணத் தமிழ்மயி லாசலம் நண்ணித் தொழும்அடி
யார்களை
வண்மைச் சமன் அணுகாதருள் – கந்தவேளே' (86)

மயிலத்தைத் துதிப்போர்க்கு எமன் மட்டுமல்லன்; கலியும், மன்மதனும், விதியும் ஆகிய யாவரும் தோற்பர். கவலைக் கடலில் சுழல வேண்டியதில்லை; செந்தமிழ்க் கவிகளை நுகரும் வித்தகத் தன்மையும் விரைந்து வந்த எய்தும்.

'கலியை மதனை விதியைக் காலன்
தனை உன் மதியார் கவலைக் கடலில்
சுழலார்க் கமழ்செந் தமிழ்முற் றுணர்வன்' (91)

எனின் மயிலத்தைத் தொழுதற்கு இனித் தயக்கம் ஏது? மயிலத்தில் ஒவ்வொரு மாதத்திற்கும் ஒவ்வொரு விழா மிகச் சிறப்பாக அமைந்து கொண்டாடப் பெறுகின்றன.

'மாத மோர்திரு நாள்வரும் சீர்திகழ்
மயில மால்வரை வாழ்முரு கையனே' (6)

இதற்கு மாதந்தோறும் வருவதாகிய கார்த்திகை எனப் பொருள் கொள்ளாமல் ஏனைய சிறப்பு விழாக்களைக் கொள்வதே பொருத்தமுடையதாகும்.

பங்குனி உத்திரப் பெருவிழா நாட்களில் முருகப் பெருமான் வள்ளி தெய்வயானை சமேதராய் ஆட்டுக்கடா, தங்கமயில், வெள்ளி யானை, வெள்ளிக் குதிரை முதலான வாகனங்களில் இரவில் நாள்தோறும் திருவுலா வந்து தரிசனம் தருவது வழக்கம். இவ்வாறான காட்சி அன்னை உமையவள் கண்டு உளம் பூரிப்பதாய் உள்ளதாகச் சுவாமிகள் காட்டுகின்றார்.

'மயிலேறித் தகரேறி மழவெள்ளைக் களிறேறிக்
குயில்போலும் உமையவள்கண் குளிரவரும் குருந்தோ நீ!

என்பன அப்பாடலடிகள்.

முருகப் பெருமானும் சிவஞானியும்

பால சித்தருக்கு அருள்புரிய வந்த முருகப்பெருமான் அவர்தம் வேண்டுதலுக்கு இணங்கி மணக்கோலத்துடன் காட்சி யளிப்பதுடன், அவர் தம் சிட பரம்பரையினராகிய சிவஞான பாலய தேசிய மரபினருடன் உளமுவந்து வீற்றியிருந்தருளு கின்றார். மயில மலையில் சித்தி விநாயகர், பால சித்தர், முருகப் பெருமான் சந்நிதிகள் அடுத்தடுத்து அமைந்துள்ளன. பால சித்தரின் ஜீவ சமாதி முருகப் பெருமானின் வலப்புறத்தில் அமைந்துள்ளது.

'அமலன்புகழ் மயிலாசலம் அதில்வாழ்சிவ ஞானிக்(கு)
அருள்செய்து அயில்' (64)

'விஞ்சியபே ரானந்தம் விளைந்தருளும் துணைத்தாளும்
கொண்டுமயி லாசலத்தில் குவட்டிலுறும் கோயிலிடை
மண்டுசடைச் சிவஞானி வலத்தமர வாழ்கின்றாய்' (1)

என வரும் பாடல் மூலம் பாலசித்தரும் சிவஞானியும் வேறல்லர் எனும் கருத்து தெளிவாகின்றது.

சிவபெருமானுக்கும், அகத்தியர்க்கும், சிவஞானிக்கும் பிரணவத்தை உபதேசித்தவர் முருகப்பெருமான். இது குறித்து

மயிலம் முருகன் பிள்ளைத்தமிழில் வைத்தியநாத தேசிகரும் தெள்ளிதின் உரைப்பர். சிவகணத் தலைவருள் ஒருவராகிய சங்குகன்னர் சிவபெருமானின் அருளாணையின் வண்ணம் கடலின் கண் இளையவயதினராய்த் தோன்றியருளினார் என்பது வரலாறு, அதனையொட்டி,

'கடல்நடு விழுந்து கரைமடத் தவிர்தரு
திடமதி பாலயன் ஆதிய சித்தர்
எண்ணிலாற்(கு) உதவும் எழிற்பெரும் சிறப்பும்' (24)

''திருவருள் வளமுறு சிவஞா னியைநேர்
சிலர்பிர ணவமதன் உரைதே றியதால்'' (97)

எனப் பாடுகின்றார்.

**முருகப் பெருமான்–திருவுருவ நலன்**

பஞ்ச பூதங்களும், பரப் பிரமம் ஒன்றும் ஆகிய ஆறும் முருகனின் ஆறுமுகங்களாகத் திகழ்கின்றன. அகம், புறம் எனும் பன்னிரு சமயங்களாக அவனது பன்னிரு திருக்கரங்கள் விளங்குகின்றன. பெருமானின் திருவடிகள் வேத ஆகமப் பொருள்களின் முடிபாகத் திகழ்கின்றன (34) என எடுத்துரைக்கிறார்.

மின்னலென ஒளிவிடும் வேலும், பொன்போலும் மயிலும், ஆட்டு வாகனமும், கூளிரும், சேவலும் முதலானவற்றுடன் திருநீறு பொலியும் திருமேனியுடன் முருகப் பெருமான் செந்தகைப் பைந்தகைத் தேவியர் இருவரும் சூழப்பெற்றவனாய், அந்தணர் போற்ற, தென்றல் தவழும் மயிலமா மலையில் அமர்ந்திருக்கின்றான் (99) எனப் போற்றுகின்றார்

முருகப் பெருமானின் திருத்தோற்றம், தெய்வங்கள் அத்தனையும் ஒன்று என உணர்த்துகின்றது. சிவ சமயம் முதலாய அறுவகைச் சமயத்தாராலும் வணங்கப் பெறுகின்றது. தானவரை அழித்தது, வள்ளி தெய்வானையருடன் வீற்றிருந் தருள்கின்றது, வண்தமிழ்ப் புலமை திகழ் கவுமாரருக்கு இனிய வரமெலாம் உதவுகின்றது (78) எனவும் சுவாமிகள் ஏத்துதலைக் காண்கிறோம். முருகப் பெருமானது திருத்தோள்கள், அன்பர்கள் இன்பமுடன் அணிவிக்கும் செந்தமிழ்ப் பாமாலைகளையும், பூமாலைகளையும் நேசித்து உயரும் தன்மையின.

"குருபரா எனத்தினமும் உருகிநாடு மெய்ப்புலவர்
கொணர்வதான முத்தமிழை நேசித்து யர்ந்தன (12)

எனத் தொழுகின்றார்.

**அறக் கருணையும், மறக் கருணையும்**

கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்று, மாறுபடு அசுரரை வதைத்த முகம் ஒன்று என அருணகிரிநாதர் அறக் கருணையும், மறக் கருணையையும் இனிதே சுட்டுவார்.

ஆயிரத்தில் ஒருவராய் கற்கிமுகப் பூதத்திடம் சிக்கித் தவித்த நக்கீரரையும் வாது நிகழ்வுற்றபோது வெற்றி உண்டாகுமாறு அருணாசலத்தில் கம்பத்திளையனராய்க் காட்சியளித்து அருணகிரிநாதரையும் காத்தவர் முருகப்பெருமான்.

"நற்கிரன் சிறைநீக்கி நவிலரிய தமிழணிவான்
கற்கிரி அலகையையும் கூடியவடி வேல்விடுத்தாய்"

"தென்அருணைக் கோபுரத்தில் திகழ்ஒருவன் தனக்காக
முன்னம் ஒரு தூணிடத்தில் முளைப்பதற்கும் இசை
வுற்றாய்" (1)

இவை மட்டுமின்றி முருகா எனக் கூறி அதனால் தன் கணவனால் கரம் இழந்த பக்தையின் திருக்கரத்தை வளரச் செய்ததும், "கோழியைப் பாடும் வாயால் குஞ்சினைப் பாடமாட்டேன்" என்ற பொய்யாமொழிப் புலவர் முன் வேடனாய்த் தோன்றி அவர்தம் செருக்கழித்து ஆட்கொண்டதும் (1) முருகப் பெருமானின் திருவருள் வல்லமையேயாகும்.

திருமுருகன் அவதார நோக்கமே ஆணவம் மிக்குத் திரிந்த சூரபன்மனாதியரை வதைத்து, வலியழிப்பதற்கேயாம் குரு பெயர்க் குன்றம் ஆகிய கிரவுஞ்ச கிரியையும், தாருகனையும் கடல் நடுவில் தலைகீழ் மாமரமாகி நின்ற சூரபன்மனையும் அழித்தருளினார் என்பதைப் புயவகுப்புப் பாடல் புலப்படுத்துகின்றது.

திருஞானசம்பந்தர் முருகனின் தோற்றம் என்பது அருணகிரிநாதர் முதலான சான்றோர்களின் உளக்கிடக்கை, அந்நெறிப்படியே தண்டபாணி சுவாமிகளும் சமணம் என்கிற மத இருட்டை விரட்ட ஞானசம்பந்தராக வந்தருளினார் முருகப்பெருமான் என்கிறார்.

'அருகர் பாழ்மதத் திமிரம்இவ் வுலகைவிட்(டு) அகலவந்
தருள்வானை (9)

என்பது அவர்தம் வாக்கு.

கௌமார நெறி

'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாளன்' என்று போற்றப் பெறுபவர் முருகப்பெருமான். கந்தப் பெருமானை தவிர்த்து வேறு எந்தப் பெருமானை வணங்கினும் அது நிலைத்த தாகவே பலன் விளைப்பதாகவோ ஆகாது.

'சுப்பிர மணியனை யன்றி மாயவன் பிரமன் கணபதி முதலாம் வானவர் இலை' (16) என உணர்வோர் இம்மை மறுமைப் பயன் நுகர்ந்து வீடு பேறு அடைவோராவார். நிலையான தெய்வம் மலைமீது இருக்கும் தெய்வமே ஆகும். பிற சிலைத் தெய்வங்கள் எல்லாம் நிலைத் தெய்வ நெறிசாரும் கலைத் தெய்வங்களே ஆகும்.

மலைத்தெய்வ மேபர மென்றொப்பி டாச்சில மானிடரும்
சிலைத்தெய்வம் வைத்துப் பலவாறு நாமங்கள் செப்ப
லென்னோ! (3)

என அறியாத மானிடரை எண்ணி இரக்கங் கொள்கிறார்.

பரமாத்மா இரவாகிப் பகலாகி – இவையல்லா நிலையாகி, யாங்ஙனம் நீக்கமற நிறைந்துள்ளது. அப்பரமாத்வுடன், ஜீவாத்மானது ஆணவமான படலம் கிழித்து, இருவினை ஒப்பு எய்தி ஒன்றுபடுதலே முக்தியாகிறது. அதனை மயிலமா மலைமேவு முருகனின் ஆறுமுகங்களும் ஓதுகின்றன (74) என்கிறார். நூல்கள் அனைத்தும் முருகப்பெருமானது பொருள் சேர் புகழினையே ஓதுவதால் தனது உடல், பொருள், ஆவியனைத்தும் அப்பெருமானிடமே ஒப்படைத்து விட்டதாய்த் (75) தெரிவிக்கின்றார். உயிரும் இறைவனும் அறிவுப் பொருள் என்னும் தன்மையால் ஒத்தவை என்று நூல்கள் கூறுவதை அறிந்திருந்தும் சடப்பொருளாகிய உடலை உயிருடன் ஒப்பதாகக் கருதும் தம் இழிநிலைக்கு நாணுவதாய் (30) எடுத்துரைக் கிறார்.

**அகப்பொருள் கருத்துகள்**

முருகப்பெருமான் தம் கனவில் வந்து தன்னை கவர்ந்தான்; காமமிக்க கழிபடர் கிளவியால் தன் தவிர்ப்பைத் தோழியிடம் தலைவி எடுத்துரைப்பதாக இரங்கல் தாழிசையில் பாடல் இடம் பெறுகின்றது.

"முன்னம் ஒருநாள் மயிலமலை
முருகக் கடவுள் வலியவந்து
சித்தம் கவர்ந்தான்; வளை கவர்ந்தான்,
சேலை கவர்ந்தான்; திறல் கவர்ந்தான்"

என்று கூறி குரவம், குவளை, வெட்சி, நீப முதலான மாலைகளுள் ஒன்றனை முருகனிடமிருந்து வாங்கி வந்து தருமாறு வேண்டுகின்றார்.

தலைவி, நெஞ்சினைத் தூதாக விடுகிறாள். தோழியர் தமக்கு இன்பம் நாடுவர், வண்டினம் கடம்ப மாலையின் தேனை உண்டு மயங்கி விடும், கிளியும் ஆங்குள கிளியுடன் மயங்கி விடும், மேகம் முதலானவையும் தூதினை முற்றும் உரைக்க வல்லனவல்ல. துயர் முற்றும் உடனிருந்து அறிந்த நெஞ்சமே தூதுபோதற்கு ஏற்றதென்று முடிவெடுக்கிறாள் தலைவி.

"நீந்து தற்கரி தாரும் என்துயர்
நெஞ்சம் நீஅறி கின்றையால்
நீடு சீர்மயி லாச லக்குகன்
நேரில் நின்று நிகழ்த்தவே" (23)

சிவஞான பாலய சுவாமிகள் மீது சிவப்பிரகாசரும் 'நெஞ்சு விடு தூது' நிகழ்த்தியது நினையத் தக்கது.

நிலைபெற்ற புகழுடைய முருகன், நிலைத்து வருத்தும் துயரினைத் தவிர்க்கவில்லை. கோழிக் கொடி ஏந்தியவன், கொங்கையாகிய யானைகள் தரு துயரை மாற்றவில்லை. நெருப்பேந்தும் சிவனின் மகன், இவள் மீது வன்மை தவிர்த்து இரக்கம் கொள்ளவில்லை. மயில மலையின் வள்ளலாய் அருள் வழங்குவான். எனினும் என் மகளைப் பொறுத்தவரை இரக்கமில்லாத வஞ்சகனாகவே இவன் விளங்குகின்றான் அப்பாடல் வருமாறு.

"மன்னி டும்புகழ்ச் சேந்தன் ஐங்கணை
மன்இடும்பை மறுக்கிலான்
வார ணக்கொடி கொண்ட சேய்முலை
வார ணத்துயர் மாற்றிலான்
வன்னி சேர்கரத்(து) அண்ண லார்மகன்
வல்நி னைப்பை விடுக்கிலான்
மயில மால்வரை வள்ளல் யான்பெறு
மயிலின் மட்லின் வஞ்சனே! (37)

செந்தமிழ் பாடி, கந்தனை வந்தித்தோர் பெற்ற பெறும் பேற்றினை யானும் பெற வேண்டி, எத்தனையோ தலங்களுக் கெல்லாம் சென்று, வணங்கிட எண்ணினேன். எனினும் என் மனம் சலிப்புற்றது. மயிலமா மலையினை வந்து எய்தினேன். இளம்பூரணனின் அருள் எனக்கு இங்குப் பரிபூரணமாகக் கிடைக்கும் என எண்ணுகிறேன். இறைவன் சித்தம் யாதென அறிகிலேன் என்பதாக மயிலத் திருத்தலத்தின் மாண்பினை உரைக்கின்றார்.

"யோகுடையார் மலிபொதியை உயர்திருச்செந்தூர் அருணை
ஒளிர்திருமா மலைபொருளை உறுமலையா
தியதலந்தோ(று)
ஏகுமதில் சலிப்பெய்தி எழில்மயிலா சலக்குவட்டில்
இன்றுவந்து பாடுகின்றேன் இனி நடப்ப தறியேனே
(20)

என்பதாகப் பாடிய அவர் முருகப்பெருமான் யுகப்பதம் வழுத்தி, அகங்களிக்கும் பேறுற்றமை இச்சகம் அறிந்ததே! நாமும் அறிஞர் சூழ் மயிலம் அடைந்து, திருப்புகழ்ச் சுவாமிகளின் கலம்பகப் பாடல்களை நெஞ்சில் நிறுத்திச் செஞ்சொற்படுத்தி மணக்கோல முருகனையும், அவனருள் பெற்ற ஆதி பால சித்தரையும் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகளையும் வந்தித்து அவர்தம் திருவருளுக்கு இலக்காகி, உளம் மகிழ்ந்து, வளம் பெறுவோமாக!

# சுவாமிகளின் சமுதாயக் கருத்துகளும் சமுகநீதியும்

## மு. கோமதி

தண்டபாணி சுவாமிகள் அருளிய சத்திய சூத்திரம் குருநாதன் அந்தாதி, குருபரத்துவநூல் ஆகியவற்றில் கூறப்பெற்ற கருத்துகள் அடிப்படையில் சுவாமிகளின் தமிழ்ச்சமுதாயக் கருத்துகளும் சமூக நீதிகளும் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தண்டபாணி சுவாமிகள், சூரியன், சிவன், சத்தி, திருமால், விநாயகர், முருகப்பெருமான் என அறுவரை பற்றி அறுவகைச் சமயமான சௌரம், சைவம், சாக்தம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம் என்பவை பற்றியும், சமயாதீதம் பற்றியும் சமரசம் பற்றியும் பாடியுள்ளார். 13530 பாடல்களைப் பாடியுள்ளார். இவை தவிர சமூக நீதி என்னும் சமுதாய அறம் நிலைத்திருந்தால் தான் சமுதாயம் உயர்வடைய முடியும் என்று கருதித் தமிழ்ச் சமுதாயம் நிலைபெற்றுள்ள தெக்கணம் என்னும் குமரியங்கண்டம் அக்கண்டத்தில் அமைந்துள்ள ஏழுமலைகள் ஐந்து நதிகள் பற்றிக் குருபரத்துவ நூலில் (11, 12) தண்டபாணி சுவாமிகள் நிலம் என்னும் முதற்பொருளையும் ஆறு என்னும் கருப்பொருளையும் கூறியுள்ளார்.

சமுதாயம் என்பது பல்வேறு பண்பாடு இனம், மொழி,சமயம் சேர்ந்தோர், ஒரு குழுவாகத் தனியாக மற்ற குழுக்களோடு சேர்ந்து வாழும் நிலையாகும். குமுகாயம் எனவும் கருதப்படும். ஆயம் கூட்டம். தாயம் என்பதும் தாயாதி சொத்துக்களையும் பகிர்ந்து வாழும் நிலையாகும். சமூக நீதி என்பது சமூகத்தால் படைக்கப்பட்ட, உருவாக்கப்பட்ட சமுதாயத்தை வளர்க்க உதவும் சட்ட திட்டங்கள், நீதிகள் சமூகத்திற்கு உதவுபவை சமூகத்தினது நீதி சமூகநீதி எனப்படும். முதல் சமூகநீதி, நந்தியெம்பிரானால் சைவ ஆகமத்தில் அருளப்பட்டது.

இன்றைய சமூக அறிவியலைச் சார்ந்த சமுதாயக் கருத்துகள் அரசியல், பொருளாதாரம், சட்டம், நீதி, பழக்கவழக்கம், சமுதாய உயர்வுக் கருத்துகள் சமூகநலக் கருத்துகள் எனப்பல வகையாக வளர்ச்சி பெற்றுள்ளன. இவற்றிற்கு ஏற்றவாறு தண்டபாணி சுவாமிகளின் கருத்துகளும் அமைந்துள்ளன. அவற்றுள் சில வருமாறு. சமூகநீதியின் மறுபெயர் அறமாகும்.

அறம் சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் பொதுவானது, அவற்றின் முன்னேற்றத்திற்கு உதவுவது அறம், 'அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம், அறம் அறியார் அண்ணல் பாதம் நினையும் திறம் அறியார் என்பன திருமூலர் நம் சைவ சமயத்திற்கு வகுத்துரைத்த அறமாகும். அது 32 கூறுகள் படும், தண்டபாணி சுவாமிகள் தம் சத்திய சூத்திரம், சத்திய வாசகம் என்னும் நூலில் 'மாரி குன்றா வளம் கருதி அறம் பெரிதீட்டல் அரசர் கடனே' (சத்திய சூத்திரம். 7) என்றும் 'உண்டி வேட்டோர்க்கு உதவும் ஒண்தகை சதுர்த்தர் தன்மையில் தலையாம் அன்றே (சத்திய சூத்திரம் 9) 'சரதமும் நீதியும் தன்மையும் சார் தரும் அரசன் நிலைத்தோர்க்கு அனை (அன்னை) யனையானே என்றும் கொல்லாமையே அறத்தின் கூடு என்றும் அறத்தினைச் செய்யும் பொறுப்பை அரசிடம் தருகிறார், தண்டபாணி சுவாமிகள். அறம் பெரிதும் ஈட்டினால் மாரி-மழை-வளம் குன்றா என்பதும் அறம் ஈட்டாவிடின் மறம் பெருகி மழைவளம் குன்றும் என்பதும் தண்டபாணி சுவாமிகளின் கருத்தாகும். முன்னோரின் கருத்தும் இதுவேயாகும். இன்றைய சமுதாயத்தில் அரசியல் கட்சிகளின் வீழ்ச்சிக்கும் ஆட்சி மாற்றத்திற்கும் அறமே காரணம். அறம் செய்யாமையே ஏதுவாகும் என்பதைப் 'பொய்புலை, கோரம் பொருள் நசை ஆதிய எய்து மன்னன் உலகோர்க்கு எமன் அனையான் (சத்தியசூத்திரம்2) என இக்கால அரசியல்வாதிகள்மேற்கொள்ளும் பொருள்நசை ஊழல், அதனை மறைக்கப் பொய்புலைகோரம் மேற்கொள்வது போன்றவற்றைச் சுட்டிக் காட்டுகிறார். இந்நீதி எக்காலத்திற்கும் பொருந்துவதாகும். ஓர் அரசன், முதலமைச்சர்-முதல்வர்-தலைமை அமைச்சர்-மக்கள் தலைவர், பழங்கால மன்னனுக்கு இணையானவன், 'தெய்வந்தன்னொடும் சித்தராதிய ரோடும் பேசலும் மன்னன் பெறத்தகும் தகும் (சத்திய சூத்திரம் 9) என்று தண்டபாணி சுவாமிகள் கூறுவது தற்காலத்தில்

நடைபெறும் உயர் உயிர் ஆய்வு மூலம் தெய்வம் சித்தராதி யாருடன் பேசிக் கருத்தறிந்து மக்கட்குத் தொண்டு செய்தல் வேண்டும், மக்கள் பிரச்சனைகளைத் தீர்த்தல் வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டும் கருத்தாகும். அதற்கு அறக்கட்டளை, உலகப் பேரறக்கட்டளை அமைத்து 32 வகையான அறங்களையும் மேற்கொண்டு அறவாழி அந்தணன் உதவிபெற்று ஆட்சியாளர் அறம் மேற்கொள்ள வேண்டும் என்பது தண்டபாணிசுவாமிகளின் கருத்தாகும் எனலாம். இதற்குப் பல்கலைக்கழக அளவில் உயர் உயிர் ஆய்வு நிறுவனம் மேல்நாட்டுப் பல்கலைக்கழகத்திலிருப்பது போன்று நம் நாட்டிலும் அமைய வேண்டும்.

சமுதாய நீதி நிலைபெற்றிட எல்லாம் இறைவடிவே யென்று ணரும் மெய்ஞ்ஞானம் பொல்லார் உளத்திற் பொருந்தாது (வீட்டுநெறி. 5) நல்லார் உளத்தில் பொருந்தும் எனவே நல்லோரை உருவாக்கி நல்லோர் குழு அமைத்து, வளர்த்து மெய்ஞ்ஞானத்தைப் பரப்பவேண்டும் என்ற கருத்துடையவராகத் தண்டபாணி சுவாமிகள் விளங்கினார். இது பண்பாட்டு நீதியின் உயர்ச்சி, முதிர்ச்சியாகும்.

சமுதாய சமூக நீதி நிலவிட 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற உயர்சமயதத்துவ ஞானம் சமூகத்தில் நிலைபெற்றிருத்தல் வேண்டும் என்பது சுவாமிகளின் கருத்தாகும். இதனை அப்பெரியார் 'ஒன்றே கடவுளென உள்ளபடியோதாதார்க்கு என்றேனும் ஈடேற்றமில்லையே'' (பொது நூல்.8) என்று தம் பொது நூலில் கூறுகிறார். 'எல்லாக் கடவுளும் ஒன்றாய் விளங்கும் எழிற்குமரா'' (மயிலலங்காரம்.45) என்று ஒருவனே தேவன் என்பதற்குக் குமரனே என்று பெரியார் கருதுகிறார்.

''ஆறுசமய முர்தன் முகமாம் என்றறியும் அன்பர்வீறு சிந்தைக்கிடை வீற்றிருக்கும் வேண்மயிலே (மயிலலங்காரம் 98) என்று தம் மயில் அலங்காரம் தமிழ்க்கவி நூறு என்ற நூலில் சமயப்பொதுமை,சமய அமைதி ஏற்படத் தண்டபாணி சுவாமிகள் வழிகாட்டுகிறார். 'எல்லாக் கடவுளும் ஓர் வடிவாயிருந்த செவ்வேள்'' எனத் தாம் வழிபடும் கடவுளைச் சுட்டிக்காட்டி சமூகநீதி ஏற்படுத்திட வேண்டுகிறார் எனலாம். குமரவேள் வகுத்திட்ட சமூக நீதி வேள்நீதி எனவும் வேளாளர் நீதி வேளாண் வேதம் எனவும் கருதப்படுவதை உன்னுக. சமுதாய

நீதி நிலவிட உறுதுணையாக இருப்பதுசமயப்பொதுமையேயாகும். அதனைச் சுவாமிகள் "எச்சமயங்களும் என்னவன்றேற்றே குற்றங்களையும் குருத்துவம் வலிதே" எந்தச் சமயமும் இறையும் குருவும், பந்தமும் முத்தியும் பகர்வன ஆம் (குருத்துவம். 3, 5) எனச்சமயப்பொதுக் கருத்துக்களைத் தண்டபாணி சுவாமிகள் தம் நூலில் கூறியுள்ளார். மேலும் சமயப் பொதுமைக்கு (குருத்துவம் 3)

1. சௌரம் – ஞாயிறு – சூரியன் – ஆதவன் – ஆதவச்சைவம்
2. சைவம் – திங்கள் – சிவன் – பிறையோன் – சிவச்சைவம்
3. சாத்தேயம் – செவ்வாய் – சத்தி – ஆதியள் – சிவைசைவம் – ஐயை சைவம்
4. வைணவம் – புதன் – திருமால் – விசுணுபெருமாள் – பெருமாள்சைவம்
5. காணாபத்தியம் – வியாழன் – கணபதி – கணங்களின் தலைவன் – தும்பிக்கையன் – கணபதிச் சைவம்
6. கௌமாரம் – வெள்ளி குமரமுருகன் – குமரச்சைவம்
7. சமயாதீதம் – சனி பொதுக்கடவுள் – அல்லா, இயேசு. புத்தர் எனக் கருதலாம்.

அறுவகைச் சமயக் கடவுளரை என்றென்று வழிபடவேண்டும் என்ற கருத்து சுவாமிகளின் குருத்துவம் மூலம் பெறப்படுகிறது.

> அதீத நெறி ஒன்றும் ஆய ஏழும்
> வழிபடற் பொருட்டே வாரம ஏழாயிற்றே

என்று சுவாமிகள் கூறுகிறார். இது அவரது சமயப் பொதுமை உணர்வைக் காட்டுகிறது. ஞாயிற்றின் ஏழுநிறக் கதிரும் அவ்வாறே வழிபடற்கமைந்தது போலும், சத்தமாதர் கொள்கையும் சமயப் பொதுமையைச் சுட்டிக் காட்டுகிறது.

# தில்லைபாதி நெல்லைபாதி

## கோமதி சூரியமூர்த்தி

### நூலமைப்பு

இந்நூல் 51 பாட்டுக்கள் கொண்டு வெண்பா யாப்பாவால் ஆனது. முதல் இரண்டடிகள் தில்லையைப் போற்றுவதாகும். பின்னிரண்டடிகள் நெல்லையைப் போற்றுவதாகவும் அமைந்து உள்ளன. சைவத் திருமுறைகளுள் இதற்கு ஒப்பானது நக்கீரதேவ நாயனார் அருளிய கயிலைபாதி, காளத்திபாதி அந்தாதியைக் கூறலாம். இரு நூல்கட்குமுள்ள வேறுபாடு நக்கீரர் நூலில் ஒரு பாட்டு கயிலையைப் போற்றுவதாகவும், மற்றொரு பாட்டு காளத்தியைப் போற்றுவதாகவும் இவ்வாறு மாறி மாறி அமைந்திருக்கும். ஆனால் தில்லைபாதி, நெல்லைபாதி நூலில் முன்னிரண்டடிகள் தில்லையைப் போற்றுவதாகவும், பின்னிரண் டடிகள் நெல்லையைப் போற்றுவதாகவும் அமைந்துள்ளன. நூலின் இறுதிப்பாடல் நூற்பயன் கூறுவதாக அமைந்துள்ளது.

### நூலின் சிறப்புக்கள்

1. இரண்டு திருவூர்கட்கும் இருவேறு சிறப்பு ஒரே பாட்டில் கூறப்படுவது.

2. இந்நூல் பாராயணத்திற்குரிய முறையில் எளிமையாய் அமைந்துள்ளது.

3. இந்நூல் பூத்தூவிப் போற்றுதலாகிய அர்ச்சனைக்கும் ஏற்றது.

### நூற் கருத்துக்கள் தில்லையின் பெருமை உரைப்பன

எல்லோரும் போற்றும் பெருமையுடையது தில்லை. (செ. 26). பத்தர்களும், முத்தர்களும், பாவலரும், பரிசில் வழங்கு காவலரும், சித்தர்களும் விரும்பும் சிறப்புடையது தில்லை (செ. 2). நீதி தவறாத அந்தணர்கள் அதிகம்பேர் வாழ்தலால் தினம் குற்றமற்ற

அறம் ஓங்கும் ஊர் தில்லை (செ. 3). இந்திரனும், பிரமனும், திருமாலும் ஒத்த தேயத்தார் மெச்சும் தில்லை (செ 4). பிறப் பிறப்புத் துன்பம்தரும் வினையை வென்று ஆனந்த வீட்டிலிருக்க விரும்புவர்களாலும் புகழப்படுவது தில்லையாகும் (செ. 6). கீர்த்தி, அறம், பெருமை, அழிதலில்லாத முக்தி இவற்றை இப்பிறப்பில் நல்க வல்ல சிறப்புடையது தில்லை (செ. 7). பூமியைப் போல் பொறுமையை விரும்புபவராலும் புகழப்படுவது தில்லையாகும். (செ. 8). புலவோரும், மாதவரும் வந்து வணங்கி விரும்பியதைப் பெற்றுவக்கும் சிறப்புடையது தில்லை (செ. 13). நல்ல கற்றுவல்ல பாவலரை உலகத்தோர்க் காண பாராட்டும். சிற்றம்பலமுடையது தில்லை (செ. 16). மாதவத்தார் திருவருளால் உள்ளத்து எழுந்தவாறு சிறப்புடைய பாடல்களால் போற்றப்படும் பெருமை வாய்ந்தது தில்லை (செ. 23). இறைவ னோடு இரண்டறக்கலந்தார் தெள்ளிய அமுதம் போல் இனிய தமிழால் பாராட்டப்படும் சிறப்புடையது தில்லை (செ. 24). தில்லை மாநகர் மங்களமுடையது. நல்ல தெய்வீக மணமுடைய பெருமை வாய்ந்தது தில்லை. (செ. 27). வண்ணச் சந்தத்துடன் செந்தமிழில் பாட வல்லவர்களின் மனக்கவலையைப் போக்கும் சிறப்புடையது தில்லை (செ. 37) தூயதமிழும், குற்றங்கள் தீர்ந்த வேதங்களும் மெச்சும் ஓங்கிய புகழையுடைய நகரம் தில்லை (செ. 47). விண்ணிலுள்ள தேவர்களாலும், அந்தணர் களாலும், மாதவர்களாலும் உறுதிபயக்கும் குறளாலும் போற்றப்படும் சிறப்புடையது தில்லை (செ. 49).

### நெல்லையின் சிறப்புக்கள்

குற்றமில்லாத சிறப்பும், (செ. 16) குறையாத புகழையும் உடையது நெல்லை மாநகரமாகும் (செ. 2) தென்றல் தோன்று மிடமாகிய தமிழகத்தியர் வீற்றிருக்கும் பொதிய மலையை யுடைய ஒப்பில்லாத செந்தமிழ் வளமிக்கதும் நெல்லையாகும் (செ. 1). வணங்குவோர்க்குச் சக்கரப் படையோன் போல் புகழும், சிறப்பும் தரவல்லது நெல்லை (செ. 17). விண்ணவர்களும், மண்ணவர்களும் நொந்து வெறுப்பன செய்வாரை வெல்லும் சிறப்புடையது நெல்லை (செ. 6). பெருகி நிற்கும் கடல்போல் புனிதமான தவம் செய்வாரையும் ஆதரிக்கும் தன்மையுடையது நெல்லை (செ. 9). செந்தமிழாற் பாடிப் பணியும் அன்பர்களின் துன்பத்தை முழுவதுமாகத் தீர்க்கும் பெருமையுடையது

நெல்லை (செ. 43). துன்பத்தை நீக்கி இன்பத்தைக் கொடுக்கும் சிறப்புடையது நெல்லை (செ. 45).

**தில்லையின் வளமை**

தில்லைமாநகரம் பொன்னாபரணம், அரிய மணிகள், கத்தூரி முதலிய செல்வ வளங்களும், வாசனைப் பொருட்களும் நிறைந்த வளமுடையது (செ. 12). தில்லை தென்னையும், வாழையும் நிரம்பிய வளமுடையது (செ. 14). கட்டுத்தறியை முறிக்கக்கூடிய மதயானையையும் வெல்லும் வலிமையுடைய அரசர்கள் வாழும் செல்வ வளமிக்க நகர் தில்லையாகும் (செ. 15). தில்லையிலுள்ள குளத்தில் செந்தாமரை பூத்துள்ளது என்று வர்ணிப்பது அதன் நீர் வளத்தை உணர்த்தும் (செ. 25). தில்லைமாநகர் அழகிய சோலையையுடையது. வீதிகளில் மயிலாடும் சிறப்புடையது (செ. 33). மாதம் மும்மாரி பெய்யும் வளமையுடையது தில்லை (செ. 39). தமிழ்ப் புலவர்கள் வாயி லிருந்து பாட்டுக்கள் தாமாக வெளிவரும். அதுபோல தில்லையில் இனிய மாம்பழங்கள் தாமாக உதிரும்படி மாமரங்கள் நிறைந்த வளமுடையது தில்லை (செ. 41). கட்டுக்கட்டாக நாற்றுக்கள் குவிந்துள்ள வயல் வளமிக்கது தில்லை. நீர்வளமும் மிக்கது தில்லை. நீர் பாய்ந்து வயல் சேறாகக் காட்சிதரும். அதில் கயல் மீன்கள் துள்ளி விளையாடும். இத்தகைய வளமுடையது தில்லை (செ. 42). மரங்கள் நிறைந்த ஊர் தில்லை. அதில் கனிகள் மிகுந்திருக்கும். சோலைகள் நிறைந்த ஊர் தில்லை. அதில் பூச் செடிகளில் மலர்கள் விரிந்திருக்கும். அதில் மகரந்தத்தாது நிரம்பிய வளமுடையது தில்லை (செ. 44). வானுலகிலுள்ள அன்னப்பறவை அவ்வூரைவிட்டுத் தில்லைக்கு வந்து அங்குள்ள தாமரைத் தாதினை உண்ணவரும் வளமை உடையது தில்லை (செ. 45).

**நெல்லையின் வளமை**

திருமகளும், கலைமகளும் சேர்ந்திருத்தலால் இந்திரனின் ஊரை ஒத்தச் சிறப்புடையது நெல்லை (செ. 7). மூங்கிலும், கரும்பும் முத்து சிந்தக்கண்டு விண்ணோர் ஏங்கும் சிறப்புடையது நெல்லை (செ. 14) வயலிலுள்ள நெற்பயிர்கள் முத்தினை உதிர்க்கும் வளமுடையது நெல்லை (செ. 37).

**தில்லைவாழ் மக்கட் சிறப்பு**

அங்குவாழ் மக்கள் தூயமேலான மெய்யுணர்வினால் பேரின்பம் அனுபவிப்பர் (செ. 10). தில்லையில் பல்கோடி ருத்திரர் வாழ்வர் (செ. 11). தில்லைவாழ் அந்தணர்கள் நீதி தவறாதவர்கள் (செ. 3). தில்லைவாழ் மக்கள் துன்பம் தரும் வினையை வென்று பேரின்ப வீடு செல்வ விழைவர் (செ. 6). தில்லைவாழ் மக்கள் தூயபரஞானம் உடையவர்கள் (செ. 10). தில்லைவாழ் மக்கள் பொன்னை விரும்பாதவர்கள். புத்திக் கூர்மை உடையவர்கள் (செ. 14). தில்லைவாழ் மக்கள் மாமிசம் உண்ணாதவர்கள் (செ. 20). தில்லைவாழ் மக்கள் ஆணவமலத்தின் காரியமான ஆசையை விட்டவர்கள். தேகப்பற்று அற்றவர்கள் (செ. 22). தில்லைவாழ் மக்கள் நால்வகை நெறியில் ஒழுகுபவர்கள். நன்மை எது, தீமை எது என்று அறியாது திகைப் பவர்கட்கு நல்வழி காட்டித் தேறுதல் சொல்லும் பலர் வாழ்வர் அங்கு (செ. 34). தில்லையில் நிலையாக வீற்றிருக்கும் மக்கள் அழகிய செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனே சொன்னாலும் சைவர்கட்கேயுரிய சிகாமந்திரமான ஐந்தெழுத்தைத் தவிர வேறெதையும் நம்பாத தெம்புடைய வர்கள் (செ. 48).

**நெல்லைவாழ் மக்கள் சிறப்பு**

நெல்லைவாழ் மக்கள் செந்நாவன்மை உடையவர்கள். சிவச் சின்னங்கள் அணிந்தவர்கள். இறைவனுக்குத் தொண்டு செய்பவர்கள் (செ. 3) நெல்லைவாழ் மக்கள் ஊனாண்ணாதவர் கள் (செ. 4). நெல்லைவாழ்மக்கள் விண்ணும், மண்ணும் நோகும் படித் தீமை செய்வாரை வெல்ல எண்ணும் நற்பண்புடையவர் கள் (செ. 6) திருமகளும், கலைமகளும் சேர்ந்திருக்கும் ஊர் என்றதால் (செ. 7). அங்கு வாழ்மக்கள் செல்வமும், கல்வியறிவும் நிரம்பியவர்கள் என்பது புலனாம். அங்குவாழ்மக்கள் பொதிய மலையில் வாழ் அகத்தியர்போல் சிவவழிபாடு செய்பவர்கள் (செ. 8). நெல்லைவாழ் மக்கள் மோகத்தை வென்றவர்கள் (செ. 25). நெல்லைவாழ் மக்கள் கொல்லாமையும், இரக்கமும் மிக்கவர்கள் (செ. 32, 33). நெல்லைவாழ் மக்கள் அன்பர்க்கு எளியராய் வாழ்பவர் (செ. 34). நெல்லைவாழ் மக்கள் பக்தர்கள் (செ. 38). நெல்லைவாழ் மக்கள் பொல்லாங்கு பேசார்.

நோயிலார் வறுமை இல்லாதவர் (செ. 44). நெல்லைவாழ் மக்கள் பெண்ணை ஒரு பாகத்தில் கொண்ட சிவபெருமானின் திருக்கோலம் தவிர மற்றெதையும் வணங்காதவர் (செ. 47). நெல்லைவாழ் மக்கள் சிவனையே மேலான தெய்வமென வணங்குவர். இரக்க நெஞ்சினர் (செ. 48). இறைவனை முத்தமிழால் பாடி வழிபடுபவர்கட்கு சோறும், கூறையும், உறையுளும் உவந்து கொடுக்கும் பண்பினர் (செ. 49). தாம்பிர சபையில் நின்றாடும் திருவடிகளே சரணம் என வாழ்பவர் (செ. 5). நெல்லைவாழ் மக்கள் பிறவாநெறி பெறுவர் (செ 21).

**கொல்லாமை விரதக் குறிப்புணர்த்தல்**

மக்களாகப் பிறந்த எல்லோருக்கும் இருக்கவேண்டிய பண்பு சீவகாருண்யம் என்பதாம். சீவகாருண்யம் என்பது எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உடைமையாம். இரக்கமில்லா உயிர்களின் தன்மை விலங்கின்றன்மை என்றும், இரக்கமுள்ள உயிர்களின் தன்மை கடவுட்டன்மை என்றும் கூறப்படும். நூலில் பல இடங்களில் கொல்லாவிரதக் குறிப்பு உணர்த்தப்படுகின்றது. வேட்டுவர்கள் போல் பல உயிர்களையும் கொன்று அவற்றின் ஊனை உண்ணும் இழிந்தவர்கட்கு ஆகாதது நெல்லை என்று கூறுமிடத்து ஆசிரியரின் கொல்லா விரதக் கோட்பாடு புலனாகும் (செ. 4).

> ''நன்னாக ரீகமெய்தி நாய்நரிபோன் றூன்எலும்பு
> தின்னாதார் வேண்டுமெழிற் றில்லை'' (செ. 20)

என்று தில்லையைப் போற்றுமிடத்தும் ஆசிரியரின் கொல்லா விரதக் கோட்பாடு புலனாகும்.

> ''கொல்லா விரதியர்தம் கூட்ட மிக நீடுதலால்
> எல்லாரும் மெச்சு நெல்லையே'' (செ. 32)

என்ற பாடல் தொடர்களால் ஆசிரியர் கொல்லா விரதக் கோட்பாட்டை உணர்த்தி அது எல்லோராலும் புகழப்படும் என்கின்றார்.

> ''கல்லைநிகர் நெஞ்சறியார் காதும் தொழிலறியார்
> இல்லை என்னார் வாழு நெல்லையே'' (செ. 33).

என்று நெல்லைவாழ் மக்களின் இயல்புணர்த்துவதில் ''காதும் தொழில்'' என்றது கொல்லும் தொழில். அதனை அறியார்

நெல்லைவாழ் மக்கள் என்றதன் மூலம் ஆசிரியர் கொல்லா விரதத்தைக் குவலயத்திற்கு உணத்துகின்றார்.

> "பாற்றுணவு கொள்வார் பகையாய பத்தர்நெஞ்சில்
> ஏற்றுலவும் ஈசன் நெல்லையே" (செ. 26)

என்ற தொடரில் 'பாற்றுணவு' என்றது பருந்து முதலிய ஊன் உணவு எனப் பொருள்படும். பாற்றுணவு கொள்வார் பகையாய பத்தர் என்றது புலால் உண்ணாதவர் பக்தர்கள் என்பதைப், புலப்படுத்துகின்றார். "வெங்கட் கொலைப்புலையர் வேரறுக்கும் வீரர்புகழ்" என்ற பாடலடியும் கொல்லா விரதத்தை உணர்த்துகின்றது.

**சமயக் கருத்துரைத்தல்**

> "கண்டிகையும் நீறும் கவினப் புனைவார்க்கே
> எண்திருவும் நல்கு நெல்லையே" (செ. 10)

என்ற பாடல் தொடரில் புறச்சின்னங்களான உருத்திராக்கமும் திருநீறும் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. அச்சின்னம் அணிபவர்கட்கு எண்வகைச் செல்வமும் உண்டாகும். அச்செல்வங்களாவன செல்வம், கூலம், உறுதி, ஆண்மை, அழகு, கல்வி, புகழ், அரசபதவி முதலியன. சிவபெருமான் நடனமாடும் திருச்சபைகள் ஐந்து. அவற்றுள் நெல்லையில் உள்ளது தாமிரசபை என்பதையும் (செ.16) தில்லையிலுள்ளது பொற்சபை என்பதையும் (செ. 36) இந்நூல் உணர்த்துகின்றது.

**சைவசித்தாந்தக் கருத்துணர்த்தல்**

'ஐம்முகத்தான்' என்ற சொல் சிவனுக்குரிய ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ ஜாதம் என்ற ஐந்து முகங்களைக் குறிக்கும் (செ. 16). சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பதை "சிவனே பரமெனச் சொல்" (செ. 48) என்ற தொடர் உணர்த்துகின்றது.

அங்கிங்கென்னாதபடி எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறைவன் உலகப்பொருட்கள் எட்டனுள் நிறைந்து விளங்குவதை, "எட்டுவகைப் பொருளும் ஈசனே" (செ. 20) என்ற தொடரால் ஆசிரியர் உணர்த்துகின்றார். எட்டுவகைப் பொருட்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஞாயிறு, திங்கள், ஆன்மா ஆகும். இது உலகப்பொருட்களில்

இறைவன் கலப்புநிலையில் ஒன்றாக விளங்கும் சித்தாந்த உண்மையை உணர்த்தும். அவன் உலகரூபி எனப்படுவான். 'அட்டவித மூர்த்தி' (செ. 32) என்ற தொடரும் இக்கருத்தை உணர்த்தும்.

சைவத்தில் இறைவனை அடைவதற்குரிய நெறிகளாக நான்கு கூறப்படும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. சரியை என்பது இறைவனது உருவத் திருமேனியை நினைத்து புறத்தால் செய்யப்படும் வழிபாடாகும். கிரியை என்பது இறைவனின் அருவுருவத் திருமேனியை நினைத்துப் புறத்தாலும், அகத்தாலும் செய்யப்படும் வழிபாடாகும். யோகம் என்பது இறைவனின் அருவத் திருமேனியை நினைத்து அகத்தால் செய்யப்படும் வழிபாடாகும். ஞானம் என்பது இறைவன் உருவம், அருவம், அருவுருவம் இவற்றுக்கு அப்பாற்பட்டு ஞானத்திருவுருவாய் விளங்குவதை எண்ணி அவனை ஞானத் தால் வழிபடுதலாகும். இந்நால்வகை நெறிகளையும் "நாற்றகைய பேறு" என ஆசிரியர் குறிப்பிடுகின்றார் (செ. 34).

"மோகாந்த காரம் வந்து மூடா தொழியும் வண்ணம்" (செ.22) என்றதில் மோகம் என்றது ஆசையையும், அந்த காரம் என்றது இருள் எனப்பட்டு, இறைவனை உணரா வண்ணம் தடைசெய்யும் ஆணவ இருளைக் குறித்தது. மேலும் ஆணவத் தின் காரியம் மோகம் என்பதும் உணர்த்தப்படும்.

'அல்லல்வினை' (செ. 6) என்பதில் அல்லல் என்பது துன்பம். இங்கு பிறப்பு இறப்புத் துன்பத்தைக் குறித்தது. அத்துன்பத் திற்குக் காரணம் வினை என்ற சித்தாந்த உண்மை இதனால் உணர்த்தப்படும். 'சென்மவினை' என்பதும் (செ. 17) உயிர் களின் பிறப்பிற்குக் காரணம் அவை செய்த வினை என்ற சித்தாந்த உண்மையை உணர்த்தும்.

"இருவினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்" (சிவஞானபோதம் சூத். 2)

என்று சிவஞானபோதத்திலும்,

"இருவினை இன்பதுன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவதாகும்" (சிவஞானசித்தியார் சுருக்கம், 94

"... ... ... நாட்டுகின்ற
எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்து"
(போற்றிப்பஃறொடை கண்ணி, 14)

என்று உமாபதிசிவம் கூறுவதும் இங்கு நினைவுகூரத் தக்கன.

"பண்டை வினை அழியப் பாடுபடும் பத்தர்கள்" (செ. 38) என்று வினை பற்றிக் குறிப்பிடுகின்றார். ஒருவன் புதிதாகச் செய்யும் வினை ஆகாமியம். பிறவிகள் தோறும் செய்யப்படும் வினைகளின் தொகுப்பு சஞ்சிதம். அதிலிருந்து ஒருபகுதி இப் பிறவியில் அனுபவிக்க எடுத்து வந்தது பிராரத்தம் எனப்படும். ஆகாமியம் என்பது நல்வினை, தீவினை, சஞ்சிதம் என்பது புண்ணிய பாவமாகும். பிராரத்தம் என்பது வினைப்பலனான இன்ப துன்பத்தைக் குறிக்கும். இந்நூலில் பண்டை வினை என்பது சஞ்சிதத்தையும், சென்ம வினை அல்லல்வினை என்பன பிராரத்தையும் குறிப்பனவாகக் கொள்ளலாம்.

'சென்ம வினை' (செ. 17) என்றதில் சென்மம் எனபது பிறப்பைக் குறிக்கும். பிறப்பு என்பது தூலஉடம்பு கொடுக்கப் படுதலாகும். உடம்பு என்பது மாயையின் காரியம். எனவே சென்ம என்பதில் மாயை பற்றிய குறிப்பு உள்ளது எனலாம்.

"அடியார்க் கடிமை செய்யா
ஏதிலார்போற் றாத நெல்லையே" (செ. 23)

என்ற பாடலடிகள் அடியார்க்கு அடிமை செய்தல் வேண்டும் என்ற சித்தாந்த உண்மையை உணர்த்தும்.

"ஆனந்த வீட்டினிடம் செல்ல விழைவார்"

என்ற தொடரில் (செ. 6) வீடு என்றது முக்தியைக் குறித்து அடைமொழியான 'ஆனந்தம்' என்ற சொல் முக்தியில் உயிர்கள் பேரின்பத்தைத் துய்த்துக் கொண்டிருக்கும் என்ற சித்தாந்த உண்மையை உணர்த்தும். மற்றோர் பாடலில் 'கேடில் முக்தி' என்று முக்திக்குக் கேடில் என்ற அடைமொழி கொடுத்துக் கூறுகின்றார் (செ. 7) கேடில் என்றால் அழிதலில்லாத எனப் பொருள். முக்தியில் உயிர்கள் துய்க்கும் பேரின்பம் குறைவு படாதது; அழிவுபடாதது என்பதை உணர்த்தும்.

நூற் சிறப்புக்கள் பின்வருமாறு. இரண்டு திருவூர்கட்கும் இருவேறு சிறப்பு ஒரே பாடலில் கூறப்படுவது. இந்நூல் பாராயணத்திற்குரிய முறையில் எளிமையாய் அமைந்துள்ளது. இந்நூல் தமிழில் பூத்தூவிப் போற்றுதலாகிய அர்ச்சனைக்கும் ஏற்றது. இந்நூல் தில்லையின் பெருமையையும், நெல்லையின் பெருமையையும் எடுத்துரைப்பது. இந்நூல் மூலம் தில்லைவாழ் மக்கள் சிறப்பும் நெல்லைவாழ் மக்கள் சிறப்பும் உணரப்படும் இந்நூலின் மூலம் ஆசிரியரின் தன்வரலாற்றுக் குறிப்புக்கள் சில அறியப்படும். இந்நூல் கொல்லாமைக் கோட்பாட்டையும் ஆங்காங்கே உணர்த்துகின்றது. இந்நூல் சைவசித்தாந்தக் கருத்துக்களையும் உணர்த்துகின்றது. நூலில் புராணக்கதைக் குறிப்புக்களும் உள. ஆராய்ச்சிக்குரிய சான்றுகள் சிலவற்றையும் இந்நூல் தருகின்றது.

சுருங்கக்கூறின் இந்நூல் தண்டபாணி சுவாமிகளின் கவிபாடும் ஆற்றலையும், தமிழ்ப் புலமையையும், சித்தாந்தப் புலமையையும், புலப்படுத்துவதோடு அவர் முருகதாசரானாலும் சமய சமரசம் உடையவர் என்பதையும் புலப்படுத்தும்.

# குமாரபுரி முருகன் மும்மணிக்கோவை

மோ. கோ. கோவைமணி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 50,000-க்கும் மேற்பட்ட இனிய செந்தமிழ்ப் பாக்களை இயற்றியுள்ளார். இப்பாக்களைப் பல்வேறு வகையான யாப்பு மற்றும் இலக்கிய வடிவங்களில் அமைத்திருக்கிறார். இதனை அவரே ஒரு பாடலில்,

> 'மும்மணிக் கோவைபல, மாலைபல அந்தாதி
> மூவகைய பல, இன் னவா
> முதுநெறிப் பனுவல்பல, புதுநெறிப் பனுவல்பல
> முத்தமிழ்ச் சுவை வழாமல்...'

எனத் தெளிவுறுத்துகின்றார். இப்பாடலில் 'மும்மணிக்கோவை பல' என முதல் வரியிலேயே குறிப்பிடுகின்றார். மாலை மற்றும் அந்தாதி நூல்களைக் காட்டிலும் மும்மணிக்கோவை நூல்கள் அதிகம் செய்திருக்கிறார் என்றும் இவ்விலக்கிய வடிவம் அவருக்கு விருப்பமானது என்றும் எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இன்று மாலைகளைக் காட்டிலும் அந்தாதிகளைக் காட்டிலும் மும்மணிக்கோவைகள் குறைவாகவே (குமாரபுரி முருகன் மும்மணிக்கோவை, திருவையாறு முருகன் மும்மணிக்கோவை, புதுவை ஆவனவீதி மும்மணிக்கோவை) கிடைக்கின்றன. மேலும் பல மும்மணிக்கோவைகள் எழுதி நமக்குக் கிடைக்காமல் போய் விட்டிருக்கலாம். இங்குக் 'குமாரபுரி முருகன் மும்மணிக்கோவை' எனும் நூல் பற்றியே இக்கட்டுரை ஆராய்கின்றது.

**குமாரபுரி**

குமாரபுரியைத் திருச்சேஞ்ஞலூர் என்றும் அழைப்பர். இது முருகப்பெருமான் தலம் ஆகும். முருகப்பெருமான் தாருகா சுரனுடன் யுத்தம்செய்து தங்கிய இடமே குமாரபுரி.

இவ்வூரைப் பற்றி – இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் தெய்வங் களைப் பற்றிப் பல்வேறு வகையான இலக்கியங்கள் தோன்றி யுள்ளன. அவைகள் கண்ணன் பதிகம், கணபதி பதிகம்.

கந்த:மாலை, குமரன் பதிகம், கூத்தாடும் சிவன் பதிகம், கூத்துச் சிவன் பதிகம், சண்முகசாமி பதிகம், சண்முகசாமி வகுப்பு, சண்முகத் திருப்புகழ், சண்முகன் வகுப்பு, சிவகாமி பதிகம், சிவபெருமான் தோத்திரம், சைவப்பதிகம், சைவச் சந்தப்பண் பதிகம், திருவருள்நாயகர் பதிகம், நடராசர் பதிகம், நடராசர் வகுப்பு, பெரியநாயகி பதிகம், பெரியநாயகியம்மை தோத்திரம், முத்தாலம்மன் பதிகம், முத்தாலம்மை ஊஞ்சல், மும்மணிக் கோவை, முருகன் பதிகம், வரதராசப்பெருமாள் பதிகம், விநாயகர் பதிகம், வில்வநாயகர் பதிகம், வில்வ விநாயகர் பதிகம், விஷ்ணு பஞ்சாயுதத் திருப்புகழ், விஷ்ணு பதிகம் ஆக 29 வகையான இலக்கியங்களைச் சுட்டலாம். இந்நூல்களில் கணபதி பதிகம் (12), முருகன் மும்மணிக்கோவை (3?), சண்முகன் வகுப்பு (1), சிவன் பதிகம் (1), விஷ்ணு பதிகம் (12), பெரியநாயகி பதிகம் (12), நடராசர் பதிகம் (12), முருகன் பதிகம் (13), விஷ்ணு பஞ்சாயுதத் திருப்புகழ் (7), திருவருள் விநாயகர் பதிகம் (12), திருப்புகழ் (8), கந்தமாலை (38), முருகன் பதிகம் (13), திருக்கூத்து சிவன் பதிகம் (12), அம்பிகை, விநாயகர் பாடல் (2), முருகன் திருப்புகழ் (1), சிவன் சந்தப்பண் பதிகம் (12), கண்ணன் பதிகம் (12), சிவகாமசுந்தரி பதிகம் (12), சண்முகசாமி பதிகம் (13), சண்முகசாமி வகுப்பு (1), ஓரடிக் கீர்த்தனை (1), கூத்தாடும் சிவன் பதிகம் (12), திருவருக்கரந்த பதிகம் (13), சிவன் பவனிப் பதிகம் (13), நடராஜர் வகுப்பு (1) ஆக 26 நூல்கள் 277 பாடல் களில் அமைந்தவை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றியவையாகும்.

**மும்மணிக்கோவை**

'ஒருபொருள் பற்றி ஒரு யாப்பில் அமைந்த இலக்கிய வகைகள் பண்டைக்காலம் முதல் வழங்கிவர, பக்திக் காலம் ஒரு இலக்கியத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட யாப்பு விரவலை வளர்த்தது. சிலப்பதிகாரம் பல பாவடிவுகள் பயின்ற நிலையைத் தருவதை இதன் முன்னிலையாகக் கொள்ளலாம்' என்பார் ச. வே. சுப்பிரமணியனார் (தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப. 458). அதன்பின் காரைக்காலம்மையார் கட்டளைக் கலித்துறையும் வெண்பாவுமாகிய இருவகைப் பாக்களும் ஒன்றன்பின் ஒன்றாக அந்தாதித் தொடையில் தொடுத்துவர இருபது செய்யுட்களால் திருவிரட்டை மணிமாலையைப் பாடியருளினார். அவ்விருவகைப்

பாக்களுடன் ஆசிரியப்பாவையும் சேர்த்துக்கொண்டு சேரமான் பெருமாள் நாயனார் அவர்கள் கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் மும்மணிக்கோவையைப் பாடினார். இவர் பாடிய 'திருவாரூர் மும்மணிக்கோவை'யே மும்மணிக்கோவைகளுள் காலத்தால் முந்தியது எனலாம். இந்நூல் தோற்றத்திற்குப் பிறகு பதினோராம் திருமுறையில் ஏழு மும்மணிக்கோவைகள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சேரமான் பெருமாள் நாயனாரைப் பின்பற்றி நக்கீரதேவ நாயனார், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் இவ்விலக்கிய வகையை மேலும் வளர்த்தனர்.

சிற்றிலக்கிய வகை 96-இல் இம்மும்மணிக்கோவையும் ஒன்று. ஆசிரியம், வெண்பா, கலித்துறை ஆகிய மூன்றும் முறையே முப்பது பாடல்களால் அந்தாதி முறையில் வருவது மும்மணிக் கோவை. இதனைப் பாட்டியல் நூல்கள் அனைத்தும் குறிப் பிடுகின்றன. குறிப்பாக,

'அகவல் வெண்பாக் கலித் துறையின்
முப்பது விரவின் மும்மணிக் கோவை'

(பிரபந்த மரபியல் 8)

என்பதைக் காணலாம். இதன் யாப்பு வகை எவ்வாறு அமையும் என்பதைப் பன்னிருபாட்டியல்,

'வெள்ளையும் அகவலும் நேரிசை யாகக்
கலித்துறை வரவந் தாதி யாகி
முறைமையின் இயல்வது மும்மணிக் கோவை'

(பன்னிரு. 262)

எனக் கூறுவதைக் காணலாம் தமிழிலக்கிய வகைக்குப் பெருமை சேர்க்கும் இம்மும்மணிக்கோவை தமிழிலக்கியத்துள் பல நூல்கள் இருப்பதைக் காண்கிறோம். அவைகள், அகிலாண்ட நாயகி மும்மணிக்கோவை, ஆறுகாடு சுப்பிரமணியசுவாமி மும்மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக் கோவை, இராசிபுரம் மும்மணிக்கோவை, ஏற்றைக்கடை மும்மணிக்கோவை, கருவை மும்மணிக்கோவை, குமரகுருபரர் மும்மணிக்கோவை, குமரவேள் மும்மணிக்கோவை, கொழுந்து மாமலை முருகவேள் மும்மணிக்கோவை, சிதம்பரம் முருகவேள் மும்மணிக்கோவை, சிதம்பரம் மும்மணிக்கோவை, சிவபெருமான்

திருமும்மணிக்கோவை, ஞானசித்தர் மும்மணிக்கோவை, திருக் கழுமல மும்மணிக்கோவை, திருச்செந்தூர் மும்மணிக்கோவை, திருத்தணிகை மும்மணிக்கோவை, திருநெல்லை மும்மணிக் கோவை, திருப்பரங்கிரி மும்மணிக்கோவை (2). திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவாரூர் மும்மணிக்கோவை, திருவா வடுதுறை சுப்பிரமணியதேசிகர் மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, திருவேங்கட மும்மணிக்கோவை, திருவொற்றியூர் முருகர் மும்மணிக்கோவை, நம்பெருமாள் மும்மணிக்கோவை, பண்டார மும்மணிக்கோவை, மதுரை மும்மணிக்கோவை, மயிலாசல முருகர் மும்மணிக்கோவை (2), முத்தால நாயக மும்மணிக்கோவை, முதலாழ்வார்கள் மும்மணிக் கோவை, மும்மணிக்கோவை (3), மூத்தபிள்ளையார் மும்மணிக் கோவை, வலிவல மும்மணிக்கோவை என 38 மும்மணிக் கோவைகளை மட்டும் டாக்டர் ந. வீ. செயராமன் அவர்கள் குறிப்பிடுகிறார் (சிற்றிலக்கிய அகராதி, பக். 287-288). இவரின் நூற்பட்டியலில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் எந்தவொரு மும்மணிக்கோவையும் இடம்பெறவில்லை. மேலும் ஓலைச்சுவடிகளில் தத்துவராயரின் சொரூபானந்தர் மும்மணிக் கோவை, சிவக்கொழுந்து தேசிகரின் துறைசை மும்மணிக்கோவை, பலபட்டடை சொக்கநாதப் புலவரின் மதுரை மும்மணிக்கோவை, பட்டினத்தாரின் சீகாழி மும்மணிக்கோவை போன்ற நூல்கள் இருப்பதைக் காண்கிறோம். எனவே மும்மணிக்கோவை இத்தனை என்று உறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை என்றாலும், ஐம்பதிற்கும் மேற்பட்ட மும்மணிக்கோவை நூல்கள் தமிழ் இலக்கியத்துள் இருக்கின்றன என்று உறுதியாகக் கூறலாம்.

### குமாரபுரி முருகன் மும்மணிக்கோவை

குமாரபுரியில் குடிகொண்டிருக்கும் முருகப்பெருமான் மீது வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் பாடப்பெற்றது இந்நூல். காப்பு, நூற்பயன் உட்பட முப்பத்திரண்டு பாக்க ளுடையது. அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை என மும்மணிக்கோவை இலக்கண மரபில் அமைந்தது. சென்னை அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகப் பருவ இதழ், தொகுதி 10, பகுதி 2, 1957 இல் புலவர் மு. பசுபதி அவர்களைப் பதிப்பா சிரியராகக் கொண்டு வெளியாகியுள்ளது இதன் சிறப்புகளை இனி ஆய்வோம்.

## சுவாமிகளின் பார்வையில் குமாரபுரி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் குமாரபுரி எனும் திருத்தலம் பற்றி 29 வகையான நூல்களை இயற்றியிருக்கின்றார். இந்நூல்களில் இத்தலச் சிறப்பைப் பலவிதமாக விதந்தோது கின்றார், குமாரபுரி முருகன் மும்மணிக்கோவையில் அவர், கைகூப்பிக் கும்பிடுவார்க்கு குமாரபுரி முருகன் குடிகொண்டு இருக்கும் இவ்வூரைப்போல் முற்றிலும் நம்பிடும் ஊர் வேறு இல்லை என்றும், தீங்காளர் போற்றாத ஊர் என்றும், பூவுலகும் வானுலகும் பரவி நிற்கும் ஊர் என்றும் எனப் பலவாறு கூறுகின்றார். இதனை, 'கரங்கொண்டு, கும்பிடுவார்க் கிந்தக் குமாரபுரி போலமுற்று, நம்பிடுமூ ரில்லை சொன்னேன் நான்' (20:2–4). 'தீங்காளர், போற்றாக் குமாரபுரி' (29:2–3), 'பிகதலமும், வானும் பரவும் வளஞ்சேர் குமாரபுரி' (14:2–3), 'சிந்துர மூலவுந் தெருநலங் குலவுந், பொற்புறு குமாரபுரி' (13:12–13), கொந்தலர் சோலைக் குமார புரி' (4:2) எனச் சுவாமிகளின் வாக்கால் உணரலாம்.

## குமாரபுரியான் செயல்கள்

திருவிளையாடல்களில் சிவபெருமானை அவர் மகன் முருகப் பெருமான் விஞ்சிவிட்டார் என்றே சொல்லவேண்டும். தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும் என்பது இவர் களின் திருவிளையாடல்களைப் பொருத்தமட்டில் சரியே. முருகப் பெருமானின் திருவிளையாடல்களைச் சுவாமிகள் குமாரபுரி மும்மணிக்கோவையின் முதற்பாடலிலேயே 'பலவிளை யாடற் பயின்றுவாழ் குகனே' (1:10) என்று கூறுபவர், சிதரன் முதலோர் தெண்டனிட் டேத்தச், செந்திவர்க் கிரியெனத் திகழ்ந்து, முந்து மெஞ்ஞான மொழிபகர் குகனே' (10:8–11). 'புகழ்பெருங் குமார புரியில், நிகரில்வேல் பிடித்து நின்றசே வகனே' (22:13–14), 'திண்ணிய வேல்கொடு திகழ்கிழ வோனே' (25:17). 'கிழவனுருக் கொண்டு குறக்கிள்ளை யிடஞ்சென்றாய்' (26:1) எனப் பலவாறாகக் குறிப்பிடுகின்றார்.

## குமாரபுரியான் திருப்பெயர்கள்

முருகப்பெருமானைத் தண்டபாணி சுவாமிகள் கந்தா, குமரா, வேலவா, குகனே, சண்முகனே, ஈசன் மகனே, சேவகனே,

தேசிகனே, கொற்றவனே, கைத்தெய்வமே, குருபரனே, கோமானே, சரவணனே, மயிற்கை வானவனே, கிழவோனே, பெரியவனே, காங்கேயனே, காரணனே எனப் பலவாறாகக் குறிப்பிடுகின்றார். இதனை, 'தேசிகனை வேலெடுத்த சேவகனைச் செம்பவளப் பாசியணி வாட்கினிய பான்மையனை' (8:1–2), 'இலையார்ந்த வெண்பொடி நல்கியன்' (9:1), 'குகனைக் குமாரபுரிக் கொற்றவனை யீசன், மகனை' (11:1-2), 'குமாரபுரி யாளும் வேற்படைக் கைத்தெய்வமே' (12:4), 'சிற்பர மாகித் திகழ்ந்தசன் முகனே' (13:14), 'சேலார் கட்குஞ் சரிபாகா! புனத்துச் சிறுகொண்கா!, கோலா! கலாநங் குமார புரியிற் குருபரனே!' (15:3–4), 'குமாரபுரியின், நம்புநர் வேண்டுவ நல்கி, யம்புவி புரக்கு மயிற்கைவா னவனே' (16:7–9), 'உறையிரந் துற்றமெஞ் ஞானானு பூதியுடையவர்' (18:1), 'அழகியபொற், றோகைமயில் வீரா! துகடீர் குமாரபுரி, வாகைவடி வேற்கையிறை வா' (16:2–4), 'சேவேறு வார்க்கினிய தேசிகனைச் செங்கமலப் பூவேறு வானைப் புடைத்தானை' (23:1–2), 'பொருந்தமர் கிள்ளை' (24:4) என மும்மணிக்கோவைப் பாடல்களில் குறிப்பிடுவதால் அறியமுடிகிறது.

**குமாரபுரியானின் வடிவம்**

முருகப்பெருமான் ஒவ்வொரு தலத்திலும் அத்தலத்திற்குத் தக்கவாறு தன்னுடைய வடிவத்தை அமைத்துக் கொண்டிருக்கின்றான். குமாரபுரியில் குடிகொண்டிருக்கும் முருகப்பெருமான் வண்ணமயிலின் மேல் கையில் வேல்கொண்டு அமர்ந்திருக்கின்றான். இதனைச் சுவாமிகள், 'வன்னமா யிரம்பெறு மயின் மேல், மின்னகும் வேலொடு விளங்கு தேசிகனே' (7:15--16), 'தோகைமயில் வீரா! துகடீர் குமாரபுரி, வாகைவடி வேற்கையிறை வா' (26:2–4) எனக் குறிப்பிடுகின்றார்.

**சுவாமிகளின் கூற்று**

சுவாமிகள் முருகப்பெருமானிடத்து மிகுந்த ஈடுபாடு கொண்டவர். சைவம், வைணவம் என இருவேறு சமயங்களில் நூல்கள் இயற்றியிருந்தாலும் சைவத்தில் முருகப்பெருமானையே முழுமுதற் கடவுளாக எண்ணிப் பல்லாயிரம் பாடல்கள் இயற்றியிருக்கிறார். இப்பாடல்களில் சுவாமிகளின் கூற்றுகள் பல வெளிப்படுவதைக் காணலாம். முருகப்பெருமான் தனக்குக்

காட்சித் தரவில்லை என்பதற்காகத் தானெழுதிய பல நூல்களை அழித்திருக்கிறார்; அழித்து ஆக்கியும் இருக்கிறார். கிடைத்த நூல்களில் சுவாமிகளின் கூற்றைத் தெளிவாக அறியமுடிகிறது. குமாரபுரி முருகன் மும்மணிக்கோவையிலும் சுவாமிகளின் கூற்றுகள் பல இடம் பெற்றிருக்கின்றன.

குமாரபுரியில் வீற்றிருக்கும் முருகப்பெருமானைப் போற்றிப் பாடாத புலவர்கள் துயர் அடைவர் என்பதை,

'சேவேறு வார்க்கினிய தேசிகனைச் செங்கமலப்
பூவேறு வானைப் புடைத்தானைப் – பாவேறுஞ்
செல்வக் குமாரபுரிச் சேந்தனைப்போற் றாப்புலவர்
சொல்வக் கணைநந் துயர்' (23)

என்கின்றார். மேலும் அவர், நானென்ற அகந்தைப் பேய் என்னை வந்து முற்றிலும் ஆட்கொள்ளுவதற்கு முன்னால் தானென்ற நன்னிலையை எனக்கு என்று அளிக்கப்போகிறாய் சண்முகக் கடவுளே! (21), குமாரபுரியில் மயிலின் மேல் வேலாயுதத் தோடு வீற்றிருக்கும் முருகா! உன்னுடைய வேலாயுதப் பூசையில் ஆசை கொண்ட என்னை உருத்திராக்கம் அணிவார் புகழும் நாளை என்று எனக்கு வருவிக்கப்போகிறாய் (15), உயிர்க்கொலை செய்ய சற்றும் அஞ்சாதவர்களும் பொல்லாதவர்களும் வாழுகின்ற இவ்வுலகத்தில் உன்னையே நினைத்திருக்கும் என்னைத் தாழ்வுபடுத்திப் பார்ப்பது உனக்குத் தர்மமா? (10), சளிநோயால் தவிக்கும் என்னைச் சீர்செய்ய வரமாட்டாயோ? நீ என்னிடம் சொன்னதெல்லாம் பொய்யோ? (12), உன்னையே முழுமுதற் கடவுளாக ஏற்றவர் அன்பினாற் சொன்ன சொற் களை என்னிடம் கூறுக என்று உன்னிடம் கேட்க எனக்குத் தகுதியில்லையோ (5) என்றவாறெல்லாம் வினாவெழுப்பு கின்றார்.

எவரெவரெல்லாம் உன்னை எவ்வாறெல்லாமோ இகழ்ந்த போதும் நீ அவர்களுக்கெல்லாம் அருள் தருகின்றாய் (19), எக் காலத்தும் யாவர்க்கும் அஞ்சாத குமரா! உன்னையே கதியென்று இருக்கும் என்னை எக்காலத்தும் எதற்கும் அஞ்சாமல் காத்தருள்வாய். இன்சுவை பொருந்திய கடலை உருண்டை, எள்ளுருண்டை, பயறுருண்டை, கனிந்த பல வகையான பழங்

களின் மீது விருப்பமாக இருக்கின்ற குமாரா! என்மீதும் விருப்பம் கொண்டு என்னைக் காத்தருள்வாயே' (2), காப்பாற்று! காப்பாற்று! என்று எத்தனை நாள் உன்னைக் கேட்டேன், காக்க மறந்துவிட்டாயோ! உன்னை நாடாதவர்களுக்கும் கூட உனதருள் இனிதே கிடைத்துவிடுகிறது. ஆனால் உன்னையே தினந்தோறும் துதித்துக்கொண்டிருக்கும் நான் உனக்கு ஆகாத பிள்ளையாகிவிட்டேனா? குமாரபுரிக் கோயிலை வீடென்று வாழ்கின்ற கந்தப்பெருமானே! எனக்கு என்று காட்சி கொடுக்கப் போகிறாய் (3), எவ்வகைத் துன்பம் என்னை வந்து ஆட்கொண்ட போதும் தேவர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதுண்டு வாழ எண்ணியது போல் நான் என்றும் வாழ நினைத்ததில்லையே. அப்படிப்பட்ட நான், வாழும் நாளெல்லாம் உன்னையே நினைத்து உன்னுடைய திருவிளையாடல்களிலேயே மூழ்கிக்கிடக்கும் நான், வேறொருவரை நினைப்பதும் நினைத்துப் பாடலியற்றுவதும் இல்லையே (1) அப்படிப்பட்ட எனக்கு மட்டும் காட்சிதர மறுப்பது என்று வினவுகின்றார்.

### முருகனைப் போற்றுதல்

உன்னுடைய அடியர்களுக்கு இன்னல் செய்வார்க்கு இன்னலும் மற்றவர்களுக்கு இன்பமும் அளிப்போனே! சிவன், திருமால், நான்முகன் ஆகியோர் தாங்களே உயர்ந்தவர்கள் என்றும், தங்களின் சமயமே உயர்ந்தது என்றும் வாதிட்டபோழ்து அவர்களுடன் தன்னுடைய பேரறிவாற்றலால் வாதிட்டுத் தானே எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று அறிவுறுத்தி நின்றவனே! (4) என்று குமரப்பெருமானின் அறிவுத் திறனைப் புகழ்கின்றார் சுவாமிகள்.

குன்றுதோறும் தன்னுடைய சேவற் கொடியை நாட்டி விட்டு குமாரபுரியில் மயில்மேல் வேலுடன் காட்சி தந்து அடியவர்களுக்காக வாழுகின்ற குமரா,

> ''முற்றுநின் செயலென் மொழிதரு மென்னை
> யெற்றுறுந் தொழிலு மென்வாய்ச் சொற்கள்'' (25:1–2)

என்றே இருக்கும் நான், உன்னை விரும்பி உன்னோடு புணர்ந்த அழகுத் தமிழில் உன்னைப் போற்றிப் பாடுகின்றேன். என்னைப் புறந்தள்ளாமல் ஏற்று அருள்புரிய வேண்டும் (19) என்றவர், உன்னுடைய திருவடியையே தினந்தோறுந் துதிக்கும் அடியவர்

களுக்கும் எனக்கும் நீர் என்ன செய்யவேண்டும் தெரியுமா? அவர்களை, 'பிறைமுடிக் கும்படி செய்வாய்' (27:4) எனக் கேட்கின்றார்.

இவ்வாறாகத் தண்டபாணி சுவாமிகள் முருகப்பெருமானிடம் வேண்டியும் உருகியும் கட்டளையிட்டும் எனப் பல நிலைகளில் செல்வதைக் காண்கிறோம். மேலும், முத்தியடைய விரும்பு வோர் முருகப்பிரானை வணங்கி எளிதில் முத்தி அடையலாம் என்றும், ஆதி முதல் தெய்வம் முருகப்பெருமானே என்றும், இயற்கைத் தெய்வம் என்றும், முருகனே மற்ற கடவுளர்களைக் காட்டிலும் உயர்ந்தவர் என்றும் கூறுகின்றார். இப்படிப்பட்ட இவரே 'தன்னை வன்மாய வனிதையர் வலையினில் ஆட்பட்டு அலைமோதாது நின்திருவடியின் நிழலில் என்றும் இருக்க அருள்தா' என்று வரம் கேட்கின்றார். நாமும் அவ்வரமே கேட்போமாக.

**துணை நின்ற நூல்கள்**


1. அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகள் அட்டவணை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.
2. இளங்குமரன், இரா., இலக்கிய வகை அகராதி, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1985.
3. சுப்பிரமணியன், ச. வே., தமிழ் இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப் பதிப்பகம் சென்னை, 1984.
4. செயராமன், ந. வீ., சிற்றிலக்கிய அகராதி, பாரி நிலையம், சென்னை, 1983.
5. பசுபதி, மு., (பதி.ஆ.,), குமாரபுரி முருகன் மும்மணிக் கோவை, அரசினர் கீழத்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ், தொகுதி 10, சென்னை, 1957.
6. முத்துராசன், இலக்கிய வடிவங்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1984.

# சுவாமிகளின் இசை, நாடகக் கோட்பாடுகள்

இராம. கௌசல்யா

பத்தொன்பதாம் நூற்றாண்டினைத் தமிழிசையின் பொற் காலம் என்று கூறலாம். கவிகுஞ்சர பாரதி, மதுரகவி, ஆனய்யா, வைத்தீசுவரன் கோவில் சுப்பராமய்யன், திருவாஞ்சியம் சுப்ப ராமய்யர், அனந்த பாரதி, தஞ்சை நால்வர், கோபால கிருட்டிண பாரதி, வேதநாயகம் பிள்ளை, தரங்கம்பாடி பஞ்சநாத அய்யர், திருவாரூர் இராமசாமிப் பிள்ளை முதலிய பல இயலிசைப் புலவர்கள் ஏராளமான இசைப் பாடல்களைப் பாடி தமிழிசைக்கு வளம் சேர்த்தனர். இக்கால கட்டத்தைச் சேர்ந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இசை, நாடகப் பாடல்களைப் பாடி இருப்பதோடு அவற்றிற்கு இலக்கணமும் கண்டவர். இத்தகைய சிறப்பினைப் பெற்றவர் இவர் ஒருவரே என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். இசை, நாடகப் பாடல்களாக கீர்த்தனை, பதம், ஓரடிக் கீர்த்தனை போன்றவற்றைப் பாடி இருப்பதோடு, '12' வண்ணங்கள், நூற்றுக்கு மேற்பட்ட வகுப்புகள், எண்ணற்ற திருப்புகழ்ப் பாக்களையும் இயற்றியுள்ளார்.

பழைய இலக்கண நூல்களும் பிறவும் கூறுகின்ற இசைப் பாடல்வகைகள் பல இன்று வழக்கொழிந்து விட்டன. பல பெயரளவில் இசைப்பகுதிகள தெரியாமல் இயல்பகுதி மட்டும் கிடைப்பன. இசை, நாடக மேடைகளில் கிருதி, கீர்த்தனை, பதம் என்ற புதிய வடிவங்கள் நிலை பெற்று விட்டன.

சுவாமிகள் இயற்றியுள்ள அறுவகை இலக்கணம் என்னும் நூலின் வாயிலாக சுவாமிகளது இசை, நாடகக் கோட்பாடுகளை அறியமுடிகின்றது. அறுவகை இலக்கணத்தின் நான்காவது இயலாக அமைவது யாப்பிலக்கணம். இதன் முதல் பகுதி இயலிசைத் தமிழியல்பு ஆகும். இங்கு இயற்றமிழுக்கு உரிய யாப்பு வகைகள் யாவை, இசைத்தமிழிற்குரியவை எவை எனத் தெளிவாகப் பிரித்துக் கூறவில்லை. இவர் முத்தமிழ்ப் பாமாலை என்று ஒரு நூல் இயற்றியுள்ளார். இந்நூலில் ஒரு இயற்றமிழ்ப்

பாடல். ஒரு இசைத் தமிழ்ப் பாடல், ஒரு நாடகத் தமிழ்ப் பாடல் (கீர்த்தனை) என்ற அமைப்பில் 30 பாடல்கள் காணப்படுகின்றன. இந்நூலின் கருத்துப்படி கீர்த்தனை நாடகத் தமிழைச் சார்ந்தது; ஆசிரியய விருத்தம், கட்டளைக் கலித்துறை, தாழிசை, கட்டளைக் கலிப்பா, கொச்சகக் கலிப்பா, சந்த விருத்தம் ஆகியன இசைத் தமிழைச் சார்ந்தவை. அகவல் மருட்பா, குறளடி வஞ்சிப்பா ஆகியன இயற்றமிழைச் சார்ந்தவை.

**கையாளப் படவேண்டிய சொற்கள்**

சொற்கள் நடைமுறையில் பேசும்போது – பேச்சு வழக்கில் – திரிந்து வழங்குதல் உண்டு. வருகின்றவன் – வாறவன் என்றும், கொண்டு வந்து – கொணர்ந்து என்றும், ஏனடி – ஏண்டி என்றும் மருவி வழங்குவது போல் மேலும் பல இவ்வாறு வழங்குகின்றன. இத்தகைய மரூஉ மொழிகளை இயற்றமிழில் பயன்படுத்தாமல் இசைத்தமிழ் நாடகத்தமிழில் பயன்படுத்தினாலும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும் (5 சொல்) என்கிறார். (அறு.பக்.127)

''இசைத் தமிழும் நாடகத் தமிழும் பாமரரும் எளிதில் உணர்ந்து கொள்வதற்காக இயற்றபடுதலின் அவற்றுள் இத்தகைய மரூஉ மொழிகள் தழுவி ஏற்றுக் கொள்ளப்பட்டன. எனினும் அங்கும் இத்தகைய சொல்லாட்சி மிக்க சிறப்பினையுடையது அன்று என்பதற்காக இசையினும் என உம்மை புணர்ந்தார்', (அறு.பக்.128)

சொற்களுக்கு நிறம் வகுக்கிறார். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்ச் சொல் பொதிய மால்வரைப் பொழில் என இருண்டும் உலவா முனிவோர் உடைஎனச் சிவந்தும், வீழ்புனல் அருவியில் வெளுத்தும் தோன்றும் என்று அறிவார் மலர்த்தாள் அணிதலை எமதே. (நூற்பா. 171)

பாமர மக்களும் எளிதில் புரிந்துகொள்ளும் சொற்கள் வெள்ளை நிறம் என்று கூறுகிறார். நாடகத் தமிழில் பயன் படுத்தப்படும் சொற்கள் வெண்மை நிறமாகவும் இருத்தல் வேண்டும். இசைத்தமிழ்ச் சொற்கள் செந்நிறம், இயற்றமிழ்ச் சொற்கள் கரிய நிறம்.

"இயல், இசை, நாடகம் ஆகியவை ஒன்றைவிட அடுத்தது எளிய நடையில் அமைய வேண்டும் என்பதே இந்நூற்பாவின் கருத்து ஆகும்'' (ப. 128)

இவருடைய கருத்துப்படி இயற்றமிழ், கற்றுத் தேர்ந்தவர்க்கே புரியும் வண்ணம் கடுமையான நடையையும், இசைத்தமிழ் ஓரளவு கல்வி கற்றார்க்குப் புரியும் வண்ணம் சற்றே எளிமையான நடையையும், நாடகத்தமிழ் பாமர மக்களும் புரிந்துகொள்ளும் படி எளிமையான நடையையும் கொண்டிருக்க வேண்டும்.

அடியின் ஓர் பகுதி ஆறசை அளவும் மிக்கிருத்தல் முதலியன நாடகத் தமிழாகிய கீர்த்தனை, பதம் போன்றவைகளிலும், தனி இசைக்கே உரிய உருப்படிகளிலும் இசை இலக்கணத்திற்கேற்பப் பலவிதமான மாறுபாடுகளுடன் விளங்கும். அவற்றிற்கு எல்லாம் சீர் வரையறை செய்ய இயலாது. அவ்வாறு அவைகளையும் இயற்றமிழ் வாய்ப்பாட்டாய் அலகூட்டுப் பார்க்க முயலுதல் பன்றியின் முகத்தில் படாம் அணிந்ததைப் போலாகும் என்பர் (ப. 167)

இயலைவிட இசையும், நாடகமும் எளிமையானவை. இயற்றமிழில் கட்டுப்பாடுகள் மிகுந்து காணப்படுகின்றன. அத்தகைய கட்டுப்பாடுகளை இசை, நாடகப் பாக்களுக்குப் பொருத்த வேண்டியதில்லை என்பது இவர் கருத்து. ஐந்தசைச் சீர் கோட்பாடு வரை கூறியவர் இத்தகைய வரையறைகள் இசை நாடகப் பாக்களுக்குக் கிடையாது என்று கூறுகிறார்.

நாடகத் தமிழ்ப்பா வகைகள் முதல் வண்ணப்பாடல் வரை எல்லாவற்றிலும் அகப்பொருள் துறையின் சிறப்பு காட்டப்படுதல் உண்டு. ஆயினும், கட்டளைக் கலித்துறை, வண்ணம் ஆகிய இவ்விரு வகைகளிலேயே அகப்பொருள் துறைகள் பாடப் பட்டாலும் இவற்றிலே பாடுதலே மிகுதியாகும். பெரும்பாலான வண்ணங்களின் பாடுபொருள் அகப்பொருள் துறைகளாகவே இருக்கின்றன. கோவைகளும், கட்டளைக் கலித்துறையிலேயே உள்ளன.

வண்ணப்பாடல்கள் அளவால் நீண்டவை. ஆகவே, விரித்துக் கூற இடம் தருகின்ற அகத்துறைகளிலேயே பாடப்படுகின்றன.

### இசைத்தமிழ் அம்மானை

இப்பகுதி 1? நூற்பாக்களால் இயன்றது. அம்மானை என்பது மகளிர் ஆடல் பாடல்களில் ஒன்று. காய்கள் அல்லது கிழங்குகள் அல்லது எலுமிச்சம் பழங்களை மேலே எறிந்து அவற்றைக் கீழே விழாமல் கவனத்துடன் மேலேயே சென்று வரும் வண்ணம் பிடித்தும் எறிந்தும் விளையாடும் ஆட்டம் அம்மானை ஆகும். இவ்வாட்டத்துடன் பாடப்படும் பாடல் அம்மானை என்று அழைக்கப்படும். இப்பாடல் வகையை சுவாமிகள் ஐந்தடிக் கலிப்பா போலும் என்கிறார். ஆனால் இதற்கு உரை எழுதியுள்ள ப. வெ. நாகராசனார் ஈற்றடி மிக்குவந்த கலித்தாழிசை என்று கூறுதலே பொருத்தமானது என்கிறார்.

அம்மானைப் பாடல்களின் இரண்டாம் அடி, நான்காம் அடி, ஐந்தாம் அடி ஆகியவற்றின் இறுதியில் அம்மானை என்ற சொல் காணப்படும். இது ஐந்து அடி கலிப்பாவைப் போன்றது. ஒருத்தி ஒரு செய்தியைக் கூறுகிறாள். இரண்டாமவள் அதை மறுக்கிறாள். மூன்றாமவள் அதற்கு அமைதி கூறுகிறாள், என்று அம்மானை இலக்கணம் கூறுகிறார்.

அம்மானையின் இறுதியில் மூன்றாமவளின் விடைமொழியில் இறுதி பெரும்பாலும் சிலேடையாக அமையும் என்றும் கூறப்படுகிறது.

ஒரெதுகைத் தாய இரு கலிப்பா அடிகளாலும், எதுகை இல்லாமல் தனியாக அமைந்த அடிகளாலும் காதை அம்மானைகள் சிலரால் இயற்றப்பட்டுள்ள செய்தியையும் தருகிறார்.

அம்மானை எப்போதும் வெண்டளையாலேயே வரவேண்டும், கலி வந்தால் இழிவு என்கிறார். (ப.287)

### இசைத்தமிழ்

இசைத்தமிழ்ப் பகுதி 18 நூற்பாக்களாலானது. அம்மானை வகைகள், கட்டளைக் கலித்துறை, கலிநிலைத்துறை, வஞ்சி விருத்தம், கலிவிருத்தம், ஆசிரிய விருத்தங்கள், தாழிசைகள், வேற்றொலி வெண்டுறை மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா ஆகிய தமிழ் யாப்பு வடிவங்களை இந்நூலாசிரியர் இசைத்தமிழுக்கு உரியனவாகக் கூறியுள்ளார்.

### நாடகத்தமிழ்

அபிநயத்தோடு ஆடுவதற்கேற்ற பாடல்களையே நாடகத் தமிழ் எனக் கொள்கிறார். (ப.307)

கீர்த்தனை, பதம் ஆகிய இரு உரு வகைகளின் இலக்கணமும், அமைப்பும் கூறப்படுகிறது.

பல்லவி, அனுபல்லவி, சரணம் என்பன ஒரு பாடலின் அங்கங்கள் (உறுப்புக்கள்) ஆகும்.

பல்லவியைப் போல இரு மடங்கு அனுபல்லவி இருக்க வேண்டும். அதற்கு இருமடங்கு சரணம் இருக்க வேண்டும். தாளம் தவறாமல் இருக்க வேண்டும். இத்தகைய அமைப்பினையுடைய பாடலில் இறைத்துதியாகிய பேரின்பம் பாடுபொருளானால் கீர்த்தனை எனப்படும். சிற்றின்பம் பாடுபொருளானால் பதம் என்றும் இலக்கணம் கூறுகிறார்.

கீர்த்தனை, பதம் என்ற இரண்டு உருக்கள் மட்டுமே இங்கு உருக்களாகக் கணக்கில் எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கின்றன.

பதம், கீர்த்தனை இரண்டனுக்குமுள்ள வேறுபாடு பாடு பொருள்தான் என்பது சுவாமிகளது கருத்து. ஆனால் பதம் என்ற உருவகையில் இயற்றப்பட்டுள்ள பாடல்களை ஆராய்ந்தால் இன்னும் ஆழமான வேறுபாடுகளைக் கூற முடியும். பதம் என்பது சௌக காலத்தில் அதற்கு இடம் தருகின்ற ராகங்களிலேயே பெரும்பாலும் அமைந்துள்ளன. புறத்தே பார்ப்பதற்குச் சிற்றன் பத்தைப் பாடுவது போலத் தோன்றினாலும், உள்ளே ஆழமாக நோக்கில் சீவாத்துமா, பரமாத்துமா உறவு நிலையினைப் பாடுவது புலப்படும். பிறக்கும் ஒவ்வொரு உயிரின் குறிக்கோளும் சீவாத்து மாவை அடைதலே ஆகும். அதற்கு குருவின் துணை இன்றி யமையாதது. ஆகவே, பதங்கள் தலைவி அல்லது தோழியின் கூற்றாகவே அமைந்துள்ளன.

பல்லவி அனுபல்லவிக்கு முதற்சூத்திரத்தில் அளவு கூறப் பட்டிருப்பினும் அடுத்த நூற்பா அவை மிகினும் தவறில்லை என்று விதிவிலக்கும் கூறுகிறது. ஆனால் தாளம் தவறாமல், எல்லோரும் புரிந்துகொள்ளும்படி பொருள் அமைந்திருத்தல் நலம் என்றும் கூறுகிறது.

நாட்டியம் நாடகத்தில் பாடல்களே கதையை நகர்த்திச் செல்வதில் பெரும்பங்கு வகிக்கின்றன. பாடப்படுகின்ற பாடலில் பொருள் எளிதில் விளங்கினால்தான் பார்வையாளர்களுக்குக் கதையும், நடப்பும் புரியும். கடினமான சொற்களும், மறை பொருள் கொண்டு சொல்லாட்சியும் நாடகச் சுவையைக் கெடுத்து விடும். ஆகவே, நாடகப் பாடல்கள் எளிமையாக தாளம் தப்பாமல் அமைவது இன்றியமையாதது ஆகும் என்பர்.

# அருணகிரிநாதரும் சுவாமிகளும்

சு. சண்முகசுந்தரம்

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி ஆகியன முருகன் மீது பக்திச் சுவை யூட்டும் இனிய பாடல்கள் ஆகும்.

அருணகிரிநாதர், இறைவன்பால் அன்புடையவர். உலகத்தில் நன்றாக வாழவேண்டும் என்று விரும்புகிறவர்கள், அன்பர்கள் நல்லபடி வாழ்ந்தால் உலகம் முழுவதும் அவர்களால் இன்பத்தை அடையும் என்ற உண்மையை உணர்ந்தவர். ஆதலின் அறம், பொருள், இன்பம் என்ற துறைகளிலும் அறிவுரை கூறுகிறார். இந்த மூன்று திறத்திலும் இன்னது செய்ய வேண்டும் இன்னது செய்யக்கூடாது என்று நல்லுபதேசம் செய்கிறார்.

கந்தர் அலங்காரத்தில் அறம் செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்தும் பாடல்கள் பல. பொருளை நல்ல முறையில் சேமித்து வாழவேண்டும் என்பதைச் சொல்வன சில. நன்முறை யில் இன்பம் துய்க்கும் முறையைக் குறிப்பாகப் பெறவைக்கும் இடங்கள் சில எல்லாவிடத்திலும் இறைவனுடைய திருவருளை எண்ணும் பேரன்பு கருதி போடவேண்டும் என்று சொல்கிறார்.

திருப்புகழில் பல பாடல்களில் வடமொழிச் சொற்களும் தொடர்களும் விரவி வருகின்றன என்பதை சில ஆராய்ச்சிக் காரர்கள் கருதுகின்றனர். அருணகிரிநாதர் வடமொழிக் கவிஞர் களின் வழியில் வந்தவர் என்றும் தாமே சில நூல்களை வட மொழியில் இயற்றியிருக்கிறார் என்றும் எழுதியிருக்கிறார்கள். அந்த ஆராய்ச்சியின் முடிவைப் பற்றி நமக்குக் கவலையில்லை. திருப்புகழிலும் பிறவற்றிலும் உள்ள பாடல்களைப் பார்க்கும் பொழுது அவர் வடமொழியில் நிரம்பிய அறிவுடையவர் என்றே எண்ணத் தோன்றுகிறது.

### அருணகிரியாரின் சமரச இயல்பு

அருணகிரியாரின் பல பாடல்களின் வாயிலாக பல வகையான சமரச வழிகளைக் காட்டுகிறார். சைவ, வைணவ வேறுபாடு இல்லாமல் எல்லா மூர்த்திகளையும் வாயாரத் தம் பாடல்களிலே துதித்திருக்கிறார். யோகம், ஞானம், பக்தி என்ற மூன்றை மிக அழகாகத் தமது பாடல்களில் உணர்த்தியிருக்கிறார். தமிழிலே அவர் கொண்டுள்ள ஆர்வத்தினாலே தமிழை எல்லோரும் நன்றாகக் கற்கவேண்டும், பிழையறக் கற்க வேண்டும் என்று குறிப்பிட்டிருப்பதையும் காண்கிறோம் சாதியிலோ, சமயத்திலோ, மொழியிலோ வேறுபாடு காணாதது அவரது சமரசத் தன்மை நிரம்பிய தூய உள்ளத்தைக் காட்டுகிறது.

### அருணகிரியார் இயல்பு

அருணகிரிநாத சுவாமிகள் நான் அதைச் செய்யவில்லையே! இதைச் செய்யவில்லையே! இந்தக் குற்றத்தைச் செய்தேனே! அந்தக் குற்றத்தைச் செய்தேனே! என்ற இயல்பு எல்லாம் தம்மை நினைந்து சொல்வன அல்ல என்பதைப் பலமுறை நினைந்து நினைந்து ஆண்டவனுடைய வழிபாட்டில் ஈடுபடுத்தாமல் இருக்கிறவர்களை நினைந்து சொல்வதாகக் கொள்ள வேண்டும். தாய் போன்ற கருணையுடைய அவர் நாம் இருக்கும் நிலைமையை உணர்ந்து தாமே அப்படி இருப்பதாக இரங்கும் இயல்பை உடையவர்.

### அருணகிரியார் கூறுவது

இங்கே அருணகிரியார் முருகப் பெருமானைப் பார்த்து உன்னுடைய திருவடியை வணங்காத தலையும் உன்னுடைய திருவடியின் பேரெழிலைக் காணாத கண்ணும் அதனைத் தொழாத கையும், அதனைப் பாடாத நாவும் பிரமன் எனக்கென்றே அறிந்து படைத்திருக்கிறானே! என்று குறைப்பட்டுக் கொள்கிறார்.

> "கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றம் ஏன்? குன்று எறிந்த
> தாடாளனே: தென் தணிகைக்குமர, நின் தண்டை அம்தாள்
> சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாதகையும்
> பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே"

**அருணகிரியாரின் காலம்**

அருணகிரி முனிவர் காமத்தினால் வருகின்ற துன்பங்களை நன்றாக உணர்ந்தவர். அவர் காலத்தில் பலர் சிற்றரசர்களாக வாழ்ந்தார்கள். ஜமீன்தார்கள் என்று பிற்காலத்தில் நாம் சொல்கின்றவர்களைப் போலவே அவர்கள் வாழ்ந்தார்கள்.

அருணகிரி முனிவர் ஆண்டவன் திருவருள் இன்பத்தைப் பெறுகிற வாழ்வில் ஆண்டவனது இன்ப மாளிகையில் வாழ்கின்ற நிலையிலேயே இராமல் உவகமாகிய சமுதாயத்தில் நடமாடு கின்ற நோயாளிகளுக்கு நலம் செய்ய வருகிறார். தம்முடைய சொல் மருந்தினால் சுகம் அடையும்படி செய்யவேண்டுமென்ற கருணையினால் இரங்கி இந்த நிலையில் இருக்கிறார். அவர்களிடத்தில் வந்த அவர்களுடைய நோயைத் தம்முடைய நோயாக எடுத்துக்கொண்டு பல பாடல்களைப் பாடியிருக்கிறார்.

**அருணகிரியாரின் பாடல்கள்**

அருணகிரியாரின் பாடல்கள் அற்புதமான கண்ணாடியாக அமைந்திருக்கின்றன. அந்தக் கண்ணாடி ஒரே சமயத்தில் நமக்கு முருகப் பெருமானையும் காட்டுகிறது. நமது அலங்கோல வாழ்வையும் காட்டுகிறது. அருள் பெறாமல் அவலநிலையில் உழன்று கொண்டிருக்கும் நம்மையும் காட்டி அருள் வழங்கும் வள்ளற்பிரானாகிய முருகனையும் காட்டுகிற வள்ளற்பிரானாகிய முருகனையும் காட்டுகிற அருணகிரியாரின் தோத்திரப் பாடல்கள் பாத்திரத்தில் உள்ள உண்மையையும் நமக்குப் புலப்படுத்துகிறது.

சோதனையும் சாதனையும் என்பது அருணகிரியார் தாம் இறைவனை அன்புகொண்டு வழிபட்டுச் சோதித்து வெற்றி பெற்ற பெருமிதத்தில் பாடும் பாட்டின் விளக்கம் போதித்த மெய்யன்பினால் அழுது தொழுதுருகிச் சாதித்துக்கொண்ட சாதனையை இரண்டு பாடல்களின் மூலமாக விளக்குகிறார் அதில் ஒரு பாடல்.

''பாதித் திருஉருப் பச்சென்
றவர்க்கித்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே
லனைச் சென்று போற்றி உய்யச்

சோதித்த மெய்யன்பு பொய்யோ?
அழுது தொழுது உருகிச்
சாதித்த புத்திவந்து தெங்கே
எனக்கிங்ஙன் சந்தித்ததே!''

எல்லாம் அவன் திருவருள்தான் என்று வியப்பெய்திப் பாடுகிறார் அருணகிரியார்.

**தண்டபாணி சுவாமிகள்**

நீர்வளம், நிலவளம் நிறைந்து, தொழில் வளம், குடி வளம் தோய்ந்து மொழி வளம் சமய வளம் முன்னேறி வாழுமாறு திருநெல்வேலிப்பதி எவர்க்கும் வழிகாட்டுகின்றது.

அப்பதியில் சிறந்த வேளாண் குல திலகர் செந்தில்நாயகம் பிள்ளை. தூய அவரது துணைவி பேச்சிமுத்தம்மையெனும் பெயரினர். இத்தம்பதிகள் அருந்தவப் பயனாக 120 ஆண்டிற்கு முன் உதித்த மைந்தர் சங்கரலிங்கர் முன்னைய தவக்குறையை முடிக்க வந்த அம்மைந்தர் இளம்பருவத்தில் கணபதியை, திருமகளை, அறுமுகனை, இடையறாது வழிபடலாயினர்.

தாய் பிறந்த சுரண்டையூரில் தமிழ் பயின்றார். ஓயாது மூலமந்திரத்தை உருவேற்றினார். அதனால் வளர்ந்தது, புண்ணியம் மலர்ந்தது, மனம் நெகிழ்ந்தது, உணர்வு உள்ளத்தில் ஒளிபுகுந்து உறவுபூண்டது.

சுரண்டையூரில் கோமள அம்பிகையின் கோயில் ஒன்று. சங்கரலிங்கர் ஒருநாள் சிறந்த அந்த ஆலயத்திற்குச் சென்றார். புனித தேவியின் திருப்பெயர் பூமி காத்தாள். அம்பிகையை அங்கு ஆராதிப்பாரை அறிந்தார். இத்தேவிக்கு இத்திருநாமம் எதனால் பிறந்தது? என்றார். பலர் பலவாறு பதிலுரைத்தனர்.

''அமுதம் கடையுநாள், ஆலம் வெடித்துத்
திமுதமெனத் தியெரித்துச் சென்ற(து) – அமுதமென்த
தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்
காத்ததனால் பூமிகாத் தாள்''

என்ற ஒரு வாக்கு அவரை அறியாது அவர் நாவில் உதித்தது.

அன்றுதொட்டு பாடும் நிலை பழக்கம் ஆயது. பதின்மூன்றாம் வயதில் பயன்தரு வண்ணப்பாப் பல பாடினார்.

திருநெல்வேலி மாவட்டத்தில் திருமலை என்பது ஒரு திருப்பதி. அம்மலைமேல் ஏறினார். அயில் பரமா! குயில் இருபுறமுள குமரேசா! கெட்ட எண்ணமும் கேடுகெட்ட புத்தியும், வம்பும், வழக்கும் வளரும் உலகைப் பார்க்கிறேன். கண்கள் குளிருமாறு நின்கைக் கண்டிலனே! இந்த நீசமான வாழ்க்கை நாசமாகட்டும்! உன் திருமுன் உயிர் ஒழியட்டும்! என்று வீரிட்டுக் கூவி வீழ்ந்தார். கடகடவென்று கீழ்நோக்கி உருண்டது அவர் திருவுருவம்.

என்ன அதிசயம்! எவரோ இடைவந்து நிறுத்தியதுபோல், தடைப்பட்டது திருமேனி. சிறந்த தோளில் மட்டும் சிறிது புண். அன்று இரவு அவர் கனவில் பெருமான் முருகன் பிரசன்னம் ஆயினன். உருண்டது வீண்! இறந்திருந்தால் என்னாகும்? தாங்கினம் யாம் என்றான் தற்பரன். விமலா! வினையுடல் அழியின் வேறு உடல் தரவேதான் உளன். அடியேற்கு முதன்மை நின் தேவையே முக்கியம் என்று இன்பக்கண்ணீர் பெருக்கி இறைஞ்சினார். அதைக்கேட்டு கண்ணருள் பாலித்தான் கந்தப்பிரான்.

மற்றொருநாள் கனவில் வள்ளியம்மை காட்சியாயினள். புனித நீற்றைத் தோளில் பூசினள், விழித்து வியந்தார். இரண்டொரு நாளில் புண் மறைந்தது. இக்கனவுக் காட்சிக்குப் பின், கடன்மடை திறந்ததுபோல் சங்கரலிங்கர், கவிமழை பொழியும் காளமேகம் ஆயினர். பிறகு வள்ளியூர் எனும் திருப்பதிக்குச்சென்று முருகனை வணங்கினார். கையில் தண்டம், முழுநீற்றுத் திருமேனி கீள் கோவணம், இடையில் சிறு காவியுடை. குணஞ்சிறந்த இக்கோலம் கொண்டார். கண்டவர் தண்டபாணி சுவாமி என்று கைகுவித்தனர். திருப்புகழ்ச் சுவாமிகள் என்றனர். பெற்றோர் இட்டபெயர் மறைந்தது. இந்நிலையில் அழகர் பல தலங்களையடைந்தார். பாடல் பல பாடிப் பரனைப் பரவினார்.

ஒரு சமயம் சென்னை கந்தகோட்டம் முத்துக்குமாரசுவாமி கட்டளையிட்டபடி அப்பரன்மேல் பல பாடல்களைப் பாடினார். அவைகளுள் ஒன்று கந்தகோட்டப் பிள்ளைத்தமிழ்.

பிறகு திருஅண்ணாமலைக்குச் சென்றார். தனிப்பெரும் ஈசானிய மடத்தில் தங்கினார். பல பாடல்களைப் பாடினார்.

புனிதமானது பொதிகைமலை. அருந்தவச் சித்தர் பலர் அங்குளர். அதைக்கனவில் அறிந்துள்ள அடிகள் அம்மலை நோக்கிச் சென்றார். அங்கு **சித்தர் அந்தாதி** எனும் பெரியதொரு கவிமழையாகப் பெருகியது.

ஒருசமயம் அடிகள் வடலூர் இராமலிங்க சுவாமிகளைச் சந்தித்தார். அவருடன் அதிகம் அளவளாவினார். பயனாள அச்சுவாமிகள் மாதவர் இவரது வண்ணவளங்கண்டு மகிழ்ந்தார்.

பிறகு புதுவைக்குச் சென்று தானப்பர் முதலானோர் உபசாரத்தை ஏற்று அங்கு கோயில் கொண்டுள்ள இறைவன்மீது 'புதுவைப் பிரபந்தம்' பாடியது.

புனித வழிபாட்டிற்காகக் 'கேரளம்' சென்றார். பின்னர் 'திருவனந்தபுர மன்னர்' வீதியுலா வந்தார். அதை அடிகள் அறிந்தார். உள்ளம் துணிந்தார். முன்வந்தார். அங்கிருந்து விரைந்து அகன்றார். கொச்சிக்குச் சென்றார். இறையருளைப் பாடி மகிழ்ந்தார். பிறகு பழனிக்கு வந்து இடும்பனுக்குச் சிலர் இறைச்சி நிவேதித்தலை யறிந்தார். வருந்தியது மனம்.

பிறிதொரு சமயம் இராமநாதபுரம் சென்றார். சேதுபதியைக் காண அவாவியது மனம். அடிகளார் சிறப்பைப் பிறர்மூலம் அறிந்திருந்தும் அரசர் யாது காரணத்தாலோ அவைக்கு அழைத்திலர். ஒருநாள் மன்னர் ''கண்வின்பெண் பொன் பண் கனி'' எனும் ஒரு வெண்பாவிற்கு உரிய இறுதியடியை ஏட்டில் எழுதி, இப்பாட்டை நிறைவுசெயச் சொல்லும், பார்ப்போம்.

> ''முருகனுக்கு மூவாறு முன்புதொட்டுக் காத்தல்
> உருகுமயல் ஈதல் உறுபூண் - பெருகுசெவி
> உண்மகிழ்ச்சி சேர்ப்ப துலகதனைச் சூழவிடல்
> கண்வின் பெண்பொன் பண்கனி''

என்று அநாயாசமாகப்பாடி அப்போதே நிறைவு செய்தார்.

முருகனுக்கு மூவாறு கண். முன்பு தொட்டுக் காத்தல் வின். உருகுமயல் ஈதல் (வள்ளியெனும்) பெண். உறுபூண் பொன், பெருகு செவியுள் மகிழ்ச்சி சேர்ப்பது பண், உலகதனைச்

சூழவிடல் (மாதுளங்) கனி. இப்படி நிரல் நிரைப்பொருள்கோள் தோன்றப் பாடினார்.

அங்கிருந்து சில அன்பர்கள் வேண்டுகோளின்படி 'கொழும்பிற்குச்' சென்றார். அங்கு உத்தமர் பலரால் உபசரிக்கப் பெற்றார். பிறகு தேவகோட்டை பெருமக்களுள் ஒருவர் மேலவீடு வீர. லெ. சிதம்பரம் செட்டியார் அடிகளை ஆர்வம் காட்டி வரவேற்றார். அவருடைய குடும்பத்திற்கு மகப்பேறு அருளுமாறு குன்றக்குடிக் குமரன்மேல் பயன்தரும் ஒரு 'பிரபந்தம்' பாடினார்.

பிறகு நெடுங்குளம் சென்றுவிட்டு கோட்டூர்க்குச் சென்று விட்டுப் பழனிக்குப் புறப்பட்டார். பழனியில் ''பழனித் திருவாயிரம்'' பாடினார். அந்த ஆயிரத்துள் சேர்ந்த நூறு பாடல் ''பழனிப்பிள்ளைத்தமிழ்''. அதனிலுள்ள ஒவ்வொரு பாடலும் உள்ளத்தைத் தொட்டுப் பல செய்திகளை உபதேசிக்கின்றன.

பின்னர் திருவரங்கம் சென்று அரங்கன் அருளாக்கங்களை திருவரங்கத் திருவாயிரம் எனும் பிரபந்தத்தில் அறிவித்தார்.

மதுரைப்பாக்கம் என்று ஒரு கிராமம் அப்பகுதியில் வேமன்ன குலத்தில் உதித்தவர், துரைசாமி ரெட்டியார். அவர் அடிகளை வணங்கி எம்மூர்க்கு எழுந்தருளி எம்மை உய்வித்தருளும். அதன்பின் திருவாமாத்தூரில் என்றும் அமர்ந்து இரும் என்று விநயம் அதிகம் காட்டி வேண்டினார். அங்குதான் திரு ஆமாத்தூத் தலபுராணம், புலவர் புராணம் முதலிய தூய பல நூல்களைத் தோற்றுவித்தார்.

எல்லைதாண்டா நியமத்துடன், அங்குத்தங்கியிருந்து தவம் இயற்றினார். அதன் பயனாக இலட்சக்கணக்கான பாடல்கள் கொண்ட பல நூற்களையருளிய அருட்பெருந்திருவான அடிகளார் கலி ஐயாயிரம் விளம்பி யாண்டு ஆனித்திங்கள் திருவோணத்தன்று திருவருட்பேறு எய்தினர்.

அடிகளார் வழி வழி வந்த மாணவர்கள் பலர் அமுதினும் இனிக்கும் அருந்தமிழ் சுவைக்கும் அறிஞர் பெருமக்களாய் இன்று எங்கும் இன்புற்று இருக்கின்றனர்.

# சுவாமிகள் காட்டும் திருமாலின் தத்துவக்கோட்பாடு

த. சந்திரகுமார்

இயற்கைப் பொருட்களுக்கு உள்ளுறையாக, அதாவது அந்தர்யாமியாக இருக்கும் கடவுள் திருமாலாகும் என்பது அத்தெய்வத்தை முழுமுதற் கடவுளாகப் போற்றி வழிபடும் வைணவர்களின் கருத்தாகும். விஷ்ணு என்பதற்கு எங்கும் நிறைந்து இருத்தல் என்பது பொருள். ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நிறைந்து அப்பொருளை காக்கும் பரம்பொருள் விஷ்ணுவாகும். இயற்கை இறைவனது வடிவம் என்பதினால் ''யஸ்யபிருத்வி சரீரம்'' என்று வேதம் கூறுகிறது. உலகத்தில் வெளிச்சத்தைக் காட்டிலும் அதிக அளவில் வியாபித்து இடம் பெற்றிருப்பது இருள்சூழ்ந்த அண்டவெளியாகும். அடர்ந்த இருளே கருமை நிறமாகும். அதுவே அவரின் சரீரம் எனக் கொள்ளப்பட்டதினால் மால் என வழங்கலாயிற்று. மிக அடர்ந்த கருமைநிறத்தினைப் பசுமை எனக்கொள்ளப்பட்டது. இவைகளை மனத்தில் நிறுத்திதான் ''பச்சை மாமாலை போல் மேனி'' என்று விளக்கினர். இங்கே மலை என்று கூறப்பட்டது அண்ட வெளியாகிய மலைதான். மாயையாகிய உலகத்தில் உறைபவனை மாயோன் என்றழைத்தனர். கரிய நிறமுடையவன் என்றும் இயற்கைக்குள் உறையும் இறைவனாகிய நுட்பப்பொருளை மாயோன் என்றும் அழைத்தனர் எனலாம். தொல்காப்பியர் 'மாயோன் மேய காடுறை உலகமும்' (தொல். பொருள். அகத். நூற்பா 5) என்றார். முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் பசுக்களை மேய்த்தும், மூங்கிலைக் கொண்டு இசையெழுப்பியும், இறைவழிபாட்டினைத் தொடர்ந்ததினால் வைணவம் முல்லை நிலத்தில் தோன்றிற்று. சிவப்பு நிறமான சிவன் வெளிச்சத்திற்கு உவமையாகக் கொள்ளப்பட்டார். ''செக்கரை நேர் சிவன்'' (ந. கி. க. 63) என்று சுவாமிகள் கூறுவது நோக்கற்குரியது. கரியவனான திருமாலுக்கு எதிராகச் சிவப்பு நிறமான சிவன்

எனும் பரம்பொருள் கொள்ளப்பட்டது. இருளும் வெளிச்சமும் சேர்ந்த அண்டவெளி இருபெரும் தெய்வங்களுக்கு உவமையாகக் கொள்ளப்பட்டது.

தண்டபாணி சுவாமிகள் (22 நவம்பர் 1839-5 ஜுலை 1898) திருமாலைப் போற்றி வழிபட்ட பாடல்களில் இறைவனின் பண்பையும், குணங்களையும்பற்றி எங்ஙனம்போற்றிப் புகழ்கிறார் என்பதைச் சில பாடல்களின் துணை கொண்டு, ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். திருமாலின் விபவ சிறப்புக்களான அவதாரச் சிறப்புக்களைப் பற்றி இங்கு விவரிக்கப்படவில்லை. எனினும் ஆங்காங்கே தேவைப்படும் போது கையாளப்பட்டிருக் கிறது. ஆகையால் பரத்துவத்தில் உள்ள இறைவனை அதாவது பர வாசுதேவனான திருமாலை இவர் எவ்வாறு விளக்குகிறார் என்பதைப் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சுவாமிகள் முழுநீறு அணிந்து அக்கமாலை பூண்டு சிவனிடம் பக்தி பூண்டிருந்தார் (ந.கி.க.50). எனினும் திருமாலின் மீது அளவு கடந்த இறையன்பினைச் செலுத்தினர் எனலாம். "மேனிமுற்றும் நீறணிந்து உருத்திரக்கணங்கள் போல் மின்னும் என்னை" என்று பாடினார். சிவபெருமான் முதலான பல தெய்வங்களின் மீது பல ஆயிரம் பாடல்களைப் பாடிய பின்னரும் தம் வறுமையும் நோயும் தீரத் திருமாலைப் போற்றிப் பரவுகிறார் (மாதவன், 1994:290). "செங்கல்லின் பொன் செய் சிவன் முதல் பலர்பால் அங்கண் மா ஞாலத்து அழலினும் கொடிய மிடி அறக்களைதல் வேண்டிப் போற்றி" (ந.கி.க.99) என்று பாடுகிறார். நீலகண்டனான சிவபெருமான், மன்மதன், விநாயகர், நான்முகன் போன்ற தெய்வங்கள் திருமாலை வழிபட்டனர் என்பதினை, "கண்டன் கரியன், முழுதும் கரியன், கடகரியன், அண்டம் கடந்தவன் ஆகிய தேவர் அனைவரும் நின் தொண்டபன்பினால் உய்ந்துளாரே' என்று பாடுகிறார் (திருமகள் அ.58). தெளிவுமிக்க சிவபெருமான் முதலான கடவுளர் யாவரும் திருமாலைத் தொழுதனர் என்பதை "தெருள்மலிதரு சிவன் முதலிய கடவுளர் செயசெய என வழிபட" (ந.கி க.1) என்று பாடுகிறார். திருமாலின் கிருபையினால் "நிலவணி சடையான், அன்ன வாகனன்,அம்பொனு ார்க்கிழவன்" (இந்திரன்), போன்ற தேவர்கள் இன்புற்றனர் என்று பாடுகிறார் (ந.கி.க.20). "சிவன் ஆதியர் தவம் நாடிய சீலர்" (ந கி. க 69) என்கிறார். மாலைத் தவிர வேறு தெய்வமில்லை என்பதை

'மாலன்ன தெய்வம் மற்றில்லாமை'' (திருமகள். அ. 21) என்று கூறுகிறார்.

திருமால் எழுந்தருளியிருக்கும் திருவல்லிக்கேணி, திருவரங்கம், திருவயிந்திரபுரம், நாகப்பட்டினம், வேங்கடம், குடந்தை, காஞ்சி, திருவனந்தபுரம், திருக்கண்ணபுரம், போன்ற திருப்பதிகளுக்கு, ஆழ்வார்கள் போன்று, ஸ்தலம்தோறும் சென்று துதித்தார். வீரகேரளம் புதூரில் எழுந்தருளியுள்ள நவநீதகிருட்டிணனைப் பற்றிக் கலம்பக பாங்கில் அமைந்த பாடல்களை இயற்றினார் மாதவன், 1994).

இறைவனின் குணநலன்களைப் போற்றி சுவாமிகள் பலவாறு எடுத்துரைக்கின்றார். அழிவில்லாதவன் என்றும் தன்னைச் சரணடைந்தவர்களைக் காப்பவன் என்ற பொருளில் ''அச்சுதநாதன்'' (ந.கி.க.100) என்றும் போற்றுகிறார். கருமை நிறத்தவன் என்பதினால் அஞ்சனன் (ந.கி.க.63) என்றார். ''கார் வண்ணன்'' (திருவாய்மொழி 5-1-11), ''கரிய முகில் வண்ணன், கடல் வண்ணன்'' (5-2-3) போன்ற பாடல்களால் நம்மாழ்வார் திருமாலைப் போற்றுகின்றார். ''-ஓர் அஞ்சன நீலமே'' என்று மற்றொரு இடத்தில் (3-8-8) நம்மாழ்வார் கூறுகிறார். இந்த வகையில் சுவாமிகளும் மாலை பலவாறு துதிக்கின்றார். கருமேகம் போன்ற பிரான் என்பதினால் 'மைக்கனமே நிகர் கிட்டிணன்' என்றார் சுவாமிகள். இங்கே திருமால் கரிய நிறத்தவன் (ந.கி.க.58) என்பதினால் கிருஷ்ணன் என்ற வடசொல்லால் அழைக்கப்பட்டு கிருட்டிணன் அல்லது கிட்டிணன் ஆகின்றார். ஆதிக்கடவுள் என்பதினால் ஆதிமால் (ந.கி.க.26) என்றும், தொல்லோன் (ந:கி.க.21) என்றும் குறிப்பிடுகிறார். நீலமேகம் போன்ற நிறத்துடன் கூடிய மேனி கொண்ட திருமால் ''புயல் தேடும் மேனிப் புருடோத்தமன்'' (ந.கி.க.11) என்றார். இங்கே பாகவத பொழிவு எடுத்தாளப்பட்டிருக்கிறது. 'கரும்புயல் வண்ணத் தண்ணல்' என்றும், 'பாற்றிரைத் துயிலும் பச்சைப் பசும்புயல்' (பாக. 10-1-24,33; மாதவன்,1994:106) என்றும் கூறுவதிலிருந்து புலப்படுகிறது. மேலும் ''புயல்புரையும் நெடுமேனி'' (ந.கி.க.47) என்றார். ''நீலமால் வரை'' (ந.கி.க.7) என்றார். நீலநிறமுடைய பெரிய மலை என்றார். நீலமேக வண்ணன் என்பதினால் ' வான் ஏய்த்த மேனி'' (ந.கி.க.76) பெருநீலவண்ணன் (திருமகள், அ. 9), ''முகிற்றிருமேனி'' (வடமலை வளர் நெடுமால் 8), ''கனமான

மேனி'' (திருமகள்,அ.85), 'கொண்டல்' (ந.கி.க.23), ''மஞ்சு நேர்கரிய மேனியாய்'' (திருவயிந்தபுரத்து இறைவன்,3). அதனால் மேலும் ''கார் அனான்'' (ந.கி.க.58) என்று பலவாறாகக் குறிப்பிடுகிறார். காயாமலர்ப் பூங்கொத்து போன்ற நீலவண்ணன் என்பதினால் ''காசைமென் பூந்துணர் வண்ணன்'' (ந.கி.க.55) என்று பாடுகிறார். ''மணிகுன்ற வண்ணன்'' (ந.கி.க. 28) என்றும் பாடுகிறார்.

இங்கே மலையும் மேகமும் அடுத்தடுத்து கையாளப்படுவது உயர்வினைக் காட்டும் பண்பை விளக்குகிறது. கரிய நிறத்தையும் நீல நிறத்தினையும் அடுத்தடுத்து கையாளப்படுவது சியாமளம் என்ற வடசொல்லான கருமை கலந்த நீலத்தை உணர்த்துவதாகப் புலப்படுகிறது. நீலன், கரியவன் பொருளை அடுத்தடுத்து உணர்த்தப்படுவதை நாம் நோக்கவேண்டும்.

திருமால் உறைவிடமான பாற்கடலை மிக அழகாகப் பாடுகிறார். நீரில் வாழ்பவன் என்ற பொருளில் நார் அயணன் என்றும் அழைக்கப்பட்டதினால் நாராயணன் என்றும், நாரணன் என்றும் அழைப்பதுண்டு. ''சீதளநீர் பதத்தானே'' (ந.கி.க 13) என்ற வரிகள் குளிர்ச்சி நிறைந்த நீர் போன்ற பதத்தினை உடையவன் என்பது இங்கு நோக்கற்குறியது. பாற்கடலில் பள்ளி கொண்ட பெம்மானை ஆங்காங்கே பாடுகின்றார். ''சீகரவாரியில் விரித்த பாம்பணையில் துயில் கூறும் செங்கண்மால்'' (திரு வைகுந்தப்பதியுள்ளான்,7), ''நெடும்கடல்'' (வடமலை வளர் நெடுமால், 6), ''வெண்கடல்'' (திருமகள்,அ.96), ''வெண்பாற்கடல்'' (திருமகள்,அ.53), ''அலைகடற் பள்ளிகொண்டோன்'' (திருமகள் அ.26), ''பயவாரிப் பள்ளி கொண்டுள்ளான்'' (தி.அ.70) ''பாற்கடலில் பொய்துயில்'' (ந. கி. க. 5) கொள்பவர், ''கடல் மேற்துயில் கூர்ந்தவனே'' (தி. அ. 37) போன்ற பாடல் வரிகள் திருமாலின் இருப்பிடமான நெடுங்கடலை புலப்படுத்துகின்றன. பத்து அவதாரங்களை எடுத்த திருமாலை ''ஈர்ஐந்தாய் பாற் கடலினிடையே வைகும்'' என்று வில்லிபுத்தூர் ஆழ்வார் கூறியதையும் நினைவில் கொள்ள வேண்டும் (வில்லிபாரதம், 676). பாம்பணையில் துயில் கொள்பவராகப் ''பாம்பு அணைத்துயில் கொண்ட பச்சை நெடுமேனி'' (ந. கி. க. 94), ''மாசுணப்பாயலின் மீது துயில்பவன்'' (ந. கி. க. 3), ''விரிந்த அராவணை மேற் துயில்வார்'' (தி. அ. 31), ''பரந்தரவாய் வெண்பாயின் மேல்''.

(தி. அ. 92), ''வெள் அரவப்பையிடை யோகத்துயில் கூறும் அண்ணல்'' (தி.அ.45), ''ஆலிலையிற் பெரும் பாம்பில் அறிந்துயில்'' (தி. அ. 59), புள்ளிகளுடைய பாம்பாகிய ஆதிசேடன் மேல் துயிலும் பெருமான் என்பதைத் ''துத்தி அராவணைப் பள்ளி கொண்டாய்'' (தி. அ. 62) என்று கூறுகிறார். ''நாகமிசை படுத்தியங்குந்திருமால்'' (திருமகள். அ. 48), ''அரவினில் துயிலும் தேவே'' (திருமால் பத்துப் பதிகம் 2), ''வாளரவில் துயிலும் பரனே'' (வடமலை வளர் நெடுமால் 6),'' பைத்தலைப் பாம்பணை மீதில் அமரர் போற்றப் பள்ளி கொள்ளும் பெருமாள்'' (ஒரு நூற்றெண்பதியிடத்தும் ஒளிரும் மால் 4), ''அரவணைமிசை துயில் நெடியோன்'' (அடியருள் மருவிய திருமால் 3) போன்ற பாடல்வரிகள் திருமாலின் பாம்பு படுக்கை பற்றி விளக்குவனவாக ஆங்காங்கே கையாளப் பட்டிருக்கின்றன. நெடுங்கடல் என்பது விரிந்து பரவிக்கிடக்கும் ஆகாயக்கடலை குறிப்பிடுவதாகும். ஆகாயத்தில் புள்ளிகள் போன்று ஒளிர்விடும் நட்சத்திரக் கூட்டம் பால்வெளியாகி வர்ணனைக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. ''மணி கொண்ட நெடுங் கடல்'' (அருணாசல புராணம், பாயிரம் – 7) என்பது இரத்தினங்களுக்கு இருப்பிடமாகிய நீண்ட கடல் என்ற கூற்றை நாம் பார்க்க வேண்டும். இந்த பால்வெளி வளைந்து வளைந்து செல்லும் சுற்றுப்பாதை (Orbit) ஆகக் கொண்டு ஓர் ஐவாய் அரவு என்ற பாம்பிற்கு உவமையாகக் கொள்ளப்பட்டு விண்ணில் திருமால் யோக நித்திரையில் ஆழ்ந்திருப்பதாகப் பெரியோர் கருதினர் ஆயிரந்தலைகட்கு அறிகுறியாக ஐந்துதலை நாகம் கற்பிக்கப்பட்டுள்ளது. நட்சத்திரக் கூட்டங்களுக்கு அதிபதியாகச் சூரியதேவனைக் கருதினர். திருமால் பன்னிரண்டு சூரியர்களில் ஒருவராகக் கொள்ளப்பட்டதினால் சூரியனுக்கு அளிக்கப் பட்ட பண்புகள் திருமாலுக்கும் அளித்தனர். காலை, உச்சிப்பொழுது, மாலை எனச் சூரியன் ஆகாயத்தில் வலம் வருவதை மூன்று அடிகளால் அளக்கிறார் என்ற கருத்து மாலுக்கும் கொள்ளப்பட்டது. சதபத பிரமாணத்தில் இதற்குரிய வாமன–திருவிக்கிரமன் புராணக்கதை தோன்றியது. சூரிய நாராயணன் பற்றிய தத்துவக் கோட்பாடு தோன்றலாயிற்று. அண்டங்களுக்கு ஒளியைத் தரும் சூரியதேவன் திருமாலும் ஆகின்றார். அகன்ற விரிந்த பிரபஞ்சக் கடலின் மீது ''நெடும்தேர் விட்ட விண்ணவனே'' (தி.அ. 49) என்று பாடுகிறார். மேலும் பால்வெளியாகிய கடல்நீருக்கு உவமையாக நாகம்

கொள்ளப்பட்டது. அந் நாகம் என்பது ஆதிசேடன் அல்லது அனந்தநாகம் ஆகும். ஆதிசேடனைப் 'பணி அரசு' என்று அழைக்கிறான் (தி அ 78). துயில் கொள்ளும் பெருமானை யோகத்துயில் கொள்பவர் என்றும், 'பொய்த்துயில் கொள்பவர்' என்றும் முன்னோர்கள் கருதினர்.

இவ்வையகமே சரீரமாகக் கருதப்பட்டதினால் நீண்ட மேனியன் என்றும் நெடுமால் என்றும் ஆன்றோர்கள் அழைத்தனர். உலக ஆன்மாக்கள் எம்பெருமானின் உடலில் ஐக்கியம் என்ற விசிட்டாத்வைதத் தத்துவமும் இதில் அடக்கம் பெறுகிறது. ''செங்கண் நெடுமால்'' (ந. கி. க. 30) என்றும், ''நெடியோன்'' (தி. அ. 97), ''நெடிய மாயன்'' என்றும் குறிப்பிடுகின்றார். செங்கண்மால் என்று பரிபாடல் (3-60) குறிப்பிடுவதை இங்கு நோக்க வேண்டும். ''நெடிய கரியமேனி'' என்று பெரிய திருமொழி (9-5--7) பகர்வதையும் கருத்தில் கொள்ள வேண்டும். அளவு கடந்த வயாமோவரம் உடையவன் என்ற பொருளில் திருவாய்மொழியில் (2-7-13) நம்மாழ்வார் உரைக்கின்றார். தன்னுள் அனைத்துலகமும் உள்ள என்ற வியாபகத் தன்மை விளக்கப்படுகிறது. உயர்ந்த திருமேனியன் என்பது விண்ணளாவிய மேனியன் என்ற குறிப்பொருளை உணர்த்துகிறது. விண்ணும் மண்ணும் விரிந்து பரந்து நின்ற சிவனின் அவதாரச் சிறப்பான அண்ணாமலையார் தத்துவக் கோட்பாடு திருமாலுக்கும் விளக்கப் பட்டிருப்பதைக் காணலாம். அடிமுடி காண இயலாத இலிங்கோத்பவராக சோதி ரூபமாக நின்ற சிவபெருமான் தொடர்பான விளக்கம் திருமாலுக்கு வழங்கப் பட்டதினால் நெடிய திருமேனியானான்.

விண்ணைத் தாளால் அளந்தான் என்று கூறப்படுவதிலிருந்து திருமாலின் நெடிய திருமேனி புலப்படுகிறது. மூன்று அடிகளால் மூவேழு உலகங்களையும் கடந்தான் என்பது இருக்குவேத காலத்திலேயே விசுவருபத் திருமாலைப் பற்றிக் குறிப்பு உள்ளது. ஓங்கி உலகளந்த உத்தமன் (திருப்பாவை 3) என்றும் அவன் பெயர் பெற்றான்.

''மண்ணும் நீரும் எரியும் நல்வாயுவும்
விண்ணுமாய் விரியும் எம்பிரானையே'' (திருவாய் 1-10-2)

பூமி முதலான பஞ்சபூதங்களையும் சரீரமாகப் பரிணமித்தவனாய்க் கொண்டு விரியும் எம்பிரான் என்று நம்மாழ்வார்

போற்றுகின்றார். இக்கருத்தினையே சுவாமிகளும் உரைக்கின்றார். ''விண்ணும் புலியும் துணைத்தான் கவர்வென்று ஓர்ந்தே'' (ந. கி. க. 31), ''விண்ணும் மண்ணும் தாளால் அளந்தறிந்தாய்'' (ந கி. க. 2), ''விசும்பொடு பார்அளந்தாய்'' (தி. அ. 6.33) என்று பலவாறாகப் பாடுகின்றார். தேவலோகமும் பூலோகமும் எம்பெருமானாகி உம் மலரடிகளால் அளந்து திருவிக்கிரமனாய் நின்ற காரணத்தை நன்கு ஆராய்ந்தேன் என்று சுவாமிகள் கருதினார் (மாதவன், 1994:158).

எம்பெருமானுக்கு வாகனமாக இருப்பது அவரின் கருடப் பரியாகும் (திருவயிந்திர புரத்து இறைவன் 10). வைணவர்கள் கருடனைப் பெரிய திருவடியென்றே வழங்குவார்கள். ''தூவி அம்புள் உடையான்'' என்று திருவாய்மொழியில் (4-5-4) நம்மாழ்வார் கூறுகின்றார். ''பண்கொண்ட புள்ளின் சிறகொலி'' என்றும் மேலும் நம்மாழ்வார் குறிப்பிடுகின்றார் (3-8-5). சாமவேதங்களை வடிவாகக் கொண்ட சிறகின் கானம் என்று உரையாசிரியர் சடகோபராமானுசதாசன் விளக்குகிறார்.விரோதிகளுக்குப் பயங்கரத்தை அளிக்கக்கூடிய சிறகு கொண்டவர் என்பதினால் 'வெம்சிறைபுள்' (திருவாய்மொழி 1-4-1) என்றும், 'அடுபுள்' (1-6-10) என்றும் நம்மாழ்வார் பாடுகிறார். சுவாமிகளும் 'அடற்குருடன்' என்று திருமகள் அந்தாதி (55)யில் இக்கருத்தினையே வலியுறுத்திக் கூறுகின்றார். 'செஞ்சிறைப் புட்பரிமேல்' (ந. கி. க. 8) ஊர்ந்துவரும் பெருமான் என்கிறார். வெண்ணிறக் கழுத்தினைக் கொண்ட கருடப் பறவை மீதேறி ஆகாயத்தில் தோன்றுபவன் என்பதை 'வெண்களங்கொள் ககம் ஒன்றில் ஊர்பவன் நாரணன் என்று பாடுகிறார் (ந. கி. க. 26-32). மற்றொரு பாடலில் ''புள்ளில் உலாவும் ஓய்யாரன்'' (ந. கி. க. 39) என்றும் திருமகளுடன் உலாவும் பெருமான் என்பதை 'புட்பரிமேல் திருவொடு நாரணன்' (ந. கி. க. 14) என்றும் குறிப்பிடுகின்றார். கருடனே பறவை-யினங்களின் அரசன் என்பதை, 'பறவை அரசு' (ந. கி. க. 66), ''புள்ளரசு'' (தி. அ. 18), ''கோக்கலுழன்'' (தி. அ. 81), என்று குறிப்பிடுகிறார். ''வீதனை ஊர் வீர ஐயனே'' (ந. கி. க, 13) என்று பாடும் மற்றொரு வரிகள் இக்கருத்தினையே குறிப்பிடுவதாக உள்ளது.

வேதகாலத்தில் கருடபகவானை காருத்மான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சூரிய தேவனைப் பெரும் பறவையாக வேதகாலத்தில் கருதினர். சூரிய ஒளியே இவருக்கு வாகனமாக

கொள்ளப்பட்டதினால் மாலின் வேகம் அதிகரித்தது. ஒளியின் வேகத்தைக் காட்டிலும் மிக துரிதமானது மனோ வேகம். இத்தகைய வேகங்களுக்குக் குறியீடே கருடாழ்வார். உயிர்களின் இன்னல்களைக் களைந்து காக்கும் கடவுளாகத் திருமாலைக் (சூரியனை) கொண்டதினால் ''ஆனையொன்று மூலமென அந்நாள் அழைத்திட்ட'' போது விரைந்து வந்து களிறினை முதலையிடம் இருந்து காத்து வரமளித்தார் என்பது புராணக் கதை. உயிர்களைக் காக்க மனோவேகமென பறந்து வந்தார் என்பதே கருட வாகனரின் தத்துவமாகும். சுவாமிகள் இந் நிகழ்ச்சியினைப் பாடல் வரிகளால் பலவாறு இயம்புகிறார். 'குஞ்சரம் புரப்ப விரைந்த மாதிரன்' (ந. கி. க. 42), 'கடம் கவிழ்க்கும் மத்தகயம் காத்த வரதன்' (ந. கி. க 97) 'வாரணம் காத்த பெருமாள்' (தி அ. 23); (திருமகள். அ. 23), ''மத்தக வேழம் புரந்த பிரான் (தி. அ. 41), 'வாவியிற் கதறும் ஆனை மகிழ்வுற' (திருமால் பத்துப்பதிகம் 8), 'மூலம் எனக் கூவியதால் முதலையைக் கொன்று ஆணையின் ஓர் காலதனில் புண்ஒழித்து கருணை புரிந்த' (வில்லிபுத்தூர் வேதியன் 8), ''களிறு கோவெனக் கதறிடச் சுரந்தநின் கருணை'' (அனந்தையிற் குடிகொள்ளும் அரசன் 8) போன்ற பல்வேறு பாடல் வரிகளால் திருமாலின் கருணையை விளக்குகிறார். உயிர்களின் இன்னல் களைக் களைய அவர் எடுத்த அவதாரங்கள் பல. மீன், ஆமை, ஏனம் முதல் வெவ்வேறு உருவச் சமைந்து உற்று' என்று சுவாமிகள் பாடுகிறார் (ந. கி. க. 1). கல்தூணிலிருந்து வெளிப் பட்டு இரணியனை வதம் செய்து அவனின் மைந்தனுக்குக் கிருபை நல்கினார். ''வன்தூண் இடத்தில் இருந்தும் கனகன் மதலைக்கு இரங்கி வரும்பிரான்'' (ந. கி. க. 96) என்று பாடுகிறார். நரசிங்கத் திருவுருவாய்ச் சென்று ஆட் கொண்டருளியது பற்றி 'ஒரு சியமாச்சென்று அளித்தாய்' (ந. கி. க. 1) என்கிறார். கிருட்டிணனாக அவதாரம் செய்து அவர் செய்த கிருபைகள் எத்தனையோ, உயிரினங்களைக் காக்கும் பொருட்டு 'கோவர்த்தன மலையைத் தாங்கியும், கானவேய் இசைக் கண்ணனாக (ந. கி. க. 33)வும், உயிர்களைப் பலிகொண்ட காலிங்கன் என்னும் நச்சுப்பாம்பை அடக்கி, யமுனை நதி தீரத்தில் சாந்தந்தை நிறுவியவனாகவும், கம்சன் ஏவிய பல அசுரர்களை தம் சக்தியால் அழித்திட்டபோதும் அவரின் காக்கும் தொழில் புலப்படுகிறது.

**முடிவுரை**

மேற்கூறப்பட்ட கருத்துக்களைக் கொண்டு நோக்குமிடத்து சுவாமிகள் திருமால் மீது கொண்டிருந்த பக்தி நெறியும் புலமைத்

தன்மையும் வெகுவாக வெளிப்படுகின்றன. தமிழ் இலக்கியங் களை நன்கு தேர்ந்து, புராணக்கருத்துக்களை ஆங்காங்கே கையாண்டு, நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார் இவர். சிவநெறிச் செல்வராக இருந்தபோதிலும், திருமாலுக்கே உரிய மாட்சிமையைப் பெரிதும் எடுத்துக்கூறி இருபெரும் தெய்வங் களையும் சமநிலையில் கருதினர் எனலாம். சுவாமிகளின் பாடல் களில் கிருட்டிண அவதாரசிறப்புக்களைப்பலவாறு புகழ்கின்றார். திருமால் பக்திதான் கிருட்டிண பக்தியாக விளக்கப்பட்டிருக் கிறது. பெரியாழ்வார் திருமால்நெறி என்றாலே அது கிருட்டிணனின் மீது கொண்ட ஆழ்ந்த அன்புதான் என்று கொள்பவர். அங்ஙனமே சுவாமிகளும் ஆங்காங்கே கிருட்டிணரின் லீலைகளைப் பலவாறு போற்றுகின்றார். விசிட்டாஅத்வைதக் கருத்துக்களை மிகவும் நயமாகவும் ஆழமாகவும் கையாள்கிறார்.

**மேற்கோள் நூல்கள்**


1. தண்டபாணி சுவாமிகள் (ஆ.), வே. இரா. மாதவன் (பதி.), வீரகேரளம் புதூர் நவநீதகிருட்டிணன் கலம்பகம் (ந.கி.க), பாவை வெளியீட்டகம், தமிழ்ப்பல்கலைக்கழகக் குடியிருப்பு, தஞ்சை, 1994.
2. தண்டபாணிசுவாமிகள் (ஆ.), வே. இரா. மாதவன் (பதி.), திவ்விய தம்பதியர் புகழ்மாலை (திருமால் அந்தாதி – தி.அ., திருமகள் அந்தாதி-திருமகள். அ., திருமால் பத்துப் பதிகம், வடமலை வளர்நெடுமால், காஞ்சி வரதராசன், திருவயிந்திரபுரத்து இறைவன், வில்லிபுத்தூர் வேதியன், திருவைகுந்தைப் பதியுள்ளான், வாணுமாமலைமாயன், அனந்தையிற் குடிகொள்ளும் அரசன், ஒரு நூற்றெண்பதி யிடத்தும் ஒளிரும் மால், அடியருள் மருவிய திருமால்), பாவை வெளியீட்டகம், தமிழ்ப்பல்கலைக்கழகக் குடியிருப்பு, தஞ்சை.
3. சடகோபராமானுசதாசன் (பதி.), திருவாய்மொழியின் உரை, ஆராவமுது பிரசுர நிலையம், திருப்பெரும்புதூர், 1990.
4. சைவ எல்லப்ப நாவலரின் 'அருணாசல புராணம்' பக்கம். 117, கொ. லோகநாத முதலியார் மனோன்மணிவிலாச அச்சுக்கூடம், சென்னை, 1903.
5. வில்லிபுத்தூர் ஆழ்வார், வில்லிபாரம், வர்த்தமானன் பதிப்பகம், மகாலிங்கபுரம், சென்னை, 1985.

# சூரிய மாலையில் வாழ்வியல் அறங்கள்

இரா. சந்திரசேகரன்

சூரிய வழிபாடு மிகத் தொன்மையான வழிபாட்டு மரபு களுள் ஒன்று. அறுவகைச் சமயங்களான சௌரம், சைவம், சாக்தம், வைணவம், காணாபத்யம், கௌமாரம் ஆகியவற்றுள் சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு உருவான சமயம் சௌரம். இந்த ஆறு சமயங்களுடன் 'சமயாதீதம்' என்ற ஒன்றையும் சேர்த்து, குருபரதத்துவத்தை மையமாகக் கொண்டு அமைக்கப்படும் மரபும் உண்டு.

> ''அநந்த பேதத்து அறுவகைச் சமயமும்
> அவை முழு தொருவலும் தழுவலுமாகும்
> அதீதம் ஒன்றும் ஆன ஏழும்
> வழிபடற் பொருட்டே வாரம் ஏழாயவே''

என்பது தண்டபாணி சுவாமிகளின் சத்திய சூத்திரம். சூரியனை முழுப்பரம் பொருளாக வழிபடும் சௌர மரபு சமய மரபாக உருப்பெறுவதற்கு முன்னயேயே, பழங்குடி மரபுகளிலேயே, உலகம் முழுதும் சூரியனை வழிபடும் தன்மை பரவலாக இருந் திருக்கிறது. இயற்கை வழிபாட்டு மரபின் உட்கூறாக இது இருந்தது. சிலப்பதிகாரத்தில் ''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்'' என்று அமையும் இயற்கை வழிபாடும் கூட இத்தகையதே பிற்காலத்தில் இத்தகைய இயற்கை வழிபாட்டு மரபில், பல்வேறு புராணக் கற்பிதங்கள் உள் நுழைந்தன. பன்னிரு சூரியர்கள், சிவசூரியன், சூரிய நாராயணன் என்பது போல பல உள்ளீடுகள் எழுந்தன.

அதன் தொடர்ச்சியாக சூரியனை மும்மூர்த்திகளாகக் காணும் நம்பிக்கை மரபு உருவாயிற்று. அதிகாலையில் பிரம்மனாகவும், நடுப்பகல் (உச்சிப்) பொழுதில் சிவபெருமானாக வும், அந்திப்பொழுதில் திருமாலாகவும் சூரியன் கருதப்படுகிறான்.

தண்டபாணி சுவாமிகள் நாள்தோறும் சூரியனை வழி படுவதை வழக்கமாகக் கொண்டிருந்தவர். சூரிய வழிபாடு

தொடர்பாக - கௌமார நெறிக் கேற்றவாறு பல பாடல்கள் பாடியுள்ளார். சௌர சூத்திரம், சூரியமாலை இரவியெழுபது, சூரியன் பதிகம், சூரியன் எழுகூற்றிருக்கை, ஏழாயிரப் பிரபந்தத்தில் சூரியப்பதிகம் என்று பல பாடல்கள் தண்டபாணி சுவாமிகள் சூரிய வழிபாட்டில் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டும். "சுடரவனே முதலாய கிரகம்" என்றும்,

"வெளி முழுதும் தன்னரசு நாடாக் கொண்டு
விதி உடு ஆதிய பிறவும் விளங்கச் செய்து
களிபெறும் எச்சிவர்கட்கும் கண்களாகிக்
கருத்தாகிப் பொதுமுதலாம் கருணைத்தெய்வம்"

என்றும்,

"இரவினிற் பரிதி ஏதென்று ஈனர் பலர் சொல்லுவார்கள்
கர வுறும் மதிக்கும் வெள்ளி ஆதிமீன்களுக்கும் திக்கும்
அர தனங்களுக்கும் கண்கள் எவைக்கும்நல் அவிர்ச்சியீந்த
வர மறி வாரோ"

என்றும் சூரியனின் முழுமுதல் பேராற்றலை அவர் பாடுவார்.

தண்டபாணி சுவாமிகள் எழுதிய சூரியமாலை, முப்பது பாடல்கள் கொண்ட துதி நூல். உதயம் (10 பாடல்கள்), உச்சம் (10 பாடல்கள்) அத்தமனம் (10 பாடல்கள்) என்ற வகையில் (பிரம்மன், சிவன், திருமால் என்பதான நம்பிக்கை. ஆனால் நூலில் உட்குறிப்பு இல்லை) சூரியனை முன்னிருத்தி பாடப்பட்ட பாடல்கள் இவை. பொதுவாக இத்தகைய துதி நூல்களில், கருத்தியல் கட்டமைப்பானது, தொழுவதற் குரிய கடவுளின் ஆற்றல்; தொழுபவனுடைய கீழ்மை-பிறவியின் துன்பம்; இறைவனை ஏற்றுக் கொள்ளுமாறு விண்ணப்பம் செய்தல் என்ற வகையிலேயே அமையும். சூரியமாலை நூலும் இதற்கு விதி விலக்கில்லை. சூரியனை 'ஏக தத்துவமாக' (ஏகதத்துவமாக வானிலுற்றரசாளும் ஈடின் மெய்ப்பொருள் (19:8) ) உணர்ந்து துதிக்கும் இந்நூலில் தனக்கு ஆன்ம விடுதலை வேண்டி இறைஞ்சி நிற்கும் அதே வேளையில், மனித வாழ்வில் பேணப்படவேண்டிய சமூக, தனி மனித அற ஒழுக்கங்களைப் பற்றித் தண்டபாணி சுவாமிகள் பரவலாகக் குறிப்பிடுகிறார். துதி நூல் என்பதை, இறைவனைத் துதிப்பதற்கான நூலாக மட்டும் கருதிக் கொள்ளாமல், அதன் வழியாக உணர்ந்து கொள்ளவேண்டிய

வாழ்வியல் – அற மதிப்புகளையும் அறிமுகப்படுத்துவது இக் கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**புலால் உண்ணாமை**

ஊன் உண்ணாமை குறித்த கருத்தாடலை, தண்டபாணி சுவாமிகள் சூரியமாலையில் பல இடங்களில் முன் வைக்கிறார். ''ஊனருந்தும் வஞ்சகப் புலைய ரென்றும்'' (7:2) ''புதலும் பறித்துநுகர் மேடத்தையுங் கொன்று புண்ணாய ஊன் எடுத்து'' (9:1) எனவும், ''எண்ணிலுயிர் கொல்லுந் தொழிற்காரர் தந்தலைக்கு இடியனையர் குரவர்'' என்றும் (10:3) ''உயிர் வதைத் துண்கின்ற பாதகர்'' (21:1) எனவும் பல்வேறு வகைகளில் புலால் உண்ணாமையை ஒர் அறமாக வலியுறுத்துகிறார். எந்தக் குலத்திலே பிறந்திருந்தாலும், புலால் உண்ணாமையாகிய அறத்தைப் பின்பற்றுபவர்கள் உயர்ந்தோர் ஆவர் என்பது அவர் கருத்து. சாதி அல்லது குல வேறுபாடுகளைத் தாண்டி, உயிர் அறத்தை அவர் முன் வைக்கிறார். ''எக்குலத்தோ ரெனினும் ஊனருந்தாதவர்கள் எனில் உயர்ந்தோர்கள்'' (10:1) என்பது அவருடைய கூற்று. மனித வாழ்வின் அடிப்படை அறமாகிய அன்பு நெறியின் தொடக்க நிலை ஊன் மறுப்பு. சூரிய வழிபாடு செய்வோர் 'கருணையுடையோராக' இருக்கும் போதுதான், வழிபாட்டின் பயன் கிடைக்கும் என்னும் குறிப்பைக் [''வணங்கிப் போற்றி விரதமிருப்போர் கருணை யுடை யோராகில்''..] என்று வேறோர் இடத்திலும் குறிப்பிடுகிறார். புலால் மறுத்தல் என்ற வாழ்வியல் அறம் சாதி மதங்களைக் கடந்த பொது அறமாகத் தண்டபாணி சுவாமிகளால் வலியுறுத்தப்பட்டது.

**மங்கையரின்பம்: மறுப்பு**

மங்கையர் மேல் மையல் கொண்டு மனம் தடுமாறிக் கொண்டிருக்கும் இயல்பை தண்டபாணி சுவாமிகள் மிக வருந்திப் பாடுகிறார். ''வாரணக் கோடனைய கொங்கை கண்டெனதுள்ள மறுகுவது'' (7:1) என்கிறார். ''கச்சைக் கிழித்துப் புடைத்துப் பரந்திலகு கனதனத் தரிவை நல்லார் கண் வலைக் கஞ்சாத நெஞ்சம்'' வேண்டும் என்று அவர் விரும்புகிறார் (5:5). ''கொங்கை மடவாரை யெண்ணி மனம் மறுகாத ஞானம்'' வேண்டுகிறார். (13:1) ''ஆனையிற் றிகழு

முலை மாதாரா ரின்பத்தை அருவருத் திகழ்வதற்கு'' ஆசை கொள்கிறார். (29:2). மங்கைய ரின்பத்தின் மீது கொள்கின்ற நாட்டமானது, வாழ்வின் துன்பத்திற்குக் காரணம் ஆகிறது; அறிவைச் சிதைத்து, நல்வழியிலிருந்து திசைமாற்றி விடுகிறது என்பது தண்டபாணி சுவாமிகளின் குறிப்பாக அமைகிறது. மங்கையரைப் பற்றிய வருணனையானது, பாலுணர்வு தொடர்பு பட்ட இச்சையையே குறிப்பதாகக் கொள்ளலாம். இத்தகைய புலனின்ப நாட்டத்திலிருந்து விடுபடும் போதே, வாழ்க்கை நெறி சீர்ப்படும் என்பது அவர் கருத்து. 'இல்லற மறுப்பு' என்பது அவருடைய பாடல்களில் காணப்பட வில்லை. மாறாக மங்கையரின்பம் மறுப்புநிலையானது, காம இச்சைக்குள் அகப்படும் நிலையிலிருந்து மீண்டுவரும் நெறியினையே குறிப்பதாகக் கொள்ளலாம்.

### சமரச ஞானம்

சமயங்கள் பலவாயினும் அவற்றுள் விரவி நிற்கும் பரம் பொருள் ஒன்றே என்ற சமரச ஞானம் தண்டபாணி சுவாமிகளின் சமய நோக்கின் அடிப்படையாகும். ஒரு சமய வழிபாட்டினை பின்பற்றுவோர் பிற சமய வழிபாட்டினரை ஒத்த நட்புடைய வராக ஏற்க வேண்டும். எல்லாச் சமயங்களும் பொதுவான கடவுள் ஒன்றின் வடிவ பேதங்கள் என்பதை உணர்ந்தோரே சமரச ஞானமுடையவர்கள். பிற சமயத்தார்களை இகழ்தல் கூடாது என்பதையும் உணர்ந்தவர்கள்; தண்டபாணி சுவாமிகள் கடவுள் வேற்றுமை தோன்றாத நிலையைப் பின் வருமாறு காட்டுவார்:

> ''என் கடவுளே உயர்ச்சி என்று சொல்வோன்
> இறுமாந்து நாட்கழியாது ஏங்கி வாடித்
> தன் கடவுள் திருவுருவைக் காண வேண்டித்
> தவித்தானேல் சமரசத்தோர் தம்மிற் சேர்வான்;
> பின் கடவுள் வேற்றுமை தோற்றாது''

கடவுள் வேற்றுமை உணரப்பட முடியாத அனுபவ நிலையை சமரச ஞானம் வழங்கும். சூரியனை முன்னிறுத்தி தண்டபாணி சுவாமிகள் இவ்வாறு பாடுகிறார்:

"கொன்றைப் பிரான் என்றுனைச் சிலர் விளம்பிடுவார்
குமரவே ளென்பார் சிலபேர்;
குஞ்சர முகக் கடவு ளென்பார் சிலர்; மாலெனக்
கூறி வழிபடுவோர் சில்லோர்;
குன்றைப் பொருந்தன முடைக்கரிய குயிலெனக்
கொள்ளுவார் சிலர்" (20:2)

ஏக தத்துவமாகிய பரம் பொருளாகவும், 'அகள தத்துவ மாகி ஆருயிர் நிமித்தமே அரிய வடிவாக நிற்பதாகவும்

சூரியனை அவர் காண்கிறார். சூரியன் என்பது தனிக் கடவுள் அல்ல; வேறு தேவர்களுக்கும் சூரியனுக்கும் வேறுபாடு ஏதுமில்லை.

"வாசவன் முதற் சகல தேவர்களும் நீயென
வழுத்தத் துணிந்து கொண்டேன்" (30:2)

எனவும்,

"பிரமனென மாலென உருத்திரன் எனத் திழ்
பெருந்தகை பொருந்தும் ஒன்றே" (24:4)

எனவும், சமரச ஒருமையில் அவர் பாடுவார். இத்தகைய சமரச ஞானம் என்பது, ஆன்ம விடுதலைக்குரிய ஒரு படிநிலையாக மட்டும் எண்ணிப் பார்க்காமல், மனித வாழ்வியல் நெறிகளுக்கு குரிய ஓர் அறமாக உணர்வதே இங்கே கொள்ளப்படவேண்டும். எல்லா வேறுபட்ட சமயங்களுக்கும் அடிப்படையாக அமையும் மூலப்பொருளாகவே இறைவனைக் காணும் இவர் நெறி,

"விதமா யிரங் கோடி யான சமயத் தெவரும்
மெச்சிடக் குலவு மணியே" (9:4)

"... பரசமயங் களும் பரவு பொற்புமிகு
வட்டமான புண்ணியப் பொருளே" (13:3)

பல்வகைச் சமயங்களுக்கும் இடையேயான வேறுபாட்டுணர்வை ஒழிக்கும் நெறியாகும். இது சமூக அறமாகவும் மலர்தல் வேண்டும்.

### மதவாதம்: மறுப்பு

ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்து மதவெறியுடன் மத வாதம் செய்பவர்களை மறுக்கும் சிந்தனை, தண்டபாணி

சுவாமிகளிடம் காணப்படுகிறது. ''மதவாதருக் கடிமையாகிக் கிடப்பவரும்'' (9:1),

''புண்ணிலிடு கோலென்ன மதவாதர் சொல் வந்து
புந்தியிற் றைக்கு நோவால்'' (12:1),

'புன்சமய வாதருக் கிடையூறு தழை வுறிலிரங்கிடாதாய்'' (19:1), என்றெல்லாம் மதவாதிகளைக் கடுமையாகச் சாடுகிறார். எத்தகைய மதங்களைச் சார்ந்தோ ராயினும், மதவாதம் செய்யும் போக்கினரை தண்டபாணி சுவாமிகள் கடிந்து பேசுகிறார். சமரச ஞானத்தின் படிநிலையாக இது அமையும். மதவாதங்கள் பல இருப்பினும் அதன் இறுதி எல்லை ஒன்றே என்று உணரும் போது மதவாதங்கள் அர்த்தமற்றுப் போகும்.

''வாதத்திற் சற்று மிளையாத பல சமய
வாணரும் வணங்கும் ஒன்றே'' (4:4)

என்ற நிலையில், உருவ வடிவங்களின் ஈடுபாடு வெறும் அன்பு சார்ந்த அடையாளமாக மட்டுமே மாறிவிடும். ''பிரியத்திலுள்ள படி வேறு மொருருக் கொண்டு'' (4:2) என்பது அவர் கூற்று. மதவாத மறுப்பாகிய இந்தச் சிந்தனை, வாழ்வியல் அறங்களுள் ஒன்றாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

**போதைப் பொருள் மறுப்பு**

மனித வாழ்வைச் சீரழிப்பதில் போதைப் பொருட்கள் மிகுந்த வல்லமை பெற்றவை; அறிவையும், உணர்வையும் கெடுத்து, வாழ்வின் அர்த்தங்களையும் அத்தகைய போதைப் பொருட்கள் சிதைத்துவிடுகின்றன. ''கஞ்சா, அபின், கள், அரக் குண்ட பேரும் கழித்து'' (14:1) என்று தண்டபாணி சுவாமிகள் பாடுகிறார். சூரியன் ஏக தத்துவம் என்றுணர்வது உண்மை ஞானம். கஞ்சா முதலிய போதைப் பொருட்களுக் காட்பட்டவர் களால் ஞானம் பெற முடியாது; 'உண்மை ஞானம் பதியாத நெஞ்சினர்' (21:3) என்பார் அவர். உண்மை ஞானம் பெறுவதற் கான வழியை மறுக்கும் தடையாகவும், அடிப்படை அறிவைச் சிதைக்கும் சக்தியாகவும் போதைப் பழக்கம் இயங்குகிறது என்பது தண்டபாணி சுவாமிகளின் கருத்தாகும்.

**வழிப்பாட்டு நெறிகள்**

சூரியனை வழிபடும் தண்டபாணி சுவாமிகள் வழிபாட்டு நெறியாக – அடிப்படைக் கூறுகளாக – அறிவுறுத்துவது மிக

எளிமையான செயற்பாடுகளே. சூரியப் பரம்பொருளை ஏக் தத்துவமாக ஏற்றுக் கொண்டு கைகள் குவிய அவன் முன்னிலையில் நின்று வணங்குவது ஒன்றே போதுமானதாக அவர் கருதினார். தேவையற்ற வீண் அங்குகளை அவர் முற்படுத்த வில்லை. தனிமனித வாழ்வியல் நிலையில் அவர் கருதிய செயற் பாடுகளாகக் கீழ்க் காண்பனவற்றைக் குறிக்கலாம்:

வாயில் தொறும் ஏகி நின்று பிச்சை ஏற்று உண்ணுதல்; வெட்டிக் கூறுபோட்டாலும் அசையாத மனநிலை; வெகுளியை ஒழித்தல்; அரிய மெய்த்தவமுடைய பெரியார் தமைக்கண்டு அவர்க்கான தொண்டு புரிதல்; ஈனத்தொழில் புரியும் நிட்டூர வஞ்சகர் இணக்கம் பொருந்திடாமல் அமைதல்; 'நானென் றுரைக்க மனம் நாணுதல்.

சுருக்கமாகக் கூறினால், எளிமை, மன உறுதி, சினமின்மை, தொண்டுணர்வு, கீழோர் சேராமை, ஆணவம் அறுத்தல் ஆகிய் பண்பு நலன்களே, தனிவாழ்வியல் அறமாகத் தண்டபாணி சுவாமிகளால் கருதப்பட்டது.

பொதுவாகத் துதிநூல்களை, ஆன்ம விடுதலைக்குரிய விண்ணப்பம் தருதலான நோக்கிலேயே காண்பது இயற்கை. 'தனிமனிதர்க்கும், சமூகத்திற்கும் வாழ்வியல் அறங்கள் உள்ளே இழையோடிக் கொண்டிருப்பதையும் நாம் உணர்தல் வேண்டும். சூரியமாலை வழியாகத் தண்டபாணி சுவாமிகளின் வாழ்வியல் அறங்கள் இதில் சுருக்கமாக அறிமுகப் படுத்தப் பட்டுள்ளன.

# ஒப்பீட்டு நோக்கில் மனுநெறித் திருநூல்

சு. சந்திரா

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தொடாத துறையில்லை. எண்ணற்ற இலக்கிய வகைகளுக்கு வித்திட்டார்; முந்தைய இலக்கிய இலக்கண நூல்களில் ஈடுபட்டார்; அவ்வழி, அவர் படைத்த மனுநெறித் திருநூல் ஆய்வுப் பொருளாகிறது.

**மனுநெறித் திருநூல்**

மனுநெறித் திருநூல் என்னும் இப்படைப்பு, குறள் வெண்பாவால் ஆனது. நூற்றிமுப்பது அதிகாரங்களில் பத்துப் பத்துக் குறள்களாக ஆயிரத்து நூற்றிமுப்பது குறள்கள் அமைந்துள்ளன. இவ்வெண்ணிக்கைக்கு, 'திருக்குறட்பாத் தொகைக்கு அதிகமாகக் கூறுவதும், சமமாக அமைப்பதும் முறையன்றென்று மூன்றதிகாரம் (முப்பது பாட்டு) குறைத்து, நூற்று முப்பது அதிகாரத்தில் முடித்தனர்' எனக் காரணம் உரைப்பர். (ம நெ.தி. அணிந்துரை. ப.3)

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளையும் இந்நூலில் சுவாமிகள் அமைக்கின்றார். இந்நாற் பொருளிலும் நான்கு பொருளும் அமையச் சுவாமிகள் பாடியதும் இந்நூலின் தனிச்சிறப்பாகும். இதனை,

> அறமுதலாம் நான்கை அவிர்ஒவொன்றின் நான்கும்
> திறமுறவே காணத் தெரிவித்தான்

என்ற வரிகள் விவரிக்கின்றன. அதாவது அறம் என்னும் பிரிவில் அறத்திலறம் (5–1) அறத்துப் பொருள் (38–1) அறத்தின் இன்பம் (43–1) அறத்துமுத்தி(50–1) என 53 அதிகாரங்களில் நாற்பொருளும் அமைக்கின்றன.

பொருட்பால் 37 அதிகாரங்களை உடையதாக விளங்குகின்றது. இப்பிரிவில் பொருளில் அறம் (54–1) பொருளில் பொருள் (61–1)

பொருளில் இன்பம் (85-1) பொருளில் முத்தி (89-1) என நாற்பொருளும் விரிக்கப்படுகின்றன.

இன்பத்துப்பாலில் முப்பத்தோரு அதிகாரங்கள் இடம் பெறுகின்றன. இன்பத்தறம் (92-1), இன்பப்பொருள் (110-1), இன்பத்தில் இன்பம் (112-1), இன்பத்தில் முத்தி (116-1) என நாற்பொருளும் கூறப்படுகின்றன.

ஆறு அதிகாரங்களை யுடைய வீட்டுப்பாலில் வீட்டறமும் (124-1) வீட்டுப் பொருளும் (125-1) உரைத்து, ஏனையவற்றைக் குறிப்பாகப் பெற வைக்கிறார் சுவாமிகள் என்பர். (மேலது.)

**குறளும் மனுநெறித் திருநூலும்**

மனுநெறித் திருநூல் நீதிமுறைகளை மக்களுக்கு எடுத்துக் கூறுவதாகும். இந்நூல் திருக்குறளைப் பின்பற்றி எழுதப் பட்டதாகும். இதனைச் சுவாமிகள்,

இப்பா ருலகறிய ஏழெழுவர் தம்மை வென்றோன்
முப்பால்வெண் பாட்டே முதல்.

எனக் குறிப்பிடுகின்றார். மேலும்,

அறம் முதலா முன்னோர் அறைந்தபயன் நான்கின்
திறம் விரித்துச் சொல்லுந் தெளித்து.

எனவும் குறிப்பிடுகின்றார். மனுநெறித் திருநூலின் பதிப்புரைப் பாயிரத்துள்,

அன்னவற்றுள் வள்ளுவர்சொல் அந்நூல் அடியொற்றிப்
பன்னருள்நூல் இந்தப் படிவு.

என்ற வெண்பா வரிகள் குறள் வழி நூல் என்பதை உணர்த்துகின்றன. இதனை திருக்குறட் கருத்து, முன்னோர் நூற் கருத்து, தமதனுபவங்கள் ஆகிய பல கலந்த தொகுப்பே இந்த நூல் என்ற கருத்து அரண் செய்கிறது. (மேலது. ப.5)

**ஆய்வுப்பொருள்**

திருக்குறள் நூலை முதனூலாகக் கொண்ட வழிநூல் இது. இம்மனுநெறித் திருநூலின் அதிகார வைப்புமுறை, குறட் கருத்துக்கள் எனத் தாக்கக் கோட்பாட்டு ஆய்விற்குப் பொருளாவதற்கு எண்ணற்ற களங்கள் உண்டு. எனினும்

பக்கவரையறை காலம் முதலியவற்றைக் கருத்தில் கொண்டு திருக்குறளிலும் மனுநெறித் திருநூலிலும் அமைகின்ற குடும்பம் என்ற கருத்து மட்டும் ஆய்வுப் பொருளாகின்றது.

## குறளில் தாய் தந்தை

திருக்குறளில் தாய், தந்தை எனத் தனியான அதிகார வைப்புமுறை ஏதுமில்லை. மாறாக மக்கட்பேறு அதிகாரத்திலும், ஆங்காங்கு ஓரிரு இடங்களிலும் தாய், தந்தை பற்றிச் சுட்டப் படுகின்றது.

மக்கட்பேறு அதிகாரத்தில், தனது மகனைச் சான்றோன் எனக் கேட்டு மகிழ்பவளாகத் (குறள். 69) தாய் குறிப்பிடப்படுகின்றாள். கள்ளுண்ணாமை என்னும் அதிகாரத்தில், கள்ளுண்டவரைக் கண்டு ஈன்றாளும் முகம்சுளிப்பாள் (குறள்.923) எனப்படுகின்றது. பிறிதோரிடத்தில் ஈன்றாளின் பசியினைப் போக்குவதற்காகச் சான்றோர் பழிக்கும் வினையைச் செய்தல் கூடாது (குறள் 656) என வினைத்தூய்மை பற்றித் திருக்குறள் குறிப்பிடுகின்றது.

மக்கட்பேறு அதிகாரத்தில் மூன்று குறள்களில் தந்தையைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. தனது மக்களுக்குக் கல்வியறிவூட்டுதல் தாயின் கடமை என்றும் (குறள் 67) நன் மகனைப் பெற்ற தந்தையைப் பிறர் பாராட்டுவர் என்றும் தம்மினும் தம் மக்கள் அறிவுடைமை தந்தைக்கு மகிழ்ச்சியைத் தரும் (குறள். 68) என்றும் குறிப்பிடப் படுகின்றது.

## மனுநெறித் திருநூலில் தாய் தந்தை

அறத்தின்பம் பகுதியில் தாய், தந்தை எனத் தனித்தனி அதிகாரங்கள் உரைக்கப்படுகின்றன. அறவழிப்பட்ட இன்பம் என்பது நல்ல தாய் தந்தையரைப் பெறுவது எனச் சுவாமிகளால் சுட்டப்படுகின்றது.

தாய்மைக்கு ஏற்றம் தரும் பல கருத்துக்களைத் தமது நூலில் சுவாமிகள் குறிப்பிடுகின்றார். தாய் அருந்ததி போன்று கற்பில் சிறந்தவளாகவும், (ம. நெ. தி. 43-1) பரிவுடன் பாலூட்டு பவளாகவும், (ம. நெ. தி. 43-2) மக்கட் பேற்றிற்காக நெஞ்சுருகத் தவம் மேற்கொள்பவளாகவும் (ம. நெ. தி. 43-3) இருத்தல்

சேயினது நற்பேறு என்கின்றார். மேலும் பல சேய்கள் இருப்பினும், நற்சேயைத் தாய் போற்றுவாள் (ம நெ. தி. 43-4) எனவும், சேயருமை தெரியாத தாய் இல்லை என்பதனையும் (ம. நெ. தி. 43) குறிப்பிடுகின்றார். கல்விச் சிறப்புடைய தாயைத் தந்தை என உயர்த்தி,

> நிந்தை அறுங் கல்வி நெறியும் அறிதாயைத்
> தந்தை என்றும் சொல்லத் தகும். (ம. நெ. தி. 43-7)

என்று உரைக்கின்றார். தாய் தீய வழியில் சென்றால் திருத்தும் கடமை சேய்க்கு உண்டு எனக் (ம. நெ தி. 43-9) குறிப்பிடு கின்றார்.

இனி, தந்தை பற்றிய கருத்துக்களைக் காண்போம்.

தந்தையானவன் நற்சிந்தனை, கல்வி, தெய்வ பக்தி முதலிய பண்புகள் அமைந்தவனாகவும் அறிஞனாகவும் இருத்தல் வேண்டும் (ம. நெ. தி. 44-1, 2) என்பது மனுநெறித் திருநூல். தன்னைக் குருவாகவும், தனது சொல் கேட்பவனாவும் மக்களை உடைய தந்தை நிலத்தில் புகழ் பெறுவான் (ம. நெ. தி. 44-3, 4) எனவும், நற்தந்தை கல்வியும், தவமும் தீயது என்று உரைக்க மாட்டான் எனவும் (ம. நெ. தி. 44-5) தந்தையின் மனம் மகிழத் தக்க மொழி கூறுபவன், தந்தைக்கு உபதேசித்த முருகப் பெருமானைப் போன்றவன் எனவும் (ம. நெ. தி. 44-6) குறிப்பிடு கின்றது.

தகுதியுடைய தந்தை தம்மினும் சிறந்த மக்களைப் பெறுவான், (ம. நெ. தி 44-7) சிறந்த மக்களைப் பெற்ற தந்தை இழி தொழில் செய்யான் (ம. நெ. தி 44-8). தந்தை நல்வழியில் சென்றால் மக்கள் நல்வழி கூறித் திருத்தலாம் (ம. நெ. தி. 44-9). தந்தையினைத் தாய் அறிவாள் என்பது முன்னைய நூல் பொருளாகும் (ம. நெ. தி. 44-10) இவ்வாறு தந்தை என்னும் அதிகாரத்துள் குறிப்பிடப் படுகின்றன.

**ஒப்பீட்டு நோக்கு**

திருக்குறளில் தாய், ஈன்றாள் என்றும் திருநூலில், தாய் எனவும் குறிப்பிடப் படுகின்றது. திருக்குறளில் மகனின் சான்றான் மையைக் கேட்டு உவந்த தாய் திருநூலில் ஒல்சேயைப் போற்றுப வளாக விளங்குகிறாள்.

சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க எனவுரைக்கும் குறட் கருத்து பாவ உணவூட்டல் அன்ன பண்புடைய தாயை நற்சேய் திருத்தலாம் (ம. நெ தி. 43-10) என்றாகிறது. கல்விச் சிறப்புடைய தாயைத் தந்தையாகப் போற்றலாம் எனப் பெண்மையின் சிறப்பிற்கு ஏற்றம் தருகின்றார் சுவாமிகள். தீயநெறி உடையவளாகத் தாயிருந்தால், சேய் திருத்தலாம் என்ற குறிப்பின் வழி தாயின் பண்புநலன்கள் திருநூலில் குறைவு படுத்தப்படுகின்றது. வள்ளுவர் காட்டும் தாய் நற்றாயாக மட்டுமே விளங்குகின்றாள்.

திருக்குறள் காட்டும் தந்தை மக்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளை உடையவனாவான் மனுநெறித் திருநூலில்நற்பண்பு களை உடையவனாகவும், ஆசானாகவும் உயர்வு பெறுகின்றான்.

> தம்மினும் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லாம் இனிது (குறள். 68)

என்னும் திருக்குறள்,

> தகப்பன் களிகூரத் தக்கமொழி கொள்வான்
> குகப்பெருமான் போலும் குரு (ம. நெ. தி. 44-6)

என மனுநெறித் திருநூலில் ஏற்றம் பெறுகின்றது.

**ஒப்பீட்டு நோக்கில் உடன்பிறந்தார்**

திருக்குறளில் உடன்பிறந்தார் பற்றிய செய்திகள் ஏதும் குறிப்பிடப்படவில்லை. சுவாமிகள் குடும்பம் என்ற அமைப்பில் உடன்பிறந்தார்களைப் பற்றி பத்துக் குறள்களில் கருத்துக்களை வரிசைப்படுத்து கின்றார்.

மரத்தில் உள்ள காய்க் கொத்துக்கள் போல உடன்பிறந்த வர்கள் ஒன்றியிருத்தல் வேண்டும் எனவும் (ம. நெ. தி. 45-1) உடலுறுப்புகள் போல உடன்பிறந்தாரைத் தாங்கல் கடமை எனவும் (ம.நெ.தி. 45-2) சுவாமிகள் குறிப்பிடுகின்றார். மேலும், மூத்தோரைப் பெற்றோராய்ப் போற்றுதல் வேண்டும் என்பதை,

> முன்னானைத் தந்தைஒப்ப மூத்தாளைத் தாயார்ஒப்பப்
> பின்னோர் நினைத்தொழுகல் பீடு (ம.நெ.தி. 45-3)

எனக் குறிப்பிடுகின்றார். ஒருவர் பெற்ற நன்மையை உடன் பிறந்தார் அனைவரும் பெற்றுச் சிறத்தல் வேண்டும் என்பதும்

(ம. நெ. தி. 45-4) அறிஞர்களை உடன்பிறந்தாராகக் கொள்வது பாவத்தினைப் போக்கும் எனவும் (ம. நெ. தி. 45-10) சுவாமிகள் விரித்துரைப்பார். உடன்பிறந்தாருக்குள் சண்டை ஏற்படுவது உலக வழக்கு என்பதனையும் (ம. நெ. தி. 45-6) சுட்டுகின்றார்.

மேலும், இந்தியாவின் பழம்பெரும் புராணங்களின் வழி உடன்பிறப்பின் சிறப்பினை வெளிப்படுத்துகின்றார்.

உடன்பிறந்தாரது ஒற்றுமையால் வாழ்வும் தாழ்வும் ஏற்படும் என்பதை மகாபாரதச் சகோதரர் வாழ்வின்வழி,

> அறத்தில்ஒத்த ஐவர் அநீதியிற்சார் பல்லோர்
> இறத்தல்கண்டு வாழ்ந்தார் இனிது (ம நெ. தி. 45-7)

என விளக்குகின்றார். நல்வழி கூறியும் ஒப்பாத சகோதரரை விபீடணன் போல விட்டுவிடுவது முறையானது எனச் சுட்டும் சுவாமிகள், சகோதரனுக்காக உயிர்துறந்த சிங்கமகாசுரனையும், கும்பகர்ணனையும் போற்றுகிறார். இவ்வாறு சுவாமிகள் குடும்பம் என்ற அமைப்பில் உறவுகள் சீர்பட, உடன்பிறந்தாரது ஒற்றுமையையும், அன்பினையும் வலியுறுத்துகின்றார்.

### திருக்குறளில் வாழ்க்கைத் துணை

திருக்குறளில் வாழ்க்கைத் துணை, இல்லவள், மனைமாட்சி என மனைவி குறிப்பிடப் படுகின்றாள் மனைவி நற்பண்புகளை உடையவளாகவும் வருவாய்க்கு ஏற்ப வாழ்க்கை நடத்துபவளா கவும், கற்புடையவளாகவும் இருத்தல் வேண்டும். மனைவி, கணவனைத் தெய்வமாகத் தொழுபவளாகவும், கணவனைப் போற்றுபவளாகவும், நல்ல மக்களைப் பெறுபவளாகவும் இருத்தல் வேண்டும். புகழ் சேர்க்கும் மனைவியோடு வாழ்க்கை இல்லாதவருக்குப் பெருமையான வாழ்க்கை இல்லை (வாழ்க்கைத்துணை நலம் 51-60). இவ்வாறு திருக்குறளில், வாழ்க்கைத்துணை என்பது மனைவியின் கடமையைச் சுட்டு வதாகவும், பெண்ணின் பெருமையைக் காட்டுவதாகவும் உள்ளது.

### மனுநெறித் திருநூலில் மனைவி

சுவாமிகள் மனை என மனைவியைக் குறிப்பிடுகின்றார். மனைவி என்பவள் கணவனின் பாதி (ம. நெ. தி. 46-1) என்றும்,

மனைவியோடு வாழும் வாழ்வு சிறப்புடையது என்றும் (ம.நெ.தி. 46-2) நல்ல மனைவி யுடையோரைப் பிறர் பாராட்டுவர் (ம நெ தி 46-5) எனவும் சுட்டுகின்றார்.

மானம் காக்கும் மனைவியின் தோளினை அணைப்பவன், ஈனம் சிறிதும் இல்லாதவன் (ம. நெ.தி. 46-6) எனவும், கற்புடையராக இருத்தல் மனைவியின் கடமை எனவும் (ம. நெ.தி 46-4) சுவாமிகள் குறிப்பிடுகின்றார். இல்லறத்தில் மட்டுமல்லாது துறவற வாழ்க்கையிலும் மனைவி கணவனுக்கு உறுதுணை யாவாள் என்பதை,

உவக்கும் இன்பம்நல்கி, உடன்போய்ச்சில் மாதர்
தவத்தினிலும் பங்குகைக் கொண்டார். (ம. நெ.தி 46-7)

என்பார். இவ்வாறு துறவறத்திற்கு மனைவி துணையிருத்தல் என்பது, சுவாமிகளது சொந்த வாழ்க்கையின் எதிரொளிப்பு எனலாம் அடிகளாரின் துணைவியார் சுந்தரத்தம்மையார் மூன்று குழந்தைகளுக்குப் பிறகு அடிகளாரிடம் கல்லாடை பெற்றுத் துறவற நெறியில் நின்றார் (மோகனரங்கன் கோ, சந்த அமைப்பு சிறப்பாய்வு, ப. 94) என்ற குறிப்பு, இந்தக் குறட்பாவோடு இணைத்து எண்ணத் தக்கதாகும்.

மேலும், கணவனால் தானமாக அளிக்கப்பட்டால், அதனை ஏற்பது மனைவியின் மாட்சியைப் பெருக்கும் (ம. நெ.தி 46-8) எனப் பெரிய புராணத்து இயற்பகை நாயனாரது செயலினைச் சுட்டுகின்றார். நல்ல மனைவியைக் குறை காணும் கணவனைப் பேய் (ம.நெ.தி. 46-10) எனச் சுவாமிகள் கடிந்து பேசுவார்.

**ஒப்பீடு நோக்கு**

மனைவி பற்றிய கருத்துக்களில் குறட்கருத்துக்களை அடியொற்றிச் சுவாமிகள் தமது நூலில் சிலவற்றைக் குறிப்பிடுகின்றார். வாழ்க்கையின் துணையாக விளங்கும் மனைவி, நற்பண்புகளை உடையவ ளாகவும், கணவனது வருவாய்க்குத் தக்க உள்ளாள் என்ற குறட்கருத்து,

ஆவதற்குரியாள் அறத்தில்ஒரு பாதி கொண்டு
பாவமுற்றுந் தற்சேர்ப் பவள் (ம. நெ.தி. 46-1)

எனத் திருநூலில் குறிப்பிடப்படுகின்றது.

மனைவியின் சிறப்பினை இருநூல்களும் போற்றுகின்றன. மாண்புடைய மனைவியைப் பெற்றால், வாழ்வில் சிறப்பும் உயர்வும் உண்டு என்ற குறட் கருத்து, மனைவியை விடச் சிறப்பு, ஒருவரது வாழ்க்கையில் இல்லை எனத் திருநூலில் குறிப்பிடப் படுகின்றது

மனைவியின் கற்பினை, 'நிறைகாக்கும் காப்பு' எனக் குறள் குறிப்பிட, 'பொற்புமதன் நேர்வரினும் புந்தி தடுமாறாக் கற்பினைத்' திருநூல் வலியுறுத்துகின்றது. சிறந்த மனைவியைப் பெறாதவர் பகைவர் முன் பெருமிதமான நடை போட முடியாது என்ற குறட்கருத்து,

மானம் புரக்கும் மனைதோள் அணையானே
ஈனம் சிறிதும் இலான் (ம.நெ.தி. 46-6)

எனத் திருநூலில் சிறப்புறுகின்றது.

இவை தவிர, மனுநெறித் திருநூல், மனைவி கணவனது துறவறத்திற்குத் துணையாகவும், கணவனது தர்மத்தினை ஏற்பவளாகவும், இருத்தல் வேண்டும் என்பார். மேலும், பெண்மைக்கு ஏற்றம் கொடுக்கும் முறையில்,

தன்னை தவயவம்நேர் தன்மையுறு தையநல்வாள்
பின்னமுறக் காண்பவனோர் பேய் (ம.நெ.தி. 46-10)

எனப் பெண்மையினைக் குறை கூறும் கணவனைப் பேய் எனக் கடிந்து பேசுவது திருநூலின் சிறப்பாகும்.

**குறள் காட்டும் மக்கட்பேறு**

ஒருவன் பெறுகின்ற பேறுகளில் தலையாயது மக்கட்பேறு என்பது வள்ளுவரின் கருத்தாகும். நன்மக்களைப் பெற்றால் எழுபிறப்பினும் துன்பங்கள் சேரா என்றும், நன்மக்களைப் பெறுதல் அவரவர் வினையின் பலன் என்றும் வள்ளுவர் உரைக்கின்றார். மேலும் மக்கட்பேற்றினை, குழந்தைப் பருவச் செயல்கள் வழி பின்வருமாறு உரைக்கின்றார். தம்மக்கள் சொல் யாழினும், குழலினும் இனிமை உடையது எனவும், அவர்தம் சிறுகைபட்ட உணவு அமிழ்தினும் சிறந்தது எனவும், மக்கள் உடலைத் தீண்டுவது இன்பம் நல்கும் என்றும் உரைக்கின்றார். (குறள் மக்கட்பேறு, 61-70)

**மனுநெறித் திருநூலில் மக்கள்**

மனுநெறித் திருநூலில் மக்கள் என்ற தலைப்பில் கருத்துக்கள் உரைக்கப் படுகின்றன. ஒருவன் பெற்ற உயர்வாக, ஆண், பெண் என்ற இருவகை நன்மகவையும் (ம.நெ.தி. 47-1) சுவாமிகள் சுட்டுகின்றார்.

தந்தைக்குப் புகழ் சேர்க்கும் மகன், வீட்டின்பம் தருவதற்கான வித்து என்றும், மாதவம் செய்வோருக்கும் வீட்டினை நல்குவது மக்கட் செல்வம் என்றும் (ம.நெ.தி. 47-3,4) சுவாமிகள் உரைக்கின்றார்.

கல்வியுடையவராகவும், (ம.நெ.தி. 47-8) அறத்தில் வழுவாத வராகவும் (ம.நெ.தி. 47-10) உள்ள மக்களைப் பெற்றவர், எல்லாச் செல்வமும் பெற்றவ ராவார் என்கிறார். மேலும்' பெண்மகவின் பெருமையும் சுவாமிகளால் இருகுறள்களில் சுட்டப்படுகின்றது.

தவம் உடையாரின் தோளினை மருவும் பெண்ணைப் பெறுதல் சிறப்பு என்றும் (ம.நெ.தி. 47-5), பெண்மகவின் காரணமாகச் சிறப்பு உண்டு என்பதனைத் தடாதகைப் பிராட்டி தன் தாயாருக்கு இறந்த கணவனுடன் ஏழுகடலில் நீராடும் சிறப்பினைப் பெற்றுத் தந்தமையைக் குறிப்பிட்டுத் (ம.நெ.தி 47-6) தெளிவுறுத்துகின்றார்.

**ஒப்பீட்டு நோக்கு**

திருக்குறளில் மக்களைப் பெறுதல் பேறாகக் குறிப்பிடப் படுகின்றது. மக்கள்தம் மழலைப் பருவச் செயல்கள் சிறப்படையனவாகச் சுட்டப்படுகின்றன. சிறந்த மக்களைப் பெறுவது அவரவர் வினைப்பயன் என்றும், மக்கட்பேறு ஏழுபிறப்பின் தீமையையும் தீர்க்கும் என்றும் உரைக்கப் படுகின்றது.

மனுநெறித் திருநூலில் மக்களைப் பெறுவது வீடுபேற்றிற்கு வழி எனச் சுட்டப்படுகின்றது. குறிப்பாக ஆண்மகன் வீட்டிற்கு வித்து என வேத மரபின் வழி குறிப்பிடும் சுவாமிகள், பெண்மக்களது சிறப்பினையும் குறிப்பிடுகின்றார்.

கொண்டு இறைவன் தோன்றி மறையும் போது அதுகண்டு செருக்கடைதல் கூடாது எனக் கூறுவதன் மூலம் அறியலாம். எவ்வாறாக இறைவன் தோன்றுவான் எனக் கூறுமிடத்தில்,

உரைக் கரும்பல் வடிவெடுத்(து) உட்கனவில் தோன்றிப்
பெருமை மிகு சாக்கிர சொப்பனத்தில் வந்து
பேசலன்றிச் சாக்கிரத்திற் பிறர்வாய்ச் சொல்லா
மருவும் அசரீரியுமாய்ப் பேசும் கேட்டு...

என்று விளக்குகின்றார்.

தியானம் செய்வதற்கு மனவலிமை வேண்டும். முழு மனதோடு செய்யப்படும் போது உண்மை கூடப் பொய்யாகலாம். அதுகண்டு வருந்தாமல், தியானிக்க வேண்டும். சில சமயங்களில் உண்மைத் தியானம் மேற்கொள்வோர் வருந்தி இறைவனை இகழ்ந்தாலும், அதற்கான பலன் எங்கும் செல்லாது மீண்டும் அவரையே வந்தடையும் எனக் கூறுமிடத்து, எந்நிலையிலும் தியானத்தை கைவிடலாகாது என்ற இவரின் கருத்து அழுத்தமாக குறிப்பிடப் பட்டுள்ளது.

போகத்தை விரும்பினாலும், முத்தியை விரும்பினாலும், இரண்டையும் சேர்த்து விரும்பினாலும் இன்னின்ன கடவுளை விரும்பி வழிபடுதல் வேண்டும் என்று கூறுகிறார். சிவன், திருமால், கவுரி, கணபதி, முருகன், சூரியன் என்னும் இக்கடவுள் களை வகைப்படுத்துகிறார். இறைவனின் பெயரைக் குறிப்பிடும் சில இடங்களில் இறைவனின் புனைப் பெயர்களாகவும், உரிய வாகனப் பெயர்களாகவும் கொண்டு சுட்டிக் காட்டுகிறார்.

தியானம் மேற்கொள்ளுவதன் மூலம் தான் என்ற நிலை மாறி, தேவையற்ற கர்வங்கள் தம்மிடமிருந்து அகன்று, எதிலும் நிதானம் நிலைக்க தினமும் வழிபடும் மூர்த்தியின் திருவுருவத்தை மனதில் நினைத்து வழிபடவேண்டும் என்று கூறுகின்றார். தான் என்ற மாயை அழிக்கும் மருந்தாக தியானம் செயல் படுகிறது என்று கூறுகின்றார்.

எப்போதும் உபாசகர்கள் தாம் வணங்கும் கடவுளே பெரியது என்றிருப்பர். அவ்வாறான எண்ணம் கொண்டவர்களைப் பற்றி சுவாமிகள் கூறும்போது, கிடைக்கும் நேரத்தில் எல்லாம்

இறைவனின் திருஉருவை நேரில் காணவேண்டும் என்று கருதி ஈடுபட்டால், சமரச எண்ணம் கொண்டு இருப்போருடன் இணைந்து நல் நிலையை அடைவான். மற்ற கடவுளைப் பற்றி இகழ்வாகப் பேசும் எண்ணமும் மறைந்துவிடும் என்று கூறுகின்றார்.

இறைவனைப் பற்றிய திருஉருவினை முறைப்படி கொள்ளாமல், செபம் எனும் மந்திரத்தை உச்சரிப்பது கல்வி அறிவில்லாதவன் செயல் என்று கூறுகின்றார்.

எல்லோராலும் சொல்லப்படுகின்ற – ஏற்றுக் கொள்கின்ற கருத்தையே இறுதியில ஆணித்தரமாகக் கூறுகின்றார். இறைவன் மீது அதிக பக்தி கொண்டுள்ளவர்க்கே இறைவன் எப்போதும் சோதனையைக் கொடுப்பான். அவ்வாறான சமயங்களில் சோதனைக்கு உட்பட்டு பக்தியுடன் தியானம் மேற்கொண்டால் இறுதியில் நல்ல நிலையை அடைய முடியும் எனக் கூறுகின்றார்.

தியானானுபூதி என்னும் இந்நூல் முழுவதும் உண்மையான நெறியில் தியானம் மேற்கொள்ள வேண்டிய கடமைகளும், அதன் மூலம் பெறும் பயன்களும், முறையோடு கூடிய பயிற்சியும் சிறந்தது என்பதை அழகான பாடல்கள் மூலம் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது.

# குருபரனின் பரத்துவ தத்துவம்

சா. சரவணன்

பரத்துவம் என்பது 'மேலொன்றில்லாத மேலான தன்மை' சுட்டுவது. அத்தன்மை உடைய பொருளாக ஒரு பரம்பொருள் அடையாளங் காட்டப்பெறும். அப்பரம்பொருளை விளக்கியும் அனுபவித்தும் அருளாளர்கள் 'பரத்துவம்' நாட்டியுள்ளனர் 'குரு'வாக நம்மனோர்க்கு விளங்குந் தன்மையினராய தண்டபாணி சுவாமிகள், குருபரனாம் மேலொன்றில்லா மேலான பரம்பொருள் அனுபவத்தில்; அப்பரம்பொருளின் தன்மைகளைச் சுட்டிய 'பரத்துவ' தத்துவத்தைக் காணுவதாக இக்கட்டுரை அமைகின்றது.

## குருபரத்துவம் குறித்த உண்மை

பிறவா நிலைமை பெற்ற அருளாளர்கள் வாழ்வியலில் பூரணத்துவம் அடைந்தவர்களாக விளங்கியவர்கள். அவ்வகையில் தண்டபாணி சுவாமிகளை, 'இனிப்பிறவாத் தன்மையர்' என்று கேரள நாட்டில் வள்ளுவர் ஒருவர் கூறினார். அதை நினைந்து சுவாமிகளே கூறும்பொழுது, "இப்பிறவியிலேயே இறவாமை பெறுகிறாயா?" "நீ நினைத்தபடி கொலை முழுதும் நீக்க வேண்டி ஈரமுடன் நூறு சென்மம் எடுக்கின்றாயோ?" (நானிலைச் சதகம் : பாடல் 97) என்று கேட்டால் கொலை நீக்கப் பிறவி வேண்டும் என்பதாகக் கூறிய சமுதாய நோக்காளர் தண்டபாணி சுவாமிகள், அவருடைய அனுபவம், சமுதாயக் குறைகளை நீக்குகின்ற தனிநிலை நிறைவு என்ற பூரணத்துவ நிலையினது. தான் பெற்ற அனுபவங்களை குருபர தத்துவ நூலாகச் செய்த சுவாமிகள் அந்நூலில்,

"ஒருபர தத்துவம் உணரச் செய்திடும்
குருபர தத்துவம் குறித்துக் கொள்மினோ
உருபர தத்துவம் ஆகும் ஓர்வரும்
அருபர தத்துவம் ஆமென் போர்களே"

என்ற இரண்டாம் பாடலை, நூலியல்பு கூறுவதாக முதற்கண் கூறியுள்ளார். அப்பாடலின் வழி அனுபவ ஆக்கங்கள் 'ஒருபர-குருபர-உருபர-அருபர' வகை நிலைகளில் அமைந்தமையை இனிக் காணலாம்.

### அ) ஒருபர தத்துவம் உணர்தல்

தண்டபாணி சுவாமிகட்கு 'சீதாராமன்' என்பவரால் முதற்கண் விநாயக மந்திரம் உடன் இலக்குமி மந்திரம் உபதேசிக்கப் பட்டது. ஆனால் தண்டபாணி சுவாமிகள் அனுபவத்திற்கேற்பப் பின்னர் முருகப் பெருமானின் சடாக்கர மந்திரம் உபதேசிக்கப் பெறுகிறது. அதனை எந்நாளும் தியானம் செய்து வந்துள்ளார் சுவாமிகள். முதலில் சுவாமிகள், பூமிகாத்தாள் மீது பாடல் பாடினார் என்பது வரலாறு.

> ''அமுதங் கடையும் நாள்ஆலம் வெடித்துத்
> திமுதம்எனத் தீயெரித்துச் சென்றது - அமுதம் எனத்
> தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத்தைப் பிடித்துக்
> காத்ததனால் பூமிகாத்தாள்''

என்ற பாடல் பாடப்பெற்றது. இப்பாடல் பூமிகாத்தாளையும் 'முழுமுதற் பொருள் - மூலமாக' நோக்கிய அனுபவமே சுவாமிகட்கு வாய்த்ததெனக் காட்டுகின்றது.

> ''... ... அமுதங் கடைந்திடும் நாள்
> மைத்தகை ஆலம் பிறந்ததைச்
> சிவன்றான் வாரியுண்டனன் வலக்கையால்
> இத்தரை உய்யப் புரந்ததால் என்றோர்
> இனிய வெண் பாட்டிசைத் தேனே''
>
> (குருபர தத்துவம் 8, பிரயோக வினோதச் சருக்கம் 17)

என்று, உலகு உய்ய சிவன் நஞ்சுண்ட வரலாற்றைப் பூமிகாத்தாளை நோக்கிப் பாடியதாகக் கூறியுள்ளார் சுவாமிகள்.

### ஆ) குருபர தத்துவம் குறித்தது கொண்டது

உயிர்களுக்குப் பக்குவம் தந்து, அகத்தும் புறப்பொருள் களிடத்தும் உன்முகமாக நின்று செயற்பட்டு - செயற்படுத்தி வந்த முருகப் பெருமான் பக்குவக் காலத்து ஆணவ மலத்தை நீக்குவன். அவன் குறித்த வழி கொண்டு உயிர்கள் ஈடேற வேண்டும்.

"... ... ... அங்குறும் ஒருநாள் முருகனைக் கருதி
அடியனேன் மீதுநின் அருட்சீர்
தங்குறல் உளதேல் கனவில் இன்(று)
அதற்காம் சாட்சி காட்டுதியென இரந்து
கங்குலில் துயின்றேன் நெல்லையம்பதியில்"

என முருகப் பெருமானிடம் 'சாட்சி' காட்ட வேண்டுகிறார். சாட்சி அனுபவம், உண்மை உணர்த்துவது, ஆதாரமாய் இருப்பது என இரண்டாலும் வெற்றி பெறல் வேண்டும். அவ்வகையில் முருகப் பெருமான் குருபரனாக நின்று பொருள் உண்மை உணர்த்தி; தன் உண்மை காட்டி ஆதாரமாய் நின்ற நிலை அறிவித்ததும், சுவாமிகள் இருந்து அதனைக் கொண்டதும் அற்றைக் கனவனுபவமாக விளக்கப் பெற்றுள்ளது.

"காணுமுச் சந்திஒன் றிடத்தில்
பொங்கும்ஆ ணவத்து ஓர்மந்திர வாதி
போற்றுறும் பலரொடு பொலிந்தான்"

என்பது மேற்பாடலின் (குருபர தத்துவம் 8, பிரயோக வினோதச் சருக்கம் பா. 13) இறுதி வரிகள். இப்பாடல் தொடங்கி மந்திர வாதி மூலமான செயல்களைத் தொடர்ந்து கூறியுள்ளார்.

ஒரு இடம், முச்சந்தி; அங்கு ஆணவ மந்திரவாதி பலரொடு பொலிந்தான். மந்திரவாதியை வெளிப்படையாகவே ஆணவம் என்று கூறினார் சுவாமிகள். ஒரு இடம் மூன்று பாதை சந்தித்த சந்தியாக உள்ளது என்றார். அது ஆணவம், கன்மம், மாயை என மூன்று சேர்ந்த பிறவியைக் குறித்தது. ஆணவம் கேவலம் எனப்பெறும் அறியாமை நிலையில் புலப்படாத இருள்நிலை. ஆணவத்தின் செயல் பொலியும் நிலை, மாயை, கன்மம் சேர்ந்த போதுதான். அது பிறவிநிலை அனுபவம். அப்போது ஆணவச் செயல்கள் எவ்வாறெல்லாம் விளைகின்றன என்பதை விளக்கும் வகையில் கனவனுபவ நிலை சுவாமிகளுக்கு வாய்த்ததை உணரலாம்.

### இ) உருபர தத்துவம்

சடாக்கர மந்திரத்தை 'சருவசடாக்கரம்' என்பார். தான் அனுபவித்த தண்டபாணியாம் முருகனைப் 'பொதுத் தண்டபாணி' என (பா. 31), 'முழுமைமூல' பரம்பொருள் அடிப் படையிலேயே சுவாமிகள் சுட்டுகிறார். பொதுப் பரம்பொருளே

வந்து உலக உரு காட்டிய தன்மையை பின் வரும் பாடலில் கூறுகிறார்.

''தூல உடலுள் வெளியே அண்டவெளியாய்
அதனுள் தொடுகார் ஆழி
ஞாலமும் பற்பல மலையும் ஞாயிறும் திங்களும்
உருவும் நவில்வ யாவும்
சால விளங்கின அதுஅன்றித் தமியேனும்
இருந்தேன் ஒண்தடித்தே போலும்
வேல் அணிவான் தனைநாடும் விருப்பும் வைராக்கியம்
குணமும் மிகுத்த அன்றே''

(வரலாற்றுச் சருக்கம் பாடல் – 33)

என, விருப்பு, வைராக்கியம் வேல் சார்ந்த சண்முகனால் மிகுதி பட; தூல உடலும் வெளியும் இணைந்த அனுபவமும், அண்டங்கள் முதலான எல்லாமும் காணலும், தானும் இருந்து பெற்ற அனுபவமும் வாய்த்தது எனப் புலப்படுத்தியுள்ளார்.

அருபரனாகிய பரம்பொருள் உருபரனாக வந்த தன்மையை சேவல் கொண்டை கொண்ட கருட அனுபவம் போலத் தோற்றி வேல் கைக்கொண்டு உருபரனாக முருகப்பெருமான் வந்தான் என (பா. 34) கூறுகிறார். வந்தவன் கைப்பிடி உருவாகத் 'திருநீறு' தந்தான், அது 'சருவ பிரசாதம்' வேண்டும் எனக் கேட்டவழி வந்தது என்பார். (பா. 36) சருவபிரசாத அனுபவம் 'சமரச ஞானம்' எனக் கூறியுள்ளார். ஆறு உருக்களில் சுவாமிகள் இணைத்து அருபரனை அனுபவிக்கச் சுட்டியமை இனிக் காணப் பெறும்.

ஈ) ஓர்வரும் அருபர தத்துவம்

வாக்கு மனம் கடந்தவன் பரம்பொருள். அவன் வான் கருணையாளனாக இருந்து அருமைப்பொருள் நிலையிலிருந்து அருவாயும் உருவாயும் அருவுருவாயும் இறங்கி வருகின்றான். ஒரே பரம்பொருளாய குருபரன் எல்லாம் காட்டி தன்னைக் காட்டி உருபரனாக நின்றவன்; ஓர்வதற்கு அருமை உடைய பரம்பொருள் 'உண்மை'

''காதல் கூர் அறு வடிவமாய் எங்குளவர்
கருதும்எவ் உருவத்தானும்

ஆதல் தோன்ற நின் உருவமும் காட்டுதும்
அறிகுதி எனச் சொல்லி''

தண்டபாணி சுவாமிகளுக்கு காட்டப்பெற்றது. (குருமகிமை உணர்ந்த சருக்கம், பாடல்-5). தொடர்ந்து பல பாடல்களில் குருபரனே - சூரியன், சிவன், உமை, கணபதி, முருகன் எனக் காட்சி தந்தமையை விளக்கியுள்ளார். எல்லாத் தெய்வமாயும், எல்லாப் பொருளிலும் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட மூலப் பொருளாகிய குருபரனே பரஞ்சோதி எனவும், அவன் அருபர அனுபவம் அப்படிப் பலவற்றாலும் அறியப்பெறுவதுடன் சகளத் திருமேனியில் அடியார்களாலும் அனுபவப்படும் நிலையினன் எனவும்,

''மனித்த யோனியில் பிறந்தவன் ஆயினும்
வாள் அவன் மேல் வீசில்
தொனித்தல் தானும் இல்லாது அது போய்வரும்
சொரூப சித்தியன் ஆனால்
தனித்ததோர் பரஞ்சோதி முற்றடித்துறும்
சகளம் ஒப்பவனே யாம்
அனித்த மாயையை நொடியினிற் கடைக்கணால்
அழிக்கவும் வல்லானே''

என்ற பாடலால் (மேல் - சருக்கம் பா - 15) தெளிவுபடுத்தி யுள்ளார் தண்டபாணி சுவாமிகள்.

### தண்டபாணி சுவாமிகள் குறித்த குருபரன் பரத்துவம்

குமரப்பெருமானையும் முருகப் பெருமானையும் ஆறெழுத்து மந்திரத்தால் விளக்கிக் காட்டியவர் தண்டபாணி சுவாமிகள். 'குமாராயநம' எனவும், 'சரவணபவ' எனவும் சடாக்கர மந்திரத்தை ஆறெழுத்தலங்காரம் என்ற நூலுள் வைத்துக் காட்டுகிறார்.

'' 'கு'வ்வுடன் 'மா'வும் 'ர'கர நெடிலுங் குலவு 'ய'வ்வும்
'ந'வ்வும் 'ம'வ்வும் புணரக் கவுமாரந் நவில் எழுத்தாறு
எவ்வுருவிற்கும் இசையாது நாற்புயம் ஏய்ந்திருக்குஞ்
செவ்வுருவக் குகற்கே சொந்தமாம் எனச்
செப்பலுண்டே'' (18)

என்பது ஆறெழுத்தலங்காரம். 'குமாராய' என்ற மந்திரம் முறைமை கொண்டொழுகும் கவுமாரத்திற்கு உரியது. அம்

மந்திரம் நான்கு திசைகளால் உள்ளடங்கிய எல்லாவற்றுள்ளும் நிறைந்திருக்கும் சேயோனுக்கே சொந்தமானது. அவன் 'குகன்' என்பதாக அனைத்தையும் உள்ளடக்கிய குகையாக விரிந்தவன் என்கிறார். எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு அவை செயற்பட விரிந்த பொருள் என முருகன் நின்றபோது குகன் எனப் பெற்றான். தனக்கு ஆதாரமின்றி, எல்லாவற்றுக்கும் ஆதாரப்பொருளாக நிறைந்த அவனை அடைய 'குமாராய நம' என்ற ஆறெழுத்து மந்திரம் கூறினார்.

"சகரம் ரகரம் வகரம் ணகரந் தனிப்பகரம்
வகரம் என்றுள்ள எழுத்தாறுள் ஒன்று மறுத்தும் வந்து(து)
அ(த)கரம் என்பார் சிலர் அன்று என்னில் ஐந்தெழுத்தாம் அதனால்
ஒகர நெடிலை முறையே கொண்டு ஓதுவது உத்தமமே" (20)

என்ற ஆறெழுத்தலங்காரப் பாடல் 'சரவணபவ' என்பதை 'உத்தம' நிலையில் விளக்கிக் காட்டியது. சண்முகனுக்கு 'சரவணபவ' என்பதே மந்திரம் என்றவாறும் (பா. 21) சுட்டியுள்ளார். 'ஓம்' உடன் சேர்த்து முறைப்படி ஓத எண்ணிய விளக்கத்தை "பரமன் தழல்விழி வந்த ஆறு" (பா. 21) என்ற அடிப்படையில் பேசுகிறார் சுவாமிகள். ஓம் என்பது சமஷ்டியாக இருந்து, சிவயநம என வியஷ்டியாக ஐந்தெழுத்தாக விரிவது, அது சிவ மந்திரமாவது. ஆறாவதாக வந்தவன் (அதோமுகத்துடன்) முருகன். அவன் சிவபெருமானின் வழி ஆறாக வெளிப்பட்டவன். ஐந்தாகிய சிவம் அறுமுகச்சிவனாக 'சரவணபவ' என்ற மந்திரம் தனக்கேயுள்ளவாறு வெளிப்பட்டான். அறுமுகனோடு சிவனை இணைத்து "ஓம் சரவணபவ" என ஏழு அமைப்பில் சுவாமிகள் வைத்துக்காட்டுவது சிந்தனைக்குரியது. ஆறாவதாக நின்றது ஐந்தை உள்ளடக்கிய நிலையில். ஆறு என்ற ஒன்றில் உள்ளடக்கி ஐந்தைக் காட்டாத சுவாமிகள் ஐந்தும் ஆறும் நிறுத்தி அதனையே ஏழாகக் காட்டுகிறார். முகத்தால் ஐந்திலிருந்து ஆறு; சமயத்தால் ஐந்தினுடன் கௌமாரம் அமைந்து ஆறு; என இரண்டாலும் இணைத்துக் காணப்பெற்ற சண்முகப் பெருமான் ஆறைக் கடந்த ஆறைத் தனக்கே உரியதாக்கிக் கொண்ட; ஐந்தில் இணைந்து ஆறு எனவும்; ஆறை உரியதாக்கிக் கடந்து ஏழு எனவும் குருபரன்

நின்ற தன்மையினைக் காட்டுமாறு "ஓம் சரவணபவ" என்பதைத் தனித்தன்மை நிலையிற் காணலாம்.

ஆறாவதாக நின்றது ஐந்தை உள்ளடக்கிய நிலையில் ஐந்தும் ஆறும் இணைந்தபின் ஆறின் தனித்தன்மை ஆறில் இல்லையென ஏழாம் நிலையில் குருபரனைக் குறித்தமை கொள்ளலாம்.

சைவத்தின் ஐந்தெழுத்தினதாய ஓங்காரம் கூடி சடாக்கரம் மெய்வழக்காக நிற்பது என, சிவனின் ஐம்முகத்தை இணைத்து ஆறுமுகமாக வெளிப்பட்ட முருகன் உண்மை பற்றி,

"சைவன் சொலைந் தெழுத்து ஓங்காரம் கூடில் சடாக்கரமா
மெய்வழக்கு ஈதறிவார் பலர் சிற்சில விம்பர்களே
பொய்வழி என்றிகழ்வார் இகழ்ந்தாலும் உள் புண்படுவார்
தெய்வ சமூகம் முருகோன் என்பார்க்கு உண்மை சிந்திக்குமே"

என்ற பாடலாலும் (ஆறெழுத்தலங்காரம் - 24) குறித்தார்.

சத்திய சூத்திரம் என்ற நூலில் 'பொதுஞாயம்' என்ற தலைப்பில்,

"அநந்த பேதத்து அறுவகைச் சமயமும்
அவை முழுது ஒருவலும் தழுவலும் ஆகும்
அதீத நெறி ஒன்றும் ஆய ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம் ஏழாயவே"

என்பது ஏழாம் பாடலாக அமைந்தது. எண்ணிலாத வேறுபாடு களை உடைய சமயங்கள் பல. அவற்றை ஆறு சமயவழிக் காணலாம். அவற்றின் உள்வேறுபாடு அறுமாறு, வேறுபாடுகளை நீக்கும் வண்ணமும் தழுவிச் செல்லும் வண்ணமும் கடந்த நெறி ஒன்று உண்டு. வழிபாட்டு அடிப்படையில் வார நாட்கள் ஏழிலும் அவற்றைக் கைக்கொள்ளும் நிலை உண்டு என்பார். "ஒருவல், தழுவல், அதீதம்" என மூன்றால் பரம்பொருள் நின்ற தன்மை சுட்டப்பெறுகிறது.

ஆறு சமயங்களில் இருந்தாலும் தன்னைத் தனிப்பட்ட ஒரு சமயத்தில் முருகப்பெருமான் 'குமரன்' எனக் காட்டிக் கொண்டான். அச்சமயம் கௌமாரம் எனப்பட்டது. அவனே எல்லாச் சமயக் கடவுளாகவும் அமைந்தும்; ஆறையும் தழுவியும்

நின்றவன் 'குருபரன்' எல்லாவற்றையும் இணைத்தும் எல்லா வற்றுள்ளும் இணைந்தும் பற்றுக்கோடாக நின்ற பரம் பொருளாக நின்றவன், எல்லாவற்றையும் கடந்த அதீதப் பொருளாக நின்றவன் 'கந்தன்'. கந்தன் என்ற பெயர் ஆறுமுகங் களாக நின்ற ஒளிப்பொருள் உமையால் ஓர் உருவில் இணைக்கப் பெற்று ஆறிற்கும் மூலமாக - பற்றுக்கோடு என காட்டப்பெற்ற நிலை,

> "அன்னவள் கண்டு அவ்வுருவம் ஆறினையும் - தன் இரண்டு
> கையால் எடுத்து அணைத்துக் கந்தன் எனப் பேர் புனைந்து
> மெய் ஆறும் ஒன்றுஆக மேவுவித்து"

என்றவாறு கந்தர் கலிவெண்பா நூலுள் (83-84) குமரகுருபரரால் சுட்டப்பெற்றது.

'காரண தேசிகனாம் முருகோன்' (ஆறெழுத்தலங்காரம் பா. 12) எனக் காரணப் பொருளாக நின்ற முருகனை "குமரன், குருபரன், கந்தன்" என்று மூவகை நிலைகளில் விளக்கப்படுத்தி,

> "சமரச போதந் தரவல்லதான சடாக்கரத்தை
> விமலதாய பிரணவத்தோடும் விளம்பிநர்க்குக்
> குமரன் குருபரன் கந்தன் என் மூவகைக் கோலமன்றி
> அமரர் குழாந் தொழும் அந்நெறிமூர்த்தம் அனைத்து
> நன்றே"

என்ற பாடலை (ஆறெழுத்தலங்காரம்-17) சுவாமிகள் அருளி யுள்ளார். ஆறெழுத்து மந்திரத்தினால் 'சமரசபோதம்' தரும் மூவகை நிலைகளில் நின்று முருகப்பெருமானை 'ஓம் சரவணபவ' என்ற மந்திரத்தால் கடந்த நிலையில் விளக்கி அவனே நங் "குரு" என்றவாறு,

> "ஆறு நெறிக்கும் பொதுவாய் அப்பால் அருள் நெறியைக்
> கூறும் அவனே நங் குரு"

என்று 'குருவணக்கம்' கூறுமுகத்தான் மனுநெறித் திருநூலில் (குருவணக்கம் ஐந்தாம் பாடல்) விளக்கியுள்ளார் தண்டபாணி சுவாமிகள்.

**குருபரன் கூட்டும் பேறு**

விநாயக வணக்கம் அருளாளர்களாலும் நூலின் முதற்கண் பாடப்பெற்று வருகிறது. அவ்வகையில் தம் நூல்களில் விநாயக

வணக்கத்தைச் சுவாமிகள் கூறியிருந்தாலும் குரு (சத்திய சூத்திரம்), முருகன் (முருகானந்தலகிரி) வேலாயுதம் (முருகன் அந்தாதி), முனி (ஆறெழுத்தலங்காரம்) ஆகியோர் 'காப்பு' அடிப்படையில் பாடியுள்ளார். 'தியானானுபூதி' நூலில் வரும் காப்பு,

> "வயா நீங்கற் காமுயலும் மாதவச்சீர் ஆய
> தியானாநுபூதி நன்னூல் செப்பத் – தயாநாட்டம்
> கொண்டகுரு ஆதிய பல் கோடிதெய்வம் ஆகி ஒன்றாய்த்
> தொண்டருள் வாழ் உண்மை துணை"

என அமைந்தது. வயா நீக்குதல், தயா நாட்டம் என இரண்டு செயல்கள் கூறப்படுகின்றன. நாம் பிறப்பு வழிப்பட்டவர்கள். அப்பிறப்பு 'வழி' நீங்குதல் வேண்டும். அதற்குத் தயா நாட்டம் கொண்டு குருபரனே பலகோடித் தெய்வமாக வருகிறான். அவனுடைய 'உண்மை' தொண்டர்களில் அறியப்பெறும். அந்த உண்மையைத் துணையாகக் கொள்ள வேண்டும் என்பதால், 'பேறு' அல்லது தயா நாட்டக்குருவை அனுபவித்த அனுபவத்தன்மையை 'உண்மை' என நாட்டுகிறார். குருபரன் பரத்துவமானது தொண்டர் அனுபவப் பேறாம் 'உண்மை' என்பதால் நிலைநாட்டப் பெறுகிறது. அவ்வகையில் முடிநிலையாம் உயர்நிலைப்பேறு உண்மையால் குருபரனின் பரத்துவம் பிறரால் தரப்படாத, தன்னாலேயே தரப்பெறுகிற பேறு என்ற வகையால் விளக்கம் பெறுகிறது. அவ்வகையில் 'தியான அனுபூதி' பரத்துவ உண்மையை உலகில் நிலைநாட்டப் பெற்ற அடிப்படையினது என்றார் சுவாமிகள்.

பேறு பற்றி 'விடுவது, பேறுவது' என்றவாறு 'முத்தி, சித்தி' எனப்பேசுகின்றார் சுவாமிகள். அவற்றால் அனுபவத்தைபிறவாத நிலை அடிப்படையில் விளக்குகிறார். பக்தி, வைராக்கியம், ஞானம் என்ற மூன்றும் பக்குவத்திற்கு வழிகள் எனவும் அவற்றைத் 'தியானம்' மூலம் கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். 'சகுணம்' எனப்பெறும் அறுசமய தெய்வ வடிவங்கள் ஏதேனும் ஒன்றில் தியானம் கைக்கொண்டு, புத்தியால் எண்ணப் படாநிர்க்குணப் பரம்பொருளைக் காணும் நிலையை முத்தி சித்தி என்பதால் விளக்குகிறார்.

"சித்திமுத்தி என்னும்இரு பேறும் பெற்றுத்
திரும்பாது வீட்டினிற்போய்ச் சேருவார்க்குப்
பத்தி, வைராக்கிய, ஞானம் என்னும் மூன்றும்
பக்குவமே அவர்நடக்கும் பாதை தன்னைச்
சத்தியமாய் யோசிக்கில் தியானம் ஒன்றே
சகுணமே அதற்கிசைவாம் சார்ந்து நின்றால்
புத்தியினுக் கடங்காநிர்க் குணமும் தோன்றும்
பூர்தவப் பயனில்லார் பொருந்திடாரே"

என்ற தியானானுபூதி முதற்பாடலில் அறுசமயக் கடவுளைக் (சகுணம்) கைக்கொண்டு அவற்றினையும் விடும் 'முத்தி' பெற்று, சித்தியாக நிர்க்குணப் பரம்பொருளைப் பெறுதலைக் கூறினார். இறவாமையும் உடல் வீழாமையும் அருள்விளக்க அனுபவங் களையும் வெளிப்படுத்தி வாழும், சித்திப் பேறுகளை 'நானிலைச் சதகம்' என்ற நூலில் விரிவாக எடுத்து விளக்கியுள்ளார்.

# வண்ணத்தியல்பும் அடிப்படைச் சந்தங்களும்

மா. சற்குணம்

சந்தம் என்னும் சொல்லுக்கு அகராதிப் பொருள்களாக அழகு, நிறம், வடிவு, சுகம், பழக்கம், செய்யுளின் வண்ணம், சந்தப்பாட்டு என்பன போன்ற பொருள்கள் சுட்டப் பெற்றுள்ளன. ஈண்டு செய்யுளில் அமையும் ஒழுங்கான இசைப் போக்கு (ஓசை அமைதி) என்னும் பொருளிலேயே 'சந்தம்' என்னும் சொல் கையாளப் பெறுகிறது. தமிழில் சந்தப் பாடல் களுக்கு இலக்கணம் கூறுவதாக இயற்றப்பெற்ற நூல் வண்ணத் தியல்பு என்பது. இதன் ஆசிரியர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். இந்நூலின்கண் உள்ள அடிப்படைச் சந்தங்கள் எவ்வாறு அமைந்தன என்பதை ஆய்ந்து வெளிப் படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

தொல்காப்பியர், பொருளதிகாரத்தின் செய்யுளியலில் 'வண்ணம்' பற்றிப் பேசியுள்ளார். அவர் இருபது வகை வண்ணங் களைக் குறிப்பிட்டுள்ளார். அவை செய்யுளின் ஓசை நலத்திற்குத் தேவையானவை எனலாமேயொழிய, அவையே சந்தங்கள் எனக் கொள்ள வியலாது.

தொல்காப்பியர் கூறும் வண்ணங்கள் எழுத்துகளின் மாத்திரை அளவு பற்றியும், அவற்றின் இனம் பற்றியும், பிற யாப்பு உறுப்புகள் (அசை, சீர், அடி, தொடை) பற்றியும் வெவ்வேறு வண்ணங்களாகப் பெயர் பெற்றன. சங்க கால வண்ணங்கள் பிற்காலத்திய சந்தப் பாடல்கள் தோன்ற காரண மாயின எனலாம்.

தமிழில் திருஞானசம்பந்தரின் பதிகங்களிலேயே சந்தப் பாடற்போக்குகளைக் காணலாம். பின்னர், திருமழிசை ஆழ்வார், திருவெண்காட்டு அடிகள், அருணகிரிநாதர் எனப் பலரால் சந்தப்

பாடல்கள் இயற்றப்பெற்றுள்ளன. சந்தப் பா உலகில் தனக்கென ஒரு தனிமுத்திரை பதித்த அருணகிரிநாதரைத் தொடர்ந்து பலர் சந்தப் பாக்களை இயற்றியிருப்பினும், தவத்திரு தண்டபாணி சுவாமிகளுக்கு ஒரு தனிச்சிறப்புண்டு. சுவாமிகள் சந்தப்பா புனைவதில் தன்னிகரற்று விளங்கியதோடு மட்டுமன்றி, சந்தப் பாடல்கள் இயற்றுவதற்கு என ஓர் அருமையான இலக்கண நூலை 'வண்ணத்தியல்பு' எனும் பெயரில் இயற்றியுள்ளார்கள். த, ந, ன, ய ஆகிய இவ்வெழுத்துகள் தாள சாத்திரத்தில் பெரும்பாலும் பயன்படுத்தப் பெறுவனவாகும். இவற்றைப் பயன்படுத்தியே சந்தங்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

வண்ணத்தியல்பு எனும் நூல் நூறு நூற்பாக்களால் ஆனது. முதலில், பாயிரம், அதிகார இலக்கணம், கற்றோர் தன்மை அநுமானக் குறிப்பு, அவையடக்கம் முதலியவற்றை அடுத்து நூற்காரணம், பெயரும் பயனும், ஆக்கியோன் தேற்றம், நூல் மாட்சி, நூற்பிறப்பிடமும் காலமும், அரங்கும் ஏற்றோரும் ஆகியன குறித்துப் பத்து செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றையடுத்தே நூல் தொடங்குகிறது.

சந்த வகைகளைப் பற்றி குறிப்பிடுவதற்கு முன் நூலாசிரியர், ஐ, ஔ ஆகிய எழுத்துகள் சந்தங்களில் இடம்பெறின் அவை எங்கெங்கு எவ்வாறு ஒலிக்கப்பெறல் வேண்டும் எனும் பொதுச் செய்தியைக் கூறுகிறார்.

> "அருந்தமிழ்ச் சந்தத்து ஐயும் ஔவும்
> ஈற்றிற் குறிலாய் இடையினும் முதலினும்
> குறிலொடு ஒற்றெனவும் குலாஅய் சிறிதும்
> நெடிலெனலின்றி நிகழும் அன்றே" (நூ. 2)

ஐ, ஔ ஆகிய எழுத்துகளில் ஒன்று ஒரு சந்தத்தின் ஈற்றில் வரின், குறிலளவாயும், நடுவிலும் முதலிலும் வரின் குறிலும் மெய்யும் சேர்ந்தாற்போன்று ஒன்றரை மாத்திரையாயும் ஒலிக்கப்பெறல் வேண்டும். நெடிலாய் ஒலிக்கும் தன்மை சிறிது இல்லை எனும் விளக்கமளித்து அடிப்படைச் சந்தங்களைச் சுட்டியுள்ளார்.

தத்த — தாத்த
தந்த — தாந்த
தன — தான

ஆகிய இவ்வெட்டும் அடிப்படைச் சந்தங்களாகும்.

"தத்தவும் தாத்தவும் தந்தவும் தாந்தவும்
தனவும் தானவும் தன்னவும் தய்யவும்
தத்தா என்பதின் நீடலும் அடங்கும்
எண்வகைச் சந்தம் என்பார் பெரியோர்" (4)

இவ்வெட்டும் ஈறு நீண்டு தத்தா, தாத்தா, தந்தா, தாந்தா, தனா, தானா, தன்னா, தய்யா என வேறு எட்டு சந்தங்கள் அமையும். மேலும் இவற்றுள் வடமொழிப் புணர்ப்பு கூடாது என்றும், வடமொழி மரூஉச் சொல்லைச் சேர்த்தால் மதுரப் பொலிவு குன்றும் என்பார். மேலும் கொடுந்தமிழ்ப் புணர்ப்பும், அளபெடைச் சேர்க்கையும் ஆகா என்கிறார்.

இச்சந்த விகற்பச் சொற்களுள் தன, தானா, தத்த, தந்த என்பன போன்றவை தேவார காலத்திற்கு முன்பிருந்தே வழங்கி வந்துள்ளன. எனினும் தந்த, தய்ய போன்ற வண்ணச் சொற்கள் தேவாரத்தில் மிகுதியும் கையாளப் பெறவில்லை.

தாள இலக்கணத்திற்குத் த, தி, தொம், நம், ட, ளாங், தின் ஆகிய ஏழு சொற்கள் ஆதாரமாக உள்ளன என்பர். இவற்றுள் த, நம் ஆகிய இரண்டனை வல்லினம், மெல்லினம், குறில், நெடில் ஆகியவற்றின் வேறுபாடுகளுடன் 'ய' எனும் இடையின எழுத்தையும் சேர்த்துப் பகுத்தமைத்தால் பற்பல வகையான புதிய ஓசைநலச் சொற்களைப் பெறலாம். இவற்றை சந்தக் குழிப்பு என்பர்.

இச்சந்தங்கள் ஒன்றுடன் ஒன்று வேறுபட்டிருக்கக் காரணம் அவற்றில் உள்ள வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் எழுத்துகளின் வேறுபாட்டாலும், குறில், நெடில் எழுத்துகளின் சேர்க்கையாலுமே எனலாம். சில சந்தங்களின் புணர்ப்புக்கு ஒரு துள்ளல் என்று பெயர். பல்வகைத் துள்ளல்கள் சேர்ந்து அமையின் அதற்கு ஒரு குழிப்பு என்று பெயர். குழிப்பு ஒரு மூன்று கூடியபின் தொங்கல் தாழிசை என்றிசைக்கின், அதற்கு ஒரு கலை எனப் பெயர். எட்டுக் கலைப் புணர்ப்பிற்கு ஒரு வண்ணப்பா என்று பெயர்.

ஒவ்வொரு அடிப்படைச் சந்தத்தின் தொடக்கமும் ஓர் உயிரெழுத்தாகவோ அல்லது ஓர் உயிர்மெய் எழுத்தாகவோ அமையலாம். இதனை '(மெய்) உயிர்' எனக் குறியிடலாம்.

அடுத்து வல்லொற்றோ அல்லது மெல்லொற்றோ வரின் அவற்றை வல், ஒ என்றோ மெல், ஒ என்றோ குறிக்கலாம். மூன்றெழுத்து உள்ள தத்த, தந்த என்பன போன்ற சந்தங்களில் மூன்றாவது எழுத்தை வல். ஒ-உயிர் எனக் குறிக்கலாம். ஒட்டு மொத்தமாக அவை கீழ்வருமாறு அமையும்.

தத்த = (மெய்) உயிர் + வல். ஒ + வல். ஒ + உயிர்

யாப்பு நூலார் ஆசெதுகை எனக் கூறுவதுபோல இச்சந்தம் ஆசெதுகையாக இடையின ஒற்று ஒன்றை இரண்டாம் எழுத்தாகப் பெற்று வரலாம். உயிரெழுத்தில் முடியும் இச்சந்தம் ஈற்றில் ஒரு இடையின ஒற்றைக்கொண்டோ அல்லது மெல்லின ஒற்றைக் கொண்டோ முடிந்தாலும் தவறில்லை. எனவே இவற்றையும் சேர்த்து,

(மெய்) உயிர் + (இடை. ஒ) + வல்.ஒ +<br>
க் + அ ர் த்

வல்.ஒ + உயிர் + (இடை/மெல்.ஒ)<br>
த் + அ ன்

எனக் குறிக்கலாம்.

முதலெழுத்தைத் தொடர்ந்து இரண்டு மெல்லின ஒற்றுக்களோ அல்லது இரண்டு இடையின ஒற்றுக்களோ அமையும். தன்ன, தய்ய ஆகிய சந்தங்களில் இரண்டாம் எழுத்தாக ஆசெதுகை போல் இடையின மெல் வருதல் இல்லை. தன என்பதாக இரண்டெழுத்தில் அமையும் சந்தங்களிலும் ஆசெதுகையாக இடையின ஒற்று வாராது. ய, ர, ழ, ல போன்ற இடையின மெய்கள் இரண்டாவதாக இடம்பெறக்கூடிய ந்தங்களில் அவை வருவதனால் அவற்றின் ஓசை கெடுவதில்லை. தண்டபாணி சுவாமிகள் அடிப்படை சந்த இலக்கணத்தைக்கூறி அவற்றுக்கேற்ற சான்றுகளையும் எடுத்துக்காட்டி உள்ளார்கள். அவை கீழ்வருமாறு அமைந்துள்ளன.

1. தத்த – பத்தி – ஒற்றர் – சிட்டன்<br>
நெய்த்து – மெய்ச்சொல் – கர்த்தன்

தத்தா – அத்தா – கற்றார் தொட்டான்<br>
பொய்க்கோ – நெய்க்கோல் – மெய்க்கோன்

2. **தாத்த** – காற்று - பாட்டர் - கூத்தன்
பார்ப்பு – தூர்த்தன் – காழ்த்தல்

தாத்தா – சாத்தா – ஆற்றார் – மாற்றான்
வேய்ப்பூ – வாய்த்தோர் – சீர்க்கோன்

3. **தந்த** – மஞ்சு – கொண்கர் – கந்தன்
மொய்ப்பு – மொய்ம்பர் – மொய்ம்பன்

தந்தா – அந்தோ – தங்கார் – வந்தேன்
மொய்ம்பா – மொய்ம்போர் – மொய்ம்போன்

4. **தாந்த** – வேந்து – வேந்தர் – பாங்கன்
பாய்ந்த – சார்ங்கர் – சார்ங்கம்

தாந்தா – சேந்தா – வாங்கார் – நான்றான்
நேர்ந்தோ – சார்ந்தார் – மாய்ந்தான்

5. **தன** – குரு – தவர் – சுதன்
தனா – குகா – சிறார் – கவான்

6. **தான** – காது – சூதர் – பாதம்
கேள்வி – சார்கண். – கூர்முள்
மான்வி – தேன்வி – மாண்மன்
கூன்வில் – ஆன்மர் – மாண்விண்

தானா – தாதா – போகார் – மேவான்
ஓர்பூ – கூர்வேல் – சேர்மான்
கேண்மோ – மான்வா – மாண்மான்
கூர்வாள் – வான்மேல் – தேன்வீண்

7. **தன்ன** – கண்ணி – மென்வி
அண்ணன் – பொன்வில்
என்வென் – முன்னர்

தன்னா – அண்ணா – மன்வா
முன்னோன் – அன்னோர்
தண்வான் – பொன்வேல்

8. **தய்ய** – வள்ளி – செய்தி
வள்ளல் – செய்கன்
செய்தல் – மெய்யன்

தய்யா - மெய்யே - நெய்தோ

தள்ளார் - ஒல்கேன்

செய்தோர் - வல்லோன்

இவற்றின் அமைப்பில் மேற்கண்ட சந்தங்கள் அமையலாம் என்கிறது வண்ணத்தியல்பு.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறும் ஒவ்வொரு சந்தத்தின் முதலிலும் ஈற்றிலும் குறில், நெடில் வேறுபாடுகளை அமைப்பதன்வழி நந்நான்கு சந்தங்களை உருவாக்கலாம். சான்று:

'தத்த' என்னும் இஃது மாறி அமைவதைக் கீழ்வரும் சொற்களால் எளிதில் அறியலாம்.

தத்த

தாத்த

தத்தா

தாத்தா

இவ்வாறு அவர்கள் கூறும் எட்டு அடிப்படைச் சந்தங்களும் அமையா. அவ்வாறு அமையின் இவற்றின் விரிவு 32 என நீளும். ஆனால் சுவாமிகள் கூறும் விரிவு 16 என்பதனோடு மட்டும் நிற்கிறது.

தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய இவற்றை ஈற்றில் நீட்டினால் தத்தா, தாத்தா, தந் தா, தாந்தா, தனா, தானா, தன்னா, தய்யா என அமையும் இவை மட்டுமே சுட்டப் பெற்றுள்ளன. தத்த, தந்த, தன என்பவற்றின் முதல் நீட்சிகளை தாத்த, தாந்த, தான என்பனவாகச் சுவாமிகள் கூறியுள்ளார்கள். ஆனால் தன்ன, தய்ய என்பவற்றின் முதல் நீட்சிகளைக் கூறவில்லை.

இதற்குக் காரணம் தன்ன, தய்ய என்னும் சொற்கள் ஈற்றில் நெடில் பெற்று தன்னா, தய்யா என்பனவாக அமையுமேயொழிய, முதல் நீண்டு தான்ன, தாய்ய என்பனவாக அமையா. முதல் நீண்ட இச்சொற்கள் மீண்டும் தான்னா, தாய்யா என ஈற்றில் நெடில் பெற்றும் அமையா. இவ்வாறு ஒரு நெடிலையடுத்து இரண்டு மெல்லொற்றுகளோ அல்லது ஒரு

நெடிலையடுத்து இரண்டு இடையின ஒற்றுக்களோ அமைந்துள்ள நிலையில் தமிழ்ச் சொற்களைக் காண இயலவில்லை. எனவே தான் தண்டபாணி சுவாமிகள் இந்த நான்கு வகைச் சொற் களையும் நீக்கி எஞ்சியவற்றைச் சந்தங்களாகக் குறித்து உள்ளார்கள் போலும்.

இவ்வாறு நோக்கினால் தன என்னும் சந்தத்தின் முதல் நீட்சியே தான என்பது. எனவே, தத்த, தந்த, தன, தன்ன, தய்ய என்னும் ஐந்தினை மட்டுமே அடிப்படைச் சந்தங்களாகக் கொண்டு, இவற்றின் முதலும், ஈறும் நெடிலாயமைவதால் தத்த, தந்த, தன என்னும் சந்தங்கள் ஒவ்வொன்றும் நந்நான் காக விரிந்து அமையும் நிலையில் அவை பன்னிரண்டாகும். தன்ன, தய்ய ஆகிய இரண்டும் ஈறு மட்டும் நீண்டமையும். அவ்வகையில் அவை நான்காயமையும். இவற்றை ஒருங்கிணைத் தால் 16 சந்தங்கள் வரும். இவற்றையே வண்ணத்தியல்பு நூலில் தண்டபாணி சுவாமிகள் கூறியுள்ளார்கள். எனவே அடிப்படைச் சந்தங்கள் ஐந்து. அவற்றிலிருந்தே பதினாறு சந்தங்களும் அமைகின்றன என்பது புலனாகும்.

# அறுவகை இலக்கணத்தில் புலமைக் கல்வி

இரா. சாந்தி

தமிழ் இலக்கணம் மொழியின் கட்டமைப்பு, பொருண்மை முதலியவற்றைச் சுட்டுவதாய் அமையும். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்தாய் இலக்கணம் வகைப்படுத்தப் பெற்றது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இவற்றொடு புலமையைக் குறித்து ஓர் இலக்கணம் யாத்து இலக்கணம் அறுவகை எனக் கொண்டார். புலவரைப் போற்றும் புனிதராய சுவாமிகள் புலமையிலக்கணத்தில் புலவன் என்ற தகுதி பெறுவதற்குரிய நடைமுறைகளைப் பலவாறு சுட்டுகிறார். அவ்வழி அறுவகை இலக்கணம் முழுவதிலும் புலமை என்ற உயர் நிலை பெறக் கூறும் பயிற்சியைப் 'புலமைக் கல்வி' என்ற இக்கட்டுரை கீழ்க்கண்ட தலைப்புகளில் ஆராய்கிறது.

## புலமை விளக்கம்

புலமைக்குப் புதிதாய் விளக்கம் தந்தவர் சுவாமிகள்.

புலம் என்பது அறிவு ஆகும். நூல் என்ற பொருளிலும் வரும். புலமை என்பது கல்வி, மெய்ஞ்ஞானம் என்ற பொருளிலும் வழங்கப்படுகிறது அறிவில் தேர்ச்சி பெறுதல் புலமை எனலாம். 'நச்சினார்க்கினியர்' திருமுருகாற்றுப்படை உரையில் (638, 280 அடி) புலம் -- அறிதல் என்றும், புலமை மெய்ஞ்ஞானம் என்றும் குறிக்கிறார். புலம் – அறிவு என்று (கலி. 27) சுட்டுகிறது. புலவர் சிறப்பை செந்நாப்புலவர் (புறம் 107) என்றும், 'அஞ்சொல் நுண்டேர்ச்சிப்புலவர்' (புறம் 235) என்று புறநானூறு சுட்டுகிறது. இத்தகைய அறிவுத்துறை சார்ந்த புலமைக்கு இலக்கணம் வகுத்துரைத்த வகையில் அறுவகை இலக்கணம் முதல் நூலாகும். தொல்காப்பியம் கூறும் அறிவர், நிறைமொழி மாந்தர், திருக்குறள் கூறும் சான்றோர், 'குணம் என்னும் குன்றேறி நின்றோர்' ஆகிய பெருமக்களின் பண்புகளைப் புலமையிலக்கணமாகத் தொகுத்துள்ளார். புலமை

என்பதற்கு புலமையிலக்கணம் சொற்பொருள் விளக்கம் கூறாமல் புலமையின் தன்மையைக் குறித்து மட்டும் கூறுகிறது.

''அறியுந் தன்மையைப் புலஆம் எனப்
பற்பல பெரியோர் பகர்ந்தனர் அன்றே''

(அறுவகை. நூ. 644)

ஐம்புலன்களின் உதவி கொண்டு ஒருவன் ஒன்றைப் பற்றிய அறிவைப் பெறும் பான்மை புலமை எனப்படும், என்று பல அறிஞர்கள் கூறுவதாகச் சுவாமிகள் கூறுகிறார்.

நூல் வழியாக மட்டுமன்றி கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனாலும் ஒரு பொருளை அறிதலே என்பதைத் தெளிவாகவே சுவாமிகள் 'அறியுந் தன்மை' எனப் பொதுச் சொல்லால் கூறுகிறார். பரிமேலழகர் புலம் என்பதற்கு நுகர்தல் என்று உரை எழுதுவார். (குறள்: 343).

புலவன் கொள்ள வேண்டியவை

புலமை பெறவேண்டும் என்னும் விருப்பு உடையவன் பெரும் புலமை பெற்றுள்ள அறிஞர்களைப் பணிந்தொழுதல் வேண்டும்.

''புலமையின் ஆசை பொலிந்தோன் ஒருவன்
அத்தொழிற் பெரியோர்க்கு ஆட்படல் நலமே''

(புலமை நூ. 5)

என்ற நூற்பாவில் கூறுகிறார்.

தமிழின் முதல் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிய புலந்தொகுத்தோன் தொல்காப்பியன் என்று பனம்பாரனார் கூறுவதிலிருந்தும் அறியலாம்.

எழுத்து முதல் அணியீறாகக் கூறப்பெறும் ஐவகை இலக்கணங்களைக் கற்றுணர்ந்த பாவலர் முன்பு வெறுப்பு இல்லாமல் கற்றல் வேண்டும் என்றும், செந்தமிழ்ப் புலமை வாய்க்கவேண்டுமென்றால் தெய்வத்துணை கட்டாயம் வேண்டும் என்ற கொள்கை சுவாமிகளின் புலமை இலக்கணம் குறித்த அழுத்தமான கொள்கையாகும். புலவன் நூற்பகை கொள்வது கூடாது. அப்படியே நூற்பகை ஏற்பட்டாலும் குறைவில்லை. ஆனால் நுண்ணிய புலமையாரின் பகை சிறிதும் ஆகாது

என்பதைக் கூறுகிறார். வள்ளுவர்கூட 'கொள்ளற்க சொல்லேர் உழவர் பகை' (குறள்: 873) என்கிறார்.

சோம்பல் பேருறக்கம், மடவார் மோகம், வறுமை இவை வந்து இடர் செய்தாலும் சோர்வடையாமல் கல்வியில் கவனம் செலுத்துவோர் சிறந்த புலமை பெறுவர் என்றும், தெய்வத்தைத் துதித்துத் தொடங்கப்பெறாத புலமை பழியையும், அவமதிப்பை யும் உண்டாக்கும் என்றும் கூறுகிறார். அகத்தியரை வணங்கினால் கவிதையினிமை, அருள் தன்மை ஆகிய இரண்டாலும் சிறந்து விளங்கக்கூடிய புலமையை அடையலாம் என்று புலமை பெறுவதற்குரிய வழிகளைச் சுவாமிகள் சுட்டுகிறார். திரு வள்ளுவர்கூட 'கற்றதனாலாய பயன் என்ன என்ற கேள்வியை எழுப்பி அதற்கு வாலறிவன் நற்றாள் தொழல்' என்று கூறுவதிலிருந்து இலட்சியமாகிய இறையன்பே கல்விக்குச் சாதன மாக அமையவேண்டும் என்பதில் சுவாமிகள் விடாப்பிடியாய் இருக்கிறார்.

**புலவன் கற்க வேண்டியது**

முழுமையான புலமை பெற வேண்டும் எனில் சில அடிப்படையான இலக்கணங்களைக் கற்றுத் தேற வேண்டும். எழுத்துச் சொற்புணர்ச்சி, சொற்களின் தெளிவான பொருள், பொருள் கோள் முறைகள், யாப்பின் ஓசை நயம், இலக்கிய மரபு, அணிகளின் அமைப்பு ஆகியவற்றில் சற்றும் ஐயமில்லாது தெளிவு பெற்ற பின்னரே சித்திரகவிகளில் சிந்தை செலுத்த வேண்டும் என்றும், பதம், கீர்த்தனை எனப்படும் நாடகப் பாடல்களைப் பழகுதல் தொடக்க நிலைப் பயிற்சிக்குச் சிறந்த தாகும் (அறுவகை 658) என்றும் விருத்தப்பாவைக் கற்றபின்னரே கட்டளைக் கலித்துறை இயற்றுதல் வேண்டும் (அறுவகை 659) என்றும் ஆசிரியப்பாவினைக் கற்றுப் பாடல் இயற்றிய பின்னரே கலிப்பா, வெண்பா கற்றுக் கவிதை பாடுதல் வேண்டும். வெண்பா, யாப்பு விரைவாகவும், இயல்பாகவும் பிழையற வருவதற்கு முன்னால் வண்ணம் பாடுதல் மரபன்று என்று சுவாமிகள் கூறுவதிலிருந்து அவரின் முழுப்புலமை அறிய முடி கிறது. சிற்றிலக்கியம் பாடிய பின்னரே காவியம் பாட வேண்டும் (அறுவகை 662). நல்ல காவியப் புலமை கைவந்த பின்னரே இலக்கணம், தத்துவம், சோதிடம், மருத்துவம் போன்ற அறிவு நூல்களை இயற்ற வேண்டும் (அறுவகை 663).

## புலவனின் இலக்கியப் பயிற்சிகள்

புலமை முழுமை பெறவேண்டுமெனில் இலக்கியப் பயிற்சி களை மேற்கொள்ள வேண்டும் பலவகையான பா வகைகளையும், இலக்கிய வகையையும் நன்கு தெளிவாக உணர்ந்து படிக்க வேண்டும். பல வகையான யாப்பு நிலைகள் இதனால் தெளி வாகும். இத்தகைய பயிற்சிக்கு வழிகாட்டியாக ஆசிரியரின் யாப்புக் கொத்தாக விளங்கும் 'சகத்திரதீபம்' வருடப்பதிகம் ஆகியன பெரும் துணையாய் உதவும் என்கிறார் (அறுவகை 446). மேலும் வெறுமனே யாப்பு இலக்கணங்களைக் கற்பதைக் காட்டிலும் பிழையற்ற முந்தைய இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்து தெளிந்து பயிற்சி பெறவேண்டும் (அறுவகை 447). இறையருள் பெற்ற புலமைக்குரியவன் எனக் கருதும் பட்சத்தில் யாப்பினைச் சாதாரணமாகக் கூறினாலும் புலிக்குப் பாய்ச்சலைக் கற்றுக் கொடுப்பதுபோல எளிமையாகிவிடும். அவ்வாறு இறையருள் பெறாதவனுக்கு யாப்பியலைக் கற்றுக் கொடுப்பது என்பது எருமைக்குப் பாயக் கற்றுகொடுப்பது போலாகும் (அறுவகை 454).

இவ்வாறு புலமைக்குரியவன் இறையருள் பெற்றுத் திகழ வேண்டும் என்பதை சுவாமிகள் கூறுகிறார்.

காலந்தோறும் புலமை மாறுபாடான பல சூழ்நிலைகளைக் கொண்டுள்ளது. அவற்றுள் பத்தொன்பதாம் நூற்றாண்டு கால புலவர் நிலை பலரால் பழித்துக் கூறப்பட்ட தன்மையில் விளங்கியது. காமரசம் பாடும் புலவர்கள் மிகுந்த காரணத் தினால் அவ்விழிநிலையைப் போக்கப் புலமை இலக்கணம் யாத்தார், புலமையிலக்கணம் அன்றி பல நூல்களிலும் புலவர் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவை புலவர்கள் இவ்வாறு தான் திகழவேண்டும் என்ற பாங்கில் அமைந்துள்ளது. இந்நிலையில் புலமை பெறக் கூடிய வழிமுறைகள் பலவற்றை அறுவகை இலக்கணம் சுட்டுகின்றது. இத்தகைய கருத்துக்கள் தற்காலத்தில் மட்டுமன்றி எதிர்காலத்திலும் நல்ல புலவர்கள் தோன்ற அடிப்படைத் தூண்டுகோலாய் அமையும்.

# அடிகளார் பார்வையில் அருணகிரிநாதர்

செ. சாரதாம்பாள்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் முருகன் அருள் நிரம்பப் பெற்றவர். சந்தக் கவிகள் பாடுவதில் வல்லவர். சமுதாயம், சமயம், தமிழ்மொழி, தமிழ்ப்பண்பாடு, சிவகருணை நெறி முதலிய தழைக்கப் பாடுபட்டவர்.

''வாக்குக்கு அருணகிரி'' என்று புகழப்படும் அருணகிரி நாதரிடம் அடிகளாருக்கு மிகுந்த பற்றுண்டு. அருணகிரிநாதரைப் பற்றி இலக்கியங்கள் கூறும் செய்திகள் முழுமையுடையன அல்ல. ஆதலால் அருணகிரிநாதரைப் பற்றிய, முருகனருளால் புலமையும் முக்தியும் பெற்ற அனைத்துக் கருத்துக்களையும் ஒருங்கே ஒன்று விடாது தரும் நோக்கத்துடன் ''அருணகிரிநாத அடிகள் புராணம்'' என்ற நூலை எழுதினார்.

இந்நூலில், அருணகிரிநாதரின் பிறப்பு முதல் முக்தி பெற்றது வரை உள்ள தானறிந்த அனைத்துக் கருத்துக்களையும் அடிகள் பலவகை நோக்கில் எடுத்துரைக்கின்றார். அவற்றில் அடிகளாரது சமயக் கருத்துக்களும், தனிப்பட்ட நோக்கங்களும் வெளிப்படு கின்றன. எனவே அடிகளாரது நோக்கில் வெளிப்படும் அருணகிரிநாதர் குறித்த அனைத்துச் செய்திகளையும் வெளிக் கொணர்வது கட்டுரையின் நோக்கமாகும்.

### பக்தி ஈடுபாடும், பரவலும்

முருகனின் ஆறெழுத்து மந்திரத்தைப் பன்முறை ஓதியதால், அந்நாள் முதல் அருந்தமிழ்ப் பனுவல் இயற்றினார். தெள்ளு தமிழால் திருப்புகழ் பாடினார். அருணகிரிநாதருக்கு முருகன் மகிழ்ந்து காட்சி அளித்தான். இந்நிலையை அடிகளார்,

''கண்டான் வணங்கிப் புகழ்ந்தா
னெழுந்தான் கரம் சென்னிமேற்
கொண்டான் உள்வெப்பம் குளிர்ந்தான்
மகிழ்ந்தான் குதித்தாடினான்.'' (அருட். சருக். 14)

என்று குறிப்பிடுகிறார். அருணகிரிநாதரை மக்கட்குலத்தில் பிறந்தும் தெய்வ வடிவாகினன் என்று ஏத்திப் பாடுகின்றார். அருணகிரிநாதரைத் தெய்வ வடிவமாகவே அடிகள் காண்கிறார்.

பலாப்பழத்திற்குச் சுவை; மலருக்கு வண்டு; இவற்றை யாரும் காட்ட வேண்டியதில்லை. அதுபோல குருநாதனை உலகுக்குக் காட்ட வேண்டியதில்லை. ஆன்மா தானே தேடி வரும். இதுபோன்று அருணகிரிநாதரை மக்கள் தேடி வந்தனர். அவர் அருள் பெற்றனர். அருணகிரியார் முருகனருள் பெற்ற தன்மை பார்புகழும் மக்களிடம் பரவியது.

அந்நாளில் அப்பொழுது ஆட்சி செய்த மன்னன் பிரபுட தேவனும், அருணகிரிநாதரை முதல் முதலில் திருவருணைக் கோவிலில் கண்டான். எனினும் யாரோ பித்தன் இறைவனை வணங்கிக் கொண்டிருக்கிறான் என்று நினைத்து எதுவும் பேசாது சென்றுவிட்டான். ஆனால் பின்னாளில் இந்த மன்னனே அருணகிரிநாதர் புகழுக்குப் பலவிதத்தில் பெருமை சேர்த்தான்.

**புலமை ஆழமும் வாதமும்**

அருணகிரிநாதர், சந்தக் கவிகள் பாடுவதில் சிறந்து விளங்கினார். இவரது புலமையைக் கண்டு இகழ்வாக எண்ணினார் வில்லிபுத்தூரார் எனும் புலவர். இவரும் சந்தக் கவிகள் பாடுவதில் வல்லவர். கையில் எப்பொழுதும் தண்டுடன் திரிவர். தன்னுடன் வாதிட்டுத் தோற்றவர் காதை அறுப்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தார். (வாழ்வியற் களஞ்சியம், ப.772). இத்தகைய வில்லிபுத்தூரார் அருணகிரிநாதரைப் போட்டிக்கு அழைத்து இகழ்ந்தார். அருணகிரிநாதரோ அமைதியாக இருந்தார். அவையடக்கமாகப் பேசி, 'விகடபரிமள' என்ற திருப்புகழைப் பாடினார். எனினும் வில்லிபுத்தூரார் வியக்கவில்லை.

பிரபுட தேவன் வேண்ட அருணகிரிநாதர் விருப்பப்படி முருகனுக்கு முறையான பூசைகளையும் செய்தான் மன்னன். அம்மன்னன் முன்னிலையில் போட்டி ஆரம்பமாயிற்று. அருணகிரிநாதர் சந்தக் கவிகள் பாட, வில்லிபுத்தூரார் பொருளுரைக்க வேண்டும் என்பதே அப்போட்டியாகும். இந்தப் போட்டிப்பாடல்களே கந்தர் அந்தாதியாகும்.

அருணகிரிநாதர் பாட வில்லிபுத்தூரார் பொருள் உரைத்தார். ஆனால், ''திதத் தித்த'' என்ற பாடலுக்கு வில்லியாரால் விளக்கம் கூற முடியவில்லை. தோற்ற வில்லி புத்தூரார் காதை அருணகிரிநாதர் அறுக்க ஒப்பவில்லை. நான் கொடுத்த காது என்று இருக்கட்டும் என்றார். இதை உணர்ந்துதான் ''கருணைக்கு அருணகிரி'' என்பர். வில்லி புத்தூராருக்கு அருணகிரியாரின் சந்தப் பாக்கள் வியப்பை ஊட்டியது. அருணகிரிநாதருடன் வாதிட்டபின், இரக்கமற்றவர் வில்லிபுத்தூரார் என்று ஊரார் பழிக்கும் நிலை மாறியது. உயிர்களிடத்து இரக்கம் கொண்டார். ஆணவம் ஒழியப் பெற்றார். அருணகிரிநாதர் புகழ் உள்ள வரை, வில்லி புத்தூராரின் புகழும் பேசும்போது வில்லிக்குக் கிட்டியது. வில்லிபுத்தூரார் கலகச் சுருக்கத்தை, இங்கு அடிகளார் அருணகிரிநாதரின் புலமை நயம் உலகுக்கு வெளிப்படுத்த மிகவும் ஆழமாகப் படைத்துள்ளார்.

வில்லிபுத்தூராரைப் போலவே சம்பந்தாண்டான் என்பவன் அருணகிரிநாதர் மீது பெரிதும் பொறாமை கொண்டான். அவன் காளி வழிபாட்டினன். தான் வணங்கும் காளியைக் காட்ட முடியும். நீ வணங்கும் முருகனைக் காட்டமுடியுமா? என்று பொறாமைத் தீயுடன் அருணகிரிநாதரை வாதுக்கழைத்தார். அருணகிரிநாதரின் இணையற்ற பக்தித் திறத்தை அடிகளார் சம்பந்தாண்டான் பகைமைச் சுருக்கத்தில் விரித்துரைக்கின்றார்.

**சம்பந்தாண்டான் அருணகிரிநாதர் வாதமும், இணையற்ற பக்தித் திறனும்**

பக்தி இலக்கியக் காலத்திலிருந்தே சமணர்களுக்கும் சைவர்களுக்கும் சமயப்போர் நடந்ததைப் பக்தி இலக்கியங்கள் சுட்டுகின்றன. இங்கு அடிகளார் சம்பந்தாண்டானை, அமணன் என்றே பல இடங்களில் குறிப்பிடுகின்றார். சம்பந்தாண்டானைச் சமணரின் உறுப்பினராகவே இங்கு அடிகளார் படைத்துள்ளார்.

முதலில், சம்பந்தாண்டான் உயிர்ப்பலி கொடுத்து வேள்வி செய்து காளி தேவியை வழிபட்டான். அம்பிகையின் மடி மீதமர்ந்து முருகன் நடத்திய கொஞ்சு மொழியினால் அம்பிகை சம்பந்தாண்டான் வழிபாட்டிற்கு வரவில்லை. இதை உணர்ந்த சம்பந்தாண்டான் அவமானம் அடைந்தான். அருணகிரியாருக்கு

முருகன் வந்தால் நான் ஊருக்கு அப்புறம் சென்றுவிடுவேன் என்று சொல்லி, முருகன் அருணகிரிக்கு வருவதைத் தடுக்க அம்பிகையை வேண்டினான்.

அம்பிகை தன் அரவணைப்பிலிருந்து முருகனை விரவிடாது வைத்துக் கொஞ்சினாள். அடிகளார் இதையறிந்து மயில் வகுப்பு பாட, கயிலையில் மயில் ஆடியது. மயில் கழுத்தின் நீலநிறமும் தோற்றமும், அம்பிகைக்குச் சிவனை நினைவூட்ட, அம்பிகை தன் அன்பரை மறந்து சிவனிடம் சென்றாள். உடனே, முருகன் திருவருணைக் கம்பத்தில் மயிலுடன் காட்சி தந்தான்.

கந்தனின் ஒளி மன்லனின் பார்வையை மங்கச் செய்தது. எனினும் முருகன் காட்சி கிடைத்த வெற்றியை நினைத்து மன்னன் மனம் மகிழ்ந்தான். மீண்டும் அருணகிரியாரின் வேண்டுதலால் மன்னனுக்குக் கண்கள் வந்தன.

அருணகிரிநாதர் விருப்பப்படி மன்னன் திருக்கோவில் பணிகளைச் செய்தான். சம்பந்தாண்டான் இருந்த இடத்தில் அருணகிரியார் எண்ணப்படி ''திருக்குளம்'' வெட்டினான். இவ்வளவு நடந்தும் சம்பந்தாண்டான் மனம் அடங்கவில்லை. பொறாமைத் தீயினால், விண்ணுலகில் உள்ள பாரிசாத மலரைக் கொண்டு வரமுடியுமா? என்று சவால் விட்டான். அருணகிரிநாதரும் அச்சவாலை ஏற்றார். கிளி உருவம் எடுத்தார்.

**கிளி உருவம் எடுத்தல்**

அருணகிரிநாதர் தன் தூல உடம்புடன் வானுலகு செல்ல இயலாது. ஆதலால் தன் உடம்பைக் கோபுரத்தின் மேல் மாடத்தில் வைத்து, இறந்த கிளி ஒன்றின் உடலில் தன் உயிரைப் புகுத்தி கிளி உருவம் பெற்றார். விண்ணுலகு நோக்கிப் பறந்து சென்றார்.

மன்னன் அருணகிரியாரின் உடலைக் கண்டு கண்ணீர் விட்டான். ஆனால் அமணன், ஆண்டான் அருணகிரியார் மலர் கொண்டுவர இயலாது நாணமுற்று, நஞ்சுண்டு இறந்தான். இது கோயிலுக்குத் தீட்டுடைத்து என்று பலர் வாயிலாக மன்னனுக்குக் கூறினான். உடனே உடம்பைத் தீயிலிட்டு மன்னன் எரித்தான்.

அருணகிரியாரோ வானுலகம் சென்றார். முருகன் திருவருளால் இவர் வரமுடிந்தது என்று தேவர்கள் உணர்ந்தனர். கிளி பாடிய சந்தப் பாட்டினால் இந்திரன், இந்திராணி முதலியோர் மகிழ்ந்தனர்.

இந்திரர் கையில் கிளி அமர்ந்தது. விஷயம் அறிந்தனர்.

"கண்டி தோர் கிளி தானெனக் கருதிடில்
கடும் பிழை வரும்"

இவர் ஞான பண்டிதன் முருகன் அடியருள் சிரியன். பாவலர் களில் உயர்ந்தவன் என்று அமுதம் ஊட்டினர். உடல் புனிதம் பெற்றது. கிளி வந்த காரணத்தைக் கூறி உடன் மலர் பெற்றுத் திரும்பியது.

பாரிசாத மலர் ஊரெங்கும் மணம் பரப்பியது. மன்னன் மகிழ்ந்தான். அவர் உடலை எரித்ததற்குக் காரணம் அமணன் என்று மன்னன் அறிந்தான். அவனை வெட்டி வீழ்த்த நாடினான். கிளி வடிவில் இருந்த அருணகிரியார் தடுத்தார். இங்கு அருணகிரி மூலம் அடிகளார், உடல் அழிந்தது வினைப்பயன். எல்லாம் முருகன் அருள் என்ற கருத்தைக் குறிப்பிடுகின்றார்.

விளைப் போகமே தேகம். ஆதலால் முந்தைய தூல உடல் அழிந்தது. ஆன்மாவிற்கு அழிவில்லை. உயிர்க்கு இந்த உடலும், மனித உடலும் வேறானவைகளே என்ற தமது சமய நோக்கு களை இங்கு அடிகளார் வெளிப்படுத்துகின்றார்.

முருகன், காளியிடமிருந்து அருணகிரியைக் காக்க வேண்டி அம்பிகையைப் புகழ்ந்து பாடச் சொன்னார். உன்னையல்லால் வேறொருவரைப் பாடேன். ஆனால் நீ பணித்தலால், அம்பிகை பாலன், வேலாயிருக்கும் இயல்பினன் என்று பாடினார். காளி தேவி, சிங்க வாகனத்தில் வந்து சமணனைக் கொன்றாள்.

இங்கு அடிகளார் அமணன் இறப்பு மூலம் தனது சமயக் கருத்துக்களைக் குறிப்பிடுகின்றார். எவ்வளவுதான் இறை யனுபவம் பெற்றிருந்தாலும் ஆணவம், வஞ்சகம் அழுக்காறு உடையவர்கள் திருந்தாமல் இருந்தால் ஒருநாள் அழிவர் என்பதை எடுத்துக் காட்டுகின்றார்.

மேலும், அடிகள் தேவி வழிபாட்டில் வெறிப்புனல், புலைத் தசை இட்டுப் பூசை செய்பவர் மடிவர் என்பதையும் அறிவுறுத்து கின்றார். ஆண்டான் செயல் மூலம் இதை எடுத்துக்காட்டி, அம்முறை, வழிபாட்டில் கூடாதென்பதையும் அறிவுறுத்து கின்றார்.

**கிளி முக்தியடைதல்**

அடிகளார் கிளி வாழ்க்கைச் சருக்கம் என்று தனியே ஒரு சருக்கம் அமைத்து, அதில் கிளி முக்தி அடைந்த திறனைக் கூறி, தனது நோக்கினை நிறைவேற்றிக் கொள்கிறார்.

பிரபுட தேவன் மன்னன் தன் மக ்க்கு முடிசூட்டி விண்ணுலகம் சென்றான். வல்லான் மன்னன் (பிரபுடதேவன் மகன்) கிளியை நாள்தோறும் பணிந்து நல்லதோர் ஆட்சி செய்தான்.

அரசனைப் புலவன் கிளி வடிவில் உள்ள அருணகிரியார் பாடல்களை எழுதினார். கிளியான அடிகள் உண்டால் தங்கள் வாழ்வு பயன் பெறும் என்று பலரும் கிளிக்கு அமுதம் இட்டனர் பல கிளிகளும் உண்ணும் காட்சி கண்டு அகம் மகிழ்ந்தனர் பலர் கிளியின் உண்மைத்தன்மை கண்டு வணங்கினார்கள் புகழ்ந்தார்கள். அன்பு செய்தனர்.

கிளி வடிவில் இருந்த அருணகிரியார் கந்தர் அனுபூதி, அலங்காரம் போன்ற பைந்தமிழ்ப் பனுவல்களை எழுதிவார். இறுதியில் வேற்படை புனைந்த முருகன் வாழும் "கந்தகிரி" செல்ல விருப்பம் கொண்டு அங்கு பறந்து சென்றார். உலக இச்சைகளைப் போக்கி ஞானவாழ்வு தர வல்லவனான கந்தப் பெருமானை வணங்கிக் கந்தர் அனுபூதி பாடியது.

பாடின கிளியின் செஞ்சொல்லினைத் தன் பன்னிரு செவி களால் முருகன் கேட்டு மகிழ்ந்தான்.

'வாடிடல் வேண்டல் வாவா என்று
வரவழைத் தொருவன் சேவல்
நீடிய புயத்தின் நேரா
நிகழ்வலத் தோளில் வைத்தான்" (கிளி. வா. ச. 20)

தேவர்கள் மகிழ்ந்து மலர் பொழிந்தனர். இவ்வாறு அருணகிரியார் உலக இச்சைகளைத் துறந்து, முருகனை வணங்கி, முருகனிடமே முக்தி பெற்றார்.

இத்துடன் அமையாது, வல்லான் மன்னன் அருணகிரியாரிடம் பேரன்பு கொண்டு, கோபுரம் எழுப்பித் திருத்தொண்டுகள் பல செய்தான். அம்மாண்பினை விளக்கி, நன்றியறிதல் பொருட்டு, கோபுரத்துச் சருக்கம் என்று தனி ஒரு சருக்கம் அமைத்து இப்புராண நூலை அடிகளார் முடித்துள்ளார்.

புராணத்தில் அடிகளார் குறிப்பிடும் முற்பிறப்பு வரலாறும் அருணகிரிநாதரின் செயல்களும் ஒப்பிடும் வண்ணம் அமைந்துள்ள திறம் இங்கு குறிப்பிடத்தக்கது.

**முற்பிறப்பு வரலாறும், அருணகிரிநாதர் செயல்களும் ஒப்பீடு**

அருணகிரிநாதருக்கு முதல் பிறவியான முற்பிறவியில் அகத்திய முனிவர் அருள் கிட்டியது. இச்செயலில் இப்பிறவியில் அருணகிரிநாதருக்கு முருகன் அருள் கிட்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறது.

அகத்திய முனிவர் தவ வேடம் கொண்டு ஊரினுள் வரும் போது அவரைத் தவசிகள் என்று மக்கள் யாரும் உணரவில்லை. இது போன்று அருணகிரியார் நோய் நீங்கி, முருகன் அருளால் நல்லுடம்பு பெற்று முருகனை வணங்கினார். துறவுள்ளம் கொண்ட போதும் மக்கள் அவரை இகழ்ந்தார். உண்மைத் தன்மையை அறிந்திலர் என்று உலக இயல்பை அடிகளார் இங்கு எடுத்துரைக்கின்றார்.

அகத்திய முனிவரை நாய் தொடர்ந்து வந்து, அவர் அருள் செய்ய நாய் பேசியது. அதன் பிறப்புயர்வை அறிந்தும் அறியாத சித்தன் ஒருவன் ஆணவமொழி பேசி நாய் என இகழ்ந்தான். இதைக் கண்ட குறுமுனியின் அருள் நோக்கால் நாய் அருந்தமிழ்க் கவி பாடியது. சித்தன் இதனைக் கண்டு ஆணவம் நீங்கப் பெற்று நாயின் உயர்வை வணங்கினான். இது போன்று சம்பந்தாண்டான் ஆணவமும் அருணகிரிநாதர் புலமைத் திறத்தாலும் முருகன் அருளாலும் நீங்கப்பெற்றது.

இரண்டாவது பிறவி இந்திரன் பிறப்பாகும். இந்திரன் சுகபோக வாழ்வு வாழ்பவன். தேவர்களுக்கு அரசன். அடுத்த பிறவியான அருச்சுணன் பலநூறு மனைவிகளை உடைய இன்ப வாழ்வு வாழ்ந்தவன். இத்தகைய முற்பிறப்பின் தொடர்பாக, அருணகிரிநாதரும் பெண்களின் சுகபோக வாழ்வில் சிக்கி உழன்றவர் என்பது இங்கு உணரத்தக்கது. கணிகையர் இச்சையில் அருணகிரிநாதர் மூழ்கி இருந்ததன் காரணம் தகப்பன் வழி வந்த தொடர்பு என்ற ஒரு கருத்தினையும் அடிகளார் குறிப்பிடுகின்றார். இந்த இன்ப விளையாட்டின் எல்லைதான் அருணகிரியாருக்கு முருகன் அருள்கிட்ட வழி வகுத்தது. எவ்வாறெனினும் முற்பிறப்பு தொடர்பு இப்பிறவியிலும் இருந்தது ஒப்புக் கொள்ளத்தக்கதே ஆகும்.

முற்பிறப்பில் ஒன்றான கண்ணப்பர் சிவன் அருள் பெற்றவர். 'கண்ணப்பர் அருகே நிற்க' என்று சிவனருகில் நிற்கும் பேறு பெற்றவர். அருணகிரிநாதரும் கிளி வடிவாகி, முருகன் தோளில் அமரும் முக்தி பெற்ற திறனும் இங்கு ஒற்றுமை உடையது.

நக்கீரர் சிவனுடன் வாதிட்டவர். அஞ்சாது வாதிடுவதில் வல்லவர். சிவன் திருவிளையாடலுக்கு ஆளாகி, மறுபடியும் உருவெடுத்து வந்தவர். அருணகிரிநாதரும் வில்லிபுத்தூரார், சம்பந்தாண்டானை வாதில் வென்றதும், கிளி உருவெடுத்து சம்பந்தாண்டான் சவாலில் வெற்றி கண்டதும் இவண் குறிப்பிடத்தக்கது.

பொய்யாமொழிப் புலவர் பிறவியில் சங்கப் பலகையே எதிர்வந்து அவரது புலமைத்திறத்தை உலகுக்கு உணர்த்தியது. வில்லிபுத்தூரார் வாதச் சருக்கம், சம்பந்தாண்டான் பகைமைச் சருக்கம் இரண்டும் அருணகிரிநாதர் ஆணவப் புலவர்களை வாதிட்டு வென்ற திறத்தினையும் அவரது புலமைத் திறத்தினையுமே வலியுறுத்திக் காட்டுகிறது.

சிறப்புப் பாயிரத்தில் அடிகளார்,

> "எண்ணிலாப்பல கோடி தொண்டர் முருகவேளை
> இறைஞ்சி நிற்க அருணகிரி என்னும்"

நற்பெயர் பெற்ற புண்ணியனே அத்தனை ஞானமும் கைவரப் பெற்றான். ஒருவனது பிறப்பு உயர்வு தாழ்விற்கு, பூர்வப் பிறவிப்

பயனே காரணம் ஆகும். இதனை உணர்த்தவேண்டி அருணகிரி நாதரது முற்பிறப்புக்களின் வரிசையை இறைவன் விளக்கியவாறு கூறலானேன். முற்பிறப்பின் தொடர்பை வலியுறுத்தவே இங்கு முற்பிறப்பு என்று சுட்டாது பூர்வ புண்ணியச் சருக்கம் என்று அமைத்துள்ளேன் என்று பழம்பிறப்பு வரலாற்றமைவிற்கு அடிகளார் காரணம் காட்டுகிறார். எவ்வாறாகினும் பூர்வ புண்ணிய வரலாற்றுச் செயல்கள் அருணகிரிநாதரின் வாழ்க்கைச் செயல்களில் ஒவ்வொரு படியிலும் ஒப்புமைத் தன்மையும் தொடர்பும் உடையதாய் அமைந்துள்ளதும் சிறப்புடையதாகும்.

### அருணகிரிநாதரும் அடிகளாரும்

அருணகிரிநாதரும் தண்டபாணி அடிகளாரும் முருகன் அருள் பெற்றவர்கள். இருவரும் முருகன் அருளால் சந்தப்பாக்கள் பாடுவதில் வல்லவர்.

முருகனுக்குப் பதினெட்டு கண்கள் என்று கூறியபோது, அதற்குத் தகுந்த காரணங்களையும் கூறித் தம் புலமைத் திறத்தை வெளிப்டுத்தியவர் அருணகிரியார் என்பார் அடிகளார். தண்டபாணி அடிகளும் தம் முதற்கவியில் 'பூமிகாத்தாள்' என்ற அம்பிகையின் கோவிலுக்குப் புதிய பெயர்க் காரணத்தைக் கூறி யாவர் மனத்திலும் நின்றார் என்பர்.

அருணகிரிநாதரும் தெய்வம் ஒன்றுண்டு என்று நம்பித் திருவருணைக் கோபுரத்திலிருந்து குதித்தார். முருகன் அருள் பெற்றார். அடிகளாரும் முருகனைக் கண்ணெதிரே காட்சி தரவேண்டி, திருமலை உச்சியிலிருந்து உருண்டு, யாதும் தீங்கு வராது இறையருளால் காக்கப் பெற்றார்.

அருணகிரியாருக்கு போல, தண்டபாணி அடிகளுக்கும் முருகன் காட்சி தந்து, நீ நமது அருணகிரியே என்று முற்பிறப்பை உணர்த்தியதாக அடிகளார் குறிப்பிடுகின்றார். (வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வரலாறு, ப. 9) இதை,

> "தொல்லை யருணகிரிதான் என்றன்னவன் சொன்னதுண்மை
> இல்லை என்றாற்குமுக் கொன்றதும் கோடை இடிவிழுமே"

என்று தண்டபாணி சுவாமிகள் வரலாறு குறிப்பிடுகின்றது.

இவ்வாறு பற்பல கருத்துக்களில் ஒப்புமை உடையவர் என்பதும், அருணகிரியின் முற்பிறவியே அடிகளார் என்பதும் இன்னும் நுணுகி அறிய வேண்டிய ஒன்றாகும். எனினும் அருணகிரிநாதரின் தொடர்ந்தமைந்த பிறப்பு தான் அடிகளாகிய தமது பிறப்பு என்பதில் அடிகளார் பெருமையடைகிறார். இது முருகனின் வாக்கு என்றும் உறுதிப்படுத்திப் பாடல்களில் காட்டுகின்றார்.

முடிபுகள்

உயிர்களுக்கு மறு பிறப்புண்டு; ஆன்மாவிற்கு அழிவில்லை. இத்தேகம் தூல உடம்பாகும். இது வினை வயப்பட்டது என்ற சமய நம்பிக்கை உடையவர் அடிகளார். பிறவிதோறும் முன் வினைப்பயன் தொடரும் என்பதை அருணகிரிநாதர் வாழ்க்கை மூலம் உறுதிப்படுத்திக் காட்டுகிறார். வாழ்க்கையில் ஆணவம் நீங்க வேண்டும். அதற்கு முருகனின் பிரணவ மந்திரமே துணை என்று வலியுறுத்துகிறார். அருணகிரிநாதர் மீதுள்ள அளவிறந்த பக்தியினாலும் முருகன் அருளாலும் அவர் முக்தியடைந்த திறனை, புலமை நயத்தினை இப்புராணத்தில் வலியுறுத்திக் காட்டுகிறார். அருணகிரிநாதரின் அடுத்த பிறவியே, 'தான்' என்பதில் நம்பிக்கை கொண்டவர். அருணகிரிநாதரும் சித்தரே. இதை வேண்டும் வடிவில் உருவெடுத்த கிளி வடிவச் சருக்கத்தின் மூலம் உய்த்துணர வைக்கிறார். பெரிதும் முருகன் அருள் பெற்ற பக்தர்கள் எல்லோரும் ஒரு விதத்தில சித்தர்களாகவே விளங்கியமையும் இவண் நினைவு கூறத்தக்கது. எத்துணைதான் பற்றறுத்தாலும் தாய்ப்பாசம் என்பது உலகில் தலைசிறந்த ஒன்று. இதைப் பட்டினத்தார் வரலாற்றில் அறியலாம். இது போல இங்கு அருணகிரியார் வாழ்க்கையிலும் அடிகளார் எடுத்துக் காட்டுகின்றார். எவ்வளவுதான் இறையனுபவம் இருந்தாலும் அடக்கம் தெய்வீகத்தன்மை தரும் என்பதையும் இப்புராணத்தில் புலப்படுத்திக் காட்டுகின்றார்.

# சுவாமிகளின் சொல்லிலக்கணக் கோட்பாடு

எச். சித்திரபுத்திரன்

பல்வேறு காலக்கட்டங்களில் வளர்ந்துவரும் மொழியமைப்பை விளக்கப் படைக்கப்பட்டவை மரபிலக்கணங்களாகும். மொழியின் இலக்கணக் கூறுகளையும் அவற்றின் சிறப்புத் தன்மைகளையும் விளக்குவது மரபிலக்கணங்களின் அடிப்படைப் பணியாகும் மரபிலக்கணங்கள் அவை தொகுக்கப்பட்ட காலத்திற்குரிய மொழிக்கு ஏற்பவும் சமுதாய அமைப்பிற்கு ஏற்பவும் இலக்கணச் செய்திகளில் பல ஒற்றுமை வேற்றுமைகளைப் பெற்றுத் திகழ்கின்றன. நீண்ட கால வளர்ச்சியில் மொழியில் ஏற்படும் மாற்றங்கள் இலக்கணங்களில் தாக்கம் பெறுவது தவிர்க்க இயலாத ஒன்றாகிவிடுகின்றது. மரபு இலக்கணங்களின் வரலாற்றை ஆராயும் நிலையில் மரபு வழியாக மாறிவரும் மொழி அமைப்பையும் அறிந்து கொள்ள இயலும். அதன் விளைவாகக் குறிப்பிட்ட ஓர் இலக்கணப் பண்பு கால வாரியாக எவ்வாறு மாற்றம் பெற்றுப் பயன்படுத்தப்பெற்று வந்துள்ளது. என்பதை இலக்கண வரலாற்று ஆய்வின் மூலம் பொது நிலையில் நன்கு அறிந்து கொள்ள முடியும். மொழியின் இலக்கண விதிகளை விளக்கி மொழியைத் தவறின்றிக் கையாளுவதற்குரிய விதிமுறைகளை வகுத்துத் தருவது விதிமுறை இலக்கணமாகும் குறிப்பிட்ட ஒரு காலக்கட்டத்திற்குரிய மொழி அமைப்பை மட்டும் விளக்கும் இலக்கணம் விளக்க முறை இலக்கணமாகும். தமிழ் மரபிலக்கணங்கள் பொது நிலையில் விளக்கமுறை இலக்கணங்களாகவே அமைந்துள்ளன. எனினும் வடமொழி மரபை அடியொற்றிப் படைக்கப்பட்ட வீரசோழியம், இலக்கணக் கொத்து என்பன பயிற்று மொழிக் கூறுகளை உள்ளடக் கியனவாகத் திகழ்கின்றன. இவ்வகையில் தமிழில் தொல் காப்பியம் முதல் சுவாமிநாதம் வரை பல மரபிலக்கணங்கள் தோற்றம் பெற்றுள்ளன. இவை ஒன்றிற்கு மேற்பட்ட இலக்கண வகைகளை விளக்குவனவாக உள்ளன. அதாவது மரபிலக் கணங்கள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனும்

பகுதிகளை உள்ளடக்கியுள்ளன. இவை தவிர இலக்கணத்தின் ஏதேனும் ஒரு பகுதியை மட்டும் விளக்கிச் செல்லும் இலக்கண நூற்களும் அவ்வப்போது தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. இலக்கணச் செய்திகளின் தன்மை, வரையறை என்பன இலக்கண நூலின் வகையைப் பொறுத்தே அமைந்திருக்கும். சென்ற நூற்றாண்டில் தண்டபாணி சுவாமிகளால் படைத்தளிக்கப் பெற்ற அறுவகை இலக்கணம் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க ஓர் இலக்கணமாகும். அறுவகை இலக்கணத்தின் அமைப்பு, இலக்கணக் கூறுகளின் விளக்கம், வைப்பு முறை முதலியன ஆராய்ந்து நோக்கத்தக்க ஒன்றாக அமைந்துள்ளது.

## அறுவகை இலக்கணத்தின் அமைப்பு

அறுவகை இலக்கணம் பெயருக்கு ஏற்ப எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம், புலமை இலக்கணம் எனும் ஆறு இலக்கணப் பிரிவுகளைக் கொண்டது. புலமை இலக்கணம் எனும் பகுதி இவ்விலக்கணத்தில் புதிதாகச் சேர்த்துக் கொள்ளப் பெற்றுள்ளது. புலமையிலக்கணத்தில் புலமை, கல்வி, குறித்த பல செய்திகள் எடுத்தியம்பப் பெற்றுள்ளன. புலமை இலக்கணம் மிக ஆழ்ந்து படித்து இன்புறத்தக்க ஒன்றாக உள்ளது. புலமை இலக்கணம் எழுதப்பட்டதற்கான காரணத்தைப் பதிப்பாசிரியர் முன்னுரையில் விரிவாக விளக்கியுள்ளார் ( நாகராசன், பக், X—XIV ). இவ் விலக்கணம் 786 சூத்திரங்களைக் கொண்டுள்ளது. ஒன்று முதல் இருபத்தி நான்கு அடிகள் வரையுள்ள சூத்திரங்கள் இவ்விலக் கணத்தில் இடம்பெற்றுள்ளன (1-18) இவ்விலக்கண நூல் 1893இல் முதன் முதலாகப் பதிப்பிக்கப் பெற்றது. முதல் பதிப்புப் படிகள் கிடைக்கவில்லை. மீண்டும் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியின் வெள்ளி விழா நினைவாக 1978 இல் இந்நூலின் மறுபதிப்பு வெளிவந்தது. மூன்றாம் பதிப்புத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் 1990 இல் திரு. ப. வெ. நாகராசன் என்பவரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப் பெற்றது.

## சொல்லிலக்கண அமைப்பும் வகைப்பாடும்

எழுத்திலக்கணத்தை அடுத்துச் சொல்லிலக்கணம் இடம் பெறுகின்றது. பிற இலக்கணங்களில் இடம்பெறும் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, இடையியல்

உரியியல், எச்சவியல் போன்ற இயல்கள் தனியாக அறுவகை இலக்கணத்தில் இடம்பெறவில்லை. இவ்வியல்களில் இடம் பெற்றுள்ள பல செய்திகள் அறுவகை இலக்கணத்தில் ஆங்காங்கே விளக்கப்பட்டுள்ளன. சொல்லிலக்கணத்தில் 112 நூற்பாக்கள் இடம்பெற்றுள்ளன. முன்னர்க் கூறியதுபோல் சொல்லி லக்கணத்தில் பொதுவியல்பு, பிரிவியல்பு, சார்பியல்பு, திரிவியல்பு எனும் நான்கு இயல்புகள் இடம்பெற்றுள்ளன. மரபிலக்கண சொல்லதிகாரத்தில் உருபன்கள் பற்றிய விளக்கமும் அவற்றின் வரையறை பற்றிய செய்திக்கும் அதிக முக்கியத்துவம் தரப் பெற்றிருக்கும். அறுவகை இலக்கணத்தில் உருபன் அமைப்பு சொல் வரையறை, சொற்பொருள், பயன்பாட்டெல்லைப் பற்றிய செய்திகள் விரிவாக இடம் பெற்றுள்ளன. பொதுவியல்பு, சார்பியல்பு, திரிவியல்பு போன்றவற்றில் சொற்பொருள், சொல் வழக்கு குறித்த விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

பொதுவியல்பு எனும் பகுதியில் சொற்களின் ஆக்கம், சொற்பெருக்கம், சொற்களின் திரிவு குறித்த செய்திகள் குறிக்கப் பட்டுள்ளன. இப்பகுதியில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கது சொற் பொருளைப் பல நிறங்களுடன் தொடர்புபடுத்திக் காணும் கோட்பாடாகும். சொற்களின் வழக்கு அடிப்படையிலும் நடை அடிப்படையிலும் இக்கோட்பாடு பின்பற்றப்பட்டுள்ளது. இது பற்றி விரிவாகப் பின்னர்க் காண்போம்.

### ஒலி மாற்றக் கோட்பாடு

இன எழுத்துக்களின் உச்சரிப்பு மாற்றத்தினால் ஏற்படும் பேச்சு, வட்டாரச் சொற்களைக் குறிப்பிடும் ஆசிரியர் இவ்வகைச் சொற்களைப் பயன்படுத்துவது ஏற்புடையது அன்று என்ற கோட்பாட்டைக் கொண்டுள்ளார். இதை,

......இவைபற்றி அனைத்தும் பிறழப்
பொறித்தலும் பேசலும் பொருத்தம் அலவே (2.3)

என்ற சூத்திரத்தின் வழி அறிந்து கொள்ளலாம். இலக்கிய வழக்கிலிருந்து திரிந்து வழங்கும் சொற்களைக் குறிப்பிடும் சுவாமிகள் அத்தகையச் சொற்கள் இலக்கியத் தமிழில் வழங்கல் ஆகாது என்றும், இசை நாடகத் தமிழில் பயன்படுத்தப்பெற்றால் ஏற்றுக் கொள்ளலாம் என்ற கோட்பாட்டைக் கொண்டுள்ளார்.

**பிறழ்ந்து வருதல்**

/ற்/ → /ர்/ 'தறை'; 'தரை'
/ழ்/ → /ள்/ 'உழி'; 'உளி'
/ன்/ → /ந்/ 'வனம்'; 'வநம்'

**பேச்சு வழக்குச் சொற்கள்**

வருகின்றவன் → வாறவன்
கொண்டுவந்து → கொண்டாந்து
ஏனடி → ஏண்டி

பேச்சு வழக்குக் குறித்த அவர் கோட்பாட்டைப் பின்வரும் நூற்பா அடி விளக்கிக் கூறும்.

வாசகத்து அன்றி வண்ணம் நாடகம்
எனும் இரு பகுதியில் இசையினும் தகுமே (2.4)

**சொற்பொருண்மை**

சொற்களின் ஆளுமை குறித்து விளக்கிச் செல்லும் ஆசிரியர் சொற்களின் பெருக்கத்தைச் சேந்தன் திவாகரம், காங்கேயரின் உரிச்சொல் நிகண்டுகளின் வழி தெரிந்து இலக்கியத்தில் கையாள வேண்டும் என்று கூறுகின்றார் (2.4). முத்தமிழில் வந்து வழங்கும் சொற்களை அவற்றின் வழக்கு மற்றும் நடையின் அடிப்படையில் பல்வேறு வகைகளாகப் பிரித்துக் காட்டுவார். இவ்வகைப்பாடு நிறங்களின் குறிப்புப் பொருள் அடிப்படையில் அமைக்கப் பட்டிருப்பது இவ்விலக்கணத்தின் சிறப்புப்பண்புகளுள் ஒன்றாகும். தமிழ்ச்சொற்கள் அவை பயன்படுத்தப்படும் தன்மைக்கு ஏற்பவும் பொருள் வெளிப்பாட்டுத் தன்மைக்கு ஏற்பவும் பல நிறங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை:

1. வெண் சொல் – எழுத்துரு அறியாப் பாமரர் எளிதில் புரிந்து கொள்ளும் சொற்கள்.
2. பளிங்குச் சொல் – கற்பவர் அறிவாற்றலுக்கு ஏற்பப் பொருள் வெளிப்படும் சொற்கள்.
3. கருமைச் சொல் – எளிதில் பொருள் விளங்காச் சொற்கள்
4. செஞ்சொல் – இலக்கிய வழக்குச் சொற்கள்
5. பொன்னிறச் சொல் – உபசார வழக்குச் சொற்கள்

எடுத்துக்காட்டாகச் சோறு எனும் சொல்லின் ஒரு பொருட் பன்மொழிகளையும் அவற்றிற்கான நிறங்களையும் பின்வருமாறு விளக்கிக் காட்டுவர்:

சோறு—
- அன்னம் என்பது சோறு என்பது வெண் சொல்
- அன்னம் என்பது பறவையோ சோறோ என மயக்கம் தோன்றுவதால் பளிங்குச் சொல்
- 'பதம்' என்பது ஒரு பல பொருள் சொல் எனவே கருமைச் சொல்
- அமுது என்பது இலக்கிய வழக்குச் சொல்லாக உள் ளதால் செஞ்சொல்
- அடிசில் என்பது உபசார வழக்கு என்பதால் பொன் னிறச் சொல்

தமிழைப் புதிதாகக் கற்றுக் கொள்வோர் முதற் பொருளை மட்டும் தெரிந்துகொள்வர். நுண்பொருளை அறிய மாட்டார்கள். எனவே இவ்வகைச் சொற்களை அறிந்து பயன்படுத்த வேண்டும் என்பது சுவாமிகளின் கோட்பாடாகும். சொற்களின் குறிப்புப் பொருளையே நுண்பொருள் என்று ஆசிரியர் குறிப்பிடுவது இவண் நோக்கத் தக்கது. சுவாமிகளின் கருத்துப்படித் திருமுருகாற்றுப் படை கருமைச் சொற்களையும் திருப்புகழ், விநாயகர் அகவல் போன்றனசெஞ்சொற்களையும்,ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாடிய பாடல்கள் பொன்னிறச் சொற்களையும் கொண்டன. அவ்வாறு வரும் நிற பேதச் சொற்களை நன்கு உணர்ந்தே ஒரு புலவன் இயல், இசை, நாடகங்களைப் படைக்க வேண்டும். ஊனக் கண்ணைவிட மனத்தால் சிந்தித்துச் செயல்படவேண்டும் என்பது சுவாமிகளின் கருத்தாகும்.

**பிரிவியல்பு**

அறுவகை இலக்கணத்தில் சொற்களைப் பெயர், வினை சுட்டு, ஏவல், அமைதி, தன்மை, உரி, ஒப்பு, விளி, இரக்கம், வியன் எனப் பலவாறாகப் பிரித்துக் காட்டுவார்.

*பெயர்ச்சொற்கள் இடுகுறி, காரணம் என இரு வகைகளாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. இடுகுறிச் சொற்கள் பகாப்பதம் என்றும் காரணச் சொற்கள் பகுபதம் என்றும் கொள்ளப் படுகின்றன (வேல்→ வேலன்)

* பெயர்ச்சொற்கள் ஆண், பெண், அலி என மூன்றாகப் பகுக்கப்பட்டுள்ளன.

* பெயர்ச் சொற்களில் காணப்படும் ஈறுகளை வரையறுத்துச் சொல்லும் ஆசிரியர் அவை எவ்வாறு பிறழ்ந்து வருகின்றன என்பதை எடுத்துக்காட்டுகளுடன் குறிப்பிடுவார் (2.30 – 39)

சிவை, உமை அஃறிணை போன்ற உயர்திணை பெண்பால்

கணபதி, மால் அஃறிணை போன்ற உயர்திணை ஆண்பால்

உம்பர், இடங்கர் உயர்திணை போன்ற அஃறிணை

உறையுள், கள் உயர்திணை போள்ற அஃறிணை

வினைச்சொற்களின் இன்றிமையாத பல பண்புகள் இவ்விலக்கண நூலில் குறிக்கப் பெறவில்லை.

* வினைச்சொற்கள் தன்வினை, பிறவினை, பொதுவினை என மூன்றாகப் பகுக்கப் பெற்றுள்ளள.

* இலக்கண விளக்கத்தை அடியொற்றி இவ்வகைப்பாடு செய்யப் பெற்றாலும் இலக்கண விளக்கத்திலிருந்து அறுவகை இலக்கணம் வேறுபட்டு நிற்கின்றது.

* திணை, பால், இடம், காலம் காட்டாமல் செயலை மட்டும் சுட்டி நிற்கும் வினைகள் பொது வினைகளாகும். தொழிற்பெயர் என்று அழைக்கப்படும் சொற்கள் பொது வினைகளாகக் குறிக்கப் பெற்றுள்ளன. (உண்ணல், வருதல்)

மரபிலக்கணங்கள் குறிப்பிட்டுள்ளபடி ஒரு செயல் எழுவாயால் செய்யப் பெற்றால் அது தன்வினை என்றும், வினையின் செயல் மற்றொருவரால் செய்யப்பெற்றால் அது பிறவினை என்றும் பெயர்பெறும். சுவாமிகள் தன்வினைக்கும் பிறவினைக்கும் கொடுத்துள்ள எடுத்துக்காட்டுகள் மற்றொரு வகையில் அமைந்துள்ளதைக் காண முடிகின்றது. பிறவினைக்குப் பால் வரையறை அடிப்படையாகக் கொள்ளப்பட்டுள்ளது சிறப்பாக நோக்கத் தக்கது.

வந்தேன், இருந்தேன் – தன்வினை

வைதான், சிரித்தாள், ஓடியது – பிறவினை

பிறவினைக்குத் தரப் பெற்றுள்ள எடுத்துக்காட்டுகள் தன்வினைகளாக உள்ளன.

* வினைச் சொற்களை நல்வினை, தீவினை எனப் பாகு படுத்தி வாழ்வியல் நெறியோடு இணைத்துக் காட்டி யிருப்பது இவண் நோக்கத்தக்கது (2 . 49).

ஈகை - நல்வினை
ஏற்கை - தீவினை

* பெயர், வினை, இடை, உரி எனும் சொற்களைப் பொருள் வேறுபாட்டின் அடிப்படையில் பல வகைகளாகப் பிரித்துக் காட்டியிருப்பது சுவாமிகளின் சொற்பொருண்மை அறிவை வெளிக்காட்டுவதாய் அமைந்துள்ளது.

| | |
|---|---|
| செய், போ, நில் | – ஏவல் |
| வளர்ச்சி, தளர்ச்சி, அகலம் | – தன்மை |
| உறு | – உரி |
| ஏ | – விளி |
| ஐயோ | – இரக்கம் |
| கூகூ | – கூட்டுகை |
| ஆ, ஓ | – வியப்பு |

சொற்களைப் பொருள் அடிப்படையில் வகைப்படுத்திக் காண இயலாது என்பதைக் 'கடல் நீர் அளக்கை போலாம்' (2.60) என்று கூறுவதிலிருந்து சொற்புலத்தின் பரந்துபட்ட தன்மையைச் சுவாமிகள் நன்கு விளக்கியுள்ளார் என்பதை அறிந்து கொள்ள இயலும்.

**சார்பியல்பு**

சார்பியல்பு எனும் மூன்றாம் பகுதியில் சொற்களைச் சார்ந்து வரும் விகுதி, சாரியைப் போன்றனவும் போலி, உவமை, மங்கல வழக்கு என்பனவும் யாப்பு அமைப்பு, புத்தாக்கமும்போன்றனவும் விளக்கப்பெற்றுள்ளன.

* மங்கல வழக்கு என்பது அறிஞர்களின் வழக்காகும். மங்கலச் சொற்களுக்கு எழுத்து வரையறை இல்லை எனினும் எழுத்து வரையறையுடன் வருவது சிறப்பாகக் கருதப்படும்.

* மங்கல வழக்குச் சொற்கள் மூன்று, ஐந்து, ஏழு எனும் ஒற்றைப்படை எழுத்துக்களைப் பெற்று வரும்.

* மங்கல வழக்குச் சொற்கள் ஈறு திரியாமல் வருவது சிறப்பாகும் (2. 66, 67).

* புதுச் சொற்கள் படைக்கப்படுவதை வரவேற்கும் ஆசிரியர் புதுச்சொற்கள் படைக்கப்படுவதில் தவறொன்றும் இல்லை என்ற கருத்தைக் கொண்டுள்ளார்.

**திரிவியல்பு**

சொற்பொருள் பற்றிய செய்திகளைக் கொண்ட மற்றொரு பிரிவு திரிவியல்பாகும். இப்பகுதியில் சொற்களின் திரிவு, பொருள் மயக்கம், பல பொருள் சொல், ஆகுபெயர், அன்மொழித் தொகை, புணர்ச்சி போன்ற பல இலக்கணப் பண்புகள் விளக்கப் பெற்றுள்ளன.

* ஒரு பொருளைக் கொண்ட பல்வேறு சொற்களைப் பயன் படுத்தும்பொழுது சொல்லின் பொருள் வெளிப்பாடு சிறந்து நிற்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும் (2.90)

யானை என்பதை மதலை எனக் குறிப்பிடும்பொழுது மதம் எனும் பொருள் சிறந்து நிற்கின்றது.

* இலக்கியங்களில் பொருளை வருவித்து உரை செய்யும் பொழுது சொல் பயன்பாட்டில் அதிக கவனம் செலுத்துதல் வேண்டும் எனும் கோட்பாட்டை,

தன் கருத்து அல்லாப் பொருள் தரும் சொற்கள்
நன்று அல.........(2.92)

எனும் நூற்பா மூலம் உலகிற்குக் காட்டுவார். புலி கொல் யானை எனின் புலியைக் கொன்ற யானையா? அல்லது யானையைக் கொன்ற புலியா? எனும் மயக்கம் ஏற்படும். இவ்வாறு மயக்கம் இல்லாமல் சொற்களைக் கையாளுதல் வேண்டும் என்பது சுவாமிகளின் கருத்தாகும்.

* ஒரு சொல் பல பொருள்களைத் தரும் நிலையில் சொற் பொருள் மயக்கம் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

* எழுத்துக் குறையின்றிச் சொற்களை இலக்கியங்களில் கையாள வேண்டும். ( கமலை → மலை → கலை → கம )

* ஒரு புலவர் கையாண்ட கருத்தை அல்லது சொற்களை அப்படியே மற்றொருவர் பயன்படுத்துதல் கூடாது என்பது சுவாமிகளின் கருத்தாகும்.

ஒருவன் சொல்லோடு கருத்து மற்றொருவனது
ஆதலும் திருடலும்ஆம்; இவை இரண்டும்
அவர்திறம் கருதி அறிதல் மிக்கு எளிதே (2.95)

* செய்யுள் விகாரம் தமிழ் மொழியின் இயல்பு என்பதும் எல்லாத் திரிபுகளையும் விரித்துக் கூறுதல் இயலாது என்பதும் சுவாமிகளின் கருத்து.

* இடைச் சொற்கள் பல பொருள்களில் பயன்படுத்தப் படுவதுண்டு.

உம் —
- வேலும் மயிலும் (சுட்டுதல்)
- தெய்வமும் பொய்யோ? (உயர்ச்சி)
- நானும் உய்வனோ (சிறப்பு)
- இரங்கும் ... ... (எதிர்காலம்)

* மரபிலக்கணங்களிலிருந்து அறுவகை இலக்கணம் பல வழிகளில் மாறுபட்டுள்ளது.

* பெரும்பாலான இலக்கணக் கூறுகளின் பொதுப்பண்பு சிறப்பாக விளக்கப்படவில்லை. எனினும் பல சிறப்புப் பண்புகள் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன.

* சொல்லிலக்கணத்தில் சொற்களின் அமைப்பு விளக்கங்கள் மட்டுமில்லாமல் சொற் பொருள், சொல் வழக்கு, பயன்பாடு குறித்த பல செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

* சொற்களின் வழக்கினைக் காட்ட நிறங்கள் அடிப் படையாகக் கொள்ளப்பட்டுள்ளது போற்றத்தக்கச் சிறந்த முயற்சியாகும்.

* பிறழ்வு, திரிவு, மாற்று வடிவங்கள் போன்ற சொற் பண்புகள் இயல் தமிழில் வழங்கப்படலாகாது.

* இசை, நாடகத்தமிழில் இவற்றின் பயன்பாடு தடை செய்யப்படுவதில்லை என்பன சுவாமிகளின் சில கோட் பாடுகளாகும்.

# சுவாமிகளின் தமிழுணர்வு

ச. சிவகாமி

புத்தம் புது இலக்கிய வகைகள் பலவற்றாலும் பாடிய பாடல்களின் தொகையாலும் தமக்கு ஒப்பாரின்றி இன்றளவும் உயர்ந்து நிற்கும் தண்டமிழ்ச் செல்வர் தண்டபாணி சுவாமி களாவார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றித் (22-11-1839 — 5-7-1898) தமிழன்னையைத் தம் தமிழுணர் வால் அலங்கரித்தவர்; அன்றும் இன்றும் தமிழ்ப்பற்றில் தன்னிகரற்று விளங்கும் இவரே, தமிழ்மொழிப் பற்றிற்கு வித்திட்டு, உரமிட்டுப் போற்றிய முன்னோடியாவார். இவரது படைப்புகள் வெளிஉலகிற்கு அறிமுகப்படுத்தப் படாமையால் இவ்வுண்மை இதுகாறும் மறைந்து நின்றது. இதனை வெளிப் படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமும் பயனுமாகிறது.

## தமிழுணர்வு

தமிழ் மொழியின் மீது கொண்ட பற்று வெளிப்பட்டுள்ள நிலையைத் தமிழுணர்வு எனக்கொள்ளலாம். தமிழ் பற்றிய எண்ணம்; தமிழுக்கு ஆற்றிய தொண்டு; தமிழைப் போற்றிய முறைமை; தமிழ்ப் படைப்புகளுக்களிக்கும் சிறப்பு; படைப் பாளரைப் பாராட்டும் திறம் என்பன தண்டபாணி சுவாமி களின் தமிழுணர்வைத் தெளிவாக்குகின்றன.

## தமிழ் பற்றிய எண்ணம்

> எண்வகைச் சந்தமும் பாடும் திறமும் இகலவரை
> விண்வயிற் செல்ல விடுக்கின்ற சக்தியும் மெய்யநலும்
> கண்வரு காட்சியும், தோயும் பெருமைக் கவிஞர்வென்றி
> தண்வழிச் சாராற் பொதியை முன் ஈன்ற தமிழ்க்கழகே
>
> (தமிழ் 100)

என மொழியும் தண்டபாணி சுவாமிகள், இறைவனிடம் கொண்டுள்ள பற்றை, பக்தியைத் தமிழ் மொழியிடமும் கொண்

டுள்ளார். தென்மொழியாம் தமிழ் வடமொழியை விட உயர்ந்தது; உலகில் உள்ள பிற மொழிகள் அனைத்திற்கும் இவையே அடிப்படை என்பது இவரின் உறுதியான கருத்து. கும்பமுனி அகத்தியனால் தமிழ் தோற்றுவிக்கப்பட்டது என்பதில் நம்பிக்கை கொண்ட இவர் தமிழை, செந்தமிழ், முத்தமிழ், அருந்தமிழ், பைந்தமிழ், இன்தமிழ், தீந்தமிழ், சீலத்தமிழ், தண்டமிழ், கனிதமிழ், சந்தத்தமிழ், துதிக்கும்தமிழ், தேந்தமிழ், பொழிதமிழ், வண்ணத்தமிழ், செழுந்தமிழ், வெண்டமிழ், வீறுதமிழ், இலகுதமிழ், கவின்தமிழ், மன்னுதமிழ், சீர்த்தமிழ், தூயதமிழ், கொழிதமிழ், செய்யதமிழ், முதிர்தமிழ், பழுத்ததமிழ், குலவுந்தமிழ் எனப் பலவாறாக, பரவலாகப் போற்றுகின்றார்.

மொழியின் சிறப்பு துலங்கும் வண்ணம் தம்படைப்புகளில் அவரளித்துள்ள அடைகளும் நோக்கத் தக்கன.

> வாயில் வந்துள்ள நறுந்தமிழ் (பழனி. பாயி. 5)
> வண்டுழாய் புரைதமிழ் (திருவர. பதிற். 85)
> அட்ட பாலொடு தேன்போலு மருந்தமிழ் (புல. 2:67)
> சிறுமுனிவன் செந்தமிழ் (பழனி. வெ. மாலை 67)
> முப்பழச்சாறு அன்னதமிழ் (பழனி. நவ. 18)
> முதிர் பழமைச் சங்கத்தமிழ் (பழனி வகுப்பு. 1)
> கோலாகலக் கோமளத்தமிழ் (பழனி. பிள்ளை. 71)
> முதிர்சொற் பருவ முத்தமிழ் (பழனி. கலம். 5)
> தெள்ளமிழ் தனைய தீந்சொற் றெரிதமிழ் (திரு. பதிற். 28)
> கள்ளையும் பழித்துக் கனிதமிழ் (திரு. செந். சதகம். 2)
> பாகுவுங் கசக்கத்தகு பெருஞ்சுவைசேர் பசுந்தமிழ்
> (மேற்படி. 37)
> நாகரிக மிகுதமிழ் (திரு. சந்த. திருப். 26)
> பழுதிலாத செழுந்தமிழ் (மேற்படி 34)
> மொய்த்த நீபங் குரவம் நீலம் வெட்சி போலும்தமிழ்
> (மேற்படி 39)
> அதிக இங்கிதமான மதுர வண்டமிழ் (திரு. தசா. வகு. 4)

என்பன சில காட்டுகளாகும். இவற்றால் தமிழின் சுவை அளப்பரிது, உணர்த்தற்கரிது என்பன இவரின் கருத்தாகப் புலப்படுகின்றது.

### தமிழுக்கு ஆற்றிய தொண்டு

முருகனால் முற்பிறப்பில் அருணகிரிநாதன் என்று உணர்த்தப்பட்ட தண்டபாணி சுவாமிகள் (தனி. 180) நாயன்மார் போன்று பல தலங்களுக்கும் சென்று அங்குள்ள இறைவன் இறைவியரைப் பாடும் பாங்கினைக் கொண்டிருந்தமையால். முந்நூற்றுக்கும் மேற்பட்ட தலங்கள் இவரின் பாடல்களைப் பெற்றுள்ளன. இவரது படைப்புகளும் படைப்புகளின் பெருமை களும் இவர் தமிழுக்கு ஆற்றிய தொண்டாகச் சிறப்பிக்கப் படுகின்றன.

தமிழிலக்கிய வரலாற்றில் 'தன் வரலாறு' படைத்த முதலாமர் என்ற பெருமையைத் தம் 'குருபரத தத்துவம்' எனும் நூல் வழி பெறுகிறார். ஆங்கிலேயர் எதிர்ப்பினை வெளிக் காட்டிய முன்னவராகவும், கீர்த்தனையில் அமையும் தனிப்பாடல் மற்றும் ஆங்கிலியர் அந்தாதியில் காணலாம்.

திருவாமாத்தூர் தலபுராணத்துள் பழங்கதைகளையும், புதுக் கதைகளையும் பேசுவதுடன் தம்மனுபவத்தையும் இணைத்துப் புது விருந்து படைக்கும் இவர் (2:9) தம்மை,

> செந்தமிழ்ப் பாண்டிநாட்டுத் திருநெல்வேலியிலோா சேயாய்
> வந்தனன் என்பேர் மூன்றுவகைப்பட உலகம் சொல்லும்
> கந்தவேள் அருளால் வேதம் கழலும் நன்னெறி ஒராறும்
> சொந்தமாப் பெற்றுப் பற்பல தலந்தொறுந் துதித்துச்
> சகழந்தேன்

என அதனுள் அறிமுகப்படுத்திக் கொள்கிறார். தமக்குத் தாமே வாழ்த்து கூறிக்கொள்ளும் புதுநெறியையும் புலவர் புராணத்துள், 'எனது நினைவாற் காட்டி நிறைவேற்றத் துணிந்த தெய்வம் நிதமும் வாழி, எஞ்சுதலில்லாத, இப்பேறு எய்தப்பெற்ற யான் வாழி, தமிழ் வாழி, இந்நூல் வாழி' (புல. சிறை. 7) எனக் காணலாம். தமது முசுகுந்த நாடகத்தை,

> இசைப் புலவர் பாடுதற்கும் எழிற்பரத நூலோர்
> தந்தமார் கொண்டாடுதற்கும் ஆமெனினும் செஞ்சொற்
> தமிழ்ச் சுவையும் சுதிச்சுவையும் சார்தலில் நன்றாகும்

எனத் தாமே விமர்சித்திருப்பதும் (முசு. 80) சுட்டற்பாலது. தமிழ் வளர்ச்சிபெறும் புதுப்பாதைகளாக இவை குறிக்கத்தக்கன.

இவர் ஆக்கங்களின் வகைகளும், வடிவங்களும் இவரது தமிழ்த் தொண்டின் உயர்வினைக் காட்டுகின்றன. பழநித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம் போன்றவற்றின் மூலம் தொகை நூல் படைப்பில் தன் விருப்பினையும், நவரச மஞ்சரி, பதிக சதகம், சதகப்பதிகம், ஒலியலந்ததாதி போன்றவற்றால் புதிய படைப்புகளில் தன் நாட்டத்திளையும் உணர்த்துகிறார். மழை பெய்யப்பாடியவை, பனை முறியப் பாடியவை போன்ற வற்றால் ஆசுகவி; இனிமையான பல பதிகங்களால் மதுரகவி; எழு கூற்றிருக்கை, மாலை மாற்று, ஏக பாதம் போன்றவற்றால் சித்திரகவி; அருணாகிரிநாதர் புராணம் முதலானவற்றால் வித்தாரகவி என நால்வகைக் கவிகளாலும் தமிழைப் போற்றியுள்ளார்.

தனிப்பாடல்கள், புராணங்கள், தொகை நூல்கள் முதலான வற்றால் இயற்றமிழ்; கீர்த்தனைகளால் இசைத்தமிழ்; முசுகுந்த நாடகத்தால் நாடகத்தமிழ் என முத்தமிழிலும் தம் திறனை வெளிப்படுத்தியுள்ளார். இறைவனைப் பாடுமாற்றல், பக்தி, கௌமார முறைமை, தியானானுபூதி இவற்றால் சமயத் தத்துவம், மனுநெறித் திருநூலால் நீதி, குருபர தத்துவத்தால் தன் வாழ்க்கை வரலாறு, புலவர் புராணத்தால் பிறர் வாழ்க்கை வரலாறு, வாகடப் பிள்ளைத்தமிழால் மருத்துவம், திருச்செந்தூர் அகப்பொருட் கோவையால் அகப்பொருள், ஆங்கிலியர் அந்தாதியால் சமுதாயம் எனப் பல பொருண்மை களையும் ஒரே கவிஞர் சிறப்புறக் கையாள முடியும் என உணர்த்துகிறார். இவற்றுடன் இவர் தம் தனிப் பாடல்களுள் தம் மகளுக்காகப் பாடிய கையறுநிலைப் பாடல்களும், பிற புலவரின் நூல்களுக்கு வழங்கியுள்ள மதிப்புரைப் பாடல்களும் இவரின் பல்துறை அறிவிற்கு ஏற்றம் அளிப்பன.

கந்தசாமி பிள்ளைத் தமிழ், படைவீட்டுத் திருப்புகழ், சிவன் பதிகம் போன்றவற்றால் மூல நூலாசிரியராகவும், திருவாமாத்தூர்த் தலபுராணத்தால் மொழிபெயர்ப்பாசிரியரா கவும், முசுகுந்த நாடகத்தால் வழி நூலாசிரியராகவும் கௌமார ஏகத்தாள் இதழகலந்தாதி போன்றவற்றிற்கு உரை நவின்றதன் மூலம் உரையாசிரியராகவும், சத்திய வாசகத்தால் உரைநடை யாளராகவும், இந்திப் பாடல்கள் வழிப் பன்மொழிப் புலமை

யாளராகவும் விளங்கும் இப்புலவர், அறுவகையிலக்கணம், வண்ணத்தியல்பு இவற்றால் தன்னைச் சிறந்த இலக்கண நூலாசிரியராகவும் வெளிப் படுத்தியுள்ளார்.

முத்துக்குமாரசாமி பதிகம், திரிபுரசுந்தரி பதிகம், கலைமகள் பதிகம், குஞ்சரி பஞ்சகம், வள்ளித்தாய் பதிகம், கணபதிமாலை, தெய்வத்திருவாயிரம், விஷ்ணு ஒருபது கூற்றிருக்கை, நவநீத கிருஷ்ணன் கலம்பகம், இடும்பன் வெண்பா, வீரபத்திரர் பதிகம், வாளலங்காரம், வீரவாகுத் தேவர் பதிகம் போன்றன சிறு தெய்வ, பெருந்தெய்வ வேறுபாடின்றியும் சமயப் பொது நோக்குடனும் இவர் இலக்கியம் படைத்துள்ளதைக் காட்டு கின்றன.

கவித்தலம் விநாயகர் பதிகத்தால் இறைவனும், ஔவையார் பதிகம், சடகோபர் சதகத் தந்தாதி, வடலூரார் வருகைப்பதிகம் இவற்றால் பிற புலவரும், தமிழைத் துதித்த பதிகத்தால் மொழியும், மயிலலங்காரத்தால் இறைவனைச் சார்ந்தனவும், கௌமாரத் தொகையால் இறையடியாரும் பாட்டுடைத் தலைவராகத் தமிழிலக்கியப் பொருட் பரப்பு விரியச் செய்கிறார்.

திருக்குறள் கருத்துக்களை விளக்கும் மனுநெறித்திரு நூலாலும், கந்த புராணக் கதையை நவிலும் முசுகுந்த நாடகத்தாலும், காலத்திற்கும் சூழலுக்கும் ஏற்ப பண்டைத் தமிழ் இலக்கியங்களின் மறுபக்கத்தை, நுழைவினை வரவேற் கிறார்.

முதலொலியல் அந்தாதி, ஏகத்தாள் இதழகலந்தாதி, ஒரு தொடைச் செய்யுள் நீரோட்டக வந்தாதி, வகுப்புச் சந்தத் திருப்புகழ், தசாங்க வகுப்பு, பஞ்சரத்தினக் கோவை, மகுட ஆசிரியப்பதிகம் எனப் பல வடிவங்களைத் தமிழிலக்கியம் இவரால் பெற்றுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வகுப்புப்பாடிய ஒரே புலவர் இவர். எழுகூற்றிருக்கை பாடுதலே கடினமானதாக இருக்க, எண்கூற்றிருக்கை, ஒன்பது கூற்றிருக்கை, தசாங்கக் கூற்றிருக்கை, ஒருபது கூற்றிருக்கை எனப் பலவற்றை இவர் பாடியுள்ளார்.

சூரியன், சிவன், சக்தி, திருமால், கணபதி, முருகன், பொதுக் கடவுள் என்று ஏழு கடவுள்களையும் இணைத்து 'ஏழாயிரப் பிரபந்தம்' என ஒரு நூல் பாடியுள்ளமையும் நவிலத் தக்கது. வாரத்தின் ஒவ்வொரு கிழமைகளிலும் ஞாயிறு – சூரியன், திங்கள் – சிவன், செவ்வாய் – சக்தி, புதன் – திருமால், வியாழன் – கணபதி, வெள்ளி – முருகன், சனி – பொதுக் கடவுள் என ஒவ்வொரு பதிகமாக, நூறு பதிகங்கள் நூறு வாரங்களில் இயற்றி இணைத்தது இப் பிரபந்தமாகும்.

பக்திப் புலவரான இவர், பக்திப்பாடல்களிலும் ஆங்கில அரசு எதிர்ப்பு (பழனி. நவ 7), உயிர்ப்பலி, ஊன் மறுத்தல் எனும் சமூகநல நோக்கில் உறுதிகாட்டுகிறார். திருவரங்கத் திருவாயிரத்துள் பசு காப்பு மாலையும், ஞாயிறு ஆயிரத்தில் ஒரு பதிகமும் (91) ஊன் மறுத்தலைப் பேசுகின்றன. சிறு தெய்வங்களுக்கு உயிர்ப்பலி தருவதைப் பலவாறாகக் கண்டிக்கும் புலவர்,

ஆடுவெட்டிப் பொங்கலிடும் இடைச் சந்நியாசி
அனுப்பவரும் கறுப்பண்ணனான பேயை
நீடுசக்தி வேற்படையால் சிறிடாமல்
நெடித்து நாட் கடதுவதும் நீதிதானோ (தனி. 386)

என இறைவனிடம் முறையிடுகிறார். வேள்விகளில் உயிர்ப்பலி செய்வதை எதிர்க்கும் தண்டபாணி சுவாமிகள் (பழனி.குந. 48), பலி கொள்ளும் தேவதைகள் யாவையும் கொல்லேனே (பழனி. சித்தி. 43) எனக் கவல்கிறார்.

ஆமாத்தூரில் தங்கி யிருந்தபோது, தொற்று நோயால் அவ்வூரார் துன்புறுதல் கண்டு அதனைத் துடைக்குமாறு இறைவனை வேண்டியும் (தனி. 237), மழை பொழியும் படிப் பாடியும் (கீர்த். 31) தமக்குள்ள சமுதாயப்பற்றினைத் தெளிவு படுத்துகிறார். இவற்றால் தமிழ்த் தொண்டு தமிழ்ச் சமுதாயத் தொண்டாகப் பரந்து நிற்கக் காண்கிறோம்.

**தமிழைப் போற்றிய முறைமை**

"தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில்
வெகுளியற் றிருப்போன் வெறும்புல வோனே"

என்று கருதும் தண்டபாணி சுவாமிகள், தமிழலங்காரம், முத்தமிழ்ப் பாமாலை, தமிழ்த்துதிப் பதிகம், தெய்வங்களுக்குத் தமிழாசை விளைத்த பதிகம் எனப்பல நூல்களை மொழிக்காகப் பாடிய முதல்வராவார்.

வடமொழி பெரிதா, தமிழ் உயரியதா என்ற தர்க்கம் எழுந்த பொழுது, இறுதியில் முருகப்பெருமான் திருமுன் திருவுளச் சீட்டெழுதிப் பார்க்க, தமிழே உயர்ந்தது என்ற சீட்டு கிடைக்க, 'தமிழலங்காரம்' பாடினார். இதில் நாயன்மார், ஆழ்வார், முருகனடியார் முதலியோர் நிகழ்த்திய அற்புதச் செயல்களுக்கும், இறைவன் இவர்களிடம் நடத்திய லீலைகளுக்கும் அடிப்படை தமிழே என இதன் நூறு பாடல்களாலும் வற்புறுத்துகிறார். சான்றாக,

> கடல்நீரில் கல்மிதக்கும்படி செய்து, களிறு உறுக்கும்
> அடல்யாவும் குன்றஅடக்கி, வெந்நீற்றறை அம்புயப்பூந்
> தடமாகக் காட்டி, அரவால் இறந்த தனயனையும்
> உடலோ டெழச்செய்த தன்றோ ஒருவன் சொல்
> ஒண்தமிழே (தமிழ். 29)

என்பதைச் சுட்டலாம். இந்நூல் பாடிய வரலாற்றைத் தம் 'குருபர தத்துவம்' எனும் தன் வரலாற்றுள் (புதுவை. 38 – 44) புனைந்திருப்பதும் குறிப்பிடத் தக்கது.

தமிழ்த்துதிப்பதிகத்துள், தமிழில் உள்ள பதினெட்டு மெய்கள், பதினெட்டு மொழிகளைக் கொண்டதெனவும், பன்னிரண்டு உயிர்கள் பன்னிரண்டு சமயங்களுக்கும் தொடர்பு உடையதெனவும், ஆய்த எழுத்தின் முச்சுழிகள் சந்திர சூரிய அக்கினிக்கு ஒப்பதெனவும், கலைமகள், திருமகள், உமை என்ற முச்சத்திகள் போல மூன்று நிறம் உடையதெனவும் அறுசமயக் கடவுளருடன் தொடர்பு கொண்டதெனவும் (7-10) புகழ்கிறார். மொழியினைத் தெய்வப் பெற்றிமைக்கு உயர்த்தும் பாங்கினை இவற்றால் அறியலாம்.

தமிழுணர்வு இவரது உயிரோடு கலந்து நின்ற ஒன்று என்பதைப் பிறவாற்றாலும் தெளிய முடிகிறது. புலவர்களைக் குறிப்பிடுங்கால், நறுந்தமிழ்க் குறுமுனி (திரு. செந். 3), தமிழ் நக்கீரர் (புல. 9:21), இன்னிசைத் தமிழ் ஔவை (புல. 41.8), வியன் தமிழ்ச் சுந்தரனார் (திருவா. 2:4:6), செந்தமிழ் சேர்

திருஞானசம்பந்தப் பெருமான் (திருவா. 2:3:36) என்பன போன்றும், இறைவனை, செந்தமிழ்த் திருச்செந்தூரனை (திரு. நவ. 37), செந்தமிழரங்கா (திருவர. கட்டளை. 40) என்பன போன்றும் குறிப்பிடுகிறார். இறைவன், புலவர் தொடர்புடைய இடங்களைச் சுட்டும் பொழுதும், தமிழ் வளம் பெரிது வளர் பழனியங்கிரி முருக (பழனி. பிள்ளை 31), பைந்தமிழ்ச் சீர் ஆமாத்தூர் (திருவா. 2:7:43), அருந்தமிழ் தொண்டை நாட்டோர் (திருவா. 2:8:15), மிக்க தமிழ்த் தேசத்தில் உறுங் கருவூர் (முசு. 23), தமிழ்க்காழி (திருவா. 2:3:9), முதிர்தமிழ் மதுரை (திரு. சந்த. 36), முத்தமிழ்ச் செல்வம் முதிர்செந்தில் (திந வாள. 7), தமிழ்ப் பொதியை (புல. பொதி. 35) என நவின்றிருப்பதும் குறிப்பிடத்தக்கது. இறையும் தமிழும் பிரிக்க இயலாவாறு இணைத்துக் காண்பதும் நோக்கத்தக்கது.

தமிழனைய கடம்பா என உவமையிலும் (தனி. 400), தென் கிரியிடம் பொருவில் சந்தனமுடன் தமிழ் செறிந்து வரு தென்றல் என வருணனையிலும் (பழனி. நடு. 9) மும்மலமும் சிந்த முயலும் திறன் பொருந்தும் சித்தருக்குச் செந்தமிழ் ஒப்பில் பெருஞ்சீர் (திரு. வெண். 100) என ஒன்றின் பெருமையைப் புலப்படுத்து தற்கும் பயன் கொண்டுள்ளார்.

தனித்தியங்கும் வல்லமையுடையது தமிழ்மொழி என்று அன்றே (தமிழ். 19) அறுதியிட்டுரைத்த சுவாமிகள், தெய்வங் களும் தமிழ்க்கவி பாடியின்புற்றதாகப் புலவர் புராணத்துள் காட்டுவார். இவரின் இத்தமிழுணர்வு 'தமிழைப் பழித்தாரைத் தாய் தடுத்தாலும் விடேன்' எனச் சூளுரைக்கச் செய்துள்ளதும் சுட்டற் பாலது.

### தமிழ் படைப்புகளுக்களிக்கும் சிறப்பு

முன்னவர் நூல்களை நிந்திப்பாரைச் சந்தியாதே (திரு. சந்த. 56) என வேண்டும் புலவர் தம் இலக்கியத்துள் பக்திப் பனுவல் களையும் நீதிநூல்களையும் இயன்றவிடந்தோறும் பாராட்டி யுள்ளமை இங்கே கருதப்படுகிறது.

கொல்லியெனும் பண்ணெடுத்துக் காண்டனன்
காண்டனனென்
குறிப்பினால் ஒளித்தமையும் குலவிடவே பாடி

நல்லிரட்டு மொழியடுக்கே கவிதோறும் காட்டி
(திருவா. 2:4:11)

எனச் சுந்தரர் தேவாரம் சிறப்பிக்கப் படுகிறது.

பன்னரும் பல கற்பனைப் பொருள் மிகப் பரம்பிக்
கன்னலின் சுவைப் பாகுறழ் பிரபுலிங்கலீலை
(திருவா. 2.7.6)

இன்னிசையும் சுவையும் பொருளும்

பொலியெக் காலக் கண்ணி (புல. 29.43)
அவள் சொல் பாடலின் முதற்சொலே முதலுறவமைத்துச்
சிவந்த திஞ்சுவைப் பேரொலிச் சொற்களே சேர்த்துப்
பவங்கொல் செந்திலம்பதிப் புகழிடையிடைப் பரப்பி
உவந்தவாறு பிள்ளைக்கவி பனுவல் ஓர்ந்துரைத்தான்
(புல. 48:12)

என்பன பிற சில காட்டுகள். முன்னோர் மொழியைத் தம் படைப்புள் பொன்னே போல் போற்றி நிற்றலையும் காண முடிகிறது.

மேலுலகம் இன்றெனினும் வேண்டுதர்க்கு ஒன்று
ஈவதுவே மிக நன்றென்று
நாலுமறைப் பயனாம் நூல் நவிலல் நம்பும் (நா. 792)
உன்றனக் கென்றன் உடல்ஆவி மூன்றும் உதவினனால்
என்றன தென்றொரு நிந்தையும் கீர்த்தியும் இல்லை
கண்டாய் (பழனி. அலங். 73)

என முறையே திருக்குறளும், திருவாசகமும் சிறப்பிக்கப் பட்டிருத்தலைச் சான்றாக்கலாம் அருணகிரிநாதரின் திருப்புகழை,

அங்கியும் அஞ்சுறத் தாக்கிய
தாருகன் ஆண்மை மூற்றும்
மங்கிடச் சேனையுள் வல்வீர
வாகு செய் வாட்பெரும் போர்
பொங்கிய செல்வத் திருச்செந்தில்
வேலவன் பொற்புயத்துப்
பைங்கிளிப் பாவலன் செந்தமிழ்ச்
சந்தப்படிப் பொத்ததே (திரு. வாள. 20)

என உவமையாக ஆண்டிருப்பதும் கூறத்தக்கது. திருக்குறளைக் குறிப்பிடும் இடம்தோறும் தமிழ்மறையாகச் சுட்டலும் நவிலற் பாலது.

### படைப்பாளரைப் பாராட்டும் திறம்

தமிழ் மொழியைத் தோற்றுவித்த பொதிகை மாமலைத் தமிழ் முனி அகத்தியர் முதலான குரவர்களைப் போற்றுதலையும் (திருவா. 1:2:48), தன் படைப்பினைப் புகழ்ந்து மற்றைய கவிஞரின் படைப்பினைப் பழிக்காதிருத்தலையும் (திருவர. சீர. சத. 38) புலவரின் இன்றியமையாத பண்பாகப் போற்றும் சுவாமிகள் தாமே இவற்றிற்கு முன்னின்று வழிகாட்டியுள்ளார்.

புலமை வலிபெறு தமிழ்க்கீரன் (பழனி. பிள்ளை. 4); கள்வன் என இயம்பும் காழிநகர்ப் பார்ப்பனச் சேய் (பழனி. நவ. 48); கோபுரந்தனில் ஏறி வீழ் கவி வாணன் (திரு. சந்த. 19); நிலத்தினர் துன்ப வாரிதி வற்றா வயமலிவொன்று காரி தவத்தின் மகவென வந்து நீடு புளிக்குள் நுழைதரு செஞ் சொல் மாறன் (திருவர. 880) முதலியோர் மிகப் பலவாக இயன்ற விடங்களிலெல்லாம் சிறப்பிக்கப் பட்டுள்ளனர்.

பன்னிரு மாணாக்கருள் பழுதில் தொல்காப்பியப் பேர் துன்னினான் மிக்கோன் (புல 1:27); மறையினைத் தமிழ்செய் திருவள்ளுவர் (பழனி. பிள்ளை. 83); தெரியல் பலவும் சில பாடலும் உதவும் ஒரு தொண்டன் மாமகள் (திருவர. திருப் 26); இசையோடு வசைபாடும் இயற்கவி காளமேகம் (புல. 56, 68) எனத் தமிழ்ப் புலவர் பரம்பரையை இவரளவிற்குப் பிறர் போற்றக் காணல் அரிது; இல்லை எனவும் துணியலாம். கச்சியூர்ப் புலவன் (பழனி. கு ந. 10), ஆதிசீர் தோய் நவிர். திருவாசகப் புலவன் (பழனி. நவ. 28) பல்லவிக் கிசைந்த பதம் பகரொருவன் (முத்துவயிரப்புலவர் திருச்செந். 13); சாதலுக் கோர் வெண்பாட்டுரைத்தான் (குகை நமச்சிவாயர் – திருவா 1:1:16); திருமங்கை யாழ்வான் சிந்தை திறமை (திருவர. ஒருபா 2); மணலில் திருக்கோயில் செய்து பூசித்த கவி வாணன் (திருவர. சீர. 100) மற்றும் அபிராமபட்டர் (பழனி. சந்த. திருப் 55); புகழிக் கூத்தர் (திரு. நவ. 69); வீரபாண்டிப் புலவர் (திரு. நவ.

70) கந்தசாமிப் புலவர் (திரு. நவ. 71) எனப் பிற பல நம் சுட்டத்தக்கோராவர்.

புலவர் புராணம் பாடித் தமிழ்ப்புலவருக்குப் பெருமை சேர்த்த தண்டபாணி சுவாமிகள் தம் சமகாலத்தவரையும் போற்றத் தயங்கவில்லை. வடலூரார் மீது வருகைப் பதிகம் பாடிய இவர், அவரைத் தாயுமானவரின் அவதாரமாகவும், ஆறுமுக நாவலரை நச்சினார்க்கினியராகவும் (தனி 282) பாராட்டுவார்.

> என்னன்புக் கேற்றோன் இசைநாடகப் புலமை
> துன்னறிஞன் சங்கரதாசுப் புலவர் - நன்மைமார்
> பண்பாளன்; எங்கோன் பதம்பரவும் அன்புடையான்
> வண்பாவலர் கண்மணி (தனி. 171)

என நாடகத் தந்தையைப் போற்றியிருப்பதும் குறிப்பிடற்பாலது.

## முடிப்புரை

இத்திருவருட் செல்வரின் இயற்பெயர் சங்கரலிங்கம் என்பதாம். தோற்றத்தால் தண்டபாணி சுவாமிகள் எனச் சிறப்பிக்கப் பெற்ற இவர் முருகன் உபாசனையையும் வேல் வழி பாட்டினையும் மேற்கொண்டிருப்பதலால் முருகதாசர் என்றும், சந்தப்பாடலான திருப்புகழைப் பாடுவதில் மிக நாட்டம் பெற்றிருந்ததால் திருப்புகழ்ச் சுவாமிகள் என்றும் வண்ணம் என்ற சந்தப் பெரும் பாடலியற்றிய அருமையால் வண்ணச்சரபம் என்றும் போற்றப்படும் சிறப்பிற்குரியவராகிறார். இவரது தமிழுணர்வு இவரைத் தமிழவேள். தமிழ்க்கடல் தமிழ்ச் செல்வர், தமிழ்க்கவியரசு தமிழருவி, தமிழ்முரசு தமிழ்நேயன், தமிழ்க்காவலன் தமிழ்ச்செம்மல்..., எனப் பலபட பாராட்ட இடந்தருதல் இக்கட்டுரையால் புலப்படும். மற்றும் தமிழ் வீறு கொண்டு பாடிய பாரதி, பாரதிதாசன் போன்றோர்க்கும், இன்றைய மொழிப்போர் அறிஞர்க்கும் இவரே முன்னோடி என்பதும் வெள்ளிடை மலை.

## துணைநூற் பட்டியல்

கீர்த்தனைப் பாடல் திரட்டு திருவாமாத்தூர் கௌமார சபை; 1971. (கீர்த்)

தமிழலங்காரம்; திருவாமாத்தூர் கௌமார சபை; 1964. (தமிழ்)

தனிப்பாடல் திரட்டு; தி. கௌ. சபை; 1970 (தனி)

திருச்செந்திற் பிரபந்தங்கள்; திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம்; 1969 (திரு)

திருவரங்கத் திருவாயிரம்; மு. செந்தினாயகம் பிள்ளை (பதி); (திருவர)

திருவாமாத்தூர் தலபுராணம்; அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் நூல் வெளியிட்டுக்குழு; 1965 (திருவா)

பழநித் திருவாயிரம்; அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்; 1973 (பழநி)

புலவர் புராணம்; (புல)

முசுகுந்த நாடகம்; தி. கௌ. சபை; 1968 (முசு)

முத்தமிழ்ப் பாமாலை; தி. கௌ. சபை; 1970 (முத்)

**கட்டுரை**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்; ச. சிவகாமி; தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி 6; (பதி) ச. வே. சுப்பிரமணியன் + ந. கடிகாசலம்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; ஏப். 1981; பக் 251—306.

# சுவாமிகளின் சமுதாயக் கருத்துக்கள்

## வை. வ. சிவப்பிரகாசம்

ஐந்திலக்கணத்துடன் ஆறாவதாகப் புலமை இலக்கணம் என்ற ஒன்றைக்கூட்டி அறுவகை இலக்கணம் என்னும் பெயரில் ஒரு நூல் செய்தவர் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் ஆவார்.

### இலக்கணம்

ஐந்தே இலக்கணம் என்று ஆயிரம் பேர் கூறல் கண்டும் செந்தேனென ஆறுவிதம் செப்புவிப்பதும், தேகத்தின் உள்ளும் புறமும் ஒளிரும் ஒரு பொருட்சீர் கொண்ட 6வது இலக்கணமாகியது கவிதை நடையே எனக் கூறுகின்றார்.

இதனைக் கீழ்கண்டவாறு பாடலால் அறியலாம்.

"அகமெனும் அகமும் புறமெனும் புறமும்
ஒவ்வொரு கண்ணே போலும் பொதுநிலை
அவற்றைத் தழுவலின் அவ்விரு கண்களும்
மறுத்தலின் வேறொரு கண்ணுமன் னுறுமே"

(பொருள் 121)

இவர் தமிழின் பெருமையைத் "தமிழலங்காரம்" என்னும் நூலுள் தெரிவித்துள்ளார். மக்கள் ஐந்து வகை நிலங்களில் மேம்பட்டு வாழ்கின்ற வாழ்க்கையையும் அவற்றின் அமைப்பையும் குறிப்பிடுகிறார்.

### குறிஞ்சி நிலம்

இவ்வகை நிலம் மலையும் மலை சார்ந்த பகுதியும் ஆகும். இங்கு முனிவர்களும், வேடவர்களும் வாழ்ந்து வருகின்ற பகுதி யாகும். இங்கு தினையும், கிழங்கும் விளைகின்றன. அருவிகளும் இயற்கை எழிலும் தவழ்கின்ற பூமியாகும். இங்கு எல்லாவகை தெய்வங்களும் இருந்தாலும் முருகன் என்ற தெய்வமே நடமிடுவது மிகவும் நன்குணர்வார் எனக் கூறுகின்றார்.

### முல்லை நிலம்

இவ்வகை நிலத்தைக் கூறும்போது "துழாயொடு மிகவும் சூழ்ந்த காடே முல்லை" என்கின்றார். முல்லை காடும், காடு சார்ந்த பகுதியும் ஆகும். இங்கு பொதுவாக மக்கள் வாழ் கின்றனர். இங்கு கமழ்வன பால், தயிர்; கடவுள் (திருமால்) மாயன் என கூறுகின்றார்.

### பாலை நிலம்

மணலும், மணல் சார்ந்த பகுதியாகும். இங்கு பசும்புல் கூட பார்க்க முடியாது. பாலையில் பல்பேய் திரிவன. இங்கு திருடர்கள் விருந்தென வருகின்றனர். இங்கு வீற்றிருக்கும் தெய்வம் காளி யென்று கூறுகின்றார்.

### மருத நிலம்

வயலும் வயல் சார்ந்த பகுதியாகும். இதில் வாழையும், தென்னையும் மலிவுரும். இங்கு அந்தணர் முதல் மற்றவர்களும் வாழ்வார்கள். மன்னரும் இருப்பதுண்டு. இந்திரன் தெய்வமாகும். இவர்கள் இனிது செய்குவரே எனக் கூறுகின்றார்.

### நெய்தல் நிலம்

கடலும், கடல் சார்ந்த இடமும் என்றும் இங்கு தாழையும், புன்னையும், பனையும் இங்கு காணப்படும். இங்கு வலைஞரும், ஈடிரும் இருப்பார்கள். இவர்கள் வருணன் தெய்வமாக வணங்குவர். மக்கள் வாழ்ந்த பகுதியை ஐந்துவகை நிலங்கள் கொண்டே ஊர் பெயர் மேலிட்டன எனக் காட்டுகின்றார்.

குறிஞ்சியூர் குறிச்சி என விளங்கப்பட்டது. முல்லையூர் பட்டி என்று பெயர் முடிவு பெற்றது. மருதந்தூர் நகர் என்று அழைக்கப்பட்டது. நெய்தலூர் பட்டினம் என்றுஅழைக்கப்பட்டது. இவற்றை நானிலமென்றனர் புலவோர் என்பதை கூறி மேற்கண்ட ஐந்து வகை நிலங்களை மக்களுக்குக் காட்டுகின்றார்.

### சர்வ கடவுள் வழிபாடு (நவக்கோள்)

ஒன்பது கிரகங்களையும் வழிபடும் முறையைக் கூறுகின்றார். இவர் மேலும் கூறும்போது முருகனையும் வள்ளி, தெய்வானையுடன் வழிபடுதலாம் அன்பர்களை வெறுத்திட மாட்டான் என கூறுகின்றார். முருகனது "ஓம் சரவணபவ" என்ற

மந்திரத்தை எந்திரம் வரைந்து வணங்குவோர் அனைவரையும் மங்களம் மிக்க காப்பான் என கூறுகின்றார்.

தமிழர் கடவுள் முருகன் என்பதையும், தமிழ் கடவுள் முருகன்தான் என்பதையும் தெளிவுபடுத்துகின்றார்.

**ஆங்கிலேயன் எதிர்ப்பு**

இந்த நாடு ஆங்கிலேயர் கைவசம் பட்டதைக் கூறுகிறார். தாய்நாட்டு பற்று பொங்க "நீசர்கைப்பட்டதனால்" என்றும், "புலையர்க்கு அரசாளும் ஆர்வம் கொடுத்ததென்றோ?" என்றும் கூறுகின்றார்.

**சர்வ சமய நெறிகள்**

சமணர், புத்தர் மற்றவர்களும் ஆதியரும் தழுவல் வேண்டும். தருமமொரு தவம் புரியத் துணிமின் என்று கூறுகின்றார்.

**மறுபிறவி**

மனிதருக்கு மறுபிறவி உண்டென்று கூறுகின்றார். வள்ளுவர் கூறியதை நினைவுகூர்ந்து தவத்தோர் மெச்சும் சீருலவாப் பொது நூல் வள்ளுவனார் தாமும் செனனம் உண்டென்று உரைத்த மொழி தெரியாதாரை எனக் கூறுகின்றார்.

ஔவை பற்றி கூறுகையில் ஆலயத்திற் போய் வணங்கச் சால நன்றென்று அதனுள் சிறப்புடைய மலைதனில் வீற்றிருக்கும் குகனைப் போற்றிட வேண்டும் எனக் கூறுகின்றார்.

**சூரிய விரதம் (சௌர சமயம்)**

பிரணவ மந்திரம், தருப்பை, பசுவின் சாணம், பிழையெண்ணா நெறி ஆறும் பேணத்தக்க வரமுதலாம் சூரியனை வழிப்பட்டு அந்த வாரமதில் பொங்கலிட்டு வணங்கிப் போற்றி விரதமிருப் போர் கருணையுடையோராகில் அவர்களது நோய்கள் எல்லாம் பகலவன் கண்ட பனிபோல் ஆகும் என்பது திண்ணந்தானே எனச் சூரிய விரதம் தொடர்பாகக் கூறுகின்றார்.

**சாதிகள் பற்றி**

உலகில் சாதியென்பது கானல் நீர் போல் உள்ளது. இவை நீதிமுறையில் தொழில் முறையில் மேல்கீழ் ஓர்ந்து நேரிழையார்

கற்பின்வழி நிறுவல் கண்டீர். ஆனால் அது பொதுவானது அல்ல. மனிதர்களிடம் ஆண் / பெண் என்ற இரண்டுதான் சாதியாம். மற்றவர்களுக்கு நால்வகையே இயல்பாம் எனக் கூறுகின்றார்.

**நால்வகை மரபு**

நால்வகை மரபு குறித்து கூறுகையில் வேதியர்க்கு உரைத்தல் கடமையாகும். மன்னர்க்கு நாடு காத்தல் ஆகும். விற்றல் கொள்ளல் வணிகர்க்கும், வேளாண்மை சூத்திரர்க்காகும் என நாளும் நான்மறை ஆதிய நூல்கள் நவிலுமன்றே என்பதை எடுத்துரைக்கின்றார்.

**பகுத்தறிவு**

நூல்கள் பலவிதமாகக் கூறினாலும் பயன் முழுதும் பகுத்து அறிந்து பழுதிலாத புலமையுடைப் பெரியோர்தம் பதத்திற்கு ஆய்வு செய்து உய்ப் புகுதல் மேலாம் எனத் தெளிவுபடுத்து கின்றார்.

**மனிதருக்கு தெய்வ பக்தி தொடர்பாக**

ஆலயத்திற்குச் சென்று தனியே (கடவுளை) விக்கிரக வழிபாடு செய்வது இளம்பருவம், அறவோர் சொன்ன நூலகத்தில் உள்ளபடி மனத்தாற் செய்து நோக்குவது நடுப்பருவம், ஆசிரியர் சொல்லே மந்திரம் என்று நம்பி அறிவது முற்றிய பருவம். இம்மூன்றும் சர்வம் நினைந்திடுவார்க்குச் சித்திமுத்தி தருபவையாகும் தவம் செய்வார்க்கும் ஆகும்.

**போலி பக்தி**

மந்திரத்தை மணி உருட்டிச் செபித்துக்கொண்டு, மனத்தில் உரிய தெய்வம் வடிவம் ஏதும் இன்றி, தந்திர வித்தைகாண் தமக்கும் ஒல்கிச்சாத்திரம் பொய் என்றிகழ்து சலிக்கின்றோர்க்கும் போலியான தன்மையைச் சாடுகின்றார்.

**அறிவியல் தொடர்பு**

கடவுளின் ஆறு குணமே ஆறு சமயங்கள் என்றும் சோதிடம் தொடர்பாக, கிரகங்கள் தொடர்பாகவும், ராசிகள் மேசம் முதல் மீனம் முடிய 12 ராசிகளும் தொடர்புபடுத்திக் கூறுகின்றார்.

கலப்பு மணங்களைச் சுவாமிகள் நியதியே என ஒருபட்டுக் கூறுதல் தவமும் சமயமும்; சாதியும் பொருளும் வேறுவேறு அல்ல. எல்லோரும் கடவுளின் வடிவமே என்பதாகும்.

ஆழ்வார் திருவடிகளைப் பாராட்டுகின்றார். அவர் திருவரங் கத்தவம் வாழி. அரவணையிற் திருமால்வாழி, பேர்வாழி, எட்டெழுத்தும் வாழி. அவற்றுள் ஒன்றேனும் பிடித்தோர் வாழி எனத் திருமால் வாழி கூறி அன்பர்களுக்கும் அவர்தம் உயரிய கருத்துக்களைக் கூறுகின்றார்.

**பொதுவியல்**

மனித வாழ்வுக்குப் பொதுவழி இவையெனக் கூறுகின்றார். உயிர் வருத்தப்படுத்தாமை, கொலை செய்யாமை, ஊன் உண்டு களியாமை பற்றியும் கூறுகின்றார். இவர்கள் பயிர் தொழில் செய்து வாழ்வர் எனவும், மற்றவர்களைப் பாவமிரும் களையெனவே கூறுகின்றார்.

ஒரு வேதம் பல சமயம் சொல்லுமாகில் உள்ள நெறி அத்தனைக்கும் ஒருவன்தானே குருவாகும். இந்த உலகத்திற்கு ஒரு சமயமும், ஒரு மதநூலும் வேண்டும். எந்தச் சமய நூலானா லும் தவத்தின் வழியே தோன்றின என்பர்.

**கௌமார முறைமை சிறந்தது**

கௌமாரம் என்ற சொல் குமார வழிபாடு செய்யும் நெறியினது என்ற பொருளையுடையது. சிவக்குமாரனாகத் தோன்றிய முருகக்கடவுளை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபாடு, சோப தியானம் இவற்றை உறுதியுடன் செய்து அவன் அருட் பேற்றுக்கு உரியவராவார் கௌமாரர் எனப் பெறுவர்.

சிவவழிபாடு செய்வோர் சைவர். அறநெறி சைவம் என்றும், சக்தி வழிபாடு சாத்தேயம், கணபதி வழிபாடு காணாபத்தியம், விஷ்ணு வழிபாடு வைணவம், சூரிய வழிபாடு சௌரம் எனப்படும்.

சிவகுமாரன் ‘முருகன்’ என்னும் புராண வரலாற்று முறை யில் தொடங்கி, உபாசனை முதிர முதிர, படிப்படியாக அனுபவ மேலீட்டினால் அகண்ட பரம்பொருளே முருகக் கடவுள். சமயங்கள் யாவும் வேறல்ல. அதன் அங்கமே யாவும் என்ற பெருநிலையான சமரசவுணர்வு வரும் என்பர்.

# மனிதப்பிறவி உய்யும் நெறிகள்

## தி. சுந்தரம்பாள்

"தில்லை பாதி - நெல்லை பாதி" என்னும் நூல் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் பாடிய நூல்கள் பலவற்றுள் ஒன்றாகும். நக்கீர தேவ நாயனார் "கயிலை பாதி-காளத்தி பாதி அந்தாதி" என்று ஒரு நூல் பாடியுள்ளார். அதில் நூறு பாட்டுக்கள் உள்ளன. அதையொட்டி, சுவாமிகள் பாடியுள்ள இந்நூலில் ஐம்பத்தொரு பாட்டுக்கள் உள்ளன. ஒவ்வொரு பாட்டிலும் தில்லை, நெல்லை ஆகிய இரண்டு திருவூர்களும் ஒருங்கமைத்துக் கூறப்படுவதால் இந்நூலும் நக்கீர தேவநாயனாருடைய கயிலைபாதி - காளத்தி பாதி அந்தாதி நூல் போல, நூறு பாட்டுக்களை உடையது என்றும் எண்ணலாம்.

சிவப்பிரானைப் பாடுதல்போல, சிவன் உறையும் திருக் கோவிலைத் தன்னகத்துக் கொண்டுள்ள திருவூரைப் பாடுதலும் ஒத்த சிறப்புடையது என்பது, 'சித்தந் தெளிவீர்கள், அத்தன் ஆருரரைப், பத்தி மலர் தூவ முத்தியாகுமே'' என்றும் ஆன்றோர் வாக்கால் தெளிவுறுகிறது.

இந்நூலுள், சுவாமிகள் தில்லை - நெல்லை ஆகிய இரு ஊர்களின் பெருமைகளைக் கூறுமுகமாக, பொதிய மலைச் சிறப்பு, அகத்தியர் பெருமை (பா-8,35,41) சிவபெருமான் தக்கன் வேள்வியை அழித்தர் (19) யானையைக் கொன்று அதன் தோலைப் போத்திக் கொள்ளுதல் (13) முயலகன் மீது ஆடுதல் (19) நஞ்சினை உண்ணுதல், அர்ச்சுனனுக்குப் பாசுபதம் வழங்குதல் (28) திருமால் மோகினி வடிவம் கொள்ளுதல் (31) ஆகிய கதைகள்: தில்லையில் மூவர் தேவாரம் பாடியது, சேந்தனார் திருப்பல்லாண்டு பாடியது: மாணிக்கவாசகர் இறைவன் திருவடி அடைந்தது என்றும் செய்திகள், நெல்லையின் தலவிருக்ஷம் மூங்கில் என்பன போன்ற பல்வேறு சிறப்புக்களையும் விரித்துரைத்துள்ளார். இச்செய்திகளின்

அடிநாதமாக, மக்கள் பிறவி உய்யும் நெறிகள் பற்றிய சுவாமிகளின் சிந்தனைகள் உள்ளமையும் உய்த்துணர முடிகின்றது. அச்சிந்தனைகளை விளக்கு முகமாக இக்கட்டுரை அமைகின்றது.

## மனிதப்பிறவியின் சிறப்பு

இறைவன் படைத்துள்ள பிறவிகள் எண்ணிக்கையில் அடங்காதவையாகும். எத்தகைய பிறவியும் ஒரு கடல்; அதுவும் இருட் கடல்; துன்பக்கடல். இந்தப் பிறவிக் கடலைக் கடப்பதற்கு உரிய சாதனமாக உள்ளது. மனிதப்பிறவியே காரணம், மனிதப்பிறவி ஐயறிவுகளோடு மன அறிவும் உடையதாக உள்ளமை ஆகும். இந்த மன அறிவைத் தெப்பமாகக் கொண்டு பிறவிக் கடலைக் கடந்து இறைவன் திருவருளில் கலத்தல் வேண்டும். ஓர் உயிர் ஒருமுறை மனிதப் பிறவி எடுத்தால் அதன் அடுத்த பிறவியும் மனிதப்பிறவியாகவே அமையும் என்று எண்ணமுடியாது. எனவே இந்த ஒரு பிறிவியிலேயே இறைவனை அடைய விரும்பிய தாயுமானவர்,

> "எண்ணரிய பிறவிதனில் மானுடப்
> பிறவிதான் யாதினும் அரிதரிது காண்
> இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?"
>
> (தாயுமானவர்)

என்று குறிப்பிடுகிறார்.

## மனிதப்பிறவிக்கடனும் பயனும்

மனம் உடையவன் மனிதன். மனம் இல்லாதவன் மனித வடிவில் தோன்றிய விலங்கு. மனம் என்பது மன்னுதற்கு ஆதரவாக இருப்பது. மன் + அம் என அமைந்து 'மன்' என்பது மன்னுதலை/நிலை பெறுதலைச் சுட்டும். நிலைபெறுதல் என்பது இறவாது வீடுபேறு அடைதல் ஆகும். மனிதன்சிற்றறிவுடையவன். இறைவன் பேரறிவுடையவன். மனிதன், சிற்றறிவு என்னும் புணையின் துணையால் பேரறிவு பெற்று இறைவன் திருவடி அடைதல் வேண்டும். இறைவன் திருவடி சேர்வதற்குச் சாதனமாக அமைவது இறை வழிபாடு. சிற்றறிவினனாகிய மனிதன், பேரறிவினனாகிய இறைவன், திருவடி நோக்கி வழிபடுதல் வேண்டும். இதனாலேயே "கல்வியின் பயன்

வாலறிவன் நற்றாள் தொழுதல்'' (குறள்-2) என்று குறிப்பிடுகிறார் வள்ளுவர். ஆகவே மனிதப்பிறவியின் கடன் இறை வழிபாடு, பயன் இறைவன் திருவடி சேர்தல் என்பன தெளிவாகின்றது.

**சிவ சின்னங்கள் தரித்தல்**

சிவபெருமானை வழிபடுபவர்கள் திருநீறு, உருத்திராக்கம், சடை என்றும் சிவ சாதனங்களை அணிந்து கொள்வது மரபு. ''சடைமுடி பிறர்க்கெனப் புரியும் ஆள்வினையின் அடையாளம். வெண்ணீறு அறிவின் அடையாளம். உருத்திராக்கம் அன்பின் அடையாளம். இம்மூன்றும் ஆண்டவனுடைய அன்பு, அறிவு, ஆள்வினை (இச்சை, ஞானம், கிரியை) எனப்படும் என்பர்.

> செந்நா வலரும் திருவேடத் தொண்டர்களும்
> எந்நாளும் மன்னும் நெல்லையே (பா. 3)
> கண்டிகையும் நீறும் கவினப் புனைவோர்க்கே
> எண்திருவும் நல்கும் நெல்லையே (பா. 10)

என்றும் சுவாமிகளின் பாடல் வரிகள் திருவேடத் தொண்டர்கள் விரும்பி அணிந்து கொள்ளும் சிவ சின்னங்கள் உருத்திராக்கம், திருநீறு ஆகியவை என்பதைக் காட்டுகின்றன. இச்சிவசின்னங்களை அணிந்து கொள்பவருக்குச் செல்வம் கூலம், உறுதி, ஆண்மை, அழகு, கல்வி, புகழ், மன்னர், திரு ஆகிய எட்டு வகையான செல்வங்களும் கிட்டும் என்பதையும் குறிப்பிடுகின்றன. மேலே குறிப்பிட்ட சிவ சின்னங்கள் மூன்றையும், சேக்கிழார் பரவும் மூர்த்திநாயனார் சிவபெருமானது அருள் அடையாளங்களாகக் கொண்டு அரசர் தாங்கும் மணிமுடியாகவும், அடையாள மாலையாகவும், மணப்பூச்சாகவும் கொண்டு செங்கோலோட்சி சிவபெருமான் திருவருள் பெற்ற வரலாறு இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

அடியார் திருவேடம் திருநீற்றின் விளக்கத்தால் நிச்சயிக்கப் படும். வெண்டிருநீற்றின் பொலிவு மேற்கண்டேன் வேறினியென், அண்டர் பிரான் சீரடியா ராயினார் (ஏனாதி-பா-38) என்று கொண்ட ஏனாதிநாதநாயனார் வரலாறு, ''மெய்யெலாம் நீறு பூசி வந்த வஞ்சகனையும் 'நமர்' (மெய்பொருள்-பா-16) என்று கொண்ட மெய்ப்பொருள் நாயனார் வரலாறு, வயிரவ அடியாரை ஊட்ட உடன் உண்ண ஓர் அடியார் காணக்

கிடையாத போது, நீறு சாத்தியிடுவார் தமைக் கண்டே யானும் இடுவேன் ஆதலின் என்னைச் சிவனடியாருள் ஒருவராக ஏற்கத்தக்கது (சிறுத்தொண்டர்-பா-77) என்று கூறிய சிறுத் தொண்ட நாயனார் வரலாறு; தோள்கட்டில் உவர் மண் பொதி சுமந்து வந்த வண்ணானின் உடலில் மழையினால் உவர்மண் ஊறி வடிதலினால் அவனது உடல் வெண்ணிறங்காட்ட அது கண்ட சேரமான் பெருமாள் நாயனாருக்கு அந்த வெண்மை நிறம் திருநீறு அணிந்த சிவனடியார் திருவேடம் என்றும் உணர்ச்சியைத் தர, சேரமான் பெருமாள் தமது பட்டத்து யானையிலிருந்து இறங்கி விரைந்து சென்று வண்ணானை இருகரம் கூப்பித் தொழுத வரலாறு ஆகியவை திருநீறணிந்த சிவனடியார்களின் வேடச் சிறப்பினை எடுத்து மொழியும் வலுவான சான்றுகளாகும்.

திருநீற்றுச் சிறப்பினைக் கூறும் சுவாமிகள்

> புத்தர்முத லோர்வரினும் புண்ணிய வெண்ணீறணியும்
> சித்தமுண்டா கத்திகளும் தில்லையே (பா-9)

என்று குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது.

பெரியபுராணம் பரவும் நாயன்மார் அறுபத்து மூவருள் சாக்கிய நாயனார் குறிப்பிடத் தக்கவர். இவர் முதலில் புத்த மதத்தைச் சார்ந்து நின்றவர். சிவபெருமான் திருவருள் கூடவே சைவ நெறியே உண்மைப் பொருள் என உணர்ந்தார். எந்த நிலையில் நின்றாலும், எந்த வேடத்தைக் கொண்டாலும் சிவபெருமான் திருவடியை மறவாமையை உறுதிப் பொருள் என்று கருதினார். ஆகையால் தாம் முதலிற் கொண்ட சாக்கிய வேடத்தை / புத்த வேடத்தை மாற்றாது சிவபெருமானிடம் பேரன்பு பூண்டு அவரை மறவாது ஒழுகி – இறைவன் திருவருள் பெற்றார் என்று விளக்குகிறார் சேக்கிழார். புறச் சமயத்தவ ராகிய சாக்கிய நாயனார் சாக்கிய வேடத்தை விடாது சிவபெருமானை வழிபட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. தில்லை நகரின் சிறப்பினைச் சுட்டும் சுவாமிகள், தில்லை நகருக்கு வரும் புத்தர் முதலான புறச் சமயத்தாருக்கும் புண்ணிய வெண்ணீறு அணியும் சித்தம் உண்டாகும் என்று கூறுவது, திரு வெண்ணீறு புறச் சமயத்தார் சித்தத்தையும் ஈர்க்கும் ஆற்றல் மிக்கது என்னும் மெய்ம்மையைப் புலப்படுத்துவதாகிறது.

**கொல்லாவிரதம்**

இறைவழிபாட்டில் விரதங்கள் இன்றியமையாத ஒரு படிநிலையாக அமைகின்றது. சோமவார விரதம், வெள்ளிக் கிழமை விரதம் என்னும் நாள் விரதங்கள், பௌர்ணமி, அம்மாவாசை முதலான மாத விரதங்கள் சஷ்டி விரதம், சிவராத்திரி விரதம், ஏகாதசி விரதம் ஆகிய ஆண்டு விரதங்கள் குறிப்பிடத்தக்கவை. இவ்விரதங்கள் கடைபிடிப்போரின் உள்ளத்தை பக்குவப்படுத்தும் சாதனங்களாக உள்ளன. இவ் விரதங்கள் இறைவனை ஆத்மார்த்தமாக வழிபட்டு மக்கள் தம் உளநலம் நோக்கி இயற்றப்படுவனவாக அறியப்படுகின்றது. இவற்றைக் காட்டிலும் கொல்லாவிரதம், உயிர் நலம் நோக்கிய மன்னுயிர் நலம் நோக்கியதாக அமைந்து காணப்படுகிறது. மன்னுயிர் மீது மாறா அன்பு பூண்டொழுகிய தாயுமானவர் வையகமே வாழ வேண்டும் என்று இறைவனிடம்

''எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே'' (பராபரக-221)

என்று வேண்டுகிறார். வையகம் இன்பமாக வாழ்வதற்கான வழி முறையையும்

கொல்லா விரதங் குவலய மெல்லாம் ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவ தெனிச்சை பராபரமே

என்று உணர்த்துகிறார். இக்கருத்தின் அடிப்படையில் சுவாமி களின் பாடல்களைக் காணும்போது கொல்லா விரதமே சுவாமிகள் காட்டும் இறையன்பின் பக்தியின் அடித்தளமாக வலியுறுத்தப்படுவது அறிய வருகின்றது. இக்கருத்துக்கணிப்புக்கு,

''கொல்லா விரதியர்தம் கூட்டமிக நீடுதலால்
எல்லாரு மெச்சு நெல்லையே'' (பா--32)

''வெங்கட் கொலைப் புலையர் வேரறுக்கும் வீரர்புகழ்
திங்கட் சடைப் பெருமாள் தில்லையே'' (பா–38)

''வாசவனும் வேதியனும் மாயவனும் மற்றமை தேசர்
எவருமெச்சும் தில்லையே – ஈசனிடம்
கானவர்போல் பல்லுயிர்கள் காதி அவற்றான் அருந்தும்
ஈனருக்கா காத நெல்லையே'' (4)

''நன்னாகரிக மெய்தி நாய்நரிபோன் றூன் எலும்பு
தின்னாதார் வேண்டுமெழிற்றில்லையே'' (20)

என்னும் சுவாமிகளின் பாடல் வரிகள் வலுவான சான்றுகளாக அமைகின்றன.

கொல்லா விரதத்தையும், ஊன் உண்ணாமையையும் சுவாமிகள் இங்ஙனம் வலியுறுத்திக் கூறுவதன் நோக்கம் யாது? உயிர் வாழ்க்கை நம்மால் உண்டாக்கப்பட்டது அன்று. நாமும் இந்த உடம்போடுதான் பிறக்க வேண்டும் என்று தீர்மானித்துப் பிறக்கவில்லை. எனவே நம் கடமை, நமக்கும் பிறர்க்கும் பிற உயிர்களுக்கும் தரப்பட்டுள்ள வாழ்க்கையைப் பாதுகாப்பதுதான். வாழ்க்கையைப் பாதுகாப்பது என்றால் என்ன? நம்மால் பிற உயிர்களுக்கும் அவற்றால் நமக்கும் துன்பம் உண்டாகாமல் பேணுவதேயாகும். பிற உயிர்களுக்கு நன்மை செய்யச் செய்ய நம் வாழ்க்கை பாதுகாக்கப்படும். வாழ்க்கையின் பயனும் நன்மையாக அமையும்.

வாழ்க்கையின் பயன் யாது? உயிர்கள் பரிணாம வளர்ச்சி முறைப்படி வளர்தல்தான் வாழ்க்கையின் பயன். ஒவ்வொரு உயிரும் தனது அறிவை வளர்த்துக் கொண்டு பரிணாமத்தில் அடுத்த படிநிலையை அடைய வேண்டும். மனிதன் இயல்பாகப் பெற்றுள்ள பரிணாம வளர்ச்சி மன அறிவு; அன்பு; பரிவு; கருணை முதலிய மெல்லிய குளிர்ந்த உணர்வுகள் எனலாம். இவற்றை மேலும் வளர்த்துப் பிறவி உய்தி பெற வேண்டும். இறையருள் பெற வேண்டும். இவற்றிற்கு அடித்தளமாக அமைவது கொல்லா விரதம் - பிற உயிர்களுக்கு நன்மை செய்தல் ஆகும். இதன் முதற்படியாக பிற உயிர்களை உணவுக்காகவும், வேள்விக்காகவும், பிறவற்றிற்காகவும் நாமும் கொல்லாமல், பிறரும் கொல்லாமல், கொல்ல முயன்றால் அதைத் தடுத்துப் பாதுகாக்க வேண்டும்.

வழிபாட்டு முறைகளுள் ஒன்று வேள்வி செய்தல். வேள்வியில், வேள்வி செய்வோர் தமக்கு விருப்பமான பொருள்களை நெருப்பில் இடுவர். அது எரிந்து ஆவியாகி - நுண்ணியதாகி நுண்ணுடமலை உடைய தேவர்களில் யாரை நோக்கி வேள்வி செய்யப்படுகின்றதோ அந்தத் தேவர்களை அடையும் அவர்களும் அதை ஏற்று மகிழ்ந்து வரம் அளிப்பார் என்று நம்பப்படுகிறது. ஊன் உணவு உண்பதில் விருப்பம் உடையவர் அதனை அவிப பொருளாக வேள்வித் தீயில் இடுவர். தமக்கு விருப்பம் இல்லையென்றாலும் வேள்வி செய்வோரின் அன்பிற்காக அத்தேவர்கள் அவ்வூனை ஏற்பர், இவர்களை 'அவியுணவின்

ஆன்றோர்' என்று குறிப்பிடுவர். என்றாலும், வேள்வி செய்வதன் நோக்கம் யாது? என்ற வினா எழுகின்றது. நாடு நலம் பெற வேண்டும்; மழை பெய்ய வேண்டும் என்னும் பொது நன்மைகளுக்காக வேள்விகள் செய்யப்படுகின்றன என்று கூறலாம். ஆனால் ஊனை/மாமிசத்தை வேள்வியில் சொரிவதற்காக உயிர்களைக் கொல்வதைப் பொது நன்மை என்று எப்படிக் கருதமுடியும்?

அனைத்துயிர்களிடத்தும் கருணை காட்டுவதுதான் பொது நன்மை. ஊன் சொரிந்து ஆயிரம் யாகம் செய்வதால் வரும் நன்மையைவிட, ஒரு உயிரை-ஒரே ஒரு உயிரைக் காப்பாற்றுவதால் - அன்று புத்தபிரான் பிம்பிசாரருடைய யாகத்தில் பலியிடப்படவிருந்த ஆட்டுக் குட்டியைக் காப்பாற்றியது போலக் காப்பாற்றுவதால் வரும் பொது நன்மை பெரிது. கொல்ல மாட்டேன், மாமிசம் உண்ணமாட்டேன் என்று கருணையுடன் வாழ்வதால் வரும் பொது நன்மை அதிகம்.

> அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர் செருத்து உண்ணாமை நன்று

என்ற வள்ளுவர் வாக்கும் இதற்கு அழுத்தமான சான்றாக அமைகின்றது.

சுவாமிகளின் வாழ்க்கையில் நடைபெற்ற சில நிகழ்வுகளும் சுவாமிகளின் உரைகளும் சுவாமிகளின் கொல்லா விரதக் கொள்கை, ஊன் உண்ணாமை ஆகியவற்றிற்கு மேலும் வலுவூட்டுவதாக இருப்பதால் கருத்து ஒப்புமை கருதி அவையும் இங்குச் சுட்டப்படுவது பொருத்தமாகத் தோன்றுகிறது. அவை, சுவாமிகளுக்குப் பல அறிவுரைகள் கூறிவந்த சிதாராம நாயகர் என்பவருக்கு ஊன் உண்டலில் உடன்பாடு உண்டு. ஆகவே அவர் சுவாமிகளிடம் ஊன் உண்பவர்களிலும் பெரியோர்கள் உண்டு என்று உரைத்த போது,

சுவாமிகள், உயிர்களை உடம்பைவிட்டு நீங்குமாறு கொன்று இழிவு பொருந்திய ஊனை உண்பவர்கள் ஒருநாளும் பெரியோராக மாட்டார்கள். மறைநெறி என்று வேள்வியில் கொல்லுகின்றவர்களும் இழிந்தவர்களேயாவர்களே நல்லவர்கள். இரக்கமில்லாதவர்கள் அரக்கர்களேயாவர் (தமிழ்ப்புலவர் வரிசை, 5-ஆம் தொகுதி ப. 110) என்று குறிப்பிட்டார்.

திருவொற்றியூர் வட்டப்பாறை நாச்சியார் புலைப் பூசையாகிய கொலைப் பூசையை விழைபவள் என்னும் செய்தியைக் கேள்வியுற்ற சுவாமிகள்,

ஒற்றியூர்க் காளி உனக்கேனோ ஊன்விருப்பம்
வெற்றிமழ வானவருட்சீர் வேண்டாயோ - சிற்றுயிரைக்
கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவன் கண்டாய்
நல்லவார்த்தை சொன்னேன் இந்நாள்

என்று பாடினார் (தமிழ்ப்புலவர் வரிசை, 5-ஆம் தொகுதி ப. 117)

பழனி மலையில் உள்ள இடும்பனுக்குப் பலி வழிபாடு செய்வது அந்நாளில் வழக்கமாக இருந்தது. கொலைப்பூசையை அடியோடு வெறுக்கும் அடிகள்,

''பாடும் அன்பர் போற்றும் பழநிமலைப் பாதியினின்
றாடும் இடும்பா அறையக்கேள் - நீடும்
கொலைகண்டு மாமிசமுட் கொண்டு வக்க வேண்டாம்
நிலைகண்டு மெய்யருளில் நில்'' (தமிழ்ப்புலவர் வரிசை 5-ஆம் தொகுதி - ப. 129)

என்று பாடினார் என்பனவாகும்.

இதுவரை கூறியவற்றால், மனிதப்பிறவி உய்யவேண்டு மானால், மக்கள் மனிதப் பிறவியின்கடன் - இறைவழிபாடு 2. மனிதப்பிறவியின் பயன் இறைவன் திருவடி அடைதல் 3. இறைவழிபாடு பூசித்து வழிபடுதல், தியானித்து வழிபடுதல் என்று இருவகையாக அமைதல் 4. எல்லோரும் எளிதில் கடை பிடிக்கக் கூடியது பக்தி நெறி/பூசித்து வழிபடுதல் 5. சிவ வழிபாடு செய்வோர் திருநீறு, உருத்திராக்கம், சடை ஆகிய சிவ சின்னங்கள் அளித்தல் சிறப்பு 6. விரதங்களில் சிறந்தது கொல்லா விரதம் என்னும் உண்மைகளை உணரவேண்டும். சுவாமிகளின் அழுத்தமான - பிறவி உய்யும் நெறியாக அமையும் சிந்தனைகள் இரண்டு வகை அன்பின் தொகுப்பாக அமைகின்றன. ஒன்று இறையன்பு - இதனை சிவனை நோக்கிய அன்பு எனலாம். மற்றொன்று இறைவன் படைத்த அனைத்து உயிர்கள் மாட்டும் காட்டுகின்ற அன்பு இதனை சீவனை நோக்கிய அன்பு என்று கூறலாம்.

இவ்விருவகை அன்புகளையும் கடைப்பிடித்து இறையருள் பெற முயற்சி செய்வோமாக.

# சுவாமிகள் உணர்த்தும் அரசியல் சிந்தனைகள்

சி. சுந்தரேசன்

அரசு, காலப்போக்கில் உருவான மக்கள் கூட்டமடங்கிய ஒருவகை சமுதாய அமைப்பு. தன் நில எல்லைக்குள் வாழும் யாவரையும் தன் சட்டத்திட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறு கட்டாயப்படுத்தக் கூடிய ஆற்றல் அரசு என்னும் அமைப்புக்குத்தான் உண்டு. அரசு தோன்றியது முதல் இன்று வரை மனிதன் அரசியல் உணர்வுகளால் உந்தப்பட்டவனாய் மக்கள் வாழ்வு வளம் பெற, செழிப்புற அரசு எப்படிச் செயல்பட வேண்டும் என்று சிந்திக்கின்றான். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அரசனின் நல்லியல்புகள், செயல்பாடுகள், நீதிமுறை, அந்தணரின் இயல்புகள், அரசர்க்கு வேண்டுவன, அமைச்சரியல்பு, காட்டிக் கொடுக்கும் துரோகச் செயல் முதலான பண்புகளைப் பற்றி வெண்பாப் பாடல்களால் ‘அரசாட்சி' என்னும் பெயரில் தமது சிந்தனைகளை வெளிப்படுத்தியிருக்கிறார்.

சுவாமிகள் முடியாட்சியினை மூலமாகக் கொண்டு வெளிப் படுத்தியிருந்தாலும் எக்காலத்திற்கும் பொருந்துவனவாக அறிவுறுத்துவனவாக வழிகாட்டுவனவாக அமைந்திருக்கிறது. வரலாறு, புராணம், இதிகாச மேற்கோள்களைக் காட்டி எல்லோருக்கும் விளங்கக்கூடிய எளிய நடையில் அமைத்து இருக்கிறார்.

### அரச இயல்பு

நல்ல அரசன் என்பவன், தான் ஆட்சி புரியும் ஆற்றல் மிக்க அரசன், தன்னிடம் அதிகாரம் குவிந்திருக்கிறது, எவர்க்கும் கட்டுப்பட வேண்டாம் என்று கருதாமல் இறுமாப்பு அடையாமல், கணவனின் குறிப்பறிந்து ஒழுகும் மனைவி போல கடவுளுக்குப் பயந்து வணங்கி ஆட்சிபுரிவான். தமது மக்கள், தமது பணியாளர் களைக் கண்டு பயந்து நடப்பது போல அரசன், கடவுள் அருள்

பெற்ற பெரியோர்களையும் முனிவர்களையும் கண்டு பயந்து ஆட்சிபுரிய வேண்டும். அவ்வாறு செய்பவனே நல்ல அரசன் ஆவான்.

தம் மக்களைக் கொலை, புலை இல்லாமல் இருக்கச் செய்யும் அரசன் சந்திரனுக்கு நிகரானவன். மற்றைய அரசர்கள் நட்சத்திரம் போன்றவர்கள். முனிவர்களையும் புலவர்களையும் வீரர்களையும் அருகில் வைத்துக் கொண்டு அவர்களின் அறிவுரை களையும் கேட்டு ஆட்சிப்புரிபவன் நல்ல புகழைடைவான். புகழும் நேர்மையும் கொண்ட அரசர் தன்னை விரும்பாத பெண்ணை மணந்து கொள்ளமாட்டார்.

தமிழில் சிறந்த புலமை பெற்ற ஒட்டக்கூத்தர் பாதங்களை குலோத்துங்க சோழன் தனது தலையிற்பட வணங்கியதால், அவன் மறைந்த பின்னும் அவனது பூதவுடல் புகழுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அரசனானவன் தன்னை வணங்கும் மக்களுக்கு எமன் போன்று துன்பம் அளிக்காமல் தாயைப் போன்று கருணையுள்ள அரசனை, எதிர்த்து யார் போரிட வந்தாலும் தர்ம தேவதை அவனைக் காப்பாற்றுவாள்.

போரில் இறந்துபட்ட அரசரின் மனைவியர் உடன் உயிர் துறப்பர். அவ்வாறின்றி வாழ விரும்புவர்களைத் தம் நாட்டுக்கு அழைத்து வந்து தமது மனைவியர்க்கு உதவிபுரிய வைக்கும் அரசர்களைச் சான்றோர்கள் போற்றுவர். தோல்வியடைந்த அரசனை சிறையிலடைத்தால் அவனோடு அவனது மனைவியும் குழந்தைகளையும் சேர்த்து இறக்கச் செய்யும் அரசனை தேவலோகத்தாரும் போற்றுவார்கள்.

**செயல்பாடுகள்**

இறையருளால் இயற்கையாகவே அறிவும் ஆண்மையும் பெற்றிருக்கும் அரசன் உலகியலை உணர்ந்து நல்ல முறையில் ஆட்சி செய்வான். இயற்கையாக அவ்வாற்றலைப் பெறாதவன் தக்கப் பெரியோர்களைத் தனது அரசவையில் சேர்த்துக் கொண்டு அவர்களது அறிவுரையின்படி ஆட்சி செய்தால் சிறப்பாக இருக்கும். காட்டில் வாழும் முனிவரின் மகனாகிய பரசுராமன் பல தலைமுறை அரசர்களையும் வெட்டியமையும் மட்பாண்டம் செய்யும் குலத்தில் பிறந்த சாலிவாகனனால்

கொன்ற விக்கிரமாதித்தனையும் நினைத்து நிலைமையை உணர்ந்து நீதியோடு அரசாள வேண்டும்.

தசரத குமாரனும் கடவுளின் அவதாரமுமான இராமனே வசிட்டர் முதலான முனிவர்களின் துணைகொண்டு ஆண்டு வந்தான். அதுபோல இல்லாமல் பெரியோர்களின் துணையின்றி ஆட்சிபுரியும் அரசர்களின் கொடுங்கோலாட்சியை பூமகளும் கண்டு பயப்படுவாள். போரில் தோற்றால் தமது அரசும் அகவாழ்வும் எதிரிகளிடம் சிக்கிக் கொள்ளும். போரிட்டு இறந்தால் வீரசுவர்க்க வாழ்வும் சுகமும் கிடைக்கும் என்று மனதில் உறுதியோடு போரிடும் அரசனின் வாளுக்கும் வேலுக்கும் வெற்றி உறுதியாகிவிடும்.

**நீதிமுறை**

உலகெலாம் ஆளக்கூடிய அரசனானாலும் தன்னிடம் வரும் வழக்குகளை ஆராய்ந்து நடுவு நிலையுடன் தீர்ப்பளிக்காதவன் ஐந்தறிவுடைய விலங்கிளிலும் கீழானதாகக் கருதப்படும் பன்றியினும் இழிவானவனாகக் கருதப்படுவான். ஒரே குற்றத்தை மேற்குலத்தானும் கீழ்க்குலத்தானும் செய்தார்கள் எனில் அதில் மேற்குலத்தானுக்குக் குறைவான தண்டனையும் கீழ்க்குலத்தானுக்கு அதிகத் தண்டனையும் விதிக்க வேண்டும் என எழுதி வைத்துள்ள சாத்திரங்களைத் தனது ஆட்சிநூலாகக் கொண்டு ஆட்சிபுரியும் அரசனின் குலம் முழுவதும் அழிந்துவிடும். நீதி வழங்குவதில் சிக்கலும் குழப்பமும் ஏற்படும்போது இறைவனின் துணையை நாடவேண்டும். மதுரையில் அந்தணனின் வழக்கைத் தீர்க்க பாண்டியன் சொக்கலிங்கப் பெருமானின் அருளைப் பெற்றுத் தீர்த்தது போல முறையாகத் தீர்ப்பளிக்க வேண்டும்.

தனக்கு உட்பட்டவர்கள் கப்பம் செலுத்தும் பொருளை மட்டும் பார்க்காமல், அவ்வரசன் நாட்டை நீதியுடனும் கருணையுடனும் ஆட்சி செய்கிறானா என்றும் கவனிக்க வேண்டும். கடுந்தவம் புரிந்து சிவனின் அருளைப் பெற்று பல உலகினையும் ஆண்ட சூரபன்மா முதலானவர்களும் அழிந்து பட்ட வரலாறுகளை கவனித்து அறிந்து ஏற்றுக்கொண்டு ஆணவம் இல்லாமல் நீதியாலே ஆட்சிபுரிய வேண்டும்.

ஆதிகாலம் தொட்டு ஆட்சி செய்த அரசர்கள் ஆற்று மணல் போல எண்ணிலடங்காதவர்கள். ஆனால் தனது ஒரே மகனையும் தேர்க்காலிலிட்டுக் கொன்று நீதி வழங்கிய மனுநீதி சோழன் போன்று ஆட்சி செய்ய வேண்டும்.

ஆராய்ச்சிமணி அடிக்கப்பட்டவுடனே நீதி வழங்கி மீளும் அரசனின் ஆட்சியால் எல்லா உயிர்களும் ஒரு குறையும் இல்லாமலிருக்கும். குற்றம் செய்பவரிடம் இலஞ்சமாகப் பொருள் பெற்றுக் கொண்டு அவர்கள் செய்த குற்றத்தை மறைத்துப் பேசுவன், தனது மனைவியுடன் கூடப்பிறந்தவன் ஆயினும் அவனது இலஞ்சம் வாங்கிய கையை வெட்ட வேண்டும். அப்படிச் செய்யத் திறமையில்லாத அரசன் நரகில் தள்ளப்படுவான்.

ஓர் உயிர் புல்லுக்கும் துன்பம் செய்யாத அந்தணர்களையும் கொலை புரிந்து வேள்விபுரிந்து ஊனையும் பங்கு போட்டுக் கொள்ளும் பார்ப்பனர்களையும் நீதியோடு அரசாளும் அரசன் சமமாகக் கருத மாட்டான். அந்தணர்களைப் பாதுகாத்து நல்லொழுக்கச் சீலர்களாக வாழச் செய்யாதவன் பிற அரசர்களால் தோற்கடிக்கப் படுவான்.

**அரசர்களில் கீழானவன்**

வேற்றரசர்களைப் பணிந்து வாழும் நாணமில்லாத அரசனும் தேவர் உலகம் வரை தனது புகழைப் பரவச் செய்யாத அரசனும் மானும் மீனும் போன்ற கண்களை உடைய மாதர்களோடு ஆடுவதையே நாள் முழுவதும் செய்யும் அரசனும் மன்னர்களில் கீழானவர்.

சிற்றரசர்களின் ஆட்சியே நன்றாக இருக்கிறது என்று எண்ணும் அளவிற்கு பேரரசர்களின் ஆட்சி நடக்குமே ஆனால் அவ்வரசனை கடவுள் அவதாரமோ, தவசிகளோ அழித்துவிடுவர். தெய்வம், முனிவர்கள், கல்வியிற் சிறந்த பெரியோர்கள், புலவர்கள் முதலானவர்களை வணங்க நாணமடையும் அரசன் எதிரிகளிடையே சிக்கி மாள்வான்.

தன் கீழ் உள்ளவர்களும் சிற்றரசர்களும் இலஞ்சம் பெற்றுக் கொண்டு நீதியாக வழக்கறையாது ஒரவஞ்சனையாகச் செய்தால் அதனைக் கண்டு கொள்ளாத அரசர்க்கு நரகத் துன்பங்கள் கிடைக்கும்.

**அரசர்க்கு வேண்டுவன**

இவ்வுலகு முழுவதும் ஆளக்கூடிய ஆற்றல் இருந்தும் கடவுள் பக்தியால் தெய்வ அருள் இருக்க வேண்டும். தக்கன் ததீசி முனிவரின் நன்மொழிகளைக் கேளாமல் கடவுளை நிந்தனை செய்து யாகம் செய்து அழிந்தான் என்பதனை அறிந்து ஒழுக வேண்டும்.

தானே கடவுள் என்று சொல்லி ஆணவத்துடன் கடவுளை நிந்தித்த இரணியனை நரசிங்க அவதாரமாகத் தோன்றி அழித்து பிரகலாதனை காப்பாற்றியதை அரசர்கள் மதித்துத் தெய்வப் பக்தியுடன் இருக்க வேண்டும். செங்கோல் ஆட்சியினர் நாட்டில் பருவத்தே மழை பெய்யும் கொடுங்கோல் ஆட்சியினர் நாட்டில் வறட்சியே மேலிடும்.

இவ்வுலகம் கடவுளால் உண்டாக்கப்பட்டது. தான் அரசனானது கடவுளால்தான். தாம் ஒழுங்காக ஆட்சி புரியா விட்டால் கடவுள் தம்மை மாற்றி வேறொருவனை அரசனாக்கி விடுவான் என்ற பண்பு மட்டுமிருந்தாலே அவன் நல்ல அரசன்.

**நல்ல அரசன்**

குடிமக்கள் செய்யும் புண்ணிய பாவங்களில் சிறுபகுதி அரசனையும் சேரும் என்றறிந்து மன்னன் மாறுவேடத்தில் "நகர்ச் சோதனை" செய்து நடைபெறும் குற்றம் குறைகளை உணர்ந்து தக்கபடி நீதி செலுத்துவான்.

தான் அரசன் என்று இறுமாப்பு அடையாமல் இவ்வாட்சி யால் தமக்கு ஆபத்துக்கள் வரலாமென்று உணர்ந்து குற்றம் குறைகளை முறையிடு செய்ய வரும் மக்களுக்கு காட்சிக்கு எளியோனாக இருக்க வேண்டும். குடிமக்களுக்கு நல்ல துணை வனாக இருப்பவனே காவலனாகிய நல்ல அரசனாவான்.

**நல்ல அமைச்சன்**

சத்தியத்திற்கு அஞ்சாத துர்புத்தியுடைய மந்திரியின் ஆலோசனைபடி செயல்படும் அரசனுக்கு மறுமுறை சுவர்க்கம் கிடைக்காவிட்டாலும் அவனது மக்களுக்கும் கடல் போன்ற துன்பம் வரும். மேலும் பெரிய பிராணியின் வாயில் சிக்கும்

சிறிய பிராணிபோல துன்பம் அடைவர். அரிமர்த்தன பாண்டியன் வாதவூரார் ஆகிய நல்ல அமைச்சர் தனக்குக் கிடைத்தமையால் சிவனையே பிரம்பால் அடிக்கும் பேறு பெற்றார். இருபது கைகளைக் கொண்ட இராவணனும் பாம்பு கொடி துரியோதனனும் துர்புத்தி மந்திரியினுடைய சொற்படி நடந்தமையால் பழி சுமந்து அழிந்தனர் என்பது உலகு கண்ட உண்மை.

**நல்ல சேனாதிபதி**

போரில் தனது தலை வீழும் முன்பே தனது அரசன் வேற்று அரசனிடம் பயந்து சமாதானம் பேசுவதை விரும்பாத சேனாதிபதியை யாவரும் விரும்புவர். பகையரசனிடம் இலஞ்சம் பெறும் சேனாதிபதி தன்னரசனால் கண்டுபிடிக்கப்பட்டு கொல்லப்பட்டு நரகிற் சென்று மேலும் துன்பம் அடைவான்.

**காட்டிக் கொடுப்பவர்கள்**

அண்ணன் இராவணன் நீதி தவறியபோது விபீடணன் அண்ணனின் பகைவனாகிய இராமனிடம் அடைக்கலம் அடைந்ததால் அவனை அவ்வரசர்கள் ஏற்றுக் கொள்ளலாம். ஆராய்ந்து பார்த்தால் கும்பகர்ணன், விகர்ணன் போன்ற வீரர்களின் தன்மைக்கு விபீடணன் தாழ்ந்தவனே.

விபீடணன் இராவணனுக்கு நீதி எடுத்துச் சொல்ல அவன் கோபித்தபோது அவனது உறவு வேண்டாமென்று எண்ணி இராமனிடம் வருவதற்குப் பதிலாகக் காட்டிற்குச் சென்று தவமேற்கொண்டிருந்தானெனில் உலகம் முழுவதும் ஆட்சி செய்ய எண்ணினாலும் கிடைத்திருக்கும். அப்படியின்றி இலங்கை மட்டும் ஆள நினைத்தது, ஆட்சி செய்தது நீதியான செயல்கள் அல்ல.

ஓர் அரசனை வஞ்சித்துவிட்டு பிறிதொரு அரசனிடம் பணி செய்ய வருகின்ற முக்கியப் பணியில் உள்ளவர்களை பிறிதொரு அரசன் ஏற்றுக் கொள்ளாமல் உலகறிய தண்டனை விதிக்க வேண்டும்.

இவ்வாறு மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எக்காலத்திற்கும் ஏற்றுக்கொள்ளக்கூடிய அரசியல் அறக்கருத்துக்களை வெளிப்படுத்தி வழிகாட்டியுள்ளார்.

# திருமலை முருகப்பெருமான் பதிகம்

## ச. வே. சுப்பிரமணியன்

தமிழகத்தில் தோன்றிய புலவர் பெருமக்களுள் முதல்நிலை யுடையவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். நாம் தெரிந்த அளவில் கம்பன் மிகப் பெரிய கவிஞன். அவன் பாடியவை பன்னீராயிரம் பாடல்களே. வண்ணச்சரபம் சுவாமிகள் பாடியவை ஒரு இலட்சம் பாடல்களுக்கு மேல். சினத்தால் கிழித்தெறிந்தவை ஐம்பதாயிரம் பாடல்களுக்குக் குறையாது மீதி இருப்பவை ஐம்பதாயிரம் பாடல்கள் இருக்கும். அவற்றுள் ஏறத்தாழ இருபதாயிரம் பாடல்கள் அச்சாகி இருக்கலாம். ஏனையவை அச்சுப் பெற வேண்டும்.

எல்லாக் கடவுளரையும் பாடியுள்ளார் வண்ணச்சரபம் சுவாமிகள். தொடக்கக் காலத்தில் திருமலை முருகனைத் தரிசிக்கச் சென்றவர், நேரே காண வேண்டும் என்று விரும்பினார். தரிசனம் தரவில்லை எனில் அறுநூறு அடி உயரமுள்ள மலையி லிருந்து கீழே உருண்டு விடுவேன் என்று கூறினார். அவன் பக்தர்களோடு விளையாடுவான். சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டவனாயிற்றே. பழத்தை மரத்திலிருந்து உலுப்பியவன், மணல் பட்ட பழத்தை, மணலை நீக்க ஊதியபோது, பாட்டி பழம் சுடுகிறதா? என்று கேட்டவன்.

வண்ணச்சரபத்திற்கு அவன் தரிசனம் தரவில்லை. வடக்கே தலை வைத்து தெற்கே கால் நீட்டி உருண்டு விட்டார் இவர். அறுநூறு அடி உயரமுள்ள சிறுமலை, சிறிய காயங்க ளோடு, துன்பமின்றி உயிர் தப்பினார் சுவாமிகள் முருகனே காப்பாற்றினான் என்பது வரலாறு.

குற்றாலம் அருகே இருக்கும் திருமலை முருகன் கோவில் மிகவும் அழகான அமைப்புடைய கோயில் தமிழ்ப் பற்றாளரை வாழ்விப்பவன் அத்திருமலை முருகன். நான் 1948-50-இல் இடை நிலை வகுப்பு (இண்டர்மீடியட்) படித்து முடித்தவுடன் தமிழ்

படிக்க அண்ணாமலைப் பல்கலைக்கழகம் செல்ல வேண்டுமென்று தந்தையிடம் கூறினேன். அவர் முருக பக்தர். திருமலை முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டவர். அம்முருகன் முன்னிலையில் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்து, திருமலை முருகன் உன்னைத் தமிழ் படிக்க அனுமதித்தால் நீ படிக்கலாம் என்று கூறினார்கள். என்னை அழைத்துக் கொண்டு, திருமலை முருகன் சந்நிதியில் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்தார்கள். அவன் என்னைத் தமிழ் படிக்க வைத்தான். அவன் தமிழ்த் தெய்வமல்லவா? என் வளர்ச்சிகள் அனைத்திற்கும் இந்நிலைக்கும் காரணம் திருமலை முருகனே.

வண்ணச்சரபம் வார்த்தைகளில்,

> "நினைப்பவர் உளத்தில் அனுதினம் உலவும்
> நின்திருப் பதத்தைஎன் சிரத்தில்
> வினையறக் களைந்து சூட்டியாண் டருளும்
> வேளையை அறிகிலேன் விளம்பாய்!"

என்று கேட்கின்றார்.

இவ்வாறு இவர் திருமலை முருகன் மீது பாடிய பதிகங்களை 1984-லிலும், 1987-லிலும் திரு. எஸ்.பாலசுப்பிரமணியம் அவர்கள் பதிப்பித்துள்ளார்கள்.

திருமலையில் நின்ற குகன்மேற் பாடல் நிகழ்த்துதற்குக் குன்றெறிந்த செவ்வேலும் மாமயிலும் சேவற் பதாகையும் வந்து எவ்வேளையும் துணையாகும் என்று காப்புப் பாடலில் பாடுகின்றார் சுவாமிகள்.

கழனி சூழ்ந்திலங்கும் திருமலையின் சிறப்பை அங்கங்கே எடுத்துக்கூறி, தம்மை நேரில் வந்து ஆட்கொள்ள வேண்டுமென இரந்து கூறும் பகுதிகள் குறிப்பிடத் தக்கனவாம்.

> "வேலினைக் கடம்பைச் சேவலை மயிலை
> விளங்கிய உன்திருத் தண்டைக்
> காலினை நினைக்கும் அறிவிலாச் சிறியேன்
> களிப்புறப் புரியும்நாள் உளதோ?" (1)

> "வழுவிலாத் தமிழால் உன்திருப் பதத்தை
> வாழ்த்துவோர் குழுவினை வணங்கித்
> தொழுதிடாக் கொடியேன் மனத்துயர் ஒழித்துச்
> சுகத்திடை யிருத்தும்நாள் எதுவோ?" (2)

"தையலார் இதழ்த்தேன் பருகலே விரும்பும்
தமியனேன் தனைத்தடுத் தாள
மெய்யடி யவர்தம் குழுவுடன் மயில்மேல்
விளங்கிடும் நாள் எதோ?" (3)

எனப் பலவாறு வினவுகிறார் இவர்.

"அஞ்சிடாது அடியார் களைத்தினம் இகழும்
அறிவிலாப் புலையனேன், அவமாய்த்
துஞ்சிடா வணம்வை வேலுடன் எதிரில்
தோற்றியோர் சொற்பகர்ந் தாள்வாய்" (5)

எனத் தம் எதிரே வந்து முருகன் அருள வேண்டுமென அழைக்கிறார்.

முருகனின் வெற்றிச் சிறப்புக்களை மிக அழகாக அங்கங்கே எடுத்துரைக்கின்றார்.

"வெய்யசண் டாளத் தகுவர்வேர் அறுக்க
விடுங்கதிர் வேலணி விமலன்" (3)

"எங்கணும் உளமெய் யடியவர் உளத்தின்
இருளறுத் தின்பமே புரியும்
செங்கதிர் எனஇவ் வுலகிடத் தியங்கும்
திருமலைக் குமரன்" (6)

"மந்தனை யனைய குணமுடைக் கொடியோர்
வாழ்வற வேல்விடுங் குகன்" (10)

"சிந்தனை புரிவோர் பவப்பிணி தொலைக்கும்
திருமலைக் குமரன்" (10)

"சேணினுக் கொருதா யகமென வளர்ந்த
திருமலைக் குமரன்" (10)

"சங்கரர்க்குப தேசம் நல்கிய
சண்முகக் குருநாதன்" (2)

"நாகர் அஞ்சிட வென்ற தாருகன்
நாச முற்றிட எய்தவன்" (3)

என இவ்வாறு போற்றும் சுவாமிகள், பன்னிரண்டு புயத்தனே(1) கூதளத் தொடை யாளனே (4), பெருங்குக்குடம் திகழ்கையனே (4), கந்த நாயகனே, கடம்பணி காரணக் குருநாதனே (5) ஞான பண்டித நாதனே (6), சுந்தரக் குகனே, விண்ணோர்தரு தோகை மேவிய தோளனே (9), கல்வரைக்குகை தோறும் மேவிய கந்தனே (11) என வாயாரப் புகழுகின்றார்.

முருகப்பெருமான் மீது கொண்ட ஊடலால் சுவாமிகள் தம் பாடலமைந்த ஏட்டுச் சுவடிகள் பலவற்றை அழித்தனர். அவற்றை மீட்டுத் தருவதும் முருகன் பொறுப்பு என்பதை இப்பதிகத்தில் கூறுகிறார்.

"பாக மிஞ்சிய செந்த மிழ்க்கவி
பாடி யுன்னது பண்பினாற்
சாக ரத்தொடு தீயி லிட்டவை
தந்த ருட்செய வல்லையோ?" (3)

என்பது அவர்தம் விண்ணப்பம்.

திருமால் மருகனாகிய முருகனை, 'தூணிடை யுதித்தன்று, இரணியன் உயிரும் சோரியும் அருந்துமால் மருகா! (11) என அழைக்கும் சுவாமிகள், 'செய்யபூ மகள்சேர் அரியெனத் திகழும் திருமலைக் குமரன்' (3) என்றும் முருகனைத் திருமாலோடு சேர்த்துக் கூறும் பாங்கு கருதத்தக்கதாகும்.

சங்கரலிங்கம் என்னும் இயற்பெயர் கொண்ட இவர், தண்டபாணி, முருகதாசர், வண்ணச்சரபர் எனப் பல பெயர்கள் பெற்றவர். 'நீறு பூசிய தொண்டர் மிக்குறு நெல்லையூர்வரு பாவலன்' (12) எனத் தம்மை இப்பதிகத்தில் அறிமுகப்படுத்திக் கொள்ளும் சுவாமிகள், 'நெல்லைச் சிவகுருதாசன்' என்று மேலும் தம்மை வலியுறுத்திக் கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

"செம்புகர் வேழம் பிடியொடு திரியும்
திருமலைக் குமரநா யகனே!
வம்புரு நெல்லைச் சிவகுரு தாசன்
வழுத்திய பாடலைத் தினமும்
நம்புவோ ரிடத்தில் மதனனும் விதியும்
நமனும்வந் தணுகிடா நலமும்
அம்புவி யனைத்தும் ஒருகுடை நிழலில்
அரசுசெய் வலிமையும் வருமே." (12)

என வரும் பாடல், திருமலை முருகப்பெருமான் பதிகப் பாடல்களை ஓதும் பயனை மிகத் தெளிவாக விளக்கக் காணலாம்.

திருமலை முருகன் மெய்யன்பர்கள் விரும்பும் நலன்களை உடனே நல்கும் நாயகன். இதனைத் தம் வாழ்நாளில் கண்டு உணர்ந்தவர் வண்ணச்சரபம் சுவாமிகள். இம் முருகனிடம் ஆராத பேரன்பு கொண்ட தம் பெற்றோர்கள் செய்த தவத்தால் பிறந்த திரு. எஸ். பாலசுப்பிரமணியம் அவர்கள் சுவாமிகளின் திருமலைப் பதிகங்களை ஏட்டிலிருந்து அச்சேற்றி வழங்கியுள்ளார்கள். இப்பாடல்களை நாளும் ஓதி நாமும் நற்பயன் பல பெறுவோமாக.

# தண்டமிழ் நெறியும் தண்டபாணி அடிகளும்

பெ. சுப்பிரமணியன்

உலகில் வாழும் மக்கள் இனங்களுள் தொன்மைச் சிறப்பு மிக்க வரலாற்றுக்கு உரிய தமிழினம் மிகச்சிறந்த வாழ்வியல் நெறிகளைக் கொண்டது. புறவாழ்வின் செம்மையாகிய நாகரிகத்திலும் அகவாழ்வின் செம்மையாகிய பண்பாட்டிலும் சிறந்து விளங்கிய அனுபவத்தின் காரணமாகச் சமுதாய கூட்டு வாழ்க்கையில் தமிழினம் கண்ட பல்வேறு நெறிகள் மனிதகுலத் தால் என்றும் போற்றத்தக்கன. இயற்கையோடியைந்த வாழ்வு- இல்லறச்சிறப்பு - கடவுள் வழிபாடு- வாழ்வுடன் இயைந்த சமயம்-சமய சமரசம் (சன்மார்க்கம்) ஆன்மநேயம் ஆகிய மிகச்சிறந்த நெறிகளை உலகுக்கு அளித்தது தமிழினத்தின் சிறப்பு எனலாம். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பண்பட்ட வாழ்வினில் உயர்நெறிகளைக் கண்டு உலகிற்கு வழங்கிய தமிழர் நெறியின் வழியில் வாழையடி வாழையென வந்த அடியவர் திருக்கூட்ட மரபினில் தோன்றிய மகான் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் என்னும் முருகதாச அடிகளின் வாழ்வியல் நெறிகள் குறித்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தமிழரின் கடவுள் வழிபாட்டு நெறி**

பழந்தமிழரின் கடவுள் வழிபாடு பற்றிய கருத்துக்களைத் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் ஆகிய நூல்களைக் கொண்டு அறிய முடிகிறது. நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணையாகப் பகுத்து ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு தெய்வத்தைக் கொண்டனர்.

> மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும் (தொல். 951)

என்னும் தொல்காப்பிய நூற்பா இவ்வுண்மையைக் காட்டும். நிலத்தெய்வங்கள் மட்டுமன்றி எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாகச் சிவபரம் பொருளை வழிபட்ட நிலையினையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. 'ஆலமர் செல்வன்', 'ஆல்கெழு கடவுள்', 'முக்கட்செல்வன்', 'கறைமிடற்று அந்தணன்', 'நீலமணிமிடற்று ஒருவன்', 'நீலமேனி வாலிழை பாகன்' போன்ற சொற்கள் சிவனைக் குறிப்பன. இளங்கோ வடிகள் சிவபெருமானைப் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்று போற்றினார்.

பெருந்தெய்வ வழிபாடும், இறந்த முன்னோர் வழிபாடு (நடுகல் வழிபாடு) முதலான நாட்டுப்புறச் சிறுதெய்வ வழிபாடும் தமிழர் வாழ்வியலில் இடம்பெற்றிருந்த நிலையினைக் காண் கிறோம். மறைகள், ஆகமங்கள் வழி செய்யப்படும் வழிபாடும், மக்கள் அன்புவழியில் தங்கள் விருப்பத்திற்கேற்ப செய்த வழி பாடும் என இவை இருவகைப்படும். அருமறை அந்தணர் செய்த முறைப்பட்ட வழிபாட்டினையும், வேலன் வெறியாடல் போன்ற அந்தந்த நிலத்து மக்களால் செய்யப்பட்ட வழி பாட்டினையும் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்ற வற்றால் அறிகிறோம் தமிழர் வாழ்வில் கடவுள் பற்றிய சிந்தனை மிகச் சிறந்த இடத்தினைப் பெற்றிருந்தது.

அகவாழ்வில் தாங்கள் விரும்பியதைப் பெறவும், கொடை, புகழ், போர் (போர் வெற்றிக்கு கொற்றவை வழிபாடு) போன்ற புறவாழ்வில் எண்ணியது நிறைவேறவும் கடவுளை வழிபட்ட செயலையும், பயன் நோக்காத வழிபாட்டினையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

> நிலம் நீர் தீவளி விசும்போடு ஐந்துங்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின் (தொல். 1589)

என்னும் அறிவியல் அடிப்படைக் கருத்தினை உணர்ந்த தமிழர் கடவுள் என்னும் பேரறிவும் பேராற்றலுமுடைய பெரும்பொருள் இயற்கை வடிவினதாக, இயற்கையின் உள்ளும் இயற்கையைக் கடந்தும் உள்ளது என்ற உண்மையைத் தெளிந்திருந்தனர். அத்தெளிவுடன் கடவுள் உண்மையை விளக்கும் மெய்ப்பொருட் சிந்தனைகளைப் படைத்தனர். மேலும் குறைவிலா நிறைவாகிய பரம்பொருளை வழிபடும் சாதனையால், நினைப்பற நினைக்கும்

சிந்தனையால் ஆன்மா குறை நீக்கம் பெற்று நிறை நலமடையும் என்ற நம்பிக்கையுடன் உருவ வழிபாட்டில் தொடங்கி ஞான வழிபாட்டில் நிறைவுபெறும், படிமுறை வளர்ச்சியுடன், கூடிய வழிபாட்டு நெறியையும் படைத்து, அதற்கெனத் திருக்கோயில் முதலானவற்றையும் உருவாக்கினர் என்பதைப் பழந்தமிழ் நூல்களால் அறியலாம். இக்கருத்தினைக்

> குறிகளும் அடையாள முங் கோயிலும்
> நெறிகளும் அவர்நின்ற தோர் நேர்மையும்
> அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
> பொறியிலீர் மனம் என்கொல் புகாததே (5-889)

என்னும் அப்பரடிகள் அருள்வாக்கும் காட்டும்.

## முருக வழிபாட்டின் முதன்மை

'முருகு' என்னும் சொல் இளமை, அழகு, மணம், கடவுள் தன்மை ஆகிய பொருள்களைத் தரும் அழகிய தமிழ்ச்சொல் லாகும். இளமையும் வீரமும் அழகும் பொருந்திய தெய்வத்தை முருகன் என்று அழைத்தனர். குறிஞ்சி என்னும் மலைநிலம் முதல் நிலமாகவும், அந்நிலத்திலேயே மனிதத்தோற்றம் நிகழ்ந் திருக்க வேண்டும் என்றும் அறிஞர் கூறுவர். மழையும் குளிரும் உடைய குறிஞ்சி நில மக்கள் ஒளியைப் பெறவும், தாங்கள் உண்ணும் கிழங்குகள் முதலியவற்றைச் சுடவும் மரங்கள் உரசி இயற்கையாகத் தோன்றும் நெருப்பைத் தம் தெய்வ வெளிப் பாடாகக் கருதி, முருகனுக்குச் 'சேயோன்' (சிவந்தவன்) என்று பெயரிட்டதாகத் தெரிகிறது. தங்களைப் போல் வேற்படை களை உடையவன் என்பதால் 'வேலன்' என்றும் குறிஞ்சிநிலத் தின் கடப்பமாலையை அணிந்தவன் என்பதால் 'கடம்பன்' என்றும் அழைத்தனர். இதன் காரணமாகவே தொல்காப்பிய நூற்பாவும் சேயோனைக் குறிப்பிட்டது என்னும் கருத்துக் களைக் கூறும் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள், மேலும்,

> குமரிநாட்டில், முதற்காலத்தில் முருகன் குறிஞ்சி நிலத்திற்கே சிறப்பாகவுரிய தெய்வமாக, அறுவடையும் திருமணமும் போன்ற இன்பக்காலத்திலும், நோயும் பஞ்சமும் போன்ற துன்பக் காலத்திலும், அவ்வப்போது இம்மைப் பயன் நோக்கியே, மதுரை வீரனும் எல்லையம்மனும் போல வணங்கப்பட்டான்.

> பிற்காலத்தில் ஐந்திணை வாழ்க்கையேற்பட்ட பின் வெறியாடும் வேலனாலும் குறிகூறும் குறத்தியாலும் முருக வணக்கம் மருதநிலத்திற் புகுந்தது.
>
> (குன்றக்குடி குடமுழுக்கு மலர், 1979)

என்னும் முருக வணக்கத்தின் முதன்மையும் தொன்மையும் குறித்து விளக்குகின்றார்.

சிவனே 'சேயோன்' என்றும், சிவத்தின் மற்றொரு அம்சமே முருகன் என்றும் கந்தபுராணம்,

> ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன் காண்
> பேசில் ஆங்கவன் பரனொடு பேதகனல்லன்

எனக் கூறுவது போல, பிற்காலத்துத் தோன்றிய நூல்களும் குறிப்பிடும். சிவனுக்கும் சேயோனுக்கும் உள்ள ஒற்றுமைகளடிப் படையில் இருகடவுள் வழிபாடும் ஒன்றே என்று அறிஞர் கூறுகின்றனர். சிவனைப் போலவே முருகனும் மலையில் இருப்பவன், வீடுபேறு அளிப்பவன், அகத்தியர்க்கு ஆசிரியராக இருந்தவன், தீயின் நிறம் உடையவன் ஆகிய பல்வேறு காரணங்களைக் கொண்டு இருவரும் ஒருவரே என்று சமயச் சான்றோரும் சைவசித்தாந்த நூல்களும் குறிப்பிடுகின்றனர்.

தமிழகத்தில் முருகவழிபாட்டு நெறி ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மைநெறி என்றும் வட மொழியில் ஸ்காந்தம் போன்றவை தோன்றிய பின் சொல்லப் படும் சுப்பிரமணிய வழிபாடு பிற்காலத்தில் தோன்றியது என்றும் பாவாணர் போன்ற அறிஞர் குறிப்பிடுகின்றனர். முருகன் தண்டமிழ்க்கடவுள் என்னும் கருத்து இன்றும் தமிழகத்தில் நின்று நிலவும் உண்மையைக் கொண்டும் முருக வழிபாட்டின் முதன்மையை அறியலாம்.

### முருக வழிபாட்டின் பயன்

முருக வழிபாடு இம்மை நலங்களையும் மறுமைப் பேற்றினையும் அளிக்கும். வழிபாடு உலகியல் இன்பம் (இம்மை இன்பம்) வேண்டும் பயன்நோக்கிய வழிபாடும் உலகியல் இன்பத்திற்கு மாறான மறுமை இன்பம் நோக்கிய பயன்கருதா வழிபாடும் என இருதிறப்படும். உயிர்கள் இயல்பிலேயே இன்பவிழைவுடையன. துன்பம் கண்டு அஞ்சி வருந்தும் இயல்

புடையன. ஆதலின் மக்கள் துன்பம் வரும்போது தோன்றாத் துணையாக விளங்கும் கடவுளை நாடித் தங்கள் மனக்கவலையை மாற்றும்படி வேண்டுகின்றனர்.

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது (குறள். 7)

என்னும் திருக்குறள் கடவுள் வாழ்த்தும் இவ்வுண்மையை விளக்கும். முழுமுதற் கடவுளாகப் போற்றப்படும் முருகன் இம்மை வாழ்விற்கு வேண்டிய நன்மைகளை வழங்குவான் என்பதைப் பரிபாடல் கூறும்.

கனவில் தொட்டது கைபிழை யாகாது
நனவிற் சோப்பநின் நளிபுனல் வையை
வருபுனல் அணிகென அரங்கொள் வோரும்
கருவயி றுறுகெனக் கடம்படுவோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்
ஐயமர் அடுகென அருச்சிப் போரும் (பரி. பா. 8)

என்னும் நல்லந்துவனார் பாடல், மகளிர் பொருளும் பொன்னும் போகமும் வேண்டித் திருப்பரங்குன்றில் எழுந்தருளிய முருகனை வழிபடுவர் என்னும் உண்மையைக் காட்டும்.

பரிபாடல் 5-ஆம் பாடல் கடுவன் இளவெயினனார் பாடியது. பொருள், பொன், போகம் போன்றவை இவ்வுலகத்தில் பிறராலும் வழங்கத்தக்கவை. இவ்வுலகில் பிறரால் வழங்க இயலாத அருள், அன்பு, அறம் மூன்றையும் நல்குபவன் முழுமுதற் கடவுளாகிய முருகனேயாவான் என்றும், இம்மூன்றும் ஆன்மா நிறைவாக அடையத்தக்க இறைவன் திருவடிப் பேற்றுக்கு அடிப்படையாவன என்றும், அவ்வீடுபேற்றை நல்கும்படி முருகனிடம் வேண்டுவதே சிறந்த வழிபாடு என்றும்,

... ... ... யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே (பரி. பா. 5)

என்னும் அடிகளால் ஆசிரியர் விளக்குகின்றார். இம்மை, மறுமை என்னும் இருவகைப் பயனையும் நல்கும் வழி பாட்டினைத் திருமுருகாற்றுப்படையும் காட்டுகிறது. (91-96)

இசைபயில் சடாட்சர மதாலே
இகபர சௌபாக்யம் அருள்வாயே (190)

என்று கூறும் திருப்புகழ் அடிகளும் முருகன் வழிபாடு இம்மை, மறுமைப் பயனை நல்கும் சிறப்புடையது என்பதை உணர்த்தும். அன்பர்கள் வேண்டிய வரங்களைக் கொடுக்கும் முருகனைத் தவிர,

மெய்கண்ட தெய்வமித் தெய்வமல்லால் புவியில் வேறில்லை (அம்புலி 6) என்று குமரகுருபரர் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் கூறியது போன்று முருக வழிபாடு முதன்மையும் இம்மைப் பயனை நல்கும் இயல்பையும் உடையது என்பது தெளியலாம்.

**முன்னோர் நெறியில் முருகதாசர்**

தமிழரின் முதன்மை நெறியாகிய முருக வழிபாட்டு நெறியில் தம் முன்னோர் வழியில் மிகத் தீவிர பக்தியுடன் விளங்கினார் நம் முருகதாசர் எனும் தண்டபாணி. சுவாமிகள் நக்கீரர் வரலாற்றில் அற்புத வரலாறுகள் சொல்லப்படுவதுண்டு. அதைப் போலவே பின்வந்த அருணகிரிநாதர் வரலாற்றிலும் பல அற்புதங்கள் சொல்லப்படுகின்றன. இவ்வாறே அருணகிரியின் அவதாரமாகச் சொல்லப்படுகின்ற முருகதாசர் வாழ்வில்–வரலாற்றில் பல்வேறு அற்புத நிகழ்ச்சிகள் சொல்லப்படுகின்றன. இந்நிகழ்ச்சிகள் பொய்யானவை என்று மறுக்க இயலாதன. நெடுங்காலத்திற்கு முன் வாழ்ந்தவர் என்றால் புராணம் போல கதைகள் புனைந்து சொல்லப்பட்டிருக்கலாம். சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த அடிகள் வரலாற்றைப் புனை கதை என்றோ பொய்யென்றோ தள்ளுவதற்கு இடமில்லை. அவருடன் வாழ்ந்தவர்கள் வரலாறுகளும் அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்குத் துணையாக அமைகின்றன. வள்ளலார் வரலாற்றிலும் அற்புதங்களைக் காண்கிறோம். மெய்ஞ் ஞானிகள், சித்தர்கள் வரலாற்றில் அற்புத நிகழ்ச்சிகள் நிகழ்வது இயல்பாகும்.

அடிகள் முருகனிடம் உரிமையுடன் கூடிய உறவுகொண்டார். "அப்பன்நீ அம்மைநீ அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்னும் திருநாவுக்கரசர் வாக்கிற்கேற்ப முருகனை எல்லாமாகக் கண்டு போற்றிய அடிகள் அவன் காட்சி தராதபோது, பிரிந்த

தலைவனிடம் ஊடல் கொள்ளும் தலைவியைப் போல சினம் கொள்ளவும் தவறவில்லை. தாமிரபரணியாற்றின் நடுவிலுள்ள குறுக்குத்துறை முருகன் கோயிலில் தாம் எழுதி வைத்திருந்த நாற்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களை முருகன் காட்சி தரவில்லை என்பதற்காகச் சினம் கொண்டு ஆற்றில் விட்டார். நீருக்கும் நெருப்புக்கும் விட்டது போக இன்று எஞ்சியிருப்பவை 49,722 பாடல்கள். இவ்வாறு தலங்கள் தோறும் சென்று முருகனை வணங்கி அவனது அருட்காட்சியைக் கண்டு பாடல்கள் பாடியுள்ளார். எல்லாப் பாடல்களும் காக்கப்பட்டிருந்தால் லட்சத்திற்கும் மேற்பட்ட பாடல்கள் நமக்குக் கிடைத்திருக்கும்.

**வள்ளலாரும் வண்ணச்சரபரும்**

அருணகிரிநாதரே முருகதாசராகத் தோன்றினார் என்ற உண்மை முருகனால் இவருக்கு உணர்த்தப்பெற்ற சிறப்புக்குரிய இவர் இயல்பிலேயே சண்மத சமரச நோக்குடையவராகத் திகழ்ந்தார்.

அறுசமய சாத்திரப் பொருளோனே —திருப்புகழ் 1224

என்னும் அருணகிரிநாதர் வாக்கிற்கேற்ப இவரும் முருகன் ஆறுசமயத்தவரும் வணங்கத்தக்க பொதுமைக்கடவுள் என்றும், ஆறுசமயத்தவரும் வணங்கும் தெய்வங்கள் வெவ்வேறாக இருப்பினும் தெய்வம் ஒன்றே என்றும் வலியுறுத்தினார். இவருக்குப் பதினாறு ஆண்டுகள் முன்னர்த் தோன்றிய அருட்பிரகாச வள்ளலார் இவரது சமகாலத்தில் சமரச சன்மார்க்கத்தை வலியுறுத்தினார் என்பது அறிய வேண்டிய செய்தி.

முருகதாசர் திருமேனி முழுவதும் திருநீறு பூசியிருந்தார். சமரச நோக்கில் தன் இரு தோள்களிலும் தென்கலை, வடகலை ஆகிய நாமங்களைத் தரித்து, துளசி, அக்கமணிமாலை அணிந்து தோன்றினார். கருத்து வேற்றுமைகளுக்கு இடமான வாதங் களைத் தவிர்த்து, சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சாக்தம், சௌரம் என்னும் ஆறுசமய உண்மை களையும் தெரிந்து தெளிந்து போற்றினார். முருக வழிபாட்டின் மூலம் தம் ஆன்மீக அருளாற்றலை வளர்த்துக் கொண்ட வடலூர் இராமலிங்க அடிகளுடன் உறவு கொண்டார். இருவரும் தங்களது கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர்.

இறைவன் திருவருளைக் கொண்டே உலக மக்களை நல்வழிப் படுத்த வேண்டும்; ஜீவகாருண்யத்தை வளர்க்க வேண்டும் என்னும் ஒத்த கருத்துடையவர்களாக விளங்கினர். இவர்கள் இருவரும் பின்னர்த் தோன்றிய பாரதி, பாரதிதாசன் இருவருக்கும் வழிகாட்டிகளாக விளங்கியவர்கள் என்பது அறிஞர் கருத்து.

> பாரதி, பாரதிதாசன் ஆகிய இருவர்க்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் செக்கர் ஒளிக்காலத்தில் சிறந்தெழுந்த இராமலிங்க வள்ளலாரும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் வழிகாட்டி ஆவர் (முருகன் மூவாயிரம், முன்னுரை)

என்னும் த. கோவேந்தன் கருத்து குறிப்பிடத்தக்கது.

வள்ளலார் தாயுமானவரின் அவதாரமே என்று முருகன் தமக்கு உணர்த்தியதாக வண்ணச்சரப அடிகள் கூறுகின்றார். இக்கருத்தினை,

> வடலூரன் முன்தாயு மானவனே என்றும்
> திடமாற்ற மேபோற் சிலர்வந் – திடலோதிக்
> கொன்றான் எழுப்பிக் கொடுக்கும் திருநாளே
> நன்றாம் அவற்றில்மிக்க நாள்
>
> (சுவாமிகள் வரலாறு பக். 47)

என்னும் பாடலால் விளக்குகின்றார்.

வள்ளலார் மறைந்த செய்தியறிந்து மனம் மிக வருந்தினார். வள்ளலார் மீண்டும் வருவதாக உரைத்ததை நம்பினார். முருகனிடம் முறையிட்டார். அவர் எழுந்து வர இன்னும் அருள்புரியவில்லையே என்று முருகனிடம் பாடினார்.

> தண்டலை சூழ் வடலூரரான் தனி
> அறைவிட்டு இனியோர்கால்
> வண்டமிழ்ச் சீர்க்கனியோங்க வருவான்
> என்று உரைத்தானே

என்று அடிகள் தம் அனுபவப் பதிகத்துள் பாடினார். மேலும், வினாப்பதிகத்துள்,

> இரக்கமே வடிவாம் வடலூரரான்
> இன்னம் ஏனெழுந்திடப் புரிந்திலையே

என்று பலபாடல்களில் செந்தமிழ்ச்சுவை சொட்டப்பாடியுள்ளார். ஒருவர் பாடலை மற்றொருவர் விரும்பிப் பாராட்டிக் கொள்வது வழக்கம் என்றும், வள்ளலாரை மூன்று காலம் கண்டு பேசி அளவளாவி இருந்ததாகவும் அடிகள் தம் குருபரதத்துவத்தில் குறிப்பிட்டுள்ளார். இருவரும் சன்மார்க்க நெறி வளர்க்கும் சான்றோர்களாக விளங்கினர்.

**தமிழ்நெறியும் தண்டபாணி அடிகளும்**

துறவுநெறியை விட, இல்லறநெறியே சிறந்தது என்பது தமிழர் கொள்கை. திருவள்ளுவர் இல்வாழ்க்கையின் சிறப்பினை 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்னும் குறளில் கூறினார். ஔவையார் ''இல்லறமல்லது நல்லறமன்று'' என்றார். சிறுவயதிலிருந்து முருகபக்தியால் துறவுபூண்ட அடிகள் முருகன் ஆணையால் சுந்தரம் அம்மையைத் தமது துணைவியாராக ஏற்று இல்லறத்தில் சிறந்து விளங்கினார் என்பது அவர் வரலாறு.

திருமூலர், பட்டினத்தார், தாயுமானவர், வள்ளலார் போன்று தெய்வம் ஒன்று என்று கருதிய அடிகள் சமய ஒருமைப் பாட்டை வலியுறுத்தினார். முருக வழிபாட்டில் தொடங்கிச் சிவவழிபாட்டில் உயர்ந்து அருட்பெருஞ்சோதி வழிபாட்டில் நிறைவுபெற்ற வள்ளலார் சாதி, சமயவேற்றுமைகளைக் கடிந்து ஒதுக்கியது போன்று அடிகளும் சமய பேதங்கள், வாதங்கள் ஆகியவற்றைக் கடிந்தார். சமய சமரசத்தை வலியுறுத்தவே சைவம், வைணவம் ஆகிய இருசமயக் குறிகளையும் தம் திருமேனியில் தரித்துக் காட்டினார். முருக வழிபாட்டில் வைராக்கியம் பூண்ட அடிகள் பிற தெய்வங்களையும் பாடியுள்ளார். இவர் வாழ்வே வழிபாடாகக் கொண்டு வாழ்ந்தார் எனலாம்.

பாரி, முல்லைக் கொடிக்குத் தேர் அளித்தது போன்ற, பேகன் மயிலுக்குப் போர்வை அளித்தது போன்ற கருணையுள்ளம் அடிகளுக்கு இருந்தது. வள்ளலார் பயிரின் வாட்டம் கண்டு தாம் வாடிப்பாடியது போன்று அடிகள் தம் உள்ளத்தில் இரு அணிற்குஞ்சுகளுக்கு இரங்கி அவற்றை அன்புடன் காத்து, அவற்றின்மேல் திருநீறு இட்டுப்பதிகம் பாடினார். பெரிய அணில்கள் இரண்டும் வந்து தம் குஞ்சுகளை எடுத்துச் சென்றன.

மாயை வலி மிகக்காட்டி வருத்தமிகப் படுத்தாதுன்
சேயையொத்துக் களிகூடித் திருவருள் சற்றுதவாயோ

வாயைமெல்லும் தரமின்றிப் மதுரமுலைப் பால்தரும் தன்
ஆயை விட்டுப் பரதவித்த அணிற் காத்த பெருமாளே
(பக். 61)

என்று அணிலைக் காக்க இறைவனிடம் வேண்டினார்.

கொல்லா நெறியே மிகச்சிறந்த நெறியெனக் கொண்ட அடிகள், வயிற்றுவலி தீர சிறுதெய்வத்திற்கு ஆட்டைப் பலியிட இருந்த ஒருவனைத் தடுத்து அறிவுரை கூறித் திருநீறணிவித்து வயிற்றுவலி நீக்கி, ஆட்டைப் பலியிடாது காத்து அருளியதாக அடிகள் வரலாறு கூறுகிறது. இதனால் இவரது உயிரிரக்கமும் ஆன்மநேயமும் புலப்படுகிறது.

முருகனை ஆறுசமயமாகி விளங்குபவன் என்னும் பொருளில்,

'சட்சமயம் ஆகித் தயங்கு சண்முகச் சிவனே'
(முருகன் மூவாயிரம்-1.)

என்று தம் நூலில் பாடினார்.

தெய்வம் பலஎன்று சிந்தித்துத் தீராத
பொய்வழக்குப் பலபேசிப் புலர்கின்ற புல்லறிவீர்
மெய்வசனம் ஒன்று விளம்புகின்றேன் யாதென்றால்
சைவ முதலாய சண்மதமும் சண்முகமே! - (பக். 558)

இவ்வாறு இப்பதிகப் பாடல்களின் இறுதி அடிதோறும் 'சண்மதமும் சண்முகமே' எனப் பாடியுள்ள அடிகள், முருகன் ஒரு சமயக்கடவுளாகப் போற்றப்பட்டாலும் ஆறு சமயங்களுக்கும் தலைவன் என்பதைக் கூறி, சமய வேற்றுமைகளைக் கடந்து வாழும் சன்மார்க்க வழியை-தமிழர்தம் ஆன்மநேய ஒருமைப் பாட்டு நெறியை-ஞானநெறியை உலகுக்கு உணர்த்தினார் என்பது உண்மையாகும்.

இதுகாறும் கண்டவற்றால் மகான் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள் தமிழ்நாட்டில் தோன்றிய தண்டமிழ்ச் சான்றோர் காட்டிய வழியில் தமிழ்நெறியில் தம் வாழ்வை அமைத்துக் கொண்டு முருக வழிபாட்டினால் உயர்ந்து, ஆயிரக் கணக்கான தமிழ்ப்பாடல்களை அருளி, உலகம் சமயச் சண்டைகள் இன்றி ஒற்றுமையுடன் வாழ, சமரச நெறியை - சன்மார்க்க வழியை - ஆன்மநேய ஒருமைப்பாட்டு நெறியை வலியுறுத்திய சான்றோராகத் திகழ்ந்தவர் என்பது விளங்கும். அவர் இறைவன் திருவடிப்பேறடைந்த நூற்றாண்டு விழா நாளில் அவர்தம் வாழ்வையும் வழியையும் எண்ணிப் போற்றி வாழ்த்துவோம்!

# பழனித் தலமும் முருகனும்

## பெ. சுப்பிரமணியன்

அருட்கவி தண்டபாணி சுவாமிகள் ஓர் அருளியல் கவிஞர் (Mystic Poet) ஆவார். பழனி முருகனின் அருள் பெற்றவர். பழனித் தலத்தில் பல காலம் தங்கியவர். பழனித் தலத்தில் இவர் தங்கிய போதுதான் பழனி திருவாயிரத்தினை சுவாமிகள் இயற்றினார்கள் என்று கூறுவர். இவர் 222 தலங்களைப் பற்றி பாடியிருந்தாலும், 'பழனித்தலம்' இவருக்கு மிகவும் பிடித்த தலம் எனலாம். பழனியிலுள்ள குளங்கள், ஆறுகள்,நந்தவனங்கள். மடங்கள், தமிழ்மன்றங்கள் முதலானவற்றைப் பழனித் திருவாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். சுவாமிகளின் படைப்புக் களில் தன் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படும். இக்கூற்றுக்கு ஏற்ப பழனித் திருவாயிரத்திலும் சுவாமிகளைப் பற்றிய குறிப்புக்கள் சில காணப்படுகின்றன.

பழனித் தலத்தில் இவர் தங்கியிருந்த போது, அன்பர்களுதவி யால் சரவணப் பொய்கையினை அடுத்து 'தண்டபாணி சுவாமிகள் தமிழகம்' எனும் மடம் நிறுவி, வேற்பூசையுடன் தவமுமியற்றி வாழ்ந்து வந்தார்.

அருணகிரிநாதரின் தாக்கமும், சித்தர்களின் தாக்கமும் இவரிடம் காணப்படுகிறது.

சுவாமிகள் பாடியருளிய "பழனித் திருவாயிர" நூற் பொருளைப் பின்வருமாறு வகைப்படுத்தி ஆராயலாம்.

### அருளியலும் அலங்கரித்தலும்

முருகனின் அருளால் தாம் பாடல்கள் பாடியதாகச் சுவாமிகள் குறிப்பிடுகின்றார். பைந்தமிழ் பாடல்கள் பல பாடிச் சலித்து விட்டேன்; இன்னும் பாடிக் கொண்டேயிருக்கின்றேன், 'நான் பாடும் பாடல்களில் சீரையும் பொருளையும் நீயே அமைத்துக்கொள்ள வேண்டும்'' என்று முருகப்பெருமானிடம்

கூறுகின்றார். கவிதை புனைதல் பற்றி (Poetic Composition) சுவாமிகள் பின் வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

> ''அந்தரத்தோடும் புவியோடும் போற்ற அருட்பழனிச்
> செந்தகைக் கோயிலினூ டென்றும் வாழ்குரு தேசிகனே
> பைந்தமிழ்ப் பாடிச் சலித்தேனை இன்னும் பகர்தியென்றாய்
> வந்தனவே நுவல்வேன் நல்லசீர்ப்பொருள் வைத்துக்
> கொள்ளே'' (அலங். 62)

என்று பாடுகின்றார். தம்முள்ளத்தே பொங்கி வரும் உணர்வு களைக் கவிதையாக்கும் திறம் பற்றி ''வந்தனவே நுவல்வேன்'' என்ற தொடர் மூலம் விளக்குகின்றார்.

உள்ளத்து உணர்வுகளையும், அருளியல் அனுபவங்களையும் கவிதையாக பாடும் திறம், சுவாமிகளுக்கு முன் வாழ்ந்த மாணிக்கவாசகரிடத்தும், அருணகிரிநாதரிடத்தும் காணப்படு கின்றது.

தண்டபாணி சுவாமிகளின் படைப்புகளில் மொழிப்பற்று, புலமைப்பற்று, இறைப்பற்று என்ற இம் மூன்றும் இணைந்து காணப்படுகின்றன என்று ஆய்வாளர் சிவகாமி குறிப்பிடுகின்றார். (பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழிலக்கியம் ப. 63)

மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வாளர்கள் குறிப்பிடும் புதுச் செவ்வியல் நெறியின் தன்மைகளை, தமிழ்ச் சிற்றிலக்கியப் போக்குகளுடன், சமூகப் பண்பாட்டுப் பின்னணியில் வைத்து ஆராய்கின்றார். ஒப்பியல் ஆய்வாளர் பா. ஆனந்தக்குமார் (இந்திய ஒப்பிலக்கியம், ப. 28) புதுச் செவ்வியல் தன்மைகள் சில சுவாமிகளின் படைப்புகளிலும் காணப்படுகின்றன. ''இலக்கியத்தை ஒரு கலையாகக் கருதி, அதன் புறவடிவத்தையும் மொழியையும் செயற்கையான முறையில் ''அலங்கரித்தல்'' ஆடம்பரப்படுத்துதல் – புதுச் செவ்வியல் நெறியின் ஒரு தன்மை என்பர். ''அலங்கரித்தல்'' எனும் அழகியல் மதிப்பினைத் தண்டபாணி சுவாமிகள் பாடலிலும் காணலாம். மேலும் படைப்பாக்கத்தில் கடுமையான விதிமுறைகளைப் பின்பற்றும் போக்கும், தொழில்முறை சார்ந்த இலக்கிய அணுகுமுறைகளும் இவரது படைப்புகளில் காணப்படுகின்றன.

**பழனித்தலப் பெருமை**

பழனித்தலம் மிகப் பழமையான தலம் என்பதை "முன்னைப் பழனி முருகா" (அலங். 52) "முது பழனிச்சித்தா" (அலங் 68) என்று சுவாமிகள் குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது.

"தள்ளலாப்புகழ்ப் பழனி" (நவமணிமாலை. 61) "பழுதின்றிய புகழ் தோயும் பழனி" (அலங். 95) "இசைகொள் பழனி" என்று பழனி நகரின் புகழைக் குறிப்பிடுகின்றார் சுவாமிகள்.

பக்தர்கள் கூட்டம் பழனி முருகன் கோயிலில் எப்போதும் சூழ்ந்திருக்கும் காட்சியினைச் சுவாமிகள் "பக்தர்மலி தென் பழனிப்பதியானே" (நவமணி. 66) என்று கூறுகின்றார். இன்றும் நாள் வழிபாட்டின் போதும், திருவிழாக்களின் போதும் ஆயிரக் கணக்கான பக்தர்கள் வந்து பழனியாண்டவனை வழிப்பட்டுச் செல்வதைக் காணலாம். பக்தர்கள் தரிசிக்க வருகின்ற எண்ணிக்கையின் அடிப்படையிலும், வருமானத்தின் அடிப்படை யிலும், இந்தியாவிலேயே திருப்பதிக்கு அடுத்த திருத்தலமாகப் பழனி விளங்குகின்றது எனலாம்.

பழனி நகர் செழித்து வளர உதவும் தெய்வமாகப் பழனி முருகன் விளங்கி வருகின்றான் என்பதை "பழனி நகர்புரக்கும் தொன்னீர்மைக்காரன்" என்று போற்றுகின்றார்.

பழனி நகரில் நீதி நிறைந்திருந்தது என்பதை "நீதிமலிதென் பழனியப்பா" எனக் குறிப்பிடுகின்றார். (வெண்பா மாலை. 61)

இன்றும் நாட்டுப்புறப் பஞ்சாயத்து முறை மூலம் பல வழக்குகள் பழனி நகரில் தீர்க்கப்பட்டு வருகின்றன என்பது இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

தானம் வழங்கும் அறக்கொடையாளர்கள் பலர் பழனிப் பதியில் வாழ்ந்தது பற்றி சுவாமிகள்,

"தானந்தழைக்கும் பழனாபுரிக்கோர்தலைவ"

(ஒருபா ஒருபஃது. 65)

என்று பாடுகின்றார். இன்றும் அன்னதானம் உள்ளிட்ட பல தானங்களைச் செய்து வரும் அறவோர்கள் பழனித்தலத்தில் வாழ்ந்து வருகின்றனர். வெளியூரிலிருந்து பலர் பழனிக்கு

வந்து தானம் செய்வதைப் பழனி முருகன் கோயில் திருவிழாக் களின்போது காணலாம்.

பழனி நகரில் ஆடல் கலைகள் மிகுதியாக இடம் பெற்றிருந்தது என்பதையும் சுவாமிகள் ''ஆடல்மலி பழனிவாழ் முருகா'' (வெண்பா அந்தாதி. 29) என்று குறிப்பிடுகின்றார். பழனி முருகன் கோவில் தைப்பூசம், பங்குனி உத்திர விழாக் களின்போது கரகம், காவடி, பொய்க்கால்குதிரை, வேலனாட்டம், சக்கையாட்டம், ஒயிலாட்டம் முதலிய ஆட்டங்கள் இடம் பெறுவதைக் காணலாம். பழனி அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் தீட்டப்பட்டுள்ள நாயக்கர் கால ஓவியம் பழனி முருகன் கோவிலில் ஆடல், பாடல், இசை இடம் பெற்றிருந்த செய்தியைக் குறிப்பிடுகின்றது. கோவிலில் மத்தளம் வாசிப் போர், பாட்டுப் பாடுவோர், தாளம் போடுபவர், ஆடும் கன்னியர் ஆகியோரது படங்கள் ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளன.

தமிழ் வளர்க்கும் மன்றங்களும் உணவளிக்கும் தர்மச் சத்திரங்களும் பழனியில் மிகுதியாக இருந்தன என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

வரையாது வழங்கும் கொடையாளிகள் வாழும் மாடி வீடுகள், பக்தர்கள் தங்குவதற்குரிய சத்திரங்கள், வீரர்கள் வாழும் கழகங்கள் ஆகியன பழனித் தலத்தில் உள்ளன என்கிறார். இன்றும் பழனி அடிவாரம் பகுதியில் பல சமூகத்தார் களின் மடங்கள் உள்ளன. உணவில்லாது வருபவர்களுக்கு உணவளிக்கும் அறச்சாலையாக இம்மடங்கள் விளங்கி வருகின்றன.

தவம் செய்வதற்குச் சிறந்த தலம் பழனிப்பதியேயென்றும் சுவாமிகள் கருதியுள்ளனர்.

மனிதர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலும், ஞானத்துடன் கூடிய கல்வியைப் பெறுதலும்தான் சிறந்த தவம் என தவத்திற்கு விளக்கம் தருகிறார். அருள்புரியும் பழனியாண்டவன் எழுந்தருளியுள்ள பழனி மலை அடிவாரத்தில் தங்கி, தியானம், செபம், பூசை செய்து, பைந்தமிழால் பல பாடல்களைப் பாடுவதே உரிய தவமாகும் என்று சுவாமிகள் கூறுகின்றார். (கலம்பகம். 7)

பழனிக்கு வருபவர்களின் குறிக்கோள்கள் குறித்தும் தண்டபாணி சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார். அட்டமாசித்தி பொடு முத்தி பெறுவதற்காக தவம் செய்யும் நோக்குடன் பலர் பழனிக்கு வருகின்றனர். தமிழ் வேதங்கள், ஆகமங்கள், புராண இதிகாசங்கள் இவற்றினை ஆராய அறிஞர்கள் இத் தலத்திற்கு வருகிறார்கள். சிற்றரசர்களும், பேரரசர்களும் போரில் வெற்றி பெறுவதற்காகப் பழனியாண்டவனை வழிபட வருகின்றனர். பொன்னும், மணியும், ரத்தினமும், நிதியும் சேரவேண்டும் என்ற குறிக்கோளில் பலர் பழனிக்கு வருகின்றனர். நல்ல ஓவியம் வரைய வேண்டும் என்று கலைஞர்கள் பழனியாண்டவனை வழிபடுகின்றனர். கொடிய நோய்கள் நீங்க வேண்டிப் பலரும் பழனியாண்டவனை வழிபட வருகின்றனர். பழனியாண்டவனை வழிபட்டால் கொடிய நோய்கள் நீங்கும் என்று ''பழனி மலை வடிவேலர் சன்னதி முறை'' என்ற நூல் குறிப்பிடுகின்றது. பழனியாண்டவனை நோய் தீர்க்கும் கடவுளாகக் (Healing God) – கருதி பக்தர்கள் வழிபட்டு வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

**பழனி முருகனும், சித்தர்களும்**

முற்காலத்தில் சித்தர்கள் பலர் பழனித் தலத்தில் வாழ்ந்துள்ளனர். பழனித் தலத்திற்குச் 'சித்தன் வாழ்வு' என்ற பெயரும் முன்பு வழங்கி வந்துள்ளது. போகர், புலிப்பாணி முதலான சித்தர்கள் பழனித் தலத்தில் வாழ்ந்த செய்தி பற்றிக் கொங்கு மண்டல சதகம் குறிப்பிடுகின்றது.

''யோக வயித்தியர் சொல்ரச வாதமெலாக் கலையுந்
தேக நிலைபெறுங் காயகற்பங் களென் சித்தியுஞ் சொல்
போகருடன் புலிப்பாணி முதலிய புண்யரெலா
மாக முறவமர் வைகாநகர் கொங்கு மண்டலமே''

என்று சித்தர்கள் பழனித் தலத்தில் வாழ்ந்த செய்தி பற்றி இப் பாடல் குறிப்பிடுகிறது.

போக சித்தர் பழனியாண்டவனின் உருவத்திருமேனியை நவபாஷாணத்தினால் உருவாக்கினார் என்ற நாட்டுப்புறக்கதை பழனி வட்டாரத்தில் வழங்கி வருகிறது. அக்கதை வருமாறு. போகர் கைலாயத்தில் தவம் செய்து கொண்டிருந்தார். கலிகாலத்தில் நிறைய அசம்பாவிதங்கள் நடக்க இருக்கிறது

என்று சிவன் கூறினார். மனித வடிவத்தில் சாமி சிலை செய்து பூசை செய்ய வேண்டும் என்று சிவன் சொன்னார். போகர் ஒரு சித்தர். இவர் 4448 மூலிகைகளைக் கொண்டு வந்து ரசம் எடுக்கிறார். இந்த ரசம் நவபாஷாணமாக மாறுகின்றது. இந்த மூலிகைகளைக் கொண்டு செய்த நவபாஷாணத்தால் முருகன் சிலையை அமைக்கிறார். அகத்தியர் வந்து இந்த சிலையைப் பார்க்கிறார். இது சக்தி வாய்ந்த சிலையென்று அகத்தியர் போகரிடம் சொல்கிறார்.

அகத்தியர் ஆலோசனைப்படி போக சித்தர் பழனி தண்டாயுதபாணியின் உருவத்திருமேனியை நவபாஷாணத்தினால் உருவாக்கினார் என்று இந்த நாட்டுப்புறக் கதை கூறுகின்றது.

பழனி மலை மீது ஸ்ரீ போகருக்கு சமாதி ஒன்று உள்ளது. போகர் வழிபட்டு வந்த மரகதலிங்கம், புவனேசுவரி முதலியன இச்சமாதியில் உள்ளன. போகருக்குப் பிறகு, புலிப்பாணி சித்தர், பழனி முருகன் கோவில் பூசைகளைச் செய்து வந்தார் என்று இராமப்பய்யன் செப்புப் பட்டயம் குறிப்பிடுகின்றது.

சித்தர்கள் பலர் பழனித் தலத்தில் வாழ்ந்து பழனி முருகனை வழிபட்டும், சித்த வைத்தியத்தை வளர்த்தும் வந்துள்ளனர். போகர் 7000, புலிப்பாணி 500 முதலிய நூல்கள் சித்த வைத்தியத்தில் சிறந்த நூலாகக் கருதப்படுகின்றன.

பழனி முருகனே 'ஒரு சித்தன்' என்கிறார் தண்டபாணி சுவாமிகள் 'முதுபழனிச்சித்தா' (வெண்பா மாலை. 84) 'பழனி பொற்றோகைச் சித்தாபுகல்' (67) என்று பழனியாண்டவனைச் சித்தனாகவே பார்க்கின்றார் தண்டபாணி சுவாமிகள்.

சித்தர்கள் பழனித் தலத்தில் தங்கி பழனியாண்டவனை வழிபட்டு வந்ததை தண்டபாணி சுவாமிகள் பழனித் திருவாயிரத்தில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

> ''போகமுனிக்கும் புலிப்பாணிச் சித்தனுக்கும்
> நீ கருணை செய்தகதை நிச்சயமேல் – தாகமுற்று
> வந்த எனைத் தள்ளேல், வயலூர்த்திருமலையில்
> சந்ததம் வாழ் சண்முக நாதா'' (8)

என்று பாடுகின்றார். போகருக்கும், புலிப்பாணிக்கும் பழனியாண்டவன் அருள்பாலித்தது போல், தனக்கும் அருள்

பாலிக்க வேண்டும் என்று சுவாமிகள் பழனியாண்டவனிடம் வேண்டுகிறார். இவ்வேண்டுதல் பழனித் திருவாயிரத்தில் பல பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

''முத்தருக்கும் சற்குருவாய் முன்னிற்பான், மூத்திறவாச்
சித்தர் குழாம் சேர் பழனிச்சேய்'' (வெண்பா அந்தாதி-3)

என்று சித்தர்கள் கூட்டம் கூட்டமாக வழிபடும் தலம் பழனித் தலம் என்கிறார்.

முருகப்பெருமான் தனக்கு சித்தி எட்டினையும் வழங்க வேண்டும் என்று பழனித் திருவாயிரத்தின் முதல் பாடலிலேயே தம் வேண்டுதலைப் புலப்படுத்துகின்றார் சுவாமிகள்.

''சித்தியெட்டும் நல்கித், திரும்பாது (உ)ன் தாளுள் வைகும்
முத்தியினும் சேர்த்தருள முன்னுவாய் - எத்திசையும்
போற்றும் பழனிப் பொருப்பிற் புகழ்த்திருக்கூத்து
ஆற்றும் சிவகுருநாதா'' (வெண்பா அந்தாதி 1)

எனக் கூறுகின்றார்.

தனக்கு இரசவாத சித்தி அளிக்க வேண்டும் என்றும், இந்த உடலோடு வானத்தில் பறக்கும் கவனகுளிகை அளித்திடல் வேண்டும் என்று பழனி முருகனிடம் வேண்டுகிறார். மேலும் எந்த வேடத்தையும் எடுக்கும் ஆற்றலைத் தமக்கு அளிக்க வேண்டும் என்றும் பழனி முருகனிடம் வேண்டுகிறார். ''நவநாத சித்தரொடு கலந்து வாழ்வுற - அருள்வாயே'' (சித்திமாலை 6) என்று சித்தர் குழாத்தோடு தாம் சேர்ந்து வாழ வேண்டும் என்கிறார்.

### பழனி முருகனின் பரத்துவப்பண்பு

பழனி முருகனைப் புலவனாகவும், சித்தனாகவும், ஞானத் தெய்வமாகவும், குருவாகவும், வள்ளலாகவும் கருதி வழிபடுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

#### (அ) குருமூர்த்தம்

முருகப் பெருமான் குருவாக இத்தலத்தில் எழுந்தருளியுள்ளதால் சுவாமிகள் பல ஆண்டுகள் இத்தலத்தில் தங்கி வழிபட்டுள்ளார் எனலாம். முருகப் பெருமானின் இருப்பிடம் பழனி என்று சுவாமிகள் கருதினார். பழனியாண்டவன் பழனி

மலையில் குருவடிவமாக எழுந்தருளியுள்ளான் என்பதைப் பின்வருமாறு பாடுகின்றார்.

''வேலாயுதத் தொடு தண்டேந்திச் சந்ததம் மேற்றிசையின்
பாலாகும் நோக்கத்துடனே நிற்கின்றபழனி வெற்போன்
ஆலாலம் உட்ணவன் சேயோ? உமைக்கைக் கழகியதோ
மாலான வன்புகழ் தேவோ? மனிதவடிவனே'' (அலங். 3)

எனக் குறிப்பிடுகின்றார்.

''தானா நிறைந்த தனிஞானத் தெய்வம், சமரசச்சீர்
ஆனா முனிவர்க் கருள் கூறுந்தெய்வம், அளிமுரன்று
தேனா கடம்ப மலர் மாலைத் தெய்வம், தினமும் நம்பி
வானாடர் போற்றிய தெய்வம், பழனிமலைத் தெய்வமே''
(அலங். 14)

என்று பழனி முருகனின் பரத்துவப்பண்பு பற்றிப் பாடுகின்றார்.

ஞானத் தெய்வமான பழனி முருகனைக் குழந்தையாகப் பாவித்து தாலப்பருவத்தில்

''தண்டேந்தியகைப் பழனியப்பா
தாலோ தாலோ தாலே லோ''

எனப் போற்றுகின்றார். (பிள்ளைக்கவி 1.)

(ஆ) வரம் தருவள்ளல்

பழனி முருகனை ஞான தண்டாயுதபாணியாகப் போற்றிப் பாடிய சுவாமிகள், மன்னனாகவும், வள்ளலாகவும் கருதி வழி பட்டுள்ளார்.

பழனி முருகனை மன்னன், வள்ளல் அரசன் எனப் பல பாடல்களில் பாடியுள்ளார் சுவாமிகள்.

''தென் பழனி வள்ளலைப் பூசித்துப்
பலவரமும் கேட்பேன் பரிந்து'' (வெண்பா அந்தாதி 51)

பழனி முருகனை வரம் தரும் வள்ளலாகக் கருதி வழிபடுகின்றார்.

''பழனி வேந்தனவன் தாளே மெய்வீடு''
(வெண்பா அந்தாதி 9)

என்று பழனி முருகனைப் பழனிக்கு அரசன் எனப் போற்றிப் பாடுகின்றார். கொங்கு நாட்டுப் பகுதியில் வழங்கிவரும் பழனி முருகன் பற்றிய காவடிப் பாடல்கள் பழனி முருகனை

''வையாபுரிக்கரசே'' என்று குறிப்பிடுவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

''பூசைப் பயன்முழுதும் பொக்கமுறாது ஈந்தருள்வாய்
ஆசைப் பழனி மன்னவா'' (வெண்பா அந்தாதி. 43)

என வரம் வேண்டுகிறார்.

இறைவனை அரசனாகக் கருதி வழிபடுவது தமிழர் மரபாகும்.

அரசனுக்குச் செய்ய வேண்டிய அனைத்தையும் தெய்வத்திற்கு முருகன் கோயில்களில் செய்ய வேண்டுமென்பது எதிர் பார்க்கப்படுகிறது. அரசர்க்கரசனான இறைவனை அதிகாலையில் துயில்நீங்கி எழச் செய்ய இசை எழுப்பப்படுகிறது. பிறகு அவனுக்கு ஆடம்பரமான நீராட்டுச் செய்யப்படுகிறது. அவனுக்கு அரசு உடைகள் அணிவிக்கப்படுகின்றன. மலர்களாலும், நகைகளாலும் அவனுக்கு அலங்காரம் நடக்கிறது. கலை நயத்தோடு அவன்முன் தீபங்காட்டப்படுகிறது. வேளா வேளைக்கு உணவு படைக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் அரசர்க்கரசனது சபை தொடங்குகிறது. பக்தர்களுக்கு அவன் சமூகம் அளிக்கிறான். அவர்கள் குறைகளைக் கேட்கிறான். தனது அருளை அவர்கள் மேல் பொழிகின்றான். விழாக் காலங்களில் அவன் நாடெங்கும் ஊர்வலம் வருகின்றான். அப்போது அவன் மன்னர் மன்னனுக்குரிய படாடோபமான மரியாதைச் சின்னங்களுடன் பவனி வருகின்றான்'' என்று பி. எம். பி. மகாதேவன் கோயில்களின் இறைவனை மன்னனாகக் கருதி வழிபடுவதின் சிறப்பு பற்றி விளக்கம் தருகின்றார். (இந்து சமயத் தத்துவம் ப. 47) பழனி முருகன் கோயிலில் பழனி முருகனுக்குச் செய்யப் பெறும் அலங்காரங்களுள் ஒன்று இராஜ அலங்காரம் ஆகும். தண்டபாணி சுவாமிகள் இவ்வலங்காரத்தில் பழனி முருகனைத் தரிசித்து உள்ளம் நெகிழ்ந்திருக்க வேண்டும். அதன் காரணமாகப் பழனித் திருவாயிரத்தில் பல இடங்களில் மன்னன், 'வள்ளல்' என்று போற்றுகின்றார் எனலாம். இன்றும் பழனிக்கு வரும் பக்தர்களில் பெரும்பாலோர் பழனி முருகனை இராஜ அலங்காரத்தில் கண்டு வழிபடுவதையே விரும்புகின்றனர். அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிர்வாகமும், பழனி முருகனின் இராஜ அலங்காரத் தோற்றத்தினை வண்ணப்பட நாட்காட்டியாக வெளியிட்டு வருகின்றனர் எனலாம்.

இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் பழனித்தலச் சிறப்பினையும், பழனி முருகனின் பரத்துவப் பண்பினையும், ''பழனித் திருவாயிரத்தில்'' குறிப்பிட்டுள்ளார்.

# புலமையிலக்கணம்

மெ. செந்தாமரை

கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கண நூல் அறுவகை இலக்கணம் ஆகும். தொல்காப்பியச் சொல்லதிகாரம் சொல்லிலக்கணம் மட்டுமல்லாது நிகண்டுகளின் தோற்றத் திற்கும் அடிப்படைக் காரணமாக அமைகின்றது. தொல் காப்பியப் பொருளதிகாரம் அகம், புறம், யாப்பு, அணி பாட்டியல் என்று இலக்கண நூல்கள் பல்கிப் பெருகிட அடிப்படையாய் அமைகின்றது. வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள் உருவாக்கிய இலக்கண நூலாகிய அறுவகை இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி இவற்றுடன் புலமையையும் சேர்த்து அறுவகை இலக்கண நூலாக மலர்ந்து உள்ளது. இவற்றில் ஆறாவது இலக்கணமாகிய புலமை இலக்கணம் மட்டும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

### புலமை இலக்கணம் தோன்றக் காரணம்

16-18-ஆம் நூற்றாண்டுகளைச் சிற்றிலக்கிய காலம் என்று இலக்கிய வரலாறு சுட்டும். இக்காலகட்டத்தில் நிலையான ஆட்சி இல்லாததால் புலவர்கள் பலர் ஆதரவற்றுப் போயினர். பேரரசுகள் உடைந்தன. சிறுசிறு சமீன்களும், சமஸ்தானங்களும் உருவாயின. புலவர்கள் இவர்களைச் சார்ந்து இவர்களின் விருப்பத்திற்கு கவிபாட வேண்டும் என்ற கட்டாயத்திற்கு உள்ளாக்கப்பட்டதால் சிற்றின்பக் கவிகளும், பொய்யான புனைவுகளும் உருவாயின. அதனால் புலமையின் மீதான மதிப்பு குறையத் தொடங்கியது. புலமை பற்றிய வரையறையும், சரியான புலவரையும் அடையாளங் காட்டத் தவறின. இத்தகைய சூழலில் புலவன் யார்? புலமை எது? என்று உணர்த்த விரும்பிய சுவாமிகள் புலமையிலக்கணம் புணர்ந்தார். இவ்வகையில் ''ஐந்திலக்கணம் என்று பலர் கூறிடிலும் ஆறு என்றுரைப்பது குருவருளே'' என்றும் 'ஐந்திலக்கணம்' கற்றார் மட்டுமே புலவர் ஆகார் அவர்க்குரிய இயல்புகளிலும் புலவராயிருந்து புலமையை

வெளிப்படுத்த வேண்டும் என்று வற்புறுத்தும் நோக்கில் புலமையிலக்கணம் ஆறாம் இலக்கணமாகத் தோன்றியது என்பர்.

**புலமையிலக்கணத்திற்கு அடிப்படை**

தொல்காப்பியச் செய்யுளியலிலும், மரபியலிலும் நூல் பற்றிய மரபுகள் உரைக்கப் படுகின்றன. இதன் விரிவாக நன்னூல் பொதுப்பாயிரத்தில் நூல் நுவல்வோன், நுவலும் திறன், கொள்வோம், கோடல்முறை என்பனவற்றைக் கூறுகிறது. இதனடிப்படையில் அமைந்தது புலமையிலக்கணம் எனலாம். நன்னூல் பாயிரம் கூறும் மாணாக்கர் இயல்பும், அறுவகை இலக்கணம் கூறும் புலவரைச் சார்தல், புலவர் பண்பு, இவற்றுடன் ஒப்பிடும் திறத்தில் அமைந்துள்ளது. சில நூற் பாக்கள் இலக்கியக் கருத்துக்களுடன் ஒட்டி அமைகின்றன. "தவராசர், புவிராசர் என்று பெயரில் மட்டும் வாழ்ந்து குல மில்லாது போனவர் தம்மைப் பழித்தும் குணமுடைய புலவோரை மதித்தும் இயற்றப்பட்ட நவநூல் என்று புலமை இலக்கணம் படைத்தலை சுவாமிகள் துணிந்து கூறுகிறார்.

**புலமை இலக்கணக் கூறுகள்**

> "எழுத்துச் சொற்பொருள் யாப்பணியெனத் திகழ்–
> இவைதம்மாற்
> பழுத்து மாமணம் கமழ்தரு புலமையும் பகர்வது
> குறித்துள்ளேன்" (அறுவகை, பொதுப்பாயிரம் – 4)

என்று ஆசிரியர் ஐவகை இலக்கண அறிவு பெறுவதே புலமை என்று பொதுப்பாயிரத்தில் கூறுகிறார். ஐந்திலக்கணம் அறிதல், செய்யுள் இயற்றுதல், புலவரின் ஒழுக்கம், பண்டைய புலவர்கள் பற்றிய அறிவும், புலவர்களுக்கு தெய்வ அருள் தன்மை இருக்க வேண்டும் என்பன புலமையிலக்கணத்தின் கூறுகளாக அமைகின்றன.

**புலமையிலக்கணத் தன்மை**

புலம் என்பது அறிவு ஆகும் – புலமை என்பது அறிவில் தேர்ச்சி பெறுவது ஆகும்.

"அறியும் தன்மையைப் புலமை ஆம்எனப்
பற்பல பெரியோர் பகர்ந்தனர் அன்றே"
(புலமையிலக்கணம். 643)

என்று அறியும் தன்மையைப் புலமை என்று சுட்டுகிறார். இதற்கு உரையெழுதிய ஆசிரியர் நூலறிவினால் மட்டுமன்றிக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனாலும் ஒரு பொருளை அறிதலே புலமை என்பதைத் தெளிவாக்க "அறியும் தன்மை" என்று கூறப்பட்டது என்கிறார்.

இப்புலமை இலக்கணம் தேற்ற இயல்பு, தவறியல்பு, மரபியல்பு, செயல்வகை இயல்பு என நான்காகப் பிரிக்கப் பட்டுள்ளது. 144 நூற்பாக்களைக் கொண்டுள்ளது. இவற்றுள் செயல்வகை இயல்பு தொழில்நிலை, நடுநிலை, எதிர்நிலை, அருள்நிலை என நான்காகப் பகுக்கப்பட்டுள்ளது.

தேற்றம்-தெளிவு, தேற்ற இயலில் ஒருவன் புலவனாவதற்கு வேண்டிய வழிமுறைகளைச் சுட்டுகிறது. புலவனாக விரும்புவர்கள் நல்ல சான்றோர்களிடத்து பகைகொள்ளாது, அவர்களைச் சார்ந்து, என்ன இடர்வந்தாலும் அவற்றால் சோர்வடையாமல், முறையான வளர்ச்சியில் பயன்பெற வேண்டும் என்று சுட்டுகிறது. தவறியல்பு என்ற இயலில் புலவர்களிடம் இருக்கக் கூடாத பண்புகள் இவை இவையென விரித்துக் கூறப்படுகின்றது. புலவனுக்கு கல்விச் செருக்கு இருக்கக் கூடாது. இனப்பற்று, மொழிப்பற்று, தமிழ்ப்பற்று வேண்டும் என்கிறார். அவைகள் இல்லாதவர்கள் பேய் போன்றவர்கள் என்றும் கடிந்துரைக்கிறார். தமிழ்ப் புலவர்களின் இயல்பு பொறுமை காப்பது என்றும் கூறுகிறார். பிறரை மதியாமை, தமிழ் அறிஞரைத் தவிர்த்து பிறரிடம் நட்பு கூடாது, பிறரை வருத்துதல், குறைவான புலமையில் கவிபாடல் போன்றன தமிழ்ப் புலவனுக்கு கூடாது என்கிறார். முப்பத்தைந்து நூற்பாக்களைக் கொண்ட மரபியல் செவிவழிச் செய்திகளை ஆதாரமாகக் கொண்ட தமிழ் இலக்கிய வரலாறு ஆகும் இவ்வியல்பில் சிவன், உமையம்மை, முருகன், வாணி, அகத்தியர் முதலிய பல புலவர் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. செயல் வகையியல்பில் ஒரு தமிழ் மாணவன் எவ்வாறு செயற்பட வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகிறது. தொழில் நிலையில்

புலமையைத் தொழிலாகக் கொள்வோரின் செயல்களும்; இரு புலவர்களுக்கிடையே வாதம் ஏற்பட்டால் ஒருவராக இருப்பவர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நடுநிலையிலும்; எதிர்காலத்தில் பயன்பெறக் கூடிய நூல்கள் இவை என்று ஆர்வமுறுதலை எதிர்நிலையிலும்; புலவர்களுக்கு இறைவனின் திருவருள் தேவை என்பதை அருள்நிலையிலும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

**புலமை பெற விரும்புவனின் செயல்**

எழுத்து முதல் அணி முடியச் சொல்லப்பட்ட இலக்கணங் களை கவிதை இயற்றும் வன்மையையுடைய புலவர்களிடம் கேட்டு அறிந்து கொள்ள வேண்டும் என்பது மாணவர் கடமை யாகும் என்று கூறும் ஆசிரியர் புலமை பெற வேண்டும் என்ற பெரு விருப்பமுடையவன் பெரும்புலமை பெற்றுள்ள அறிஞர்களைப் பணிந்தொழுகுதல் சிறப்பு என்கிறார். நன்னூலார் இதை

> ''பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
> குணத்தொடு பழகி அவன் குறிப்பிற்சார்ந்து''
> ... ... ... ... ... ... ... ... ... ... (நன்னூல் 40)

இரு என இருந்தும், சொல் என்னும் பொழுது சொல்லியும், ஆர்வத்துடன் சித்திரப்பாவை போன்று இருந்து செவி வாயாகவும், நெஞ்சைக்களனாகவும் கொண்டு, கேட்டவற்றை விட்டுவிடாது உள்ளத்தில் இருத்தல் வேண்டும் என்கிறார்.

சிறந்த கவிதை நூல்களை இயற்ற இலக்கண நூல்கள் இருந்தாலும் பெரிதும் துணையாக இருப்பது கடவுள் துணை என்பதை

> ''நூலின் துணையினும் நூறுபங்கு அதிகம்
> தெய்வத் துணையாம் செந்தமிழ்க் கவிக்கே'' (648)

என்றும், கணபதி, முருகன், கலைமகள், உமையவள், பிரமன், திருமால் என்னும் அறுவகைத் தமிழ்த் தெய்வங்களை அதற்குரிய கடவுள்களாகக் குறிப்பிடுகிறார். தெய்வத்தின் அருளைப் பெற வேண்டும் என்பதோடு மட்டுமல்லாமல் சிறந்த அறிஞர்களைப் பகைத்துக் கொள்ளக்கூடாது என்கிறார். ஏனெனில் அறிஞர்களின் துணையால் அரிய நூற்கருத்துக்களைச் சிறிது சிறிதாகவேனும் அறிந்து நாளடைவில் முழுப்புலமை பெறுவதற்கு

வாய்ப்புண்டு. ஆகையால் அறிவு வேட்கையுடையவர்க்கு புலவர் பகை சிறிதளவும் கூடாது என்கிறார். இதை திருவள்ளுவர்

''வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை''

என்று கூறுகிறார்.

சோம்பலும், தூக்கமும் பெண் மேல் ஆசையும், வறுமை போன்றவை தமிழ்க் கல்விக்கு இடர் செய்தாலும் அவற்றால் சோர்வடையாமல் ஊக்கத்துடன் கல்வியில் கவனம் செலுத்து பவன் தங்கத்தைப் போன்றவனாவான்.

**மாணவன் கைக்கொள்ள வேண்டிய நெறிமுறைகள்**

மாணவன் முதலில் கவிதை பாட ஆரம்பிக்கும் பொழுது இறைவனைப் பாடுபொருளாக கொண்டு பாட வேண்டும். அவ்வாறு பாடாத கவிதை புகழைத் தராது, அவமதிப்பு, பழி இரண்டையும் தரும். ஆசிரியர் ஈற்றடியை மட்டும் கொடுக்க மற்றைய மூன்று அடிகளையும் நிறைவு செய்தல் மாணவனின் கடமையாகும் அவ்வாறு முழுமை பெற்ற கவிதைகளை மாணவன் முன் ஆசிரியர் திருத்த முற்படும்பொழுது மாணவன் தன் தவறுகளை உணர்ந்து இனிய கவிதைகளை எளிமையாக வும், விரைவாகவும் இயற்றும் திறமை வாய்க்க பெறுவான். நாடகத்தமிழ் பாடல்களையும், கொச்சகக் கலிப்பா பாடல் களையும் தான் முதலில் இயற்ற வேண்டும். ஆசிரியப்பாவினை அறிந்த பின்னரே வெண் கலிப்பாவில் பாடுவதற்கு முயற்சி செய்தல் வேண்டும். சிற்றிலக்கியங்கள் பாடிய பின்னரே காப்பியங்கள் பாட வேண்டும். ஒருமுறை இயற்றப் பெற்ற நூல் மீண்டும் பரிசோதித்துத் திருத்த வேண்டிய அவசியம் இல்லாமல் முதல் முறையிலேயே திருத்தமாக அமைத்துவிட வேண்டும். அவ்வாறு இயற்றுவதே நன்மாணாக்கனின் இயல்பாகும்.

**சமய உணர்வு**

ஆசிரியரின் சமய உணர்வினை நூலின் பல பகுதியிலும் காணலாம். இவ்விலக்கண ஆசிரியர் கடவுட் பக்தி நிறைந்தவர். அதனால் தான் புலமை இலக்கண மரபியலில் சிவன் முதலான பல தெய்வங்களைப் புலவர் மரபில் குறித்துச் செல்கிறார்.

அவர்கள் இசைத்ததாகக் கருதப்படும் செய்யுட்கள் அல்லது இறை தொடர்பான நிகழ்ச்சிகள் மூலம் புலவர் என்று நிறுவுகிறார். சான்றாக,

''பாணனும் தருமியும் பெத்தானும் உய்யப்
பாடியது அன்றிப் பைந்தமிழ்க் கழகத்
தலைவனைப் பழித்தும் தனிக்கவி பகர்ந்த
பரமனும் புலவன் என்பது பண்பே'' (711)

பாணபத்திரருக்கு 'மதிமலிபுரிசை' என்ற அடியினையும், தருமிக்கு 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற அடியினையும், நக்கீரனை இகழ்வதாக 'அங்கம் குலுங்க' என்ற அடியினையும் எடுத்துக் கொடுத்த சிவனும் ஒரு தமிழ்ப் புலவரே என்கிறார்.

இறைவன் அல்லாத மானிடப் புலவர்களைப் பற்றிப் பேசும் பொழுதும் அவர்களின் படைப்பினைப் பற்றிக் கூறாது அவர்களுக்கு இருந்த தெய்வ அருள் நிலையைப் பற்றியே பெரிதும் பாடுகிறார். இடைக்காடர் என்னும் தமிழ்ப் புலவர் தம் பனுவலை குலேச பாண்டியன் போற்றாததால் சினங் கொண்டு சொக்கநாதப் பெருமான் ஆலவாயை விட்டு நீங்கி வையையின் தென்கரையில் கோயில் கொள்ளவும், பின் சினம் நீங்கி மீண்டும் வையையின் வடகரைக்கு எழுந்தருளவும் ஒரு தமிழ்ப்பா புனைந்தார்.

''மதுரைஊர்க் கடவுள் வையைக்கு அப்புறம்
போய்வரப் படித்தான் புலவன் ஒருவனே'' (726)

என்று மானிடப் புலவரின் தெய்வ அருள் நிலையைப் பாடுகிறார்.

### தெய்வப் புலமை

ஒரு கவிஞர் தம் படைப்பைத் தாமே எழுதும் பொழுது எதுகை, மோனை, அடியின் முடிவு முதலியனவற்றை எளிதில் அறிந்து கொள்ள இயலும். தாம் சொல்லச் சொல்ல மற்றவர் எழுதும் பொழுது அதன் ஆசிரியர் முழுப்பாடலையும் தம் நினைவிலேயே கருதி இயற்ற வேண்டும். அவ்வாறு இயற்றும் பொழுது அதிக நினைவாற்றல் தேவைப்படுகிறது. அவ்வாற்றல் இறைவனின் திருவருளாலே வாய்க்கும் என்பது இந் நூலாசிரியரின் அழுத்தமான கொள்கையாகும். இவற்றை ஆசிரியர் தெய்வப் புலமை என்றும் கூறுகிறார்.

"கால மழைஎனப் புதுக்கவி கழறலும்
சொற்படி நடக்கக் காண்டலும் பிறவும்
தெய்வத் தன்மைப் புலமை ஆமே" (666)

என்கிறார். கடவுளின் திருவடிவத்தினை தன் மனக்கண் எதிரே காட்சியளித்தும், தம் செவிப்புலன் கேட்குமாறு உரையாடியும் ஆட்கொள்வது தான் முழுப்புலமை அடைந்ததாகக் கொள்ளப் படும் என்பர். இந்நூலின் ஆசிரியர் "முருகப் பெருமான் தன் கண்ணெதிரில் காட்சிதர வேண்டுமெனப் பல்காலம் வேண்டினர். இறுதியில் திருமலை என்ற முருகன் தலம் சென்று "இன்று காட்சிபெற இயலாவிடின் இம்மலையிலிருந்து உருளுவேன், உயிர் வாழேன்' என்று திருமலையின் உச்சியிலிருந்து உருண்டார். திருவருள் துணையால் உடலில் ஒரு பழுதும் நேராது காக்கப் பெற்றார்." என்ற கருத்து சுவாமிகளுக்கு இருந்த சமய உணர் வினையும், கடவுட் பக்தியையும் புலப்படுத்தும்.

### புலவர்களிடம் இருக்கக் கூடாத பண்புகள்

தமிழ்ப்புலவர்களிடம் இருக்கக் கூடாத பண்புகளை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தவறியல்பு என்ற இயலில் விளக்குகிறார். புலவர்கள்பால் தற்பெருமை, புலமைக் காய்ச்சல் என்னும் பொறாமை போன்ற தீய பண்புகள் இயல் பாகவே இருக்கும் என்ற நம்பிக்கை சமுதாயத்தில் நிலவி வருகின்றது. இக்குற்றங்கள் புலவர்களிடத்து அமைந்துவிடக் கூடாது என்ற எண்ணம் காரணமாக சுவாமிகள் கல்வியறிவு பெறுவதற்கு முன் செருக்கடைதல் கூடாது என்றும் "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு" என்ற தமிழ் மூதாட்டியின் வாக்கு மனதில் பதிந்திருக்க வேண்டும் என்கிறார். புலவர்கள் தம் இனமாகிய புலவர் இனத்தையே மதிப்பதில்லை என்றும், புலவர்கள் தாம் கற்ற கல்வியினால் பெருமிதத்துடன் அலைகிறார்கள் என்ற கருத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கால கட்டத்தில் "உவப்பத் தலைகூடி. உள்ளப்பிரிதலே புலவர்களின் தொழிலாக இருக்க வேண்டுமேயன்றி தன் இனத்தோடு ஒற்றுமையாக கலந்து வாழும் காகம் போன்று வாழ வேண்டும் என்றும், தன் இனம் என்று கருதாது தன் இனத்தையேக் குத்திக் குதறும் நாய் இனங்களைப் போன்று புலவர்கள் வாழ்தல் தவறு என்று சுட்டுகிறார். இதனையே "பிலைந்த கடம்பன்ன வியன்

தமிழ்ப் பாவாணர் கலைந்து அலையாது ஒன்றுபடக் காட்டாய் என்று முருகனிடம் ஒரு வரமாகப் பெற்றார்'' என்பர்.

இந்நூலாசிரியர் காலத்தில் குறுநில மன்னர்களும், நிலக்கிழார்களும், பெருஞ்செல்வர்களும் வாழ்ந்து வந்தனர். அக்காலகட்டத்தில் அவர்களின் மீது அகத்துறை என்ற போர்வையில் சிற்றிலக்கியங்கள் தோன்றின. இந்நிலை புலவர்களிடத்துத் தோன்றக் கூடாதென

''காமக் கடலே கதிஎனக் கருதிப்
போவார் புலமையிற் புண்ணியம் இன்றே'' (686)

என்கிறார். கொலை செய்தல், புலால் உண்ணுதல் போன்ற கொடிய செயல்களை அறவே வெறுக்கும் திருவுளத்தினரான சுவாமிகள் உயிர்களைக் கொலை செய்தலையும், மாமிசத்தை உணவாகத் தயாரிப்பதையும் அதிகம் பாடுகின்ற தமிழ்ப் புலவர்கள் பேய்க் குணம் வாய்ந்தவர்கள் என்கிறார். அத்துடன் மட்டுமல்லாது சிறந்த நூல்களை இயற்றி அதைப் பணத்திற்கு விற்பது இழிவான செயல் என்றும்; செல்வந்தர்களைப் புகழ்ந்து பாடி அவர்களிடம் கை நீட்டிப் பரிசில் பெறுவதும் தமிழ்ப் புலவர்களின் இழிவான செயல் என்றும் கூறுகிறார்.

''பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுஅல, கால வகையினானே'' என்ற கூற்றுப்படி தமிழ்ப் புலவர்கள் மாறி வருகின்ற காலச் சூழலுக்குக்கேற்ப புதிய கருத்துக்களையும் கூற வேண்டும் என்கிறார். இவ்வாறு தமிழ்ப் புலவனிடன் இன்னன்ன இருக்க வேண்டும், இன்னன்ன இருக்கக் கூடாது என்று கூறுகிறார்.

**தமிழ்ப்பற்று**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளுக்கு தமிழின் மீது ஒரு தணியாத பற்று காணப்பட்டது. அதற்காக பிற மொழியினையும் அவர் வெறுத்து ஒதுக்கவில்லை. புலவர் ஒவ்வொருவர்க்கும் தமிழ்ப்பற்று அதிகம் இருக்கவேண்டும் என்ற கருத்துடைய சுவாமிகள்

''தமிழ்மொழிக் குயர்மொழி தரணியில் உளதெனில்
வெகுளியற்றிருப் போன் வெறும் புலவோனே'' (704)

என்றும் கூறுகிறார். இவர் தமிழைத் தாம் வழிபடும் கடவுளாகிய முருகப் பெருமானின் அருள் வடிவமாகவே போற்றுகிறார். "தமிழின் பதினெட்டு மெய்யெழுத்துக்கள் அக்கடவுளின் கண்கள்; பன்னிரெண்டு உயிரெழுத்துக்கள் அவன் தோள்கள்; ஆய்த எழுத்து அவன் வேலாயுதம்; நாள், மலர், தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் ஆகிய ஆறு சீர்களும் முருகனின் ஆறு தலைகள். இவைகளை அமைத்த அகத்திய முனிவர் முருகனடியார்'' என்பார்.

தமிழின் சுவையை உணர இயலாது ஒரு தெய்வம் இருக்கிறது என்றால் அது தமிழின் சுவையை உணர்ந்த பேயை விடக் கிழானது என்றும், அரசர், அமைச்சர், பெருஞ்செல்வர் போன்றவர்களின் நட்பைக் காட்டிலும் தமிழ்ச்சுவையை உணர்ந்த அறிஞர்களின் நட்பு தான் சிறந்தது ஆகும். தமிழின் இனியைக் கூற வந்த சுவாமிகள்,

> "கோங்கு அரும்பு அன்ன குவிமுலைக் கோதையர்
> தீஞ்சுவைச் சொல்லினும் செந்தமிழ்இனிது'' (709)

என்கிறார். தமிழே உயர்வு என்று தனக்கு முருகன் சீட்டெழுதிக் கொடுத்ததாகவும் அதனால் 'தமிழலங்காரம்' என்ற அரிய நூலை தாம் இயற்றியதாகவும் சுவாமிகள் கூறுவது குறிப் பிடத்தக்கது ஆகும்.

பழைய மரபுகளை விதந்து கூறும் வண்ணம் புலமையிலக் கணம் வரலாற்றுக் குறிப்புக்களாகக் கருதத்தக்க செய்திகளைப் பகர்கின்றது. பேராசிரியர் மு. சண்முகப்பிள்ளை 'சுவாமிகள் தரும் புலமையிலக்கணம் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் கருவூலம்' என்கிறார். புலமையிலக்கணத்தில் சிவன் முதலிய பிற தெய்வங் களையும், தேவர்களையும் தமிழ்ப் புலவர் என்கிறார். சுவாமிகள் புலமையிலக்கணம் தோன்றுவதற்கு என்ன காரணம் என்றும், அதில் புலவர்களின் செயல்களும், புலவர்களிடம் இருக்கக் கூடிய பண்புகள், இருக்கக் கூடாத பண்புகள் போன்றன மிகச் சிறப் பாகக் கூறப்பட்டுள்ளன.

# தமிழைப் போற்றுதல்

## அ. செந்தில் குமரன்

உலக மொழிகளுள் காலத்தால் வரையறுக்கப்படாததும், தொன்மை வாய்ந்த மொழிகளுள் தலைமையானதும் என்று ஆய்வியல் அறிஞர்களால் போற்றப்பெறும் தமிழ் மொழி, மிக நீண்ட இலக்கிய வரலாற்றைத் தன்னகத்தே கொண்டு சிறப்புடன் விளங்குகிறது. இந்நெடுங்கால இலக்கிய வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால், "இலக்கியம் இயற்றிய புலவர்களால் தமிழ் மொழி ஏற்றம் பெற்றதையும், தமிழ் மொழியில் காவியம் செய்ததால் தண்டமிழ்ப் புலவர்கள் தனிச் சிறப்புப் பெற்றதும்" ஆகிய அரும்பெரும் கருத்துக்கள் போதரும்.

தமிழினால் ஏற்றம் பெற்றவர்கள் மிகுதியாக இருந்தாலும், தமிழ்மொழிக்கென்று தன்னையே ஒப்படைத்த புலவர் பெரு மக்கள் மிகச் சிறந்தவர்களுள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருளாளர் "வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்" குறிப்பிடத் தக்கவராவார்.

தமிழ் மொழியினைப் பேசுவதால் பயனில்லை என்று கருதி வாழ்ந்த மக்கள் சமுதாயத்தில், மொழி உணர்ச்சியைத் தூண்டியும், அந்நியரிடமிருந்து தமிழ்மொழியைக் காத்ததுமன்றி ஏற்றம் பெறச் செய்யும் வகையில் பல்வகை நூல்களைத் தாமே பனையோலைகளில் எழுதிப் படைத்தது அவ்வருளாளரின் மிகப் பெரும் பணியாகும்.

'தமிழ்மொழியினைக் காப்பது ஒன்றே' நமது கடமையாக உள்ள இக்காலச் சூழ்நிலையில், வண்ணச்சரபத்தின் தமிழ்ப் பணியினையும், தமிழ்மொழியினைப் போற்றும் முறைமை யினையும் எண்ணுவதாலும், எழுதுவதாலும் மறைந்துபோன மொழியுணர்வினை நம்முள் தூண்டுமாறு அமையும் என்ற வகை யிலேயே, "வண்ணச்சரபம்–தமிழைப் போற்றுதல்" என்னும் பொருளில் இவ்வாய்வுக் கட்டுரை அமைகின்றது.

வண்ணச்சரபத்தின் தமிழ்ப் பணியினை விளக்கும்பொருட்டு, தமிழும் முருகனும், தமிழ் நூல்கள் இயற்றல், தமிழ்ப்பெரும் புலவர்களைப் போற்றல் என்னும் மூன்று தலைப்பினை மைய மாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது. 'தமிழ்மொழியும் முருகக் கடவுளும் ஒன்றே' என்றும், தமிழ்மொழியினை உருவாக் கியவன் முருகனே என்றும் தண்டபாணி சுவாமிகள் உணர்த்தும் வண்ணம் முதல் தலைப்பு அமைகின்றது. தமிழ்மொழியினை வளர்க்கும் பொருட்டு புதிய புதிய நூல்களைப் படைப்பதும் தமிழ் மொழியினைப் போற்றுவதாக அமையும் என்பதை உணர்த்தும் வகையில் தண்டபாணி சுவாமிகள் படைப்புகள் அமைவதை ஆராயுந் தன்மையைச் சுட்டுவதாக இரண்டாவது தலைப்பு அமைகின்றது. தமிழில் நூல்கள் பல இயற்றுவோரை வணங் குவதும், வாழ்த்துவதும் தமிழ்மொழியினைப் போற்றுவதாக அமையும் என்ற வகையில் தண்டபாணி சுவாமிகள் கருத்தை விளக்கும் வகையில் மூன்றாவது தலைப்பு அமைகின்றது.

எனவே தமிழ்மொழியின் தோற்றத்தை எண்ணுதல், நூல். களை இயற்றுதல், நூலியற்றுவோரைப் போற்றுதல் (ஆக்கல், போற்றல், வளர்த்தல்) என்ற முத்திறத்தானும் தண்டபாணி சுவாமிகளின் தமிழைப் போற்றும் முறை விளங்குவதால் மேற்கண்ட தலைப்புகளில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**தமிழும் முருகனும்**

தொடக்கக் கால மனிதன் இயற்கைச் சூழலில் வாழ்ந்தான் அதன் மூலமான இன்பங்களையும், துன்பங்களையும் அனுபவித் தான். அவ்வியற்கையழகின் ஆற்றல்களை எல்லாம் எண்ணி வழி பட்டான். ஆதலால் நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்ற பஞ்ச பூதங்களையும் தனக்கு அருள்கொடுக்கும் பயனளிக்கும் இறை மைத் தன்மைகள் கொண்டவனாகக் கண்டான். அவைகளின் உள்ளீடாக நின்ற இறைமைத் தன்மையைக் குறிக்கும் குறியீட்டுச் சொல்லாக "முருகு" என்ற சொல் தமிழில் அமைந்தது. முருகு என்ற சொல்லுக்குத் தமிழில் "அழகு" என்று பொருள். இவ்வழ கினையே திரு. வி. க. அவர்கள் 'அழியா அழகு' என்று குறித்தார் கள். இம் 'முருகு' என்ற சொல்லோடு 'அன்' விகுதி சேர்த்து "முருகன்" என்று இறைவனுக்கும் பெயராக பொருந்தி அமைந்து விட்டது.

முருகப் பெருமானே தமிழ் மொழியினையும், வடமொழியினையும் உருவாக்கினான் என்றும், அவற்றுள் தமிழ்மொழியினை அகத்திய முனிவர்க்கு உணர்த்தி உலகிற்கு உணரச் செய்தான் என்றும் கூறப்படுகிறது. இதனை,

"குறு முனிக்கும் தமிழ் உணர்த்தும் குமர"

என்னும் குமரகுருபரர் வாக்காலும் மற்றும் பல தமிழிலக்கியச் சான்றுகளாலும் நாம் உணரலாம். இவ்வகையில் முருகனைத் தமிழுடனும், தமிழை முருகனுடனும் இணைத்துப் பாடிய அருளாளர்கள் பலராவர்.

அவர்களுள் "முருகனைப் புராணத்தின் அடிப்படையிலும், அருவப் பரம்பொருளிலிருந்து தோன்றிய உருவங்களை எல்லாம் முருகனாகப் பார்க்கும் தத்துவத்தின் அடிப்படையிலும்" பாடிய அருளாளர் தண்டபாணி சுவாமிகள் ஆவார். அவர் முருகனையும், தமிழையும் போற்றும் முறைமையினையும் மேற்சொன்ன இரு பிரிவுகளின் அடிப்படையில் ஒருசில சான்றுகளைக் கொண்டு இனிக்காணலாம்.

தமிழும் முருகனும் (புராணத்தின் அடிப்படையில்)

முருகப் பெருமான் தமிழ் மொழியினை அகத்திய முனிவர்க்கு உணர்த்தினான் என்ற புராணக் கருத்தினை அடிப்படையாகக் கொண்ட தண்டபாணி சுவாமிகள் அகத்திய முனிவர் தமிழ் செய்த முறையையினை எண்ணிப் பார்க்கின்றார். தமிழ்மொழியினை தனக்குணர்த்திய முருகப் பெருமானுக்கு நன்றி தெரிவிக்கும் வகையிலே தம் பாடல்களைப் படைக்கிறார். 'தமிழ் எழுத்துக்களை முருகப் பெருமானின் வடிவத்தோடு பொருந்துமாறு செய்தார்,' என்ற நுட்பமான கருத்தினை நமக்கெல்லாம் உணர்த்தும் வகையில்

"கண்ணிகர் மெய்யும், சென்னிக் கணமுறழ் சேர்க்கைச் சீரும்
திண்ணிய புயங்களே போல் திகழ்தரும் உயிரும், வேறொன்று
எண்ணிடற் கரியதாகும் எஃகமும் இயலில் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேள் பொற்பதத்து
அடிமைதானே"

என்ற புலவர் புராணப் பாடல் மூலம் தண்டபாணி சுவாமிகள் 'தமிழையும் முருகனையும்' போற்றி உரைக்கின்றார். மேலும் தமிழ்மொழி எவ்வாறு இயல், இசை, நாடகம் என்று முப்பகுப்

பினைக் கொண்டுள்ளதோ, அதுபோலவே முருகப் பெருமானும், பாலனாகவும், குமாரனாகவும், கிழவனாகவும் விளங்குகின்றான் என்பதை தண்டபாணி சுவாமிகள்,

''பாலன் குமரன் பழங் கிழவன் அம்மானை''

என வரும் ''சென்னைப் பிள்ளைத் தமிழ்ப்'' பாடல் மூலம் விளக்கின்றார்,

எனவே முருகனையும் தமிழினையும் சான்றோர்கள் பலர் பாடியிருக்கின்றனர் என்பதும் அவர்களுள் தண்டபாணி சுவாமிகளும் சிறப்பித்துப் பாடியிருக்கின்றார் என்பதையும் மேற்கண்ட சான்றுகள் போல் இன்னும் பல சான்றுகளும் நமக்குத் தெரிவிக்கின்றன.

**தமிழ் நூல்கள் இயற்றல்**

ஒருவர், ''ஒருமொழிக்குச் செய்யும் மிகப்பெருந்தொண்டு அவர் அம்மொழியினைத் தெளிவாகக் கற்பதும், அம்மொழி வரலாற்றை அறிவதும், அவ்வாறு அறிந்தவற்றைப் பிறர்க்கு உணர்த்தச் செய்யும் வகையில் நூல்கள் பல இயற்றுவதும் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். மொழியினைப் பற்றி அறியாமலும், மொழியிலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் ஆழ்ந்த புலமை இல்லாமல் ஒருவர் ஒரு மொழியினைப் போற்றுகின்றார் என்றால் அப்போற்றுதலென்பது போலியானதாகிறது. அப்படிப் பலர் வாழ்கின்ற சமூகச் சூழலில் இலக்கண, இலக்கியப் புலமை மிக்க தண்டபாணி சுவாமிகள், ''பழமை மரபுகளைக் காத்ததுமட்டுமன்றிஅவற்றினைப் புதுமைச் சிந்தனைகளோடும் இழையோடச் செய்துநூல்கள் பல இயற்றியருளினார், என்பது குறிப்பிடத் தக்கதாகும். இக்கருத்து ஒன்றே அவரின் உண்மையான தமிழ்ப் பற்றினையும் தமிழைப் போற்றும் முறைமையினையும் நமக்கு உணர்த்துவதாகவிளங்குகிறது.

அவ்வகையில் அவரியற்றிய நூல்களை நாம் பின்வருமாறு பகுத்துக் கொள்ளலாம்.

1) புராண நூல்கள் 2) வாழ்க்கை வரலாற்று நூல்கள்
3) சமய நூல்கள் 4) இலக்கிய நூல்கள் (சிற்றிலக்கியம்)
5) இலக்கண நூல்கள் 6) தத்துவ நூல்
7) மருத்துவ நூல்கள்

என்று பல்வகைத் துறை சார்ந்த நூல்களைப் படைத்தவராகத் தண்டபாணி சுவாமிகள் திகழ்கின்றார்.

### புராண நூல்கள்

தண்டபாணி சுவாமிகளின் புராண நூல்களில் "புலவர் புராணம்" என்பது குறிப்பிடத்தக்க நூல் ஆகும். பெரும்பாலும் புலவர்களைப் புரவலர்கள்தாம் போற்றுவது மரபு. ஆனால் தண்டபாணி சுவாமிகள் அதிலிருந்து சற்று வேறுபடுகிறார். புலவர்களைப் புலவர்களும் போற்றுதல் வேண்டும் என்ற நல்லெண்ணத்தை வெளிப்படுத்தும் முகமாக அவருடைய புலவர் புராணப் படைப்பு அமைந்திருந்தது எனலாம் சாதி, இனம், மதம் என்ற பாகுபாடில்லாமல் மிகச் சிறந்த புலவர்களை எல்லாம் தொகுத்த அவர்களின் வாழ்க்கை அனுபவங்களை உணர்த்துவதாகப் புலவர் புராணப் படைப்பு சிறந்து விளங்குகின்றது. இதைத் தவிர திருவாமாத்தூர்த் தலபுராணம், அருணகிரிநாதர் புராணம் என்று பல்வகைப் புராண நூல்களும் சுவாமிகள் படைத்தருளினார்.

### வாழ்க்கை வரலாற்று நூல்

தமிழில் எழுந்த முதல் தம் வாழ்க்கை வரலாற்று நூல் சுவாமிகள் அருளிய 'குருபர தத்துவம்' என்றும் அரிய நூலாகும். இந்நூலுள் சுவாமிகளின் தவ முயற்சி கனவு, நனவுகளில் முருகப் பெருமான் தனக்குக் கூறிய அருளுரைகள், பல ஊர்களுக்கும் சென்று இறைவனைப் பற்றி பாடுதல், அரங் கேற்றுதல், சமயப்பொறை மிக்க சமுதாயத்தை உருவாக்க முயலுதல் போன்ற அனுபவ மொழிகள் அரும்பெரும் கருத்துக்களாக அமைந்து நமக்கு உணர்த்துகின்றன.

### சமய நூல்கள்

வண்ணச்சரபம் அவர்கள் ஒருசமய வாதியாக இல்லாமல் அனைத்துச் சமயங்களிலும் கூறப்படும் கருத்துக்களை எல்லாம் உணர்ந்து, அவையாவும் பொதுமையாகவும் யாவரும் பின் பற்றக் கூடியவனாகவும் விளங்குகின்றன என்று நமக்கெல்லாம் அறிவுறுத்துகிறார். வாரத்தின் ஏழு கிழமைகளையும் ஏழு சமயத்தின் கூறாகப் பார்க்கின்றார். இதனை சுவாமிகள் இயற்றிய "ஏழாயிரப் பிரபந்தம்" என்னும் நூல் நமக்குத்

தெரிவிக்கின்றது. இவை ஞாயிறு ஆயிரம் என்றும், திருமால் மூவாயிரம் என்றும், கணபதி ஆயிரம் என்றும், சிவன் ஆயிரம் என்றும், சக்தி ஆயிரம் என்றும் அறுசமயக் கடவுளரைக் குறிப்பதாக அமைந்து விளங்குகிறது. இவை மட்டுமல்லாமல் சென்னை, தேவகோட்டை, திருவாமாத்தூர் முதலிய தலங்களில் உள்ள இறைவன், இறைவி மீது பாடல்கள் பல பாடியருளினர்.

### நீதி நூல்

நீதி நூல்களில் சிறந்தது என்று அனைவராலும் போற்றப் பெறும் திருக்குறளின் பா வடிவ அமைப்பிலேயே 'மனுநெறித் திருநூல்' மற்றும் அரசாட்சி நூல்' என்ற இரண்டு நூல்களை அருளிச் செய்தனர் தண்டபாணி சுவாமிகள்.

### இலக்கண நூல்கள்

இலக்கியம் இயற்றியவர் எல்லாம் இலக்கணம் செய்வர் என்பது அரிதானதாகும். ஆனால் நம் சுவாமிகளோ இலக்கியம் அருளியதோடல்லாமல் இலக்கணத்தையும் இயற்றி மிகப்பெரும் சிறப்பினைப் பெற்றுத் திகழ்கின்றார். சுவாமிகள் அருளிய வண்ணத்தியல்பு என்னும் இலக்கண நூலும், அறுவகை இலக்கணம் என்னும் புலமை இலக்கண நூலும் காலத்தால் அழிக்க முடியாத தமிழ்மொழி நின்றுலவும் காலம் வரைப் போற்றப்பெறும் மிகச் சிறந்த நூல்களாகும். இசைத் தமிழைப் போற்றும் வகையில் 'வண்ணத்தியல்பு' என்னும் இசை இலக்கண நூல் புதிய புதிய சந்தங்களை தமிழ்மொழியில் ஏற்படச் செய்யும் வகையில் அமைந்த சந்த நூலாகும். 'அறுவகை இலக்கணம்' என்பது தமிழில் உள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களைக் கற்ற ஒருவர், தாம் கற்றதால் பெற்ற புலமை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை உணர்த்துவதாகத் திகழ்கின்றது.

### சிற்றிலக்கிய நூல்கள்

சிற்றிலக்கிய வகைகளான யமகம், அந்தாதி, திரிபு, கலம்பகம், பிள்ளைத் தமிழ் முதலிய யாப்புகளின் அடிப்படையில் சுவாமிகள் நூல்கள் பல செய்தருளினார். ஒலியலந்தாதி, ஏகத்தாள் இதழகலந்தாதி, தமிழலங்காரம் முதலியனக் குறிப்பிட்டுச் சொல்லுவதாக அமைகின்றது.

இவை தவிர தியானானுபூதி என்னும் தத்துவ நூலும், மருத்துவ நூல் ஒன்றும் இயற்றியருளி தமிழன்னையின் அழகுக்கு அழகு மலர் மாலை ஆக்கியருளினார்.

எனவே சுவாமிகள் அருளிய நூல்களில் இருந்து நாம் அவரின் தமிழ்ப் பற்றினையும், அவர் பெற்ற புலமையின் காரணமாக இயற்றிய பல்வகை நூல்களையும் கொண்டு சுவாமிகள் தமிழினைப் போற்றும் முறைமையினை நாம் ஒருவாறு தெளியலாம்.

**தமிழ்ப்பெரும் புலவர்களைப் போற்றுதல்**

திருவள்ளுவரைப் போற்றாத புலவர்களே இல்லை எனலாம். ஏனெனில் எல்லாக் காலத்திற்கும் பொருந்துமாறு நூலொன்று செய்தவர் யாரெனில் திருவள்ளுவரே ஆவார். ஆதலால் அவர் பெருமையை உணர்ந்து போற்றிய சான்றோர்களுள் தண்டபாணி சுவாமிகளும் குறிப்பிடத் தக்கவராவார். 'அருளாட்சி' என்னும் அவரியற்றிய நூல் திருக்குறளில் உள்ள 133 அதிகாரங்களுக்கும் 133 பாடல்கள் செய்ததோடல்லாமல், அருள் என்று தொடங்கி அருள் என முடியுமாறு மண்டல அந்தாதியாக இயற்றியருளினார்.

அதுமட்டுமல்லாமல் சம காலத்தில் வாழ்ந்த வள்ளலார், ஆறுமுக நாவலர், திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்று பற்பல சான்றோர்களையும் நேரே கண்டும், அவர்கள் வாழ்த்துக் கூறும் சிறப்பினையும் பெற்றார்கள். இவர்களைப் பற்றியும் பாடல்கள் பல பாடி சிறப்பித்துள்ளார்கள்.

முற்பிறப்பில் அருணகிரிநாதராகத் தான் இருந்ததாகவும், அவ்வருணகிரிநாதர் போலவே சந்தப்பாடல்களைத் தானியற்றுவதாலும், முருகனை அவரைப் போலவே வழிபடு கடவுளாகக் கொண்டதாலும் தான் அருணகிரிநாதரே என்பதை அனைவரும் ஏற்கும் வகையில் பாடல்கள் பல சான்றுகளாக அமைந்து விளங்குகின்றன. மேலும் 'அருணகிரிநாதர் புராணம்' என்னும் நூலினைப் பாடி அவ்வருளாளரின் சிறப்புமிக்க அருள்வாழ்க்கையின் மேன்மையினை நமக்கு உணர்த்துகின்றார். புலவர் புராணம் என்னும் நூல் ஒன்றே தண்டபாணி சுவாமிகள் புலவரைப் போற்றும்

அருளாளர் பண்பாளர் என்ற கருத்தினை நமக்குத் தெரிவிக் கின்றன.

இவ்வகையில் புலவர்கள் போற்றும் புலவராகவும், புலவர் களைப் போற்றும் புலவராகவும் தண்டபாணி சுவாமிகள் திகழ்ந்து தமிழ்மொழியினைப் போற்றி வளர்த்தார் என்பது புலனாகிறது.

இதுவரை தமிழ்மொழியினைப் போற்றி வளர்த்த புலவர் களுள் "தண்டபாணி சுவாமிகள் தமிழைப் போற்றுதல்" என்னும் தலைப்பில் தமிழும், முருகனும், தமிழ் நூல்களியற்றல், தமிழ்ப் பெரும் புலவர்களைப் போற்றல் என்னும் முத்தலைப்புகளாலும் ஆராயப்பெற்று அவரின் அருட்பணி உணர்த்தப்பட்டிருப்பதை தெளியலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக, அறுசமய வேறுபாட்டில் வேறு பாடுகளைக் கொண்டிருந்த மக்களை இணைக்கும் வண்ணம் தம் பாடல்களை அனைவரையும் ஒன்றுபடுத்தும் பாடுபொருளால் பாடிய பெருமை தமிழைக் குறிக்கோளடிப்படையில் வளர்த்தப் பெருமை போற்றிய பெருமை தண்டபாணி சுவாமிகளின் மிகப் பெரும் பணியாகும். இப்பணியினை எண்ணி எண்ணி நாம் இறும்பூது கொள்வதோடு அப்பணியினையும் நாமும் பின்பற்றி தமிழினைப் போற்றி வளர்ப்போமாக!

# சுவாமிகளின் தமிழ்ப்பற்றும் சமய நோக்கும்

வே. செல்லாத்தாள்

கி.பி. 18-ம் நூற்றாண்டில் தமிழ்மொழியில் சிற்றிலக்கியங்கள் தோன்றின. இச்சிற்றிலக்கியங்களை உருவாக்கிய பெருமைக் குரியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் – சிவஞானமுனிவர், குமரகுருபரர், சிவப்பிரகாசர் போன்றோராவர். இவர்கள் வழி வந்தவர்களில் சிறப்பிடம் பெறுபவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். இவர் கவிகளையும், சிற்றிலக்கியங்களையும் இயற்றித் தமிழன்னையை அலங்கரித்துள்ளார். அத்துடன் தமிழகத்தில் வழக்கிலிருந்த அனைத்துச் சமயங்களையும் போற்றும் சன்மதவாதியாகத் திகழ்ந்துள்ளார். அவ்வகையில் தண்டபாணி சுவாமிகளின் பாக்கள் வழிநின்று அவரது தமிழ்ப் பற்றையும் சமய நோக்கையும் எடுத்துக் கூறுவதாக இக்கட்டுரை அமைகிறது.

அருளிய நூல்கள்: முருகன் மீது பல்வேறு வகையான இலக்கியங்கள் பதினாறு பாடியுள்ளார் தண்டபாணி சுவாமிகள். மேலும், புராணம், சித்திரகவிகள், இலக்கண நூல்கள், பிள்ளைத் தமிழ் பதிகம், ஏழாயிரம், திருவாயிரம், பழனித் திருவாயிரம், மனுநெறித் திருநூல், நாடகம், கீர்த்தனைகள், உரைநடை, தனிப் பாடல் என வரலாற்று நூல், தொகை பிரபந்தம், நீதி நூல்கள், எனப் பலவகையில் பாடியுள்ளார்கள். அங்ஙனம் பாடிய பாடல்கள் 50,000 என்கிறது அவரது வரலாறு.

தண்டபாணி சுவாமிகள் தமிழ்மொழியிடத்து ஆழ்ந்த பற்றுடையவர். அதே சமயத்தில் பிற மொழிக்காழ்ப்பு உடையவர் அல்லர். இவரது தமிழ்ப்பற்றுக்கு அகச்சான்றாக விளங்குவது "தமிழலங்காரம்" ஆகும். இதனைச், "செந்தமி ழேஉயர் வென்றுமுன் னாள்ஒரு சிட்டெனக்குத் தந்தனன் கந்தன்;

தவளமின் சாட்சி சரதம் கண்டீர்'' என வரும் பாடலடிகளால் அறியலாம்.

சமயவாதமோ, மொழி பற்றிய வாதமோ நடைபெற்றால் அவ்வாதத்திற்குபின் தோற்ற சமயத்தையோ மொழியையோ வாதிட்டு வென்றவர் புகழ்ந்து கூறுதல் மரபில் இல்லை. ஆனால் தண்டபாணி சுவாமிகள் வடமொழியாளரோடு வாதிட்டு 'தமிழ் மொழியே' சிறப்புடையது என்று வென்றபின்னும் வடமொழியை வெறுக்கவில்லை. மாறாகத் தமிழையும் வடமொழியையும் ஒரே நிலையில் போற்றியுள்ளார்கள். அதாவது வடமொழியைத் தாயென்றும், தென்மொழியைத் தந்தை என்றும், கலைமகளின் வலக்கொங்கை போன்றது தமிழ், இடக்கொங்கை போன்றது வடமொழி என்றும், தென்சொல்லும், வடசொல்லும் சேர்ந்ததே எம்மொழி என்றும் கூறியுள்ளார்.

தென்மொழி, வடமொழிகளைப் பயில்வோர் அவ்வம்மொழி களின் மீது கொண்ட பற்றினால் மற்ற மொழியினைப் பழிப்பது கூடாது. இவ்விரு மொழியாளர்களும் தங்களுக்குள் ஏற்பட்ட பகை காரணமாகப் பிறமொழியைப் பழிப்பதும் கூடாது. அவ்வாறு பழிப்பவர்கள் சண்டாளர்கள் ஆவார் என்கிறார். இதனைக்

கும்பன் குதத்தில் தமிழ்தோன்றிற் றென்னக் குளறுகின்ற
வம்படும் கொன்றன்றி வாழா மிலோச்சர்தம் வாய்உமிழும்
தம்பல மேஒக்கும் ஆரிய மென்னுஞ் சழக்கர்களும்
வெம்பகை யால்இகழ் சண்டாளர் தாமென்கை
மெய்மொழியே.

எனவரும் தமிழலங்காரப் பாடலால் அறியலாம்.

தமிழலங்காரம் வடமொழியை இகலத் தோன்றியதல்ல, தமிழைப் புகழ்வது மட்டுமே என்ற அவரது நோக்கமே அவரது தமிழ்ப்பற்றையும் மொழிக்காழ்ப்பின்மையையும் உணர்த்து கின்றது.

**பன்னிரண்டெழுத்தும் பன்னிரு சமயமும்:** தமிழ்மொழி எழுத்துக்கள் முப்பதுள் முதலாவதாக அமைந்து இருப்பது உயிர் எழுத்துக்கள். இதனைத் தொல்காப்பியரின், "அகரமுதல, னகரஇறுவாய், முப்பதென்ப சார்ந்து வரல் மரபின், மூன்றலங்

கடையே'' என்னும் நூற்பாவால் உணரலாம். இம்முப்பது எழுத்துகளில் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டைச் சமயம் பன்னிரண்டு என உருவகித்துள்ளார்; ''சமைய மேயெனப் பன்னிரண்டு உயிர்கொள்பைந் தமிழே'' என்பது அவரது வாக்கு. பன்னிரண்டு சமயங்களாவன வேதத்தை உடன்படும் கௌமாரம், சைவம், வைஷ்ணவம், காணாபத்தியம், சௌரம், வாமம் முதலிய ஆறும். வேதத்தை உடன்படாத உலகாயதம், பௌத்தம், தார்க்கிகம், மாயாவாதம், பூர்வமீமாம்சம், சமணம் முதலிய ஆறும். இவை பன்னிரண்டும் உயிரெழுத்துக்களாம். இதனால் உட்சமயம், புறச்சமயம் இரண்டையும் இணைத்துக் காட்டும் தமிழின் தனித்தன்மையை விளக்கியுள்ளார்.

இக்கருத்து தண்டபாணி சுவாமிகளின் கற்பனை எனினும் இச்சமயங்கள் தமிழகத்தில் வழக்கிலிருந்தமையால் அவற்றையும் கூறுதல் வேண்டும் என்ற எண்ணத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்கள். இதுவும் அவரது பரந்த உள்ளத்தைப் பறை சாற்றுகிறது.

மெய் எழுத்துக்கள் பதினெட்டைப் பதினெட்டு மொழிகளாக உருவகித்துள்ளார். இப்பதினெட்டு மொழிகள் தமிழ் அல்லாத பதினேழு மொழிகளும் சேர்ந்ததாகும். இவற்றை நன்னூலார்,

> ''செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
> ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்''

எனக் குறிப்பிட்டுள்ளர்ர். அதாவது தமிழகத்தோடு சேர்ந்த பன்னிரண்டு நிலத்தில் வழங்கப்பட்ட பதினெட்டு மொழிகள் பன்னிரண்டுநாடு தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, கற்காநாடு, வேணாடு, பூழிநாடு, பன்றிநாடு, அருவாநாடு, அருவாவடநாடு,சீதநாடு, (மலாநாடு)புனல்நாடு என்பனவாகும்.

பதினெட்டு மொழிகள்: சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளு, குடகம், கொங்கனம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், கடுங்குசலம், தமிழ் என்பனவாகும். இவ்வாறு இவர் கூறியிருப்பதால் தமிழ்நாட்டோடு சேர்ந்த பிறநாட்டையும் போற்றியுள்ளமை புலனாகும். பின்வந்த புரட்சிக்கவி பாரதியாரும்,

தேசிய ஒற்றுமை நோக்கில் பதினெண் மொழிகளைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

ஆய்த எழுத்துக்களைச் சிவனின் முக்கண்களாக உருவகித்துள்ளார். மேலும், தமிழில் அமைந்து உள்ள இயல், இசை, நாடகம் என்ற பகுப்பை முறையே திருமகள், கலைமகள், மலைமகளோடு ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்.

தமிழலங்காரத்தில் அமைந்துள்ள நூறு கட்டளைக் கலித் துறைப் பாடல்களிலும் தமிழின் பெருமை, தமிழ்ப் பெரியோர்களாகிய புலவர்களின் வரலாறு, நாயன்மார்கள், அருளாளர்கள் செய்த அருட்செயல்கள், கடவுள்களுக்கும் தமிழுக்கும் இடையே உள்ள உறவுகள் சமயக்குரவர்கள் செய்த இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் முதலானவற்றைக் குறிப்பிட்டு இவை எல்லாம் தமிழால் நிகழ்ந்ததாகக் கூறித் தமிழ்மொழியின் உயர்வுகளைக் காட்டியுள்ளார்.

தமிழலங்காரத்தின் இறுதிப் பாடலில் தனக்கு எண்வகைச் சந்தப்பாடல்களைப் பாடும் புலமையினையும் (தத்த - தாத்த - தந்த - தாந்த - தன - தான - தன்ன - தய்ய) பகைவரை வாதத்தில் ஒடுக்கும் ஆற்றலையும், உயிர்கள் மாட்டு அருள் காட்டுகின்ற அருளினையும், தெய்வக்காட்சியினைப் பெறும் பேற்றினையும் அளித்தது தமிழின் அழகே எனக் குறிப்பிட்டு உள்ளார். மற்ற தமிழ்ப் புலவர்களுக்கு ஆற்றலையும், சொற் போர் வெற்றியினையும் நல்கியதும் தமிழின் அழகே என்கிறார். இதன்மூலம் தமிழ் மொழியிடத்துத் தொடர்பு கொண்டால் ஏற்படும் நன்மைகள் இவையென்பதை மறைமுகமாகக் காட்டி மற்றதரையும் தமிழிடத்து ஈடுபடச் செய்துள்ளார் எனலாம்.

**தண்டபாணி சுவாமிகளும், தனித்தமிழும்:** 18-ம் நூற்றாண்டின் பின் தமிழகத்தில் தனித் தமிழியக்கம் தோன்றியது. இதன் கொள்கை தூய தமிழ்ச் சொற்களில் எழுதுவது, பேசுவது என்பதாகும். இதனால் வழக்கிலுள்ள ஆங்கிலம், வடமொழி முதலிய மொழிச் சொற்களைப் பயன்படுத்தாது விட்டனர் எனினும் வெறுத்து ஒதுக்கவில்லை. அதுபோன்ற தண்டபாணி சுவாமிகளும் வடமொழியைத் தமிழோடு ஒத்த தன்மையில் வைத்துப் போற்றினும் தாய்மொழியிடத்து மிக்க பற்றுக்

கொண்டவராகத் திகழ்ந்து உள்ளார். அதாவது சந்தப்பாடல் களில் வடமொழிக்கலப்பு கூடாது. கலந்தால் சந்தத்தின் இயல்பு கெடும். சந்தம், தமிழ் அவற்றால் பெறும் சுவையும் குறையும் என்கிறார். எனவே உலக வழக்கிலும், உரைநடையிலும் வடமொழிக் கலப்பு இருக்கலாம், பாக்களிலும், சந்தங்கள் வகை களிலும் வடமொழிக் கலப்பு கூடாது என்பது அவரது கொள்கை யாக உள்ளது எனலாம். இதனை,

"வண்ணத் தளவில் வடமொழி மருச்சொல்
புல்லினும் மதுரப்பொலிவு குன்றலும்"

என்றும் "வடமொழி கலந்திடாத தமிழென விளங்குபாடல் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்மொழியை உணர்ந்த புலவன் அம்மொழியினையும் அதிலுள்ள கலைகளையும் அமிழ்தினும் சிறந்ததென்று போற்ற வேண்டும். அவ்வாறின்றி வேற்று மொழியிலிருந்து வந்தது இம் மொழி, இக்கலை எனக் கூறக்கூடாது. அவ்வாறு கூறுவது கற்புடைய பெண் மாற்றாளது கணவனைத் தனது மூக்கினால் நுகர்ந்து அனுபவிக்கும் பரத்தமைக் குணமுடைய பெண்ணுக்கு ஒப்பாவான் என்கிறார்.

பெண்மைக்குச் "செயிர்தீர் கற்புச் சிறந்தது போலத் தமிழ்ப் புலவனுக்குத் தமிழ்ப் பற்று வேண்டும் என்கிறார். இதனையே பின்வந்த பாரதியார் சற்று வேறுபடுத்திச்

சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்
பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்திடல் வேண்டும்"

என்றார்.

புலவர் புராணத்துள் சங்ககாலப் புலவர் முதல் தமக்கு முன்புவரை வாழ்ந்த புலவர்களின் வரலாற்றை அறுபத்தொன்பது சருக்கங்களில் தனித்தனியே ஒவ்வொருவரின் வரலாற்றினையும் கூறி, எழுபது, எழுபத்தொன்று, எழுபத்திரண்டு – இம்மூன்றும் சருக்கங்களில் முறையே பல தெய்வப்புலவர், அறிவுத்தன்மைப் புலவர், கண்கண்ட புலவர் என விடுபட்ட அனைத்துப் புலவர்களின் வரலாற்றையும் பாடியுள்ளார். இவ்வாறு பாட

இவருக்கு வழிகாட்டியவர் சேக்கிழார் எனலாம். அதாவது சேக்கிழார், தனியடியார், தொகையடியார் எனப் பாடியதை ஒட்டியே புலவர் புராணமும் அமைந்துள்ளது. சேக்கிழார் சிவனடியாருக்குப் பணிசெய்த அடியாரின் பெருமையைப் புராண மாகப் பாடியது போல் தண்டபாணி சுவாமிகள் தமிழைப் போற்றிய புலவர்களைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

சேக்கிழார் அருளிய நூல் சைவ சமயத்தில் சிறப்பிடம் பெற்றது போல் புலவர் புராணம் தமிழுலகில் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

திருக்குறளைத் தமிழ்வேதம் எனக் குறிப்பிடுவதாலும், அறுவகை இலக்கணத்தில்,

> ''தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில்
> வெகுளியற் றிருப்போன் வெறும்புல வோனே''

என ஒவ்வொரு தமிழ்ப் புலவனுக்கும் தமிழ்மொழிப் பற்றினை ஏற்படுத்தியுள்ளதாலும் தண்டபாணி சுவாமிகளின் தமிழ்ப் பற்றினை அறியலாம்.

**சமய நோக்கு**

'சமயம்' என்பது மனிதன் தன்னை நெறிபடுத்த வகுத்துக் கொண்ட கொள்கை ஆகும். இச்சமயம் மனிதனின் பகுத்தறிவு வளர்ச்சிக்கேற்பப் பிற்காலத்தில் பலவாறு பெருகிவிட்டன இச்சமயங்கள் கூறுவன ஈடு இணையற்ற பரம்பொருளின் பாத நிழலை அடையும் வழிகளையே ஆகும். எனினும் சமயங்களுக்குள் உயர்ந்த சமயம், தாழ்ந்த சமயம் என்ற உணர்வும் அதனடிப்படையில் சமயப்போர்களும், வாதங்களும் தோன்றின. இச்சமய போர்களும் வாதங்களும் சரியனவையல்ல இவற்றிற் கெல்லாம் ஒருவனே கடவுள் என்பதையும், சமயங்களின் பெருக்கத்தையும் அருணந்திசிவாச்சாரியார்,

> ''யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
> மாதொரு பாக னார்தாம் வருவீர்''

என மறைமுகமாகக் குறிப்பிட்டுச் சென்றுள்ளார். பின் வந்த சாந்தலிங்க சாமிகள் ''சாதி சமயங்கள் தம்மின் மாளதெமெய்ப், போதமாம் ஓர் அரத்(த) உந்தீபற, போயினார் என்று உந்தீபற''

என்ற பாடலில் சாதி, சமயப் பாகுபாடுகளை விட்டு ஞான வழியை அடைந்ததோடு பிறப்பிறப்பு அற்றவர் என்கிறார்.

மேலும் சமயம் எதுவாயினும் அச்சமயத்தினுள் கூறும் நெறி - உயிரின் தற்போதமாகிய செருக்கினைக் கெடுத்து வீடு பேற்றினை நல்குமாயின் அந்நெறியினை யான் போற்றுவேன் என்கிறார். இக்கருத்தைக் கூறுவது,

"எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினும்
சம்மத மேயெமக் குந்திபற
தற்போத மாய்க்குமே உந்திபற"

என்ற பாடலாகும். இவர்களது வழிவந்த தண்டபாணி சுவாமி களும் மேற்கொண்டவர் முருகனது அருட்பாடல்கள் அருளியவர். தமது பாடல்களில் பல மதங்களைப் பற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார். இவர் வெறுத்த மதம் "புலால் உணவை மேற் கொண்ட மதம் ஒன்றேயாம்" இதனை இவர் பாடிய,

"பொய்ம்மத வாதப் புலையருக் கஞ்சிப் புழுங்குகின்றேன்
எம்மத மேனும் கொன்றுண்ணாத தாகில் எனக்கிதே"

என வரும் ஆங்கிலியர் அந்தாதிப் பாடலடிகளில் உணரலாம்.

தண்டபாணி சுவாமிகளும் தொடக்கத்தில் கௌமார சமயத்தின் பற்று உடையவராகவே விளங்கியுள்ளார்கள். பின் முருகப்பெருமானின் அருள்வாக்காலேயே தாம் சன்மதவாதி ஆனமையைத் தம் நூலில் பாடியுள்ளார்கள்.

"குன்றாளும் சேயென வந்தெண்ணில் உண்மைகள் கூறியதும்
பொன்றா விளிதல்நன் றோபக ராய்பரி பூரணனே"

என்பது ஆங்கிலியர் அந்தாதியாகும்.

"சிவன்மகன் எனவே தொழுமெனுட் குகவேள்
அன்னவன் செய்தவப் பயனாய்
அவனது குருவாய்ச் சமயமு விரண்டும்
முகங்களென் றவிர்பொது முதலாய்"

என்றும்

"எழுதரு மறைநூற் சமயம் ஓ ராறும்
தன்முக மாமென எழில்வேல்
கெழுவிய திரள்தோட் குமரன்என் றன்பாற்
கிளத்துமன் கிளர்பல தேவாய்த்

தொழுமவர் பாலும் வாதுசெய் திளைத்த
துன்பநோய் சொல்விடற்பாற்றோ''

என்றும் குருபர தத்துவத்தில் குறிப்பிட்டுள்ளதாலும் இவ்வுண்மைகளை அறியலாம்.

முருகனது அருள் வாக்கிற்குப் பின், சைவம், வைஷ்ணவம், கௌமாரம், சாக்தம், சௌரம், காணாபத்தியம் என்னும் அறுவகைச் சமயங்களையும், ஒருதன்மையுடையனவாகவே போற்றியுள்ளார். இதன் காரணமாகத் தமது திருமேனி முழுவதும் அறுசமயக் கோலங்களையும் அணிந்து வந்தார். அதாவது திருநீறு, நாமம், துளசி, அக்கமணிதல் போன்றவற்றை அணிந்திருப்பார். இவ்வாறு அறுசமயங்களையும் ஒருதன்மையால் போற்றும் தன்மைக்குத் திருமாலின் பத்தவதாரங்களும் – திருமால் என்ற ஒரே பொருளைக் காட்டுவதுபோல் எனப் பகர்ந்துள்ளார்.

''உமக்குப் பத்தவ தாரமூர்த் திகளிடத்(து)
ஒருமைதோற் றுதல்போல், இங் (கு)
எமக்கு மூவிடு சமயவா னவர்களால்
இடுபஎல் லாம் இட்டேன் (குருபரதத்)'' (பா. எ. 25)

என்பது அவர் கூற்றாகும்.

தமது வரலாற்றினையும், தாம் பாடல்கள் பாடிய சூழலையும் விளக்கிப் பாடிய குருபரத் தத்துவத்தின் காப்பு பாடலில் முருகன், பரிதி, ஈசன், பராசக்தி, மாயவன், கரிமுகன், குகன், குருவாக காட்சி கொடுத்தமையை,

''பரிதி ஈசன் பராசக்தி மாயவன்
கரிமு கன்குகன் என்னக் கவின்றரும்
பெரிய சற்குரு பொற்பதம் பேணுவார்
அரிய தாள்மக ரந்தம் அணிந்துய்வாம்''

எனப் பகர்ந்துள்ளார்.

அறுசமயமும் பரமே என்கிறார். குருபரதத்துவம் – திருமலைச் சருக்கங்களை வேறுபடுத்தித் தங்களுக்குள் முரண் பாடுகொள்வேன் திடுக்கிடச் செந்தமிழால் சந்தப்பாடல்களைச் ''சட் சமயத்தினம்படி, எவ்வகை மூர்த்தியாயினும் பரம் என்று இசைப்பேன் எனக் கூறியுள்ளார். திருச்செந்தூர் சருக்கத்தில்

(குருபரதத்துவ) சன்மதக்கோலத்தில் கூறிய நூல்தான் எனக் கூறியுள்ளார். மேலும் உலகில் பெருமையுடையது எம்தெய்வம் உம்தெய்வம் – என்று சொல்கின்ற பேச்சினை விரும்பி அதில் மூழ்கமாட்டேன் எனவும், பிற மதங்களை இகழவும் மாட்டேன் எனக்குறிப்பிட்டுள்ளார். குருபரதத்துவத்தின் இறுதியில் அமைந்து உள்ள சமயாதீதச் சருக்கத்தில், அகச்சமயத்திற்கு மாறான பேதசைவர், பேதவைணவர், கணபதியை வழிபட்டோர், வாமகௌமாரர், புராணசௌரர், வாமசாத்தேயர், ஞானின் போன்றோரைப் புகழ்ந்து இவர்களுக்கு தங்கள் நெறியில் உண்மையாக நன்றாக நின்றால் அவர்களுக்கு நான் அடிமை எனக் கூறி என் கடவுளையே நினைவார்க்கும், எத்தெய்வமும் கடவுளே என்பார்க்கும் நான் அடிமை ஆவேன் எனக் கூறி யுள்ளார். மேலும் தான் ஒருசமயமாகிய பெருங்கடலுள் உள்ளே அமுந்திப் போகாமல் சன்மதவாதியாகிப் பொதுவாம் நெறி நின்று மகிழ்ச்சியடைய இவ்வுலகில் பட்ட துன்பங்கள் பல எனவும், அவற்றை எல்லாம் திருவருளும் எனது சிந்தையும் ஆராய்ந்து என்னை மீட்டன என்கிறார்.

ஒருபா ஒருபஃது என்ற நூலில் குருவை வணங்குவோரையும், சோதியை வழிபடுவோரையும் கயிலை நாதனை வழிபடு வோரையும், சாத்தேயரையும், மாயன் அடியவரையும், யானை முகனை வழிபடுவோரையும் - நின்னடியார் என்றே நினைக் கிறேன், எனவும்

"எம்மதத் தோர்கள் எனினும் அவர்சொல்
சம்மதம் என்னும் தகைமையும் எய்தி
ஆறெழுத் துரைக்கும் அடியனேன்"

எனவும் குறிப்பிட்டுள்ளார்.

இங்குதான் அவரது சமயப்பற்றும், சமரசமும் புலனாகின்றது. அதாவது மற்ற சமயங்களையும் மதிக்கிறேன், என்சமயத்தினைப் போற்றுகின்றேன் என்கிறார். சமயபேதம் கண்டுவாதிட்டதை,

"சமயவாதத் தறுகட் பாழங் குணத்து
அமையும் நாள்செயும் ஆடலளவும்
இந்நாள் செய்கிலை"

என்கிறார். அதாவது முருகன் மிகப்பற்றுக் கொண்டவன் அவனை வழிபடும் சமயமே உயர்வு என்று வாதிட்ட காலத்தில்

அருளி அளவுகூட சமரச மனப்பான்மை வந்தபின் நீ எனக்கு அருளவில்லை என முருகனோடு கோபிக்கிறார். இது அவனது காட்சி மீண்டும் வேண்டும் எனக் கேட்டல், அப்பர் பெருமானும் "இனித்தமுடைய எடுத்த பொற் பாதமும் காணப் பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டும்'' என இத்திருவடிக் காட்சியை மீண்டும் கேட்டார்.

சித்திமாலை என்ற நூலில் பொதுவாக இவ்வுலகில் வாழ்கின்ற சன்மதத்தோடு நின்னைச் சற்குரு என்று கூறும் நிலையினைக் கொடுப்பாயாக என்றும், சிறப்பாகத் தமக்கு வேதவியாசர் சங்கரர் இவர்களைப் போல் பொதுவான நிலையில் வாழவிடு என்றும் முருகனிடம் வேண்டுகிறார். பின்பு சூரியன், சிவன், அம்பிகை, விண்டு, கணபதி, முருகன் அறுவரையும் பாடியுள்ளார்.

திருவரங்கத் திருவாயிரத்தில் 'சமயசட்கம்' என்ற பகுதியில்– ஆறுசமய கடவுள்களையும் பாடியுள்ளார்.

தான் மட்டும் இவ்வாறு சன்மதவாதியாகப் பொது நோக்குடைய பேராளராக விளங்கியமையை உலகுக்குக் காட்டி அனைவரும் இதுபோன்று சமய காழ்ப்பு அற்றவராக வாழ வேண்டும். என்று கூறியவர், இதற்கு உதாரணம் காட்ட வேண்டி எண்ணியிருப்பார் போலும் அதனால் சன்மதக் கோலம் பூண்டவர்களின் வாழ்வையும் பாடியுள்ளார். அவர் முத்துலுக் கருப்புலவர் ஆவார். அவரைப் புலவர் புராணத்துள்,

"கோலத்தி லொருதுலுக்கன் குணத்திலொரு கவுமாரன்''

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இவரது கொள்கை "குரு'' கூறும் கொள்கையே மதம், குருகூறும் பிரனே பரம் எனப் படுவதாகும். இவ்வாறு குருவின் மொழியினை உணர்ந்து செயல்படத் தவ வலிமை வேண்டும் என்பதை,

"குருவிகற்ப மேமதங்கள் குறித்தபடி மொன்றென்னுந்
தெளடவை தெளிதன்று செய்தவமுற் றிடிலாமே''

என்கிறார். இவ்வாக்கு,

"எல்லாம் உடையான் குருவாகி ஈங்கெமது
அல்லல் அறுத்தின் என்று உந்தீபற
அவன் தாள் பணிவாம் என்று உந்தீபற''

என்ற சாந்தலிங்க சுவாமிகளின் பாடலுக்கு விளக்கமாக அமைந்துள்ளது எனலாம்.

# அறுவகை இலக்கணத்தில் சொற்பாகுபாடு

தூ. சேதுபாண்டியன்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய அறுவகை இலக்கணத்தின்கண் அமைந்துள்ள சொற்பாகுபாட்டு முறையை ஆய்கிறது இக்கட்டுரை. இந்த ஆய்வுக்குச் சுவாமிகள் எழுதிய அறுவகை இலக்கணம் முதன்மைச் சான்றாகின்றது. சுவாமிகள் எழுதிய ஏழாம் இலக்கணம், மற்றும் இதுவரை வெளிவந்துள்ள தமிழ் இலக்கண நூல்கள் இக்கட்டுரைக்குத் துணைமைச் சான்றுகளாகின்றன. இக்கட்டுரை அறுவகை இலக்கணத்தின் சொல்லிலக்கணப் பகுதியில் காணப்படும் சொற் பாகுபாட்டினை விளக்கி அப்பாகுபாட்டின் பொருத்தப்பாட்டை ஆய்வதாக அமைகின்றது.

தொல்காப்பியம், நன்னூல் முதலிய பழந்தமிழ் இலக்கண நூல்கள் தமிழ்ச்சொற்களை, அவை சொற்றொடரில் (Sentence) செயற்படும் செயற்பாட்டின் (function) அடிப்படையில் பெயர்ச் சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு வகையாகப் பாகுபாடு செய்தன. இவை தவிரச் சொற்களின் தன்மை அடிப்படையில் இயற்சொல், திரிசொல் என்றும், சொற் களின் வழக்காற்று அடிப்படையில் வடசொல், திசைச்சொல் என்றும் பாகுபாடு செய்தன. பழந்தமிழ் இலக்கண நூல்களின் சொற்பாகுபாட்டுக்கான அடிப்படைகள் தெளிவாக உள்ளன. மிக அண்மைக்காலத்துத் தோன்றிய இலக்கண நூலான முத்து வீரியம் கூடத் தொல்காப்பியர் கூறிய சொற்கள் நான்கு வகை என்ற கூற்றை, முன்னோர் மொழியைப் பொன்னே போற் போற்றும் நெறியில்,

> "அது தான்
> பெயர் வினை இடை உரி எனச்சொல் நான்கே"
>
> (மு. வீ. பெ. 3)

என்ற நூற்பாவின் மூலம் ஏற்றுப் போற்றியுள்ளதைக் காணலாம். ஆனால் அறுவகை இலக்கணம் எழுதிய சுவாமிகளோ

தொல்காப்பியர் நன்னூலார் பாகுபடுத்திய முறை பற்றி எள்ள ளவும் கருதாமல் சொற்களைப் பாகுபாடு செய்வதில் புதுமை படைக்கின்றார். சொற்களை மூன்று வகையாகப் பகுக்கலாம் என்று ஒரு நூற்பாவில் கூறுகிறார் (அறு: 171) சொற்களை ஐந்து வகையாகப் பகுக்கலாம் என்று மற்றொரு நூற்பாவில் கூறு கின்றார் (அறு: 177). ஐந்து வகைப் பாகுபாட்டை மூன்று வகையுள் அடக்கலாம் என்று பிறிதொரு நூற்பாவில் கூறு கின்றார் (அறு: 179). இவற்றைச் சற்று விரிவாகக் காணலாம்.

தமிழை இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என முத்தமிழ் என்று வழங்கும் வழக்கினையும், சொற்பகுப்பையும் இணைத்துக் காண்கிறார் சுவாமிகள். இதன் அடிப்படை யிலேயே சொற்களையும் மூன்று வகையாகப் பகுக்கலாம் என்கிறார். இதனை,

> இயல் இசை நாடகம் என்னும்முத் தமிழ்ச்சொல்
> பொதிய மால்வரைப் பொழில்என இருண்டும்
> உலவா முனிவோர் உடைஎனச் சிவந்தும்
> விழ்புலல் அருவியில் வெளுத்தும் தோன்றும்என்று
> அறிவார் மலர்த்தாள் அணிதலை எமதே (அறு: 171)

என்ற நூற்பா விளக்குகிறது. இங்கு 'இருண்டும்' என்ற சொல்லால் கருநிறச் சொல்லையும், 'சிவந்தும்' என்ற சொல்லால் செந்நிறச் சொல்லையும், 'வெளுத்தும்' என்ற சொல்லால் வெண்மை நிறச்சொல்லையும் குறிக்கிறார். இவ்வாறு சொற் களை கருநிறச் சொல், செந்நிறச் சொல், வெண்ணிறச் சொல் என மூன்று வகையாகப் பகுக்கிறார். இந்நூற்பாவில் மூன்றாகப் பகுத்த சுவாமிகள் சொற்கள் ஐந்து வகைப்படும் என்ற கருத்தில்,

> "நிறத்தின பகுதியை இவ்வாறு நிகழ்த்தல்
> மிகைப்படும். புணர்ச்சி பற்றிச் சொற்களின்
> ஐவகை நிறமும் அறிந்துஓர் புலவன்
> முத்தமிழ் பாடல் முறையே ...... (அறு: 177)"

என்ற நூற்பாவை அமைத்துள்ளார்.

சொற்கள் ஐந்து வகை எனக் கொண்டு அந்த அடிப்படை யிலேயே ஒவ்வொரு வகைக்கும் ஒரு சொல்லை எடுத்துக் காட்டாய்த் தரும் நூற்பாவைப் படைக்கிறார்.

"உலகினர் உணவு இனத்து உயர்ந்த ஒருபொருட்
சோறு எனல் வெண்சொல்; அன்னம் என்கை
பளிங்கு நிறச்சொல்; பதம் எனல் கருஞ்சொல்;
அமுது எனல் செஞ்சொல்; அடிசில் என்கை
பொன்னிறச்சொல் இவண் புகன்று காட்டல்
அம்மையில் புலமை அணையா ராய்இருந்து
இம்மையில் முயல்வார் இகழ்தல் நான்கு உணர்ந்தே"
(அறு: 178)

இந்நூற்பாவில் ஐந்து வகைச் சொற்களுக்கும் பின்வருமாறு எடுத்துக்காட்டுத் தருவதைக் காணமுடிகிறது.

| | | |
|---|---|---|
| சோறு | — | வெண்சொல் |
| அன்னம் | — | பளிங்குச் சொல் |
| பதம் | — | கருநிறச் சொல் |
| அமுது | — | செஞ்சொல் |
| அடிசில் | — | பொன்னிறச் சொல் |

சொற்களை வகைப்பாடு செய்த சுவாமிகள் ஒவ்வொரு வகைச் சொல்லுக்கும் வரையறை (definition) கூறும் முயற்சியாக இரண்டு நூற்பாக்களை எழுதுகின்றார். முதற்கண் வெண்ணிறச் சொல்லுக்கு வரையறை கூறும் வகையில்

'எழுத்து உரு அறியா இயல்பினர் தாமும்
அறியும் மாற்றம் அனைத்தும் வெண்ணிறமே' (அறு : 172)

என்ற நூற்பாவை அமைக்கிறார். எழுத்தறிவற்ற பாமரர்களும் எளிதில் புரிந்துகொள்ளும் சொற்கள் யாவும் வெண்ணிறச் சொற்கள் என்கிறார். இதனை அடுத்த நூற்பாவில் பளிங்கு நிறச் சொல்லுக்கு வரையறை கூறுகிறார்.

"கொல்லா விரதக் குருவாம் குறள்போல்
புந்தியின் அளவில் பொருள்தரும் சொற்கள்
பளிங்கு நிறம்எனப் பகர்வது முறையே" (அறு : 173)

இங்குக் கற்றார்தம் அறிவாற்றலுக்கு ஏற்பப் பொருள் தரும் சொற்கள் பளிங்கு நிறச் சொற்கள் என்கிறார், இதற்குச் சான்றாகத் திருக்குறளைக் கூறலாம் என்பர்.

இவ்வாறு இரண்டு வகைச் சொற்களுக்கு வரையறை கூறிய சுவாமிகள் பின் வரும் மூன்று வகைச் சொற்களுக்கும் வரையறை

ஏதும் கூறாமல் எடுத்துக்காட்டுக்களை மட்டும் கூறிச்செல்லும் வகையில் நூற்பாக்களைப் படைக்கின்றார்.

திருமுருகாற்றுப்படை போன்ற நூல்களில் உள்ளவை கருநிறச் சொற்கள் என்றும் (அறு : 174); அருணகிரிநாதரின் திருப்புகழ், ஔவையாரின் விநாயகர் அகவல் போன்றவை செந்நிறச் சொற்களுக்குச் சான்றுகளாம் (அறு : 175) என்றும்; சைவ நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் அருளிச் செய்தவை பொன்னிறச் சொற்களாம் (அறு : 176) என்றும் எடுத்துக்காட்டுக்களை மட்டும் கூறுகிறார்.

இவ்வாறு ஐந்து நிறங்களைக் கூறிப் பின்னர் இவ்வைந்தும் மூன்று நிறங்களில் அடங்கும் என்பார்.

''பளிங்கு நிறமும் பழுது இல்பொன் நிறமும்
வெண்மையில் செம்மையில் மேவல் பற்றி
முத்தமிழ் ஆம்என மொழிந்தனர் முதியோர்'' (அறு : 179)

இந்நூற்பாவில் பளிங்கு நிறமும் வெள்ளை நிறமும் ஒரு தன்மைத்து என்பார். இவை இரண்டு நிறச் சொற்களுக்கும் முன்னால் தனித்தனியே முறையே – சோறு என்றும், அன்னம் என்றும் எடுத்துக்காட்டுத் தந்தவர் – 'கல்லாதவரும் எளிதில் பொருளுணரும் சொல்', என்றும், 'கற்பவர் அறிவாற்றலுக்கு ஏற்பப் பொருள் தரும் சொல்' என்றும் வகைப்படுத்தி – விளக்கம் தந்தவர் இந்நூற்பாவில் இரண்டும் ஒரே தன்மையின என்று கூறுகின்றார். இது போன்றே பொன்னிறச் சொல், செந்நிறச் சொல் இரண்டும் ஒரு தன்மைத்து என்பார். இவ்விளக்கம் வகைப்பாடு பற்றிய அடிப்படையையே ஐயுறச் செய்கிறது.

''ஒரு தொகுதியைப் பகுதிகளாக வகைப்படுத்தும்போது முழுமையாகச் செய்ய வேண்டும். தொகுதியின் அனைத்துப் பகுதிகளையும் கூற வேண்டும். சிலவற்றைக் கூறிப் பிறவற்றைக் கூறாமல் விடுவது தவறு. பகுதிகள் அனைத்தையும் ஒன்று சேர்த்தால் தொகுதியின் முழுமை கிட்டுமாறு வகைப்படுத்த வேண்டும் வகைப்படுத்தப்பட்ட பிரிநிலைகள் ஒன்றுக்கொன்று முற்றுநீக்கிகளாக அமைதல் வேண்டும். ஒரு பிரிநிலையில் இடம் பெறும் உறுப்பு மற்றொரு பிரிநிலையில் இடம் பெறும் வாய்ப்பிருக்கக் கூடாது. வகைப்பாட்டிற்கு முழுமையும் ஒரே அளவுகோல் பயன்படுத்தப்படவேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட அளவு

சொல்களைப் பயன்படுத்துவதும் வகைப்பாட்டில் தவறு ஏற்பட வழிவகுக்கும்'' (நாராயணன், க., 1987 : 55-56) என்ற வகைப்படுத்தும் நெறிமுறையிலிருந்து பிறழ்வதாகச் சுவாமிகளின் சொற்பாகுபாடு அமைந்துள்ளது.

இந்நூற்பாக்களுக்கு உரை எழுதியவரோ, இப்பாகுபாடு ''சற்றேறக் குறைய வடமொழியார் கூறும் நாளிகேரபாகம், கதலிபாகம், திராட்சாபாகம் என்பனவற்றை ஒத்தது'' என்று எழுதிச் செல்கிறார். வடமொழியில் தண்டி தம் காவிய தர்சனத்தில் காவியங்கள் படிப்போருக்குத் துய்ப்பதற்கு எவ்வாறு எளிமையாகவும், அருமையாகவும் உள்ளன என்பதை விளக்கு முகத்தானே இவ்விளக்கத்தைக் கூறிச் செல்கிறார். இதனைக் காவியங்களின் ஒட்டுமொத்தமான பொருட் புலப்பாட்டுத் தன்மையை விளக்குவதாகவே கொள்ள வேண்டுமேயன்றிச் சொற்பாகுபாடு எனக் கருதல் பொருத்தமன்று. எங்ஙனமாயினும் சுவாமிகளின் இச்சொற்பாகுபாடு மறுபரிசீலனைக்குரியது. ஏனெனில் ஓர் இலக்கிய ஆசிரியரின் படைப்பில் உள்ள சொற்கள் யாவும் ஒரே தன்மைத்தாயிருக்கவியலாது. சுவாமிகள் சிறந்த படைப்பாளி, அதிலும் ஆன்மீகத்துறையில் மிகச்சிறந்த நூல் களைப் படைத்தளித்திருப்பவர். அவர் அப்படைப்பிலக்கியப் பார்வையுடன் இலக்கணம் எழுதும் போது இத்தகைய தற்சார்புடைய கருத்துக்கள் இலக்கண நூலின்கண் இடம் பெற்று விடுகின்றன என்று கருத இடம் உள்ளது.

பெயர்ச்சொற்களை வகைப்படுத்துமிடத்து பெயர்ச் சொற்கள் இடுகுறி, காரணம் என இருவகைப்படும் என்று பாகுபாடு செய்வார். இது நன்னூலார் கருத்தோடு ஒப்புமை யுடையதே. ஆனால் இதற்கு விளக்கம் தருமிடத்து 'வேல் எனல் இடுகுறி என்றும், வேலன் எனல் காரணம்' என்றும் கூறுவார். இவர் கருத்து இடுகுறி என்ற ஒன்று இல்லை என்பதாம். இதனை ''அறிந்த காரணம் மறைந்து மற்று அவற்றை எண்ணிற் பெரியாரிடை வினாவு என்றற்கு ஒல்கிய குரவன் ஒருவன் முன்நாள் இடுகுறி எனும் பெயர் இகத்து அமைத்தனன்; அதைச் சிலர் அலாப் பலரும் செப்ப ஒப்பினரே'' (ஏழாம்: 154, 155) என்ற கருத்தால் உணரலாம். இதனால்தான் முதலில் வேல் என்பது இடுகுறி என்று அறுவகை இலக்கணத்தில் (அறு: 193) கூறியவர், பின்னர் ''வெல்லும் தன்மையில் வேல்

என விளம்பினர்'' (ஏழாம்: 195) என்று வேல் என்பதைக் காரணப் பெயர் என்பார். இதுபோன்ற இடங்களில் எல்லாம் சுவாமிகளின் பாகுபாடு சற்று நெகிழ்ச்சியுடையதாகவே காணப் படுகின்றது.

வினைச் சொல்லுக்கு இலக்கணம் கூறும் சுவாமிகள் உண்டல், உறங்கல், போதல், வரல் முதலியவை பொதுவினை என்பார். இப்பொதுவினை என்ற கலைச்சொல்லும் சற்றுப் புதுமையானதே. மேலும் இவ்-அல் விகுதி பெற்ற வடிவங்களைத் தொழிற்பெயர் என்பது மரபு வழி வந்த கலைச்சொல்லாகும். பொதுவினை என்ற கலைச்சொல் விரவு வினை என்று பொருள் படுவது போல் உள்ளது. இதுவும் மேலும் சிந்தித்தற் குரியது.

வினையைத் தன்வினை, பிறவினை என்று பழம் இலக்கண ஆசிரியர்கள் கலைச்சொற்களால் பகுத்தாரில்லை. ஏவல் என்ற சொல் நன்னூலில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு வாக்கியத்தின் கண் உள்ள வினையைச் செய்வது அவ்வாக்கியத்தின் எழுவாயாய் இருக்குமாயின் அது தன்வினையாகும். வாக்கியத்தில் எழுவாய் அவ்வினையைச் செய்யாது வேறுயாரையாவது செய்யத்தூண்டு மாயின் அது பிறவினையாகும்.

(எடு) அவன் படித்தான் (தன்வினை)
அவன் படிப்பித்தான் (பிறவினை)

ஆனால் சுவாமிகள் தம் அறுவகை இலக்கணத்தில்,

"வந்தேன் இருந்தேன் என்பவை முதலின
தன்வினை ஆம்எனச் சாற்றுதல் வழக்கே'' (அறு: 207)

என்று தன்வினைகள் பற்றிக் கூறிவிட்டு, அடுத்த நூற்பாவில்,

"வைதான் என்பதும், சிரித்தான் என்றலும்
ஓடியது என்கையும் அன்னவை பலவும்
முப்பாற் பிறவினை ஆம்எனல் முறையே'' (அறு: 208)

என்று பிறவினைகள் பற்றிக் கூறுகிறார். இங்கு வைதான், சிரித்தான், ஓடியது என்பவை படர்க்கையில் அமைந்த தன்வினை களே. பிறவினையல்ல. இப்பிரிவில் சுவாமிகள் தன்மை வினை, படர்க்கை வினை என்பவற்றையே தன்வினை, பிறவினை என்று மயங்குகிறாரோ என்று கருத இடம் உள்ளது. இவ்வினைப் பாகுபாடும் மறுபரிசீலனைக்குரியது ஆகும். பிறவினை என்பது வினையடியுடன் வி/பி என்ற விகுதி சேர்ந்தோ, அல்லது

வினையடியுடன் செய், பண்ணு என்ற துணை வினைகள் சேர்ந்தோ அமைவதாகும். இதனைச் சுவாமிகள் பிழைபடப் பாகுபாடு செய்துள்ளாரோ என்றே தோன்றுகின்றது.

சுவாமிகள், வாழ்வின் பெரும்பகுதியை ஆன்மீகத்துறையில் கழித்தவர். ஆகையால் இவர் வினைச் சொல்லைப் பாகுபாடு செய்யும் போது கூட சமய வாதிகளின் வினைக்கோட்பாடு நினைவுக்கு வருவதனைப் பின்வரும் அறுவகை இலக்கண நூற்பா விளக்கும்.

''ஈகை ஆதிய நல்வினை; ஏற்கை
ஆகிய தீவினை அறிஞராம் அவற்கே.'' (அறு: 213)

இங்கு வினையைத் தீவினை என்றும், நல்வினை என்றும் பாகுபாடு செய்வதைக் காணமுடிகிறது. இஃது ஓர் ஆன்மீக வாதியின் வகைப்பாடு ஆகும். இது மொழியறிஞரின் வகைப்பாடு ஆகாது.

இதுகாறும் கூறியவற்றால் சுவாமிகளின் சொற்பாகுபாடு மேற்போக்கானது என்பதும், தற்சார்புடையது என்பதும், மறுபரிசீலனைக்குரியது என்பதும் தெளிவாகிறது.

# சுவாமிகளின் பாடல்களில் சமூகத் தாக்கம்

## சேயோன்

வையந் தழைக்க வளமான பாடல்களைப் பாடியுள்ளார் மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். பிள்ளைத் தமிழ், கலம்பகம், அலங்காரம், அந்தாதி, அனுபூதி, சதகம், சாத்திரம், சித்திர கவி, இலக்கணம், வரலாறு, விஜயம், நாடகம், இசை, வாகடம், மஞ்சரி, பஞ்சரத்தினம், சமூகம், தனிப்பாடல் என்று பல்வேறு வகையான பாடல்களைப் பாடியுள்ளார் அருள்மிகு வண்ணச்சரபம் சுவாமிகள். எட்டு வயதிலேயே பாடல்களைப் பாடி. எண்ணிறந்தோர் உள்ளங்களைத் தொட்டுக் கவி பாடுவதில் பொன்விழாக் கண்ட பேறு பெற்றவர் வண்ணச் சரபம் சுவாமிகள். அவர்தம் பாடல் களில் இழைந்தோடியிருக்கும் சமூகத் தாக்கம் குறித்து விரித்துரைப்பதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

**சமூகத் தாக்கம்**

வாழ்வுக்கும், வளர்ச்சிக்கும் இணைந்து செயலாற்றும் தொடர்புடைய உறுப்புக்களைக் கொண்ட உன்னதமான அமைப்பே சமூகம் என்கிறார் சமூகவியல் அறிஞர் ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர். ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள் உள்ள மக்கள் தங்களுக்குள் சமூக உறவுகளை வளர்த்து, குறிப்பிட்ட பண்பாடு களையும், மதிப்பீடுகளையும் கொண்டு விளங்கும் அமைப்பே சமூகம் என்கிறார் சமூகவியல் அறிஞர் ஜேம்ஸ் பி. மிக்கி. இவ்வாறு பல்வேறு சமூகவியல் அறிஞர்கள் சமூகம் பற்றிக் கூறுவதை நோக்கும்போது, சமூக உறவுகள் நிலை நிறுத்தப் பட்டு, முறைப்படுத்தப்பட்டு அவற்றின் விளைவாக மனிதர் களிடையே ஒரு நிலையான அமைப்பு-எல்லோரும் கூடி வாழ்கிற அமைப்பு ஏற்படுகிறது. இந்த நிலையான அமைப்பையே சமூகம் என வரையறுக்கலாம்.

தாக்கம் என்னும் சொல் பொருள் பொதிந்தது. மாற்றம், செல்வாக்கு ஆகிய பொருள்களைக் குறிக்கும். எந்த ஒரு நிகழ்வு

மனத்தில் ஒரு வகைப் பாதிப்பினை ஏற்படுத்தி மாற்றத்திற்கு வழிவகுக்கிறதோ அதன் விளைவே தாக்கம் எனக் குறிக்கப் படுகிறது. மாற்றத்திற்குக் காரணியாகப் பயன்படுவது தாக்கம். தாக்கம், விளைவு, செல்வாக்கு ஆகிய மூன்று சொற்களும் ஒன்றோடொன்று தொடர்புடையன. இருந்தாலும் அதில் தாக்கம் என்னும் சொல் திட்பநுட்பம் செறிந்தது. விளைவும் செல்வாக்கும் தோன்றுவதற்கு வித்தாக விளங்குவது.

வண்ணச்சரபம் சுவாமிகள் 1839-ஆம் ஆண்டிலிருந்து 1898-ஆம் ஆண்டு வரை வாழ்ந்தவர். குறிப்பாக இந்திய நாடு ஆங்கிலேயர் ஆதிக்கத்தினால் அடிமைப்பட்டு அல்லலுற்றுக் கொண்டிருந்தபோது வாழ்ந்தவர். மூடப் பழக்கங்கள் மிகுதியாக மக்களிடையே பரவியிருந்த சூழ்நிலையில் தம் வாழ்நாளைக் கழித்தவர். பசுக்கொலை, பெண்ணடிமை, சாதிப்பூசல் முதலான சமூகக் கொடுமைகள் வேரூன்றிய காலத்தில் வாழ்ந்த ஆன்மீக நெறி போற்றிய அண்ணல் ஆங்கிலேயரை எதிர்த்துப் போர்க் குரல் எழுப்பி அதற்கென ஆங்கிலியர் அந்தாதியே பாடியுள்ளார். பல்லாயிரக்கணக்கான பாடல்களைப் பாடி இன்றயுணர்வை ஊட்டினாலும் அவர் வாழ்ந்த காலத்தில் நிலவிய சமூகக் கொடுமைகளைச் சுட்டிக் காட்டி அவற்றைக் களைய வேண்டும் என்பதைப் பெரிதும் வலியுறுத்தியுள்ளார்.

### சமூகத் தாக்க வகைபாடுகள்

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் வழங்கியுள்ள பல்வேறு வகையான படைப்புக்களைத் தொகுத்தும், பகுத்தும், வகுத்தும் பகுப்பாய்வு முறைப்படி ஆய்ந்தறிகையில், அவர்தம் படைப்புக் களில் பரவிக் கிடக்கும் தாக்கத்தைப் பின்வருமாறு வகைப் படுத்தலாம்.

### அடிமைத்தனம் அகற்றல்

இந்திய நாட்டினை அன்னியரெனும் ஆங்கிலேயர் ஆட்சி செய்வதை அறவே வெறுத்தார் சுவாமிகள். வாணிகம் செய்வ தற்காக வந்த ஆங்கிலேயர் இந்தியர்களுக்கிடையேயிருந்த பலவீனங்களைத் தமது பலமாகப் பயன்படுத்திக் கொண்டு இந்திய நாட்டை ஆண்டு வந்ததைக் கண்டு மன வேதனை அடைந்தார். வணிகத்தின் பெயரால் இந்தியப் பொருளாதாரம்

சுரண்டப்பட்டதை எதிர்த்தார். ஆங்கிலேயர்கள் தமது மொழியை மக்களிடையே பரவலாக்கி மொழிவழி அடிமைப்படுத்தியதைக் கண்டித்தார். ஆங்கிலேயர் தாம் தழுவிய கிறித்தவ சமயத்தை இந்தியர்களிடையே பரப்பி அவர்களின் கலை, பண்பாடு, சமயம் முதலானவற்றை அழிக்கும் மறைமுக நடவடிக்கைகளைக் கண்டு உள்ளம் பதைபதைத்தார். அவற்றின் வெளிப்பாடாய் உருவானதுதான் ஆங்கிலியர் அந்தாதி.

வண்ணச்சரபம் சுவாமிகள் காலத்தில் வாழ்ந்தவர்கள்தான் வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகளும், பாம்பன் சுவாமி களும். முருகனைப் பாடிய மூவர் என்று மெய்யன்பர்களால் போற்றப்படும் இந்த மூன்று அருளாளர்களில் வண்ணச்சரபம் சுவாமிகள் ஒருவர்தான் வெளிப்படையாக அன்னியராட்சிக்கு எதிராகப் போர் முரசொலித்தார். பெரும்பாலும் ஆன்மீகம் பேசுவோர் அரசியல் பற்றிக் கவலைப் படுவதில்லை. இராமன் ஆண்டாலென்ன இராவணன் ஆண்டாலென்ன என்றிருப்பர். அதற்கு மாறாக சுவாமிகள் அன்னியராட்சியை எதிர்த்துப் போர்க்குரல் கொடுக்கும் வகையில் ஆங்கிலியர் அந்தாதியைப் பாடியுள்ளார். அந்தாதி இலக்கணப்படி காப்பு, பயன் நீங்கலாக நூறு பாடல்களைப் பாடியுள்ளார் சுவாமிகள்.

ஆங்கிலேயர்கள் தெய்வத்தை வணங்குவோரை நிந்திக் கிறார்கள்; திருட்டுத் தொழிலில் கைவந்தவர்களாய் உள்ளார் கள்; புலால் உண்ணுகின்றார்கள்-குறிப்பாக இளம் பசுக்களைக் கொன்று தின்கிறார்கள்; அகிலம் முழுவதும் தம் குடைக்கீழ் தான் உள்ளது என்னும் இறுமாப்புடன் அலைகிறார்கள்; தமை எதிர்த்துப் போரிட வல்லவர் எவருமில்லை என்ற ஆணவத் தோடு பல கோட்டை, கொத்தளங்களை அழிக்கிறார்கள்; பொய்யுரைக்கின்றார்கள்; தீய குணங்களின் பிறப்பிடமாய் விளங்குகிறார்கள்; பாமரர்களை அடக்கி ஆள்கிறார்கள்; அறநெறிச் சான்றோர்களை மனம் நோகும் வகையில் கொடுமைப் படுத்துகிறார்கள்; இன்னிசைச் செந்தமிழ்ப் பாவாணர்களை பதைபதைக்க வாட்டுகிறார்கள்; மக்களெல்லாம் கண்ணீர் வடித்துக் கதறும் வண்ணம் கொடுங்கோலாட்சி புரிகிறார்கள். இப்படி நூறு பாடல்களில் ஆங்கிலேயர்களின் ஆதிக்க வெறி களையும், அடக்கு முறைகளையும், தீய பழக்க வழக்கங்களை யும் படம்பிடித்துக் காட்டியுள்ளார் வண்ணச்சரபம் சுவாமிகள்.

**பெண்ணுரிமை போற்றல்**

ஆறறிவு படைத்த மானுடப் பிறவியில் ஆண், பெண் இருவரும் சமம். இதற்கு மாறாக ஆண் மக்கள் பெண்களை அடக்கியாள எண்ணுகின்றனர். ஆண் தனக்கு ஏற்ற பெண்ணை மனைவியாகத் தேர்ந்தெடுத்துகொள்ள எத்தகைய உரிமை உள்ளதோ அதே உரிமை பெண்களுக்கும் தம் கணவனைத் தேர்ந்தெடுக்கும்போது வழங்க வேண்டும் என்ற உயரிய நோக்கைக் கொண்டவர் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். ஆனால் அவர் வாழ்ந்த காலத்தில் இந்திய நாட்டின் நிலை வேறு விதமாக இருந்தது.

நாட்டினை ஆங்கிலேயர் ஆட்சி செய்தார்கள். இல்லறம் என்னும் நல்லறம் நடைபெறும் வீட்டினையோ ஆண்கள் ஆட்சி செய்தார்கள். பெண்கள் பெரிதும் கொடுமைப்படுத்தப்பட்டனர். பெண்கள் போகப் பொருளாக -- பிள்ளை பெறும் இயந்திரமாகக் கருதப்பட்டனர். பெண்கள் சமையலறையில் உணவு தயாரித்து அனைவருக்கும் பரிமாற வேண்டும். வீட்டினைச் சுத்தமாக வைக்க வேண்டும். வீட்டினுள் அடைந்து அடைகாக்கும் கோழி போல் வாழ வேண்டும். ஆண்களை எதிர்த்துப் பேசக்கூடாது. குனிந்த தலை நிமிரக் கூடாது. கணவன் எவ்வழி அவ்வழி மனைவியும் நடக்க வேண்டும். கல்லானாலும் கணவன்; புல்லானாலும் புருஷன் எனும் பழமொழியைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆண்கள் மிதியடி அணிந்து செல்லும்போது உடன் போகும் பெண்கள் மிதியடி அணிந்து செல்லக்கூடாது. அது ஆண்களுக்கு அவமரியாதை ஆகும். அவர்கள் முன்னிலையில் உட்காரக் கூடாது. எழுந்து நிற்க வேண்டும். இல்லையாயின் ஏதேனும் வேலை செய்து கொண்டிருக்க வேண்டும். அதட்டிக் கேட்கும் கணவனிடம் அமைதியாக ஓரிரு வார்த்தைகளே பேச வேண்டும். கணவன் வாங்கி வரும் ஆடை அணிகலன்களையே அணிய வேண்டும். இவர்களாகச் சென்று தேவையானவற்றைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. படிக்கக் கூடாது. பம்பரமாய்ச் சுழன்று வீட்டு வேலைகளையே செய்ய வேண்டும். அடுப்பூதும் பெண் களுக்குப் படிப்பெதற்கு? என்று வேதாந்தம் பேசினர். இப்படி அன்றைய கால ஆண் ஆதிக்கச் சமுதாயம் பெண்களைப் படுத்திய கொடுமைகளை ஏட்டில் எழுத இயலாது; எடுத்துச் சொல்ல நூல்கள் போதா!

இத்தகைய சூழலில் வாழ்ந்த சுவாமிகள் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைக் கண்டிப்பதோடு அவர்தம் உரிமை காக்கப்பட வேண்டும் என்பதை அவரது பாடல்களில் பெரிதும் வலியுறுத்தியுள்ளார். பெண்கள் தமக்குப் பிடிக்காத ஒருவரை மணாளனாக ஏற்கும்படிப் பெற்றோரும் மற்றோரும் வற்புறுத்தினாலும் அதனைத் துணிந்து மறுக்கும் உரிமை பெண்ணுக்கு உண்டு என்பதைப் பதினெட்டாம் நூற்றாண் டிலேயே முழங்கியவர் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்.

**விதவை மறுமணம் வேண்டல்**

கற்பு ஒழுக்கம் பெண்களுக்கு மட்டும்தான். கணவனை இழந்த பெண்ணிற்கு விதவை என்ற பட்டத்தைச் சூட்டி வீட்டிற்குள் அடைத்தனர். அவள் வெள்ளாடை உடுத்த வேண்டும் பூவோ பொட்டோ அணியக் கூடாது. நகைகள் அவள் கழுத்தை அலங்கரிக்கக் கூடாது. கையில் வளையல்களோ மோதிரங்களோ அணியக் கூடாது. காலில் மெட்டி போடக் கூடாது கணவன் இருந்த போது அணிந்திருந்த அனைத்து அணிகலன்களையும் அவன் இறந்த உடன் கழட்டிவிட வேண்டும். அவனை நினைந்து நெக்குருக வேண்டும். குறைந்தது ஓராண்டேனும் வீட்டை விட்டு வெளியே வரக் கூடாது. குறிப்பாக எந்த ஆண்கள் கண்களிலும் படக்கூடா'து. இத்தனைச் சட்டங்களையும் விதவைகளுக்குப் பாதுகாப்புக்காகப் போட்ட தாம் ஆணாதிக்கச் சமுதாயம்!

என்றாலும் அத்தனைக் கட்டுப்பாடுகளையும் அன்றைய பெண் சமூகமும் ஏற்றது அதன்படி நடக்காத விதவைப் பெண்களை இருபாலாரும் தூற்றினர். மீறி நடந்தவர்களைக் குடும்பத்தை விட்டே விரட்டினர்; சமூகக் கூட்டுக்குள் கலந்து கொள்ளா வண்ணம் விலக்கி வைத்தனர். மேலும் விதவைகள் மங்கல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக் கூடாது. அவர்கள் வயது மிகுந்தவர்கள் ஆனாலும் பிறரை வாழ்த்தும் தகுதியற்ற வர்கள். எந்த நல்ல சடங்குகள் நடந்தாலும் அவர்கள் முன்னிற்கக் கூடாது. அவர்களுக்கு அமங்கலி என்னும் மற்று மோர் பட்டத்தையும் கொடுத்து மங்கல நிகழ்ச்சிகளில் பங்கேற்கத் தடை விதித்தனர். குறிப்பாகச் சுமங்கலிப் பிரார்த் தனையில் கலந்து கொள்ளக் கூடாது. இப்படி இன்னும்

எத்தனை எத்தனையோ சொல்லொணாத் துயரங்கள் விதவை களுக்கு!

மனைவியை இழந்த கணவன் உடனே மறுமணம் செய்து கொள்ளலாம். அதனை ஆணாதிக்கச் சமுதாயம் ஏற்றது. அதைப் பெண் சமுதாயமும் அங்கீகரித்தது. ஆனால் கணவனை இழந்த பெண்கள் மட்டும் மறுமணம் செய்யக் கூடாது.

இயற்கைத் தோட்டத்தில் பெண் பூக்கள் பெருமைப் படுத்தப்படவில்லை. ஆண், பெண் கூட்டுறவில் சந்ததிகள் தொடர்ந்தாலும் பெண் என்பவள் பிள்ளையைப் பெற்றுத் தருகிற இயந்திரமாகவே கருதப்பட்டாள். இயற்கை கூட அவளுக்கு எதிராகவே இருக்கிறது. ஆணும் பெண்ணும் சேருகிற போது ஆணில் அந்தச் சேர்க்கைக்கான அடையாளங்களை விதைக்காத இயற்கை, பெண்ணை மட்டும் பிடித்துக் கொடுத்து விடுகிறது.

இத்தகைய பெண்ணடிமை வழக்கம் நம் தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் வந்தது என்பதை வரலாறு வலியுறுத்தும். சங்க காலத்தில் ஆண்கள் பெண்களோடு சரிநிகர் சமானமாக வாழ்ந்தனர். இடைக் காலத்தில் பக்தி இலக்கியங்களைப் பாடுவதிலும் ஆணுக்குப் பெண் நிகராக இருந்துள்ளனர் என்பது கண்கூடு. இப்படிக் காலங்காலமாக ஆணுக்குப் பெண் சரிநிகராக வாழ்ந்த இந்தத் திருநாட்டில் ஆணாதிக்கச் சமுதாயம் மிகுதியும் தலையெடுத்துப் பெண்களை அடிமைப்படுத்தத் தொடங்கியது பதினெட்டாம் நூற்றாண்டில்தான். பின்னர் அது படிப்படியாக வளர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிகுதியும் தலைவிரித்தாடியது. இந்தக் கால கட்டத்தில் வண்ணச்சரபம் சுவாமிகள் வாழ்ந்தவராதலால் விதவைப் பெண் களின் வேதனையைக் கண்டு மனம் நைந்தார்; சமுதாயம் அவர்களை அடையாளங் காட்டி வெறுத்தொதுக்குவதைப் பார்த்து மனம் வெதும்பினார். அதன் வெளிப்பாடாய் அவர் வேண்டியது விதவை மறுமணம். விதவைகள் மறுமணம் செய்து கொள்வதில் எந்தத் தவறும் இல்லை என்பதை உறுதி படக் கூறினார்.

**சமயப்பொறை நாடல்**

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் சைவ வைணவச் சமயங்களின் சின்னமாய் விளங்கினார். அவற்றின் அருமை பெருமைகளை விளக்கிப் பல்லாயிரக்கணக்கான பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றில் குறிப்பிடத்தக்கவை திருவரங்கத் திருவாயிரம், திருவரங்கன் வெண்பா அந்தாதி, திருமால் அந்தாதி, திருமகள் அந்தாதி, சடகோபர் சதகத்தந்தாதி, சிரங்க நாயகமாலை முதலானவை. சுவாமிகள் எப்பொழுதும் முழு நீறு பூசிய மேனியில் வலது புயத்தில் தென்கலை, இடது புயத்தில் வடகலைத் திருமண் அணிந்து, அக்க மாலை, துளசி மாலை, தாமரை மாலை அணிந்து, கையில் தண்டாயுதத்தையும் ஏந்தியிருப்பார். எந்தப் பெயரும் வடிவும் கடவுள் ஒன்றிற்கே உரியது. ஆறு வகைச் சமயமும் ஒரே தன்மையது என்ற கொள்கையினை உறுதியாகக் கொண்டிருந்தார். சௌரம்-சூரியன், சைவம்-சிவன், சாத்தேயம்-சக்தி, திருமால், கணபதி, கௌமாரம் – முருகன் ஆகிய ஆறு சமயக் கடவுளையும் சமமாக எண்ணித் துதி செய்தார். அதற்கேற்ப அறு சமயக் கோலமும் தமது மேனியில் அணிவதானார்.

நெல்லையம்பதியிலிருந்து வடதிசை நோக்கிப் புறப்பட்டுப் பல தலங்கள் வணங்கி வருகையில், திருஅயிந்தபுரம் என்னும் திருமால் தலத்தை அடைந்தார். ஆங்குள்ள வைணவர்கள், எங்கள் வடகலையை இடது தோளில் ஏன் அணிந்தீர்கள்? என்று கேட்டனர். அதற்கு சுவாமிகள் ஒரு நாராயணனது லீலா வடிவமே பத்து அவதாரங்கள் என்பதை ஏற்றுக்கொள்கின்றீர்கள். அதேபோல ஒரே பரம் பொருளின் லீலா வடிவமே ஆறு சமயங்கள் என்றறிந்தேன். ஆதலால் திருநீறு, திருமண் இரண்டையும் சமமாகத் தரித்தேன். அன்றியும், நாம் கிழக்கு முகம் நோக்கியே எதுவும் செய்வது மரபு. அப்போது வலக்கை தென் புறமாவதால் தென்கலையை வலது தோளில் இட்டேன். இடது தோளில் வடகலையை வலது கையால் தரித்தேன். நெற்றியில் ஏதோ ஒன்றைத்தான் அணிய வேண்டும். உலக மெல்லாம் உண்டுமிழ்ந்த நாராயணன் இந்த பேத வாதத்திற்கு அமைய மாட்டான் என்று விரித்துரைத்தார் சுவாமிகள். வினாத் தொடுத்த வைணவர்களும் அகம்மிக மகிழ்ந்து பிரசாதம் வழங்கினர். சுவாமிகளும் தேவனாதப் பெருமாளுக்குப் பதிகம் பாடினார்.

**பொதுநலம் பேணல்**

ஆன்மீகத்தில் ஈடுபட்டுள்ள அனைத்து அருளாளர்களுமே பொதுவாகத் தன்னலம் கருதாது பொது நலம் பேணும் உள்ளம் கொண்டவர்களாய் இருப்பர்.

நல்லாற்றான் நாடி அருள் ஆள்க பல்லாற்றான்
தேரினும் அஃதே துணை. (குறள்: 242)

என்ற தெய்வப் புலவர் திருவள்ளுவர் வாக்கிற்கு ஏற்ப அருள்மிகு தண்டபாணி சுவாமிகளும் தன்னலம் கருதாது பிறர்க்கு உதவி செய்யும் பெற்றியாளராகப் பொது நலம் பேணும் அருந் தொண்டராக விளங்கியுள்ளார். அவர் மேற்கொண்ட கொள்கைகள் அனைத்தும் அருளாளர்கள் அனைவரும் மறவாது கடைப்பிடிக்கத் தக்கன.

வேதம் சொல்லினும் விரிஞ்சன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க்கு உரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடாது அன்றே. (சத்திய சூத்திரம்)

என்னும் உறுதியும், தன்னை அடைந்தோர்களின் குறை தவிர்த்தலே தான் முத்தி அடைவதினும் சிறந்தது என்னும் கருணையும், கவனக் குளிகையிட்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும் சித்தர்களாயினும் சீவகருணை இல்லாமல் தன்னலம் கருதுபவர்களாயின், அவர்களும் கழுகு, காகம் போல்வதென்றும், குகையில் அடைந்து கிடக்கும் சித்தர்களானால், எலி, பெருச்சாளி போல்பவரென்றும் கூறி அவர்கள் அருள் வலிமையுற்றிருந்தும் பயனற்றமை கருதி மனம் வருந்துவர். தன்னை நம்பிய தொண்டர்கள், தான் அருட்செயல் பெற்ற காலத்தில் எந்த உலகத்தில் எந்த உடலோடு இருந்தாலும் அழைத்து முன்னைய உணர்வினை நல்கி, காக்க வேண்டுமென்ற தீவிர குணமுடையவர். பசுக்கொலை, சிசுக்கொலை முதலிய தீங்குகள், தெய்வத்தின் பெயரால் நடைபெறும் கொலை, புலைகள், உலகத்தில் அறவே நீங்கும்படித் திருவருட் சித்தியால் இயற்றும் குமாரத் தன்மை யாகிய சொரூப சித்தியைப் பெறாமல் தான் மட்டும் இன்புறும் பேரின்ப முத்தி மரணத்தொடு ஒக்கும் என்பர்.

சித்தி ஒன்றேனும் தெரியப் புரிந்திடான்
முத்தியும் சாவேயென் றுந்திபற. (சதகவுந்தி)

இப்படி அருள்மிகு தண்டபாணி சுவாமிகளின் வரலாறு வரைந்துரைப்பதை நுணுகிப் பார்க்கும்போது சுவாமிகளின் பொது நலம் பேணும் உறுதிப்பாடு தெற்றென விளங்கும்.

சுவாமிகள் எழுதிய முசுகுந்த நாடகம் கந்தபுராணம், கந்த விரதப் படலத்தைத் தழுவி அமைந்தது. புராணத்தை நாடகக் கீர்த்தனைப் பாங்கில் தந்த சுவாமிகள், அதில் எங்கெங் கெல்லாம் பொது நலம் பற்றிப் பேச முடியுமோ அங்கெங் கெல்லாம் தவறாது பேசியுள்ளார். நாட்டில் பாவச் செயல்கள் அறவே ஒழிய வேண்டும்; அறம் தழைக்க வேண்டும்; ஆளுபவர்கள் ஆணவம் மிகக் கொண்டு தம் விருப்பப்படி ஆட்சி புரியாமல் மக்கள் நலனுக்காகப் பாடுபட வேண்டும்; நல்லன்பு மிக்க சான்றோர்களை வன்முறையாளர்கள் அடக்குவதற்கு இடம் கொடுக்கக் கூடாது; அறிவும் அனுபவமும் மிக்க பெரியோர்களை அற்பக் குணம் கொண்ட சிறியவர்கள் எள்ளி நகையாடாத வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். (கீர்த்தனை. 13)

ஆலயங்கள், அருந்தொண்டாற்றும் மடங்கள், ஏழைகளுக்கு உணவளித்து உறைவிடமும் கொடுத்துக் காக்கும் சத்திரங்கள் முதலானவற்றைச் சிறப்பாக நடத்த வேண்டும்; உயர்ந்தோர்கள், கற்றவர்கள், மற்றவர்கள் முதலானோரின் துன்பங்களைப் போக்கி, அவர்தம் வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் உறுதுணையாய் இருக்க வேண்டும்; காலத்தின் மேன்மை அறிந்து எந்தச் செயலை யும் உடனுக்குடன் செய்ய வேண்டும்; அதற்கு ஆகும் பொருளா தார நிலையை உயர்த்த வேண்டும்; இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட நாட்டினைப் பகைவர்கள் கைப்பற்றாத வகையில் ஆயுதங்களைப் பெருக்க வேண்டும்; பாவச் செயல்களை வேரோடு வீழ்த்திவிட்டு, அறநெறி தழைத்தோங்க அயராது பாடுபட வேண்டும். இத்தனைச் செயல்களையும் சிறப்பாகச் செய்து நிலமகள் மனம் மகிழும்படி அரசாண்டான் முசுகுந்த மன்னன் என்கிறார் சுவாமிகள்.

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் இலக்கணம், அலங்காரம், சாத்திரம், பிள்ளைத் தமிழ், கலம்பகம், அந்தாதி, சதகம், நாடகம், இசை, சமூகம் முதலானை இருபத்தைந்து வகைகளில் தமது படைப்புக்களை வழங்கியுள்ளார். அவற்றில்

பாடல்களே எண்ணிக்கையிலும், எடுத்துரைக்கும் முறையிலும், சுவாமிகளின் உள்ளக் கிடக்கையை தெள்ளத் தெளிவாக விளக்கி உரைக்கும் வகையிலும் சிறந்து விளங்கு கின்றன. வண்ணப் பாக்களில் தம் எண்ணத்தை எடுத்துரைப் பதில் வல்லவரான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ள பல்லாயிரக்கணக்கான பாடல்களில் மிகுதியும் பளிச்சிடுவன பக்திச் சுவை, சமூக விழிப்புணர்வு, நாட்டுப் பற்று, கொல்லாமை நெறி, சமயப்பொறை, சமுதாயத் தொண்டு முதலானவை. அவரது காலத்தில் இந்திய நாட்டை அடிமைப் படுத்திக் கொடுமைகள் பல புரிந்த ஆங்கிலேயரின் அடக்கு முறையையும், ஏகாதி பத்தியத்தையும், புலால் உண்ணும் பழக்கத்தையும் வெளிப்படையாகக் கண்டித்தார். எனவே அருளாளர்களிலேயே சமூகச் சீர்திருத்தச் சிற்பியாக ஒளிர்ந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பாடல்களில் சமூகத் தாக்கம் மிகுதியாக உள்ளது எனில் மிகையன்றே!

# புலவர் புராணம் — ஒரு கண்ணோட்டம்

## தவத்திரு சொக்கலிங்க சுவாமிகள்

"யாவர்எவ் வண்ணம் சொல்லும்
எவற்றிலும் இசைந்து நின்று
மூவல்அற் றொளிரும் தொல்சீர்
முதற்பரம் பொருளை வாழ்த்தி
காவலர் வெகுண்டு போற்றும்
கவித்தமிழ்ப் புலவர் காதை
ஆவல்கொண் டுரைக்க லுற்றேன்
அதுவும்என் செயற்பாற் றன்றே"!

எனத் தொடங்கும் புலவர் புராணத்தினை, நமது வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரிய, இற்றைய நூற்றாண்டு விழா நாயகர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடியருளி யுள்ளார்கள். இந்நூலினை, யாம் தஞ்சை, சரசுவதி மகாலில் தமிழ்த் துறையில் பணியாற்றிய (1962) போது கண்டவுடன் பூரித்துப் போனோம்.

அறுபத்து மூன்று நாயன்மார்கட்குப் புராணம் பாடினார் சேக்கிழார் பெருந்தகையார். அம்மை, அப்பன், அறுமுகவன், அரி முதலான தெய்வங்களின் திருவருள் பெற்ற புலவர்கட்குப் புராணம் பாடியுள்ளார் நம் சுவாமிகள் என்று வியந்து போனோம்.

மேலோட்டமாகப் பார்க்கும்போது, சமயப் பூசல், மதக்காட்பு, முதலான உள்ள இக்காலத்தில், சாதி மத பேத மின்றிச் சமரசப் பொது-நோக்குடன், சைவ நாயன்மார்கள், வைணவ ஆழ்வார்கள், துலுக்கப் புலவர்கள் முதலானோரைக் குறித்துப் பாடப்பட்டுள்ளது 'புலவர் புராணம்'. திருவருட் சித்தி பெற்ற, கல்வியுற்றோர்களைத் 'தெய்வப் புலவர்கள்' என்றும், எண்ணியாங்கு பாடுபவர்களைத் 'தவப் புலவர்கள்' என்றும், புத்தி மலிந்தெக்கவியும் பாடுவாரைப் 'புலவர்' என்றும்

பாடியுள்ளார். எழுபது சருக்கங்களில் தெய்வப் புலவர்களையும் 71-வது சருக்கத்தில் அறிவுத்தன்மைப் புலவர்களையும், 72-வது சருக்கத்தில் கண்கண்ட புலவர்களையும் பாடியுள்ளார்.

72 சருக்கங்கள் எனலுமே, சீரடியார்கள் 63-வரும் தொகையடியார்கள் ஒன்பதின்மரும் ஆக 72 திருத்தொண்டர்கள் அடங்கிய பெரியபுராண ஒற்றுமை காணப்படுகிறது.

அத்துடன் சேக்கிழார் சுவாமிகள், ஒரு புராணம் பாடி முடிக்கும் செய்யுளில், 'இன்ன அடியார் திறம் புகன்றேன்; அடுத்து இன்ன அடியார் திறம் பாட விழைகின்றேன்' என்பார். அதேபோல நம் சுவாமிகளும் இதனை அடியொற்றி சருக்கத்தின் இறுதிப் பாடலை வடிவமைக்கின்றார். மேலும் பெரிய புராண பல ஒற்றுமைகள் உண்டு.

புலால் மறுத்தலைக் கூறுமிடத்து, "வடலூரார்க்கும், அடியேன் தனக்கும், பூதலத்தினர் ஊன் உண்ணாப்புதுமை செய்திடலே மேலாம்" எனப் பலப்பல பேருண்மைகளை எளிய நடையில் நயம்படக் கூறியுள்ளார்.

அபிராமிப்பட்டர் சருக்கத்து, அமாவாயைக் 'காருவா' என்றும், முழுநிலவினை, 'வெண்சீர் உவா' என்றும் கூறியுள்ளது வியக்கத்தக்கது. இரு வயிணவர் சருக்கத்தில் தாமிரவருணியைச் 'செம்புமா நதி' என்றும், அகத்தியனைக் 'கும்பன்' என்றும், வசைக் கவியாண்டான் சருக்கத்தில் மதுரையை, 'பெண்ணரசா உமை யாண்ட பெருநாடு' என்றும், முத்துலுக்கப் புலவர் சருக்கத்தில், திருநெல்வேலியை, 'பரமன் வேய்முளையில் தோற்றும் பதி' என்றும் கூறியிருப்பது மகிழத் தக்கது. மேலும் பல.

"அம்மூவர் சரித்திரமும் விவரமாக் கேட்டு
அறிந்திலேன் கேட்டளவில் ஐயம் இன்றி
இம்மூவர் இத்தகையர் எனச்சொன்னேன்
எதுநிசமோ எதுபொய்யோ இறைவன் தேர்வான்"

என்று கூறுகின்றார். இதனால் இதுவே முடிந்த முடிபல்ல என உரைக்கின்ற திறம் போற்றி இன்புறத்தக்கது.

முதற்புலவன் அகத்திய முனி என்றளவில், புராணத்தைத் தொடங்குகின்றார். இரண்டாவதாகவே சடகோபச் சருக்கத்தை அமைத்துள்ளார். திருவாதவூரர், திருநாவுக்கரசர், திருஞான

சம்பந்தர், சுந்தரர் என்று நால்வரை வரிசைப்படுத்திப் பாடுகின்றார்.

பன்னிரு ஆழ்வார்களில், 1. சடகோபர், 2. மதுரகவியார், 3. விட்டுணுசித்தர், 4. (அதனில்) ஆண்டாள், 5. திருமங்கையாழ்வார், 6. திருப்பாணாழ்வார், 7. தொண்டரடிப்பொடியாழ்வார், 8, 9, 10. மூன்று ஆழ்வார்கள், (பொய்கையார், பூதத்தார், பேயார்) ஆகப் பதின்மரைப் பாடியுள்ளார். குலசேகர ஆழ்வாரின் சரிதத்தினை அவருக்குப் பின்னர் அவர்தம் மகனார் பாடி இணைத்துள்ளார்.

இவர்களில் 'சடகோபர்' குருகூரில், காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் மகவாய்த் தோன்றினார். 'ககனவாழ்க்கைக் கடவுளாதியோர் 'சடகோப'னெனப் பெயரிட்டனர். இவர்தம் வரலாற்றிலேயே மதுரகவியாழ்வாரும் பேசப்படுகிறார். இவரால் சடகோபர் 'நம்மாழ்வார்' என்றழைக்கப்பட்டார். குருகூரில் உறங்காப்புளியுள் இருந்த இவரை மதுரகவியார் 'சித்தினது வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கு கிடந்திடும்' என்ன, 'அத்தினைத் தின்று அங்கு கிடந்திடும்' என்று சடகோபர் பெரிய நுண்பொருட் கருத்தினைக் கூறினார். அதனால் இவரது சீர் பரவியது. மற்றும் பல.

அடுத்து, விட்டுணுசித்தர், திருவில்லிபுத்தூரில், பட்டர் பிரானாக அவதரித்தார். எட்டெழுத்தோதிப் பாமாலை, பூமாலை புனைந்து அரங்கர்க்குச் சாத்தினார். அதனால் நிலமகள் மகவாய்த் தோன்றினள். துளவ வனத்தில் பார்த்தெடுத்து வந்து மனையாள் கைக் கொடுத்தார். அதனை அவ்வம்மையார் வாங்குதலை, 'இமயமலையரையன் தேவி மைமலை நேர் கௌரியினைப் பெறும் நாளில் மகிழ்ந்தாங்கு 'மகிழ்ந்தாள்' என்று நயம்படக் கூறுகின்றார். அவள் ஆண்டாள் எனப் பெயர் பெற்றாள்.

கூடலம்பதிக் கோமான் அரண்மனை வாயிலில் கட்டிய கிழியினைக் கவிபாடியறுத்தார். அதனால் 'பெரியாழ்வார்' என்றும், 'விட்டுணுசித்தர்' எனவும் பெயர் பெற்றார். தானியற்றிய கண்ணனிசை பயின்ற காரணத்தால், ஆண்டாள், 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று மாயனுக்கு மணஞ்சூட்டக் கனாக் கண்டாள். அரங்கன் மாலை

யினைச் சூடிக் கொடுத்தாள். திருமால் அம்மாலையினையே விரும்பி மகிழ்ந்தார்.

'இவ்வளவே கேட்டறிந்தேன்' எனக்கூறி இறுதிப் பாடலில்,

''விட்டுணுசித்தன் தன் புகழ்க்கு பூப்பிராட்டி மேதினியின்
மகளாகி மேயதென்று
மட்டுறும் வேப்பந் தொடையன் மன்னெதிர்பொற்
கிழியறுத்த மாட்சி யொன்று''

பாடினேன் என்கின்றார்.

**திருமங்கையாழ்வார் சருக்கம்**

கள்ளர் குலத்தில், மாதவம் உருக்கொண்டென மங்கைமன் தோன்றினார். களவு செய்து, விட்டுணு பக்தி கொண்டு தொண்டாற்றினார். பரகாலன், வாட்கலியன் எனப் பெயர் படைத்தார்.

பொன்னாசை கொண்டாரிடம் பொன்னைப் பிடுங்கி நாரண பக்தர்கட்கு நல்கினார். திருமால் மணமகனாகக் கானிடை வந்தபோது அவர்தம் பொருட்களோடு, அவர்தம் கால் விரலணியைக் கடித்திழுக்கும்போது, திருமாலென உணர்ந்து பணிந்தார். பழவடியார் மரபில் சேர்ந்து 'அகப்பொருள் விளக்கம்' நல்கி 'நாற்கவிராசநம்பி' எனப்பெயர் பெற்றார்.

சீகாழியில், தாடாளன் சந்நிதியில் இருந்தார். திருஞான சம்பந்தருடன் நட்பு பூண்டார். இதனைச் சகுயாதார், 'ஒருவரை மற்றவர் வென்றார்' என்று பேசி மகிழ்ந்தனர். 'ஒருவனே தேவன்' என்பார்க்கு மதபேதம் வாராது.

ஆனால் வைணவ நூல்களில், 'ஞானசம்பந்தரை வாதில் வென்றார்' என்று பேசப்படுகிறது. சீகாழியில் இருந்தபோது ஒருவரை ஒருவர் இகழ்ந்ததில்லை. அறியாதார்தான் இகழ்வர்' என்று கூறுகின்றார் சுவாமிகள். 'என் தெய்வம் பெரியது என்பவன் கன்னி; 'தெய்வம் ஒன்றே' என்பான் குமரி என்கின்றார். மேலும், 'சீகாழியின் இருவரும் இரு கண்கள் போல இருந்தனர். எம்மதமும் சம்மதமே' என்கின்றார்.

'என்பு பெண்ணாகிடப் படித்த நின் வாயால் ஒரு கவி எம் இறை மேற்பாடிப் பின் உன் அடியவர் அறியும்படி செய், என்றார்.

> ''இடம்கொண்ட நெஞ்சகத்துக் கிணங்குவன
> பள்ளிகொண்டான் இருதாள் என்னத்
> தடம்கொண்ட தாமரைசூழ் தருகுடந்தைத்
> தலம்குறித்துச் சாற்றலுற்றார்''

என்று கூறுகின்றார். மேலும், ''வெண்ணீறிட்டர் பலரும் சிவன் என்றும், திருமண் இட்டு விளங்குவோராம் வண்ணீர்மை யோர் பலரும் 'மால்' என்றும் பெரியோர் சொல்வகை நன்கோரார்'' என்று கூறி, தண்ணீரும், நெருப்பும் அவர் தங்கிட மென்றுணர்ந்தருமைத் தவம் செய்யாரே!' எனப் புகல்கின்றார்.

**திருப்பாணாழ்வார்**

மேற்குலத்தில் தோன்றி நிரயம் புகுபவர் பலர் உளர். கீழ்க் குலத்தில் பிறந்து பரகதி அடைந்த மேலோர்களில், தீண்டத் தகாத ஐந்தாம் குலத்தில் சோழ நாட்டில் உதித்த பாணாழ் வாரும் ஒருவர். புலால் மறுத்து, கள்ளுண்ணாது, திருமாலை வழிபட்டு வந்தார்.

அரங்கனுக்குப் புனல் கொணரும்போது, அர்ச்சகர்கள் இவர் மீது கல்லெறிந்து துரத்தினர். ஓடிவிட்டார். கோயிலை அடைந்து அரங்கன் திருக்கதவத்தாள் திறக்க முயன்றபோது, திறக்கப் படாமையால், ''அர்ச்சகர் பாணாழ்வாரைத் தோள் மீதேற்றி வருக! இது அரங்கன் ஆணை'' என அசரீரி கேட்க, அவ்வாறே அவரை அர்ச்சகர் தோள் மீதேற்றி, மங்கல ஒலி முழங்க, பாகவதர்கள் துதிபாடக் கதவருகே வந்ததும், கதவும் தானே திறந்தது. பாணாழ்வார் 'அமலனாதிப்பிரான்' எனத் தொடங்கிப் பத்துப் பாடல்களைப் பாடி, பன்னிரு ஆழ்வார்களின் வரிசையில் இடம் பெற்று இன்றும், அர்ச்சகர்களால் பூசிக்கப் பெறுகிறார்.

இறைவனுக்கு மதவேறுபாடு இல்லை, சாதி வேறுபாடு இல்லை என்பதும், பிறப்பால் யாவரும் மனிதர்களே என்பதும், கீழ்ச்சாதி, மேல்சாதி, என, குறுமதி படைத்தவர்கள் உருவாக்கியதே என்பதும் இதனால் பெறப்படுகின்றன. உண்மைத் தொண்டர்கள் கீழ்க்குலத்தவராயினும் இறைவனால் உயர்த்தப்

படுவார்கள் என்பதும் புலனாகின்றது. சைவத்தில் நந்தனாரும், வைணவத்தில் திருப்பாலாழ்வாரும் சான்றாவார்.

**தொண்டரடிப் பொடியார்**

விப்பிர நாராயணர் என்ற பெயரோடு பிறந்து தொண்டரடிப் பொடியானார். திருமால் தொண்டாற்றி வந்தார். இவரது புகழ் வெளிப்படும் பொருட்டு நாரணனிடம் விடைபெற்று இலக்குமிதேவி விலைமாதாகி இவருடன் இருந்தாள். பொருள் வேட்கையால் இருவருக்கும் சலனம் ஏற்பட, நாரணன், கோயில் தங்க வட்டிலைக் கொண்டுபோய், 'விப்பிர நாராயணரின் ஆள் நின்னிடம் இதனைத் தரச் சொன்னார்' எனத் தேவியிடம் தந்து மறைந்தார்.

மறுநாள் கோயில் வட்டில் காணாமை கண்டு அது தேவியிடம் இருப்பதறிந்தஅரசன், இருவருக்கும் சிறைதண்டனை அளித்தான். நிகழ்ந்ததைக் கனவின் மூலம் மன்னனுக்கு வெளிப்படுத்த, இது நாரணன் திருவிளையாட்டென்று மன்னன் இருவரையும் விடுவித்தான். தொண்டரடிப் பொடியாரின் புகழ் பரவியது.

**மூன்றாழ்வார்கள்**

பொய்கையார், பூதத்தார், பேயார் ஒவ்வொருவரும் 100 பாடல்கள் நாராணன் மீது பாடியுள்ளனர். ஆழ்வார்களில் முதலாழ்வார்கள் என்று அறியவேண்டும். மூவாசை வெறுத்துத் துறவு பூண்டு வீடுபேறு அடைந்தவர்கள் (சோம, சூரிய, அக்கினி என) முச்சுடர் போல விளங்கினர். மேலும் பேயார், சாத்தனா ராகவும், பூதத்தார் கயிலை நாதனாராகவும், பொய்கையார் கமலனாராகவும் விளங்கினர். மேலும் பேய் – அய்யனார் சேனை எனவும், பூதம் – பினாகபாணி எனவும், பொய்கை – சரசுவதி எனவும் பேசப்பட்டனர்.

திருக்கோயிலூருக்குத் தனித்தனியே வந்தனர். காற்று மழையில் ஒரு சிறிய திண்ணையில், நல்ல இருளில் ஒருவர் படுத்திருந்தார். அடுத்தவர் வந்து இடம் கேட்டார். இருவரும் அமர்ந்தனர். மூன்றாமவர் வந்தார் இடம் கேட்க மூவரும் நின்றனர். 'ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்றனர். திருடன் உருவில் நாரணர் வந்து இவர்

களுடன் நால்வரானார். மூவரும் நாரணர்க்கு ஞானச்சுடர் விளக்கேற்றப் பாடினார். நாரணன் இருளை ஒளியாக்கிக் காட்சி நல்கினார்.

### இருவயிணவச் சருக்கம்

இருவர் பெயரும் அறியப்படவில்லை. தென் குருகைப் பதியில் வைணவ வேதியர் ஒருவர் தமிழ் கற்றுணர்ந்தார். பாகவதர்க்கு அடியவரேல் பணிந்து போற்றினார். பிடிவாத குணமுடையவர். சடகோபன் முதலானோர் பல தெய்வங்களையும் வணங்கியது தவறு எனக் கூறிக் கொண்டு வந்தார். அதனால் கொடியவன் எனப் பெயரடைந்தார். உடம்பில் 12 இடங்களில் திருமண் தரித்து துளவ மாலையணிந்து தற்புகழ்ச்சியோடு திரிந்தார்.

ஒருநாள் முருகவேள், கனவில் தோன்றி, அந்தணர் உருவோடு எதிர்ப்பட்டு, 'நீ எம் செந்திலாண்டவனைப் பாடினால் உனக்குப் பயன் அனந்தம் பெருகும்' என்றார். விழித்தெழுந்து பதறினார். 'கைப்பிடித்த கணவனையன்றி மற்றவனைத் தொழுவதா' என வருந்தினார். பாட மாட்டேன் என விருந்தார்.

மறுநாள் கனவில் பாதி முருகனாகவும், பாதி திருமாலாகவும் காட்சி தந்து, 'கண்டாயோ; இனி செந்தூர் முருகனைத் துதி செய்திடலாம்' எனப் பகர்ந்தார் நாரணர். எரிகின்ற நெருப்பில் நெய் வார்த்தது போல் வருந்தினார்.

மறுநாள் கனவில் நாரணன் கருடனில் தோன்றினார். அப்போது, 'உனையன்றி மற்றோர் தெய்வம் வணங்கேன்' என்றார். நாரணர், 'எத்தேவும் என் உருவமே! நீதான் வேறாகப் பார்க்கிறாய். கந்தவேள் முற்றிலும் என் அங்கிசமே' என்றார். 'ஆணவத்தால் துயர் அடையாதே' என்றும் கூறினார்.

அதுவும் தேறாது உயிர்விடத் துணிந்தார். அவ்வூர் வந்த நெல்லை வடமலையப்ப பிள்ளை கனவில் தோன்றி, 'இவனுக்கு வெள்ளி விலங்கு செய்து பூட்டி இவன் மாய்வதைத் தடுப்பாய்' எனக் கூறினார். அவனும் அங்ஙனமே வெள்ளி விலங்கிட்டு, 16 பேர்களைக் காவல் வைத்தும், 'அப்படியும் இவர் இறந்தால் உங்களையும் கொன்று நானும் இறப்பேன்' எனச் சூளுரைத்துக் காத்தான். தன் ஊர் நெல்லைக்கேகாதிருந்து காத்து வந்தான்.

வருந்திய வைணவர், 'திருச்செந்தூர் பதிற்றுப் பத்தந்தாதி' பாடினார். பத்துப்பாடல் பாடியவுடனேயே' அடுத்து 'செய்வ தொன்றும் உணரேன், வைவேல் முருக! என்றன் வன்தனை கொய்து ஆண்டு அருள வேண்டும்' என மொழிந்தார். தனையறுந்தது. முற்றும் பாடி முடித்தார். முருகன், வடமலையப்ப பிள்ளை கனவில் தோன்றி, 'இவரை அழைத்துச் சென்று, திருச்செந்தூரில் இந்நூலை அரங்கேற்றித் தக்க வரிசை செய்!' எனப் பணித்தலும், அவ்வாறே மன்னவன் நிறைந்த பரிசுகளை வழங்கி, 16 பேரையும் தன்னையும் காத்த இதற்குச் 'சிறைவிடந்தாதி' எனப் பெயரிட்டு மகிழ்ந்து சென்றான்.

இவ்வரலாறு கூறிய சுவாமிகள், ''இவர் பெயரை யாரும் கூறவில்லை; அதனால் யானும் கூறவில்லை. இது நோக்கி நானும் ஒரு 'கலிவிடந்தாதி' பாடினேன்'' என்கின்றார்.

**அடுத்த புலவர்**

திருவைகுண்டத்தில் உதித்த வைணவர், தன் மாமன் மகள்கள் இருவரை மணந்தார். பிழைப்பு கருதித் திருக்குறுங்குடி சென்றார். மகப்பேறில்லை. அவன் மனையாள் கனவில் முருகன் தோன்றி, 'உன் கணவன் முருகனைப் பாடினால் மகவும் செல்வமும் தருவேன்' என்றார். அதுகேட்ட கணவன், 'நான் செத்தாலும் பாடமாட்டேன்' என்றான்.

அன்றிரவு அவன் கனவில் முருகன் தோன்றி, 'இன்ன இடத்தில் ஒராலின் கீழ் ஒரதிசயம் கேட்பை' என அவ்வாறே சென்றபோது அங்குளார், 'ஈது முருகன் தந்த குழந்தை' என்றும் அதிசயித்து அவர்களைத் தன் இல்லத்திற் கழைத்து விருந்திட்டு உபசரித்தான், அனுப்பி வைத்தான்

அன்று முதலாகப் பத்தாம் திங்கள் இவருக்கும் ஒரு ஆண் மகவு பிறக்கவே முருகன் மீது பாடல்கள் பாடிச் சுவடியோடும் குழந்தையோடும் திருச்செந்தூர் சென்று, குழந்தையைக்கிடத்திப் பாடவும், பாடலைக் கேட்டுமகிழ்ந்து, அவ்வைணவருக்கு, முருகன் அருள்புரிந்து ஒரு தொண்டன் மூலம் அம்பொன் ஆயிரம் தந்து, 'இது முருகன் அளித்தான்' என்றனன்.

அதுபெற்ற வைணவர், 'உன்னைப் பாடியதற்கு சேயைக் கொடுத்தாயே! இதுவும் தரவேண்டுமா?' என்றலும், அர்ச்சகர்

மூலம் 'என்னை நான் கொடுத்தாலும் நீ பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். பாலகனுக்கு எக்குறையும் வாராது'' என்று திருநீற்றுப் பிரசாதம் வழங்கினார். அதனைப் பெற்றார்.

மேற்கண்ட இரு வைணவர்களும் முருகனைப் பாடியுய்ந்த தனால் மூர்த்தி(தெய்வ)பேதம் கூடாதென்பது விளங்குகின்றது.

**அபிராமிப்பட்டர்**

அபிராமிப்பட்டர் தம் துரியங்கடந்த நிலையினைக்கண்டு பொறாத மற்றவர்கள் எள்ளி நகையாடினர். உன்மத்தர் போலிருந்த அவரது மேலான நிலையினைப் பித்தென்றெண்ணித் தஞ்சை மன்னனாம் முதலாம் சரபோஜியிடம் முறையிட, அவர் பட்டரை அணுகி, 'நாளை என்ன திதி' என வினவ, அவர், 'நாளை முழுநிலா நாள்' என்றார். 'பெரிய மகான்' என்று எண்ணிய மன்னன் வருந்தி, 'நாளை முழுநிலா வரவில்லை யானால் தண்டிக்கப்படுவீர்' என்றார்.

நிலையுணர்ந்த பட்டர், ''மறுநாள் மன்னன் தண்டிக்குமுன் 'அபிராமி அந்தாதி' பாடி மீள்வேன்'' எனக் கூறி, பெருங்குழி வெட்டி தீ மூட்டி, மேல் விட்டத்தில் 100 கயறு கட்டிய உரி ஒன்று கட்டி அதில் நின்று, 'உதிக்கின்ற செங்கதிர்' எனத் தொடங்கி, ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு கயிறாக அறுத்து விட, 100 வது கயிற்றினை அறுக்கும் போது, முருகன் வந்து (முன்பு அருணகிரிநாதரை வல்லாள மகாராஜா கோபுரத்தி னின்றும் விழும்போது தாங்கியது போல்) தாங்கினார். அன்னை அபிராமி மகிழ்ந்து, காதணியைக் கழற்றி விண்ணில் வீச முழுநிலா ஒளிவிட்டது.

மன்னன் மகிழ்ந்து ஏராளமானப் பொருட்களை வேண்டுமளவு ஈந்தான். இவ்வாறு சருக்கம் செல்கிறது.

ஆனால், வழக்கத்தில், பட்டர், 'உதிக்கின்ற செங்கதிர்' எனத் தொடங்கி, 79-வது பாடலாகிய ''விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு'' எனத் தொடங்கும் பாடல் முடிந்ததும், அபிராமி வெளிப்பட்டு, தன் தாடங்கத்தினை வான வீதியில் வீசிட முழு நிலாவாக ஒளிர்ந்தது. பட்டரிடம், ''நீ வாய்சோர்ந்து சொன்ன சொல்லை மெய்ப்பித்தோம். அந்தாதியை நிறைவு செய்க'' எனக்கூறி மறைந்தாள் என்றுளது.

அப்பர், முதலானோர், அகத்தியர், கம்பர், ஔவையார் முதலான எல்லாப் புலவர்களையும் கட்டுரையாக்க விருப்பம். திருவருள் கூட்டுவிக்கவில்லை. காளமேகத்தைக் கூற ஆவல். அதற்கும் இயலவில்லை.

மிக அரிதாகப் பேசப்படும் ''வசைக்கவி யாண்டா''னுடைய சருக்கத்தைக் கூற விழைகின்றேன்.

ஒட்டப்பிடாரத்தில், வைணவ குலத்தில் வைகுந்தநாதன் எனும் அந்தணருக்கு மகவாய்ப் பிறந்து 'ஆண்டாள்' எனும் பெயர் பெற்றார். ஐந்து வயதில் பள்ளியில் சேர்த்தனர். தமிழ் கற்க விரும்பாராகி பள்ளி செல்லாது, அன்னை தந்த உணவினை ஒளித்து உண்டார். பத்தொன்பது வயதாகியும், ஊர் சுற்றித் திரிந்த போது, ஒரு சித்தர் தோன்றி, காளி மந்திரத்தினை உபதேசித்து, 'இதனை நாடோறும் பயின்று நலம்பெறுக' என்று கூறிச்சென்றார். அவ்வூர்க் காளி கோயிலின் பின்னிருந்து மறைந்து ஓதிவந்தார். காளிதேவி தோன்றி, 'இசை வேண்டுமா?'; 'வசை வேண்டுமா?' எனக் கேட்க, ஊழ்வசத்தால் 'வசைதான் வழங்கிடு' எனக் கேட்க, ஒரு வேப்பம் ஈர்க்கினால், அவர் நாவில், அசையாத மெய்ச்சத்தி பெற்ற வல்லெழுத்தினை எழுதி, 'உன் சொற்கள் பலிக்கும்; பொய்யாகாது' எனக் கூறி முன்னிருந்தவாறே இருந்தாள்.

'வசைக்கவி' ஒன்று பாட, ஆண்டிருந்த கல்விக் கிரகத்தின் கொங்கை ஒன்று அற்று விழுந்தது. அவ்வாறே அருகிருந்த கொட்டகை தீப்பற்றியது. பள்ளி சென்று, வாத்தியார் பெண்டாட்டி தாலி அற்றிரும்படிப்பாட ஆசிரியர் தலை வெடித் திறந்தார். வாத்தியார் மகன் வந்து பணிந்தான். அவனை ஆதரித்தார்.

இவரது அண்ணன், மண்சுவர் வைத்துக் கொண்டிருந்தான். சுவர்மேல் இருந்தபடி, அவன் கோவணம் வழி பீசம் தொங்கக் கண்டார். அது அற்று விழும்படிப் பாடவே, அது அற்றுவிழ, அவனும் விழுந்து, இறந்தான். சொல்பலிதம் காரணமாக, அவருக்குப் பொன்னும் பொருளும் கிடைத்தன. அவற்றைச் சடகோபருக்கீந்து அவரைப் பல்லக்கில் வைத்துப் பாடினார்.

சீவலப்பேரில் அச்சடகோபனுக்கு ஒரு கணிகையைக் கூட்டி வைத்தார். மற்றோர் சமயம், ஒரு அரசனை ரா......சா என நீட்டியழைக்க அரசன் இறந்தான். வாழவல்ல நல்லூர், குருகூர், பேரையூர், மங்கலக்குறிச்சி முதலான ஊர்களில் பல வசைகளைப் பாடினார்.

பட்டக் குறிச்சியில், கொடிக்கால் இலை கருகச் சபித்தார். இவர்தம் பெண்சாதியும், வீடும், தன் மனைவியைக் காதலித்த வனும் அழியச் சபித்தார். இரு வேளாளர்களைப் புகழ்ந்துபாட, அறம் விழுந்ததால் கெடுதிகள் நேர்ந்தது கண்டு வருந்தினார். பனஞ்சாடி என்னும் ஊர் மக்கள், வினை நிலத்தில் மலசலம் கழிக்கக் கண்டு வருந்தி வசைபாடினார்.

ஒரு மண வீட்டில் இவரை மதியாததால், மணமக்களைப் பிணமாக்கினார், செட்டிகுளத்தில், ஒரு செட்டியார், 'யானை யும், குதிரையும் வரப்பாடினால் நீ கெட்டிக்காரன் என்பேன்' என்றான். 'நின் மகளைப் புணர அவை வரும்' என்றார். அவ்வாறே வந்ததால் மகள் மாண்டாள். மதுரை வந்தடைந்த போது, ஒருத்தி இவரைக்கண்டு எழுந்திராததால், கொச்சை வசை பாட அவள் இறந்தாள். இப்படிப் பல உண்டு. அதனால், 'வசைக்கவியாண்டான்' என்றழைக்கப் பட்டார்.

கேரள மன்னரைக் காணச் சென்றார். அரசர், அதனை அறிந்து. வசைபாடாதிருக்க, மாதந்தோறும் ஒரு பொதி சர்க்கரை அனுப்ப உத்தரவிட்டார். இவர் ஒட்டப்பிடாரம் சென்றதும் அரசர் அனுப்பவில்லை. அப்போது இவர் தந்தை சர்க்கரை கேட்க, 'நாட்டில் பஞ்சம்; உண்பதற்குச் சோறில்லை; மக்கள் தவிக்கிறார்கள்; நீ சர்க்கரை கேட்கிறாயா? எனச் சபிக்க, அவர் தலைவெடித்து இறந்தார். பின்னர் வருந்தினார்.

மலையாள வாலிபர்கள், மலையாள மாதர்களைப் பாடும் படிக்கேட்டனர். அவர்களைப் பேயாகும்படிப் பாடினார். அந்தணர்கள் வாழ்கின்ற தெருவில் ஒரு விதவை, கன்றுக்குப் பால் விடாது ஒட்டக் கறந்த காரணத்தால் அதற்கொரு புராணம் பாடினார். ஒரு சமயம் கோயில் மண்டபத்தே இருந்த போது, அக்கோயில் பணிப்பெண் விடுத்த சிறுநீர், ஒரு சிற்றோருடை போல வரக்கண்டு, ஒரு 'மடல்' பாடினார்.

தன் நிலத்தை அளக்க வந்த கணக்கனைப் பாம்பு கடிக்கப் பாடினார். பாம்பு கடித்த தன் கால் விரலைக் கணக்கன், விடம் ஒரு வண்ணம் வாளால் வெட்டிவிட்டு வீடேகினான். அது கண்டு அவன் மீது 'காளி மடல்' ஒன்று பாடி இறப்பித்தார்.

மதுரையில், 'சிந்துக் களஞ்சியம்' என்றொரு புலவன் கொடுமை செய்து வந்தான். அவன் இவரிடம் வந்து, 'நீ என் போல் சிந்து பாடுவையோ?' எனக் கேட்க, அப்போது ஒரு தேங்காயை வைத்து, துண்டுதுண்டென்று அடுக்குச் சொல்லொலி சொல்லிட அது சிதற, அதுகண்டு புலவன் பயந்தோடினான்.

கைத்தாற்றுப் பெருமாள் கோயில் ஏகாதசி விழாவில், வைணவர்கள் முறை என ஆண்டானையும் ஸ்ரீஉபாதம் தாங்க வைத்தனர். அதனால் வருந்திய ஆண்டான்,

"பாளைமணம் கமழ்ந்திருக்கும் கைத்தாற்றுப்
பெருமாளே! பழிகா ரா!என்
தோளைஅற முறித்தாயே நம்பியானை
யும்கூடச் சுமக்கப் போமோ!
வேளையிதில் விழுந்தொழிவாய் நாளைவரோம்
சுமக்க என விண்டான் அந்தோ!
தேளைநிகர் அவன்வாக்குப் படலும் அதில்
இருந்தகலை சிதைந்த தம்மா." — 2430

என்று பாட சப்பரம் முறிந்து விழுந்தது. கோயிலும் பாழடைந்தது. இன்னும் மாறவில்லை. இப்படித் தான் செய்த பாவமெல்லாம் ஒருநாள் நினைந்து வருந்தினார். அதற்காக சேதுப் பயணம் மேற்கொண்டார் புறப்படும் போது, தன்னை விரும்பிய ஒருத்திக்கு, வயிரவனையும், மாடனையும் காவல் வைத்துப் புறப்பட்டார். அன்று முதல், அவளருகில் சென்றவர் கள் இரத்தம் கக்கி மாண்டனர்.

திருச்செந்தூர் சென்ற போது, ஒரு மாத விடாய்க்காரியைச் சம்மதம் கேட்க, 'அடடா போதும்; இந்த மட்டில் நிறுத்தா விட்டால், இன்று நீ மடிவாய்' என்று அசரீரி கேட்க, அங்கிருந்து புறப்படுகையில், அவர் நாவில் ஒரு புண் ஏற்பட்டது. மிகவும் வருந்தினார். அதில் 'புழுக்கள் வைத்தன' என்று பலரும்

இகழ்ந்து மகிழ்ந்தனர். அதனால் வசைக்கவியாண்டான் இறந்தார்.

"திரிமூர்த்திகளின் பெயரும் வாகனமும்
தலமும்நுகர் திற்றி தன்னொடு
அரிதாயகறியும், அணிகளும் படையும்
ஒருவெண்பா வதனுட் சொன்ன
பெரியோனாம் காளமேகப் புலவனினும்
ஆண்டான் பெரியோன் கண்டீர்
எரிபோலும் கவிபொழிந்திட் டீனர்குலம்
அறக்கெடுக்கும் இயல்பிலம்மா!

என வசைக்கவியாண்டானைப் புகழ்கின்றார் நம் சுவாமிகள். மேலும்,

"இருநிலத்துற் றார்பலரும் எமனினும்பொல்
லான்எனவே இதயம் அஞ்ச
அருள்வலியாற் கவிபாடி, அம்மைபதம்
புகுமாண்டான் ஆற்றல் சொன்னேன்"

என முடிக்கின்றார்.

முத்துலுக்கப் புலவர் சருக்கம்

எக்குலத்தவராயினும், புலமையில் பக்குவர் எனில் பேசுதல் பண்பே எனத் தெளிந்த நம் சுவாமிகள் முத்துலுக்கப் புலவர் சருக்கம் கூறுகின்றார்.

'சையது மொய்தீன்' என்பார் தம் மதக்கலையோடு தமிழும் பயின்றார். எப்புண்ணியத்தினாலோ 'இமயமின் மறை' பெற்றார். மற்றவர் அறியாவாறு, திருநீறு, உருத்திராக்கம் அணிந்து பூசை செய்து வந்தார். ஒருநாள் அம்மை தோன்றினாள்.

"தப்படி வாரா வாக்கும் தயிரியப் பண்பும் தன்வாய்
எப்படிக் கவிசொன் னாலும் இயங்கும்மாட் சியும்ஈந் தாள்!"

அரசனை எடுத்துத் தன் திறம் கூறிப் பொலிவுற்றார்.

மன்னவன், குடை, சின்னம் எல்லாம் வழங்கி, வடக்கு வாயிலில் இருத்தி, சோணாட்டுப் புலவர்கள் வரின், அவர்தம்

திறமையும், புலமையும் அறிந்துரைக்கக் கட்டளை யிட்டான். அது காலை, இறை பணிப்பெண் ஒருத்தி, இவருடன் கலந்திருந்தாள். இதனை அரசன் கேட்டு, அவர் வீட்டிற்குத் தீயிடச் சொன்னான். அத்தீயினின்றும், இவ்விருவரும், ஒரு சேவகனும் தீங்கின்றி மீண்டனர்.

மன்னன், இவரைக் கழுவேற்றச் சொன்னான். கழுமரமும் தீப்பற்றியது. மன்னவன் இவரை நாடுகடத்தினான். அப்போதும் வருந்தாத புலவர், 'என் வல்லமையை நீ அறியவில்லை. எனக்கு யாதும் ஊரே, யாரும் கேளிர்' எனச் சொல்லிப் போனார்.

சென்றவர், நெல்லை கைக்கோளர் வீதியில் சென்று பாத்தோய்கின்றார். அனைவரும் காண நின்று, 'நான் சொல் இன்ற ஒரு பாடலின் தன்மையினை நன்குணர்ந்து வணங்குவீர் களாயின் நன்மை பெறுவீர், இன்றேல் தீங்கடைவீர்கள்' எனக் கூறினார். அவ்வாறே பணிந்தனர்.

சேரநாட்டில், தீமை செய்தவன் இறக்கப் பாடினார். செங்குந்தர் தெருவிற் சென்று, அவர்கள் ஆதரிப்பர் எனக்கருதி யிருந்தார். ஆதரிக்கவில்லை. கோபித்தெழுந்தார். அவருள் ஒருவர் வந்து, 'இக் கொடுமரத்தினை இரண்டாகப் பிளக்கப் பாடினால், உன்னைப் பெரும் புலவன் என மதிப்போம்' என்றோர். அந்த மஞ்சனத்தி மரத்தினை அவர்கள் குறி யிட்டவாறே இரண்டாகப் பிளக்கப் பாடிப் பிளந்தார். வாளாற் செய்ய இயலாத இதனைக் கவிபாடிப் பிளந்தாரே என்று அதிசயித்துப் பணிந்து உபசரித்தனர். இராப் பூசையினில் இவர்தம் சிவபூசையைக் கண்டு அதிசயித்து மகிழ்ந்தார்கள்.

மேலப்பாளையம் சென்றார். துலுக்கர்கள் ஒரு பெண்ணை இவருக்கு மணமுடித்தனர். ஒரு மகப்பெற்றார். இறைவனடி சேர்ந்தார்.

அவர்தம் மகனார் தந்தையைப் போலவே, இரவில் சக்தி பூசை செய்து புகழ்பெற்றிருந்தார். திருநெல்வேலியில், ஒரு வேளாளர் இவரிடம் வந்து, 'எனக்குப் பிள்ளையில்லை; நீர் வந்து என் மனையில் சிவபூசனை செய்ய வேண்டும்' எனப் பணிந்தார். அவ்வாறே சிவபூசை செய்தார்.

ஊனுண்ணும் குலத்தவ ராயினும், அது வெறுத்துச் சைவ வைணவ சின்னங்களணிந்தார். யாவரும் மகிழ்ந்தனர். பூசனை முடித்துத் தன்கையால் நீர் கொடுத்து, அம்மனையாளை அருந்தச் சொன்னார். 'நீசன் நீர் என்னில் கெண்டை நோய் வரும்; ஈசன் நீர் என்னில் எழில் மகவாம்' எனக் கூறக் கணவன் சொற்படி அருந்த, அன்று தொட்டுப் பத்தாம் திங்களில் ஒரு ஆண் மகவினைப் பெற்றார். சக்தியின் அருள் என்று அம்மகவுக்குச் 'சிதம்பர தாண்டவன்' எனப் பெயர் சூட்டினர்.

### உமருப் புலவர்

வீரத்துலுக்கக் குலத்தவர் செய்த தவத்தினால் 'உமருப் புலவர்' தோன்றினார். 'சிவன் தொண்டர், அரியன்பர் எனத் திகழ்ந்தார். சுற்றத்தார் இகழ்ந்தனர். சதுர்வேத சித்தாந்தி யானார். தமிழ் நன்கு கற்றார். வாக்குநலம் பெற்றார். 'எழிற் சிமிழ்' என்ற மாதை மணமுடித்தார்.

கம்பர் இயற்றிய சீராம சரிதத்தைப் போலத் தம் பந்து சனம் வழிபாடு செய்யும், தனித்தேசிகனது செம்பண்பு, செயம், ஆடல் முழுதும், அங்ஙனமே இயம்ப விரும்பிக் காயல்பட்டணப் பெரியாரிடம் கூற, அவர் இகழ, எந்தக் கலைக்கும் பொதுத் தெய்வம் உண்டு என்று இருந்தார்.

கனவில், தெய்வம் தோன்றியுரைத்தபடியே, மறுநாள் நிகழ்த்தலும், தன் ஊரெய்தினார். சீறாப் (புராணம்) பெருங்காவியம் இயற்றினார்.

### சவ்வாதுப் புலவர்

துலுக்கர் குலத்துட்டோன்றி, செழுந்தமிழ் அறிந்து முருகனருளால் 'சவ்வாதுப் புலவர்' எனப் பெயர் பெற்றார். முருகப் பெருமான் மேல் பல பாடல்கள் இயற்றினார். இவரை எதிர்ப்பவரும் பணிந்தனர்.

இராமநாதபுரம் சேதுபதி முதலானோரால், சிங்கமுகப் பொற்சிவிகை ஏற்றப் பெற்றார். 'வேலு மயிலுந் துணை' என்று வீரமுழக்கம் செய்து, புலவர்கள் அவை எல்லாவற்றிலும் வெற்றி பெற்றார் வாதிலும் வென்றார்.

கோலத்தால் துலுக்கராகவும் குணத்தால் கௌமாரராக வும், கொடிசினமும், அமிழ்தினில் இனிய அன்பும் கொண்டு சீலத்தால் வாழ்ந்தார். மட்டார் பொற் கடம்பணிவன் வாழுலகடைந்தார்.

நான், அறிந்தது இவ்வளவே என்று முடிக்கின்றார் சுவாமிகள். மேலும், ஒருமதத்தோன் மற்றொரு மதத்துறு தேவைப் பணிந்தாலும் திருவருள் பெற்றால், உலகம் முழுவதும் அவன் மொழிக்கு அஞ்சும். இது உண்மை. குருவிகற்பமே மதங்கள். 'குறித்த பரம் ஒன்று' என்னும் தெருள் அடைவது எளிதன்று. என்று கூறி முத்தலுக்கச் சருக்கத்தினை முடிக்கின்றார்.

மற்றும் உள்ள சருக்கங்களை எல்லாம் சுருக்கித் தர வேண்டும் என்ற பேராசை எனக்குண்டு. பாற்கடலை அடுத்த பூனை, கடல்பால் முழுவதையும் நக்கிக் குடித்திடுவேன் என்ற கம்பரின் அவையடக்கப் பாடலை ஒத்து இருக்கிறது இச்செயலும் கூட.

இயன்ற அளவு எடுத்துரைத்தேன். கல்லாரும் கற்றாரும் இதனைப் படித்துக் கவனிக்கவும் செய்வர். இகழினும் இயல்பே. எல்லாம் இறைவனருட்டிருக்கூத்தே என நிறைவு செய்கின்றோம்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் தெய்வத் தமிழ்ப் புலமையும், பேரன்பும், நாட்டில் மேன்மேலும் பெருகவும், அதனால் மக்கள் நலம் பெறவும், இவர்தம் நூற்றாண்டு விழா சிறக்கவும் வாழ்த்தி அமைகின்றோம்.

# சுவாமிகளின் பிள்ளைத்தமிழ் நூல்கள்

## தே. சொக்கலிங்கம்

இப்பெரும்புலவர் சென்னை, பழநி, சிதம்பரம், புதுவை, தேவகோட்டை ஆகிய ஐந்து இடங்களிலுள்ள முருகனைப் பற்றி ஐந்து பிள்ளைத் தமிழ்கள் பாடினார். புதுவை முருகன் பிள்ளைத்தமிழ்ச் சுவடியைத் தண்டபாணி சுவாமிகளே சிதைத்து விட்டார். இவர் பாடிய ஒரு பெண்பாற் பிள்ளைத்தமிழ் திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத் தமிழாகும். இவர் இயற்றிய 'வாகடப் பிள்ளைத்தமிழ்' இம்மரபினரிடம் ஏட்டுச் சுவடியாக உள்ளது. இது மருத்துவ உண்மைகளை அகத்தியரை முன்னிலைப்படுத்திக் கூறுவது. இவ்வாறு இவர் ஏழுபிள்ளைத் தமிழ்களைப் பாடியிருக்கிறார்; இருபாலாரையும் பாடியிருக் கிறார். இங்கு ஆய்வுக்குரியனவாக ஐந்துபிள்ளைத் தமிழ்களே கிட்டியுள்ளன.

### நூல்கள் பற்றிய குறிப்புகள்

தண்டபாணி சுவாமிகள் இயற்றிய முதற்பிள்ளைத்தமிழ், சென்னைக் கந்தகோட்டம் முருகக்கடவுள் பிள்ளைத்தமிழ். இந்நூலிலும், சிதம்பரம் பாண்டி நாயகன் திருமுருகப் பெருமான் பிள்ளைத்தமிழிலும் நூலுக்குமுன் கணபதி, கலைமகள் ஆகியோர்க்குக் காப்புரைக்கிறார். பாண்டிநாயகன் திருமுருகப் பெருமான் பிள்ளைத்தமிழில் இப்பகுதிக்குப் பாயிரம் என்று பெயர். தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ், வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ் இரண்டிலும் விநாயகர் காப்பு மட்டுமுண்டு. பழநிப் பிள்ளைத்தமிழில் எக்கடவுளுக்கும் காப்பில்லை. இவ்வாறு நூலுக்குமுன் அமையும் பகுதியில் இவரிடம் ஒத்த முறைமை இல்லை.

பிள்ளைத்தமிழ் மரபினை மதித்துக் காப்புப்பருவத்தில் திருமாலுக்கு முதலிடமீந்தார். திருமால், சிவபெருமான், பார்வதி, விநாயகர் என்ற வரிசை அனைத்து நூல்களிலுமுண்டு.

ஆண்பாற்பிள்ளைத் தமிழ்களில் நவகோளையும் காப்புக் கடவுளாக்குகிறார்.

வள்ளிநாயகி பிள்ளைத்தமிழில் நீராடல் பருவத்தைப் பாடினார். அதற்கு மாறாகக் கழங்காடு பருவம் பாடுகிறார். முருகனாகிய குழந்தையை நீராட்டும் காட்சி மூன்று பிள்ளைத்தமிழ்களில் பாடும் இவர் வள்ளிநாயகி நீராடுவதாகப் பாடவில்லை. தான் துறவி என்பதாலும் பெண் நீராடுவதாக ஆண் பாடவேண்டியதாலும் பாடவேண்டாம் என்று தண்டபாணி சுவாமிகள் கருதித் தவிர்த்திருக்க வேண்டும்.

நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும்

இவர் முருகனடியாராகத் திகழ்ந்ததுபோல நாட்டுப்பற்றும் மொழிப் பற்றும் மிக்கவராகவும் விளங்குகிறார். சிதம்பரம் பாண்டிநாயக முருகனைத் 'தமிழ்நாட்டுவேள்' (3) என இவர் சுட்டுவர். முருகன் தமிழ் நிலத்துக்குரியவன் என்பதை இத் தொடர் விளக்கும். இதனை வள்ளிநாயகி பிள்ளைத்தமிழில், 'தமிழ்நாடு ஆள்வைவேலன்' என வலியுறுத்துவர்.

இவ்வாசிரியர் முருகனுடைய தமிழ்க்காதலை மிக அழகாகச் சித்திரிக்கிறார். முருகனுக்குத் தமிழ், வள்ளியைக் காட்டிலும் இனியதாம். இதனை, 'வள்ளியினும் என்றனக்கினிதாகும் அன்பர்பகர் வண்தமிழெனப் பகர்ந்தாய்' என்று பாடுகிறார். இங்ஙனம் தெய்வங்கள் தமிழுக்கு வழங்கும் முதன்மையைக் கண்டு, இதனை விளக்கும் பல வரலாறுகளை நூலாசிரியர் சுட்டுகிறார். தமிழ்ப்புலவர்களுக்கும் முருகனடியார்களுக்கும் தெய்வங்கள் துணைபோந்த நிகழ்ச்சிகளை ஆங்காங்கே குறிக்கிறார். இவர் இயற்றிய புலவர் புராணத்திலும் இத்தகைய பல செய்திகளைக் காணமுடிகிறது.

மொழிப்பற்றுமிக்க இவர் நாட்டுப்பற்றும் மிக்கவராவர்; நாடு நலமுறவேண்டும் என்ற வேட்கையுடையவர். இதனால் தமிழ்நாடு செழிக்கத் 'திங்கள் மும்மாரிபெய்ய வேண்டும்' (சென்னை-முருகக்கடவுள் பிள்ளைத்தமிழ். 16) என வேண்டி நீர்வளம் பெருகி நெல்வளம் மிக முருகனைத் துதிக்கிறார். செல்வத்தை எண்வகையாக்கி எட்டுவகைச் செல்வத்துக்கும் 'எட்டு இலக்குமி' (வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ். 5) களைக்

குறிக்கிறார். அவ்வெண்வகைச் செல்வமும் தமிழகத்தில் கொழிக்க வேண்டும் என்பதைத் 'திருமாதர் எண்மரும் தமிழ்நாடு தன்னில் ஆட' என்று பாடுகிறார். இவ்வாறு இவர் நாட்டு நலத்தைப் பாட்டுள் அமைக்கிறார். இவர் நாட்டின் மீதும் மொழியின் மீதும் அன்புகொண்டு பொதுநலம் நாடுகிறார்.

**அறவுண்மைகள்**

குழந்தையைப் பாடும் பிள்ளைத்தமிழில் பிள்ளைமைக் குறும்புகளோ விளையாட்டுகளோ இவரால் பாடப் பெறவில்லை. அறநூலாசிரியர் போல இவர் பாக்களில் பொதுவறங்களையே வலியுறுத்துகிறார். தண்டபாணி சுவாமிகள் தான் பாடியவற்றில் பொதுத்தெய்வ வணக்கம், கொல்லாமை, சமரச சன்மார்க்கம் போன்றவற்றைச் சுட்டுகிறார். இவர் வாழ்ந்த காலத்தில் வடலூர் இராமலிங்க சுவாமிகள் விளங்கிச் சமரச சன்மார்க்கம் கண்டார். இருபெரும் சான்றோரும் கண்டு அளவளாவியமைக்குச் சான்று உண்டு. முற்கூறிய கொள்கைகளுக்கும் வடலூர் இராமலிங்க சுவாமிகள் சந்திப்பும் காரணமாகும்.

தண்டபாணியடிகள் பாடுவது பிள்ளைத்தமிழேயாயினும், அடியார்க்கும் பொதுமக்களுக்கும் அறிவு கொழுத்தப் பல அறக் கருத்துக்களைச் சுட்டிப் போகிறார். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என மக்களுக்குத் தோன்றும் பகைகள் பலவாகும் அப்பகை மூன்றில் பொன்னாசையே கொடிதாகும். இவ்வாறு தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழில் அறிவுறுத்துகிறார். (பா. 87) உலகத்து உயிர்க்கொலை புரிவோர் மிகப் பலர். அவரெலாம் கொலை செய்யாது திருந்தவேண்டும் என்பது தண்டபாணி சுவாமிகளின் விழைவு. சமயச்சண்டை புரிவோர், காவியொடு கன்றினம் கொல்வோர், ஆட்டைக்கொன்று தின்போர், பித்தர், வரிசையறியாதாரைப் பாடுவோர் ஆகியோர் திருந்தவேண்டிப் பழனி முருகப் பெருமானைச் 'சந்ததம் கருதி யுனை வந்தனை செய்கின்றேன்' (பா. 56) என்று பழனிப் பிள்ளைத் தமிழில் போற்றுகிறார். இவ்வாறு இவரின் வழிபாடு தன்னலமற்றதாகும்.

**இயற்கைப் புனைவு**

தண்டபாணி சுவாமிகள் பாடிய பிள்ளைத்தமிழ்களில் மிகுதி முருகனைப் பாடியவை. முருகன் கோயில்கள் நெய்தலிலும்,

குறிஞ்சியிலும், முல்லையிலும், மருதத்திலும் அமைந்தவை. வெவ்வேறு நிலச்சுழலுக்கேற்ப வெவ்வேறு வகையான புனைவுகள் இவர் நூல்களில் அமைந்திருக்கவேண்டும். ஆனால் அப்புனைவு களிடையே ஒற்றுமைகளே மிகுதியும் காணப்படுகின்றன; அன்றியும் இயற்கைப் புனைவும் குறைவாகவே உள்ளன.

எருமையை மையமாக்கிய புனைவு நான்கு பிள்ளைத்தமிழ் நூல்களில் உண்டு. வயலில் உழும் எருமைகளைக் கதிரவன் உச்சிக்குப் போகுமுன் உழவர்கள் அவிழ்த்துவிட்டனர். அவை குதித்தோடித் தாமரைத் தடாகத்தில் நீராடிக் கரும்புத் தோட்டத்தை மேய்ந்து முத்தை உமிழ்ந்தன. அங்கிருந்து தும்பிக்கையில்லாத வேழம்போல வெளிப்பட்டுத் தொழுவில் புகுந்தன. தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் 'எருமைகள் பாலைப் பொழிந்து கொண்டு தொழுவை அடைகின்றன', (பா. 17) எனக் கூறும். இதேக் காட்சியை சிதம்பரம் பாண்டிய நாயகம் பிள்ளைத்தமிழ் எவ்வகை அடையும் உவமையும் இன்றி விவரிக்கும் (பா. 37) இப்புனைவு பழனிப் பிள்ளைத்தமிழில் இல்லை.

தண்டபாணி சுவாமிகள் விவரிக்கும் காட்சி எருமைப் பற்றியது ஆயினும் அதனை வெவ்வேறு பருவங்களில்சுட்டுகிறார். சென்னை முருகன் பிள்ளைத்தமிழில் சிறுபறைப் பருவத்திலும், தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழில் செங்கீரைப் பருவத்திலும், சிதம்பரம் பாண்டியநாயகம் பிள்ளைத்தமிழ் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ் ஆகிய இரண்டில் சப்பாணிப் பருவத்திலும் பாடுகிறார். இவ்வாறு நில வேறுபாடின்றி எருமையைப் புனைகிறார்.

எருமைப்புனைவு போலக் குரங்கு பற்றிய புனைவும் இவர் நூல்களில் அமைந்திருக்கிறது. சோலையிலிருந்த குரங்குக் கூட்டம் பூவிலிருந்த நறவை அருந்திக் குதித்துத் திரிந்தது. மன்மதனோ தன் கரும்புவில்லால் மலரம்புகளை எய்தான். அதனால் அவை காம மயக்கமுற்றுப் புணர்ந்து, பலாச் சுளையை விட்டெறிந்து விளையாடி இன்பமெய்தின. இங்ஙனம் சென்னை முருகன் பிள்ளைத்தமிழில் தாலப்பருவம் ஆறாம்பாட்டுச் சித்தரிக்கும். இந்நூலின் சிற்றில் பருவத்திலும் (பா. 6) குரங்கினம் பற்றிய பாடல் அமைகிறது. மேக முழக்கம் கேட்டஞ்சிய குரங்குகள்

மழைக்கஞ்சிக் கமுகு, தென்னை ஆகியவற்றுக்குக் கீழே தங்கின. பின் வெயிலுக்கு அஞ்சிப் பலாமரத்தில் பாய்ந்து, முதிர்ந்த கனிகளைக் கீறித்தின்றன. அடுத்து அவை வண்டுண்டு மிஞ்சிய தேனைக் குடித்து வெறியுற்றுக் கனிகளை வீழ்த்தின.

தாலப்பருவச் சித்திரம் இன்பக் காட்சியாகும். சிற்றில் பருவத்தின் குரங்கு பற்றிய புனைவு, அச்சத்தால் நிகழ்ந்து அழிவுகளை ஏற்படுத்திக்கொண்டு செல்லுவதாகும். இவ்வாறு ஒரே நூலில் ஒரு விலங்கினை இருவகையாகத் தண்டபாணி சுவாமிகள் புனைந்து காட்டியிருக்கிறார். இதனைத் தேவ கோட்டை முருகன் பிள்ளைத்தமிழிலும் (பா. 7), சிதம்பரம் பாண்டியநாயகன் பிள்ளைத்தமிழிலும் (பா. 5) பாடுகிறார். பிற்கூறிய நூலில் மழை பற்றிய குறிப்பில்லை. இதேபோன்ற காட்சி பழநிப் பிள்ளைத்தமிழில் கிடையாது.

சென்னை முருகக்கடவுள் பிள்ளைத்தமிழில் மீனை மையமாக்கிப் பாடிய பாட்டுண்டு. (பா. 4). பால்வடியும் மடியுடனே எருமை, நீர்நிலைக்குள் புகுந்தது; மீனினம் மடியில் முட்ட எருமை தன் கன்றெனக் கருதிப் பால்சொரிந்தது; மீனோ பாலைக்குடித்துப் பருத்து, மகிழ்ச்சியால் வெண்ணிற நாரைகளை அச்சுறுத்திக் கமுகு, வாழை, தாழை ஆகியவற்றின் குலைகள் அறப்பாய்ந்து மின்னல் எனக் குரங்கும் பாம்பும் அஞ்சிட, முகிலைக் கிழித்துச் சந்திரமண்டலம் புக்கு, விண்மீன்களை உழக்கிவிட்டுத் திரும்பியது. இங்ஙனம் மீனின் வான்வெளிச் செலவை ஆசிரியர் விவரிக்கிறார். தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழில் மீன்பற்றிய புனைவு இல்லை. (பா. 6) மீன்களைப் பற்றி மட்டும் குறிக்கிறார்.

வாளைமீன்கள் களைப் பறித்த மகளிர் கண்களுக்கு முரணி வானில் பாய்ந்தன. அவ்வொளியை மின்னல் என்று எண்ணிப் பாம்புகள் அஞ்சின. சோலைக் குரங்குகளும் அதற்கு அஞ்சிக் கண்ணை மூடின. கதிரவனின் தேர்ப்பரிகளும் அஞ்சிக் கதறின. இவ்வண்ணம் வாளைமீன்கள் மேலெழுந்து போயின. சிதம்பரம் பாண்டியநாயகம் பிள்ளைத்தமிழில் (பா. 55) இவ்விரிவான புனைவை அமைத்த ஆசிரியர், வள்ளிநாயகி பிள்ளைத்தமிழில்,

''கண்பகைப் பதுகண்டு களையெனக் கடைசியர்கள்
களைதொறும் அடர்ந்து மலரும்
காவியும், கமுகினிற் கதலியிற் குலையறக்
கண்டுமுகி லைக்கிழித்து
விண்படும் உடுக்களை உழக்கித் திரும்பிவரும்
மீனினங்களும்'' (31)

எனச் சுருங்கப் பாடுகிறார். முருகன் திருப்பதிகளிலுள்ள மீன்கள் வானுலகம் சென்று மீண்டுவருவதை ஆசிரியர் சித்திரிக்கிறார். முருகன் திருப்பதிகளில் செழிப்பான நிலையை உணர்த்தி, மீன்களுடைய கொழுமையையும், வளமையையும் இவர் எடுத்துக் காட்டுகிறார். மீன்வளத்தால் நீர்வளமும் நிலவளமும் கவிஞரால் வெளிப்படுகிறது.

பல நூல்களைப் பாடும் புலவனின் கருத்தும். கற்பனையும் ஒத்திருத்தல் இயற்கையேயாகும். அவ்வியல்பே அந்நூல்கள் ஓராசிரியனால் ஆக்கப்பட்டவை என்பதை நிலைநாட்டும். பிறபருவங்களிலும் இத்தகைய ஒற்றுமைக் காட்சிகள் உண்டு. தண்டபாணிசுவாமிகள், முருகனைச் சிறுதேர் உருட்ட வேண்டுங் காலை, சிவன் தேரூர்ந்த வரலாறு அவர் மனத்தே தோன்றுகிறது. திரிபுரம் எரிக்கத் தேருருவான அழகைச் சொல்லி அத்தேரிலே சிறுதேருட்டுக என ஆசிரியர் வேண்டுகிறார். இப்புனைவு சென்னை முருகன் பிள்ளைத்தமிழ், (பா. 93) பழநிப் பிள்ளைத் தமிழ், (பா. 97) தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் (பா. 91) ஆகிய மூன்றிலும் அமைந்திருக்கிறது. ஒரே கடவுளை ஒரேவகையான இலக்கிய வகையில் பாடும்போது ஒத்த கருத்துக்களும் கற்பனைகளும் தாமே அமைகின்றன.

**உவமை**

இவர் மிகுதியாக உவமை கூறும் இயல்பினர் அல்லர். வேண்டுமிடமறிந்து உவமையைக் கையாள்கிறார். முருகனைப் பாடுங்கால் சிறுசிறு உவமைகள் அமைக்கிறார். மண், பெண், பொன் எனும் மூன்றாசைக்கும் எரியும் நெருப்பை உவமிக்கிறார். (பா. 49) முருகன் வாளுக்குத் தெய்வானையின் நெற்றியை உவமிக்கிறார். (பா. 35) மகளிர் கழுத்துக்குச் சங்கினை உவமையாக்குதல் மரபு. ஆனால் அதே கருத்தை, 'மடமாதர் கழுத்தின் எழில்கள் (டு) உளம் நாவிச் சங்கு ஒலிந்தது என்று

பாடுகிறார். முருகன் அடியாரைத் தொல்லைப்படுத்தும் கசடர் செயலைத் தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழில், ‘கன்னாகுரித்துக் ககனம் அலர் கமலமலரைத் தொடுத்தாங்கு, (பா. 96) என்ற உவமைவழி உணர்த்துகிறார். முருகனடியார்க்குத் தொல்லையும் துன்பும் யாரும் இழைக்க முடியாது; அவ்வாறு முயல்வது கல்லிலே நாரை உரித்து ஆகாயத்தில் மலரும் தாமரையைத் தொடுத்துக் கட்டியது போன்ற செயலேயாம். இவ்வுவமையால் முருகனடியார்க்கு யாரும் தீங்கோ துன்பமோ இழைக்க முடியாது என்பதை இவர் தெளிவுறுத்துகிறார்.

**தனித்தன்மை**

பிள்ளைத்தமிழின் போக்கில் இவரிடம் சில தனித்தன்மைகள் திகழ்கின்றன. அவையாவன:

1. எல்லாப் பருவங்களிலும் இறுதிப்பாட்டு அடிதோறும் பருவப் பெயரினைப் பெற்று முடிவுறும்.

> “தெருள்நல்கும்உத் திரபொன்மயச் சிறுதேர்உருட் டுகவே
> சிவன்உள்ள(ம்) மெய்ப்பத! பன்மணிச் சிறுதேர்
> உருட்டுகவே” (100)

என்பதுபோல அமையும். அம்புலிப் பருவம் இதற்கு விதிவிலக்கு ஆயினும் தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழில், அம்புலிப் பருவத்திலும் ஓரடியில் இருமுறை ‘அம்புலி’ என்ற பருவப் பெயர் காணப்படும்.

> “மாதவ ஹும்புகழ் சீர்பெறு கந்தன்முன் வாவா அம்புலியே!
> மாசறும் ஐங்கர னார்மகிழ் தம்பிமுன் வாவா
> அம்புலியே!” (பா. 70)

இவ்வாறு அம்புலிப் பருவத்தில் பிறர் பாடிய வழக்கு இல்லை. இவரிடம் மட்டுமே உண்டு.

2. பிள்ளைத்தமிழ்ப் பாக்கள் சிலவற்றை வினாநடையில் தண்டபாணி சுவாமிகள் பாடினார். அவை வினாவாக உள்ளனவே அன்றிக் கருத்துவிளக்கத் தொடர்களாக இல்லை.

> “உன்னைப் பொருளா மெனக் கருதா(து)
> ஒருங்(கு)யாம் கூடிக் களிக்குதுமா?
> ஒருவன் உன்னில் வலியான ஈண்(டு)
> உள்ளான் எனும்பொய் உரைத்தேமா?

அன்னைக் குயர்பே ரருள்கொளும்நீ
ஆடவருமா(று) எண்ணிலுமா?
அடுத்தவுடன்நிற்(கு) அடங்கார் போன்(று)
அதட்டிச் சிலசொல் அறைந்தேமா?'' (73)

என்றவாறு பாடல் அமைகிறது. இந்நடையிலேயே சென்னை முருகக்கடவுள் பிள்ளைத்தமிழ், (பா. 78) பழனிப் பிள்ளைத் தமிழ், (பா. 73, 75) தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ், (பா 28) வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ், (பா.63) பாண்டியநாயகன் திருமுருகப்பெருமான் பிள்ளைத்தமிழ் (பா. 73) ஆகியவற்றில் பாடல்களை ஆசிரியர் பாடியிருக்கிறார். பாட்டுடைத் தலைவனை முன்னிலைப்படுத்திப் பாடுவது இவர் வினாநடையில் பாடுவதற்கு எளிதாக அமைகின்றது.

4. குழந்தை தூங்கவேண்டும் என்று கருதிப் பாடுவது தாலாட்டுப் பருவம். இதில் தண்டபாணி சுவாமிகள், 'பழனி முருகா! தாலாட்டுப் பாடுகின்றோம் என்று தூங்கிவிடாதே; அதை ஊசல் பாட்டு எனக் கருதி விழித்துப்பார்த்து எங்களை ஆண்டுகொள்', (பா. 22) என வேண்டுகிறார். அப்பாடற் பகுதி,

''முன்னம் பனுவல் துறைவகுத்த
முனிக்கோன் விதிக்கா, இப்பருவம்
மொழிகின் றனன், நீ இதுதானே
முற்றும் நலமாம் எனும் துணிவால்
இன்னம் துயிலக் கருதாதே
இந்நாள் துயிலும் அறல்வேண்டும்
ஏரார்ஊசல் துதியாக் கொண் (டு)
ஈனர் குடைத்திங்(கு) ஒழித்தெமையாள்'' (பா. 22)

பழனிப் பிள்ளைத் தமிழில் ஆசிரியர் முருகன் என்றும் விழித்து அருள் தரவேண்டும் என வேண்டுகிறார். அகத்தியர் மரபை மதித்துத் தாலப்பருவம் வேண்டுவதாகவும் இதனைத் துயிற் பாட்டாகக் கொள்ளாது, ஊசல் துதிப்பாட்டு எனக் கொண்டு பகையழித்து ஆள்க எனப் புதுமையாகப் பாடுகின்றார். தாலப் பருவத்தை ஊசல் பருவமாகக் கொள்ள முருகனை வேண்டு கிறார்.

5. காப்புக் கடவுளர் பெயரைப் பாட்டுடைத் தலைவனொடு தொடர்புடைய கடவுள் பெயராலேயே குறிப்பது மரபு. முத்துக்

குமாரசாமி பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில் சிவபெருமானை வைத்தியநாதர் என்றும், அம்மையைத் தையல் நாயகி என்றும், விநாயகரைக் கற்பக விநாயகர் என்றும் குமர குருபரர் பெயரிட்டு வழங்குகிறார். தண்டபாணி சுவாமிகள் அவ்வாறு வழங்காது, சிவபெருமான், அம்மை, விநாயகர் எனப் பொதுப் பெயராலேயே சுட்டுகிறார்.

பிள்ளைத் தமிழ்ப் புலவர்கள், காப்புப் பருவத்தில் இரண்டு பாடல்களைச் சந்தவிருத்தமாகப் பாடுவது இயற்கை. இவரோ எட்டுப் பாடல்களைச் சந்தவிருத்தமாகப் பாடுகிறார். தனக்குரிய வண்ணப் புலமையாலேயே இவர் இத்தகைய சந்தவிருத்தங் களைப் பாடியிருக்கிறார்.

பிள்ளைத்தமிழின் பாடுபொருள் பிள்ளைமை, இவ்வாசிரியர் முருகனையும் வள்ளியையும் போற்றிப் பாடியதுபோல மருத்துவ உண்மைகளை விளக்கி வாகடப் பிள்ளைத்தமிழ் பாடுகிறார். பிள்ளைமை விளையாட்டுகளைப் பாடிய நூலால் மருத்துவக் கருத்துக்களைப் பாடிப் பாடுபொருளில் புதியமரபை உருவாக்கி விட்டார். தனித்தனியே வைத்திய நூல்கள் தோன்றிய நாளில், நாடு முழுமையும் பரவிய இலக்கிய வடிவில் அதனை அமைத்தமை புதுமையானது. இவர் சித்தர் மரபுச் சாயலுடையவர் என்பதும் இம்மருத்துவ நூலால் உணர முடிகிறது.

இவர் மரபைப் பின்பற்றிக் கவுமார சபைப் புலவர்கள் பல பிள்ளைத்தமிழ்களை இயற்றியிருக்கின்றனர். அவர்களுள் குறிக்கத்தக்கோர் தவத்திரு கந்தசாமியடிகள், தவத்திரு முருக தாச சுவாமிகள், கோவைக் கவியரசு கு. நடேசக் கவுண்டர் ஆகியோர். தண்டபாணி சுவாமிகள் மரபினை இவர்கள் பின்பற்றியிருக்கின்றனர்,

தண்டபாணி சுவாமிகள் பாடிய ஐந்து பிள்ளைத்தமிழ் களிலும் பழனிப் பிள்ளைத்தமிழ் மிக்க சிறப்புடைய துதிநூலாகிப் பிறவற்றிலிருந்து வேறுபட்டும் நிற்கின்றது. ஆசிரியரின் சந்தப் புலமையும் பிள்ளைத்தமிழ்களும் தனித்து ஆராய்தற்குரிய ஆய்வுக் களங்கள். இங்கு எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்ப இவர் பாடிய பிள்ளைத்தமிழ்கள் பற்றிய செய்திகள் தரப்பெற்றிருக் கின்றன.

# சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு அடித்தளம்

நெல்லை. ந. சொக்கலிங்கம்

சமயம் என்பது மனித மனத்தைப் பக்குவப்படுத்தும் ஒரு நெறி. சமயம் அன்பை மக்கள் உள்ளத்தில் விதைக்கும் ஒரு தொடக்கம். அத்தொடக்கம் மேன்மேலும் வளர்தல் வேண்டும் என்ற நல்ல நோக்கத்திலேயே நம் சைவ, வைணவ அருளாளர்கள் அன்பை வலியுறுத்திப் போயினர். இப்படி வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் தோன்றிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், சென்ற நூற்றாண்டில் அவர் காலத்திய சூழலை எண்ணி அன்பின் அடிப்படையில் மலர்ந்த கொல்லாமைக் கோட்பாட்டை மிகுதியும் வலியுறுத்திப் பேசினார். இவர்தம் நூல்களில் இதனைப் பலபடியாக அழுத்தம் தந்து கூறுவார். இவற்றை அடிப்படையாகக் கொண்டு சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாட்டை வெளிப்படுத்துவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கம்.

**உயிரிரக்கம் ஒரு கோட்பாடு**

கொல்லாமை என்பது ஓர் அறம். இவ்வறத்துடன் தொடர்புடையவை அன்புடைமை, தீவினையச்சம், அருளுடைமை, புலால் மறுத்தல், இன்னா செய்யாமை, கொல்லாமை போன்றவை. இவையாவும் மக்கள் உள்ளத்தில் தழைக்க வேண்டிய அறங்கள். ஆதனால் திருவள்ளுவர் உடன்பாட்டு முறையிலும் எதிர்மறை வழியிலும் இவற்றை விளக்கினார். வள்ளுவ நெறியை வாழ்வியல் நெறியாகப் பின்பற்றிய தண்டபாணி சுவாமிகள் தம்முடைய எல்லாப் படைப்புகளிலும் இதனை எடுத்துக் கூறுகின்றார். கொல்லாமையையும், புலால் மறுத்தலையும் சுவாமிகள் மிகுதியாக அழுத்தம் கொடுத்துக் கூறப் பல்வேறு காரணங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று சுவாமிகளுக்கு வள்ளுவ அறத்தில் இருந்த பேரீடுபாடு. படைப்பு

இலக்கியத்தில் கொல்லாமையை – உயிர் இரக்கத்தை – ஒரு பாடு பொருளாய்க் கொண்டு பாடுவதுண்டு. ஆனால் தண்டபாணி சுவாமிகள் உயிரிரக்கத்தை ஒரு கோட்பாடாகவே கொண்டு தம் படைப்புகள் பலவற்றிலும் கூறிச் சென்றுள்ளார். இவர் தாம் கொண்ட கொல்லாமைக் கொள்கையை வலியுறுத்தும் அழுத்தம் இவருடைய நூல்களின் வழித் தெற்றெனப் புலனாகும்.

**கொல்லாமைக் கோட்பாடு உருவாகக் காரணம்**

தண்டபாணி சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பின்வரும் அடித்தளத்தில் உருவாகியுள்ளது எனலாம்.

**சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு**

குறளறத்தின் அடிப்படை

இறையுணர்வு அடிப்படை

யாகம் செய்தலை மறுக்கும் உணர்வு அடிப்படை

ஆங்கிலேயர்களின் செயல்களின் அடிப்படை

மக்களின் அறியாமை உணர்வு அடிப்படை

தண்டபாணி சுவாமிகள் பல நூல்களில் பல கடவுளர்களிடம் உயிர் இரக்கம் குறித்தும் உலகில் கொல்லாமையுணர்வு தழைக்குமாறு வேண்டுவதற்கும் மேலே கண்ட ஐந்தும் அடித்தளமாய் அமைந்தன எனலாம்.

**குறளறத்தின் அடிப்படை**

திருக்குறள் கூறும் அறநெறிகளில் சுவாமிகள் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். எனவேதான் இவர் திருக்குறள் போன்று 'மனுநெறித் திருநூல்', 'வருக்கக்குறள்' ஆகியவற்றை இயற்றினார். சுவாமிகள்,

> ''என்றும் இதயத் திரக்கமில ராய்உயிர்கள்
>
> கொன்று தின்பார்க் கஞ்சிக் குலைவேனோ?''
>
> (வெண்பாமாலை, 16)

"கொல்லாமை நாட்டம் குறிக்கும் குணத்தெனக்கோர்
வல்லாண்மை நல்குகில்லாய் மாய்த்தருந்தும் –
பொல்லார்க்கும்
ஆடல் அளித்திலையோ அன்றுஆவி னன்குடிச்சீர்
நீடவந்தாய் யாவும் வல்லானே" (வெண்பாமாலை, 89)

எனப் பழனித் திருவாயிரத்துள் வேண்டுவார். மேலும் சுவாமிகள் திருத்தணிகைப் பதிகத்துள்,

"நல்லா வொடுகன் றையும்வதைத்து நாய்போன்ற
ருந்தும் தீயவரைப்
பொல்லாக் குருடே நிகருலகிற் புண்பட்
டமையித் தனைபோதும்"
(திருத்தணிகைப்பதிகம், ப. 60)

என்று கூறுவார். இவ்வாறு சுவாமிகள் கூறுவதற்கு,

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்" (திருக்குறள், 2:4)

என்னும் திருக்குறள் அறத்தின் அடிப்படையில் உருவாகி வளர்ந்த கோட்பாடு எனலாம். இவ்வுயிரோட்டமான உணர்வு வளர்ச்சியின் வெளிப்பாட்டை நமக்கு நன்கு வெளிப்படையாகவே சுவாமிகள் 'அருளாட்சி' என்ற நூலில் தெளிவுபடுத்தியுள்ளார். அவ்வெண்பா வருமாறு:

"சங்கப் புலவர் தமதுள் இருமாப்பைப்
பங்கப் படுத்துமொரு பாவலவன் – எங்குட்கு
உரைத்ததமிழ் வேதத் துட்கருத்தும் றோர்ந்தார்
தரைத்தலத்திற் கொன்றருந் தார்" (அருளாட்சி, 33)

திருக்குறள் அறத்தை – தமிழ் வேதத்தை நன்கு கற்று உற்று உணர்ந்தவர்கள் கொன்று ஊன் அருந்த மாட்டார்கள் என்று அழுத்தமாகக் கூறிச் சுவாமிகள் தம் கொள்கையை வழி மொழிவார்.

சுவாமிகள் 'சத்திய சூத்திரம்' என்ற நூலில் கொல்லாமை நோன்பினைக் கைக்கொண்டு வாழும் ஐந்தாங் குலத்தினனை மரபு வழியில் கொள்ளல் கூடாது; அவன் மேன்மக்களுடன் கூட்டி எண்ணப்படுதல் வேண்டும்; பிறப்புரிமை பற்றி ஒதுக்குதல் கூடாது என எடுத்துரைப்பார். அச்சூத்திரத்துள் சுவாமிகள்,

"கடுகள வூனும் காதலிக் கில்லான்
ஐந்தாங் குலத்தினன் ஆயினும் அவனைச்
சிரியர் தம்மொடு சேர்க்கத் தகுமே"

(சத்தியசூத்திரம், 8 : 4)

என்று உயர்த்தி மொழிவது உயிர்க் கொலை, புலால் உண்ணாமை என்பவற்றின் அடிப்படையிலேயே ஆகும். இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் திருவள்ளுவர் கூறும் அறக்கொள்கை அடிப்படையில் தம்முடைய கொல்லாமைக் கோட்பாட்டை உருவாக்கினார் எனலாம்

**இறையுணர்வின் அடிப்படை**

சுவாமிகள் அறுசமயக் கடவுளரையும் பாடிப் பரவிய பரந்த உள்ளம் கொண்டவர். இவர் அறுசமயவுணர்வையும் போற்றி அவற்றுள் ஓர் இணக்கத்தை ஏற்படுத்த முனைந்த பண்பு மேலோங்கியவர். முன்னர் வாழ்ந்த அருளாளர்களின் இறையுணர்வை நன்கு புரிந்து கொண்டவர். உயிர்ரக்கம் என்பது அருளாளர்களின் அடிநாதமாக விளங்கிவந்துள்ளது. சுவாமிகளும் இவ்வடியவர் வழி வந்தமையினால் கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் வலியுறுத்திப் போந்தார். சுவாமிகள் தாம் இயற்றியுள்ள 'கீர்த்தனைப் பாடல்' ஒன்றில்,

"இந்த உலகும் பசுக்கூட்டமும் படும்பாட்டை
எண்ணிச்சற் றாயினும் இரங்காமற் போனாலும்
செந்தமிழ்ப் பெருங்கவிக் கூட்டத்தில் முன்னாகித்
திகழ்கின்றதாம் சந்தத்திருப்புகழ் விழைந்தேனும்
ஒரு சித்தன் நிசத்தனா வாரானோ – எனக்கு
உள்ள கவலை முற்றும் தீரானோ"

(கீர்த்தனைப்பாடல் திரட்டு: 7)

என்று வருந்தித் தம் கவலையை வெளிப்படுத்துவார். மேலும் இவர், திருத்தணிகைப் பெருமானை வேண்டும் போது சமயச் சான்றோர்கள் கூறும் கொல்லா விரதத்தை எடுத்துரைக்கக் காண்கின்றோம்.

"கொல்லா விரதம் பெரிதா மென்னக் கொள்ளும்
சமயத் தினர்கூறும்
எல்லாக் குருவும் நீயே யெனநம் பென்னைப்
பார்த்தல் இழிவன்றோ?"

(திருத்தணிகைப்பதிகம், பக்கம், 155)

என வேண்டும் சுவாமிகள்,

"நன்றருந்துங் கனிவாயால் நரர்தாமும் நான்குயிரும்
கொன்றருந்தும் கொடுமையறக் கொல்லாமை நாட்டுதியே"

(திருத்தணிகைப்பதிகம், பக்கம், 197)

என்று கொல்லாமையை உலகில் நிலை நாட்டும் வண்ணம் வலியுறுத்தக் காண்கின்றோம் இவ்வாறு பல்வேறு கடவுளரிடமும் சுவாமிகள் முறையிடுவார் வேண்டுவார். இப்படி இவர் கொல்லாமைக் கோட்பாட்டைக் கூறுவதற்கு, முன்னர் வாழ்ந்த இறையடியார்களின் அருட்பாடல்களும், வாழ்வும் ஒருவகையில் அடிப்படையாக அமைகின்றன.

**யாகத்தில் ஊன் இடுதலை மறுத்தல்**

இறைவனுக்கு நேர்த்திக் கடன் செய்யும் முறையில் வேண்டுதலுக்காக இன்று உயிர்களைப் பலியிடுதல் நிகழ்கின்றமை கண்கூடு, கடவுளின் பெயரால் வேண்டி, வேள்வியில் உயிர்ப்பலி இடுதல் வேதகாலத்தில் நிகழ்ந்துள்ளது. இடும்பன், காளி, இசக்கி போன்ற சிறு தெய்வங்களை வேண்டி ஆடுகளையும் பசுக்களையும் வெட்டிப் பலியிடுவர். இதனை எண்ணி வருந்திய சுவாமிகள்,

"இன்பம் இடும்பற்கு இறைச்சி நசைஉண்டே
என்னவுரைப் பார்க்கும் இரங்குவையோ"

(வெண்பாமாலை, 34)

என்று பழனியாண்டவனிடம் வேண்டுவார்.

"கொல்லா விரதக் குணமே தவமாகும்
அல்லாமற் றெல்லாம் அவமாகும்" (அருளாட்சி, 32)

எனத் தவத்திற்குச் சுவாமிகள் விளக்கம் கூறுவார். இத்தகைய செயலை எண்ணி உள்ளம் நனி வருந்திய சுவாமிகள் வேதத்தையும் சாடத் தவறவில்லை. வேதத்தின் முதற்பகுதியான கரும காண்டத்தில் வேள்வியிற் கொலை செய்யப்படுவது பற்றிக் கூறப்பெறுகின்றது.

"நான்முகப்பில் வேள்விநுவன்ற கொடுமையெண்ணி
நான்முகத்தோன் நாவினளை நான்மதியேன் – ஊன்முகக்க
ஒண்ணாதென் முப்பால் உரைத்தோன் ஒருநாவின்
பெண்ணாள் உயர்ச்சிகண்ட பின்" (அருளாட்சி, ப. 1)

என்று கலைமகளையே தாம் மதிக்க மாட்டேன் எனக் கூறும் நுட்பம் அறியத்தகும். சுவாமிகள்,

"புல்லருந்தும் பசு வின்றிரள் யாவிற்கும்
பூம்புக லூர்வளர் புன்னையின் சோலைக்கும்
கொல்லத் துணிவது வேள்வியி லாயினும்
கொடுமையென் றோதுநர் கும்பிடும் கோவிற்கும்"
(கீர்த்தனைப்பாடல் திரட்டு, 34)

என்ற கீர்த்தனையில் "கொடுமை" என்ற சொல்லையே குறித்திடுவார். பிறவுயிர்களுக்குத் தீங்கு செய்யாமையே அறிவு பெற்றதன் அடையாளம்.

"வேதம் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடா தன்றோ"

என்று சுவாமிகள் தம் கொல்லாமைக் கோட்பாட்டை முழு மூச்சுடன் மிகுந்த அழுத்தம் தந்து பேசுவதற்கு,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று" (திருக்குறள், 259)

என்னும் குறளே அடிப்படை எனக் கருத ஒண்ணும். ஆக, வேள்வியின் பொருட்டு உயிர்களை வதைப்பதையும் சுவாமிகள் மிகுதியும் கடிந்துள்ளார்.

**ஆங்கில ஆட்சியில் கொடுமை**

சுவாமிகள் ஆங்கிலேயர் ஆட்சி செய்த நாளில் தம் கண்முன்னே உயிர்க்கொலையும் ஊன் உண்ணுதலும் மிகுதியும் நடைபெறுதலைக் கண்டு உள்ளம் துணுக்குற்றார். அரசனைப் பற்றிக் கூறவந்த சுவாமிகள்,

"பொய்புலை கோரம் பொருள்நசை ஆகிய
எய்தும்மன் உலகோர்க்கு எமன்அனை யானே"
(சத்தியசூத்திரம், 41)

எனச் சூத்திரம் ஒன்று வகுப்பார். மற்றுமோர் நூலில்,

"கொன்று புலாலருந்திக் கொக்கரிக்கும் கோலுடையார்
என்றுமுய்ய மாட்டார்க ளே" (அருளாட்சி, 15)

என்று தெளிவுறுத்துவார். ஆங்கில அரசு செய்த கொலை, புலைகளை எண்ணி வருந்திய சுவாமிகள்,

"பெய்யும் கனமுகில் ஓரேழும் ஒல்கப் பிறங்கல் எடுத்து
உய்யும் படிபல் பசுக்காத்த நாதனின்று ஊன்விழைந்து
கொய்யும் புலையர்க்கு அரசாளும் ஆர்வம் கொடுத்தது
என்னே
நெய்யுந்து செங்கம லப்பொருட் டேவளர் நேரிழையே"
(திருமகளந்தாதி, 45)

என்று திருமகளை வேண்டுவார்.

ஆங்கிலேயர்கள் ஆட்சியின் பேரால் செய்த பல்வேறு கொடுமைகளைச் சுவாமிகள் தாமே நேரிற் கண்டு மனம் உடைந்து போனார். இதன் வெளிப்பாட்டைப் பின்வரும் கீர்த்தனை வழியே நன்கு அறிய முடிகின்றது.

"சப்பாத்திக் கள்ளிக்கும் தரிசுக்கும் தீருவை
தடையறக் கொடுத்திடத் தண்டங்கள் செய்வதும்
மெய்ப்பார்ப்பார் வீட்டினிற் பிறந்த பிள்ளைகளும்
வேதங்கள் படியாமல் வேலைகேட் டலைவதும்
துப்பாக்கி எனும்திருட் டாயுதம் வாள்முதற்
சொல்லுநல் ஆயுதத் தொகைகளை வெல்வதும்
பொய்ப்பாட்டுக் கவிஞர்க்குப் புகழ்ச்சியும் மெய்ப்பாடற்
புலவருக் கிகழ்ச்சியும் பொலிவதும் போலுள்ள-
இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமையை
என்னென்று சொல்வேன் அம்மா"
(கீர்த்தனைப்பாடல் திரட்டு, 14)

என்பது அக்கீர்த்தனை. இக்கொடுமைகளுக்கெல்லாம் மகுடம் வைத்தது போன்று அமைவது உயிர்க்கொலையும் ஊன் உண்ணலும் என்று இவர் எண்ணியிருத்தல் வேண்டும். எனவே அவர் 'ஆங்கிலியர் அந்தாதி' ஒன்றைப் பாடினார். இந்நூலில் ஆங்கில அரசின் பல்வேறு கொடுமைகளை விரிவாகக் கூறியுள்ளார்.

"இளம்கன் றாதி யுங்கொல்லும் ஆங்கிலியர்" (31)

"பசுக்கொலை செய்யும் வம்பர்" (83)

"படிமாது கோவெனக் கூவும் அநீதி பலபுரிந்து
கடிநாய்க்கும் தீர்வைப் பணங்கொள்ளும் வஞ்சக் கயவர்"
(73)

"ஈன மலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு
மானம் அணுவள வேனும்இல் லாக்கொடு வஞ்சகர்" (76)

என்று இவர் விளிப்பன சான்று.

மக்கள் அடிமைகளாய் வாழ்வதனை எண்ணியே சுவாமிகள் பல தெய்வங்களையும் பின்வருமாறு வேண்டுவார்:

"விழிஎதிர் கண்ணனைப் பார்த்தனைப் போலும்வல்
வீரர்களைப்
பொழிதரச் செய்திறல் இல்லைகொல்லோ" (6)

"தெய்வங்கள் கோடியுள் ஒன்றேனும்
ஆன்நிணம் தின்றுவப்பார்
பொய்வந்த நீதிகண்டு உட்புழுங்காத
புதுமை என்னோ" (12)

மேலைநாட்டினர் வரவால் நாகரிகம் பெருகியது. எனினும் கொலை, புலை முன்பு இருந்ததனை விடவும் பெரிதும் தலை விரித்து ஆடிற்று. இதனை எண்ணி வருந்திய சுவாமிகள் கொல்லாமைக் கோட்பாட்டை ஆங்கில ஆட்சியின் செயற் பாடுகள் அடிப்படையில் உருவாக்கினார் ஆதல் வேண்டும். ஆகவேதான் சுவாமிகள்,

"கன்று டன்பசு வுங்கொல் பாதகர்
கரிய புன்குடை நீழலில்
துன்று மென்னிடை வந்து வந்து சொலுஞ் சொல்
முற்றுமெ யல்லவோ" (திருத்தணிகைப்பதிகம், ப. 46)

என்று கூறுவாராயினர்.

### மக்களின் அறியாமை

உயிர்களிடத்து அன்பு கொள்வதே இறைவனை வணங்கு வதன் நோக்கம். அதுவே வீடு பேறளிக்கும் வாயில் என்று மக்களில் பலர் அறிந்து கொள்ளவில்லை. இதனை உணர்ந்த சுவாமிகள் மக்கள் அறியாமையினால் செய்யும் உயிர்க் கொலையை எண்ணி வருந்தினார்; ஊன் உண்ணுதலின் கொடுமைகளை உரத்த குரல் கொடுத்துக் களைய முற்பட்டார். உணவின் பொருட்டும், கடவுள் வேண்டுதலின் பொருட்டும் பசுக்களையும் ஆடுகளையும் கொன்று ஊன் உண்ணுதலை அறியாமையால் மக்கள் செய்கின்றனரே என எண்ணி இவர்

வருந்தினார். இதனைக் கருதியே பழனித் திருவாயிரம் என்ற நூலில்,

"கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முத்திபதம் தந்தாலும் – மேவற்கு
இசையேன்காண் என்னையின்னம் ஈடழிக்க வேண்டாம்
திசைதேர் பழனியர சே" (வெண்பாமாலை, 3)

எனச் சொல்லி முத்தி நிலையைக் கூட வேண்டாம் என்பார். மேலும் இவர்,

"ஊனை விரும்பியுண்ணும் கானவர்கள் போல்வர்
ஈனர்களே" (தில்லைபாதி நெல்லைபாதி, 4)

"நன்னாக ரீகமெய்தி நாய்நரிபோன் றூனெலும்பு
தின்னாதார் வேண்டுமெழிற் றில்லையே"
(தில்லைபாதி நெல்லைபாதி, 20)

என்று மக்களுக்குக் கொல்லாமை நோன்பை அறிவுறுத்துவார். இரக்கவுணர்வுடையோர் தேவர்க்கும் மேலான முதிர்ந்த ஞானம் உடையோர் என்று சுவாமிகள் அருளாட்சி நூலில் கூறுவார்.

"தேவரே எனினும் ஒன்றைச் செற்றருந்தில் தீயரே" (13)

என்று அருளாட்சியில் எடுத்துரைப்பார்.

"கொல்லாநெறியே குணம்" (48)

"எல்லா வடிவும் இறைவனே" (51)

"ஊன் உண்பார்க்கு நரகமே உண்டு" (88)

எனவெல்லாம் மக்களுக்கு இவர் அறிவுரை கூறி ஆற்றுப் படுத்துவார்.

"கல்லார் எனினும் கருணை யுடையரெனில்
நல்லாரே நூல்முழுதும் நன்குணர்ந்த – வல்லார்கள்
மானும் மொழியினராய் வான்விரும்பி ஊனுகர்ந்தா
ரேனும் இழியுடையா ரே" (அருளாட்சி, 67)

என்பதே சுவாமிகளின் அறிவுரை. இதன் அடிப்படையில் மக்களை நெறிப்படுத்த வேண்டிய புலவர்களுக்குச் சுவாமிகள்,

"கொல்லல் ஊன்சமைத்த லாதிய விரித்துக்
கழறுந் துணிவுடைக் கவிப்புல போரைப்
பேயரென் றுலகம் பெரிதிகழ்ந் திடுமே"
(அறுவகை, புலமை, தவறியல்பு, 14)

என்று அறிவுறுத்தியுள்ளார் தம்முடைய அறுவகை இலக்கண நூலுள், இவ்வாறு மக்களின் அறியாமையினால் - வேண்டுதல் களினால் ஏற்படும் கொலை புலைக் குற்றங்களைக் களையச் சுவாமிகள் முனைந்துள்ளமை கண்கூடு.

தண்டபாணி சுவாமிகளின் உயிரிரக்கம் என்னும் கொல்லாமைக் கோட்பாடு திருக்குறள் அறங்களின் அடிப்படையில் உருவாயிற்று. நம் முன்னைய அருளாளர்களின் இறையுணர்வு வழியில் ஆறு சமயக் கடவுளர்களிடத்தும், கொல்லாமையும் புலால் உண்ணாமையும் உலகில் மக்களிடம் நிலைத்திட இவர் வேண்டுவார். வேதத்தின் கருமகாண்டம் வேள்வியில் உயிர்க் கொலை செய்வதனை வற்புறுத்தும். இதனை மறுத்தும் சுவாமிகள் தம் கொல்லா நெறியை விரித்துரைத்தார். ஆங்கிலேயர் வரவால் உயிர்க்கொலை புரிந்து ஊன் உண்ணல் தங்கு தடையின்றிப் பெருகிற்று. இவற்றைக் கண்முன் கண்ட சுவாமிகள் ஆங்கிலியர் அந்தாதி மூலம் தம் உயிர்க் கொள்கை யான கொல்லாமையுணர்வை வெளிப்படுத்தினார். மக்களின் அறியாமையைப் போக்கிப் பிற உயிர்க்குத் தீங்கு செய்தலும், புலால் அருந்தும் புன்மைச் செயலும் இறைவனுக்கு உகந்தவை அன்று என்று கூறுமாறு புலவர்களுக்கு இவர் அறிவுறுத்துவார். இப்படிச் சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பல அடித் தளங்களிலிருந்து உருவாகி வளர்ந்துள்ளது.

# ஏகன் எழுபது

## சோதிபாய் தேவதாஸ்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 1839-இல் திருநெல்வேலியில் தோன்றி, இலக்கணம், இலக்கியம், சாத்திரம், தோத்திரம் எனப் பல துறைகளைத் தம் புலமைத் திறத்தால் வளர்த்து, நடுநாட்டுத் திருவாமாத்தூரில் தங்கித் தவம் செய்து 1898-இல் ஞான சமாதி அடைந்தவர். இவர் எழுதியுள்ள பற்பல நூல்களில் பதிப்பானவைகளைவிடப் பதிப்பாகாதவைகளே மிகுதி எனலாம். அன்பர்கள் விருப்பத்திற்கேற்பச் சில அவ்வப்போது கௌமார மடாலயத்தால் பதிப்பேறுகின்றன. அவ்வகையில் திரு. செ. அழ. செல்லப்பன் என்பவரின் மகன் திருமண விழா மலராக வெளிவந்ததுதான் 'ஏகன் எழுபது' என்ற நூலாகும்.

### ஏகன் எழுபது – நூலமைப்பு

எழுசீர் விருத்த யாப்பில் அமைந்துள்ள ஏகன் எழுபது என்ற நூலில் 70 பாடல்களைக் காணமுடிகின்றது. அவை 1. சௌரப் பத்து 2. சைவப் பத்து 3. சாக்தேயப் பத்து 4. வைணவப் பத்து 5. காணாபத்தியப் பத்து 6. கௌமாரப் பத்து 7. சமயாதீதப் பத்து என்னும் ஏழு பத்துக்களில் அடங்குகின்றன.

### சௌரப் பத்து

சௌரம் என்ற சொல் சூரியனைக் குறிப்பிடுகின்றது. சௌரக் கடவுளை வழிபட்டோரே சௌராட்டிரர் ஆயினர் எனலாம். கதிரவனைக் குறித்து வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய பல நூல்களில் 'ஞாயிறு ஆயிரம்', 'இரவி எழுபது' என்பவை குறிப்பிடத்தக்கன. சௌரப்பத்து என்னும் இப்பதிகத்தில் கதிரவனின் பல்வேறு சிறப்புக்களை விளக்கியுள்ளார் சுவாமிகள்.

கதிரவன் கண்கண்ட கடவுளாகத் திகழ்கிறான். ஞாயிறு வரவில்லையென்றால் உலகமே நிலை குலைந்து விடும். 'சதி அனுசூயா' நாடகத்தில் நர்மதையின் சாபத்தால் நான்கைந்து நாட்களாகச் சூரியன் வராததால் அந்நாட்டரசனும் அமைச்சனும் அருந்துயருற்று அனுசூயாவிடம் தஞ்சம் புகுந்ததையும், அவள் நர்மதையின் உதவியால் கதிரவனை வரவழைத்ததையும் சங்கரதாஸ் சுவாமிகள் விளக்கியுள்ளார். இப்படிக் கதிரவனின் இன்றியமையாமையை அறிந்திருந்தும்கூட, வேறு தெய்வங்கள் உண்டெனக் கூறுவதேன் எனத் தண்டபாணி சுவாமிகள் வியக்கிறார். பயிர் வகைகளையும், மற்றெல்லா உயிரினங்களையும் தழைக்கச் செய்பவன் கதிரவன். எவர்க்கும் அவரவர்க்கெதிராத் தெரிதரும் செயலுடையவன்.

ஞாயிற்றிடமிருந்து ஒளியைப் பெறுவதால்தான் திங்கள் ஒளிர்கின்றது. அதனால் தவத்தோர் கதிரவனையே பரம் பொருளாகக் கருதுவர். அவர்கள் பிற தெய்வங்களைப் பரம் பொருளாகக் கருதுவோரின் மொழியால் சிறிதும் துயரடைவதில்லை. வெண்மைக் கதிர்களையுடைய திங்களை விழுங்கி மீண்டும் விடுப்பதுதான் கதிரவனின் வேலையாகும். அதனால் திங்கள் இவனுடைய மனைவியாகிறாள். இவ்விருவருக்கும் பிறந்த குழந்தைகளே சராசரமாகும் (இயங்குயிர், நிலையுயிராகும்). அதனால்,

> "சீதமா மதியும் தானென உணர்விற்
> சிறந்தவர்க் குணர்த்துமெய்த் தேவே" (9)

எனப் பாராட்டுகிறார் சுவாமிகள்.

கதிரவனின் கண்முன்னால் பல நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. செங்கோல் மன்னரும் கொடுங்கோல் மன்னரும் ஆண்டு செல்கின்றனர். மக்கள் பிறப்பெடுத்துப் பின் இறக்கின்றனர். சிலர் துன்புறச் சிலர் களிப்புற்று வாழ்கின்றனர். இவற்றைக் காணும் கதிரவனை எளியவன் எனலாமோ?

> "மன்னவர் நடத்தும் இருவகைக் கோலும்
> வருவதும் போவதும் மனுக்கள்
> இன்னலுற் றழுங்கி வாடலும் களிப்புற்(று)
> இருப்பதும் காணும்நீ எளிதோ" (3)

என வியக்கின்றார் சுவாமிகள். இந்திரனுடைய ஏவலைக் கேட்கும் சூரியன் பரம்பொருளாக இருக்க முடியுமா என்பது சிலரது ஐயம். இவ்வையத்தைக் களைவதுபோல் அபிதான சிந்தாமணி என்ற நூல், 'இச்சூரியன் மேருவிற்கிடது பக்கத்திலிருந்து கொண்டு மேருவை வலம் செய்பவன். முதலில் இந்திரப் பட்டணத்திலிருந்து புறப்பட்டு யமன் பட்டணத்தை யடைந்து. பிறகு வருணன் பட்டணத்தைத் தாண்டி, சோமன் பட்டணத்தை அடைந்து மீண்டும் இந்திரன் பட்டணத்தை அடைகிறான்'' (ப. 721) எனச் சூரியனின் பாதையை விளக்கிக் காட்டுகின்றது. தன்னைப் பழிப்போருக்குச் சூரியன் ஒளிதராமல் இருப்பதில்லை. அதனால் அவன் தனிப்பெரும் சுடர்தான் – பரம்பொருள்தான் என்பது தண்டபாணி சுவாமிகளின் ஆணித்தரமான கருத்தாகும். இவன் ஆற்றல் மிக்க அனுமன் முதலோனோரின் திருக்கரங்களால் தொழப்பட்டவன். 'இவன்தான் எமக்குரிய பிரான்' என்று ஐயமின்றி வழிபடுதற்குரிய கதிரவன் இருக்கும்போது, உலகிலுள்ளோர் தமக்குரிய பிரான் என்று பிறபிற தெய்வங்களைக் கூறுவது ஏனோ என வியக்கிறார் சுவாமிகள்.

''செம்பிரா னாகிச் செழுங்கதிர் விரிக்கும்
திருவருள் விளக்கமே! சிறியோர்
வெம்பிரான் எனச் சொற்(று) இகழினும் பொறுக்கும்
விமலனே! வித்தக மணியே!'' (5)

என்று இவனது பரத்துவத்தை விளக்கியுள்ளார்.

**சைவப் பத்து**

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொள்வது சைவ சமயம். இப்பதிகத்தில் சிவபிரானின் பரத்துவத்தையும், சிவனருள் பெற்ற சைவக்குரவர்களையும் அடியவர்களையும் பற்றிப் பேசுகின்றார் நூலாசிரியர். இடையிடையே சிவனருளை முழுமையாகப் பெற இறைவனிடம் கசிந்துருகுகிறார்.

சிவபிரான் நித்தியப் பொருள் இவன் கல்லால மரத்தடியில் வீற்றிருக்கும் ஞானக்குன்றாவான். இவன் வேத நாயகன்; எழுதிடா மறை துதிக்கும் இறை; யாவுமானவன்; கருணை வாரிதி; கயிலாயம், மேரு என்னும் மலைமேல் உறையும் முதல்வன்; அடங்காப் புகழுடைய புனித சங்கரன். அமரர்

சேகரன். பஞ்செனத் திகழும் மழவிடை இவர்ந்த பரமன்; மாதொரு பாகன்; விடைமேல் கருநிறத்து ஒருத்தியுடன் (உமையுடன்) எழுந்தருளும் கடவுள். இவன் விநாயகர்க்கும் முருகனுக்கும் தந்தையாவான். அதனால்தான் 'வேல் வல்லான் எனும் பேர் ஒரு மகற்கு அளித்த விமலனே' என விளிக்கிறார் வண்ணச்சரபம். இவன் என்பு கோத்தணிந்து சுடலையில் ஆடும் இறைவன்; தென்புலத்திற்குரிய எமன் உயிர் விடும்படி மார்க்கண்டேயனுக்காகத் தம் திருவடிகளால் அவனை உதைத்தவன். மன்மதனுடலை எரித்த நிமலன். இவன் கற்றைச் சடையையும், புனலையும், பிறையையும், கொன்றை மலரையும் உடையவன். முக்கண் நாயகன். அடிமுடி காண முயன்ற திருமாலாலும் பிரமனாலும் உணரவியலாத தெய்வம். இதையே திருஞானசம்பந்தரும் சிவனைச் சுட்டுமிடத்து,

''கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே''
(மூன்றாம் திருமுறை, திருவாவடுதுறை 9)

எனக் குறிப்பிட்டுள்ளது ஒப்பு நோக்கத்தக்கது. இத்தன்மையே சிவனைப் பரம்பொருளாக்குகின்றது. 'பரமசிவமெனத் திகழும் திருப் பொதுவுடைய சிற்பரனே' என்றும் சுட்டுகிறார் சுவாமிகள்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகியோரின் செயற்கருஞ் செயல்களைச் சுட்டி அதற் குரிய சிவனருளை விளக்குகிறார் தண்டபாணி சுவாமிகள். சைவப் பயிரின் களைகளை (சமணர்களை) அகற்றிய பெருமைக் குரியவர் சம்பந்தர். இதைத்

''திருவருள் வடிவம் ஒருவனாற் சமணத்
திரளெலாம் மடிவுறச் செய்த
பொருவருள் திருநீ(று) ஆகிய மூன்றும்
புணர்ந்தவர் வருந்தல்வீண் போமோ'' (1)

எனக் குறிப்பிட்டுள்ளார். 'தெப்பமாம் எனக் கல் மிதந்திடப் புரிந்தோர் தெளிதமிழ்க் கிழவனைப் புரந்த அப்பனே' (4) என அப்பரைச் சுட்டுகிறார். பரவை நாச்சியாரின் மனையில் திருவடி வைத்தவர் (3) என்பதில் சுந்தரரைச் சுட்டுகிறார். 'கோல்வழா வழுதிக்கு இனியவன் தனக்காக் குருந்தில் வந்தருளிய கோவே' (2) என்னும் அடிகளாலும், பிரம்படிபட்ட சிவனின் செயலாலும் மணிவாசகரைச் சுட்டியுள்ளார் சுவாமிகள். சைவ சமயமே

நால்வரால்தான் வாழ்கின்றது என்கிறார். சிவன் அகத்தியருக்கு அருள் செய்தவன்; பற்றொழிந்தவர்க்கு இறைவன். அன்பு கொண்ட எல்லா அடியவர்க்கும் அருள்பவன்.

சுவாமிகள் சிவனிடம் தன்பால் அருள் காட்டுமாறு வேண்டுகிறார்.

"நால்வரால் திருந்தும் உனதுமெய்ச் சமயம்
நலமெனத் தெளிதரும் நாயேன்
பால்வரா திருந்(து)இப் பருவால் விளைத்தால்
படிற்றினர் இகழ்ந்திடார் கொல்லோ" (2)

என உருகி வேண்டுகிறார். 'அப்பர் பக்கத்தில் அடியேன் அமர்வது எப்போது?' என வினவுகிறார் (4)

"அஞ்செழுத் துரைத்தார் அனைவரும் தன்வீ(டு)
அடைந்தனர் எனஉல(கு) அறைந்தும்
நெஞ்செலாம் புண்ணாத் துடிதுடித் தயரும்
நினைவெனக்(கு) அளித்ததேன் நிகழ்த்தாய்" (7)

என வினாக் கணை தொடுக்கிறார். மணிவாசகர் போல் சிவனது துணைப்பதம் சூடும் நாள் என்றோ என ஏங்குகிறார் (8). உலகிலுள்ள தீயோரும் சிவனருளால் திருந்த வேண்டும் என விரும்புகிறார்.

**சாத்தேயப் பத்து**

சக்தியை முழுமுதற் கடவுளாகக் கொள்வது சாத்தேய சமயம்.

சொல்வதற்கரிய சர்வ சூனியத்திலிருந்து பல்வகை உயிர் களைப் பயந்த தாய்தான் சக்தி. அதனால்தான், 'உலகெலாம் பயந்த நங்கையே! நாரியர்க்கரசே' (6) எனச் சுவாமிகள் இவளை அழைக்கிறார். 'அன்னையாய் உயிர்கள் அனைத்தையும் புரக்கும் அமலையே! அணங்கினத்தரசே' (4) எனவும் அழைக் கிறார். 'எவரும் துதிக்கும் இருபதத்து ஒரு தாய் என மறை எடுத்தினிதியம்பும் கேவலப் பொருளே' (8) எனவும் விளிக்கிறார். இவள் பாலை, புவனை, திரிபுரை என்னும் மூன்று வடிவான சிவை ஆவாள். செல்வமும் தவமும் தரும் எழில் திருவாகவும் (வைணவ சமயத்தார் இலக்குமியையே திருவென்பர்) விளங்கு கிறாள் ஆரணத் தொகையும் ஆகமப் பிரிவும் இவளை அனு

தினமும் பரவுகின்றன. மூவரும் இவளைப் பணிகின்றனர் இவள் மூன்றெழுத்து வடிவானவள். இவள் பிரமன், திருமால், உருத்திரன், மயேசன், சதாசிவன் என்னும் ஐவரைப் பயந்த பராசக்தி. இருப்பினும் அவரவர் செய்யும் தவத்தால் அவரவர்க்கு மனைவியுமானவள். தெய்வம் என இவள் எடுக்கும் பிற வடிவங்கள் எல்லாம் இவளது திருவருட் பாங்கினால்தான். அமைகின்றன. இமய மலையரசன் பெறும் பொருட்டு அவனுக்கு மகளாகவும் சென்று அருளுகிறாள். இவள் பிரமனோடு நடம் புரிந்தவள். சங்கர முனிவர் முதலானோர் போன்ற அருள் பெருக்கினைக் கொண்டவள். மயிலனைய மங்கள வடிவும், பொருப்பனைய மார்பும், வாரணப் பிடியனைய நடையும், பண்ணை நிகர்த்த கிளிமொழியும் கொண்டவள். இவளைக் கிளிமொழிக் குயிலாகவும், அன்னப் பெடையாகவும் காண்கிறார் சுவாமிகள். இவள் அடியவர்க்கு முலைப்பால் அளிக்கும் ஆரணங்கு; அடியவர்க்கிரங்கி வாம் தரும் பெருவாழ்வு. இவள் சினந்தால் உலகமே அழியும். தெய்வநாயகியான இவள் விநாயகன், முருகன் ஆகியோருக்குத் தாயாய் ஞானமும் சித்தும் தரும் அமுதளிப்பவள்; திருமாலின் சகோதரி.

இத்தகு சக்தியின் அருளை கனிவுடன் வேண்டுகின்றார் தண்டபாணி சுவாமிகள். 'சக்தியே, உலகு பயந்த நீ இருந்தும் நான் பரிதவித்து உழன்றேன். என்னைத் தன் அருள் திறத்தால் தாங்குவது யாரெனக் கருதி மிகவும் வருந்தினேன்.

"என்னையீன் றளிக்கும் உனையலால் சிறியேன்
இயற்றிய குறையெலாம் குணமாப்
பின்னையார் பொறுப்பார்? ஒருவர்வேறிலையாற்
பெரிதருள் வழங்கியாண் டருள்வாய்" (4) எனவும்,

'கசடரோடு இணங்கிடாது அருள்வாய்' (5) எனவும்,

'சீரியரொடும் எனைச் சேர்த்து ஆள்' (8) எனவும்,

"அடிமுடி நடுவாம் மூன்றெழுத் துருவம்
ஆகிநின் றாடும்நின் அருட்சீர்
கொடியனேன் தனக்கும் கிடைக்குமோ எனவே
குலைவுறும் தமியனேற் கருள்வாய்" (7)

எனவும் வேண்டுகிறார். சிவனோடு நடம் புரிந்த சக்தி, தனது நாவகத்தில் நடம் சிறிது இயற்றிடற்கு இரங்காத நிலைக்காக மிகவும் வருந்துகிறார் சுவாமிகள்.

**வைணவப் பத்து**

திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொள்வது வைணவ சமயமாகும்.

'ஆதிமூலமே' என்றலறிய கஜேந்திரன் என்ற யானைக்காக முதலலையை அழித்த திருமால்தான் பரம்பொருள். எதற்கும் காலம்தான் காரணம் எனத் தவறாகக் கூறும் சிலருக்கும் கருணையால் அமுதருள் அறம்சேர் கோலமாக விளங்குபவன் திருமால். இவன் முக்கண் சிவன் முதலானோர் வழிபடத் திகழும் முகுந்தன்; விளைப்பிணி தவிர்ந்திட விளங்கும் சமரச போதத் திருவடி சூடும் தனியன்; சற்குருபரன், தாமரை போன்ற நான்கு கரங்களையுடைய வரதன்; மாதவ மணி; இலக்குமி இருந்த, துளசி இருக்கும் மார்பினன்; ஐம்படைப் பகவன்; காக்கும் கரங்கள் இருநான்கில் ஒன்றில் சுடராழி கொண்டவன். அச் சக்கரப் படையால் முரன் என்னும் அசுரனை மாய்த்து முராரி என்ற பெயர் பெற்றுள்ளவன். இவ்வாறு வானவர்க்கு அரசனாகவும் திகழ்கிறான்.

> "தண்வளி தவழும் தவளமாக் கடல்மேல்
> தரணிவாழ் உயிரெலாம் தழைப்பக
> கண்வளர்ந் தருளும் நெடியமா முகில்நேர்
> கவினுடைக் கடவுள் நாயகன்" (3)

குதிரை முகமுடைய அயக்கிரிவனும் இவன்தான் (அயக்கிரீவர் பற்றிய கதையை அபிதான சிந்தாமணியில் (ப. 76) கண்டு கொள்ளலாம்). இத்திருமால் கருட வாகனத்தில் வந்தருளும் கடவுள். தீயவர் உலகில் பெருகிடில் அடியார் திருவுருக் கொண்டு அவர்களை மடிவித்து மகிழ்ச்சிக் கூத்தாடுபவன். அனுமனின் கைகளில் பதிந்த திருவடிகளை உடையவன். அடங்காப் பெரும்புகழுடையவன். இவன் நீதிக்குத் துணை செல்பவன். அதனால்தான் இவன் துரியோதனன் முதலாய நூற்றுவர்க்கு எதிராகப் பஞ்ச பாண்டவர்களுக்குத் துணை நின்றான். அதிலும் விசயனாம் அருச்சுனனுக்கு இனிய வள்ளலானான். அதனால் துரியோதனாதியர்க்கு எமனானான்.

திருமால் இராமாவதாரமும் எடுத்துத் தசரதன் புதல்வனாக அவதரித்தவன். இருபது தோளுடைய இராவணனைத் தன் இருதோள் வலியால் வென்றவன் இவ்வாறு தூயவர் உயிர்க்

கோர் துணையென விளங்கும் சுமுகனாகவும். தொண்டர் சேகரனாகவும் விளங்கியவன். பன்னிரு ஆழ்வார்களின் நெஞ்சில் நிறைந்திருக்கிறான். அடியவர்களின் தமிழ்க்கவிக்கு அருள்தரும் கற்பகத் தருவாகவும் விளங்குகிறான்.

இத்தகு இறைவனின் அருள்பெறத் தண்டபாணி சுவாமிகள் ஏங்குகிறார். திருமகள் தங்கும் மார்பினன் எனப் பண்வழாச் சுருதி முழுவதும் புகன்றும் நான் உன்னைப் பரவாமல் இருந்தேனே' என வருந்துகிறார் (3). தன்னைச் சிறியரோடு சேர்க்க வேண்டாமென இவனை வேண்டிக் கொள்கிறார். தன் அலமரலை நீக்கி அருளச் சொல்கிறார். 'தருமனாதியரைப் புரந்த நின் சரணே சரணெனத் துணிந்தனன் கண்டாய்' (4) என்கிறார்.

"கள்ளுலாம் துளபப் புயநெடு மாலே
கடவுளர் அனைவரும் கவிகை
உள்ளுறப் புரப்போன் எனச்சுட ரழி
உணர்த்தியும் உளமெலிந் துழன்றேன்" (7)

என வருந்துகிறார். திருமாலிடம் சரணாகதியடைந்த அடியவர்களே தனக்கும் துணைவர்கள் என்கிறார்.

**காணாபத்தியப் பத்து**

கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொள்வதே காணாபத்தியச் சமயம்.

எக்காரியத்தைத் தொடங்கும்போதும் விநாயகரை வணங்குவது நம் மரபு. அதற்குக் காரணம் என்ன தெரியுமா? சிவபிரானே தன் வாயால், 'கணபதிக்குத்தான் முதற்பூசை அளிக்க வேண்டும்' எனப் பிறருக்குக் கட்டளையிட்டதுதான். அதற்கேற்பக் கணபதியும் தன் ஐந்து கரங்களால் இருகை யெடுத்துக் கும்பிடுவோர்க்கு வரமருள்கிறான். இவன் மெய்யொளி விளக்காகத் திகழ்கிறான். கணபதிக்குரிய மந்திரம் ஓம்' என்னும் ஓரெழுத்தால் அமைந்துள்ளது. இதுவே பிரணவ மந்திரமாகும். நாம் எந்த மந்திரத்தைக் கூறத் தொடங்கும் போதும் ஓம் என்பதை இணைத்துத்தான் கூறுகிறோம். அதனால் கணபதியே பரம்பொருள் என்பது தெளிவாகின்றது. இதையே வண்ணச்சரபம்,

''எந்தமந் திரத்தும் உனதெழுத் திசையும்
இயல்புணர்ந் திருப்பவர் எவரும்
கந்தமும் மதத்துக் கரிமுகத் தவனே
கடவுள்என் றுணர்வது கண்டேன்'' (7)

எனக் குறிப்பிட்டுள்ளார். கணபதி மந்திரத்தைக் கூறுவோருள் ஒரு பிரிவினர் உச்சிட்ட கணபதி உபாசகர் ஆவர். இவர்கள் அன்பர்கள் உண்டபின் அந்த இலையில் உருள்வான்றி, உயிர் வதைத்து ஊனுண்டு இழிவடைய மாட்டார்களாம்.

கணபதி தன் பெரிய காதுகளை அசைப்பது உயிர்களின் பாச வெப்பம் தணிவதற்காகத் தான் என்கிறார் சுவாமிகள். சிவனுடைய மகன்தானே என்றும், யானைத் தலையினன்தானே என்றும் தன்னைக் குறைத்து மதிப்பிடும் சிறியவர் தமக்கும் வாழ்வளிக்கும் கருணைக் கடல்தான் கணபதி. இவன் நிலா, கொன்றை ஆகியவற்றை அணிந்த சடைமுடியினன்; அருட்கண் மூன்றுடைய ஆரமுது. இவன் மூதேவியையும் சனியையும் நசிவுறச் செய்பவன்; வலவையின் தோளைப் புணரும் குழகன். இவன் ஏற்கும் படையல்கள் முப்பழம், பால், சர்க்கரை, யமுது, மோதகம், தோசை, எள்ளுருண்டை, அப்பம் போன்றவையாகும்.

இவன் எல்லாவற்றிற்கும் மூலகாரணன். கயமுகனையும், கமலாசுரனையும் அழித்தவன். அவ்வகையில் தேவர்களைக் காத்தவன். சிவன் - உமை திருமணத்தின் போதும் கணபதி இருந்திருக்கிறான். சிவன் திரிபுரம் எரித்தபோது தன்னை வழிபட்டுச் செல்லாததால் தேரின் அச்சை இவன் முறித்திருக்கிறான். கலைமகளின் அருள் பெற்றோரின் வழிபடு கடவுள் கணபதிதான். இவன் ஔவைக்கும், அடியார் பலருக்கும் அருள் செய்தவன்.

கணபதியை முழுமுதற் கடவுளாக ஏற்றுக்கொள்ளாததற் காகச் சுவாமிகள் வருந்துகிறார். இவனை அருச்சிக்கும் மாண்பருள வேண்டுகிறார். 'இருநிலத்து உயிரிற் பெரிதுமால் கரியென்று இயம்பிடும் இயல்பினோர் தாமும், பொருவரும் கடவுள் நீ என உணராப் புதுமையை என்னெனப் புகல்வேன்'' (6) என வியக்கிறார்.

**கௌமாரப் பத்து**

குமரனை அதாவது முருகனை முழுமுதற் கடவுளாகக் கொள்வது கௌமார சமயமாகும். இப்பதிகம் முழுவதிலும் முருகன் தமக்கு அருள் தராததை எண்ணி எண்ணி நைந்து உருகுகிறார் சுவாமிகள்.

''உன்னையே பரமென்(று) அநுதினம் கருதி
உளமெலிந் துருகிநின் றிறைஞ்சும்
என்னையேன் வெறுத்தாய் உனக்கிது தருமம்
எனச்சொலும் இயல்பினர் இலைகாண்
மின்னைவென் றொளிர்வேற் படையுடைக்குகனே!
விரும்புவோர் விருப்பெலாம் கொடுக்கும்
அன்னையே! அடியார்க் கெளியசற் குருவாம்
ஆறுமா முகமுடை யானே'' (1)

என்கிறார். தம் கனவில் வந்து பலமுறை பேசிய காரணத்தால் துணிந்து நனவிலும் ஒராடல் புரியுமாறு சுவாமிகள் கேட்டிருந்தார். ஆனால் முருகனோ அதைச் செய்யாமல் நானிலம் பழித்திடச் செய்கிறான். அதை எண்ணி வருந்துகிறார். வள்ளிக் குறத்தியை நாடியவன், இந்திரனின் மனக்குறைகளைத் தீர்த்து வைத்தவன் தன் குறை தீர்க்காதது ஏன் என்று வியக்கிறார். 'வேலுடைக் கடவுள் ஒருவனே விழித்துணையாமென விளம்பும் மாலுடைச் சிறியேன் மனமெல்லாம் புண்ணா வருந்திடக் காண்பது வழக்கோ' (3) எனக் குறமகள் விரும்பும் சிறுவனிடம், தமிழ்ப் புலவோர் பாராட்டும் குமரனிடம், நுவலரும் பெரும் புகழுடையவனிடம் வினவுகிறார் சுவாமிகள்.

குருவெலாம் தனது வடிவமென்று உணர்த்தும் குமரனிடம், சேவற் கொடியுடை முருகனிடம், கலைமகள் முழுதுணர் புலமை முதல்வனிடம், மோன நாயகனிடம், ''அருணகிரிநாதரே நீ என்று பிறர் கூறியதால் கடலில் விடுத்த என் தமிழ்ப் பாடலமைந்த ஏட்டினை எடுத்துதவுவாய்' எனக் கெஞ்சினேன். அதற்கு ஏன் தயங்கினாய்?'' என வினவுகிறார் (4). மன்மதனின் மலர்க் கணைகளால் மெலிந்து தினைப் புனந்தொறும் சென்று மகிழ்ந்தானென இகழ்வோர்க்கும் அருளும் பரனிடம், ''மாங்கனி விரும்பும் தகுதியிற் கருதி வழிபடும் மானிடர் தமக்கும் ஆங்கவர் மனம்போல் அருளும் நின் அடிமையாகியும் அலமரலாமோ?'' (5) என வினவுகிறார்.

'திருநீறணிந்த கோலம், உருத்திராக்க மாலை, தண்டம் ஆகியவற்றைப் பெற்றுள்ள எவ்வடியவர்க்கும் பரமசற்குரவன் நீயல்லவா?' எனச் சேவற்கொடியுடையவனிடம், பெருமானிடம், அவுணர்க் குலத்தை முற்றிலும் அழித்த சேந்தனிடம், செங்கனல் குன்றிடம் கூறுகிறார். வள்ளி தெய்வானையுடன் மயில்மேல், வேலேந்தி எதிர்வராத குறையால் பெருமுச்சுவிட்டுத் தான் வருந்தியதைச் சுட்டுகிறார் (7), குமரனும் குருபரனும் குன்று தோறாடிய கோவும் அழகனும் காரணப் பொருளுமான இறை வனிடம், சிவனுக்கு உபதேசித்த சிவகுருவாகிய சேயிடம், கடம்பனிடம், தமிழ்க் கடலிடம், ''மூவிரண்டெழுத்தும் முறை முறை கருதி முக்தி வீடு அடையலாம் என்று காவியம் பலவும் புகன்றிடக் கேட்டும் கருத்தழிந்து உழல்வது கடனோ?'' (8) என வருந்துகிறார். மார்க்கண்டேயனுக்காக எமனை உதைத்த சிவனுக்குக் குருவாகவும் மகவாகவும் விளங்கும் விமலனே, மேலவர்க்கு இறையே என அழைத்து அவனிடம், 'பிரமனின் தலையில் குட்டிய நீ தரும் விதிவலி எண்ணி வருந்தலாமோ? உன் அடியவரோடு என்னைக் கூட்டி ஆண்டருள்வாய்' (9) எனக் கெஞ்சுகிறார். 'ஒப்பற்ற தலைவனே, கணபதிக்குத் துணை யானவனே, கொடிய மால் மருகா, குறிப்பிடற்கரும் செயலுடை யவனே, 'அஞ்சாதே' என்று கூறி ஆண்டகன்றாய். சஞ்சலம் மிக்கு வருந்தும் சிறியேனுக்கு அருள் வழங்குவது எப்போது?'' என்றெல்லாம் உருகி உருகிப் பாடியுள்ளார்.

**சமயாதீதப் பத்து**

எல்லாச் சமயத்திற்குள்ளும், அச்சமயங்கள் கடந்தும் உள்ள பரம்பொருளைச் சிறப்பிப்பது சமய அதீதப் பத்து ஆகும்.

பரம்பொருள் என்பது சௌரம் முதலாய அறுவகைச் சமயப் பகுப்பில் நின்றாடி, அவற்றினுட் பிரிந்த பல் சமயத்து உறுமவர் தமக்கும் துணையென நிற்பது; பொறுமை மிக்க பெரியோரின் புகழையெல்லாம் புனைந்து ஒளிர்கின்ற பொன். இறுதியான ஒன்றாய் எங்கணும் திகழும் ஏகம்; இணையில் வான்பொருள். அது, புலியனைய சமயவாதிகள் உளத்திலும் பொருந்தியிருக்கும் புண்ணிய மலையாகும். கலியெனும் பிணியுற்று அழுங்கிடாது அளிக்கும் கடவுளாகும். கருணை மாக்கடலுமாகும். அதை உணர்வது மிகக் கடினம். ஆண் பெண் என்னும் உயர்திணை

யாகவும், அஃதல்லாத அஃறிணையாகவும் அதை விளங்கிக் கொள்வது எளிதோ என வினவுகிறார் தண்டபாணி சுவாமிகள்.

ஞாயிறும் திங்களும் அக்கினியுமாகும் முச்சுடர் கடந்த மெய்யொளித் தெய்வம்தான் பரம்பொருள். அதைத் திருவருட் சுடரெனவும், மெய்யருள் விளக்கெனவும் கூறலாம். இது தூய மாமறைகள் பகரும் சுயம் பிரகாசமாகும். அத்துடன் வரப் பிரசாதமும் ஆகும். இறைவனை நிர்க்குணப் பிரமம் என்றும் சுகுணப் பிரமம் என்றும் எப்படி வழிபட்டாலும் வீடுபேறு அளிக்கக்கூடியது. நித்தியப் பொருளாம் அது நினைப்பதை முடிக்கவும், குருவாக வந்து அருளவும் கூடியது; கொடியவர்க்கும் சிறியவர்க்கும் உணவளிக்கும் மெய்யருளாகும்; அன்னையெனப் பல்லுயிரையும் புரக்கக் கூடியது. என்றும் எப்போதும் இருக்கும் அது இறந்தவரையும் உயிர்ப்பிக்கக் கூடியது; எல்லோர்க்கும் பொதுவான பூரணமுமாகும். எல்லாக் கடவுளாகவும் நின்றாடக் கூடியது.

அத்தகு பரம்பொருளின் அருளைப் பெறுவதற்காக வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், மாதவத்தோரின் திருச்சபையில் தம்மைச் சேர்க்கும்படி விண்ணப்பிக்கின்றார். இத்திருச்சபை இராமலிங்க வள்ளலார் வடலூரில் உருவாக்கிய சத்திய ஞான சபை என்றே கூறலாம். கடவுளை ஜோதி – ஒளி- வடிவில் வழிபடுவதற்கென்றே அமைக்கப்பட்டது இச்சபை என்கிறார் ஊரன் அடிகள் (வள்ளலாரின் வாழ்வும் தத்துவமும், ப. 31)

> ''உடல்பொருள் ஆவி மூன்றும்நின் அருட்கென்று
> உண்மையா உணர்ந்தினி தளிக்கும்
> திடமுறும் பெரியோர் அளவிலார் கூடும்
> திருச்சபை யிடத்தெனைச் சேர்த்துஆள்'' (10)

எனச் சுவாமிகள் வேண்டுவது கூர்ந்து நோக்கத்தக்கது. துயர்ப் பட்டு இறைஞ்சியும் எள்ளவேனும் இரங்காப் பரம்பொருளை எண்ணிச் சுவாமிகள் குழைகிறார். பெண்ணாசையை நீக்கும்படி வேண்டுகிறார்.

''சித்தியும் திரும்பா முக்தி வீடடைந்து
திருக்கறுத் தொழிவதற் கான
சத்திய ஞானச் சுகமும்நீ யிரங்கித்
தமியனேற் குதவிடில் தகுமே'' (6)

என விண்ணப்பிக்கிறார். இவர் கொல்லாமை, ஊனுண்ணாமை ஆகியவற்றை வற்புறுத்துவது, வள்ளலாரின் வழியை ஒத்தே இருக்கின்றது. கொன்று, ஊன் உண்பவரோடு தம்மைப் பொருந்தவிடாமல் பார்த்துக் கொள்ளுமாறு பரம்பொருளிடம் வேண்டுகிறார் சுவாமிகள். பரம்பொருளை நாடாமல் உணவு, உடை, பொன் ஆகியவற்றை நச்சி வாழும் மாந்தர் நிலை கண்டு இவர் வருந்துகிறார்.

இவ்வாறு, ஞாயிறு, சிவன், சக்தி, திருமால், கணபதி, முருகன் ஆகிய ஆறு சமயக் கடவுளரின் பரத்துவத்தை முதலில் வரிசைப்பட விளக்கி, இறுதியில் இவ்வாறினுள் இணைந்தும் தனித்து ஏகமாகவும் நிற்கும் பரம்பொருளைத் தம் சொற்றிறத்தால் பாடியுள்ளார் சுவாமிகள்.

ஒவ்வொரு பத்திலும் அவ்வவ் விறைவர்களின் தனிச்சிறப்புக் களும், அடியவர்க்கு அருள் செய்த பாங்கும் விளக்கப்பட்டு உள்ளன. அருள்பெறும் வழிமுறைகளும் கூறப் பெற்றுள்ளன.

இறைவன்பால் ஆழ்ந்த பற்றின்மை, அதனால், அருள் பெறுவதில் ஏற்பட்ட தாமதம் ஆகியவற்றைத் தண்டபாணி சுவாமிகள் ஆங்காங்கே சுட்டத் தவறவில்லை. தன்னிலை சுட்டும் பகுதி கௌமாரப் பத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளது. இதனால் இவர் முருகனிடம் கொண்ட பேரீடு பாட்டை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

# திருவாசகத்தோனின் மாண்புகள்

சு. ஞானப்பூங்கோதை

திருவாசகத்தோன் என்ற பெயர் மணிவாசகருக்கு நூலாசிரியராகிய தண்டபாணி சுவாமிகளால் இட்ட பெயர். திருவாசகத்தை அருளிய காரணத்தினால் வந்த பெயர். சிவ பெருமான் மணிவாசகர் என்று பெயரிட்டு அழைத்தார். 'மாண்பு' என்ற சொல் நற்குண நற்செயல்களைச் சுட்டும் சொல் என்பர் பரிமேலழகர். தெய்வப்புலவர் திருவள்ளுவரும் 'இறைமாட்சி' எனும் அதிகாரத்தில் அரசனது நற்குண நற் செயல்களைப் பேசுகிறார். அவரே கடவுள் வாழ்த்தில் கடவுள் அடியினை "மாணடி" என்கிறார். எனவே மாண்பு எனும் சொல் மக்கள் மாண்பினையும் தெய்வமாண்பினையும் காட்டும் சொல்லாகிறது. மணிவாசகரின் மாண்புகளையும் மக்கள் தெய்வம் என்கிற இருநிலையில் வைத்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

மணிவாசகரின் வாழ்வு இறைவன் ஆட்கொள்ளும் முன்னர் ஒருநிலையிலும் பின்னர் ஒருநிலையிலும் அமைந்துள்ளமை நூலாசிரியர் கூறிச்செல்லும் வரலாற்றின்படித் தெளியலாம். முன்நிலை மக்கள் மாண்புநிலை, பின்நிலை தெய்வமாண்புநிலை. வாதவூரர் சரிதம் தொடங்கும் பொழுதே சைவ ஆசிரியர் கூட்டத்தில் தலையாய நாதன் எனப் பெயரிட்டுச் சிறப்பிக் கிறார். நாதன் என்ற சொல் தலைவன் என்ற பொருளினையும் நாதவடிவினன் என்ற பொருளையும் தரும். மணிவாசகரும் "நாதன் தாள் வாழ்க" எனவும், "நான்முகன் மாலுக்கும் நாதரிந் நாதனார்" (336) எனவும் இருபொருளில் வைத்து இறைவனைப் போற்றுகிறார். இவ்விரு பொருளும் கருதியே சுவாமிகள் "தலையாய" நாதன் எனத் துதித்தார். அவ்வளவில் நில்லாது அங்ஙனம் துதியார் நற்பாவலர் அல்லர் எனவும் எதிர் மறையில் வைத்து உரைப்பர். "சிட்டர் போற்றும் திருவாசகத் தோன் சீலம்" (மாண்பு) என்று மணிவாசகரின் மாண்பினைக்

குறிப்பால் விளக்குவர். இறைவனது அட்டமூர்த்தி நிலையை மணிவாசகர்

''நிலம் நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பின் நிலாப்பகலோன்
புலனாய மைந்தனொடு எண்வகையாப் புணர்ந்து நின்றான்''
(திரு. 317)

என விரித்துரைக்கின்றார். ஆதலால் அட்டமூர்த்தி நிலையை உணர்ந்தவராகிறார். எனவே தான், மேலோராகிய ''சிட்டர் போற்றும் திருவாசகத்தோன்'' எனச் சுவாமிகள் சுட்டினார். அவர் சீலத்தைப் பெரியோர் நன்கு ஓர்ந்து அன்பு கூர்வார் என்றும் சுட்டினார்.

மணிவாசகர் தோன்றிய நாடு பாண்டி வளநாடு. அந்நாட்டில் உத்தரகோச மங்கையுள் சிவன் போலும் வடிவுடைய ஓர் ஆசான், மாதர் காதல் மயக்கற்ற மாணவர் பலரோடு பல நாள் தவம் செய்தார். மாணவர்களை நோக்கி 'வீட்டுலகம் நான் அடைவேன் என்று சொன்னபோது, நீர்செல்லின் எங்கட்கு என்ன கதி? என்று அவர்கள் கேட்டனர். அவர் ''இத்திக்கில் இக்குளத்தின் நடுவில் ஒளி ஒன்று தோன்றும் அவ் ஒளிக்குள் சென்றால் உங்கட்கு கதி கிட்டும் என்றார்''. சிலநாள் கழித்து ஒளி தோன்ற மாணவர் பலரும் அதன்கண் நுழைந்தனர். அவருள் ஆசிரியன் பாதுகையைத் தாங்கும் பணிபுரியும் பக்குவத் தொண்டன் ஒருவன், அச்சத்தினால் அதனை அணுகவில்லை. அச்சோதி மறைந்தது. நொந்து வருந்தி உடல் மறைய அவன் மேல் உலகில் ''சாரூபம்'' (இறைவனை ஒத்த வடிவு) பதம் அடைந்தான். ஈண்டு, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகைத் தொண்டு புரிவார் முறையே சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் என்ற பதம் அடைவர் என்பது அறிதல் வேண்டும். சாரூபப் பதம் மேவி விளங்கிய அத்தொண்டர் அவ்வளவில் மகிழாது, முடிந்த முத்தி நிலையை அடைய வேண்டும் என இறைவனை நாள்தோறும் மலர்தூவி வழிபட்டு வந்தார். அச்சமயத்து வாதவூரினில் 'ஆமாத்தியர்' என்ற குலத்தைச் சார்ந்த அந்தணர் ஒருவர் நன்மகன் ஒருவன் வேண்டும் எனத் தவம் புரிந்தார். தவப்பயனாய் அவர்க்கு அத்தொண்டர் மகனாகப் பிறந்தார் என ஆசிரியர் வரலாறு அமைகின்றார். அவரது மணிவாசகராகக் காட்டிச் சரிதம் சொல்லிச் செல்கிறார். பிறந்த தொண்டனார் கல்வி அறிவு

ஒழுக்கங்களில் சிறந்தமையால் அவர் புகழ்கேட்டுப் பாண்டிய மன்னர் அவரை அழைத்து அமைச்சராக்கினார். அவர் பெற்றிருந்த கல்வி, அறிவு, ஒழுக்கமாம் மக்கள் மாண்புகளே அமைச்சர் மாண்பாயின. அமைச்சுத் தொழில் செய்கின்ற பொழுதும் இந்திரன் பெருவாழ்வும் இழிவு எனக் கருதும் இறுமாப்பும் இறைவனே குருவாய்க் கண்முன் வரவேண்டும் என்னும் வேட்கையும் உடையவரானார். இங்கு,

''திருப்பெருந்துறைவாய், எந்நாள் களித்து எந்நாள்
இறுமாக்கேன் இனியானே'' (திரு. 504:4)

''வார்கழல் வந்து உற்று இறுமாந்திருந்தேன் எம் பெருமானே''
(திரு. 548)

என்ற திருவாசக அடிகள் நினைதற்குரியன.

'ஆசைபத்து' என்ற திருவாசகப் பதிகமும் நினைதற்குரியது' இவை 'உள்ளுவதெல்லாம்' உயர்வு உள்ளும் அவர்தம் மனமாண்பு காட்டுவன. ஈண்டு நூலாசிரியர்,

''தவத்தால் முத்தி நலம்பெற உதித்த நாதன்'' எனச் சுட்டுவர். தவத்தின் மாண்பும் சுட்டப்படுகின்றது.

அரசன் ஓலக்கம் இவரால் சிறந்து விளங்கிற்று. வசிட்டன் போலும் அமைச்சர் எனவும் சுட்டப்படுகின்றார். ஒருநாள் அரசர் அமைச்சரை அழைத்து, ''புத்த நாட்டிற்கு குதிரை கொள்ளப் போய் வருக என்று'' அனுப்பினான். அமைச்சரும் பொன்னும், பொருளும் வேண்டுவ கொண்டு பரிவாரங்கள் சூழக் குதிரை கொள்ளச் சென்றார். வழியில் குருந்த மர நீழலில் ஈசன் அடியார் சூழக் குருவாய் அமர்ந்திருந்தார். கண்டவர் பொன்னும், பொருளும் அரசன் ஆணையும் ஆகியன யாவும் மறந்து பொருள் வெஃகாப்புனிதராய் அவர் அடி தொழுது நின்றார். நின்றாரை நோக்கி அவர்,

''யாவன் நீ? ஈண்டு ஏன் வந்தாய் என்னை
இறைஞ்சல் ஏன் நின்
ஆவல் யாது? என வினவினார். அதற்கு அவர்,

''அந்தண சிறுவன் யான், ஓர் காவலன் ஆணையால்
இக்கான் வழி வந்தேன் நின்னைத்
தேவ தேவன் என நம்பித் தெண்டனிட்டு இறைஞ்சி
நின்றேன்'' (14)

"என்னை நீ ஆண்டு கொண்டு யான் இறந்து
போய் இன்னும் மற்றோர்
அன்னை தன் வயிற்றுள் மாழ்காது அருள்செய்ய
வேண்டும் என்றார்'' (15)

ஞானாசிரியர் நினது உடலை நின்பால் உள்ள பொருள்களோடு ஒருங்கு எனக்கு ஈந்தால் நின் விருப்பத்தினை நிறைவு செய்வேன் என்றார்.

"அன்றே எந்தன் ஆவியும் உடலும் உடைமையும் எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே
கொண்டிலையோ'' (திரு. 500)

என்ற திருவாசக அடிகள் நினைத்தற்குரியன. ஆசான் கேட்டவாறே யாவும் கொடுத்தார். கொடுத்துத் தவவேடமும் உபதேசமும் ஆசானிடத்துப் பெற்றார். அவரைப் பற்றிய மயக்கம் முழுதும் கதிரவன் முன் பனி போல் அழிந்தது. இறைவனே இங்ஙனம் ஞானாசிரியனாக வந்தார் எனத் தெளிவு கொண்டார். ஒப்படைத்த பொருள் கொண்டு செம்மை மனத்தால் திருப்பணி பல செய்தார். இப்பகுதியால் பிற்றை நிலை முனியாது ஆசையால் மனம் தாழ்ந்து கற்கும் நன்மாணவ மாண்பு காணலாம்.

குதிரை வாராமை கண்டு அரசன் அனுப்பிய ஓலை பார்த்து ஆசிரியரிடத்து முறையிட்டார். முறையிட்டு அவர் சொன்னதை நம்பி அரசனைக் கண்டு குறித்த நாள் குதிரை வரும் என்றார். இங்கு நூலாசிரியர் மணிவாசகர் வேடம் பற்றியும் குதிரை வாங்காமல் வந்தமை பற்றியும் பலர் பலவாறாகக் கூறுவதைச் சுட்டுகிறார். அவர் பேச்சுக்கள் எல்லாம் பயனிலாதன என ஒதுக்கி விடுகின்றார். அவர்கள் நாவில் நின்று கலைமகள் அங்ஙனம் பேசுகிறாள். என் நாவில் நின்று இங்ஙனம் பேசுகிறாள். உண்மையினை அவளைக் கேட்டுத்தான் அறிதல் வேண்டும், என்று உரைத்துச் செல்கிறார். ஈங்கு குருவின் ஆணைவழி ஒழுகும் மாணவச் சிறப்புத் தெரிகின்றது. குதிரைகள் வரும்வரை அரசன் மணிவாசகரைக் காவலில் வைத்திருந்தான். மணிவாசகருக்கு அக்காவல் கூடம் நிட்டைகூடும் இடமாயிற்று. ஆவணி மூல நாளில் இறைவன் தான் ஒரு சேவகனாய்த் தேவர்களைத் துணைச்சேர்த்துக் காட்டில் வாழ் நரிகளையெல்லாம் குதிரை

களாக்கிக் கொணர்ந்தான். குதிரைகள் வரும் ஆரவாரம் கேட்டு வெகுளியும், வெறியும் கொண்டிருந்த அரசன், மகிழ்ச்சிக் கொண்டு மணிவாசகரோடு எதிர்கொண்டான். குதிரை மேல் வந்த இறைவனாகிய சேவகனைக் கண்டதும் கைகுவித்து வணங்கத் தொடங்கி அரசன் சேவகனை வணங்கலாமா? என்று செருக்குற்று எண்ணி நானி நின்றான். வேதப்பரிமேல் வந்த இறைவன், ''அமைச்சன் பொருட்டுக் குதிரைகள் கொணர்ந்தேன்'' வேண்டும் பொருள் வேண்டும்மட்டு ஈவேன், உன் பணக்குவியல் ஒரு குதிரை அளவும் விலை போகாது என்று கூறிக் குதிரையும் பணமும் கொடுத்துப் போயினன். அன்று இரவே அக்குதிரைகள் எல்லாம் நரிகளாகிப் போயின. இறைவனுக்குச் செய்யும் திருப்பணியிலும் 'குதிரை கொளல் மேல்' எனக் கருதும் அரசனது பொய்யாம் மடமையைச் சுட்டற்கு இந்தப் பொய்மையுள் பொய்மையாம் திருவிளையாடல் நிகழ்ந்தது என்பர் ஆசிரியர். பரிகள் எல்லாம் நரிகளாயினமை கண்ட அரசன் வெகுண்டு மணிவாசகரைப் பல்வகையாலும் தண்டிக்கச்செய்தான். வையைச் சுடுமணலில் நிறுத்தி நெற்றியில் கல்லும் நெடுவிரலில் கிட்டியும் இட்டு வருத்தினான். மணிவாசகர் இறைவனை நினைந்து அழுது புலம்பிச் செந்தமிழால் பாடினார். பாடல் உகந்த இறைவன் அருளால் வையையில் வெள்ளம் கரை புரண்டு ஓடியது. அரசன் தடுமாற்றம் உற்று விரைந்து கரை கட்டுமாறு குடிகளுக்கு ஆணையிட்டான். திரையும் நரையும் கொண்ட கூனுடல் கிழவி ஒருத்தி, பிட்டு விற்று உண்பவள் பிறை சூடும் சொக்கனை நோக்கி, எனக்குக் கூலி ஆள் வேண்டுமே என அழுதாள். மணிவாசகர் மீது அன்பும் அருளும் கொண்டு இரங்கிய இறைவன் பிட்டு விற்கும் கிழவிக்கும் இரங்கி மண்சுமக்கும் கூலியாளாய் வந்து, பொடியாய் உதிரும் பிட்டினைக் கூலியாகப் பெற்றுக் கரை அடைக்கப் போனார். கொண்டு சென்ற பிட்டினைப் பிறருக்கும் கொடுத்துத் தானும் கொண்டு கரையடையாது விளையாடி நின்றான். கரை அடையாது படவில்லை. அரசன் செய்தி அறிந்து விரைந்து வந்து சினந்து பிரம்பால் அடித்தான். அடித்த அவ்வடி அரசன் மேலும் அங்குள்ளார் மேலும் உயிராய் உள்ள யாவர் மேலும் பட்டது. அடிபட்டதும் இறைவன் மறைந்தான். எல்லோரும் அடியுண்டதும் கூலியாள் விரைந்து மறைந்ததும் கண்ட அரசன் இச்செயல் அமைச்சன் பொருட்டு இறைவனே செய்தான் எனத் தெளிந்தான். பின்னர்

மணிவாசகரை வணங்கிப் பிழையெல்லாம் பொறுக்குமாறு வேண்டினான்.

'புண்பட்ட பொன்மேனி பாடுதும் காண்' என்னும் திருவாசகம் அடி (182) மணிவாசகரின் கடவுளன்பின் மாண்பு காட்டும். யாவரும் அடிபட்டமை இறைவன், எங்கும் நிறைந்துள்ளமை காட்டும்

மணிவாசகர் என்னை இறைவன் ஏற்றுக் கொண்டான். அவனருளால் என் இன்ப துன்பங்கள் நடைபெறும், உன்னை நான் இகழேன் உன் பொருள் கொண்டு நான் செய்த திருப்பணியின் பயன் உன்னை வந்து சாரும். எனக்கு இகத்தும் பரத்தும் யாதும் பற்றில்லை நீ முன்னர்த் தவம் செய்துள்ளாய். ஆதலால் இறைவன் இருகால் நின்முன் தோன்றிவான். மற்றைய அரசர் போல் இந்திரன் உலகம் புகுந்து அசுரரால் வருந்தாமல் சிவன் உலகம் அடைவாய். எனது திருப்பணியின் குறைவை நிறைவு செய்வாயாக, நின் மகனுக்கு முடிகவித்துப் பின் தவம் செய்வாயாக என்று கூறி மதுரை விட்டு அகன்றார். இங்கு மணிவாசகருடைய ''பிழைத்தன பொறுத்தல்'' ''நன்று செய்தல்'' ''தெய்வ நெறிப்படுத்தல்'' முதலியன மாண்புகளாக அமைகின்றன.

''பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமை''

போற்றி (திரு. 70)

''பிழைத்தார் பொறுக்க வேண்டாவோ'' (திரு. 494)

என்ற திருவாசக அடிகளை ஈண்டு நினைவு கூறலாம்.

மதுரை விட்டு நீங்கியவர் உத்திரகோச மங்கை, திருவண்ணாமலை, திருக்கழுகுன்றம் முதலிய தலங்களை வணங்கிப் பின் தில்லை சென்றடைந்தார். கைஏற்று உண்டு காட்டிடைத் தங்கிச் செம்மை மனத்தால் செழுந்தமிழ்ப் பாடல் பாடினார். பாடலைக் கேட்ட இறைவன் அவற்றின் விருப்பம் கண்டு அவர்க்கு, மணிவாசகர் என்று பெயர் சூட்டினார். இவ்வுண்மை பெயர் பெற்ற மணிவாசகரே அறிவார்.

''வாக்கு உன் மணிவார்த்தைக்காக்கி''

''மாசில் மணியின் மணிவார்த்தை''

என்ற திருவாசகத் தொடர்கள் அவர் தெய்வப் புலமை மாண்பின் வெளிப்பாடுகள். இறைவனையே பாடும் மாண்பு எத்துணையோ சிறப்புடையது.

இங்ஙனம் இவர் தவம் புரிந்து இருக்கும் நாளில் இலங்கைத் தீவில் இருந்து குருமார் சிலரும் அந்நாட்டு அரசரும் தில்லையின் பெருமை கேட்டு வாதிட்டு வென்று தம் சமயம் நாட்டத் தில்லை வந்தனர். செய்தி அறிந்த தில்லைவாழ் அந்தணர்கள் சிந்தை கலங்கினர். அவர் கனவில் இறைவன் தோன்றி மணிவாசகர் என்ற பெயருடையான் தில்லைக் காட்டில் உள்ளான். அவனைக் கொண்டு இவரை வெல்க என்று அருளினான். அந்தணர் சென்று அவரை அப்பெயரிட்டு அழைத்தனர். இறைவன் அருள்மொழியும் கூறினர். மணிவாசகர் சென்று அவர்களை வென்று ஊமைகளாக்கினார். குருமார் உடன் வந்த அரசன் தன் மகள் பிறப்பிலேயே ஊமை என்றும் அவளைப் பேசுமாறு செய்ய வேண்டும் என்றும் வேண்டினான். மனம் இரங்கும் மாண்பினான் அல்லவோ மணிவாசகர் ஆதலின் தன்னை அடிமை கொண்ட இறைவனை நினைந்து அப் பெண்ணுக்கு நீறு பூசிச் சைவத்தில் சார்பாகப் பல கேள்விகள் கேட்டார். அப்பெண் வாய் திறந்து நல்ல விடை தந்தாள் அப் பகுதியே திருச்சாழல் என்பது. மன்னவன் மகிழ்ந்து புத்தக் குருமார்களோடு தானும் நீறணிந்து சைவன் ஆகினான். சிவசாதனமாம் உருத்திராக்க மாலையும் அணிந்தனன் இந் நிகழ்ச்சியில் மணிவாசகர் சிறிதும் செருக்குற்றிலர். எல்லை கடந்து மகிழ்ந்தாரல்லர். இறைவன் திருவருள் என அமைந்து இருந்தார். இவை இவரின் மாண்புகளாகும் அன்றே.

இங்ஙனம் மகிழாமலும் மசியாமலும் இருந்த மெய்ப்புகழ் முனிவராம் மணிவாசகருக்குத் தாம் சொல்லும் பாடல்கள் எல்லாம் தப்பாமல் எழுதுதற்குத் தண்ணார் தமிழ் அளிக்கும் தன் பாண்டி நாட்டிலிருந்து ஒருவர் வரவேண்டுமே என்று எண்ணி இருந்தார். தம் பாடல்கள் சிவன் கீர்த்தியாக நினைத்து நின்று பிறருக்கும் பயன்பட வேண்டும் என்ற எண்ணத்தின் மாண்பன்றோ இது, தாமின்புறுவது உலகு இன்புறக்கண்டு காமுறுதலன்றே கற்றறிந்த கலைஞானிகளின் மாண்பு உயர்வே உன்னிய பெருமாமுனிவர் மறவாது அதனையே எண்ணினார். ஆதலால் இவர்தன் உள்ளத்தின் உரம் கண்டு இறைவனே படி யெழுதும் பாவலர் வேடத்துடன் வந்தார். வந்தாரை எந்த

நாடு? என்று கேட்டார்க்கு வந்தார் பாண்டிய நாடு என்றார். எண்ணிய எண்ணியாங்கு எய்திய மணிவாசகர், சொல்லியன எழுதவல்லையோ என்றார். அவர் எழுதுவேன் என்றார். ''நமச்சிவாய வாழ்க'' என்று சொல்லச் சொல்ல எழுதினார். இப்பாடலுள் தேனூறு செஞ்சொல் திருச்சிற்றம்பலக் கோவை யாரும் அடங்கும்.

நூலாசிரியர் சுவாமிகள் தில்லைவனத்திருந்த போதே மணிவாசகர் கோவையும் பாடினார் என்ற கருத்துடையவர். எழுதிய ஏட்டினை வாதவூரான் சொல்ல அழகிய சிற்றம்பல முடையான் எழுதியது எனத் தன் கைச்சாத்திட்டு அம்பலத்து வைத்து மறந்தார். இறைவன் ஈங்கு நூலாசிரியர் இறைவன் நேர் நின்று எழுதும் காலத்து அவருடைய எழுதும் கை விரைவு கண்டும் இறைவன் என மணிவாசகர் தெளியார் ஆனார். இறைவன் அருளால் அன்றி யாரும் அவன் ஒருவனின் மெய்மை யாக அறிய முடியாது என்று குறிக்கின்றார்.

அந்தணர்கள் வழக்கம் போல் அம்பலத்துச் சென்றார்கள். சென்றார் சுவடியைக் கண்டார்கள். அதன்கண் உள்ள கைச் சாத்து உணர்ந்து மணிவாசகரிடம் சென்று ஏடு அம்பலத்து இருந்தமை கூறி அதன் பொருளைக் கேட்க விரும்பினர். ''இதன் பொருள் இது'' எனக் கூற விரும்பிய மணிவாசகர் அவர்களை அழைத்து வந்து அம்பலத்து நின்று 'இதன் பொருள் இது' என்று இறைவனைச் சுட்டினர். ஒளிதோன்ற அதன்கண் மணிவாசகர் இரண்டெனக் கலந்தார். இக்கலப்பை பொன் கலந்த கலப்பு என்பர் இராமலிங்க வள்ளலார்.

இத்திருவாசகத்தோன் மாண்பினைச் சரிதத்தில் ஆங்காங்கே வகுத்து உரைத்து வந்த ஆசிரியர் முடிந்த முடிபாக இரு பாடல் களில் தொகுத்து முடித்து உரைக்கின்றார். அப்பாடலின் மாண்பு கண்டு மகிழ்வோமாக.

''அத்தகைய முத்திபெறும் அருந்தவரும் அரன்தனது
கைத்தலத்தால் வரைந்தேற்கும் கவிபாடும் புலவர்களும்
இத்தரையில் இன்று வரை இலை இனிமேலும் எப்படியோ?
எத்தகவும் செய்யவல்லான் இதயம் அறிந்திடும் அன்றோ''

(71)

''சத்துவ சற்குணராகி சமரச நிச்சய ஞான
தத்துவம் தோய்தரு சைவத் தலைவராம் இவர் பெருமை
சித்துடைய பெரியோரில் சிலர்தாமே அறிவர் என்றால்
பைத்துரு பாம்புறழ் கோரப் பண்பினர் ஓர்தரற் பாற்றோ''

(72)

மணிவாசகர் மாண்பே நிலை பெறுக!

# செந்திநாயக சதகம்

ப. ஞானம்

முருகப் பெருமானின் அருள் பெற்ற தண்டபாணி சுவாமி களைப் பற்றி சிந்திப்பதற்கும், அவர் அருளிய நூல்களைப் படிப்பதற்கும் நல்வினைப் பயனே காரணம் என்பது தமிழர் நம்பிக்கை. இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே இக்கட்டுரை அமைந்துள்ளது. முதலில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி களின் வரலாற்றுச் சுருக்கம் இடம் பெறுகிறது. அடுத்து திருச்செந்தூர் முருகப் பெருமான் மீது பாடிய 'செந்திநாயக சதகம்' என்னும் பக்தி இலக்கியத்தின் வாயிலாக சுவாமிகள் பெற்ற 'முருகானுபவங்கள்' ஆராயப்படுகின்றன.

**செந்திநாயக சதகம்**

திருச்செந்தூர் முருகப்பெருமானைப் பொருளாகக் கொண்டு பாடப்பெற்ற நூல் 'செந்திநாயக சதகம்'. இந்நூல் ஒரு துதி நூலாக விளங்குகின்றது. எழுசீர் விருத்தப்பாவில் நூறுபாடல் களைக் கொண்ட இப்பக்தி நூல் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் அளவுகடந்த முருக பக்தியை வெளிப்படுத்திக் காட்டுகிறது. முருகப் பெருமானை மட்டுமே முழுமுதற் கடவுளாக ஏற்றுக்கொள்ளும் கௌமார சமயத்தினர் கூட்டத்தில் தானும் ஒருவனாக வேண்டும் என்ற பக்தி வேட்கையை சுவாமிகள் பல பாடல்களில் புலப்படுத்தியுள்ளார்கள். (பா. 14, 31)

முருகப்பெருமானை, அவனது பல்வேறு இயல்புகளை, பெருமைகளைப் போற்றும் சுவாமிகள் ஒவ்வொரு பாடலிலும் முருகனிடத்தில் தெண்டனிட்டு விண்ணப்பித்துக் கொள்ளு கின்றார். உள்ளத்தை உருக்கும் பான்மையில் அமைந்த இப்பகுதி அவரது பக்திநெறியின் ஒரு மைல்கல்லாக விளங்குகிறது மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என்ற மூவகை ஆசைகளிலிருந்தும் தன்னால் தப்பிக்க முடியவில்லை என்றும் கூறுகின்றார். (பா. 99)

செந்திநாயக சதகம் பாடல்கள் மிகவும் எளிய நடையில் அமைந்துள்ளன. இதுவரையில் அறியாமல் இருந்த பல புதிய முருகன் அடியார் களைப்பற்றிய கதைக் கூறுகள் இடை இடையே விரவிக் காணப்படுகின்றன. முருகன் தலங்களுள் குறிப் பிடத்தக்க ஒரு தலமாகத் திருச்செந்தூர் விளங்குகிறது. பல புராண வரலாற்றுச் சிறப்புக்கள் இத்தலத்திற்கு உண்டு. முருகன் ஆறுமுக நயினாராக விளங்குகிறார். ஆறெழுத்துக்குரியவனான முருகனின் பெருமை கூறும் இந்நூலினை திருச்செந்திற் பிரபந்த நூற்தொகுதியுள் ஆறாவது வரிசையில் வைத்துள்ளமையும் மனம்கொள்ளத் தக்கதாகும்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் முற்பிறப்பில் அருணகிரிநாதராய் இருந்தனரென்று முருகன் நேரே இவரிடம் கூறியருளினார் என்ற செய்தி பல இடங்களில் காணப்படுகிறது. கனவிலும் நனவிலும் இச்செய்தியைத் தனக்கு முருகன் உரைத்ததாக அடிகள் கூறுகின்றார். (பா.2) அருணகிரியின் வாழ்க்கையிலும், தண்டபாணி சுவாமிகளின் வாழ்க்கையிலும் உள்ள சில ஒற்றுமைக் கூறுகளைக் கொண்டு இவ்வாறு கருதப்பட்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஒரு முக்கியமான வேற்றுமையை நாம் எண்ணுதல் வேண்டும். அருணகிரியார் பரத்தை ஒழுக்கம் பூண்டு, நோயுற்று, தன்னை மாய்த்துக் கொள்ள நினைத்து அருணை கோபுரத்தின் உச்சியில் ஏறி உருண்டு உயிர் துறக்க முயன்ற போது முருகப்பெருமான் அவரைத் தாங்கி தடுத்தாட்கொண்டார் என்பது வரலாறு. தண்டபாணி சுவாமிகள் சிறு வயதிலேயே வேலாயுத பூசையில் ஈடுபட்டிருந்தார். நெறியான வாழ்வை மேற்கொண்டிருந்தார் என்பதில் இருவேறுபட்ட கருத்துக்களுக்கு இடமில்லை. இருப்பினும், தான் பெண்ணாசை கொண்டு உழன்றதாக இவர் பாடுவது தன்னைக் குறித்தன்று எனக் கொள்ளல் வேண்டும். முற்பிறப்பில் தான் அருணகிரியாக வாழ்ந்திருந்தார் என்ற கருத்தில் முற்பிறப்பு வாசனை சிறிதும் தன்னைப் பற்றாமல் காக்கவேண்டும் என்று முருகனை வேண்டிய தாகக் கருத இடமுண்டு. இதனைச் செந்திநாயகப் பதிகத்திலும் சுவாமிகள் குறிப்பாகச் சுட்டியுள்ளார்கள் (பா. 3) எனலாம்.

தண்டபாணி சுவாமிகளும் முருகன் முதலில் தன்னிடம் பாராமுகம் காட்டியபோது மனம் வெதும்பி தாம் எழுதிய

பாடல் ஏட்டை திருச்செந்தூர்க் கடலில் எறிந்தார் என்றும் திருமலையில் ஏறி முருகன் காட்சி பெற விரும்பி உருண்டார் என்றும் முருகன் அருணகிரியைத் தாங்கியது போலவே சுவாமி களையும் தாங்கிக் கொண்டார் என்றும் இருவருக்கும் முருகன் அருள் பொழிந்த வரலாற்றில் ஒற்றுமை இருப்பதைக் காண முடிகிறது. இருவரும் சந்தக்கவி பாடுவதில் வல்லவராகவும் விளங்கினர் என்பதும் கருதத் தக்கதாகும்.

செந்திநாயக சதகத்தில் பக்தி இலக்கியத்திற்கேயுரிய 'வேண்டற் பொருண்மை' காணப்படுகிறது. இதற்கு அடுத்த நிலையில் முருகனைப் போற்றும் பான்மையில் அவனுடைய இயல்புகள்; பெருமைகள்; அவன் தன் அடியார்களுக்கு அருள் வழங்கும் தன்மைகள் இடம் பெற்றுள்ளன. சுவாமிகள் சமய ஒருமைப்பாட்டைப் போற்றும் வகையில் சிவன், உமை, திருமால் போன்றோரின் மகன், மருமகன் என்று கூறும் கருத்தும் கருதத் தக்கதாகும்.

### முருகனை வேண்டுதற் பகுதி

'பெண் போகமே கருதி நியமங்கள் பலவற்றைக் கைவிட்டு இவ்வுலகில் உழலும்படி செய்தாய்' (பா.8) என்றும்.

அத்தகைய பெண்ணாசை மறந்து நின் திருக்கை வேலையே துணையாகக் கொண்ட எனக்கு மெய்யருள் புரிவாய்' என்றும் (பா.46) கேட்டுக் கொள்ளும் பகுதிகள் எண்ணத் தக்கவையாகும்.

'உனது பெருமையறியாது தீயோர்களுடன் சேர்ந்து நான் துயரமடைந்திருப்பது அறிந்தும் நீ இரங்கவில்லையே' (பா.24) என்று புலம்புகின்றார்.

'மதியாத சிதடனான தன்னிடத்தில் நீ கருணை கொண்டாய்; உலகம் அறிய ஒரு அருட்செயலை இயற்றுவாய்' (பா.40) என்று கேட்குமிடத்தும், சுவாமிகள் முருகனிடத்தில் தன் குறைகளைக் கூறி, தன்னைத் தடுத்து ஆட்கொள்ளுமாறு வேண்டும் உள்ளம் புலப்படுகிறது.

'பெரியோர் வகுத்த நூல்திறன் உணராமலும், உனது ஆறெழுத்தாண்மையும் குறியாமல் தவிக்கின்றேன். எனது பாசநோயைத் தவிர்ப்பாய்' (பா.23) என்று வேண்டுகின்றார்.

'அருணை மலையின் உச்சியில் கிளியாக அமர்ந்த அருணகிரியின் திருப்புகழ் கவி போன்றதே என் தமிழும் என்றெண்ணி அதை நீ அணிவாய்' (பா.48) என்கிறார்.

'ஏழ்வகைப் பிறவித் துயருக்காக அஞ்சி இடையராது உன்னையே எண்ணுகின்றேன்' (பா. 91) அருள்வாய் என்றும்.

'இச்சையில் ஓடாவண்ணம் மனதைப் பாதுகாத்து உடல் முழுவதும் வெண்ணீறணிந்து உன்னையே போற்றும் எனக்கு வாழ்வு அருள்வாய்' (பா. 28) என்றும் தண்டபாணி சுவாமிகள் முருகனிடம் வேண்டும் பகுதிகள் ஆராயத்தக்கவை எனலாம்.

சுவாமிகள் இளமையிலேயே 'வேல்பூசை' செய்து வந்தவர் என்பதை அவரது வரலாற்றால் அறிய முடிகிறது. இத்தகைய பூசையை அனுதினமும் இடைவிடாமல் செய்யும் தனக்கு பல தீய நினைவுகள் எழுவது ஏன்?' என்ற கேள்விக்கணைகளைத் தொடுக்கின்றார்.

'இம்மண்ணுலக ஆசைகள் பலவற்றையும் மறந்து உன் திருக்கை வேலையே துணையாகக் கொண்ட எனக்கு மெய்யருட் புரிவாய்' (பா. 46) என்று வேண்டுகின்றார்.

"சூதுகொண்ட டுலகைக் கெடுப்பவர் பகையாற்
றுயர்படும் தொடக்கெலாம் தொலைவான்
போதுகொண்டுனது வேற்படைப் பூசை
புரிவதும் அறிகிலாய் கொல்லோ
தீதுகொண் டவருந் திருவருள் கொள்ளச்
செயத்தகு சிவகுருபரனே..." (பா. 52)

என்று பாடுமிடத்து வேற்பூசை செய்வதால் பழவினைகள் தொலையும் என்ற கருத்தும் அறிந்து இன்புறத் தக்கதாகும்.

### முருகனைப் போற்றுதல்

சைவ சமயக் குரவர் திருஞான சம்பந்தரை முருகனின் அவதாரமாகக் கூறுதல் மரபு. சம்பந்தர் மதுரைப்பதிக்கு வந்த போது சமணர்கள் அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டனர். அத்தீயை வெப்பு நோயாக மாற்றிப் பாண்டியனிடம் செல்லுமாறு செய்தார்; அமணர்களை வாதில் வென்று, நெருப்பிலிட்ட ஏடு சுடர்விடவும், நீரிலிட்ட ஏடு வெள்ளத்தை எதிர்த்துச் செல்லும் படியாகவும் செய்தார் என்ற ஞானசம்பந்தரின் வரலாற்றுச்

செய்திகளைக் குறிப்பாகச் சுட்டி அத்தகைய கவுணியர் குலத்தில் உதித்தவர் முருகனே (பா. 9, 14, 22) எனக் குறிப்பிடுகின்றமை கருதத் தக்கதாகும்.

முச்சங்கங்களிலும் தழைத்திருந்தவன் முருகனே என்ற குறிப்பு பல பாடல்களில் காணப்படுகிறது. (பா. 5, 6, 9)

திருவருளைப் பொழிகின்ற ஆறுமுகமும் பன்னிரு புயங்களையும் உடையவன்; மயில் வாகனத்தில் வள்ளி தெய்வயானையுடன் உலகை வலம் வருபவன்; போரில் வல்லவன்; செந்தமிழ்க் குறு மாமுனிக்கு அருள் புரிந்தவன்; கடம்பும், குரவும், செச்சையும் அணிந்தவன்; சூரனைத் தடிந்தவன்; வேற்படையுடையவன்; போன்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன.

மாங்கனிக்காக உலகை வலம் வந்த செய்தி; கொழுந்தகர் அடக்கியமை; கடலுள் மாயக் குன்றமாக மறைந்திருந்து சூரனைத் தடிந்தமை; பிரமனைப் புடைத்து சிறையிட்டு புவனம் புதுக்கியமை; மதுரையில் உக்கிரகுமார பாண்டியனாக முருகன் அவதரித்த வரலாறு போன்ற திருவிளையாடற் செய்திகளையும் முருகனைப் போற்றுமுகமாக மனங்கொள்ளுமாறு பாடுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

முருகன் அடியார்களுக்கு அருள் வழங்கிய செய்திகளில் இதுவரை அறியப்படாத பல புதிய செய்திகளைக் காண முடிகின்றது. ஆறுமுகப் புலவர் என்பார் குலத்தில் தாழ்ந்தவர் என அவரை முருகப் பெருமானின் முன்புறமாக நின்று பாடக் கூடாது என்றும் பின்புறமாகச் சென்று பாடுமாறும் ஊர் மக்கள் செய்தனர். ஆதலால் கோயிலில் இருந்த முருகன் திருமேனி அந்த அடியவரை நோக்கித் திரும்பியதாக ஒரு வரலாறு வழங்குகிறது. (பா. 69) முருகனையே உறுதியாக நம்பியிருந்த முருகம்மையாருக்கு அவருடைய இழந்த கையை மீண்டும் கொடுத்த நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது. (பா.56) திருச்செந்தூர் கோபுரத்தைத் திருவாவடுதுறை ஆதீனம் முதல்வர்களில் ஒருவர் கட்டியுள்ளார். அப்பணி நடக்குங்கால் வேலை செய்த ஆட்களுக்குத் திருநீற்றையே கூலியாகக் கொடுத்ததாகவும் சற்று நேரத்தில் அது கூலிப்பணமாக மாறியதாகவும் ஒரு குறிப்பு காணப்படுகிறது. (பா. 71)

மற்றும் நக்கீரருக்கு முருகன் அருளிய வரலாறு, பொய்யா மொழிப் புலவருக்கு அருளியமை, வீரபாண்டிய புலவருக்கு அருளியமை, கவிராச பண்டிதனுக்கு அருளியமை சுகப்பிரம்ம முனிவனுக்கு அருளியமை, முசுகுந்தனுக்கு அருளியமை, பிரபுட தேவராயனுக்கு அருணகிரியின் வேண்டுகோளுக்கு இணங்கி கண்கொடுத்தமை போன்ற செய்திகளும் மனங்கொள்ளத் தக்கதாகும். (பா.7,58,67,11,54,55,70)

முருகப் பெருமானிடம் கொண்ட பற்றுதலை, பக்தியை அடிகள் தமிழ்மொழியிடமும் கொண்டுள்ளார். 'நறுந்தமிழ்க் குறுமுனிக் கினியாய்' என்றும், 'தெள்ளமிழ் துறழ்சொற் குறக் கொடி' எனவும், முருகனைப் போற்றும் போதும் (பா.3,4,5,14) தமிழைப் பாராட்டுகின்றார். சுவாமிகளின் தமிழ் மொழிப்பற்று இவரது பிற பாடல்களிலும் மிகுதியாகக் காணப்படுகிறது.

**சமயக் கொள்கை**

இறைவன் ஒருவனே என்பது இவர் கொள்கை. சைவ வைணவ மத வேறுபாடுகளை நீக்கி அவை ஒன்றே என்ற உண்மையைத் தம் பாடல்கள் அனைத்திலும் வெளிப்படுத்தி உள்ளார். முருகப் பெருமானே அனைத்து தெய்வமாக இருப்பதாக உரைக்கின்றார்.

"ஆறுநெறியும் அணிமுகங்களாகு மெனக்
கூறு நலம் கொண்ட குரு நாதா"

எனப் பல இடங்களில் கூறுகின்றார். (தனிப்பாடல்.98)

செந்திநாயக சதகத்தில் "வண்டமிழ்ப் புலவன் விடுத்த தூதானார் மகனே" என்று சிவனின் மகனாகவும், (பா.7)

"அறமெண் ணான்குமுன் வளர்த்தாள் மைந்தனே" என உமையின் மகனாகவும், (பா.8)

"புள்ளை வாய்கிழித்த புனிதமால் மருகா" என திருமாலின் மருமகனாகவும் (பா.2) குறிப்பிடும் செய்திகள் மனங்கொள்ளத் தக்கதாகும்.

ஆதியில் கவுமாரத்தில் அழுந்திக்கிடந்து பின்னர் வேதியன் விதித்தவாறு விதிநெறிப் பொதுவனாக்கியதாகத் தன் வாழ்வியல் மாற்றத்தையும் இப்புலவர் உணர்த்துகின்றார். (கீர்த்தனை.27)

செந்திநாயக சதகம் சிறு துதி நூலாக இருந்த போதிலும், அதன் பாடற் பொருண்மைகளால், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் இறைக்கொள்கையை முழுவதுமாக அறிந்து கொள்ள முடிகிறது. உயர் நீதி கௌமாரக் கொள்கைகளில் இவர் ஆரம்பத்தில் கொண்டிருந்த பற்றுதல் புலனாகிறது. அழிந்து விடக்கூடிய உலக போகங்களை நீக்கி அழியாத பேரின்ப வாழ்வை தனக்குத் தந்தருள வேண்டுமென முருகனை வேண்டுகிறார்.

சுவாமிகளின் தமிழ்ப் பற்றும், ஊன் மறுத்தல், உயிர் பலியிடாமை போன்ற சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களும் குறிப்பிடத் தக்கவையாக உள்ளன.

சிவபெருமான், உமையம்மை, திருமால் போன்றோர்களைப் பற்றிய பல புராண வரலாற்றுச் செய்திகளைக் கொடுத்துள்ள பாங்கும், முருகன் தன் மெய்யடியார்களுக்கு அருள்புரிந்த வரலாறுகளும் கருத்தில் கொள்ளத் தக்கவையாகும்.

# பழமலைநாதர் பதிகங்கள்

சு. தங்கத்துரை

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பல நூற்களை எழுதியுள்ளது மட்டுமல்லாமல் பல தனிப்பாடல்களும் சில பதிகங்களும் பாடியுள்ளார்கள். அருள்மிகு பழமலைநாதர் மீது இரண்டு பதிகங்கள் பாடிப் பெருமை சேர்த்துள்ளார். அதன் கருத்துகளை வகைதொகை செய்து, சிறப்பினை எடுத்துக் கூறுவதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

பதிகங்களில் காணப்படும் இரண்டு காப்பு பாடல்கள் வெண்பாவாலும், முதல் பதிகத்திலுள்ளப் பதினொரு பாடல்கள் கொச்சகக் கலிப்பாக்களாலும் இரண்டாவது பதிகத்திலுள்ளப் பதினொரு பாடல்கள் எண்சீர் தாழிசையாலும் அமைந்தவை யாகும்.

முதல் பதிகத்திலுள்ளப் பாடல்களின் இறுதியில், 'திருமுது குன்றமர்வீரே' என்றும் இரண்டாவது பதிகத்திலுள்ள பாடல்களின் இறுதியில் 'நலமலி விருத்தாசலமுடையானே' என்றும் குறிப்பிட்டுள்ளார். முதலில் பழமையானப் பெயரையும் அடுத்துப் புதியப் பெயரையும் கையாண்டிருப்பது ஆய்வுக்குரிய ஒன்றாக உள்ளது. சமயக் குரவர்களின் பாடல்களில் திருமுது குன்றம் என்றே இந்த ஊரின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி. 16–ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றிய நூற்களில் விருத்தாசலம் என்ற பெயர் காணப்படுகிறது. இக்கால நூற் களில் இரண்டு பெயரும் கலந்து காணப்படுகிறது. சுவாமிகள் இரண்டு பெயர்களையும் கையாண்டிருப்பதிலிருந்து பழமை யையும் புதுமையையும் அவரால் ஒத்துக் கொள்ளப்பட்டது எனத் தெரிகிறது. இதை போன்ற முறையை அவரது நூற்களில் கையாண்டுள்ளாரா என ஆய்வு செய்தால் அவரது தனித் தன்மை வெளிப்படும்.

சுவாமிகள் திருமுதுகுன்றம் வந்து பழமலைநாதரை வழிபட்டிருக்கவேண்டும் எனத் தெரிகிறது. அவரது பாடல் வரிகளிலிருந்து பழமலைநாதரின் சிறப்பு, கோயில் வரலாற்றுச் சிறப்பு, புராணங்கள், வழிபட்டோர் சிறப்பு, பாடல்கள் போன்றவற்றில் சுவாமிகள் நல்லப் பாண்டித்தியம் பெற்றிருந் திருக்கிறார் எனத் தெரிகிறது.

சிவபெருமான் எவரையும் எளிதில் ஆட்கொள்வதில்லை என்பது புராணச் செய்தி. தன்னைப் பழமலைநாதர் ஆட் கொண்டார், வா என்றார், பாடு என்றார் எனக் குறிப் பிட்டிருப்பதிலிருந்து சுவாமிகளின் உறைப்பு பழமலைநாதர் மேல் இருந்தது எனத் தெரிகிறது. முதல்பதிகக் காப்புப் பாடலில்,

> "சென்னையில்வந் தென்பால் திருமுதுகுன் றூர்ப்பரமன்
> தன்னை வழுத்தும் வணம் சாற்றினான்" (காப்பு, 1, 2)

இவ்வாறு குறிப்பிடுவதிலிருந்து பழமலைநாதரின் பற்றுதெரிய வருகிறது.

சிவபெருமான் இசைப்பிரியர் என்பது பன்னிரு திருமுறை வரலாற்றால் உணரலாம் பழமலைநாதர், பாடாது சென்ற சுந்தரரை, முருகனை அனுப்பி இழுத்துவந்துப் பாடச் செய்தவர். மேலும் திருவாரூரில் பழமலைநாதரின் பெருமையைப் பாடச் செய்தவர். அப்படிப்பட்ட இறைவன் சுவாமிகளைப் பாட இழுத்ததில் வியப்பில்லை. இதை அவர் சுட்டிக் காட்டியிருப்பதே வியப்புக்குரியதாகும்.

பல தலத்தில் அருள்பாலித்துக் கொண்டிருக்கும் உம்மை நான் பாடிக்கொண்டிருக்கிறேன். அப்படியிருக்கும் உம்மை ஏன், நீ இந்தத் தலத்திலும் பாடச் சொன்னீர். அது எனக்கு வியப்பாக உள்ளது என்கிறார். இதனை,

> 'எத்தனையோ தலந்தோறும் இருக்கும்உமைப் போற்றும் என்பால்
> இத்தலத்தைப் பாடென வந்திசைத்தவிதம் என்னேயோ'
> (1, 1, 1, 2)

இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இந்தக் கருத்தை வலியுறுத்த,

'சத்தியமாகக் கனவூடு தனிவந்து கேட்டமையால்' (1.11.1) நான் பாடுகிறேன் எனத் தெளிவு படுத்தியுள்ளதையும் காணமுடிகிறது.

**காப்புப் பாடல்கள்**

முதல் காப்புப் பாடலில் விநாயகரை வேண்டிப் பாடுவதாக அமைந்துள்ளது. 'வேழமுகவன் தழைந்த மலர்ப்பூந்தாள் சரண் (காப்பு 1. 4) இரண்டாவது காப்புப் பாடலில், தமிழுக்குச் சிறப்பு கொடுத்துள்ளதையும் தமிழால் பூமியாள்பவளாகிய பூமாதேவிக்கு கலக்கத்தை மாற்றுவோம் எனப் பாடியுள்ளார்.

'வெள்ளைச்
செவியாளிடத்தாரைச் செந்தமிழால் போற்றிப்
புவியாள் கலக்கம் ஒழிப்போம்' (காப்பு. 2)

இவ்வாறு தமிழுக்குப் பெருமை ஏற்றியுள்ளார். தமிழின் பெருமையைப் பிற பாடல் வரிகளிலும் சுட்டியிருப்பதைக் காணமுடிகிறது. பைந்தமிழ் (1.2.2) புலவர் தமிழ் (1.3.2.) செந்தமிழ் (காப்பு 2.3.) நறுந்தமிழ் (2.5.1.) செழுந்தமிழ் (2.11.2) இவ்வாறு குறிப்பிட்டிருப்பதால் காப்பு தெய்வங் களுக்கு முதல் மரியாதை கொடுத்துவிட்டுத் தமிழுக்கு அடுத்து ஏற்றம் கொடுத்துள்ளார் எனத் தெரிகிறது. தமிழின் ஒவ்வொரு வளர்ச்சிக்கும் அரும்பாடுபட்டவர் என்பதற்கு அவரது இலக்கண இலக்கிய நூற்கள் சான்றுகளாகும்.

**பழமலைநாதரின் சிறப்பு**

ஒவ்வொரு பாடலிலும் பழமலைநாதரைப் போற்றி, வருணனை செய்து பாடியிருப்பதைக் காணமுடிகிறது சுருக்கமாக ஆழமாக வருணித்திருப்பது போற்றுதற்குரியதாகும்.

'பைத்தலைய பாம்பணிந்து பனிமொழி யாளொடுவாழ்வீர்' (1.1.3) இதனை மற்றொரு இடத்தில், 'பைந்நாகப் பணிபூண்டீர் (1.8.3) என சுட்டியுள்ளார்.

'புண்ணிய வெண்பொடி பூசிப் பொருவில் அக்கவடம் பூண்டு
தெண்ணிலவும் சடைக்கணிந்தீர் திருமுதுகுன்றமவர் வீரே'
(1.3.3.4)

என்று வருணித்திருப்பதை பிறிதொரு இடத்தில், 'நல்திரு நூராடிய பரம்பரனே' (2.4.4) என வெளிப்படுத்தியுள்ளார்.

மேலும் பலவகைகளில் பழமலைநாதரை, 'கந்தமலி கொன்றையொடு கனவெலும்பும் புனைந்துற்றீர்' (1.2.3) என்றும், 'செந்தகைப் பொன்மலையே' (1.2.4) என்றும், 'நறுமலர் இதழினைச் சடைமுடியில் அணிந்தவன்' (2.5.4) என்றும், 'கவரிதலைவா' (1.7.3) என்றும் வருணித்திருப்பதைக் காண முடிகிறது. அவரது பெருமைகளைப் பாடலுக்குப் பாடல் அடுக்கிச் சொல்வதுபோல குறிப்பிட்டிருப்பது சிறப்பாக அமைந்துள்ளன.

'நால்வருக்கு அன்றுஅருள் செய்தீர்' (1.10.3)

'நந்தியம் பெருமான் மகிழ்ந்த சந்நிதியாய்' (2.1.4)

'நண்ணலார் புரமூன்றெறிய நக்கானே' (2.7.4)

'நனிதுதி இசைப்பார்க்கு எளிய வானவனே' (2.9.4)

'நன்றுதீ தறியார் தம்மையும் புரப்பாய்' (2.6.4)

'நசையுறு புலவோர் தமக்கெளியானே' (2.8.4)

'நாத நாதாந்த முடிவின் மேல்நின்றாய்' (2.10.4)

'சித்தி முற்றுதரவல்லவர்' (1.11.2)

'ஞான நாடகம் இக்காடிடச் சலியாய்' (2.3.4)

இவ்வாறு பெருமைகளை அடுக்கி வைத்திருப்பதைக் காண முடிகிறது. மேலும்,

'விசையன் முன்வில்லால் அடித்தமைக்கு இரங்கி
வேண்டியவாறே விரைந்தருள் புரிந்தாய்' (2.8.1)

என்றும்,

'வேய் ஈன்றவன்' (2.6.2)

என்றும் குறிப்பிட்டிருப்பதிலிருந்து பழமலைநாதரின் புகழை உயர்வாக வெளிப்படுத்தியுள்ளார் எனலாம். பழமலைநாதர் தன் இரண்டு குழந்தைகளால் பெருமை பெற்றார், என்பதையும் சுட்டியுள்ளார் (காப்பு. 2, 1-1, 1,2) மேலும்,

'இனிய சிற்றுண்டி மிகப்படைக் கின்றார்க்கு
ஏற்றன வெல்லாம் இயற்றுமைங் கரனைக்
கனியிதழ் மடவார் கள்வனா முருகக்
கடவுளைப் பயந்தாய்' (2.9,1,2)

எனச் சாற்றியுள்ளார்.

### திருமுதுகுன்றச் சிறப்பு

பல நிலைகளில் திருமுதுகுன்றத்தின் பெருமையை சிந்தித்து உள்ளார் எனத் தெரிகிறது. முதல் பதிகத்தில். 'தென்னாடு போற்றும் ஊர்' (1 4.4), 'தேமாந்தண்பொழில் சூழும்' (1.5.4) 'செல்வளர்த்தண் பணைசூழும்' (1 10.4) எனக் குறிப்பிட்டுள்ள ஆசிரியர் இரண்டாவது பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும், 'நலமலி விருத்தாசலம்' எனச் சுட்டியுள்ளார். எல்லா வகையிலும் நலம் அருளிக் கொண்டிருக்கும் ஊர் திருமுதுகுன்றம் எனக் குறிப்பிட்டிருப்பதால் வேறு சொல் தேவையில்லை என வேறு இடங்களில் கூறாது விட்டார் போலும்.

### பணத்திற்காகப் பாடியவர்

சுவாமிகள் சுந்தரரைப் போல பல தலங்களுக்குச் சென்று அங்கு வீற்றிருக்கும் இறைவனைப் பாடிப் பொன் பெற்றதாக அறியமுடிகிறது.

> 'அறுவகைச் சமயத் தெண்ணில் பல்தலந்தோ
> றறுந்தமிழ் பாடி ஆடகம் விழைந்தேன்' (2.5.1)

இந்த வரிகளிலிருந்து மேல் கூறியக் கருத்து தெளிவாகிறது.

திருமுதுகுன்றப் பெருமானையும் பொன் வேண்டிப் பாடுவதாகவே காப்புப் பாடலில் சுட்டியுள்ளார். 'பொன்னை விழைந்து துதிக்கின்றேன்' (காப்பு. 1.2.3 ). இப்படிக் கூறியவர் ஒரு பாடலில் பழமலைநாதரிடம் குறை படும்படியாகப் பாடியுள்ளார். எவ்வாறெனில்,

> 'அன்றுதென் ஆரூர்ச் சுந்தரன் மகிழ
> ஆடகச் செங்கல் அருள் புகலூரான்
> என்றுதி கேட்டொன்றேனும் நல்கிலன்' (2.6.1.2)

என்றார். இதில் சுந்தரருக்கு நிறைய கொடுத்தாய், எனக்கு ஏன் தரவில்லை என்று கூறுவது போல உள்ளது. மேலும் நீ என்னை வந்து பாடு என்று கூறியதால் தானே பாடினேன். பின் ஏன் என்னைச் சோதிக்கின்றாய் எனக் கேட்கிறார். அதற்குச் சான்றுகள் இதோ.

> 'நின்றுதி நின்சொல் வழிமுயல் கின்றேன்
> நீசக் கொடை கொடுத்து நிறைபுகழ் புனைவாய்' (2.6 3)

'எண்ணமுற்றருள்வான் போலெனை யழைத்தான்
ஏனினன் துதித்தேன் யாதும் ஈந்தில்லான்' (2.7.2)

'உறுதியா நீ வந்துரை யெனக்கேட்டாய்
உரைக்கின்றேன் உன்தன் உதாரம் எப்படியோ' (2.5.3)

'பைந்தமிழ் வேட்டுரையென் றீர் பரிசுதவத்துணிந்திரோ'
(1.2.2)

மேலும் பலரைப் பாடினேன்; ஆனாலும் பரிசு கிடைக்கவில்லை. அப்படி இருந்த என்னிடம் வந்து பாடு என்றாயே, நீ பரிசு கொடுக்கக்கூடாதா என்று கேட்பதுபோல கீழ்வரும் அடிகள் அமைந்துள்ளது.

'பொன்னருளத்திறமில்லாப் புத்தேளிர் களைப்பாடி
இன்னலுள்றேனிடம் பாடென்றிசைக்க வந்திர்ஈயீரோ'
(1.6.1,2)

இதற்கெல்லாம் மகிடாரம்போல இரண்டாம் பதிகத்தின் இறுதிப் பாடலில் குறிப்பிட்டிருப்பது சிந்திக்கத் தக்கதாக உள்ளது.

'நாவலூர்ப் புலவற் களவில்பொன் கொடுத்த
நாமலி விருத்தா சலமுடை யானைச்
சேவலங் கொடிச்சீர்ச் சென்னையூர்க் குகனாம்
செட்டிபாற் பாடும் செந்தமிழ் விலைகேட்டு
ஈவனோ இலனோ என்மிக ஏங்கி
இருப்பவனான திருப்புகழ்ப் புலவோன்' (2.11.1–3)

இதிலிருந்து சுவாமிகள் ஏதோ ஒரு காரணத்திற்காக பொருளுக்காக எல்லாத் தலங்களும் சென்று பாடிவந்ததாக அறியமுடிகிறது. அவரது வரலாற்றை முழுமையாக ஆய்ந்தால் அதன் காரணத்தை அறிந்துகொள்ளலாம். ஆனால் ஓரிடத்தில் நான் எதற்காகப் பொன் வேண்டுகிறேன் என்றால்,

'அந்தியும் பகலும் செய்யும் நின்பூசை
ஆர்வமொடி யற்றிற்கு அம்பொனை வேட்டேன்' (2.1.2)

என்கிறார். மற்றும் ஓரிடத்தில் பட்ட கடனை அடைப்பதற்காக அலைந்தேன் என்றும் அதற்காக ஒழுங்காகச் சாப்பிடாமல் அலைந்தேன் என்றும் குறிப்பிட்டுள்ளார்,

''யான் பொன்கடன் வருத்தத் திரிந்துளேன் அந்தோ
போனகமின்றிப் புதியகாய் இலையே
தின்கவும் துணிந்தேன் இரங்கிலன் கண்டாய்' (2.2.2.3)

இதிலிருந்து நான் மாற சீக்கிரம் உன் திருவருளைத் தரவேண்டும் என்றும், அதற்காகவே இந்தவேடம் பூண்டிருக்கிறேன் என்கிறார்.

'போனக மாதி யிரப்பதற் கொல்காப்
பொதுத்திருவேடம் பூண்டுளேன்' (2.3.1)

பணம் வேண்டிப் பாடி அலைவது உண்மைதான். ஆனால் அதற்காக,

'ஈனர்கைப் பொருள் வேட்டலைவது முறையோ' (2.3.2)

என்றும்

'பற்றிலார் இகழப் பொருள் விழைந்தலையும்
காவி சொற் காசைப்படும் விதமென்னோ' (2.4.3)

என்றும் கேட்டு, நீ என்னை இவ்வாறு அலையவிடுதல் நல்லது தானா என்று கேட்பது போலவும் பாடியுள்ளார்.

'பொன்னாசை யினர்போலப் புழுங்கவிடல் முறைதானோ'
(1.4.2)

'தீமாந்தர் தெருந்தோறும் திரியவிடத் தகுங்கொல்லோ'
(1.5.2)

இவ்வாறு குறிப்பிட்ட சுவாமிகள் தான் புகழோடு வாழ விரும்பு கிறேன் என்பதை 'விற்பவனேர் வாழ்வடைய விழைகின்றேன்' (1.9.2) என்றும் தீமாந்தர்களை, வஞ்சகர்களைப் போற்றி வழி பட விரும்பமாட்டேன் என்றும் குறிப்பிடுகின்றார். இந்த நிலை அடைவதற்கு இரண்டு காரணங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

1. 'அந்நாள் கைச்சிலையோங்கி அடித்தபெரும் பாவத்தால்
இந்நாளில் வாறலைத்தேன் எனவுணரச் செயலாரோ'
(1.8.1.2)

என ஊழ்வினை காரணமாக இருக்குமோ என வருந்திக் காட்டு கிறார்.

2. 'வண்ணவாய்க் கிளிநேர் ஒருத்தி தன் மயலால்
வருந்தினன் பயந்தேன் வரங்கொடுத் தருள்வாய்' (2.7.3)

என ஒரு பெண்ணால் அழிந்தேன் என்றும் அதிலிருந்து என்னை மீட்டெடுக்க அருள்கொடுக்க வேண்டும் என முறையிட்டிருப்பதையும் உணரமுடிகிறது. இவ்வாறு சுவாமிகளின் தனி மன நிலையைப் பாடல்கள் மூலம் அறியக் கிடக்கிறது.

**வேண்டல்**

இறைவனிடம், எனக்குப் பொருள் கொடுத்தாயானால் எங்கு சென்றாலும் உன்னை மறக்கமாட்டேன் என்பதை,

'இத்ததிக்கான ஏமம் ஈகுவையேல்
வானநட் டகத்திற் செல்லினு(ம்) மறவேன்' (2.3.2,3)

என்றும்

'நிசக்கொடை கொடுத்து நிறைபுகழ் புவைவாய்' (2.6.3)

என்றும் வேண்டுவதாக அமைத்திருப்பது எல்லோரும் கூறும் கூற்றாகவே அமைந்துள்ளது.

அடியார்களுக்குத் தொண்டு செய்யும் பணியே சிறந்தது. அதைச் செய்ய எனக்கு அருள் கொடுப்பாய் எனவும் வேண்டு கிறார்.

'பத்தியினால் உனைப்பரவு மெய்யடியார்க்கு
இசையும் நற்றொண்டுகள் நாடொறும் செய்சீர்
ஏற்றவர் தம்முடன் இன்புற அருள்வாய்' (2.8.2,3)

என்றும்,

......'கருணையால் இந்தத்
தனியனாம் என்னைத் தொண்டரில் கூட்டித்
தரைமகிழ்வதற்காம் தகைசெயப் புரிவாய்' (2 9.3,4)

என்றும் வெளிப்படுத்தியுள்ளார்.

மேலும் நான் உன்னை எண்ணி ஓதலுக்காக ஆசையாக உள்ளேன், அதையும் நீ தந்தருள வேண்டும் என்கிறார்.

'ஓதல் வேட்டுள்ளேன் என்னை இவ்வாசைக்கு
உடன்படப் புரிந்தோன் உனையல துளனோ' (2.10.3)

**சுந்தரர் பற்றியக் குறிப்பு**

ஒரு தலத்தின் சிறப்பு அங்கு எழுந்தருளி, அத்தலத்தின் சிறப்புகளைப் பாடியப் பாடல்கள் மூலம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. திருமுதுகுன்றரால் பன்னீராயிரம் பொன் பெற்ற சுந்தரர் பாடிய பாடல்கள் இந்தத் தலத்திற்குப் பெருமை சேர்த்துள்ளது. அதனால்தான் சுந்தரரின் புகழைப் பல இடங்களில் சுவாமிகள் பல உத்திகளில் கூறியிருப்பதைக் காண முடிகிறது. தானும் பொன்னுக்காக அலைந்தேன் என்பதை,

'சுந்தரன் பொன்பெற்ற தலந்தோறும் பாடிச்சலித்துள்ளேன்' (1.2.1) எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் நீர் சுந்தரருக்கு உதவியது உண்மைதானா எனக் கேட்பது போல, 'முன்னாவலூரனுக்கு முடிச்சுதவல் நிசமென்ன' (1.4.3) எனச் சுட்டிக் காட்டியுள்ளார். சுந்தரருக்காகச் செங்கல்லைப் பொன்னாக்கியும் கொடுத்துள்ளீர் என்கிறார்.

'அன்று தென் ஆரூர்ச் சுந்தரன் மகிழ
ஆடகச் செங்கல் அருள்புகலூரான்' (2.6.1)

சுந்தரரை 'தீதறு புலமைச் சுந்தரன்' (2.10.2) என்றும், சுந்தரருக்கு அளவில்லாத பொன் கொடுத்துள்ளீர்' (2.11.1) என்றும் குறிப்பிட்டிருப்பதைக் காண முடிகிறது. அவரது இரு மனைவியரையும் இரண்டு இடங்களில் சுட்டிக் காட்டியிருப்பதைப் பார்க்க முடிகிறது.

'செந்திரு நாணும் பரவைபோல்' (2.1.1)
'கண்ணணி மலிபெண் சங்கிலியாலோர்' (2.7.1)

இறைவனைப் பாடுவதற்கு, 'அவன்கேட்டான் நான் பாடினேன்' என்ற உத்தி ஒருவகையாகும். இதை சுவாமிகள் கையாண்டுள்ளார். உலகில் மக்கள் அல்லப்படுவதற்கு இரண்டு காரணங்கள் முக்கியமானது என்பதைச் சுட்டிக்காட்ட, நான் பணத்துக்காக அலைந்தேன் என்றும் பெண்ணால் துன்பப் பட்டேன் என்றும் சுட்டிக் காட்டியுள்ளார். இது மக்களுக்காகச் சொல்லப்பட்டதாகக் கொள்ள வேண்டும். தகுதியில்லாதவர் களைப் போற்றக்கூடாது. தமிழுக்கு உயர்வு கொடுத்திருப்பது அவரது தமிழ்ப்பற்றை வெளிப்படுத்துகிறது. அடியார்களுக்குச் செய்யும் தொண்டு சிறந்த ஒன்று. அதையும் சுட்டிக் காட்டி யுள்ளார். இறைவனை எண்ணித் தினமும் ஓதல் வேண்டும் என்பது அவரது எண்ணமாகும். திருமுதுகுன்ற நாதரின் சிறப்பை ஒவ்வொரு பாடலிலும் வெளிப்படுத்தியிருப்பதிலிருந்து இந்தத் தலத்தின் சிறப்பெல்லாம் தெரிந்திருக்கிறார் என்பது வெளிப்படை.

# சுவாமிகளின் மழைப் பதிக மாண்பு

## வை. தட்சிணாமூர்த்தி

### வண்ணச்சரப மழைப் பதிகம்

முருகப்பெருமான் மீது தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளார் இயற்றிய மழைப் பதிகம் என்பது 27.11.52 இல் சிரவணபுரம் கௌமார மடாலயத்தில் வெளியிடப் பட்ட நான்கு பக்க நூலில் ஒரு காப்பு வெண்பா, பன்னிரண்டு தரவு கொச்சகக் கலிப்பா மற்றும் இறுதியாக, இரு வெண் பாக்கள் உள. நெல்லையில் சுவாமிகள் இதனைத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்கள். சுவாமிகள் 1839 – 1898 ஆண்டுகளில் வாழ்ந்தவர்.

### நால்வர் மழைப் பதிகம்

திருஞானசம்பந்தப் பெருமானின் திருவையாற்றுப் பதிகம் மேகராகக் குறிஞ்சிப்பண்ணில் மழைப் பதிகமாக அமைந்துள்ளது. இப்பதிகம் பதினொரு பாக்களை உடையது.

இவண் மழைப் பதிகமாக வரும் ஞான சம்பந்தர் திருவையாற்றுப் பதிகத்தில்

"முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவை யாறே!, என முகிலைப்
புகழ்வதும்,

"மஞ்சாடு தோள் நெறி" என, இராவணனைக் குறிப் பதும் முதலிய செய்திகள் வருகின்றன. பிற யாவும் இறைவழி பாட்டுச் சொற்களாகவே அமைகின்றன.

மழை பெற, சுந்தரர் பாடிய பாடலொன்று "வையக முற்றும் மாமழை" எனத் தொடங்கும் நிலையது.

சுந்தரர் அருளிய திருப்புன்கூர்ப் பதிகத்தில்

"வையக முற்றும் மாமழை மறந்து
வயலில் நீரிலை, மாநிலம் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை என்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ரானே"

என வருவதில், மாமழை கிடைக்காது வையகம் வறண்டு, வயல்கள் நீரின்றி, வரள்கையில், மழை தந்து, உய்யத் தந்து, மாநிலம் தருக என வேண்டுகிறார். பெருவெள்ளம் வேண்டாம், தகு மழை தருக எனவும் உருகி வேண்டுகிறார்.

வெயிலின் கொடுமை தீர, அப்பர் அடிகள் பாடிய பதிகம் "சுழலார்துயர் வெயில்" எனத் தொடங்கும்.

மழை வேண்டி, மேகராகக் குறிஞ்சி இசை முழங்குவதும், கடற்கரையில், நீர் நிலைகளில் நின்று வருணனையும் இந்திரனையும், கண்ணனையும் வேண்டி, வேத முழக்கம் செய்வதும், இறைநெறி போற்றுவோர் அறிந்த மழை வேண்டு முறைகள். வேள்விகள், தான தருமங்களும் கூட்டு வழிபாடும், மேலும் நன்மைகள் நல்குவன.

**இலக்கியத்தில் மழைப் பதிகம்**

குறிஞ்சி நில மக்கள் மழை வேண்டி இறைவனை வாழ்த்துவதை "மலைவான் கொள்கென" நூற்று நாற்பத்து மூன்றாம் புறநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றது.

இளங்கோவடிகள் ஞாயிறு, திங்களைப் போற்றி, மாமழை போற்றுதும் என்பதும் நாமறிவோம்.

**வண்ணச்சரபனார் சிறப்பு**

இவண் வண்ணச்சரபம் அவர்களின், மழைப் பதிகத்தின், சிறப்புநிலை காண்போம். வண்ணச்சரபம் சுவாமிகள் அவர்கள் அருணகிரிநாதர் கந்தரலங்காரம் பாடியது போன்று, வேலலங் காரம், மயிலலங்காரம், வாள் அலங்காரம், தமிழலங்காரம்

முதலியன பாடிய தமிழ்ப்பற்றும், முருக உபாசனையும் மிக்க புலவரடிகள் ஆவர்.

அவர்கள் தமிழலங்காரம் பாடியதே பொற்பிலுறு முருகப் பெருமான், பொதிகையில், தமிழே உயர்த்தி எனத் தனக்கு அளித்த சிட்டின் காரணத்தால் என அற்புதத் திருப்புகழில் பாடியுள்ளார்கள். தமிழே திருமுறை, திருமுறையே தமிழ் என்பது அவர்களது துணிவு.

**ஒருமை தியான நிலை**

எல்லாத் தெய்வங்களையும் சிவனாக மதிக்கும் சைவச் செல்வர் போன்று, இக்கௌமார மாமுனி எல்லாத் தெய்வப் பலன்களையும், குமரவேள் வழியே பெற இயலும் என நடை முறையில், தனது தியான, தவ பலத்தால் அறிந்தவர்.

**காப்பு வெண்பா**

"மெய்யான் கடப்பம்தார் அணிந்த முருகன்"

அவன் மார்பில் கடப்ப மாலை தவழ்தல் போல், மழை தவழ வேண்டுகிறார்.

அங்கே குழையணிந்த தேவி இவரைக் கயிலை உறச் சேர்த் தருள்கின்றார். இவண் "மழைக்கும், தழைக்கும், மாலைக்கும், நிலை ஒறுத்தி, ஒருத்தி நேரே, அபய உபய வரம் பெற, அவரைக் கைலையில் உறச் சேர்க்கின்றாள்" என்ற காப்பு வெண்பாவின் பொருட்திண்மை, முனிவரின் தியானபலப் பலன்களின் உறுதிப் பாட்டைக் காட்டுகின்றது. இன்று நாம் அனைவரும் கூடி, இம்மழைப் பதிகத்தைப் பாடினால் மழை வரும் என்பதில் ஐயமில்லை.

**அருணகிரி முதலியோர் பாட்டொலி போல்**

முதல் தரவு கொச்சகக் கலிப்பாவில்,

1. "புவியிடத்துக் கண்டருளும் புகழ்ப் பேறும், கதிர்வேலும் உடையவனே!
2. தொண்டர் வாய்மொழி சிறிதும் சோராது
3. அண்டர்களும் பெரிதேத்தும், அருணாகிரி முதலானோர்

வண்டமிழ்ப் பாட்டொலி போல் மழை பொழியப் புரிவாயே, என்று பாடுகின்றார்.

குமரன் அருள்புரிவான் எனும் புகழும், வருணனைத் தடிந்து, கந்தமாதனத்தினின்று மழை பொழிய, அதட்டிய, கதிர்வேலும் உடையவன். அஃதோடு அடியவரான கவிஞரும், அருணகிரி போன்ற திட்பம் உடையவர். அருணகிரி, தாயுமானவர் போன்ற அனைவரின் பாடலொலி போல் மழை பொழியச்செய் என வேண்டுகின்றார்.

வேண்டுவோன் திறன், வேண்டப்படுவோன் திறன், வேண்டும் திறன், வேண்டுதல் வழிமுறைப் பெருமை முதலிய திட்பங்கள் முதற்பாட்டின் தனிச் சிறப்பு.

**மழை கரந்தது ஏன்**

1. பஞ்ச விதமான பெரும் பாதகங்கட்கு இடமாகிவிட்டது இம்மாநிலம்
2. அத்தகை வஞ்சகரின் வஞ்சனை மீக்குற, மழைவளம் குறைந்தது
3. அன்று, இறைவன் நஞ்சுண்டார்
4. அவன், நடு மார்பில், அன்னை நடமாடுகின்றாள்
5. அவள், தன் மகனைக் காணவேண்டித் துன்புறுகிறாள்
6. முருகனாகிய நீ, ஆறு படைவீடுகளாய அனைத்து மலைச்சிகரங்களுடே திரிகின்றாய். உன் கண்ணில் படாதது ஏதுமில்லை.
7. எந்த வஞ்சகரால், மழைவளம் குறைந்ததோ, அவர்கட் கஞ்சாது, மழை பொழிய அருள் புரிவாயே என வேண்டுகிறார்.

நஞ்சுண்ட கண்டன் மகனாய் யாதுமறி நீ, வஞ்சகரால் அமைந்த பஞ்சம் போக்கி, அருள்க எனத் தந்தை நிலை, தாய் நிலை, மகன் நிலை, மாநில நிலை கூறி கருத்தடுக்குப் பார்வையில், இரண்டாம் பாட்டில் கவிதையில் வேண்டுகின்றார்.

**வானவரும் களிகூற**

மழைவளம் கரப்பின் வான் பேரச்சம் என்றார் பெரியோர்.

1. குறிஞ்சித் தலைவன், முல்லை நிலப்பாவை வள்ளியினை மணந்ததை கதைபேசி போற்றும் புலவர்கட்கு இனியவன் முருகன்.

2. இன்று புவியிடத்து இருப்பவர், மழையின்றித் தவிக் கின்றனர். இமையாத வானவரோ நம் பூசனை நோக்கிக் காத்துள்ளனர். வானவரும், தானவரும் களிகூற மழை பொழியப் புரிவாய், என்று மூன்றாம் பாட்டின் கருத்து அமைகின்றது. இவண் தர்க்க ரீதியின் மணமும், வானவர் போற்றும் வேதநெறி வேட்கையும், குறிஞ்சித் தலைவன் மேல் வள்ளி வைத்த நம்பிக்கை போன்ற ஒரு நம்பிக்கையும் தென்படுகிறது.

**மன்னருக்கு அடங்காத மழை**

1. மழை பாராளும் மன்னருக்கு அடங்காது.
2. சொல்லிப் புகழ, அரிய பார் முழுவதையும் ஆளும், மன்னர் மூவரும், யாராயிருப்பினும், மழை அவர்கட்கு அடங்காது.
3. நீயோ தென்னவனாம் பாண்டியனுக்கு முடிசூட்டினாய்
4. சிவன் வாழும் கைலை மலையாம் கனகாசலத்தினையும், தேவர்களை அசுரர்கள் நடுங்கச் செய்த போது, சிவனன்றி, நடுங்கிய மற்ற அனைவரின், துயர்களையும் துடைத்து அவுணரைத் தடிந்து உயிர்களைக் காத்தவன் நீ.
5. இவண், தேவர்க் கடங்கா, அவுணரை மாற்றியதுபோல், மன்னர்கட்காக மழையினைப் பொழியச் செய்வாய் என, நான்காம் கலிப்பாவில் வேண்டுகிறார். கந்த புராணக் கந்த மாதனப் புகழ் இவண் மணக்கின்றது.

**உழுது பயிரிடுவோர்க்கு வெட்சி மலர்காட்டு**

1. பகைவரின், ஆநிரைகளை ஓட்டுவார் வெட்சி மாலை அணிவர். வெட்சி மாலை அணிந்தவர், பகைவர் நிரைகளைக் காக்கும். பொறுப்பேற்பது இது.

2. குமரக் கடவுள் வெட்சித் தாரணி மார்பர்.

3. கௌமார பக்தர்கட்கு வீடுபேறு குமரன் திருவடி

4. இக் கௌமாரர் குலவு திற மிகு நல்லோராயினும், இறைவனைக் கூடார்க்கு எமன் போன்றவர். வேலின் அருள் பெற்றவர்.

5. குமரன் திருவடி பணிந்த, மாடாள்வார், நாடாள்வார். உழுது, மிக வருந்தி, இட்ட பயிரெல்லாம் வாடுகின்றன. நாடினோம் உன்னை. வீடு பேறளிப்பவனே இப் பருவத்தில் பயிர் வாடாது விளையும் வண்ணம் மழை பொழியப் புரிவாயே என ஐந்தாம் தரவு கொச்சகக் கலிப்பாவில் வேண்டுகின்றார். காக்கும் கடவுளாயும், வீடுபேறு நிச்சயமாக அளிக்கும் குமரக் கடவுளாய், ஆடிய பாதன் மகன், வாடிய பயிரைக் காக்க வேண்டும், பயிர், உயிர், இரக்கம் இவண் ஒலிக்கின்றது. இராமலிங்க வாசனை.

**ஆறெழுத்து மிடிதீர்க்கும்**

1. அப்பனின் மந்திரம் ஐந்தெழுத்து. மகனின் மந்திரம் சரவணபவ என்னும் ஆறெழுத்து.

2 ஐந்தெழுத்தோடும் ஆறெழுத்தோடும் நீறணிவோரே

3. சிலபோது, ஐந்தெழுத்து முதியோர், மகனை-குஞ்சை-அவன் ஆறெழுத்தைப் பாட மறுத்து, இகழ்வதும் இருந்தது.

4. குமரனே நீ தந்தைக்கு உபதேசம் செய்பவனாக விளையாடினை

5. விஞ்சையர் போற்றும் நின் ஆறெழுத்தைப் பாடிய, மகிமையை, மாநிலத்து, மிடிதீர, மழை பொழிந்தருள் புரிந்து காட்டுவாய் என வேண்டுகின்றார். அப்பன் மந்திரமும், மகன் மந்திரமும், திருநீற்றின் திறத்துள் அடங்குவனவே. நீ தகப்பன் சாமி. உன் மந்திர மகிமை மழை பொழிந்து, மிடி தீர்ப்பது நிச்சயம் என்பதே ஆறாம் பாட்டின் பொருள்.

### பிறர் இகழாமே மழை பொழிவாய்

1. சமணராய சாரணர் பழி சுமத்தி இகழ்கின்றனர்
2. கொல்லா விரதம் உடையாராய சமணர் தமிழின், தமிழ் முருகனின் சீர் உணர்ந்து, அழிவற்ற நின் புகழில் தோய்வுற்று, தண்ணளி பெறும் வண்ணம் செய்க
3. நின்னை வழிபடுவோர் இகழப்படாமல் இருக்க, நின்னை வழிபடுவோர், மறந்தும் நின்னை இகழாமல் இருக்க மழையருள்வாய் என ஏழாம் பாட்டில் ஏத்துகின்றார். தமிழையும், தெய்வமுருகன் புகழையும் பிரிக்க இயலா, தெய்வ நம்பிக்கையின் ஒளிவட்டத்தை, இவண் காண்கிறோம். தமிழ், நாத்திகம் போற்ற இயலா தெய்வ முருகத் தமிழ் என்பதை இவண் நிலை நாட்டுகின்றார்.

### காழி வந்த கோழிக் கொடியருள்

1. சீர்காழி மாநகரத்து, ஞானசம்பந்தப் பெருமானாய்த் தோன்றி திருவையாற்று மழைப்பதிகம் பாடியதோடு, பற்பல அற்புதங்களை இயற்றினாய்.
2. ஆழி சூழ் புவிமுழுதும் உன் நலனை மீண்டும் மீண்டும் அறிந்து, கோழிக் கொடியேந்திய குமரகுருபரனாகிய நின் புகழ் வாழியென அனைவரும், பிறரும் போற்ற, மழை பொழியப் புரிவாய் என எட்டாம் கலிப்பாவில் கவிதை அமைகின்றது.
3. நீதான் ஞான சம்பந்தன்; மழைப் பதிகம் பாடியவனாகவும்; மழை அளிப்பவனாகவும் நீயே ஆகின்றாய். நின் புகழே யாவும் என்ற ஒருமை நெஞ்சம், இவண் இறைவனை ஆத்ம பராமாத்ம ஒருமை கண்டு வேண்டுகின்றது.

### சூரனுக்கு அருளியவா, பல்லுயிர்க்கும் அருளிடவா

1. சூரனாதியர், துடிதுடிக்கச் சமராடி, வென்று அவர்கட்கு அருள் புரிந்து, மயில் வாகனமாகவும், கோழிக் கொடியாகவும் அவர்களைக் கொண்டு, அருள் புரிந்தாய்.
2. பாரில் பல்லுயிரும் பசிக் கொடுமையால் வாடுகின்றன.

3. வாரணமாய யானைதன் துதிக்கையால், நீர் வீசுவது போல், மழை வீசிப் பொழியச் செய்வாய் என ஒன்பதாம் பாட்டு ஒலிக்கின்றது.

4. சூரரிடம் போரிட்டு, வாகை சூடி, அவரைப் பகைவர் என வதைக்காது, அருளிய, நீ அகந்தையற்ற, பல்லான் மாக்கட்கும் உதவுக என்ற முழு நம்பிக்கையோடு வேண்டுவது இப்பதிகம்.

வம்பரஞ்ச மழை

1. கந்தமாதனத் திருந்து, செம்பதும மலரோனாய பிரம மனும், திருமாலும் வியக்கும் வண்ணம், தேவருடலைப் பொடியாக்கிய, போர்த்திறம் காட்டிய, சூரபன்மனைச் சம்மாரம் செய்து, தேவர்க்கு நம்பிக்கையூட்டும் அருள் மொழி வழங்கியதோடு, அசுரர் தலைவனையும், நின் அடியனாக்கி ஆட் கொண்டனை.

2. நீ மொழிந்த உறுதிமொழிபோல், என் பனுவல் பொருட்டிங்கு, இரக்கம் எய்தி, நாத்திகன் வாயில் நான் படாது, பெருமை எய்தத் தக்க பெரும் மழை பொழிய, அருள் புரிவாயே என இப்பத்தா பாடல் வேண்டு கின்றது.

3. வேண்டத் தருவான் என்ற உறுதிப்பாடு, தெய்வதம், நாத்திகத்தை நிச்சயம் வெல்லும் என்ற திண்மை இவற்றின் வழிவந்த வேண்டுதல் வாதம் இவண் கருப்பொருள்.

உயிராம் மழை

1. அன்பர்கள் ஒவ்வொரு அருளுக்கும், ஒரு தலை எனக் கருதி, அறுமுகனாக எண்ண, எண்ணியவாறு அருட் குரவனாக, அவர் தியானத்தில் தோன்றுகிறாய்.

2. இவண் திண்ணியனாக எண்ணுகிறேன். துன்பமிகு வறுமைக் கனலால், சூடுண்டு, சுழல்கின்ற மன்பதைக்கு உயிரூட்டும் மழை பொழிய அருள்வாய் என இப் பதினோராம் பனுவல் வருகின்றது. இவண் வண்ணச் சரபனார் திரு அருள் பாக்களில், திருக்குறள்,

வடலூரார், தமிழ் முருக மணங்கள், கதம்பவாசனை யாய், கனத்து ஒளிர்வது கண்கூடு.

முருகனே வருணன்

1. பதினொரு பதிகம் பாடி, பன்னிரண்டாம் பாட்டில், குழையணிந்த செவிக்குமரனே, குருபரனும், முழு மழைக் கதிபதியாம். வருணனும் எனப் போற்றி

2. பதினொரு மழைப் பதிகத்தினையும் பாடி, மழை பெறலாம் என, நமக்கு அருளி, இறைவனைத் தன் பிழை ஏதும் இருப்பின் பொறுத்தருள்க எனவும், வேண்டி, பன்னிரண்டாம் பாட்டை முடிக்கின்றார்.

கண்டேன் நெல்லையில்

1. இறுதி இரண்டு வெண்பாக்களில், மழைப்பதிகம் பாடி, நெல்லையில் மழை பொழிந்த திண்மையையும், ஞான சம்பந்தப் பெருமானின் திருவையாற்று மழைப் பதிகம் போன்றதே, இஃதும் எனவும் மொழிந்து முடிக்கின்றார்.

மழைவளம் வேண்டிப் பாடுவோம்

வண்ணச்சரபம் சுவாமிகளின் நூற்றாண்டுக் கருத்தரங்கில், அவர் கண்ட இறையனுபவத்தினை மதித்து, அவருடைய வாழ்வில் குமரப் பெருமானின் அருளால் நிகழ்ந்த பல அற்புதங்களை நம்பி, குமரக் கடவுள் வழி மழையும், பிற செல்வ நலன்களும், வினைத் தீர்வுகளும், பெற்று உய்ய முயல்வோமாக.

இலக்கியக் கவிதையின், சொல்நயங்கட்கு மேல், தெய்வீக நன்மைகளை இவரது அருட் பாடல்களில் கண்டு, அந்தச் சுகங் களை நாமும் அனுபவிக்க குமரக்கடவுளின் அருளை வேண்டி முடிக்குதும்.

# சுவாமிகளின் முருக பக்தி

## இராம. தனசேகரன்

பாரத நாட்டில் முருக வழிபாடு தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றது. முருகன் தமிழ்க் கடவுளாகவும், மலைநிலைக் கடவுளாகவும் விளங்கியமை அவனது தொன்மைக்கும் தொன்மை வழிபாட்டிற்கும் காரணங்களாக அமைகின்றன. முருகனின் பெருமையினைச் சங்கத்தமிழில் பாடியவர் நக்கீரர்; சந்தத் தமிழில் பாடியவர் அருணகிரியார்; இன்தமிழில் இலக்கியம் படைத்தவர் தண்டபாணி சுவாமிகள். முருகனின் திருவருட் செல்வம் கைவரப்பெற்று முருகனின் பெருமைகள், சிறப்புக்கள், மற்றும் அவனது அருட்செயல்களை இலக்கியத்தில் பதிவு செய்தவர் சுவாமிகள் ஆவார். தண்டபாணி சுவாமிகள் ஐம்பதினாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்கள் பாடியிருப்பினும் அவை அனைத்தும் பக்தி, தமிழ்மொழி, தமிழின் சிறப்பு, தமிழ்ச் சமுதாயம் என்ற அடிக்கருத்துக்களை அடிப்படையாய் கொண்டு அமைந்துள்ளன. மேலும் பல்வேறு இலக்கிய வகைகளாகவும் அவரது பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது அவரது பதிகங்கள் ஆகும். வேலாயுத வண்ணப்பதிகம், முருகப் பெருமான் பதிகம், முருகப்பெருமான் போற்றிப் பனுவல் ஆகிய மூன்று பகுதிகள் அடங்கிய 'முருகன் புகழ்ப் பாமாலை' என்னும் நூல் இக்கட்டுரைக்குச் சான்றாக அமைகின்றது. இந்நூலில் இடம் பெற்றுள்ள தண்டபாணி சுவாமிகளின் முருக பக்தியின் சிறப் பினை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### முருகன் புகழ்ப் பாமாலை

தண்டபாணி சுவாமிகள் சமயம் என்பது தனி மனிதர்கட் குரியதல்ல; சமுதாய ஒருமைப்பாட்டிற்குரியது என்ற கருத் தினைக் கொண்டு, சமய ஒருமைப்பாட்டிற்காகத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்துக் கொண்டவர். மேலும் பல சமயங் களின் சங்கமமாகத் தன்னைப் பாவித்துக் கொண்ட சுவாமிகள் சமயப் பொதுமையை முருகனின் வடிவத்திலேயே கண்டு

கொண்டார். முருகன் மீது எண்ணற்றப் பாடல்கள் புனைந்து தம் பக்தியினை வெளிப்படுத்தியவர். அவ்வகையில் சுவாமிகள் அருளிச் செய்த 'முருகன் புகழ்ப் பாமாலை' எனும் நூல் குறிப் பிடத் தகுந்ததாகும்.

இந்நூல் வேலாயுத வண்ணப்பதிகம், முருகப்பெருமான் பதிகம், முருகப்பெருமான் போற்றிப் பனுவல் ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்டதாகும். வேலாயுத வண்ணப்பதிகம் அழகிய சந்த நடையில் அமைந்து பல வரலாறுகளைத் தெரிவிக்கும் வகையில் முருகப்பெருமான் அணிந்துள்ள திருவருட் சத்தியாகிய வேலாயுதத்தைக் குறிக்கொண்டு பன்னிரண்டு வண்ணயாப்புச் செய்யுளால் அநுபூதி உண்மைகள் விரவிய தோத்திர வடிவாக அமைந்துள்ளது. முருகப்பெருமான் பதிகம் முருகன் சிறப்புக் களையும் அருள்புரிந்த வகையினையும் விளக்கும் வண்ணமாய் அமைந்துள்ளது. முருகப்பெருமான் போற்றிப் பனுவல் முருகனின் தோற்றப்பொலிவு, உறவுநிலை, அருள்திறன், அவன் எழுந்தருளிய திருத்தலங்கள் போன்றவைகளைப் போற்றிப் புகழ்வதாக அமைந்துள்ளது.

### சுவாமிகள் முருக பக்தி

தண்டபாணி சுவாமிகளின் முருக பக்தி தன்னிலை (கீழ்நிலை) உரைத்தல், முருகனின் பெருமைகளைக் (உயர்நிலை) கூறி அவன் அருள் வேண்டல் எனும் நிலையில் அமைந்துள்ளது. மேலும் முருகனின் கையிலமர்ந்த வேலாயுதத்தின் வெற்றிச் சிறப்பினை போற்றுதல்,முருகனின் சிறப்புக்களை எடுத்துரைத்தல், முருகனின் பெருமைகளைப் போற்றிப் புகழ்தல் எனும் போக்கிலும் அமைந் துள்ளது.

சுவாமிகள் முருகனின் பல்வேறு திருப்பெயர்களைச் சுட்டி பீருத்தல் சிறப்பிற்குரியதாகும். அதாவது முருகன், முருகவேள், செவ்வேள், குகன், குருபரன், கந்தன், குமரவேள், சேய், சேயோன், சுப்பிரமணியன், வேலவன் போன்ற முருகனின் பல்பெயர்கள் அவனுடைய பல்வேறு சிறப்புக்களை வெளிப் படுத்துவனாய் அமைந்துள்ளன.

சுவாமிகள் தன்நிலை உரைத்தலாகத் தன் கீழான நிலை யினைக் குறிப்பிடுகின்றார், நிலையற்ற உலகப் பொருள்

களிடத்து மயக்கங்கொண்டு வெறிநாய் போல் அலைதல், பெண்ணின்பமே பெரிதெனக் கொண்டு காமுகனாகிக் கூற்று வனுக்கு இரையாகி அழிதல், வேடன் வலையகப்பட்ட சிறுமான் அஞ்சுவது போல ஞானம் சிறிதுமின்றி உலகப்பற்றில் மூழ்கி அஞ்சி நடுங்கும் அவலநிலை, மெய்ப்பொருளாம் முருகனின் திருவடிப்பேற்றினை எண்ணாமல் ,பொய்ப்பொருளாம் உலகப் பொருள்களிடத்தில் பற்றுக் கொண்டு துன்புறுதல் போன்ற தன் இழிநிலைகள் குறித்து சுவாமிகள் பெரிதும் மனவருத்தம் கொள்ளுகின்றார்.

சுவாமிகள் முருகப்பெருமானின் பெருமைகளைக் குறிப்பிடும் பாங்கு போற்றுதற்குரியதாகும். முருகப்பெருமான் அழிவில்லாத மெய்ப்பொருளானவன் என்றும், துன்புற்று வருந்துபவர்களை அஞ்சேல் எனக் கூறி அருள்புரியும் அருளாளன் என்றும், அசுரர்களை அழித்து விண்ணவர்களைக் காத்த பெருமைக் குரியவன் என்றும், குறிப்பிடுகின்றார். மேலும் செந்தமிழ்க் கழகத்தில் தந்தையுடன் இனிதமர்ந்து தமிழ் வளர்த்த புலவன் என்றும், திருஞானசம்பந்தனாய் எழுந்தருளி தமிழ்க்காதல் கொண்டு குருபரனாய் விளங்கியவன் என்றும், மேலோர் பெருமான் என்றும், வேதம் புகழ்கின்ற குகன் என்றும் அவனது பெருமைகளைச் சுட்டுகின்றார். இத்தகு பெருமைகள் நிறைந்த முருகப்பெருமானிடம் தாம் விரும்பும் மேலான வாழ்வினைச் சுவாமிகள் வேண்டுகின்றார். மேலும் முருகன் அருளினால் தன் கீழான இழிநிலை நீங்கி மேலான உயர் வாழ்வினைப் பெறுதல் உறுதி என்ற நம்பிக்கையுடன் முருகனிடம் தண்டபாணி சுவாமிகள் தாம் விரும்பும் வாழ்வினை வெளிப் படுத்துகின்ற போக்கினைக் காண முடிகின்றது.

சுவாமிகள் விரும்பும் உயர் வாழ்வானது, தமிழ்நயம் ஓராதவரோடு சேராதிருத்தல், அமுதம் நிகர்த்த உயர் தமிழால் முருகனைப் பாடாதவர்களுடன் சேர மனம் நாணுதல், இடைவிடாது எப்பொழுதும் முருகப்பெருமானை மறவாது நினைத்தல், முருகன் அருள் பெற்ற அன்பர்களுடன் சேர்ந் திருத்தல், முருக பக்தியில் சிறந்தவனாதல், முருகனின் மெய்யன்பர்களுள் தான் சிறந்தவன் என்று உலகத்தோரால் புகழப்படுதல் போன்றவைகளைக் குறிப்பிடுகின்றார்.

மேலும் சிறந்த அரச வாழ்வும் வேண்டாது முருகனின் திருப்புகழினையே விரும்புதல், கொடியோர் செய்யும் வஞ்சகச் செயல்களால் மனம் வாடாதிருத்தல், முருகனுக்கு அடியவனாகித் தன்னை முழுதும் அர்ப்பணித்து அழகிய தமிழ்ப் பாக்களால் முருகனின் அருமை பெருமைகளைப் புகழ்ந்து பாடுதல் போன்றவற்றினை விரும்பி, அவற்றினை அருளுமாறு முருகனிடம் சுவாமிகள் வேண்டுகின்றார்.

**வெள்வேல் பெருமை**

தண்டபாணி சுவாமிகள் முருகப்பெருமான் திருக்கரங்களில் வீற்றிருக்கும் வெற்றி பொருந்திய வேலாயுதத்திடம் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். அதனால் வேற்பூசையில் அதிக விருப்பங் கொண்டு வழிபட்டவர். முருகன் கையிலுள்ள ஞானசத்தியாகிய வேலாயுதம் அம்பிகையால் வழங்கப்பட்ட சிறப்புடையது. சுவாமிகள் வேலாயுதத்தைத் தன் வழிபாட்டிற்குப் பயன் கொண்டதுடன், சமுதாயப்பணிக்கும் பயன்படுத்தியவர் ஆவார். மக்கட்பேறு அற்றோர் தம்மிடம் வந்து கவன்றபோது தமது வேல் வழிபாட்டில் திருநீறளித்து ஆசிகவிகள் கூறியவர் ஆவார். முருகனின் வேலாயுதம் கொடியவர்களை (கற்கிமுகி பேய், சூரபன்மன், முதலான அசுரர்கள்) அழித்து, நல்லோர்களைக் (நக்கீரன், இந்திரன் உள்ளிட்ட விண்ணோர்கள்) காத்தருளும் தன்மை கொண்டதாகும். அரக்கர்கோமான் இராவணனை அழித்து சீதையை சிறைமீட்க இராமபிரானின் வில் எழுந்தது போல், அசுரர் தலைவன் சூரபன்மனை அழித்துத் தேவர்களைச் சிறைமீட்க முருகப்பெருமானின் வேற்படை எழுந்தது எனலாம்.

''முருகனின் வேற்படையை, 'மெய்விடா வீரன் கைவேல்' என்ற நக்கீரர் குறிப்பிடுகின்றார். இவ்வுலகில் என்றும் பொய் மையாளரை வென்று, மெய்யடியவரைக் காக்கும் படை முருகன் கையிலமர்ந்த வடிவேல் என்பது நக்கீரர் கருத்து'' (வேலும் வில்லும், ப. 3) நக்கீரரின் இக்கருத்தினை அவரது வெண்பாவே வெளிப்படுத்துகின்றது.

> குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்தவும்
> அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் – இன்றென்னைக்
> கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
> மெய்விடா வீரன் கைவேல் (திருமுருகு. 2)

இதே கருத்தினைப் பிரதிபலிக்கும் வகையில் சுவாமிகள், கீரனைப் புரந்தாய் போற்றி என்று குறிப்பிடுகின்றார். இது சங்கப்புலவன் நக்கீரரைப் பூதத்திடமிருந்து முருகனின் வேல் காத்தருளியதைக் குறிப்பதாகும். திருப்பரங்குன்றத்துக் காட்டில் 'கற்கிமுகி' எனும் பெண்பூதத்தின் பிடியில் சிக்குண்டு, அதன் குகையில் அல்லலுற்ற நக்கீரனை அப்பூதத்தின் பிடியிலிருந்து விடுவிக்க முருகனின் வேலாயுதம் வந்து குகையைப் பிளந்ததுடன் கற்கிமுகியின் இதயத்தையும் பிளந்து உயிரைக் குடித்துக் கொன்றது. இதனைச் சுவாமிகள்,

> ''சண்டிப் பேயொடு குன்றைக் கீறியொர்
> சங்கப் பாவலனாலே பலபேர்
> மிண்டிக் கோவெனும் வம்பைச் சாடிய
> வென்றிச் சீர்திகழ் வேலாயுதமே'' (வேலாவண். 4)

என்று குறிப்பிடுகின்றார். இது தீயோரை அழித்து நல்லோரைக் காத்த முருகனின் அருட்செயலாகும்.

அடுத்து வீரமகேந்திரத்தில் மாயையின் பிள்ளைகளான சூரபத்மன், சிங்கமுகாசுரன், தாரகாசுரன் ஆகிய அசுரர்களையும் கிரௌஞ்ச மலையையும் அழித்து, இந்திரன், திருமால், உருத்திரன், சயந்தன் உள்ளிட்ட விண்ணோர்களைக் காத்தருளியதும் முருகப்பெருமானின் வேலாயுதமே ஆகும். இதனைச் சுவாமிகள்,

> ''மங்களகோ மளவதன மாமாயைப்
> பெண்ணுதவு மைந்தர் மூவர்
> தங்களையும் தடிந்து விண்ணோர்தமை காத்த''
> (முருக. பதிகம், 9)

வேலாயுதமே என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறாக தீயோர்களை அழித்து நல்லோர்களைக் காத்தருளும் வேலாயுதமே என்னையும் காத்தருளுவாயாக என்பது சுவாமிகளின் உட்கிடை ஆகும்.

### செவ்வேள் சிறப்பு

தண்டபாணி சுவாமிகள் செவ்வேளின் சிறப்புக்களை எடுத்துரைத்து அவன் அருள் வேண்டும் திறன் போற்றுதற்குரியது. செவ்வேளின் சிறப்புக்களாக அவனது அழகு, தமிழ்ப்புலமை, அருள் திறன் போன்றவற்றினைச்

சுவாமிகள் குறிப்பிடுகின்றார். செவ்வேள் (முருகன்) செங்கரும்பினை வில்லாகவுடைய மன்மதனே மனம் நாணும் படியான எழில்நயம் வாய்க்கப் பெற்ற பேரழகன், தேவயானை, வள்ளி ஆகிய இருவரையும் மணம்புரிந்து காம வேளை விட மேலானவனாகத் திகழ்ந்தவன். அத்தகு சிறப்பு வாய்ந்த செவ்வேளின் ஆறுமுகங்களும் ஒளிபொருந்தி பிரகாசித்தல் நிலவைச் சுற்றிய நட்சத்திரங்கள் ஒளிவீசுவது போன்று காட்சியளிக்கின்றது. மேலும் கடப்பமலர் மாலை அணியப் பெற்ற அவனது மார்பு, குஞ்சரியும் வள்ளியும் பெரிதும் விரும்பி மகிழும்படியான பெரிய தோள்கள் போன்றவை களும் பேரழகு வாய்ந்தவை ஆகும். இவ்வாறாக முருகனின் முகம், மார்பு, தோள் போன்றவை பேரழகுடன் திகழ்ந்து காமவேளையும் அழகில் மிஞ்சக்கூடியது என்கிறார் சுவாமிகள். இதனை,

‘செங்கரும்புச் சிலை மாரன் மனம் நாணும்
எழிலோங்கும் சேயை’ (முருக. பதிகம், 12)

என்றும்,

‘ஐங்கணை வேளினும் மேலோன்’ (வேலா. வண். 6)

என்றும் சுவாமிகள் குறிப்பிடுகின்றார்,

மேலும் முருகப்பெருமானின் சிறப்புக்களாக, அவன் மெய்ப் பொருள் விளக்கும் தாரக மந்திரத்தின் உருவமானவன் என்றும், மோன முழுப்பொருளாய் விளங்குபவன் என்றும், அடியவர் கட்கு அருள் வழங்கும் ஆனந்தக்கடலின் அமுதாக விளங்குபவன் என்றும், தொண்டு செய்யும் அடியவர்கட்கு எளிமையாய் இரங்கிவந்து அருள் வழங்கும் அருளாளன் என்றும் குறிப்பிடு கின்றார். இதனைச் சுவாமிகள்,

‘தொண்டு செய்வார்க்கு எளிய குகப்பெருமானே’
(முருக. பதிகம், 10)

என்று வெளிப்படுத்துகின்றார்.

அத்துடன் முருகன் அமர்ந்து வரும் வாகனங்களின் சிறப்பி னையும் எடுத்துரைக்கின்றார். நாரதர் வேள்வியில் தோன்றி, பின்பு முருகனால் அடக்கப்பெற்ற ஆட்டுக்கிடாயை (செச்சை) வாகனமாய் கொண்டவனாகவும், வெண்தந்தம் நான்குடைய

வெள்ளை யானை மீது ஆரோகணித்து வருபவனாகவும், வெள்ளி மயில் மீது பவனி வருபவனாகவும் முருகன் திகழுகின்றான் என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றார். தொடர்ந்து முருகன் கவுமார சமயத்தாரின் உயிர்போன்று திகழும் ஞானக் குன்றானவன் என்றும், அருணகிரிப் புலவனை ஆட்கொண்டருள் செய்தவன் என்றும் அவனது சிறப்புக்களை வெளிப்படுத்து கின்றார்.

முடிபுகள்

1. தண்டபாணி சுவாமிகளின் முருக பக்தி தன்நிலை உரைத்தல், முருகன் அருள் வேண்டல் என்ற நிலையில் அமைந்துள்ளது.
2. முருகனின் வேலாயுதம் தீயோரை அழித்து நல்லோரைக் காக்கும் ஆற்றல் வாய்ந்தது. கற்கிமுகியை அழித்து நக்கீரரைக் காத்தல், அசுரர்களை அழித்துத் தேவர் களைக் காத்தல் எனும் பெருமைக்குரியது.
3. முருகன் மெய்யன்பர்களுக்கு எளிமையாய் இரங்கிவந்து ஆண்டருளுகின்ற இயல்பும், தன் பெருமை உணராத வர்களைத் தன் விசுவரூபம் காட்டி அழித்தும் செயற் படும் சிறப்பினையும் கொண்டவன் ஆவான்.
4. முருகனின் அழகு, உறவு, அருள் செயல், அவன் உறையும் திருத்தலங்கள் போன்றவை போற்றிப் புகழ்தலுக் குரியவை ஆகும்.
5. தண்டபாணி சுவாமிகளின் பக்தி நெறியினைப் பின் பற்றும் பிற அன்பர்களும் வீடுபேறு அடையும் பேறு பெற்றவர் ஆவர்.

# அறுவகை இலக்கணத்தில் அணியிலக்கணக் கோட்பாடு

அ. தனலெட்சுமி இராதாகிருட்டிணன்

இலக்கணம் என்பது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐவகைப்படும். தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் செய்யுளியலில் யாப்பையும், உவமையியலில் அணியையும் இயைத்துக் கூறுவர். தொல்காப்பியர்க்கு உவமை ஒன்றே உடன்பாடு எனலாம். கால வளர்ச்சியில் யாப்பும் அணியும் தனித் தனியாகப் பிரிந்து வளரத் தொடங்கின. பிற்காலத்தில் வடமொழித் தாக்கத்தினால் பல்வேறு அணியிலக்கண நூல்கள் தோற்றம் கொண்டன. அணிக்கோட்பாட்டில் தொல்காப்பிய அடிப்படையிலான அணிக்கோட்பாடு, வடமொழித் தாக்கத் தினாலான அணிக் கோட்பாடு என இருவகைக் கோட்பாடுகள் தோன்றின. இந்நிலையில் அறுவகையிலக்கணம் தாங்கும் கோட்பாட்டை இக்கட்டுரை ஆராய்கின்றது.

## தொல்உவமையியல் கூறும் செய்திகள்

தொல்காப்பியர் உள்ளுறை உவமம், ஏனை உவமம் என இருநிலையில் பல்வேறு செய்திகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். சுட்டிக் கூறா உவமம், பொருளே உவமம் செய்தல், தடுமாறு வமை, அடுக்கிய தோற்றம், உவமப்போலி, உவமப் பொருளின் உற்றது உணரும், உருவகம் முதலான அணிக் கூறுகள் இடம் பெற்றுள்ளன. வேறுபட வந்த உவமத் தோற்றத்துக்குப் பேராசிரியர் தரும் விளக்கம் உவமையின் வகைகளைத் தெளிவு படுத்துகின்றது.

உவமையின் வேறுபட்ட நிலைகளாகத் தொல்காப்பியர் கூறும் செய்திகள் பிற்கால அணி நூல்களில் நிரல்நிறை அணியாகவும் சொல்லணிகளாகவும் சொல்லிலக்கணத்திலும், பொருள்கோள்களாக யாப்பிலக்கணத்திலும் வளர்ச்சி பெற்றுள்ளன.

### அணியிலக்கண நூல்கள் கூறும் அணிகள்

திவாகர நிகண்டு 28 பொருளணிகளையும், வீரசோழியம் 35 பொருளணிகளையும் தண்டியலங்காரம் 35 பொருளணி களையும், மாறனலங்காரம் 64 அணிகளையும், இலக்கண விளக்கம் (செய்யுள்) 35 அணிகளையும், தொன்னூல் விளக்கம் 30 அணிகளையும், முத்துவீரியம் 58 அணிகளையும் சாமிநாதம் 31 அணிகளையும் இலக்கண விளக்கம் (உரைநடை) 45 அணி களையும், விசாகபெருமாளையரின் உரைநடை அணியிலக்கணம் 100 அணிகளையும் குவலயாநந்தம் (1) 87 அணிகளையும், சந்திராலோகம் 100 அணிகளையும், குவலயாநந்தம் (2) 120 அணிகளையும் விவரிக்கின்றன.

பிரபந்தத் திரட்டு, இரத்தினச் சுருக்கம், உவமான சங்கிரகம் (3 நூல்கள்), அறுவகை இலக்கணம் - உவமையியல் என்பன உவமானப் பொருள்களைத் தொகுத்துக் கூறுகின்றன.

### உவமையே மூலம்

'எல்லாவித அலங்காரங்களும் உவமையணியின் விஸ்தாரங் களைத் தவிர வேறொன்றுமில்லை. உபமாலங்காரமே அலங்கார சாஸ்திரத்தின் பிராணன் என்று பழைய இலக்கணக்காரர் சொல்லுகிறார்கள்' என்பர் பாரதியார் (மகாகவி பாரதியார் கட்டுரைகள், 'கலைகள்' ப. 91)

> அலங்காரப் பொருள் ஆகிய கிளைகள்
> அணிந்திடும் மூலம் உவமையது ஆகும்

என மாணிக்கவாசகரின் குவலயாநந்தம் அணி-4 வலியுறுத்தும். உவமையே அணிகளின் தாய் என்ற கருத்தை வடமொழி அறிஞர்களும் ஒப்புவதாக வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் (தமிழ்மொழி வரலாறு ப. 45) குறிப்பிட்டுள்ளார். பிற்காலத்தில் உவமத்தை அடிப்படையாகக் கொண்டு தனித்தனிப் பெயரிடப் பட்ட அணிகள் யாவும் வேறுபட வந்த உவமத்தின் விரிவுகளே என்பர் கோபாலையர். (தமிழில் அணியிலக்கணக் கோட்பாடு கட்டுரை ப. 3)

### அணியிலக்கணம்

அறுவகை இலக்கணத்தில் அணியிலக்கணம் ஐந்தாவது பிரிவாக அமைந்துள்ளது. செய்யுளில் அமைந்துள்ள அணிகளை

இவ்வளவு தான் என்று வரையறுத்துக் கூறல் இயலாது. எனினும் உவமை, உடைமை, கற்பனை, நிகழ்ச்சி, ஆக்கம் என்ற ஐவகை நிலையில் அணியிலக்கணத்தைக் கூறுவதாக தண்டபாணி சுவாமிகள் கூறியுள்ளார். மேலும் உவமை ஒன்றே அணி அதிலிருந்து தான் பல்வேறு அணிகள் கிளைத்து வளர்ந்தன என்கிறார்.

'உவமை யதனில் உள்ளபல் விகற்பம்
ஒன்றே அணியென உணங்குனர் பலரே'

(ஏழாம் இலக். 284)

இக்கொள்கை பற்றியே சுவாமிகளின் அணியிலக்கணத்தில் உவமை ஒன்றே இடம் பெற்றுள்ளது.

அணியிலக்கணத்தில் முதல் இயலாகிய உவமை இயல்பில் 43 நூற்பாக்களில் முருகன் முதலான பல்வேறு கடவுளர்களுக்கும், முனிவர், மன்னர், வீரர், வணிகர், வேளாளர், வள்ளல் போன்ற மக்களுக்கும், மகளிரின் கேசம் தொடங்கி பாதம் இறுதியான உறுப்புக்களுக்கும் உவமைகளாகக் கூறத் தகும் பொருள்கள் இவையிவை என்று பழைய மரபு வழிக் கூறியுள்ளார். நீதி, கருணை முதலான நுண்பொருள்களுக்கும் சூரியன், சந்திரன் ஆகியவற்றை உவமைகளாகக் கூறுவதுடன் இருபொருள்பட சிலேடை நிலையில் உவமை அமைதலையும் எடுத்துக் கூறியுள்ளார். இங்ஙனம் மரபு வழிநின்று உவமைகளைக் கூறியவர் மொழி வளர்ச்சிக்கு ஏற்ப பொருத்தமான புதிய உவமைகளையும் கையாள வேண்டும் என்கிறார்.

''பொருந்தக் கூறிய புத்துவமைச் சொல்
தழுவும் நாவலரும் தமராம் எமக்கே'' (அறு. அணி.42)

உவமைகள் கூறியது கூறலாக இல்லாமல் காலந்தோறும் புதுவதாக இயல வேண்டும் என பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைக்கின்றார். 'பொருந்த' எனக் கூறியதனால் இடைக்காலத்தில் தமிழ் மரபுக்கு முரணான, கற்பனைக்குப் பொருந்தாத உவமைகள் தோன்றியிருக்க வேண்டும். அதற்கு இடைக்காலத்தில் தோன்றிய வடமொழி மரபு தழுவிய, தமிழ் மரபுக்குப் பொருந்தாத அணியிலக்கண நூல்களைத் தமிழ் இலக்கிய மரபோடு பொருத்தி ஆராய்வது இன்றியமையாத தாகும்.

அணியிலக்கணத்தில் இரண்டாவது இயலாக உடைமை இயல்பு அமைந்துள்ளது. ஒரு பொருளைச் சிறப்பித்து கற்பனையில் அணிநலன் விளங்கப் பாடுவதற்கு அதன் உடைமைகள் பற்றி அறிந்திருப்பது இன்றியமையாதது. இவ்வகையில் உடைமை இயல்பில் தேவருடைமை, மாந்தருடைமை, பனுவலுடைமை ஆகிய மூன்று நிலைகளில் 29 நூற்பாக்களில் விளக்கியுள்ளார்.

தேவருடைமையில் முருகன் முதலான கடவுளர்க்குரிய உடைமைப் பொருள்களும், மாந்தருடைமையில் துறவோர், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், புலால் உண்ணும் இழிந்தோர் ஆகியோர்களுக்குரிய உடைமைப் பொருள்களும் கூறப்பட்டுள்ளன. பனுவலுடைமையில் அந்தணர் முதலாய நால்வருணங்களும் பிரம்மச்சரியம் முதலான நான்கு நிலைகளும் அறம் முதலிய நான்கு உறுதிப்பொருள்களும் ஆக பன்னிரு பொருள்களும், சரியை முதலிய நான்கு நெறிகளும் மருத்துவம், சிற்பம், சோதிடம் போன்ற தொழில் களுக்குத் தேவையான செய்திகளும் தசாங்கங்களும் கிளி முதலான தூது விடுத்தற்குரிய பொருள்களும் நூல்களுக்குரிய பாடுபொருள்களாக அமையலாம் என்கிறார் சுவாமிகள். மாந்தருடைமையும் தேவருடைமையும் தொல்காப்பியர் கூறிய மரபியலின் விரிவாகலாம்.

**கற்பனை**

தொல்காப்பியர் இதனை 'நாடக வழக்கு' என்பர். உண்மையைப் பேருணர்ச்சியுடன் இதயத்திற்கு உயிர்த்துடிப்பு குன்றாத வகையில் எடுத்துச்சொல்வது கவிதை. அது அறிவின் முதலும் முடிவுமாக இருப்பது. அக்கவிதைக்கு உயிர்நிலையாக விளங்குவது கற்பனை. அக்கற்பனையைப் படைப்பதற்குப் பெரிதும் உறுதுணை புரிவன உவமை முதலான அணிகள். (உவமான சங்கிரகம் ப. X). இரு பொருள்கள் வெவ்வேறானவை என ஐயமின்றித் தெரிந்திருந்தும் இலக்கியச் சுவை கருதி அவற்றினிடையில் ஒற்றுமையைக் காணும் நிலையைக் கற்பனை என அணி நூல்கள் கூறுகின்றன.

'உவமையின் சார்பதாகித் தொழிலுடன்
திகழ்வது கற்பனை' (அறு. அணி. 73)

என்கிறார் சுவாமிகள். தொழில் என்பது கவிஞனின் படைப் பாற்றலைக் குறிக்கும். கற்பனை மரபு பற்றிய அணிகளே அணிகள் என்று சிறப்பித்துச் சொல்லத்தக்கன. இக்கற்பனை மரபுகளுக்கெல்லாம் அடிப்படையானது உவமை கூறும் மர பாகும். கலைகளெல்லாம் இவ்வொப்பிடும் மரபில் ஒன்றைப் போல் மற்றொன்றை உருவாக்கும் உளவியல் அடிப்படையில் பிறப்பன எனலாம்.

அணியிலக்கணத்தில் கூறப்படும் அணிகளும் அவற்றின் பெயர்க் குறியீடுகளும் இலக்கண ஆசிரியரின் கற்பனை என்கிறார் சுவாமிகள்.

'இவ்வணம் பகர்ந்திடல் இன்ன கற்பனை
என்றன ராம்சிலர்; யாம்உணர் காலைஅப்
பெயரும் கற்பனை எனப்பிறங் கினவே' (அறு. அணி. 83)

இங்குக் கற்பனை என்பது உவமை என்ற பொருளில் கூறப் பட்டுள்ளது. ஒரு கற்பனை மீது பிறிதொரு கற்பனையை ஏற்றிக் கூறுவது பொருந்தாது (அறு. அணி. 82) இதனை 'உவமைக்கு உவமை வழுவென மொழிப' என வீரசோழியம் 96 உரை மேற்கோளும் வலியுறுத்தும்.

'வியனுற விளம்பிடல் அனைத்தும் கற்பனை'
(அறு. அணி. 83)

என்றும்,

கற்பனை புலவோர் கருத்தின் அளவாம் (அறு. அணி. 80)

என்றும் கற்பனைக்கு விளக்கம் தருகின்றார். கற்பனை இயல்பில் உள்ள பன்னிரண்டு நூற்பாக்களில் ஆறு நூற்பாக்களில் சங்கிலித் தொடர் போன்ற பொருத்தமான கற்பனைகளைக் கையாண்டுள்ளார்.

1. அகழ்வாரைத் தாங்கும் நிலமே சில சமயங்களில் கதிரவன் வெப்பத்தால் கொதிப்புற்று உயிர்களைக் கொல் கிறது. பிறகு உணவு முதலியவற்றால் அருள் செய்கிறது. இச் செயலானது அமைதியின் வடிவாக விளங்கும் ஞானிகள் சினமுற்றவிடத்து அரசர் முதலியோரைத் தண்டித்தலையும் பிறகு உடனே சினமடங்கி அருள் செய்தலையும் ஒக்கும் என்கிறார். (அறு. அணி. 74) நிலத்தின் சூடு ஞானியின்

சினம் இரண்டும் நீடித்து நில்லாதவை. இவ்விடத்து நிலத்தை வேண்டுதல் வேண்டாமையற்ற ஞானியாகக் கற்பனை செய்கின்றார்.

2. பிறருக்குச் சிறிதும் உதவாது பல வழிகளிலும் திரட்டிச் சேர்த்த பொருளைக் கள்வர்கள் கவர்ந்து செல்வதானது, மலையில் தோன்றும் ஆறுகளனைத்தும் வந்து கலந்தாலும் ஒரு பயிரையும் வளர்க்காத கடல் நீரை மேகங்கள் பருகுதலைப் போன்றதாகக் கற்பனை செய்கின்றார். (அறு. அணி. 75)

3. நற்பொருள் தீயோரிடம் சேரும்போது ஒருவருக்கும் உதவாததால் தீய பொருளாதலும், நல்லோரிடம் சேரும்போது பலருக்கும் பயன்படுதலும் ஆகிய தன்மைகள் நிரலே கடலில் கலக்கும் ஆற்றுநீர் உவர்நீர் ஆதலையும் மேகங்களால் முகக்கப் பெறும் உவர்நீர் உண்ணீராகி மழை வடிவம் பெறலையும் ஒக்கும் எனக் கற்பனை செய்கின்றார். (அறு. அணி. 76) இதனுள் நிரனிறையோடு இணைந்த உவமை கற்பனை செய்யப் பட்டுள்ளது.

4. மலையை நாடி மேகங்கள் வந்து சேர்தலைப் போலச் சான்றோரைத் தேடி மெய்யறிவு வந்தடையும் எனக் கூறலும் கற்பனை என்கிறார்.

மலைக்கே வான்முகில் வரல்போல் பெரியோ
ரிடத்தே மெய்ப்பொருள் இணங்கும் எனலும்
கற்பனை ஆம்எனக் கழறத் தகுமே (அறு. அணி. 77)

இந்நூற்பாவில் நுண்பொருட்களுக்கும் கற்பனையில் இடமுண்டு என்கிறார்.

5. களங்கமற்ற முழுமதிகள் ஆறு வரிசையாக இணைந்தன போன்ற அறுமுகம் கொண்டவர் முருகப்பெருமான் என இல் பொருளை உவமையாகக் கற்பனை செய்துள்ளார். (அறு. அணி. 78.)

6. கிழக்கே உதிக்கும் சூரியன் வடக்கே உதித்தாலும் வள்ளுவன் குறளை அறிந்த மேலோர் பிற உயிர்களைக் கொலை செய்தலையும், புலால் உண்ணலையும் ஏற்க மாட்டார்கள் என்கிறார். (அறு.அணி. 79) அடுத்தடுத்து வரிசை நிலையிலும்,

பொருள் தொடர்ச்சியிலும் கருத்துக்களைக் கூறுகின்ற முறையிலும் இவ்வாறு நூற்பாக்களிலும் சங்கிலித் தொடர் போன்ற ஒரு இணைப்பினை அறிய முடிகிறது.

பொருள் வளத்துக்கு அடிப்படையாக விளங்கும் நிலத்தின் இயல்பை இயற்கை நிலையிலும் செயற்கை நிலையிலும் முதலில் கூறிய சுவாமிகள் அந்நிலத்தில் விளைகின்ற பொருள் உலோபி களிடம் அகப்பட்ட நிலையில் திருடர்களால் கவரப்படுதலையும், அப்பொருள் தீயோரிடம் சேரும்போது தீமை தருதலையும், நல்லோரிடம் சேரும்போது பலருக்கும் பயன்படுதலையும் கூறி பின் உலகியற்பொருளாகிய பொய்ப் பொருளினின்றும் உயர்ந்து விளங்கும் மெய்பொருளானது சான்றோர்களிடம் வந்தடை தலையும் கூறி அடுத்து மெய்ப்பொருளாக விளங்கும் இறை பெருமை கூறுமுகமாக அறுமுகம் கொண்ட முருகனை மறுஉறா மதியம் ஆறு இணைந்ததாகக் கற்பனை செய்கின்ற திறம் வியப்புக்குரியது. இங்ஙனம் உலகியல் நிலையிலிருந்துபடிப்படியாக உயர்த்தி தெய்வீக நிலையை வெளிப்படுத்தியவர், அந்நிலை கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் கடைப் பிடிப்பவர்க்கே சாத்தியமாகும் என்ற தம் கொள்கையை முத்தாய்ப்பாக கூறியுள்ள திறம் போற்றத்தக்கது. இங்ஙனம் இயல்பான கற்பனையின் வெளிப்பாடாக உவமைத் தொடர்ச்சிகள் மாலைபோன்று அமைந்துள்ளன. இவை தொல். உவமையியலின் விரிவாகக் கொள்ளலாம்.

நான்காவது இயலாகிய நிகழ்ச்சியியல்பில் அதிகாலை, காலை, நண்பகல், மாலை, நள்ளிரவு ஆகிய சிறுபொழுதுகளிலும், இளவேனில், முதுவேனில், கார், பனி ஆகிய பெரும்பொழுது களிலும் நடைபெறும் இயற்கை நிகழ்ச்சிகள் இவையிவை என்று பதிமூன்று நூற்பாக்களில் விளக்கப்பட்டுள்ளன. இவை தொல் காப்பியர் கூறும் அகத்திணையின் வளர்ச்சி நிலை எனலாம்.

கார்கால நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்து கார்கால தொடக்கத் தில் மழைத்தூறலால் பயிர்கள் பசுமை பெற்று தழைத்து செழித்துக் காணப்படும் காட்சி, தாயாரின் அரவணைப்பிலுள்ள குழந்தைகளின் செழிப்பான வளர்ச்சியைப் போன்றும், குளிர் காரணமாகக் கூன் விழுந்த நிலையில் காணப்படும் மக்களின் முதுகானது வளைந்த வில் போன்றும் இருந்ததாகக் கற்பனை செய்கின்றார். (அறு. அணி, 92)

"கொடுங்கோல் வேந்தனும் கொலைத்தொழிற் குரவனும்
மகிழ்வில் புவியொடு மன்பதை அழுமே" (அறு. அணி. 95)

என்ற விடத்து ஒருவர் மகிழ்ச்சியில் மற்றவர் துன்பம் புதைந்து கிடக்கும் இயல்பான உலகியல் செய்தியைக் கூறியுள்ளார். இவ்விடத்து முரணணி இடம் பெற்றுள்ளது.

ஐந்தாவதாகிய ஆக்கவியல்பில் ஒருவருக்கு அல்லது ஒன்றனுக்கு எவ்வெவற்றால் சிறப்புண்டாகும் என பன்னிரண்டு நூற்பாக்களில் விளக்கியுள்ளார். ஒரு பொருளின் உடைமை களையும் இயல்புகளையும் சிறப்புக்களையும் நன்கு அறிந்த பிறகே கற்பனையில் அணி முதலியவற்றால் அழகு படுத்த இயலும் என்ற வகையில் கற்பனையியல்பிற்கு / உவமைகளுக்கு உடைமையியல்பும் நிகழ்ச்சி இயல்பும் ஆக்கவியல்பும் அடிப் படையாய் அமைந்துள்ளன. இவை தொல் அகத்திணையியல், மரபியல் இவற்றின் வளர்ச்சி நிலையாகக் கொள்ளலாம்.

'அணியினுக்கு அணியாம் ஆக்கம் கூறுதற்கு அமையா'
(அறு. அணி. 98)

என்று சுவாமிகள் கூறியிருப்பது பேராசிரியரின் அணிக் கொள்கைக்கு அரண் செய்வதாயுள்ளது. இவ்வாக்க இயல்பில் இறைவன், துறவி, புலவன், அந்தணர், மன்னர், வணிகர், வேளாளர், அறிவோர், மதகரி, குளம், கோயில் நா, பூ இவற்றின் சிறப்பியல்புகள் பேசப்பட்டுள்ளன.

வணிகர்கள் முறையான வழிகளில் சிறுகச் சிறுகச் சேர்த்த பொருளைத் தகுந்த வழிகளில் பலருக்கும் பரவலாகப் பயன்படு மாறு செலவிட வேண்டும் என வலியுறுத்துமிடத்து, தேனி மலர் தோறும் சென்று சிறுகச் சிறுகத் தேனைச் சேர்த்து தேனடை யாக்குதலையும், யானை தன் துதிக்கையால் கவர்ந்த நீரைப் பரவலாக விழச் செய்தலையும் உவமையாகக் கூறுவதன்வழி கற்பனை செய்கின்றார். (அறு. அணி. 104)

மதகரியின் சிறப்புக்களைக் கூறுமிடத்து பெருமையிலும் கருமையிலும் அது மலை போன்றுள்ளதாகக் கற்பனை செய் கின்றார். மேலும் நான்கு கால்களைக் கொண்ட யானை துதிக் கையும் குறியும் வாலும் தரை தொடலால் ஏழு கால்களைக் கொண்டதுபோல் காணப்படுவதாகக் கற்பனை செய்துள்ளார்,

இதனையே ‘கால் கோசம் கைவால் ஏழ் நிலம் தோய்ந்து’ என பிரபந்தத் திரட்டும் (382) வர்ணிக்கும்.

**மரபும் புதுமையும்**

அடிகளாரின் அணியிலக்கணத்தில் முதல் இயலாகிய உவமை இயல்பு தமிழ் இலக்கிய உவம மரபுகள் என்ற வகையில் உவமான சங்கிரகம், இரத்தினச் சுருக்கம், பிரபந்தத்திரட்டு என்பன போன்று பொருள்களுக்குரிய உவமைகளை வரிசைப் படுத்துகின்றது. நாடக வழக்காகிய கற்பனையியல்பில் பொருத்தமான உவமைகளை வரிசைப்படுத்தி முடிவு பரம் பொருளைச் சேர்தலே என வலியுறுத்துகின்றார். உடைமை இயல்பும், நிகழ்ச்சி இயல்பும் ஆக்கவியல்பும் பெயரளவில் புதுமை யானதாகவும் தொல். அகத்திணையியல், மரபியல் ஆகியவற்றின் விரிவுகளாகவும் இடம் பெற்றுள்ளன. பிற அணியிலக்கண நூல்கள் போன்று அணிகளைப் பட்டியலிட்டுக் கூறாமல்,

‘அணி எனல் புலவோன் அறிவு அளவாமே’ (ஏழாம் இல. 283) என்பது பழமையை ஒட்டிய புதிய வெளிப்பாடாகும்.

உவமை ஒன்றே தமிழ் மரபு. மரபு மீறிப் பொருத்தமற்ற உவமைகள் / கற்பனைகள் இடம் பெற்று மொழியின் பண்பு சிதைவதைத் தடுக்கவும், முறையான, ஏற்றுக் கொள்ளத்தக்க பயனுள்ள கற்பனை வளர்ச்சியை அறிவுறுத்த வேண்டியும், சந்திராலோகம், குவலயாநந்தம் போன்ற வடமொழி அணி இலக்கண மொழிபெயர்ப்புகளால் ஏற்பட்ட பயனற்ற தன்மை களைக் கட்டுப்படுத்தி, தமிழிலக்கியங்களோடு பொருந்தாத அணியிலக்கண வளர்ச்சியை முற்றிலுமாகப் புறக்கணித்து தமிழ்மரபை ஒட்டிய அணியிலக்கண வளர்ச்சியை வரவேற்று ஊக்குவிக்குமுகமாக சுவாமிகள் தம் அணியிலக்கணத்தைப் புதிய முறையில் பழைய தமிழ் மரபுக்குப் பொருந்திய நிலையில் படைத்துள்ளார்.

“தொல்காப் பியன்ஆம் தூய்மை யாளனும்
அறைந்த இலக்கணம் ஐவகை தம்முள்
மறைந்தன குறைந்தன மாநிலத்து இந்நாட்கு
இன்றி யமையாது இருக்க வேண்டுந”

எனக் கூறுவதால் பழைய மரபுகளில் ஒழிந்தனவற்றை நீக்கியும், புதிய வரவுகளைப் போற்றியும் இக்காலச் சூழலுக்கு ஏற்ப மொழியைச் செம்மைப்படுத்துமுகமாக இவ் அறுவகை இலக்கணம் தோன்றியதன் இன்றியமையாமையை உணர முடிகின்றது.

முன்னைப் பழமைக்கும் பழமையாகவும், பின்னைப் புதுமைக்கும் புதுமையாகவும், பழமையையும் புதுமையையும் இணைத்து இவ்விலக்கண நூலை சுவாமிகள் மொழிப்பற்றோடும் புலமைத்திறத்தோடும் உருவாக்கியுள்ள திறம் வியப்புக்கும் போற்றுதலுக்கும் உரியது.

**அறுவகை இலக்கணம் போற்றப்படாமை**

1. ஆரியர் வருகையால் ஏற்பட்ட வருணப்பாகுபாடுகளை, சமுதாயத்தில் பிளவினை உருவாக்குகின்ற சாதிப் பாகுபாடு களை 19-ஆம் நூற்றாண்டினிறுதியிலும் வலியுறுத்துகின்ற நிலை. 2. சமயம் என்ற அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட சமயத்தை (கௌமாரம்)ச் சார்ந்து தம்மை வெளிப்படுத்திக் கொள்ளுதல் 3. கொல்லாமையையும் புலால் உண்ணாமை யையும் பெரிதும் வலியுறுத்தல் 4. புலால் உண்பவரை மக்கள் மத்தியில் வாழவும் தகுதியற்றவர் எனப் புறக்கணித்தல் 5. அத்தகையோரைப் பற்றி பாடும் இலக்கியங்கள் இழிவானவை என வெறுத்து ஒதுக்குதல். 6. திருவள்ளுவர் போன்று பரந்த உலகளாவிய பொதுப் பார்வை இன்றி சமய அடிப்படை, வருணப் பாகுபாடு, அதனை ஒட்டிய உணவுப் பழக்க வழக்க அடிப்படையில் தம் விருப்பு வெறுப்பினைப் புலப்படுத்தி தம்மை வெளிப்படுத்திக் கொள்ளுதல் போன்ற சில செய்திகள் தரமான இந்நூல் பரவலாகப் பலராலும் போற்றப்படாமைக்குரிய காரணங்களாக அமையலாமோ என சிந்திக்கத் தூண்டுகிறது.

> 'என்பு ஊன் வேண்டுநர் யாவரும் பாலைக்கு
> உரியார்; அன்னவர் ஊர்ப்பெயர் சேரி;
> அவர் தெய்வம் அனைத்தும் அலகைத் திரளே'
>
> (அறு. பொருள் 65)

> 'காளி யூட்டைக் கள்ளுக் குடியைச்
> சேரி யாதியின் செயல்களை விரித்துக்
> கூறுதல் இழிவாம்' (அறு. அணி. 69)

என்பன போன்ற சில செய்திகளை நூலில் ஆங்காங்கே காண இயலுகின்றது.

# சித்திரக்கவிகளில் சிவவடிவங்கள்

## சிவ. திருச்சிற்றம்பலம்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சமய உலகின் முடிசூடா மன்னராக, கவிசார்வபௌமராகத் திகழ்ந்து பாமாலைகள் பல புனைந்து 'வண்ணச்சரபம்' என்னும் சிறப்புப் பெயருடன் திகழ்ந்த பெருமையர்தான் முருகதாச சுவாமிகள் எனப்பெறும் தண்டபாணி சுவாமிகள் ஆவார். அறுவகைச் சமயக் கடவுளரைப் பற்றி நாற்பதாயிரத்துக்கும் மேற்பட்ட கவிதைகளைப் புனைந்துள்ள சுவாமிகள் தாம் இயற்றிய சித்திரக்கவிகளின் வாயிலாகக் கடவுளரின் பல்வேறு கூறுகளைப் பாங்குடன் படம் பிடித்துக்காட்டியுள்ளார். அவ்வகையில் சித்திரக்கவிகளில் அன்னார் திட்டிக்காட்டும் சிவன் திருவடிவங்களைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வதே இச்சிறு கட்டுரையின் நோக்கமாகும்.

**சித்திரக்கவிகள்**

சித்திரக்கவிகள் பற்றிய இலக்கணத்தைக் கூறவந்த வெண்பாப் பாட்டியல் ஆசிரியர்

> பாப்புடைய மாலைமாற் றாதியா ஏனையவும்
> வாய்ப்புடைய சொல்லின் வகுத்தமைத்து-நீப்பிலா
> வண்ணமும் தொன்னூல் மரபு வழுவாமல்
> பன்னுவது சித்திரத்தின் பா.

என்று உரைத்துள்ளார். இந்நூற்பா உரையில் மாலைமாற்று, ஒருவருக்கப்பா, ஏகபாதம், சதுரங்கபந்தம், எழுகூற்றிருக்கை, ஒரு பொருட்பா, பலபொருட்பா இன்னவை பிறவுமாகிய பலவிகற் பத்தால் செய்யப்பெற்று ஓசை கெடாமல் எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக் குற்றம் என வரும் ஐவகைக் குற்றங்கள் ஏற்படாமல் பாடப் பெறுவது 'சித்திரக்கவி' என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.

**எழுகூற்றிருக்கை**

சித்திரக்கவி வகைகளுள் ஒன்றாக வைத்து எண்ணப்பெறும் எழுகூற்றிருக்கை வகைக் கவியினை முதன் முதலாக நமக்குப்

படைத்தளித்தவர் நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பிய பெருமை வாய்ந்த திருஞானசம்பந்தர் ஆவார். அவரைத் தொடர்ந்து திருமங்கையாழ்வார், நக்கீரதேவநாயனார், அருண கிரிநாதர் முதலானோர் தத்தம் திறத்திற்கேற்பத் தம் வழிபடு கடவுளர் பற்றி எழுகூற்றிருக்கைக் கவிகளைப் படைத்துள்ளனர்.

### தேர்க்கவி

இச்சித்திரக்கவி வகை 'தேர்க்கவி' எனவும் வழங்கப்பெறும் செய்யுளில் முதல் எண் முதலாக ஏழு எண்கள் முடிய ஏழு பகுதிகளாக எழுதி அந்த ஏழுவகைகளையும் ஒரு தேரின் மேல் பரப்பாகக் கொண்டு, அவ்வாறே பாட்டின் இறுதி எண் முதல் தொடக்க எண் வரை ஏழு பகுதிகளையும் தேரின் அடிவரிசை யாகக்கொண்டு தேர் என்றும் சித்திரக்கவியாக அமைத்துக் காட்டுவது எழுகூற்றிருக்கையாகும்.

### தேர்க்கவி வகைகள்

சம்பந்தர், மங்கை மன்னன், நக்கீர தேவர் ஆகியோர் அருளிய எழுகூற்றிருக்கைகள் முதற்கூறு மூன்று அறைகளும் இரண்டாவது ஐந்தும் மூன்றாவது ஏழும் நான்காவது ஒன்பதும் ஐந்தாவது பதினொன்றும் ஆறு ஏழாம் கூறுகள் பதின்மூன்று அறைகளும் உடையனவாக அமையப் பெற்றுள்ளன. அருணகிரிநாதர் அம்மரபினை மாற்றி முதன் முதலாக முதற்கூறு ஒரு அறை என்று அமைப்பை உருவாக்கிக் காட்டினார். அவரைத் தொடர்ந்து வண்ணச்சரப சுவாமிகள் அக்கவிதை முறையினையே பின்பற்றித் தம் கூற்றிருக்கை' வகைக் கவிகளைப் படைத்துள்ளார்.

### சுவாமிகளின் 'கூற்றிருக்கை' வகைகள்

சுவாமிகள் முன்னோர் இயற்றிய எழுகூற்றிருக்கை வகைக் கவிகள் எட்டனை இயற்றியுள்ளமையோடு, புதுவகைக் கவிகளாக எண்கூற்றிருக்கை-ஒன்று. ஒன்பது கூற்றிருக்கை- ஒன்று ஒருபது கூற்றிருக்கை (தசாங்கக் கூற்றிருக்கை)-இரண்டு என்று பன்னி ரண்டு கூற்றிருக்கைக் கவிகளை அறுவகைச் சமயக் கடவுளர் பற்றிப் பாடியுள்ளார்.

### புலவர் பாராட்டு

சுவாமிகளின் தன்னேரில்லா இச்சித்திரக்கவிப் புலமையைப் பாராட்ட வந்த புலவர் தி. மு. சங்கரலிங்கனார்

ஏழுமுதல் பத்துவரை ஏற்றகூற் றெண்ணமையச்
சூழும் புலவர்மகிழ் தொன்முறையும் - வாழும்
புதுமுறையும் தோயப்புகல் தண்டபாணி
அதுலனருட் பேற்றின் அணி

என்று குறிப்பிட்டுள்ளார்.

**பாட்டுடைக் கடவுளர்கள்**

சுவாமிகள் இயற்றியுள்ள பன்னிரண்டு கூற்றிருக்கை வகைக் கவிகளுள் திருமாலைப் பற்றி நான்கும் முருகனைப் பற்றி மூன்றும் யானைமுகன், சிவபெருமான், பராசக்தி, சூரியன் ஆகியோரைப் பற்றி தலா ஒன்று வீதம் நான்கும் ஆறு கடவுளர்க்கும் பொதுவான தசாங்கக் கூற்றிருக்கை ஒன்றும் ஆகப் பாடப் பெற்றுள்ளன.

**சிவன் வடிவங்கள்**

சிவபெருமானைப் பற்றிய எழுகூற்றிருக்கைப் பாடலுள் மட்டுமன்றி ஏனையோர் பற்றிய கூற்றிருக்கைப் பாடல்களிலும் சிவபெருமான் வடிவ மாண்புகள், அருட்சிறப்புகள் ஆகியன ஏற்றவிடங்களில் சுவாமிகளால் புனைந்துரைக்கப் பெற்றுள்ளன. சிவபெருமானுடைய வடிவக் கூறுகள், அருள் வடிவங்கள், அருட்சிறப்புகள் ஆகியன பற்றிச் சுவாமிகள் குறிப்பிடும் கருத்துக்களை ஈண்டு ஒரு சிறிது ஆராய்வோம்.

**சிவவடிவம்**

சிவபெருமான் திருவடிவினை

'எண்ணெழுத் திண்டோள் ஆறமர் சடைக்காடு
ஐவாய் அரவணி நாற்கரன் மான்மழு
மூவிலைச் சூலம் இருந்தைநேர் களம்ஒன்று
ஒருரு (12:60-63)

என வரும் பொதுக் கடவுள் தசாங்கக் கூற்றிருக்கை வரிகள் முற்றாகச் சுட்டிக் காட்டியுள்ளமை காணலாம். எட்டு வலிய தோள்களுடன் கங்கை தங்கிய சடைக் கற்றையும் ஐந்து தலை நாகத்தையும் புனைந்துள்ள நான்கு திருக்கைகளையும் மான்மழு சூலம் ஆகியவற்றையும் கரிய திருநீலகண்டத்தையும் கொண்ட தோர் உருவாகச் சிவவடிவம் சுவாமிகளால் சுட்டப்பெற்றுள்ளது.

**சிவன் திருமுகங்கள்**

சிவன் ஒருமுக வடிவினனாகச் சுட்டப் பெற்றுள்ளமையோடு, ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் எனும் ஐந்து திருமுகங்களை உடைய வடிவினராகவும் சுட்டி ஐந்தலைக் கிழவன் (2:10) ஐம்முகன் (3:18, 7:20) என வரும் தொடர்களைச் சுவாமிகள் அமைத்துள்ளார்.

**சிவன் திருக்கண்கள்**

சிவனை முக்கண்ணான் (4:21) என்று மூன்று கண்களை உடையவனாகக் கூறும் சுவாமிகள், சிவன் தன் ஐந்து முகங்களிலும் சூரியன், சந்திரன், அக்னி என்னும் முச்சுடர்களைத் தம் விழிகளாகக் கொண்டுள்ளார் என்பதனை

நாட்டம் மூன்றும் முகந்தொறும் கொண்டனை (5:37-38)

எனுந் தொடரால் சுட்டியுள்ளார்.

**சிவன் திருத்தோள்கள்**

சிவபெருமான் நான்கு தோள்களை உடையவர் என்பதனை 'நாற்றோற்கு'(5:9) எனும் தொடரானும் எண்டோள் உடையவர் என்பதனை 'எண்ணெழுத்திண்டோள் (12:60) எனும் தொடராலும் குறிப்பிட்டுள்ளார்.

**திருக்கரங்களில் ஏந்தியவை**

சிவன் தன் திருக்கரங்களில் பிரமகபாலம் (5:8) முத்தலை வேலாகிய சூலம் (5:8) மழு (5:9) மான் (12:61) ஆகியவற்றை ஏந்தியுள்ளமையோடு ஐந்தலை நாகத்தினை அணிந்துள்ள பாங்கினை ஐவாய்அரவணி (12:61) எனுந் தொடராலும் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.

**இலிங்கக் குறிப்பு**

சிவன் அருவுருவ வடிவாகப் பரவலாக வணங்கப்பெற்றுவரும் சிவலிங்க வடிவம் பற்றிய குறிப்புகள் எதுவும் சுவாமிகளுடைய சித்திரக்கவிகளில் இடம்பெறாமை குறிப்பிடத் தக்கதாகும்.

**சிவன் அட்டமூர்த்தி**

சிவன் கொண்டுள்ள எண்வகை வடிவங்களைத் திருநாவுக்கரசர்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய்
எறியும் காற்றுமாகி அருநிலைய திங்களாய்
ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி

என வரும் தேவாரத் தொடர்களால் சுட்டிக் காட்டியுள்ளார். சுவாமிகளும் சிவன் அட்டமூர்த்தி வடிவினை எட்டொரு மூர்த்தியும் (5:33) என்று குறிப்பிட்டுள்ளார்.

**சிவன் மாகேஸ்வர வடிவங்கள்**

சோமாஸ்கந்தர் முதலாக அர்த்தநாரீஸ்வரர் ஈறாக வரும் சிவன் இருபத்து ஐந்து வடிவங்களை மாகேஸ்வர வடிவங்கள் என்று ஆன்றோர். குறிப்பிடுவர் அவ்வடிவங்களுள் நிருத்தமூர்த்தி, கல்யாண சுந்தரர். பிட்சாடனர், திரிபுராந்தகர், கஜசம்ஹாரர், தட்சிணாமூர்த்தி, நீலகண்டர், இலிங்கோத்பவர், சங்கர நாராயணர், அர்த்தநாரீஸ்வரர், முதலான பத்து வடிவங்களைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வடிவங்களைத் தவிர பிரமசிரச்சேதர், கங்காதரன், திருவிளையாடற் புராணத்துள் இடம் பெற்றுள்ள பாண்டியன் பிரம்படிபட்ட வந்தியின் கூலியாள் முதலான வற்றையும் குறிப்பிட்டுள்ளார்.

**நிருத்தமூர்த்தி**

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல், என்றும் ஐந்தொழில்களை இயற்றும் சிவன் திருநடனமாண்பினை 'ஐந்தொழில் நடவினை (5:32) என்று குறிப்பிட்டுள்ள சுவாமிகள் ஒருகாலை ஊன்றி ஒருகாலைத் தூக்கி ஆடும் சிவன் திருநடத் தோற்றத்தினை

ஊன்றி ஊன்றா இருபதத்தான் (ப : 14-15)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**கல்யாண சுந்தரர்**

அங்கயற்கண்ணம்மையை வேட்ட சிவன் வடிவம் இவ்வடிவ மாகும். இக்குறிப்பினை

எண்ஏழ் தேயமும் மாறின்றி அடக்கும்
ஐவேல் ஏந்தி அணிநான் மாடக்
கூடல் ஆள்வான் மும்மலைக் கூட்டத்து
இரண்டுற மற்றொன்று கிரியப் பார்த்தனை (5:26-29)

என வருந் தொடர்களால் சுவாமிகள் தந்துள்ளார்.

**பிட்சாடனர்**

தாருகாவனத்து முனிவர்கள் தம் யான் எனது எனும் செருக்கினையகற்ற சிவன் மேற்கொண்ட பிட்சாடன வடிவத்தினை ஒரோட்டு இரவலரையும் (5:8) எனுந்தொடரான் குறிப்பிட்டுள்ளார்.

**திரிபுராந்தகர்**

'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்' என்று பேசப்பெறும் சிவன் தொன்மை வடிவமான திரிபுராரி வடிவ மாண்பினை

முக்கண்ணான் கருத்து அஞ்சுடி நாற்றிசை
அறியப் போற்றா ததுகுறித்து அந்நாள்
முப்புரத்தினர்மேல் முரணொடு செலுத்தும்
இரதத்து

என வருந் தொடரான் சுவாமிகள் குறித்துள்ளார்.

**கஜசம்ஹாரர்**

தாருகாவன முனிவர்கள் சிவபெருமானுக்கு எதிராக மேற்கொண்ட அபிசார வேள்வியினின்றெழுந்த யானையைக் கொன்று அதன் தோலைப் போர்வையாகப் போர்த்து கந்த சிவன் 'கஜாரி' வடிவினைக் கம்பநாட்டாழ்வார்

கரித்தமூன் றெயிலுடைக் கணிச்சி வானவன்
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை
உரித்தபேர் உரிவையால் உலகுக்கோர் உறை
புரித்தனன் நான்முகன் என்னும் பொற்பதே

(சுந்தர : ஊர்தேடு : 447)

என்று குறித்துப் போற்றியுள்ளார். சுவாமிகளும் சிவன் கஜசம்ஹார வடிவினை

ஒருமசும்தரும் ஓர் இருகோட்டு யானை
மும்மதம் சிதைய ஈர்ந்து அதட் போர்வை ஒன்று
ஒன்ற நின்றனை

என்று குறிப்பிட்டுள்ளார்.

**தட்சிணாமூர்த்தி**

சனகாதி முனிவர்கள் நால்வர்க்குக் கல்லாலின் புடைய மர்ந்து நான்மறை ஆறங்க முதல் கற்ற கேள்வியினைச்

சொல்லாமற் சொல்லி யுதவிய இவ்வருட்டிரு வடிவினைச் சுவாமிகள்

முந்நவை களைந்து நால்வர்க் கருளிய ஐம்முகன் (3:17–18)

நால்வர்க்கு ஐவினை அறஎழுந்தருளினை (5:25)

என வருந் தொடர்களால் சுட்டியுள்ளார்.

இது தவிர சிவபெருமான் மணிவாசகருக்கு அருளவேண்டித் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் குருவடிவாக எழுந்தருளிய பான்மையினை

முத்தமிழ் அமைச்சன் ஆல வாயின்
ஐவேற் செழியன் அனுப்பு மாறு
கழிவுறச் செல்கால் எழுகுருந்தைக்கீழ்
இருதோள் ஆதி காட்டிய சிவனும்

என வருந் தொடர்களால் சுட்டியுள்ளார்.

**நீலகண்டர்**

தேவர்களும் அசுரர்களும் அமுதம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த ஆலகால விடத்தினைத் தாம் உண்டு கண்டத்தடக்கி அமரர்களைக் காத்தருளிய இத்திருநீலகண்ட வடிவினை 'நீலமணிமிடற்றொருவன்' என்று சங்ககால ஔவை குறிப்பிட்டுப் போற்றுவார் சுவாமிகளும் இத்திருவடிவினை முந்நீர்விடம் அயின்று (5:11); இருந்தை நேர்களம் ஒன்று (12:62) என வரும் தொடர்களால் குறிப்பிட்டுள்ளார்.

**இலிங்கோத்பவர்**

பிரமன் அன்னமாயும், திருமால் பன்றியாயும் சென்றுணர வொண்ணாச் சிவன் திருவடிவம் சிவலிங்கோத்பவ வடிவமாகும் தண்டபாணி சுவாமிகள்

இருவர் முக்குணத்தால
நான்மேல்என நவின்ற முப்பொழுதினும்
அடிமுடியெனும் இரண்டு அறியத் தேடியும்
காணா ஒருவரை யாகிக் கவின்றனை (5:4–7)

என வரும் தொடர்களால் இலிங்கோற்பவ வடிவைக் காட்டி உள்ளார்.

**சங்கரநாராயணர்**

அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே என்பார் திருநாவுக்கரசர். திருமாலை இடது பக்கத்தில் கொண்ட சிவன் திருவடிவம் 'அரியர்த்தர்' எனப்பெறும் ஆழ்வார் பெருமக்கள் தம் திவ்வியப் பிரபந்தத்துள் இவ்அரியர்த்த வடிவத்தினைப் பெரிதும் போற்றியுள்ளனர். இவ்வடிவினைச் சுவாமிகளும் திருவரங்கத் திருஎழுகூற்றிருக்கையுள் 'ஓர்ஒரு பொருளாய் இரண்டாய் ஒன்று' (8:1) என்றிவ் வடிவினை குறித்துள்ளார்.

**அர்த்தநாரீஸ்வரர்**

உமையம்மையை இடது பாகத்தில் கொண்ட தோடுடைய செவியனான சிவன் மாதொரு பாகத் தோற்றத்தினை 'ஒருமகள் ஒருபால் இருக்க வைத்தனை' (5:1) என வருந் தொடரால் குறித்துள்ளார்.

**அஷ்டாஷ்ட வடிவங்கள்**

இவ் இருபத்தைந்து வடிவங்களுடன் மேலும் பல வடிவங் களைச் சேர்த்து சிவன் அஷ்டாஷ்ட வடிவங்களைச் சிவபராக் கிரமம் குறிப்பிட்டுக் கூறும். அவற்றுள் பிரம்மசிரச்சேதர், கங்காதரர் முதலான வடிவங்களைச் சுவாமிகள் குறிப் பிட்டுள்ளார்.

**பிரம்மசிரச்சேதர்**

சிவன் திருமுடியைக் கண்டதாகப் பிரமன் பொய்யுரைத் தமையினால் பிரமன் ஐந்து திருமுகங்களில் ஒன்றைக் கிள்ளியெடுத்துச் சிவன் புரிந்த வீரட்டச்செயலை அட்ட வீரட்டச் செயல்களுள் ஒன்றெனக் கருதிப் போற்றுவர் புலவோர். கண்டியூர் வீரட்டம் என்னும் தேவாரத் தலத்துள் நிகழ்வுற்ற தாகக் கூறப்பெறும் இவ்வீரட்டச் செயலைச் சுவாமிகள் 'ஐம்முகத் தயனை நான்முகன் ஆக்கினை' (5:10) என்று குறிப்பிட்டுள்ளார். பிரமன் சிரம்கொய்த சிவவடிவினைப் பிரம்மசிரச்சேதர் என்று குறிப்பிடுவர்.

**கங்காதரர்**

நீர்மலிவேணியனான சிவன் தன் திருமுடியில் கங்கை யாற்றினை அணிந்துள்ளமையின் கங்காதரர் எனப் பெறுகின்றார். சிவன் இத்திருக்கோலத்தினை 'ஆறமர் சடையுடன்' (5:36) எனுந் தொடரான் சுவாமிகள் சுட்டி யுள்ளார்.

**பிரம்படிபட்ட பரமன்**

இவை தவிரத் திருவிளையாடற் புராணத்துள் இடம் பெற்றுள்ள சிவன் அருளாடல்களுள் ஒன்றான வந்தியின் கூலியாளாய் வந்து பாண்டியன் கைப்பிரம்பால் பிரம்படிபட்ட செய்தியை

> மூவகை முரசமும் நாற்பெரு வாயிலொடு
> ஐங்கணைக் வேள்கொடி அமைதரும் வழுதி
> ஆறருகு அடிப்ப அஞ்சினர் போன்று
> மறைந்தும் அவ்வடிநால்வகை உயிர்க்கு ஊட்டினை
> (5:13-16)

என வருந் தொடரால் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.

**கயிலை மலையும் கார்த்திகேயனும்**

மூவா இருள்பொழில் சாரல் வெண்மலை (1:9-10) யான கயிலை மலையில் உறைதரும் சிவன் மயில் வாகனனான முருகப் பெருமானைப் பயந்த செய்தியை 'இருமூன்று கண்ணால் அஞ்சன மயிலூர் அறுமுகற் பயந்தனை, (5:19-20) என்று சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.

**அடியவர்க்கருளும் சிவன் திறம்**

அடியார்க்கு அருளும் சிவன் அருள் சிறப்பினைச் சுட்ட வந்த சுவாமிகள், நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் பாடலுக்கு இரங்கி சிவபெருமான் சம்பந்தருக்குப் பொற்றாளம், முத்துப்பந்தர், திருச்சின்னம் ஆகியவற்றை வழங்கிய பான்மையினை

> முத்தமிழ் விரகற்கு இருபொற்றாளமும்
> ஒருமணிப் பந்தரும் ஒருதிருச் சின்னமும்
> உதவி ஆண்டனை (5:16-18)

என்று குறிப்பிட்டுள்ள சுவாமிகள் சுந்தரர் சேரமானுடன் கயிலை சென்று சேர்ந்த பாங்கினை வெண்மலை ஒன்றில் ஓரத்து இருவர் நானுற உய்த்தனை (1-10) உன்னா இருவர் முக்கணான் மாட்டு முன்விடும் பெருஞ்சீர் (4:20) என வரும் தொடர்களால் சுட்டியுள்ளார்.

இவ்வாறு எழுகூற்றிருக்கைப் பாடல்களுள் சிவன் அருள் வடிவங்களும் அருள் சிறப்பும் சுவாமிகளால் சிறப்பாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன.

# புலவர் புராணத்துள் அருணகிரிநாதர்

சு. திருநாவுக்கரசு

தமிழ் இலக்கிய வரலாற்றில் பத்தொன்பதாம் நூற்றாண்டு சமயநெறி நின்று சமுதாயத் தொண்டாற்றிய அருளாளர்களின் மாட்சிமைகளைப் பெற்றதாகும். உயிர்க்கருணையை உயிர் நாடியாகக் கொண்டு, சமய உலகில் பொதுமை உணர்வினை ஊட்டும் அருட்பாடல்களைப் பாடியவர்கள் வள்ளற் பெருமானும் தண்டபாணி சுவாமிகளும் ஆவர். இவர்கள், முருகன் அருள் பெற்று, அவனையே வழிபடு தெய்வமாகக் கொண்டு, வாசித்தும் நேசித்தும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் வாழ்ந்த மெய்யுணர் வாளர்கள் ஆவர்.

## அருணகிரிநாதரும் தண்டபாணி சுவாமிகளும்

முருகப் பெருமானை முழுமுதற் பொருளாகக் கண்டு வழிபட்டவர் அருணகிரிநாதர். அவனால் உபதேசிக்கும் பேறு பெற்றவர். சமயப்பூசல் மிக்கு விளங்கிய தம் காலத்தின் நிலைக்கு ஆட்படாமல் மொழி, சமயம் ஆகியவற்றில் சமரச நிலை கண்டு மக்களுக்குச் சமய ஒருமையுணர்வினை ஊட்டி, உயர்நெறி காட்டிய மெய்யுணர்வாளர். பரம்பொருள் ஒன்றே என்னும் உறுதிபடைத்த இவர், தம் காலத்தில் மக்கள் வழிபட்ட கடவுளர் அனைவரையும், திருமுருகனாகவே எண்ணி, 'உலகெங்கும் மேவிய தேவாலயந்தொறும் பெருமாளே' (திருப். கும்ப) என்று பாடியவர்; தொங்கலொடு கூடிய சந்தப்பாவினால் முருகப் பெருமானைப் பாடி, அத்தகைய பா அமைப்பிற்குத் தந்தையாகத் திகழ்பவர்.

> "பொற்பதி பாடும் குறித்த நல் திருப்புகழ் ப்ரபுத்துவக்
> கவித்துவக் குருத்துவத்தெனைப் பணித்தருள்வோனே"
>
> (திருப். இலைச்சுருட்)

என்னும் பாடலால் தலங்கள்தோறும் திருப்புகழ் பாடும்படியான பணியைத் தமக்கு அருளியதாக முருகனை அருணகிரிநாதர்

போற்றுகின்றார். 'தெய்வம் இகழேல்' என்னும் ஆன்றோர் மொழிக்கு விளக்கமாகச் சிவன், சக்தி, திருமால், கணபதி, சூரியன் முதலிய தெய்வங்களின் அருமை பெருமைகளை எல்லாம், சமயக்காழ்ப்புணர்ச்சி இன்றி முருகனோடு உறவு படுத்திப் பாடியவர்.

இவ்வாறே, சந்தப்பாவகைகளைப் பாடியதால் 'திருப்புகழ்ச் சுவாமிகள்' என்றும், வண்ணப்பாக்களைப் பாடுவதில் வல்லவரானதால் 'வண்ணச்சரபம்' என்றும், முருகன் அருள் பெற்றமையால் 'முருகதாசர்' என்றும், ஆவினன்குடி அழகனைப் போன்று தோற்றப்பொலிவு உற்றமையால் 'தண்டபாணி சுவாமிகள்' என்றும் போற்றப் பெறும் சங்கரலிங்கம் என்னும் பிள்ளைத் திருநாமம் உடைய அருட்பெரியாரும் 'பரம்பொருள் ஒன்றே' என்னும் மெய்யுணர்வு உடையவராய்த் திகழ்ந்தார். இவ்வுண்மையை உணர்த்துவதற்குப் பின்வரும் அவர்தம் பாடலே சான்றாகும்.

''பரம்பொருளின் பிரகாசம் பரிதிப் புத்தேள்;
பல உயிரும் ஒடுக்குகின்ற பண்பே ஈசன்;
கரந்தவற்றை உதவிடுதல் சத்தி; யாவும்
காப்பதுமால்; அடியார்தாம் கருதும் செய்கைக்(கு)
உரம் கொடுத்து முடித்திடுதல் கணேசர்; ஞான
உபதேசம் புரிந்திடுதல் ஒளிர்வேற் கையான்
வரம் தருமட்டு உபாசித்துப் பெற்றார் இந்த
வகை அறிவார்; மற்றவர்க்கு வம்பாம் தானே''
(கௌமார முறைமை)

மேலும், அருணைக்கோபுரத்தினின்றும் விழத் துணிந்த அருணகிரிநாதரையும், திருமலை மலையுச்சிலிருந்து விழத்துணிந்த தண்டபாணி சுவாமிகளையும் முருகப் பெருமான் குருவடிவாகித் தடுத்தாட் கொண்டமையும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

தாம் அருணகிரிநாதரின் அவதாரம் என்பதைத் தமக்கு முருகனே எடுத்துரைத்ததாகத் தம் நூல்களுள் யாண்டும் தண்டபாணி சுவாமிகள் எடுத்தியம்பியுள்ளார்.

'என்னுயிரைத்தான் கிளி என்று பல்விசை ஈடில்புகழ்
மன்னு பழனிக் குகவேள் சொன்னான்
(பழனித்திரு-3, அலங்-71)

எனவும்,

> 'அண்டர் ஊர் மலர்கொண்டு உற்ற அஞ்சுகம் அடியேன்
> என்றும் விண்டதே ஒருவன் உள்ளான்'

எனவும் இவர் பாடிய பாடல்கள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு பல நிலைகளிலும் அருணகிரிநாதரோடு ஒருமைப்பாடு உற்றிலங்கும் சுவாமிகள், புலவர் புராணத்துள் அருணகிரிநாதர் சருக்கமாக 83 பாடல்களைப் பாடியுள்ளார்.

**அருணகிரிநாதரின் பிறப்பு பற்றிய செய்தி**

பட்டினத்தடிகளுக்கும், திருவண்ணாமலைத் திருக்கோயில் உருத்திர கணிகை ஒருவருக்கும் மகனாகப் பிறந்தவர் அருணகிரி நாதர் என்னும் கருத்தினராய்,

> 'பட்டினத்துப் பிள்ளை ஒரு பாவைநல்லாள் மோகத்தால்
> விட்டிடுமீசுக் கிலத்தை அவள் விழுங்கியது வரை அவர்தம்
> மட்டில் புகழ்ச் சருக்கத்தால் வயங்கும்'
>
> (அருண. சருக். 2)

எனக் குறிப்பிடுகின்றார்.

முற்றும் துறந்த 'பட்டினத்தடிகள், திருஞான சம்பந்தர் முதலிய மூவரையும் 'வித்தகப்பாடல் முத்திறத்து அடியார்' என்றும், திருவாதவூரடிகளைத், 'திருந்திய அன்பின் பெருந்துறைப் பிள்ளை' என்றும் அவர் காலத்தில் வாழ்ந்த முதல் வரகுண பாண்டியனை 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என்றும் பாடுவதனால், (திருவிடை – மும்மணிக்கோவை) இவர்களுக்குப் பிற்பட்டவர், அதாவது, ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் அல்லர் என்பதும், இவர் பாடிய நூல்களைப் பதினோராம் திருமுறையில் தொகுத்த நம்பியாண்டார் நம்பிகள் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் என்பதும் அறியக் கிடத்தலால் பட்டினத்தடிகள் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பட்டது என்பது தெளிவாகும்' என்பர் அறிஞர்.

'திருவண்ணாமலைப் பகுதியைச் சேர்ந்த புத்தூரில் உள்ள சிவன் கோயில் திருமதிலில் காணும் சாசனம் ஒன்று, சக ஆண்டு 1292 – இல் (கி. பி. 1370) அரசரான வீர பொக்கண உடையாரால்

சோமநாத சியர் என்பவர்க்கு அக்கோயிலும் மடமும் உரிமையாக வழங்கப் பெற்றமையைக் குறிப்பிடுகின்றது. அருணகிரிநாதர், இக்கோயிலில் எழுந்தருளிய முருகனைப் பாடிய திருப்புகழில்,

'அரிவையொரு பாகமான அருணகிரிநாதர் பூசை
அடைவுதவ றாது பேணும் அறிவாளன்
அமணர்குல கால னாகும் அரியதவ ராசராசன்
அவனிபுகழ் சோம நாதன் மடமேவும் ... முருக'

(திருப். ஒருவழி)

என வரும் குறிப்பாலும், பிரபுட தேவராயர் பற்றிப் பாடியுள்ள திருப்புகழின் குறிப்பாலும், 14 - ஆம் நூற்றாண்டின்பிற்பகுதியும். 15 - ஆம் நூற்றாண்டின் முற்பகுதியுமான காலமே திருப்புகழ் ஆசிரியர்க்கு உரியதாகும்'.

'இரட்டையர், அருணகிரிநாதர், வில்லிபுத்தூரார், காளமேகம் ஆகிய புலவர்கள் ஏறக்குறைய ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள். அக்காலம் கி.பி. 1350-1450 ஆகும் என்பது ஆய்வாளர் கருத்து. இவர்கள் தம்முள் வேறுபட்டிருக்கலாம், சிலர் முதுமைப் பருவத்தினராய் இருந்தபோது, சிலர் இளைஞராய் இருந்திருப்பர்' என்பார் மு. அருணாசலம்.

இவ்வாறான கால ஆய்வுகளைக் கருத்திற் கொள்ளும்போது, பட்டினத்தடிகள் மகனார் அருணகிரிநாதர் என்பது எஞ்ஞான்றும் பொருந்துமாறில்லை. இதற்கு அரணாகக் கீழ்க்காணும் சான்றோர் கருத்துகளும் அமைகின்றன.

''புலவர் புராணம் பாடிய தண்டபாணி சுவாமிகள் முதல் அடியார் பலர் அருணகிரிநாதர் வரலாற்றைத் தாம் கேட்ட வாறும், தம் உள்ளத்தில் இறைவன் இயக்கியவாறும் எழுதி யுள்ளனர். உண்மைச்சரிதம் இதுதான் எனத் திடம் பெற உரைக்க இயலவில்லை'' என்பார் டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை.

''அருணகிரிநாதரது வரலாறு பொய்ம்மலிந்த செய்திகளோடு வழங்கிவருவது அருவருக்கத் தக்கது'' என்பார் மு. அருணாசலம்.

அருணகிரிநாதர் வரலாற்றை எழுதிய சி. கு. நாராயணசாமி முதலியார், ''இப்புனைந்துரையில் பல முரண்பாடுகள் உள்ளன.

முதலாவது காலமுரண்; இரண்டாவது, இயற்கை விரோதம்! மூன்றாவது அனுபவத்திற்கு ஒவ்வாமை'' என்பார்.

**அருணகிரிநாதரும் வில்லிபுத்தூராரும்**

வில்லிபுத்தூரார், சந்தப்பாவில் வல்லவர். வடமொழி, தென்மொழி கலந்து பாட வல்லவர் என்பதை, அவர்தம் பாரதத்தால் அறியலாம். இவர் தம்மொடு போட்டியிட்டுத் தோற்றோரின் காதைக் குறடு கொண்டு தோண்டும் வழக்கத்தைக் கல்விச் செருக்கால் கொண்டிருந்தவர். இதனை,

'குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட்டு அறுப்பதற்கோ வில்லி இல்லை'

என்னும் படிக்காசுப் புலவர் பாடலால் அறியலாம்.

அருணகிரிநாதருக்கும் வில்லிபுத்தூராருக்கும் போட்டி ஏற்பட்டபோது, வில்லியாரின் விருப்பப்படி, தாம் ஒரு யமக அந்தாதி பாடுவதாகவும், அதற்கு அவர் உரை கூறி வரவேண்டும் என்றும் கூறி, 'கந்தர் அந்தாதி' என்னும் நூலைத் தொடங்கிப் பாடினார். ஐம்பத்து நான்காவது பாடலாகிய 'திதத்தத்தத்' எனத் தொடங்கும் தகரவருக்கப் பாடலுக்கு உரை கூற இயலாது வில்லியார் தோற்றார். அருணகிரிநாதர் அதற்கு உரை கூறிய தோடு மட்டுமின்றி, போட்டி நிபந்தனையின்படி, அவர்தம் காதினை அறுத்து இழிவுபடுத்தாமல் நல்லறிவு புகட்டிக் குறட்டினை எறியச் செய்தனர். இந்நிகழ்ச்சி நடந்தமைக்குச் சான்றாக, மேற்கண்ட படிக்காசுப் புலவர் பாடல் அமைந்து உள்ளது. மேலும்,

— அக்கிளிதான்
'வில்லிபுத்தூரான் செவியின் மேல் அரிவாள் பூட்டி அன்று
வல்லபத்தின் வாது வென்று வந்தது காண்'
(தணிசந். முறை)

என்னும் கர்தப்ப தேசிகர் பாடலும் சான்றாகும்.

**அருணகிரிநாதரும் சம்பந்தாண்டானும்**

இவ்வாறே, அருணகிரிநாதர், தம்மை வாதுக்கு அழைத்த சக்தி வழிபாடு மேற்கொண்ட சம்பந்தாண்டானோடு வாதிட்டு, பிரபுடதேவராயர் முன்னிலையில், பலரும் காண முருகனை

வரவழைத்தார். அவ்வாறு முருகன் காட்சி தந்த இடம் திருவண்ணாமலைக் கம்பத்து இளையனார் திருக்கோயில் ஆகும்,

'சந்தச் சபைதனில் எனதுளம் உருகவும் வருவாயே!'
(திருப். எந்தத்)

'உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில்
ஒருநொடி தனில்வரும் மயில்வீரா' (திருப். திருமொழி)

என வரும் பாடல்கள், இந்நிகழ்வுக்கு வெளிப்படையான் அன்றிக் குறிப்புகளாக விளங்குகின்றன.

அக்காலத்தில், சமணர்கள் சிலர், சைவர்களாக மாறிய நிலையில், நீறு பூசும் வேளாளர் என்று அவர்கள் அழைக்கப் பட்டனர். அம்மரபினர் இன்றும் அவ்வாறு அழைக்கப் பெறுவதைக் காண்கிறோம். சக்தி வழிபாடு மேற்கொண்ட சம்பந்தாண்டானும் இத்தகைய சமணனே என்பதைத் தண்டபாணி சுவாமிகள்,

'பைந்நாகம் புரைசமணன் சம்பந்தாண் டான் எனும் பேர்
படைத்த பாவி
மைந்நாக மலைபோல்வான் மலைமகளைத் தினம் கருதும்.
வழிபா டுள்ளான்' (அரு சருக். 49)

என்னும் பாடல் அடிகளால் விளக்கியுள்ளார்.

### அருணகிரிநாதர் கிளிவடிவுற்ற செய்தி

முன்பு தோற்ற சம்பந்தாண்டானது சூழ்ச்சியால், பிரபுட தேவராயரது வேண்டுகோளுக்கு இணங்கி, விண்ணுலகில் உள்ள பாரிசாத மலரைக் கொணரும் பொருட்டுத் தமது உடலைத் திருவண்ணாமலைக் கோயில் கோபுரத்தில் மறைத்துவிட்டு, அங்கு இறந்து கிடந்த கிளி உருவில் புகுந்து, வானுலகு சென்றனர் எனவும், வருவதற்குள் அவர் தம் உடலைச் சம்பந்தாண்டான் கண்டு அரசனுக்குக் காட்டி, அவனது உடன்பாடு பெற்று அதனை எரித்துவிட்டதாகவும், திரும்பி வந்த அருணகிரிநாதர் தம் உடல் எரிக்கப்பட்டது அறிந்து, 'கந்தர் அலங்காரம்', 'கந்தர் அநுபூதி' பாடி, அக்கிளி உருவமாகவே முருகனின் வலத் தோளில் அமர்ந்தார் என்பதாகவும் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ளார்.

இவ்வரலாறு பொருத்தமில்லாக் கதையாகத் தோன்று கிறது.

'வேண்டியபோது அடியார் வேண்டிய போகமதை வேண்ட வெறாது உதவும்' முருகனருள் முழுமையும் பெற்ற அநுபூதிச் செல்வமதை முழுவதும் பெற்ற அருணகிரிநாதர், தாம் வேண்டிய பேரின்ப நிலையைப் பெறாது, கிளி வடிவம் பெற்றார் எனல், இறைவனின் பேரருளுக்கும், அருணகிரிநாதரின் வாழ்வு உயர்வுக்கும், பக்தித் துறையில் ஈடுபடும் மாந்தரின் உயர்வுக்கும் சற்றும் பொருந்தாதவை.

'சுகம்' என்ற வடசொல்லுக்கு இன்பம் எனவும் கிளி எனவும் பொருள் உண்டு. அருணகிரிநாதர் தாம் பாடிய,

'சுகவெள்ளத் தாணுவுடன் என்று சேர்வேன்'

(திருப். ஆனாத)

'துகளில் சாயுச்சிய கதியை, ஈறற்ற சொற்
சுகசொருபத்தையும் றடைவேனோ?'

(திருப். சரியையா)

'பரவசம் தணிந்து உனை உணர்ந்து ஒரு
மவுன பஞ்சரம் பயில்தரும் சுகபதம் அடைந்து
இருந்து அருள் பொருந்தும் அது ஒரு நாளே'

(திருப். கடைசி)

என்னும் திருப்புகழ்ப் பாடல்களில் சுகவெள்ளம், சுகபதம், சுகசொருபம் என்னும் தொடர்கள் பேரின்ப நிலையையே குறிக்கின்றன. சுகம் என்பதற்குக் கிளி எனத் தவறாகப் பொருள் கொண்டு இக்கதை உருவாக்கப் பெற்றது என்பது வெள்ளிடை மலை.

மேலும், கிளி வடிவிலிருந்து பாடியதாகக் கூறும் நூல்களை ஆராய்ந்தாலும், அவற்றுள், அவ்வடிவில் இருந்து பாடியதற்கான சான்றுகள் ஏதும் புலப்படவில்லை. பாடற் பொருளை நோக்கும் போது, இவை கிளியால் பாடப் பெற்றிருக்க இயலா என்பதும் தெளிவுறும்' என்பார் ம. பாலசுப்பிரமணிய முதலியார். திருக் கோணமலை, கோயில் கோபுர நிலையில் உள்ள ஓர் இடம் 'கிளிப்பாடு பூதி' என்று அருணகிரிநாதரால் பாடப் பெற்றுள்ளது.

'திருக்கோணாமலை தலத்தாரு கோபுர நிலைக்குள் வாயிலில்
கிளிப்பாடு பூதியில் வருவோனே'

(திருப் – விலைக்கு)

என்னும் இப்பாடலே அருணகிரிநாதர் கிளி வடிவு எடுத்ததாகக் கூறும் கதை தோன்றக் காரணமாய் இருக்கும் எனலாம்.

எனவே, முருகனால் தடுத்தாட் கொள்ளப்பெற்று, பலவகையான உபதேசங்களையும் அருள் நலங்களையும் பெற்று, திருப்புகழ் முதலிய திருவருள் நூல்களால், முருகப்பெருமானைத் தலங்கள் தோறும் சென்று, கண்டு, வழிபட்டு, அவன் திருவடியின்கண் தலைப்புட்டுப் பெறும் பேரா இன்பப் பெருவாழ்வாம் சிவ சாயுச்சிய நிலையைப் பெற்றவர் என்பதே அவர் வாழ்வின் நிறை நிலையாகும். அவர்தம் அனுபவப் பிழிவாக விளங்கும் அருள் நூல்கள் அனைத்தும் நமக்கு அத்தகைய வாழ்வுக்கு வழிகாட்டும் ஒளிவளர் விளக்குகள் ஆகும்.

**முடிவுரை**

'புலவர் புராணம் என்னும் இப்பெருநூலினை, வரலாற்றுக் கண் கொண்டு நோக்கும்போது சில பொருந்தாமைகளைக் காண்கிறோம். இந்நூல் ஆய்வு நெறி நின்று அமைக்கப் பெற்ற நூல் அன்று; பெரும்புகழ் பெற்று விளங்கிய புலவர் பெருமக்களின் வாழ்க்கை வரலாறுகள் மறைந்துவிட்டனவே என்று ஆற்றாமையோடு, தம் காலத்தில் தாம் கேட்ட செவிவழிச் செய்திகளையாவது, பதிவு செய்து வைத்துவிட வேண்டும் என்னும் கருத்தாலேயே இந்நூல் புனையப் பெற்றுள்ளது' என்னும் புலவர் புராண அணிந்துரைப் பகுதி, அருணகிரிநாதரின் பிறப்பு மற்றும் கிளியானதாகிய கதை ஆகியவற்றின் முரண்பாடுகளுக்கு அமைதியூட்டுகிறது.

# வண்ணச்சரபர் பார்வையில் சுந்தரர் தரிசனம்

வெ. திருநாவுக்கரசு

உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கு அரியவனாகிய இறைவனை வாழ்த்தி வணங்குபவர்கள் அடியார்கள். இவர்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள். பல சிவத்தலங்களை வழிபட்டு வணங்கி திருமுறைகளை அருளினர். இத்திருமுறையாசிரியர் களில் ஒருவராகிய சுந்தரர் பல தலங்கள் தோறும் சென்று இறைவனை பாடி வழிபட்டவர். இவருடைய பாடல்கள் ஏழாந் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளது. தல வழிபாடு செய்த சுந்தரர் திருவாமாத்தூர் தலத்தில் வழிபட்டருள் பெற்றமையை வண்ணச்சரபர் தண்டபாணி சுவாமிகள் அருளிய திருவாமாத்தூர் தலபுராணம் வாயிலாக அறியலாம். இதில் சுந்தரர் வரலாற்றை சுவாமிகள் சுருக்கமாகவும் முழுமையாகவும் கூறியுள்ளார். திருவாமாத்தூரில் சுந்தரர் கண்ட சிவதரிசனமே வண்ணச்சரபர் பார்வையில் சுந்தரர் தரிசனம் என்ற நிலையில் நோக்கப்படுகிறது. மேலும் சேக்கிழார் கூறும் சுந்தரர் வரலாற்றிற்கும் சுவாமிகள் கூறும் வரலாற்றிற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆய்வதே இக்கட்டுரையாகும்.

வடமொழியில் கோமாதுருபுரம் என்ற மகாஸ்கந்தத்தில் நாகரகாண்டத்தில் ஏழு சருக்கங்களில் விளக்கப் பெற்றவையே திருவாமாத்தூர் தலபுராணம் என தண்டபாணி சுவாமிகளால் அருளப்பெற்றது. இதனை நூலின் முகப்பில் கூறுவதாலறியலாம். இடைக்காலத்தில் உண்டான செய்திகளை சுவாமிகள் உத்தர காண்டம் என தனித்தமைத்துப் பாடியுள்ளார். இப்பகுதியில் தான் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோர்க்கு ஆமாத்தூர் இறைவர் அருள அருள் பெற்ற சிறப்புப் பாடப் பெற்றுள்ளது.

சுந்தரர் வழிபட்ட திருவாமாத்தூரில் நிகழ்வுற்ற வரலாற்றை பெரியபுராணத்துள் சேக்கிழார் விரிக்காமல் விடுத்தார்.

தண்டபாணி சுவாமிகள் அதனை விரித்துப் பாடியுள்ளார். இவ்வாறு கூறிய செய்திகளை மூவகைகளாகப் பிரித்து ஆய்வு செய்யலாம்.

1. சேக்கிழார் சுருக்கிக் கூறிய செய்திகளை வண்ணச்சரபர் விரித்துக் கூறல்
2. சேக்கிழார் கூறாத செய்திகளை வண்ணச்சரபர் புதிய தாகக் கூறல்
3. சேக்கிழார் விரித்துக் கூறியவற்றை வண்ணச்சரபர் சுருக்கிக் கூறல்.

சேக்கிழார் சுருக்கிய செய்தியை விரித்துக் கூறுவதுடன் பல புதிய செய்திகளையும் சுவாமிகள் தல வரலாற்றில் கூறுகிறார். அவற்றை ஈண்டு நோக்குவோம்.

"சுந்தரர் திருப்புகலூர் தலத்தில் தங்க செங்கல் அருளப் பெற்றார். அப்பொற்கற்களை முழுவதும் பரவையாரிடம் அளித்தார். மேலும் மிகுந்த பொன்விரும்பி துயருற்று வருந்திய சுந்தரர் முச்சுடர்களைக் கண்களாகக் கொண்ட இறைவனது பதிகள் பல வணங்கி பெரும் பொருளைப் பரிசாக பெற விரும்பி திருவாமாத்தூர் வந்தார்.

திருவாமாத்தூர் திருக்கோவிலின் கோபுரம் கண்டவுடன் வணங்கினார். பிறகு ஊருக்குள் புகுந்தார். அவர் எதிரே ஒரு பூதம் தோன்றி "தமிழ்ப்புலமை உடையீர், நீர் வந்தால் மிகுதியும் பொன்விரும்பிக் கேட்பதாக எண்ணிய திருவாமாத்தூர் இறைவன் இவ்வூரை விட்டு மறைந்தனன் என்று கூறியது. உடனே இறைவர் எங்கு சென்றார் என சுந்தரர் பூதத்தை வினவுதலும், பூதம் சூரியன் வரும் திசையை நோக்கி வலக்கை நீட்டிக் காட்டிற்று. அவ்வழியே சென்ற சுந்தரர் அகரம் என்னும் ஊரில் உள்ள அரசமரத்தடியில் விநாயகப் பெருமானைக் கண்டார். சுந்தரர் விநாயகரிடம் "சங்குபுனை காதுடைய இறைவன் இந்தத் தடத்தில் வரக்கண்டதுண்டோ? கூறுங்கள் எனப் பணிந்துக் கேட்டார். விநாயகப் பெருமானும் தம் கரத்தால் சுட்டிக்காட்ட சுந்தரர் அவ்வழியே சென்று அரிகரபுத்திரர் கோவிலுள் புகுந்தார்.

அங்கு விடைமீதில் பிறையணிந்த சடையுடன் மழுவும் மானும் ஏந்தி, அபயவரதம் காட்டி புலித் தோலுடையுடன் திருநீறு அணிந்து பதியாகிய சிவபெருமான் வீற்றிருந்த திருக் கோலத்தைக் கண்டார் வணங்கி நின்றார். பாவியேன் பொருட்டு இவ்விடம் வந்தொளித்தனையோ'' என உள்ளம் இரங்கினார். இறைவர் சுந்தரரை நோக்கி சுந்தரனே திருவொற்றியூரில் சங்கிலியாருக்காக என்னை ஒருநாள் திருக்கோவில் கருவறை விட்டு மகிழமரத்தின் கீழ் இருக்க வைத்தாய். திருவாமாத்தூரில் ஒரு பூதம் கூறிய சொல்லை நம்பி திருக்கோவிலுக்குள் புகுந்து வணங்காமல் அலமந்து இத்திசை நடந்தாய். ஆனைமுகன் சொற்காக இங்கு உமக்கு இவ்வுரு காட்டினோம். திருவாமாத்தூர் தலத்திலும் இவ்வாறுள்ளோம். பல நாமங்களுடன் பல திருக்கோவில்களில் உள்ளோம். எங்கும் இருக்கின்றோம். எங்கு இல்லாதொழிந்தோம் எனில் எங்கும் நாம் இருப்பதே இயற்கை'' என்றருளினார். இவ்வாறாக இறைவன் அருளி மறைந்ததும் சுந்தரர் திருவாமாத்தூர் கோவிலுக்குள் வந்தார். அரிகரபுத்திரர் கோவிலுள் கொண்ட கோலத்துடன் இறைவர் வீற்றிருந்தார். சுந்தரர் கொல்லிக் கௌவாணம் எனும் பண்ணெடுத்துக் ‘‘காண்டனன் காண்டனன்'' எனத் தொடங்கும் பதிகம் பாடியருளினார். இப்பதிகத்தில் திருவொற்றியூரில் சங்கிலி யாரை மணந்து ஆர்ந்தனன் ஆர்ந்தனன் இறைவனருளால் என்றேத்தினார். தமிழ்ப்பாசுரம்கேட்ட சிவபெருமான் சுந்தரரிடம் ‘‘நீ விரும்புகின்ற பொன்னைத் தருவதற்கு அஞ்சிய யான் வெளியே மறைந்ததாக பூதம் கூறிய மொழியை நம்பினாய். நான் பிச்சையுண்டு என் பணிந்துள்ளோம். பொன்னைப் பாதுகாப்ப தில்லை. ஆனாலும் சார்ந்தவர்க்கு யாதொருப் பொருளும் நல்காது இருப்பது நீதியாகாது. எனவே நான் தருகின்ற பொருட்களைக் கொள்க என்றருளினார். அதன்படி இறைவன் வன்னிமரத்தின் காய்ந்துதிர்த்த காய்களை நான்கு கரத்தாலும் அள்ளி நல்கினான். வன்றொண்டரும் இறைவனது கருணையென ஏற்றார். அந்நிலையில் அக்காய்கள் பொன்னின் வடிவாகி பொலிந்தன. ஈடுரைக்க முடியாத கொடையை இறைவன் நல்கினான் இன்பக்கடலில் திளைத்து திருவாரூரையடைந்து இன்பமுற்று வாழ்ந்தார்.

மேற்கூறிய வரலாறு சுந்தரர் ஆமாத்தூரில் கண்ட சிவதரிசனமே தண்டபாணி சுவாமிகளால் விரித்து உரைக்கப்

பெற்றுள்ளது. (பா 6-13) இதில் சுந்தரர் திருவாமாத்தூர் பூதம் கூறுவனவற்றை நம்பியது பொருத்தமானதா இறைவன் சுந்தரருக்காக கோவிலைவிட்டு வெளியே சென்றமையை சுந்தரர் எவ்வாறு ஏற்றுக்கொண்டார்? இறைவன் எங்கும் நிறைந்தவன். பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலருடையவன். எல்லாப் பொருளாக இருக்கின்றவன். இவன் எல்லா நிலையிலும் எல்லாப் பொருள்களிலும் கலந்தும் கடந்தும் விளங்குகின்றான். இத்தகைய இறைவன் திருக்கோவிலில் இல்லாது வெளிச் சென்றான் என்பதை சுந்தரர் நம்பியதற்குரிய காரணத்தை தண்டபாணி சுவாமிகள் விளக்குகிறார். சுந்தரர் சங்கிலியாருக் காக திருவொற்றியூரில் சபதம் செய்து தரும்பொழுது இறைவனை மூலத்தானத்தில் இருக்காமல் மகிழமரத்தின் கீழ் சென்று இருக்க சொல்லியவர். அதன்படி இறைவன் மூலத்தானத்தைவிட்டு மகிழமரத்தின் கீழ்வந்து தங்கினன், அவ்வாறு இங்கு தங்கிய பொழுது மூலத்தானத்தில் இறைவன் இல்லாது போயினன் என நம்பியவர் சுந்தரர். இவ்வாறு எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருக்கும் இறைவன் ஓர் இடத்தில் இருந்து ஓர் இடத்தில் இல்லாது போயினன் என நம்பிய முன் அனுபவத்தின் காரணமாகவே திருவாமாத்தூர் இறைவன் கோவிலைவிட்டு மறைந்தனன் என்ற கூற்றை நம்பி வேதனையுற்றார். இதனைத் தண்டபாணி சுவாமிகள்,

"மானமலி தமிழ்ப்புலமை உடையீர் நீர் வந்தால்
மாழைமிகக் கேட்பதெண்ணி மறைந்தனன் இவ்வூர் கோன்
ஆனசிவன் எனச்சொல்லிற்று அதுவுமவன் விளையாட்டு
அன்றியிலை என்றாலும் அவர் ஒருத்திக் காமுன்
பானல் வயல் ஒற்றியிலோர் மரநிழலிற் போகப்
பகர்ந்தவரால் நிசமெனவே பரதவித்தார் அன்றே"
(பா.7)

என்பார். இறைவன் எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்குவதே நம் இயற்கை என இத்தலத்தில் உணர்த்தி அருள்கிறார்.

சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தின் வழி சங்கிலியாரை மணந்த சுந்தரர் சபதத்தை மீறி திருவொற்றியூர் எல்லைக் கடந்தவுடன் பார்வையிழந்தார். காஞ்சியில் இறைவனை

வணங்கி அருளால் இடக்கண் பார்வைப் பெற்றார். இடக்கண்ணால் இவ்வுலகைக் காணும் சுந்தரர் வலக் கண்ணாலும் காண இயலவில்லையே என துயருறுகின்றார். இவ்வாறாக சுந்தரர் வலக்கண்ணால் காண இயலாது துன்பமுறுதலும், இடக்கண்ணால் காண அருள்புரிந்த இறைவன் அருளியதை நினைத்து இன்பமுறுதலையும் தண்டபாணி சுவாமிகள்,

"இன்பம் துன்பம் இரண்டும் துய்ப்பாராய்ச் சுந்தரனார் இருந்தார் என்பார். (பா.11) கச்சியில் கண்பெற்று வந்த சுந்தரர் திருவாமாத்தூரில் இறைவனைக் கண்டார் என்பதையும் அப்பொழுது இறைவன் இருந்த வண்ணங்கண்டு இடக்கண்ணால் கண்டின்புற்றவர் பதிகம் பாடினார் என்பதை தண்டபாணி சுவாமிகள்

"...... ஆமாத்தூர்க் கோயில்

வாயினடைந்தார் அங்கும் வந்த வண்ணமே கண்டு கொல்லியெனும் பண்ணெடுத்துக் காண்டனன் காண்டனன்" என்று கூறுவார். (பா.11) இங்கு பாடிய பதிகம் பற்றி சுவாமிகள் கூறும் கருத்துக்களை நோக்குவோம்.

திருவாமாத்தூர் பதிகம் கொல்லிப் பண் கொண்டது என்றும் அப்பதிகத்தில் இறைவன் ஒளித்தமையைக் குறிப்பினால் பாடியும், ஒரே சொல்லை இரண்டு மொழியடுக்காக கவிதோறும் பாடியும், சங்கிலியோடு ஒற்றியூரில் ஆர்ந்தனன் என்றும் பொன்னை அளித்து எனைப் போகவிடாது அருளியவன் இறைவன் என்று குறிப்பிடுகிறார். சேக்கிழார் பெரியபுராணத்தில் சுந்தரர் திருவாமாத்தூர் இறைவனை வழிபட்டுப் பதிகம் பாடியதைக் கூறியுள்ளார். ஆனால் எப்பதிகம் பாடினார் எனக் குறிப்பிடவில்லை. இதனை

"அங்கணரை ஆமாத்தூர் அழகர்தமை அடிவணங்கித் தங்கும் இசைத் திருப்பதிகம் பாடி" என்று கூறுகிறார்.

இங்கு ஆமாத்தூரில் அருளிய பதிகத்திற்கு சேக்கிழார் தங்கும் இசைத்திருப்பதிகம்" என்றடைமொழியருளியமைக்கு சிவக்கவிமணி அவர்கள் தங்கலோசையாவது பாட்டின்

ஒவ்வோரடியிலும் முதற்சீர்கள் சொற்பொருட் பின்வரு நிலையாய் இருமுறை அடுக்கி வருதலின் விரைந்து தொடர்ந்து பாட இயலாது ஓசைத் தங்கிச் செல்லுதல் - காண்டனன், காண்டனன் பாடுவன், பாடுவன் தேடுவன், தேடுவன் என்பவை போல் எல்லாப் பாடல்களிலும் வருவனவும் அடிதோறும் இறுதிச் சீரில் ஓசை தங்குதலும் காண்க என்பார். இங்கும் பாடிய பதிகங் கூறாது போல் அப்பதிகப் பண்ணும் கூறப்படவில்லை. சுந்தரர் தேவாரத்தில் இப்பதிகம் கொல்லிக் கௌவாணம் எனக் குறிக்க (பா. 11) சுவாமிகள் கொல்லியெனும் பண் எனக் குறிக்கிறார்.

திருவாமாத்தூரில் இறைவனிடத்து சுந்தரர் மிகுந்த பொன் விரும்பி வேண்டி வந்து வணங்கினார் என்று சுவாமிகள் குறிப் பிடுகிறார். (பா. 6) ஆனால் சேக்கிழார் இக்குறிப்பு எதுவும் கூறவில்லை. ஆமாத்தூர்க்கு வந்த சுந்தரர் வலது கண்பார்வை யற்ற நிலையில் கண்விரும்பி வேண்டினாரா அல்லது பொன் விரும்பி வேண்டினாரா? எனில் ஒரு கண்பார்வை பெற்ற சுந்தரர் மற்றொரு கண்பார்வையை வேண்டிப் பெற்றிருத்தல் வேண்டும். ஆனால் அவ்வாறு இல்லாமல் இறைவன் திருவாமாத்தூரில் நடத்திய திருவிளையாடலால் எங்கும் இருக்கும் இயற்கையாகிய இறைவனை காண்டனன் காண்டனன் எனப் பாடிய தன் வாயிலாக சுந்தரர் கண்ட சிவதரிசனமே பாடப்பட்டுள்ளது. இதற்கு சுந்தரர் திருவாமாத்தூர் இறைவனிடத்து எதிர்நின்று பாடிய பதிகமே சான்று.

திருவாமாத்தூரில் சிவனை மட்டுமே வணங்கி வழிபட்டவர் பிருங்கி முனிவர். இறைவனும் இறைவியும் அம்மையப்பர் உருக்கொண்டு இருந்தபொழுதும் பிருங்கி முனிவர் வண்டு உருவெடுத்துத் துளைத்துச் சிவனையே வழிபட்டனர். இவர் சத்தியருளின்றி சத்திக் கெட்டதால் நடக்கும் வலிமையின்றி நின்றார். அந்நிலையில் சிவத்தினருளால் மூன்றாவது கால் பெற்றனர். பின்னர் சத்தி சாபத்தால் வன்னிமர உருவெடுத்தார் எனவே இத்தலத்திற்குரிய தலமரமாக வன்னிமரம் விளங்கு கிறது. இவ்வன்னிமரத்தின் காய்த்து உதிர்த்த காய்களையே இறைவன் சுந்தரருக்கு அள்ளி வழங்கினார். சுந்தரர் அக்காய் களை முன் தானையில் பணிந்து ஏற்றார். அப்பொழுது அக்காய்கள் பொன்னின் வடிவாகிப் பொலிந்தன. அப்பொன்னைப் பெற்ற சுந்தரர் அப்பதியில் தங்கியிருந்து இசைப்பதிகம் ஓதினார்

என்பது சுந்தரர் வரலாற்றில் சேக்கிழார் கூறாத புதிய செய்தியாகும்.

பொன் பெறுவதற்கு முன் பாடிய பதிகமே காண்டனன் என்றும் கொல்லிக் கௌவாணப் பண்ணுடைய பதிகம். இப்பதிகம் பாடிய பின்பே இறைவன் வன்னிமரத்துதிர்த்த காய்களை அளித்து பொன்னாக்கி அளித்தான். இப்பொன் பெற்ற பின் பாடிய பதிகம் இன்றுவரை கிடைக்காதது நம் தவக்குறைவே.

இவ்வாறாக சுந்தரர் திருவாமாத்தூர் பதியில் இறைவனைக் கண்டு வணங்கிய வரலாற்றை சேக்கிழார் சுவாமிகள் விரித்துக் கூறாமல் சுருக்கமாகக் கூறியதற்கு காரணம் யாது? என தண்டபாணி சுவாமிகள் விரிக்கிறார்.

"அக்கதை எத்தனை விதமோ விரித்துரைத்த அவர்தாம்
ஆமாத்தூர்ச் சேறல் மட்டும் அறக்குறுக்கிச்
சொன்னார்
முக்கணர்தம் திருவுளப் பாங்கில்லையோ? வெள்ளை
முண்டகப்பூம் பொருட்டுடையாள் மொழிய விசைந்
திலளோ
திக்கறியும் அபவாதம் என்று மறைத்தாரோ
சிறியனேன் சொலற் பொருட்டே செப்பலிற்றப்
பியதோ" (பா. 5)

என்று மொழிந்து சுந்தரர் வரலாற்றைக் கூறுகிறார்.

சேக்கிழார், சுந்தரர் வரலாற்றில் கூறாத செய்திகளை தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார். எவ்வாறெனில் சுந்தரர் தோற்றம் பெரியபுராணத்தில் பேரொளிப் பிழம்பாகக் கூறி பிறகு ஆரூராக வாழ்ந்த வாழ்க்கைக் கூறப்படுகிறது. ஆனால் சுவாமிகள் சுந்தரரது ஆதி தோற்றத்தையே கூறுகிறார்.

கயிலை மலையில் சிவபெருமான் ஒருநாள் கண்ணாடியில் தனது அழகு உருவத்தைக் கண்டார் தனது அழகையே சுந்தரா வருகவென அழைத்தார். சிவனது வடிவம் பெற்ற சாரூப நிலையில் பக்குவமுள்ள சுந்தரர் தோன்றி வெளிப்பட்டார். சிவபெருமான் சுந்தரரை தனது பணி செய்யுமாறு அருளினார். இதுபோன்றே உமையவளும் இருபெண்களைப் படைத்தாள் இவ்வாறாக சுந்தரரும், உமையவள் சேடியர்களும் கயிலையில்

தோன்றிய நிலையையும் ஆற்றிய பணிகளையும் சுவாமிகள், திருவாமாத்தூர் தலபுராணத்தில்

"கயிலை மலைத் தலையில் வளர் சிவபெருமான் ஒருநாள்
கண்ணாடியொன்றினைத் தன் கண்களாற் பார்த்தான்
வெயிலுமிழ் தன் திருவுருவம் இலங்கியது கண்டு
மிகும் விழைவாற் சுந்தர நீ விரைந்து வருகென்றான்
பயில் பெருஞ் சாருபமெய்தத் தக்கதவம் உறுமோர்
பக்குவத்தோன் உடனந்தப் படிவமுற்று வந்தான்
எயிலெரித்த வாயினன் தன்பணி செய்யுமாறு அமைத்தான்
இவ்வாறங்கு உமையவளும் இருமகளிர்ச் செய்தாள்.
(பா. 1)

என்பார்.

சுந்தரர் தோற்றம் பற்றி பேரூர் புராணமும்

கயிலை நாயகன் காமருதன்னுருப்
பயிலும் ஆடியிற் பார்த்தங்கழைத்தலும்
வெயில் செய் வெங்கதிர் கோடிவிராய் எனச்
செயிரிலாத மெய்த் தேசொடும் தோன்றினார்
(பள்ளுப் படலம். பா. 1)

என்று கூறுகிறது.

சுந்தரர் தோற்றம் பற்றி பெரியபுராணத்தில் சேக்கிழார் எதுவும் குறிப்பிடவில்லை. ஆனால் சுந்தரர் ஆற்றுகின்ற பணியைப் பற்றிக் கூறுகையில்

"வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொருளாகிய
வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்
அள்ளும் நீறும் எடுத்தணைவானுளன்
அன்னவன் பெயர் ஆலாலசுந்தரன்"
(திருமலைச்சிறப்பு பா. 21, 22)

என்பார்.

இறைவனுக்கு சாத்தும் மலர்மாலையும் நீறும் எடுத்து நிற்பார் என்ற பணியை சுவாமிகள் "எயிலெரித்தவாயினன் தன் பணி செய்யுமாறு அமைத்தான்" என்பார்.

சேக்கிழார் சுந்தரர் வரலாற்றை திருமலைச் சிறப்பின்கண் தொடங்கி இருமகளிரைக் கண்டு காதல் கொண்டமையும் பின்

இறைவன் ஏவலாலே மண்மீது பிறந்தமையும், முதல் மணத்தைத் தடுத்து இருமணத்தை முடித்தமையும் விரித்துக் கூறுகிறார். தண்டபாணி சுவாமிகள் இதனை மூன்று பாடல்களில் சுருக்கிக் கூறுகிறார். சுந்தரர் ஆற்றிய அற்புத செயல்களான முதலை யுண்ட பிள்ளையை உயிர்ப்பித்தல், இறைவனை தூதாக அனுப்பிய அன்பின் பெருமை, இறுதியில் வெள்ளானையின் மூலம் முத்தி அடையப் பெறுதலும் கூறியுள்ளார்.

இவ்வாறாக தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமி களது வாழ்வில் இறைவன் நடத்திய அற்புதங்களையெல்லாம் பல நாயன்மார்களது வரலாற்றில் இணைத்துக்கூறிய சேக்கிழார், திருவாமாத்தூர்த் தலத்தில் இறைவன் சுந்தரரிடம் நடத்திய அருட்டிரு விளையாடலைச் சுருக்கிக் கூறினார். காண்டற்கரிய கடவுளாய சிவபெருமான் எங்கும் இருக்கும் இயல்பே தன் குணமெனக் கொண்ட ஆண்டவன் ஆமாத்தூர் ஐயனை ஆர்வத்தால் தொழுது உணர்ந்த தண்டபாணி சுவாமிகள் சுந்தரர் இறைவன் மேல் கொண்ட அன்பின் பெருமையையும், இறைவன் சுந்தரர்பால் கொண்ட கருணையையும் போற்றி உணர்ந்து பாடியுள்ளமையை திருவாமாத்தூர்த் தலபுராணம் தெளிவிக்கும்.

# பாண்டிநாயகம் பிள்ளைத்தமிழில் முருகன்

ம. திருமலை

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தென் தமிழ் நாட்டில் 19ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் சைவ மரபில் தோன்றிய பெரியார் ஆவார். சமயம் என்பது தனிமனிதர்கட் குரியதல்ல; சமுதாய ஒருமைப்பாட்டுக்குரியது என்ற கருத் தினைக் கொண்டு சமய ஒருமைப்பாட்டுக்காகத் தம்மை அர்ப் பணித்துக் கொண்டவர்; பல் சமயங்களின் சங்கமாகத் தன்னைப் பாவித்துக் கொண்டவர்; சுவாமிகளின் திருவுருவத் தோற்றம் இதனை நன்கு உணர்த்தக் கூடியதாகும். பல்சமயங்களுக்கும் பொதுவாகத் தம்மைக் கற்பித்துக் கொண்ட சுவாமிகள், சமயப் பொதுமையை முருகனின் வடிவத்திலேயே கண்டு கொண்டார். முருகனின் மீது எண்ணற்ற பாடல்கள் புனைந்து தமது பக்தியைப் புலப்படுத்திக் கொண்டவர். தம்மை அருணகிரி நாதரின் மறுபிறப்பாகக் கருதியவர்; இறைவனால் அவ்வாறு கூறப்பட்டவர். சமகாலத்துச் சமூக வாழ்க்கையைப் பற்றியும் சிந்தனை செய்து புதுமையான கருத்துக்கள் பலவற்றினைச் சுவாமிகள் கூறியுள்ளார்.

சுவாமிகள் ஐம்பதாயிரம் பாடல்கள் பாடியிருப்பினும் அவை அனைத்தும் பக்தி, தமிழின் சிறப்பு, தமிழகம், தமிழ்மொழி என்ற அடிக்கருத்துக்கள் பற்றியனவாகவே அமைந்திருக்கின்றன. பல்வேறு இலக்கிய வகைகளாகவும் இவரது பாடல்கள் அமைந் திருக்கின்றன. இவற்றுள் குறிப்பிடத்தக்கது பிள்ளைத்தமிழ் எனும் இலக்கிய வகையாகும்.

சுவாமிகள் படைத்தளித்துள்ள சிதம்பரம் பாண்டிநாயகம் ஸ்ரீ முருகப்பெருமான் பிள்ளைத்தமிழ் என்ற சிற்றிலக்கியம் இக்கட்டுரைக்குச் சான்றாதாரமாக அமைகின்றது; இப்பிள்ளைத் தமிழ் நூலில் முருகப்பெருமான் பற்றிய தமது கருத்துக்களைச் சுவாமிகள் எங்ஙனம் எடுத்துரைக்கிறார் என்ற செய்தி இங்கு விளக்கப்படுகின்றது.

இந்திய சிந்தனை மரபிலும் பக்தி மரபிலும் ஆன்மா முழுமை நிலையை அடைவது அறிவுத் தெளிவுடன் தொடர்புடையதாக அமைகிறது. கௌதம புத்தரின் வரலாறும் இதனைக் கூறுகின்றது. மாணிக்கவாசகர் பெற்ற இறையனுபவக் காட்சியும் ஞானத்துடன் தொடர்புடையதாகும். இறைவன் குரு வடிவாகித் தம்மை ஆட்கொண்டதாக மாணிக்கவாசகர் குறிப்பிடுவதைத் திருவாசகத்தின் மூலம் உணரலாம். எனவே இறைவனைக் குரு வடிவாக அறிவு வடிவாகக் காண்பது தமிழ்மரபு ஆகும். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இறைவனாகிய முருகனை அறிவு வடிவாகவே காண்கிறார்.

அறிவின் முழுமை வடிவாக வைதிகக் கடவுளான பிரமன் அறியப்படுகிறான். தமிழ்க் கடவுளான முருகன் அறிவுக்கெல்லாம் அறிவுடையவன் என்பதைக் கூற வந்த சுவாமிகள், பிரமனுக்கு மந்திர உபதேசம் செய்த வரலாற்றினைக் கூறுகின்றார். முருகன் அடியவர்கட்கு மட்டுமல்லாமல் புலவர்கட்கும் அருள்புரிபவன்; அதாவது அறிவு கொளுத்துபவன்; பிரமனுக்கு அவனது தலைகள் குலுங்கும் படியாக உபதேசம் அருளியவன் என்ற கருத்துப் புலப்படும்படியாகப் பாடுகிறார். பாடல் வரிகள் வருமாறு:

''பாவாணருக்கு இன்னருள வழங்கும்
பரமகுருவே! அடியாருட்
பதியும் திருத்தாட் பெருமானே!
பங்கேருகப் பூவுடையாகின
நாவால் ஒரு சொல்புகன்று, தலை
நான்கும் குலுங்கப் புடைத்தோளே! (25)

என்று முருகப்பெருமான் அறிவு வடிவாக இருப்பதைக் கூறுகின்றார் சுவாமிகள்.

பிரமனுக்கு முருகன் தந்தது பிரணவ மந்திர தொடர்பான வேத அறிவு. இது இறை வழிபாட்டுக்குரியது. இதனைப் பெறுதல் மிக அரிய செயலாகும்; ஆயின் முருகன் இந்த அறிவான மிக எளியவர்க்கும் அடியவர்கட்கும் மனமுவந்து அளிக்கிறான் என்ற செய்தியைச் சுவாமிகள் ஒரு பாடலில் பின்வருமாறு குறிக்கிறார்.

''மந்திர முதற்குறி எனும் பிரணவப்பொருளை
வழிபடும் அவர்க்கு அளிக்கும்
வள்ளலே! மலை தொறும் விளையாடி மயிலேறி
வருகின்ற குமரவேளே'' (19)

வேத மந்திரங்களைப் பயில்வது என்ற செயலானது பல வரன்முறைகட்கு உட்பட்டது என்ற கருத்து நிலவியிருந்த சமூகத்தில், வேதம் எவராலும் பயிலத்தக்கது என்ற கருத்தினைக் கூறி, முருகன் இதனை ஆற்றும் இயல்புடையவன் என்பதைக் கூறுகிறார் சுவாமிகள்.

அறிவு நிலைப்பட்ட இறைவனாகிய முருகன் ஒளிவடிவாகவும் இருக்கின்றான் என்ற கருத்தினை சுவாமிகள் அம்புலிப்பருவத்தில் குறிப்பிடுகின்றார். ஒளிக்கும் அறிவுக்கும் தொடர்பு இருப்பதால் இறைவன் முருகனை-அறிவு வடிவான முருகனை-ஒளிவடிவாகப் பல பாடல்களில் குறிப்பிடுகின்றார். சான்றாக,

"தெருளறினுர் பரவு சிற்சபைநாதன் அன்பிற்
சிறக்கின்ற தன்மையாலும்
செங்கனல் எனக் குலவு மேடத்தில் ஒருவேளை
திகழ வரு பெருமையாலும்
இருளறச் செய்து கண்ணுடையவர் தமக்கெலாம்
இன்பம் விளை வித்தலாலும்'' (35)

என்ற பாடல் வரிகளில் இறைவன் அறியாமை இருளினை அகற்றும் ஒளியாக உருவகம் செய்யப்படுகின்றான். இதே கருத்தினை,

"உற்பலத் துரிமையுடன் உடுமகளிர் காதலன் என்
ஒரு நாமம் உடைமையாலும்
உலகமெய் கணும் நிறையும் ஒளியாலும், விண்ணவர்க்கு
உவகைதரு தன்மையாலும்'' (36)

என்று மேலும் வற்புறுத்திக் கூறுகின்றார்.

இறைவனை ஒளிவடிவமாகக் கண்ட சுவாமிகளின் கற்பனை மேலும் விரிந்து, பரந்து செல்கிறது; ஒளியுடன் தொடர்புடைய குளிர்பதியுடன் முருகனை ஒப்பிடுகின்றார் சுவாமிகள்:

நிலவு பாற்கடலில் அமுதுடன் பிறந்ததால் வெண்மை நிறமாக இருக்கிறது; முருகனும் வெள்ளை நிறத் திருநீறு அணிந்திருக்கிறான். நிலவு இருளைக் கடந்து அகற்றுகிறது; முருகனும் இருள் போன்ற கருமைநிற அசுரர்களை அழிக்கிறான். இரக்கமற்றவர் கூட, காண விழையும் தகுதி பெற்றது மதி; முருகனும் பிற சமயத்தவர்களால் வணங்கப்

படுகிறான். நிலவு தோன்றும்போதும் மறையும் மலைகளுடன் தொடர்பு கொள்கிறது; முருகன் எல்லா மலைகட்கும் உரிமையுடையவனாக இருக்கிறான். காதலில் ஒன்றிப் பிரிந்து நிற்பவருக்குத் துன்பம் தருவது நிலவு; முருகனும் கொடியவர்கட்குத் துன்பம் செய்கிறான்.

இக்கருத்துக்களை விளக்கும் பாடல் வருமாறு:

''இன்பமுறும் அமுதத்தினாற் றவளம் ஆவைநீ!
இவன்வெள்ளை நீறணிந்தோன்,
இருள்கடிய வல்லை நீ! கருநிறத் தானவர்க்கு
இயமன் இவன், நீ இரங்கா
வன்பரும் களிகூர வருவை! இவன் வேறுமத
வாணரும் பரவ மகிழ்வான்,
மலையினிற் போவை நீ! இவன் எழிற்குன்றுதொறும்
மாறாமல் ஆடல் செய்வான்,
துன்பமும் சிலர் உறப்புரிவை நீ! இவன் முழுத்
துட்டரைக் காய்ந்து நிற்பான்'' (37)

இப்பாடலில் வெண்மைநிறம், இருளகற்றுதல், கொடியவர்கட்குத் துன்பம் ஏற்படுதல் முதலிய அனைத்துமே படிமங்களாக நின்று ஒளி என்ற ஆற்றலுடன் தொடர்புடையவை என்று வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுவது உணர்ந்து இன்புறத்தக்க நுட்பமாகும்.

இறைவன் முருகன் அறிவு வடிவாகவும் அதன் தொடர்ச்சியான ஒளியாகவும் இருக்கிறான் என்று கூறிய வண்ணச்சரபம் சுவாமிகள் பிறிதொரு கருத்தினையும் கூறுகின்றார். இறைவன் உருவமுடையவனாகவும் சில சமயங்களில் உருவமற்றவனாகவும் இருக்கிறான் என்று ஒரு பாடலில் கூறுகின்றார்; அக்கருத்து, ''சகளமொடு நிட்களமும் ஆகிரின்றார்'' (20) என்ற பாடல் வரிகளில் கூறப்படுகின்றது. இதுவும் முந்தைய கருத்துக்களின் தொடர்ச்சியாக அமைகின்றது. அறிவு என்பதும் ஒளி என்பதும் கண்கூடாகக் காணத்தக்க ஸ்தூல வடிவங்கள் அல்ல; ஆனால் இவையிரண்டும் உணர்ந்து இன்புறத்தக்க சூக்கும அனுபவங்கள்; இக்கருத்து மேற்காட்டப்பட்ட பாடல் வரிகளில் புதைந்து கிடக்கின்றது.

இறைவன் அருவமாக இருப்பினும் அடியவர்களால் ஏதேனும் ஒரு வடிவில் காணப்படுகின்றான். அடியவர்கள் காணும் வடிவமும் பிற அவதாரங்களும் மூல வடிவத்தின் கலைகளாகும் என்ற கருத்து வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பாடல்களில் காணப்படுகின்றது. "எங்கணும் நிறைந்தும் அடியவர்களால் ஒருவடிவு, எடுத்து விளையாடும் முருகா" (21) என்ற அடிகளின் மூலம் சுவாமிகள் இக்கருத்தினை விளக்கு கின்றார்.

இறைவன் முருகனின் உருவ அமைதி பற்றிக் கூறிய வண்ணச் சரபம் சுவாமிகள் ஒரு புதிய செய்தியைக் கூறுகின்றார். முருகப் பெருமானின் தந்தையாகிய சிவபெருமான் மூன்று கண்களை யுடையவன் என்பதால் முருகனுக்கும் மூன்று கண்கள் உண்டு என்ற செய்தியைப் பல பாடல்களில் சுவாமிகள் கூறுகின்றார். "..............முகந்தோறும், முக்கண் உடையாய்!" (16) என்ற அடிகளில் இக்கருத்து புலனாகின்றது.

முருகப்பெருமான் திருவருள் எல்லை கடந்து செல்வதாகும் என்ற செய்தி சுவாமிகளின் பாடல்களில் பல இடங்களில் கூறப் படுகின்றது. தில்லை மூவாயிரவக்கட்கு முருகன் அருள் செய்து இருக்கிறான். இதனை, "புலியூர் தனைவிட்டு அகலாமற் பொருந்தும் புகழ்சேர் புனிதர்களாம் மூவாயிரவர் பணிகுமரா" (25) என்ற அடிகளில் குறிப்பிடுகிறார் சுவாமிகள்.

மனிதர்கட்கு அவர்களாலும் அவர்கள் வாழ்கின்ற சூழ்நிலை களாலும் மனிதர்கள் துன்பங்களை அடைகின்றனர். தீத்திறம் மிக்கவர்களின் செயல்களைக் காண நேர்வதால் ஏற்படும் துயரம், பல்வேறு சமயங்களில் நின்றொழுகும் மனிதர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களைக் காணும்போது ஏற்படும் துயரம், பெண்கள் மீது கொண்ட மோகத்தினால் ஏற்படும் துயரம், இலக்கியங்கள் கடலிற்பட்டு அழிந்ததால் ஏற்படும் துயரம், இறைவனை நினைக்காமையால் வரும் துயரம் என்று பல்வேறு துயரங்கள் மனிதர்கட்கு ஏற்படுகின்றன. இத்தனை துயரங்களையும் முருகனின் திருநீறு ஒன்றுதான் தீர்க்கவல்லது என்ற கருத்தினை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார்.

முருகனின் திருவருள் புதுமைகள் நிரம்பியது என்ற கருத்து ஒரு பாடலில் சுவாமிகளால் கூறப்படுகின்றது. இறைவனின் அருள்

அனைவருக்கும் ஒரே மாதிரியாக இல்லாமல், ஒவ்வொருவருக்கும் அவரவர் தேவையை ஒட்டியதாக அமைகிறது. சிவபெருமானுக்கு பிரணவ மந்திரோபதேசவாகவும், புலவர்கட்குப் புலமை விருந்தாகவும் முருகனின் திருவருள் அமைகிறது;

முருகனின் தோற்றப் பொலிவு, அருள்திறம் முதலியவை பற்றிக் கூறிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், முருகனைப் பற்றிச் சமயப் பொதுமை நோக்கில் கருத்துக்களை முன்வைக்கிறார். முருகன் சைவக்கடவுள் தான் எனினும், அவன் சமயங்கடந்து நிற்பவன் என்றும் ஆறு சமயங்கட்கும் பொது வானவன் என்றும் கூறுகின்றார். சுவாமிகள் தமது மேனியில் சமயப் பொதுமைக்கான சின்னங்களை அணிந்திருந்தார். இதனை மேலும் உறுதிப்படுத்தும் வகையில் தாம் வணங்கும் முருகனையும் ஆறு சமயங்கட்கும் பொதுவானவன் என்று கண்டார்; அதனைத் தமது பாடல்களில் பல இடங்களில் புலப்படுத்தியுள்ளார்.

முருகன் ஒரு பெரும் தனிக்கடவுள்; ஆறுமுகங்கள் கொண்டவன்; அவையும் ஆறு சமயங்களைக் குறிக்க என்று புதுமையானதொரு கருத்தினைக் கூறுகின்றார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். சுவாமிகள் 19--ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலும் பிற்பகுதியிலும் தமிழகத்தில் வாழ்ந்தவர். இக்காலத்தில் மக்களின் சமூக வாழ்வு சீர்குலைந்திருந்தது. நாட்டு மக்கள் மேலைத்தேயத்துப் பண்பாட்டிலும், சிந்தனைப் போக்கிலும் ஈடுபாடு கொண்டு, தங்கள் சொந்தப் பண்பாட்டினை மறக்கத் தலைப்பட்டிருந்த காலம்; மேலும் சாதி, சமயப் பிரிவினைகள் மிகவும் கூர்மையடைந்திருந்த காலம். பக்தி நெறியாலும், சமூக நெறியிலும் நின்றொழுகிய சுவாமிகள் இரண்டு முக்கியமான கடமைகளை ஆற்ற வேண்டிய நிலையில் இருந்தார்; சுதேசிச் சமய நம்பிக்கைகளின் இன்றியமையாமையை எடுத்துக்காட்டுவது ஒன்று. சமயங்களிடையே வேறுபாடு இல்லை என்பதை வற்புறுத்துவது இரண்டு. இந்த இரண்டு கடமைகளை முன் நிறுத்தியே சுவாமிகள் முருகனை முழுமுதற்கடவுளாகவும் பொதுமை வாய்ந்த கடவுளாகவும் காட்ட முனைந்தார்.

இறைவன் முருகன் குருவடிவாக நின்று உபதேசம் செய்து ஆன்மாவை ஆட்கொள்கிறான். இறைவன் தானே அறிவு வடிவமாகவும் ஒளி வடிவாகவும் இருக்கிறான். வைதிக

சமயங்கட்கு மட்டுமே உரியவனாக இல்லாமல், லௌகிக சமயங்கட்கும் நெறிகட்கும் உடையவனாக முருகன் காணப் படுகிறான். இறைவனாம் முருகன் சூக்கும நிலையில் உணரத் தக்க அனுபவமாக இருப்பினும் காணத்தக்க உருவமாகவும் இருக்கிறான். காண்பவர்களின் கருத்துக்கு இணங்கக் காட்சி தருகின்றான். முருகனின் அருள் பொதுநிலையினதாக அல்லாமல், ஒவ்வொருவருக்கும் ஏற்றவகையில் சிறப்பு நிலையினதாகவும் அமைகின்றது. முருகன் அனைத்துச் சமயங்கட்கும் பொதுவான வனாகக் காணப்படுகின்றான். முருகனின் அருவத் தோற்றமும் உருவத் தோற்றமும் இத்தகைய சமய ஒருமைப்பாட்டுக்கு உதவும் வகையில் அமைந்திருக்கின்றன.

# புலமை இலக்கணமும் புலவர் புராணமும்

திலகவதி சண்முகசுந்தரம்

புலமை இலக்கணத்தையும், புலவர் புராணத்தையும் எழுதியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இவர் திருநெல்வேலியில் தோன்றி முருகப் பெருமானின் அருள்பெற்று இளமை தொட்டே கவிபாடும் ஆற்றல் பெற்றவர். 'அறுவகை இலக்கணம்' என்ற நூலுள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணம் தவிர ஆறாவது இலக்கணமாகப் புலமை இலக்கணத்தைக் கூறியுள்ளார்.

### ஆறாவது இலக்கணம் புலமை இலக்கணம்

> ''ஐந்தே இலக்கணம் என்று ஆயிரம் பேர் கூறல்கண்டும்
> ..............விள்ளும் குருபாதமே''

என்ற பொதுப்பாயிரப் பாடலில் தான் புலமை இலக்கணத்தைக் கூறிய பாங்கினைப் புலப்படுத்துகிறார்.

> ''எழுத்து சொல் பொருள் யாப்பு அணி எனத்திகழ்
> .................. பகர்வது குறித்துள்ளேன்''

என்பதால் எழுத்து மூதலான ஐந்திலக்கணங்களையும் துறை போகக் கற்பதனால் பெறப்படுவதே புலமை நலம் எனத் தெளிவாகக் கூறுகிறார் சுவாமிகள்.

### முதல் நூல்

புலமை இலக்கணம் எனத் தனியே ஒரு இலக்கணமாக எவரும் விரித்துக் கூறவில்லை. எனவே இவ்வகையில் அறுவகை இலக்கணம் முதல் நூலாக விளங்குகிறதெனலாம். வரலாறு போலக் காணப்படும் புலமை இலக்கணம் ஒரு வரலாற்றுக் கருவூலம் என்று மு. சண்முகம் பிள்ளை கூறுகிறார்.

### புலமை இலக்கணம் தோன்றக் காரணம்

மிகப் பிற்பட்ட காலத்தில் தமிழ் மன்னர்களின் ஆட்சி மறைந்து, நாழி அரிசிக்குப் பாட்டிசைத்து விற்கும் நிலை

ஏற்பட்டது. தமிழறிந்து போற்றும் தலைமையில்லாததால் பொன், பொருள், வாழ்வுக்காகப் பொய் பாராட்டல், காமத்தைப் பாடல் என்ற நிலைக்குப் புலவர் ஆளாயினர். புலவர்கள் ஒருவரை ஒருவர் மட்டம் தட்டிக் கொள்ளும் அளவிற்குப் போட்டிகள் மிக்கன. இத்தகைய நிலை மாறி, தமிழின் தொன்மையும், புனிதத் தன்மையும் புலவர்கட்கு எடுத்துக் காட்டி சமுதாயத்திற்குப் பயன்படுமாறு அவர்களை மடை மாற்றம் செய்ய வேண்டும் என்ற சுவாமிகளின் ஆழ்ந்த எண்ணம் தான் புலமை இலக்கணமாக மலர்ந்தது எனலாம்.

**புலமை இலக்கணம்**

புலமை என்பது அறிவின் தெளிவு. 144 நூற்பாக்களைக் கொண்ட புலமை இலக்கணம், தேற்ற இயல்பு, தவறியல்பு, மரபியல்பு, செயல்வகை இயல்பு என்னும் நான்கு பிரிவுகளைக் கொண்டுள்ளது. வழிபடு கடவுள் முருகனை வாழ்த்தி, அறியும் தன்மையே புலமை என்று கூறி, அது மேற்கூறியவாறு நான்கு வகைப்படும் என்று முதல் மூன்று நூற்பாக்களில் கூறியுள்ளார். தேற்ற இயல்பில் 31 நூற்பாக்கள் மூலம் ஒரு புலவன் தெளிய வேண்டிய செய்திகளையும், தவறியல்பில் 34 நூற்பாக்கள் மூலம் ஒரு புலவன் தவிர்த்துக் கொள்ள வேண்டிய குற்றங்களையும் கூறியுள்ளார். மரபியல்பில் 35 நூற்பாக்கள் மூலம் தெளிந்து, குறை நீங்கிய புலவர்களின் சிறப்புக்களைக் கூறியுள்ளார். செயல் வகை இயல்பில் 41 நூற்பாக்கள் மூலம் இவற்றையெல்லாம் அறிந்து கொண்ட ஒருவர் எவ்வாறு செயல்பட வேண்டும் என் பதைத் தொழில்நிலை, நடுநிலை, எதிர்நிலை, அருள்நிலை என்ற நான்கு நிலைகளில் வைத்துக் கூறியுள்ளார்.

**தேற்ற இயல்பு**

தேற்றம் என்பது தெளிவு; புலமை என்பதுவும் இதுவே; இதுபற்றியே புலவர்கள் தெளிந்தோர் எனப்படுகின்றனர். புல வனாக விரும்புபவன் சான்றோரைப் பணிந்து' (நூ.5) 'தெய்வத் தின் துணைகொண்டு' ''புலமைச் சீரியர் பகை கொள்ளாது', (7,9) சோம்பல், துயில், மோகம், வறுமை இவற்றுக்கு அஞ்சாது', (10) குற்றம் சொல்வோர்க்கு அஞ்சி அயராது, சிந்தையின் மயக்கம் தெளிந்து சித்திரம் பாடவேண்டும். (11, 14)

**நெறிமுறைகள்**

'முதலில் தெய்வத் துதிபாட வேண்டும். ஆசிரியர் ஈற்றடி கொடுக்க மாணவன் முதல் மூன்றடிகளைப் பாடி நிறைவு செய்ய வேண்டும்'(13) பின் கீர்த்தனை எனப்படும் நாடகத் தமிழ்பாக்கள், கொச்சகம், கட்டளைக் கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா, கலிப்பா, வெண்பா, வண்ணம், பிரபந்தம், காவியம் என்று வரிசையாகத் தேர்ந்த பின்னரே அறிவுநூல்களை (ஜோதிடம், தத்துவம், மருத்துவம்) இயற்ற வேண்டும். அதற்கும் பின்னர் தான் சொல்ல மற்றவரை எழுதச் செய்ய வேண்டும். காலமழை எனப் புதுக்கவி சொல்ல வேண்டும் கடவுளைக் கண்முன் தோன்றச் செய்ய வேண்டும். இப்படிப்பட்ட தெளிந்த அறிவின னுக்கு தெய்வ அருளே துணையாக இருக்கும். எனவே இறை யருள் பெற்றவனே மேற்கண்ட நெறிமுறைப்படி பாடும் தெளிவுடைய புலவன் என்று தேற்ற இயல்பில் கூறுகிறார்.

**தவறியல்பு**

புலவர்களிடம் இருக்கக் கூடாத குணங்களைக் கூறுகிறது. 'தற்பெருமை, புலமைக்காய்ச்சல், பொறாமைகூடாது', 'எள்ளளவு புலமைக்கு நெல்லளவு செருக்கு ஆகாது, காகம் போல் கலந்து வாழாமல் நாய்போல் பகைத்தல் ஆகாது' (37,38) மிலைந்த கடம்பன்ன வியன் தமிழ்ப் பாவாணர் கலைந்து அலையாது ஒன்றுபடக் காட்டாய் என்று பழனித் திருவாயிரத்தில் புலவரின் ஒற்றுமைக்காகச் சுவாமிகள் முருகனிடம் வேண்டுகிறார்.

மற்ற புலவரின் சொல்லைத் திருடிப் பயன்படுத்தக் கூடாது. தோல்வியுற்ற புலவரைத் தண்டித்தல் ஆகாது என்கிறார். இதனையே பின்னால் 'வெண்பாத் தோல்வியால் விருது இழப் பதுவும், வண்ணத் தோல்வியால் வார்செவி இழப்பதுவும் பழமையாம் எனல்பல்லோர் வழக்கே (121) என்றும், 'பாடும் திறமையில் பழுதுபட்டோனைப் புடைக்கச் செய்து மகிழ்வதும் ...பழமையாம், (120) என்று குறித்தாலும் அதனால் பயனில்லை என்கின்றார்.

**குணங்கள்**

ஒரு புலவனுக்கு முற்றும் பொறுத்தலும் ஆகாது. மூக்கிற் கோபமும் ஆகாது. காமம் கூடாது. 'பொய்ம்மையாளரைப்

பாடக்கூடாது. மேற்கூறிய தவறான இயல்புகள் ஒரு புலவனிடம் இருக்குமானால் அவனைப் புலவன் என்னல் பொருந்தாது என்று தவறியல்பில் கூறியுள்ளார்.

**மரபியல்பு**

இவ்வியல்பு செவி வழிச் செய்திகளை ஆதாரமாகக் கொண்ட தமிழ் இலக்கிய வரலாறு ஆகும். இவ்வியல்பில் இடம் பெற்றுள்ள செய்திகளை இன்றைய ஆய்வாளர்கள் ஒப்பமாட்டார்கள். எனினும் சென்ற நூற்றாண்டில் புலவர்களைப் பற்றி வழக்கிலிருந்த செய்திகளை அறியத் துணைசெய்யும். இவ்வியல்பின் ஒவ்வொரு நூற்பாவும் ஒவ்வொரு கதையைக் கூறுகிறது. இங்குக் கூறப்பட்டுள்ளவர்களின் வரலாறுகள் புலவர் புராணத்துள் கூறப்பட்டுள்ளன.

**செயல்வகை இயல்பு**

இவ்வியல்பு ஒரு புலவன் செயல்பட வேண்டிய தன்மையை நான்கு வகைகளில் கூறுகின்றது.

> தொழில்நிலை, நடுநிலை, எதிர்நிலை, அருள்நிலை
> என்னும் நால்விதம் செயல்வகைப்பாற்றே (104)

என்பது சூத்திரம்.

புலவன் என்பவன் 'தமிழுக்கும் தனக்கும், தான் சார்ந்த சமயத்திற்கும், தன் இனத்தினருக்கும் தவறு உறாவண்ணம் செயல்படவேண்டும், (105) உலகர் சொற்களை முற்றிலும் தள்ளவோ, முற்றிலும் கொள்ளவோ கூடாது. (106) புலவன் நடுவு நிலைமையோடு இருக்க வேண்டும்' (114) இல்லையெனில் 'தேமாங்கனி உறழ் புலமையை, சுண்டைக்காய் நிகர் புலமை வென்றுவிடும். (122)

> இடம்பொருள் ஏவல் அறிந்து செயல்படும் திறமை வேண்டும்.
> எல்லாவற்றுக்கும் மேலாக இறையருள் வேண்டும்.

என்றிவ்வாறு புலமை இலக்கணம் புகல்கின்றது.

**புதியன புகுதல் தேற்ற இயல்பில் குறிப்பிடத்தக்க சிறப்பு**

"சொற்களுக்கு நிறம்காண்கிறார் சுவாமிகள். கவிதைச் சொல்லின் எளிமை அருமை நோக்கி வெண்மை, பளிங்கு, கருமை, செம்மை, பொன்னிறம் என ஐந்து நிறங்களை வகுத்து, அவற்றை

வெண்மை, செம்மை, கருமை என்ற மூன்றில் அடக்குகிறார். இயல், இசை, நாடகம் என்ற முப்பிரிவில் இயற்றமிழ் பொதிய மலைச் சோலை போல் இருண்டு கருமையாகவும், இசைத்தமிழ் ஓரிடத்தில் தங்காமல் சுற்றிக் கொண்டிருக்கும் தவசிகளின் ஆடையைப் போலச் செம்மையாகவும், நாடகத்தமிழ் மலை யருவியைப் போல வெண்மையாகவும் இருக்க வேண்டும் (171) என்னே சுவாமிகளின் கற்பனை, இயற்கையில் மூழ்கித் திளைத் திருக்கிறார் என்னத் தெரிகிறது.

இதன்றி அன்றாட வாழ்வில் அனைவரும் பயன்படுத்தும் சொற்களுக்கு நிறம் கூறுகிறார். ''பாமரர்க்கும் புரியும்படியான சொற்கள் வெண்ணிறம். கற்றவர் அறிவாற்றலுக்கேற்பப் பொருள் கொள்ளும் வகைச் சொற்கள் பளிங்கு நிறம்; பேயோடு குன்றையும் பார்க்கவல்ல திருமுருகாற்றுப்படை போன்ற தொன்மையான சொல்லாட்சி கொண்டு புரிந்து கொள்ளற்கு அருமை உடையன கருமை நிறம். இறைவன் திருவருளை உணர்த் தும் சொற்கள் செம்மை நிறம். நால்வர், ஆழ்வார் நவின்ற சொற்கள் பொன்நிறம்.(7-11) காட்டாக, ''உணவைச் சோறு எனல் வெண்மை; அன்னம் எனல் பளிங்கு; பதம் எனல் கருமை: அமுது எனல் செம்மை; அடிசில் எனல் பொன்மை.(12) 'பளிங்கு நிறமும், பொன் நிறமும் முறையே வெண்மை, செம்மையில் அடங்க முத்தமிழ் என்றனர். (14)

இவ்வாறு சுவாமிகள் புதிதாக புலமை இலக்கணம் கூறியது போல சொற்களுக்கு நிறம் கூறியுள்ளதும் புதியன புகுதல் ஆகும்

**புலவர் புராணம்**

இறையருள் பெற்ற புலவர்களின் வரலாறுகளை இயம்பும் நூல். இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் காண்டலன்றி, நம் சுவாமிகள், இலக்கணம் கண்டு அதற்கு இலக்கியம் கண்டுள்ளார். அந்த இலக்கணம் புலமை இலக்கணம்; இலக்கியம் புலவர் புராணம். இதைச் சுவாமிகளே புலவர் புராணப் பொதுப் பாயிரத்தில்

''திருவுருமா மலைத்தலத்தில் ஆறுவகை
இலக்கணமும் சென்னையூரில்
பொருவில்பிள் ளைக்கவியும் அரங்கேற்
றியநாள் உலகமுற்றும் புகழ்தற்கான

பெருவிளையாட் டியற்றியதோர் பெண்கொடியார்
வெண்கிளியே! பேதையேனால்
அருள்வளமைப் புலவர்கதை அத்தனையும்
உலகறிய அறிவிப்பாயே (10)

என்று கூறுகிறார்.

புலமை இலக்கணம் பாடிய பின்பே புலவர் புராணம் பாடியுள்ளார். எனவே "புலவர் புராணத்தின் பிழிவை இலக்கண மாக்கிப் புலமை இலக்கணம் எனச் சுவாமிகள் புகுத்தியுள்ளார் (சி.பா. அணிந்துரை ப.4) என்பாரின் கூற்றுக்கும் இதுவே மறுப்பாகிறது எனலாம். இதையே உரையாசிரியர் நாகராசன் அவர்களும் 102 ஆம் சூத்திர உரையில் வலியுறுத்துகிறார்.

புலவர் புராணம் திருநெறிய தமிழ்ப் பாடல்கள் இயற்றிய சான்றோர் வரலாற்றைக் கூறும் வரலாற்று இலக்கியம். வழி வழியாக வரும் வரலாறுகளையும், தாம் கேட்டுணர்ந்த வற்றையும் அடிப்படையாகக் கொண்டு பாடப் பெற்றது. 'ஆதாரம் உலகோர் நவில்மொழி' (சிறப்புப்பாயிரம்.25) என்று சுவாமிகள் கூறுகிறார். 'விவரமாகக் கேட்டறிந்தேன். கேட்டளவில் ஐயமின்றிச் சொன்னேன். எது நிசமோ? எது பொய்யோ? இறைவன் தேர்வான் (மெய்கண்ட தேசிகர் சருக்கம். 15) 'இன்னம் வெகுவாய் அவர்தம் மகிமை சொல்ல எனக்காசை; விபரம் ஒன்றும் எய்தவில்லை. கற்பனையால் சில புலவர் போன்று இயம்பிடுதல் என் தகுதிக்கு ஏற்றதன்றே (மூன்றாழ்வார் சருக்கம்.11) புவி சொல்லிடக் கேட்டன மட்டும் சொன்னேன் (குருநமச்சிவாயர்17) 'நானறிந்த அளவில் ஓதினேன்' (மெய்கண்ட தேசிகர் சருக்கம் 78) என்று பல இடங்களில் கூறிச் செல்கிறார்.

உலகோர் மொழிபொருளை முழுதும் தள்ளவோ, முழுதும் கொள்ளவோ கூடாது என்ற புலமை இலக்கணத்திற்கு அவரே இலக்கியமாக ஆகிறார் எனலாம்.

**புலவர் புராணத்தின் தேவை**

புலவர் புராணம் கால ஆராய்ச்சிக்கு உட்படவில்லை. சிவனடியார்கள், திருமாலடியார்கள், முருகனடியார்கள், முத்துலுக்கப்புலவர் என்று பலரின் வரலாற்றையும் கூறுவதால்

சமயங்கடந்தும் விளங்குகின்றது. தெய்வ அருள் பெற்ற புலவர்களைப் பாடுவதே சுவாமிகளின் நோக்கம் என்றாலும்கூட அறிவுத்தன்மையுள்ள புலவர்களையும் பாடியுள்ளார். வரலாற்றுக் கண்கொண்டு நோக்கினால் சில பொருந்தாமைகளைக் காண முடிகிறது. இருப்பினும் புலவர் பெருமக்களின் வாழ்க்கை வரலாறுகள் மறைந்துவிடக் கூடாதே என்ற ஆற்றாமையோடு தாம் கேட்ட செய்திகளை வைத்தாவது பதிவு செய்து விட வேண்டும் என்றெண்ணியதாலேயே புலவர் புராணம் தோன்றியது எனலாம்.

'நவரசப் பாவலர் பெருமை மறைதல் புரை
ஆச்சிரியம் ஞாலத்தின்றே'
(நெற்குன்றவாண முதலியார் சருக்கம்.29)

என்கிறார். தவிர ஒரு பெரிய நூலில் சில பொருந்தாமைகள் இருப்பதைப் பெருங்குறையாகக் கொள்ளலாகாது.

பல்வகை நயங்களும் பாராது ஒருவிதக்
குற்றம் கருதிக் குதிப்பது புலமைக்கு இழிந்த பான்மை
அன்றோ (62)

என்பதல்லவா புலமை இலக்கணம்? சுவாமிகள் புலமை இலக்கணத்திற்குப் பல இடங்களில் இலக்கியமாக விளங்குகிறார் என்னில் மிகையாகாது.

**புராணம் புகன்றது**

''புலவோர் புகழ் எல்லாம் அறிந்த மட்டில் புகலினும் அஃதோர் காவியம் ஆகும் (122) என்று கூறி விருத்தங்களால் புலவர் புராணத்தைப் பாடியருளினார். இத்தகைய நூலைப் படைக்க வேண்டும் என்ற விருப்பம் அவருக்கு நீண்ட நாட்களாகவே இருந்து வந்தது என்பதும், பல ஆண்டுகட்குப் பின்பே அவ்வெண்ணம் முற்றுப்பெற்றது என்பதும்

''நூற்பெயர் யாதென்னில் உண்மைப் புலவர் புராணம்
அது ஆம்:
நுவலும் இடம் திரு நெல்லை நகர்'' (6)

என்று சிறப்புப் பாயிரத்திலும்,

நெல்லையினில் துவக்கும் இது நெடுநாள் என்மனக் கருவில் நின்று என்றும் எல்லையயில் பாமாலை இனம் பிறந்ததற்பின்

மாதை நகரிடத்து இந்நாளில் குல்லை மலர்க்குகன் கடவ நடை தரும் என்று இவர் கூறுவதால் அறிய முடிகின்றது.

**பெரியபுராணம்-ஒப்பு**

அகத்தியர் முதல் முத்துலுக்கப் புலவர் வரை தனித்தனியே வரலாறு கூறும் இவர் அடுத்து, பல தெய்வப் புலவர் சருக்கம் அறிவுத் தன்மைப் புலவர் சருக்கம், கண்கண்ட புலவர் சருக்கம்' எனத் தொகையாகப் புலவர் வரலாறுகளைக் கூறுகிறார். தனியடியார், தொகையடியார் பற்றிக் கூறும் பெரிய புராணத்தோடு ஒப்பு நோக்கத்தக்கதாக உள்ளது. இவரது மகனார் செந்தில் நாயக சுவாமிகள், மகன் தந்தைக்கு ஆற்றும் உதவியாக இறுதியிலே குலசேகர ஆழ்வார் சருக்கத்தைக் கூறுகிறார். ஒவ்வொருவர் வரலாற்றையும் கருத்தாழமும், கவிச்சுவையும், கற்பனையும் கொண்டு அமைத்துள்ளார். நகைச்சுவைக்கும் இடமுண்டு.

**நகைச்சுவை**

"ஒருபுலவன் தன் வயிற்றுவலி நீங்க வேண்டி திருப்புகழைச் சொற்சோர்வுபடப் படித்தான். அது கேட்ட முருகன் 'உன் நோய் இன்றுடன் தீர்ந்துவிட்டது. தொண்டனுடைய பாடலைச் சிதைக்காதே' என்று கூறி அவனது நோயை நீக்கினான்" (அருணகிரிநாத சருக்கம்.79) என்பது நகைச்சுவையாக உள்ளது.

**இலக்கணமும் இலக்கியமும்**

இதுவரை மிகச் சுருக்கமாக புலமை இலக்கணம், புலவர் புராணம் பற்றித் தனியே கண்டோம். இனி இலக்கணத்திற்கேற்ப இலக்கியம் அமைந்துள்ளமையைக் காண்போம். இலக்கணத்தில் மரபியல்பிலும், செய்வகை இயல்பின் நான்காவது கூறாகிய அருள்நிலையிலும் கூறப்பட்ட வரலாறுகள் அனைத்தும் இலக்கியத்தில் அமைந்துள்ளன. இறைவன் துணையால் பெறும் வெற்றி மரபியல்பிலும், இறைவன் துணையின்மையால் பெறும் தோல்வி அருள்நிலையிலும் கூறப்படுகிறது. என்றாலும் மரபியல்பே இத்தகைய காவியத்தை எழுதவேண்டுமென்ற உணர்ச்சியைத் தூண்டியிருக்கலாம். பெரியபுராணத்திற்குத் திருத்தொண்டத் தொகை போல மரபியல்பு புலவர் புராணத்திற்கு அடிப்படையாகிறது எனலாம்.

இதில் பாடப் பெறுபவர்கள் மன்னரைக் காட்டிலும் சிறந்தவர்கள் என்றும் தாமும் அத்தகைய அருட்புலமையையே குறிக்கோளாகக் கொண்டு அடைய சோர்வின்றி முயற்சி செய்தல் சிறப்பு என்றும் அனைவரும் உணரவேண்டும் என்பதே ஆசிரியரின் நோக்கம். "புலமையை இழிவென்பார் நாணும் பொருட்டும், நண்ணுவார் நெஞ்சம் களிப்படையும் பொருட்டும், அவ்வாறு விரும்புபவர்கள் இவ்வகையாகத் தாமும் இயற்ற வேண்டும் என்று ஊக்கங்கொண்டு முயற்சியைக் கைக்கொளல் பொருட்டுமே மரபியல் இவ்வணம் புகன்றோம்" (103) என்கிறார் சுவாமிகள். காரண காரியப் புலமையே பூரணம் என்பதல்லவா சுவாமிகள் வாக்கு. மரபியல்பில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகள் அனைத்தையும் புலவர் புராணம் என்ற ஒரே நூலில் காணலாம்.

**பொருந்துமாறு**

புலவர்களுக்கு தெய்வத்துணையே உறுதுணை. தெய்வ அருளால்தான் புலமை பெற இயலும் என்ற இலக்கணத்தின்படி புலவர் புராணப் புலவர்கள் அனைவரும் இறையருள் பெற்றுப் பாடியவர்கள். 'எனதுரை தனதுரை,' 'கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன எந்தை என்று பலவாறாகப் புலவர்கள் கூறுவதை அவர்கள் வரலாற்றிலே காணமுடிகிறது. "காலமழை எனப் புதுக்கவி கழறல், தம் சொற்படி நடக்கக் காண்டல்.(25) இறைவனைக் கண்முன் காணல்"(26) என்பதற்கேற்ற நிகழ்வுகளை நால்வர், ஆழ்வார்கள், அருணகிரியார், ஔவையார் போன்ற பலர் வரலாற்றில் காணலாம்.

'கணபதி, முருகன், உமை, சிவன், கலைமகள், அலைமகள், திருமால் என அனைத்துக் கடவுளரையும் புலவராக்கி அவர்கள் தம்மை வணங்கிய புலவர்கட்கு அருளிச் செய்த பான்மையையும் கூறுகிறார். எனவே 'தமிழ்ச்சுவை அறியாத தெய்வம் உளதோ (30) என்கிறார். "பொதிய மால் வரைக் கடவுள் மாமுனிவரைக் கைத்தொழுதால் புலமைத் தேற்றம் வருமே" (34) என்று இலக்கணத்தில் பாடியவர் புலவர் புராண இலக்கியத்தில் அகத்தியரையும் அவரது பொதிய மலையையுமே முதலில் பாடித் தொடங்குகிறார். 'எள்ளளவும் புலமைக்கு நெல்லளவுச் செருக்கு கூடாது. (37) 'காகம்போல் கலந்து வாழவேண்டும்; நாய் போல் பகைத்துவாழக் கூடாது, (38) தேறாப்புலவனைச் சிந்தைநோகச்

செய்யக்கூடாது; "தோல்வியடைந்தாரை மூளியாக்கல், காது கொய்தல் ஆகாது" (42,43) போன்ற இலக்கணங்களுக்கு வில்லிபுத்தூரார் வரலாற்றைக் கொள்ளலாமன்றோ?

'தன்சமயத் தலைவனைப் பாடியே நூல் பாட வேண்டும், பொது நூற்சொல்லையும் போற்றுநர் மொழியையும் பாராட்டிப் பாடுவது புலவனுக்கு இலக்கணம் என்றதன் வண்ணம் தம் வழிபடுகடவுளாகிய முருகனைப் போற்றி நூலைத் தொடங்கி பெரியோர் மொழி கேட்டே புலவர் புராணம் இயற்றியுள்ளார் என்பதை முன்பே கண்டோம்.

இறைவன் புகழன்றி மற்றாரைப் பாடல் சிறப்பன்று என்பதற்கேற்ப புலவர் புராணத்தில் பாடப்பெறும் அனைவரும் இறைவனைப் பாடிப் பரவி அருள் பெற்றுய்ந்தவர்கள்.

**உன்னியக் கருமம் உடனே முடிக்கம் புலமை**

உன்னிய கருமம் உடனே முடிக்கம் புலமை, காரைக் காலம்மையார், ஔவையார், நால்வர் ஆழ்வார் போன்ற பெரு மக்களிடம் காணமுடிகிறது. புலவர்கள் நடுநிலை உடைய சான்றோராதல் வேண்டும் என்றதன்படியே புலவர் புராணத்தை அமைத்துள்ளார்.

> 'அந்நாட்புலவர்க்கு அருளிய பெரும்பேறு இந்நாட்
> புலவர்க்கு இல்லை' (111)

என்பதில் எவ்வளவு தீர்க்க தரிசனம்?

**விரிப்பின் பெருகும்**

முற்காலப் புலவர்களிடையே திருவருள் விளையாடிய தன்மையை புலமை இலக்கணம் அருள்நிலைப் பரிவில் கூறுகிறார்.

அருணகிரியார், வில்லியார், கம்பர், அம்பிகாபதி, அமராவதி. சோழன் குகை நமச்சிவாயர், (இறந்த சினை ஆடு உயிர்பெற்று இரண்டு குட்டிகளைப் பெற்றது) கம்பர் நெல் கூலி பெற்றது, குமரகுருபரர் பேசும் திறம் பெற்றது. அவ்வை, உப்பை, அதிகன், உறுவை, கபிலர், வள்ளி, வள்ளுவர் என்போர் பிறந்தவுடன் பாடியமை பற்றிய செய்திகளைக் கூறுகிறார். இப்படி ஒவ்வொரு

வராகத் தனித்தனியே இலக்கணத்துள் பொருந்துமாற்றைக் கூறலாம். எனினும் விரிப்பின் பெருகும் என்றஞ்சியே தனிவரலாற்றுப் புலவர் 75 பேரையும், தொகைப் புலவர் மூவகையினரையும் தனித்தனிக் கூறாது வேண்டும் இடங்களில் சிலர் மட்டுமே கையாளப் பட்டுள்ளனர்.

### வீடுபேறு

சுவாமிகள் புலமை இலக்கணம் பாடியபின்பே புலவர் புராணத்தைப் பாடியுள்ளார். இதனைக் கற்பார் இதன்வழி ஒழுகிக் கருணைமிகப் பெற்று மாதவம் முயன்று, உலகிற்கு நலம் பயப்பதாகிய அருஞ்செயல்களைப் புரிந்து பிறவியின் முழுப் பயனாகிய வீட்டின்பத்தை அடைதல் வேண்டும் என்ற சுவாமிகளின் எண்ணத்தைச் செயல்படுத்துவதே நாம் அவருக்குச் செய்யும் வழிபாடாகும்.

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி" (குறள்: 358)

# அறுவகையிலக்கணத்தில் மெய்ம்மயக்கம்

தி. நடராசன்

தண்டபாணி சுவாமிகளின் அறுவகை இலக்கண நூலில் எழுத்திலக்கணத்தில் புணர்ச்சியியல்பு என்னும் பகுதியில் மெய்ம்மயக்கம் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. சுவாமிகள் கூறும் மெய்ம்மயக்கம் பற்றிய செய்திகளைத் தொல்காப்பியரால் கூறப்படும் மெய்ம்மயக்கம் பற்றிய செய்தி களுடன் ஒப்பிட்டு விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சுவாமிகளின் அறுவகை இலக்கணத்தில் பதினாறு நூற்பாக் களில் மெய்ம்மயக்கம் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## 1. உடனிலை மெய்ம்மயக்கு

சுவாமிகள் மெய்ம்மயக்கம் பற்றிய முதல் நூற்பாவில் க, ச, த, ப என்னும் ஐந்து மெய்களும் தம்மொடு தாம் மயங்கி வரும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

> 'க ச த ப வ மெய் ஐந்தும் தம்பின்
> தம்முயிர் மெய்யே வருமா றவிர்தரும்' (அ.வ.இ, 122)

(எ.டு) -க்க- பக்கம், -ச்ச- அச்சம், -த்த- முத்தி -ப்ப- கப்பல், -வ்வ- கொவ்வை.

எடுத்துக்காட்டுகள் சுவாமிகளால் ஒவ்வொரு நூற்பாவுக்கும் கொடுக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

சுவாமிகளால் இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தி தொல் காப்பியராலும் கூறப்பட்டுள்ளது. ஆனால் தொல்காப்பியர் (தொல். எண். 30) பதினெண் மெய்களுள் ர, ழ ஒழிந்த ஏனைய பதினாறு மெய்களும் தம் முன்னர்த் தாம் வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார். தொல்காப்பியர் குறிப்பிட்ட உடனிலை மயக்கம் பற்றிய செய்தி சுவாமிகளால் பல நூற்பாக்களில் கூறப் பட்டுள்ளது. ர, ழ ஒழிந்த பதினாறு மெய்களும் தம் முன்னர்த்

தாம் வந்து மயங்கும் என்பதில் தொல்காப்பியர்க்கும் சுவாமி களுக்கும் வேறுபாடு இல்லை.

2. அடுத்து, சுவாமிகள் ர, ழ என்னும் மெய்கள் தம் முன்னர்த் தாம் வந்து மயங்கா எனக் குறிப்பிட்டுள்ளார்.

'ரழ ஒற்றுத் தம்உயிர் மெய்யே தழுவா
வந்திசே யுளனெனின் வருமுதா ரணமே' (அ.வ.இ, 123)

தமிழ்மொழியில் ர, ழ என்பன தம்மொடுத் தாம் மயங்கா தாகையால் அதற்குச் சான்றுகள் இல்லை என்பதை உணர்த்த சுவாமிகள் நல்லதோர் உவமை வழி வெளிப்படுத்தியுள்ளார். 'வந்தி சே யுளனெனின் வருமுதாரணமே' இக்குறிப்பில் வந்தி (சேந்தன் திவாகரம், ப. 38) என்றால் 'மலடி' எனப் பொருள். மலடிக்கு மகனுளனாயின் இவற்றிற்கும் சான்றுகள் உளவாம் என்பது மேற்கூறிய தொடரின் பொருள் ஆகும்.

'ர, ழ' என்பன தம்முடன் தாம் மயங்கா என்ற செய்தி தொல்காப்பியராலும் (தொல். எ. 30) கூறப்பட்டுள்ளது.

3. ஈரொற்றுடனிலை

சுவாமிகள் ய், ர், ழ் என்னும் ஒற்றுகள் முதலாக நின்று அவற்றின் பின்னர்ச் சிற்சில ஒற்றுகள் புணர்ந்து நிற்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

'யரழ ஒற்றுக்கள் அவற்றின் பின்னர்
ஒற்றும் சிற்சில புணர நிற்பன' (அ.வ.இ, 124)

(எ.டு) -ய்ம்ம்- மெய்ம்மறை, -ர்த்தி- நிவிர்த்தி -ழ்ச்ச்- புகழ்ச்சி

இவை சுவாமிகள் காட்டிய எடுத்துக்காட்டுகள். சுவாமிகள் இந்நூற்பாவில் ய, ர, ழ ஒற்றுகளின் பின்னர் வரும் மெய்கள் எவை எவை எனக் குறிப்பிடவில்லை. மேலும் எடுத்துக் காட்டுகளிலும் மெய்ம்மறை என்பது இரண்டு சொற்களாலானது. நிவிர்த்தி என்பது வடசொல்.

தொல்காப்பியர் ய், ர், ழ் என்னும் மூன்று மெய்யும் முதலா வதாக அமைய அவற்றின் பின்னர் க், ச், த், ப், ங், ஞ், ந், ம் என்பன ஈரொற்றாய் அமைந்து வரும் என்று கூறியுள்ளார்.

'யரழ வென்னு மூன்று முன்னொற்றக்
கசதப ஙஞநம வீரொற் றாகும்' (தொ. எ. 48)

தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்ட இம்மெய்ம்மயக்கங்களுள் பலவற்றிற்கு இலக்கியங்களில் சான்றுகள் காணப்படவில்லை. மற்றும் தொல்காப்பிய உரையாசிரியர்களும் பலவற்றிற்குப் புணர்மொழிகளையே சான்றுகளாகக் காட்டியுள்ளனர். எனவேதான் சுவாமிகளும் தம்கால மொழியினைக் கருத்திற் கொண்டு எந்தெந்த மெய்கள் வந்து மயங்கும் எனக் கூறாமல் சிற்சில எனக் கூறினார் போலும்.

### 4. வேற்று நிலை-மெய்ம்மயக்கம்

ட், ற் என்னும் மெய்களின் பின்னர் ட், க், ச், ப் என்னும் மெய்கள் வந்து புணரப் பெறும்.

> 'டற ஒற்றின் பின்அவ் வினத்தொடு கசப
> உயிர் மெய் புணரும்' (அ. வ. இ, 125)

(எ.டு) -ட்ட்- கோட்டை, -ட்க்- கட்கம் -ட்ச்- வெட்சி,-ட்ப்- திட்பம் -ற்ற- கற்றா, -ற்க்- நற்குறி -ற்ச்- புற்சுனை, -ற்ப்- அற்பம்.

ட், ற் என்பன க், ச், ப் என்பவைகளோடு மயங்கும் என்பதைத் தொல்காப்பியரும் (தொல். எ. 23) குறிப்பிட்டு உள்ளார்.

### 5. ஙகர மெய்

சுவாமிகள் ஙகர ஒற்றின் பின்னர் ங், க் என்ற இரண்டும் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

> 'ஙகர ஒற்றின் பின்அவ் வினத்தொடு ககர
> உயிர் மெய் தோன்றும்' (அ. வ. இ, 126)

(எ.டு) -ங்ங்- இங்ஙனம், -ங்க- கங்கை தொல்காப்பியரும் (தொல். எ. 25) -ங்ங்-, -ங்க்-

என்ற மயக்கங்களைக் கூறியுள்ளார்.

### 6. ஞகர மெய்

சுவாமிகள் ஞகர மெய்யின் பின்னர் ஞ், ச் என்பவைகள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

> 'ஞகரமெய்ப் பின்அவ் வினத்தொடு சகர
> உயிர் மெய் ஒன்றும்' (அ. வ. இ, 127).

(எ.டு) -ஞ்ஞு- எஞ்ஞான்று, -ஞ்ச்- தஞ்சம்

இச்செய்தியும் தொல்காப்பியரால் கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல்காப்பியர் (தொல். எ. 25) ஞகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். இம் மயக்கத்தினைச் சுவாமிகள் குறிப்பிடவில்லை. -ஞ்ய்- மயக்கம் சுவாமிகள் காலத்துப் பெரு வழக்கில்லாமல் இருந்திருக்கலாம்.

## 7. ணகர மெய்

சுவாமிகள் ணகரத்தின் பின்னர் ண், க், ச், ட், ப், ஞ், ம், வ் என்பன வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

'ணகர உடற்பின் அதனொடு கசடப
ஞமவத் தோன்றும்' (அ. வ. இ, 128)

(எ.டு) -ண்ண்- பண்ணை, -ண்க்- எண்கு -ண்ச்- புண்சேர், -ண்ட்- பிண்டம் -ண்ப்- பண்பு, -ண்ஞ்- விண்ஞானம் -ண்ம்- பண்மறை, -ண்வ்- தண்வான்.

சுவாமிகளால் கூறப்பட்ட இம்மெய்ம்மயக்கம் தொல் காப்பியராலும் (தொல். எ. 27) கூறப்பட்டுள்ளது. மேலும் தொல்காப்பியர் ணகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார். அதற்குத் தொல்காப்பிய உரையாசிரியர் கள், மண்யாது, மண்யாறு என்பவைகளைக் காட்டாகக் காட்டுவர். சுவாமிகள் -ண்ய்- மயக்கத்தைச் சுட்டவில்லை.

## 8. நகர மெய்

சுவாமிகள் நகர மெய்யின் பின்னர் ந், த் என்பன வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார்.

'நகர ஒற்றுடன் அவ்வுயிர் மெய்யும்
தகர வுயிர்மெய்யும் சார்வதே தகுதி' (அ. வ. இ, 129)

(எ.டு) -ந்ந்- எந்நா, -ந்த்- கந்தன்

இந்நூற்பாச் செய்தியினையும் தொல்காப்பியர் (தொல். எ. 26) கூறியுள்ளார். ஆயினும் தொல்காப்பியர் நகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார். சுவாமிகள் -ந்ய்- மயக்கத்தைக் குறிப்பிடவில்லை.

## 9. மகர மெய்

சுவாமிகள் மகரத்தின் பின்னர் ம், ப், வ் என்பன வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார்.

'மகர ஒற்றுடன் அதன்உயிர் மெய்யும்
பகர வகர உயிர்மெய்யும் புணரும் (அ. வ. இ, 130).

(எ.டு) – ம்ம் – எம்மை, – ம்ப – கும்பன்
– ம்வ் – சேதம் வராது.

இச் செய்தியும் தொல்காப்பியர் (தொல் எ. 27) கூறிய தினின்றும் வேறுபடவில்லை. ஆயினும் தொல்காப்பியர் மகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார். சுவாமிகள் – ம்ய் – மயக்கத்தைக் குறிப்பிடவில்லை.

## 10. னகர மெய்

சுவாமிகள் னகரத்தின் பின்னர் ன், க், ச், ப், ற், ஞ், ம், வ் என்னும் மெய்கள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். 'னகர உடலுடன் அவ்வுயிர் மெய்யும் க, ச, ப, ற ஞமவவ் வருக்கத் துயிர் மெய்யும் வருவன...' (அ. வ. இ, 131)

(எ.டு) – ன்ன் – புன்னை, – ன்க் – வன்கண்மை
– ன்ச் – நின்சூல், – ன்ப் – இன்பம்
– ன்ற் – குன்று, – ன்ஞ் – முன்ஞானம்
– ன்ம் – பொன்மணி, – ன்வ் – பின்வரல்

இந்நூற்பாச் செய்தியும் தொல்காப்பியரால் (தொல். எ. 27) கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல்காப்பியர் னகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் கூறியுள்ளார். சுவாமிகள் – ன்ய் – மயக்கத்தைக் குறிப்பிடவில்லை.

## 11. யகர மெய்

சுவாமிகள் யகரத்தின் பின்னர் ய், க், ச், த், ப், ந், ம், வ் என்னும் மெய்கள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். 'யகர ஒற்றொ(டு) அவ்வுயிர் மெய்யும் க ச தப நம வ வ் ஏழாம் வருக்கத்து உயிர்மெய்யும் இசைவுறும்' (அ. வ. இ, 132)

(எ.டு) – ய்ய் – மெய்யன், – ய்க் – பொய்கை
– ய்ச் – செய்சால், – ய்த் – பொய்தாள்

- ய்ப் - எய்போர், - ய்ந் - பொய்நா
- ய்ம் - நொய்மா, - ய்வ் - நெய்வோன்

இந்நூற்பாவில் கூறப்பட்டுள்ள செய்தியும் தொல்காப்பிய ரால் (தொல் எ. 29) கூறப்பட்டுள்ளது ஆயினும் தொல் காப்பியர் யகரத்தின் பின்னர் ஙகரமும், ஞகரமும் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். - ய்ங் -, - ய்ஞ் - மயக்கங் களைச் சுவாமிகள் குறிப்பிடவில்லை.

## 12. ரகர மெய்

சுவாமிகள் ரகத்தின் பின்னர் க், ச், த், ப், ஞ், ந், ம், வ் என்னும் மெய்கள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். 'ரகர மெய்யுடன் கசதப ஞநமவ க்கு உரிய உயிர்மெய் ஒன்றித் திகழும்' (அ. வ. இ, 133)

(எ.டு) - ர்க் - வளர்கை, - ர்ச் - உயர்சீர்
- ர்த் - குளிர்தாள், - ர்ப் - அவர் போல்
- ர்ஞ் - ஊர்ஞானி, - ர்ந் - ஓர்நாரி
- ர்ம் - நேர்மாரன், ர்வ் - நீர்வாரி

இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தி தொல்காப்பியரா லும் (தொல். எ. 29) கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல்காப்பியர் ரகரத்தின் பின்னர் ஙகரமும், யகரமும், வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். - ர்ங் -, - ர்ய் - மயக்கங்களைச் சுவாமிகள் குறிப்பிடவில்லை.

## 13. லகர மெய்

சுவாமிகள் லகரத்தின் பின்னர் ல், க், ச், ப், வ் என்னும் மெய்கள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். 'லகரமெய் யுடன் அதுட் புகும்உயிர் மெய்யும் சமவக் குட்புகும் உயிர்மெயும் கவன்றரும்' (அ. வ. இ, 134)

(எ.டு) - ல்ல் - சொல்லல், - ல்க் - பல்கணி
- ல்ச் - வெல் சேந்தன், - ல்ப் - நவில்பா
- ல்வ் - செல்வம்.

இந்நூற்பாவில் கூறப்பட்டுள்ள செய்தி தொல்காப்பிய ராலும் (தொல். எ. 24) கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல் காப்பியர் லகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக்

கூறியுள்ளார். சுவாமிகள் - ல்ய் - மயக்கத்தைக் குறிப்பிட வில்லை.

## 14. ழகர மெய்

சுவாமிகள் ழகரத்தின் பின்னர் க், ச், த், ப், ஞ், ந், ம், வ், என்னும் மெய்கள் வந்து, மயங்கும் எனக் குறிப் பிட்டுள்ளார்.

> 'ழகர ஒற்றும் ரகர மெய் போன்று
> க ச த ப ஞநம - வக் காண உயிர்மெய்
> முன்ன ரவிர்தரும்'. (அ. வ. இ, 135)

(எ.டு) - ழ்க்- ஆழ்கடல்,- ழ்ச்- வாழ்சுரர்- ழ்த்- ஏழ்திரை, -ழ்ப்- வீழ்பனி- ழ்ஞ்- அகழ் ஞாலம்,- ழ்ந்- திகழ்நாகம் -ழ்ம்- பிறழ்மணி, -ழ்வ்- இகழ்வோன்

இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தியும் தொல்காப்பியரால் (தொல். எ. 29) கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல்காப்பியர் ழகரத்தின் பின்னர் ஙகரமும், யகரமும் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். சுவாமிகள் -ழ்ங்-, -ழ்ய்- மயக்கங்களைக் குறிப்பிடவில்லை.

## 15. ளகர மெய்

சுவாமிகள் ளகரத்தின் பின்னர் ள், க், ச், ப், வ் என்னும் மெய்கள் வந்து மயங்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

> 'ளகர மெய்யும் லகர மெய்போல
> தானும் கசபவ மெய்களும் பருகும்
> உயிர்மெய்கள் முன்னர் ஒளிரும்' (அ. வ. இ, - 136)

(எ.டு) -ள்ள்- கொள்ளை, -ள்க்- வெள்கல் -ள்ச்- அவள் சாடை, -ள்ப்- இவள் பார்வை -ள்வ்- கள்வன்

இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தி தொல்காப்பியராலும் (தொல். எ. 23) கூறப்பட்டுள்ளது. ஆயினும் தொல்காப்பியர் ளகரத்தின் பின்னர் யகரமும் வந்து மயங்கும் எனக் குறிப் பிட்டுள்ளார். சுவாமிகள் - ள்ய் - மயக்கத்தைக் குறிப்பிட வில்லை.

## 16. இடைநிலை - மெய்ம்மயக்கம்

சுவாமிகள் க், ச், ட், த், ப், ற் என்பவைகளின் பின்னர் அவைகளே வந்தும் ங், ஞ், ந் என்பவைகளின் பின்னர் ஒத்த வல்லெழுத்துகள் வந்தும் வ் என்பதின் பின்னர் அதுவே வந்தும் அமையும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

'பின்னர்ஓர் உயிர்மெய் வருமா றவிர்வன
கசட தபற ஙஞநவ மெய்கள்' (அ. வ. இ, 137)

(எ.டு) -க்க்- கொக்கு, -ச்ச்- கச்சி -ட்ட்- வட்டு, -த்த- பத்தி -ப்ப்- அப்பு, -ற்ற்- கொற்றி -ங்க்- கொங்கு, -ஞ்ச்- பஞ்சு -ந்த்- நந்து, -வ்வ் -செவ்வி

இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தி தொல்காப்பியராலும் (தொல். எ. 30, 25) கூறப்பட்டுள்ளது. சுவாமிகளால் இந் நூற்பாவில் கூறப்பட்ட செய்தி சுவாமிகளால் பல நூற்பாக் களில் முன்னரே கூறப்பட்டுள்ளது. அவ்வாறிருக்க ஏன் மீண்டும் இந்நூற்பா அமைக்கப் பட்டுள்ளது என்பது ஐயத்தை ஏற்படுத்துகிறது. மற்றும் நூற்பா அமைப்பிலும் வரிகள் மற்றைய நூற்பாக்களினின்றும் பிறழ்ந்த நிலையில் உள்ளன என்பதும் கவனிக்கக் தக்கதாகும். இது பிற்காலத்து நூல் பதிப்பித்தவர்களின் ஆக்கமோ எனவும் எண்ண இடமளிக்கிறது.

மெய்ம்மயக்கச் செய்திகளைப் பொறுத்தவரை தொல் காப்பியர் தொகுத்துக் கூறியவற்றைச் சுவாமிகள் விரித்துக் கூறியுள்ளார். மெய்ம்மயக்கங்களுக்குச் சான்றுகளைச் சுவாமி களே காட்டியுள்ளார் என்பது முன்னரே குறிப்பிடப்பட்டு உள்ளது. சான்றுகளாகச் சுவாமிகள் தனிமொழிகளையும் புணர்மொழிகளையும் காட்டியுள்ளார். மெய்ம்மயக்கம் தனி மொழியில் அல்லது புணர்மொழியில் அல்லது இரண்டிலும் அமைந்து வரும் என்பதைத் தொல்காப்பியரும் குறிப்பிட வில்லை. ஆனால் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் இளம் பூரணர் (தொல். இளம். எ. 23) மெய்ம்மயக்கம் தனிமொழிக்கும் புணர்மொழிக்கும் பொது என்பார். ஆனால் நச்சினார்க்கினியர் (தொல். நச்சர் எ. 23, 24, 27) தனிமொழிக்குரியது எனக் குறிப்பிடுவர். மொழி ஆய்வாளர்களுக்கும் இக்கருத்து உடன் பாடாகும். எவ்வாறாயினும் சுவாமிகளின் எடுத்துக்காட்டு

களிலிருந்து சுவாமிகளுக்கு ஒரு மொழி, புணர்மொழி என்ற இரண்டிலும் மெய்ம்மயக்கம் அமைந்து வரும் என்ற கருத்து உள்ளது என்பதை உணர முடிகிறது.

மெய்கள் பலவற்றின் பின்னர் யகரம் வரும் எனத் தொல் காப்பியர் குறிப்பிட்டுள்ளதைச் சுவாமிகள் குறிப்பிடவில்லை. இதற்குச் சுவாமிகள் காலத்து மொழி வழக்குக் காரணமாக இருக்கலாம்.

சுவாமிகள் மெய்ம்மயக்கம் பற்றி நூற்பாக்களில் மயங்கும் என்ற சொல்லுக்கு இணையாக அவிர்தரும், புணர நிற்பன புணரும், தோன்றும், ஒன்றும், சார்வதே தகுதி, வருவன, இசைவுறும், ஒன்றித் திகழும் கவின்றரும், ஒளிரும் எனப் பல சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மேலும் ஒரு மெய்யினைத் தொடர்ந்து வரும் மெய்யினைச் சுவாமிகள் உயிர்மெய் எனக் குறிப்பிடுவதும் நோக்கத் தக்க தாகும்.

# சுவாமிகள் விளக்கும் நால்வகை நெறிகள்

நந்தினி சண்முகலிங்கம்

'நிலைபேறு' என்பது 'நிலையால் வரும் பேறு' எனவும் 'நிலைத்த பேறு' எனவும் விளக்கம் உடையது. நிலையால் வரும் பேறு என்பது நிலைத்ததாக இருக்கலாமா என்பது நம்முன் எழும் வினா? நாம் நிலைபேறு உடையவர்களாக இருந்து பல பேறுகளை —இறைவன் தருவனவற்றை அனுபவிக்க வேண்டும்.

நிலைபேறு உடையவர்களாக ஆவதற்கும் இறைவன் தரும் பேறுகளை அனுபவிப்பதற்கும் நாம் சில படிநிலைகளைக் கைக் கொண்டாக வேண்டும். அதற்கு உரியனவே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு படிநிலைகள். இவைகள் 'மேல்நிலைத் தவம்' என்பதாக தண்டபாணி சுவாமிகளால் கூறப்படுகின்றன.

> ''மேனிலைத் தவமே செய்து வியனருட் பெறலே வேண்டித்
> தேனிலைத் தமிழின் மீதும் சினஞ்செயும் சிறியேன் றன்னை
> நானிலைச் சதக நன்னூல் நவின்றிடத் திருந்துகின்றோன்
> தானிலைத் திருநீறிந்தோர் சாத முன்னுரைத்துள்ளானே''
>
> (காப்புச் செய்யுள்)

என 'நானிநிலைச் சதகம்' என்ற நூலை, மேனிலைத் தவமாம் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியன விளக்குவதற்காகப் பாடுகிறார். ''நானிலை சதகம்'' என்ற நூலை எடுத்துக் கொண்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியன இக்கட்டுரையில் ஆராயப் பெறுகின்றன. உள் மேற்கோள் எண்ணிடப்பட்ட பாடல்களும் அந்நூலில் வருவனவே.

### மேல்நிலைத் தவம்

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியன கூற வந்த சுவாமிகள் முதற்கண் இரண்டு செய்திகளைத் தெளிவு படுத்துகின்றார். சரியை, கிரியை, யோகம், ஞானம் இவை நான்கும் தவமாகும். அவை நான்கும் ஒன்றினுக்கொன்று அதிகம்

என்கிறார். உயிர்கள் கொல்லாமை, புலையாடாமை ஆகிய இரண்டை அடிப்படையாகக் கொண்டே சரியை முதலான நெறிகளைக் கடைப்பிடித்து பிறவி தவிர வேண்டும் என்று கூறுகின்றார்.

சரியை முதலான நெறிகள் பிற உயிர்களை இணைத்த அடிப்படையில் உலகந் தழுவிய நெறியாக மலர வேண்டும் என்ற கருத்தில் சுவாமிகள் பேசுகின்றார்.

உயிரினங்களுக்கு உடம்பு உறைவிடமாக இருக்கின்றன. அதனை எண்ணிப் பார்ப்பவர்க்கே சரியை முதலாயின இனிய வாகும் என்கிறார். உறைவிடத்தை அதன் கணக்கை எப்படிக் கருதல் வேண்டும். கணக்கு கருதினால் பிணம் அருந்தா விரதம் கைகூடும் என்பது சுவாமிகள் கூறுவது.

கணக்கு அறிவானாக உள் நின்று இருக்கும் பரம்பொருளை நோக்கிச் சரியை, கிரியை முதலான நெறிகளைப் பேசுகின்றார் சுவாமிகள். இறைவன் உயிர்களின் நன்மை நோக்கி நன்மை என்பதாக நின்று உயிர்களில் இருந்து உயிர்களுக்காகப் பணியாற்றுகிறான். அவனால் உயிர்கள் நன்மை தாங்கிய-நன்மை நோக்கிய உயிர்களாக விளங்குகின்றன. எனவே அவைகளைக் கொல்லாமையும், புலையாடாமையும் வலியுறுத்தி,

''நல் உயிர்கட்கு கொல்லாமை புலையாடாமை'' (4)

எனப் பேசுகின்றார் சுவாமிகள். உயிர்களின் கூட்டத்தை உலக முழுமை நோக்கி இணைத்துக் காண்பதால் – பரம்பொருளை நோக்கிச் சரியை முதலாயின இயற்றுதலால்,

''மேனிலைத் தவமே செய்து வியன் அருள் பெறலே''

என்று காப்புச் செய்யுளில் பேசுகின்றார். உலகை இணைத்த அருள் அனுபவப் பேறாக, கொல்லாமை, புலாலாடாமை இரண்டின் அடிப்படையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியனவற்றைச் சுவாமிகள் 'மேல்நிலைத் தவம்' எனக் குறிப் பிட்டருளியுள்ளார்.

**சரியை நெறி**

தலயாத்திரை வருதல், புண்ணிய தீர்த்தமாடல், சிவன், திருமால், கணபதி, முருகன் ஆகிய தேவர்களை

"யாவரையும் ஆலயங்கள் தோறும் சேவித்தல்''. இயன்றவரை மெய்யடியார் என எண்ணி ஏவல் செய்தல், பாவம் செய்யாமை, பல விரதமிருத்தல், அதன் மூலம் உயிர்களுக்கு உதவல்.

''பல விரதாதிகள் முயன்று பாடுபட்டுச்
சீவர்களுக்கெந் நாளும் இதமே நாடித்
திகழ்வதனைச் சரியை எனச் செய்யலாமே'' (5)

எனச் 'சரியை' பற்றி அரிய நுட்பம் கூறுகிறார் சுவாமிகள். பலவிதச் செயல்களாலும் முயற்சியால் பாடுபட்டு உயிர்களுக்கு இனிமை நாட்டத்திற்குப் பயன்படுமாறு அமைவது 'சரியை' என்று கூறுகிறார்.

கோயில்களுக்குச் செல்லுங்கால், பலியிடும் ஆலயத்திற்குச் சென்று வணங்குதல் கூடாது என்று கூறுகிறார் சுவாமிகள். அதுமட்டுமின்றி சிவாலயத்திலும் கொல்லும் நிலை இருக்குமானால் அது பேய்ப்பீடமோ என்று

'பெருமை மலி சிவதலமானாலும் கொல்லும்
பிழையணுகில் பேய் வசிக்கும் பீடமாமே'' (6)

என்ற வரிகளால் கண்டிக்கிறார்.

ஆகம வேதங்களில் சொல்லப்படாத இறைவன் கோயிலாயினும் உயிர்ப்பலி இல்லாக் கோயிலாயினும் சென்று வணங்குதல் தருமமே. அப்படியின்றி உற்சவ நேரங்களிலேனும் உயிர் கொல்லும் கோயில் போகக் கூடாது. அதனால் தவம் முழுவதும் சிதறிப்போகும் என்று எச்சரிக்கிறார்.

கோயில் மூலமூர்த்தி தவிர பிற பரிவார தேவதைகளுக்குத் தான் பலி என்று சிலர் கூறினாலும் அதுவும் தவறே. அறியாமை உடையானை ஒழுக்கம் உடையான் துணையாகக் கொண்டால் ஒழுக்கமுடையான் ஒழுக்கத்திற்குப் பழுது வரும். அது போலவும், தீ வளர்க்க நெய் விடாது நீர் விட்டால் அணையுமாறு போலவும் கொலையானது கோயினுள் எவ்விதத்தும் கூடாது என்பர் (8)

பல தெய்வங்கள் காண யாத்திரை போதல்; ஒரே தெய்வத்தைப் பல இடத்தும் காண யாத்திரை போதல் ஆகியவற்றைக் காட்டிலும்,

"திகழும் ஒரு தலத்தினையே சேவிக்கின்ற
திவ்விய நன்னிலையுடையார் சிலர் மிக்கேற்றம்"

என்றவாறு ஒரே ஆலயப் பணி தேர்தலும்,

"தேகத்தால் என்ற பணி செயலே மேலாம்" (6)

என உடலால் இயன்ற பணி செய்தலும் கூறுகின்றார்.

"ஆலயத்தின் பணி முழுதும் சரியையேயாம்" (11)

என்று கூறும் சுவாமிகள், பலன் பெற அடியவர் வேடம் தெய்வ வடிவாகக் காணப்பெறல் வேண்டும் என்பார்.

"பாபமற வேண்டுமெனச் சுற்றிச் சுற்றிப்
பணிந்தெழுவார் உலகிடத்திற் பலபேர் கோயில்
தீபமிடத் தூபமிட மெழுகக் கூட்டச்
செழுமலர் மாலிகை யமைக்கத் தெரிவோர் சில்லோர்
தாபதரும் தெய்வ வடிவென்னக் காண்பார்.
சரியையே பலன் கொடுக்கும்."

என்பது தொண்டர் வேடத்தில் சரியையின் உயர்வு நிலை காணப்படும் என்றதாகும்.

"புகலும் அந்தச் சாலோகம் போற்றுந் தெய்வ
மாலோகந்தனிற் குடியாம் அதுவேயாகும்" (14)

என, போற்றுந் தெய்வத்தின் (உபாசனை கடவுள் இடம்) உலகில் புகுந்து அங்கு உலவி இன்பம் பெறல் சரியைப் பயன் என்றார். அது 'சாலோக முத்தி' எனப்படுவது.

**கிரியை நெறி**

"சத்தியமாம் பத்தியொடு சரியை மார்க்கம்
தண்ணில் நின்று சாதித்தே தவிர்க் கொண்ணாத
முத்திவரை பெற்றவர்கள் சிலரேயாவார்
மூதுலகிற் பலர்க்கும் அது முதிருமாகிற்
புத்தியினில் தமது கையால் பூசிக்கின்ற
போதம் உண்டாம் அதைக் கிரியை ப்
பொலிவென்பார்கள்" (12)

என்ற பாடல், புத்தியில் இறைவனைப் பூசிக்கும் ஞானம் என கிரியை நெறியை அறிவிக்கின்றது. இது சத்திய பத்தியாம் சரியை முத்தியால் விளைவது என்பது சுவாமிகள் கருத்து.

"சுத்த மிகையால் புரியுங் கிரியை மார்க்கம்" (16)

என்று கூறி,

"வித்தகச் சற்குரு வாயாற் கேட்டும் கொண்டால் (16)
மிக நன்றாம்" என்று கூறுகின்றார்.

பலருடைய பூசை முறைகளை விவாதித்து, கொலை, புலை தவிர்த்த பூசை அடிப்படையில் எல்லா பேறுகளையும் வைக்கின்றார் சுவாமிகள்.

"பூசை செய்யும் பேராசை இல்லாதார்க்குப்
புகலில்லை கல்வியில்லை போதமில்லை
ஓசை படு தோத்திரமந் திரங்கள் யாவும்
உறுப்பென்றே கொள வேண்டும் உலகோர் போற்றும்
காசை யொரு பொருளாக மதித்து வீணே
கழிவுபடக் கூடாது கையில் உண்டேல்-
தோசை வடை அன்னமுதல் பலவும் செய்து
துகளில் பஞ்சவாத்தியமும் தொகுக்கலாமே" (25)

பொருள் இயன்றவழி பூசனை செய்தல் வேண்டும். பூசனை முறையில் உணவு படைக்கும்போது, தான் மட்டும் சாப்பிடுவது; மீதியைப் பிறருக்குத் தராது புதைப்பது என்பதனை மிக வன்மையாகக் கண்டித்து, விதியை மீறி எவர்க்கும் நல்கி அருந்தல் உத்தமம் என்று கூறுகிறார். (26).

பூசனைக்கு விக்கிரகம், சக்கரம் தோய்தகடு இரண்டையும் ஏற்கிறார். தக்க கும்ப பூசனையும் செய்யலாம் என்கிறார். (29).

"உடன் வகுத்துப் பூசிப்பது எளிது என்றெண்ணி
உலகத்திற் பலர் முயல்வார்: உள்ளத்து உண்மைத்
திடம் இசையுமாகில் நன்றேயாகும்." (30)

என, பூசிப்பது மனதில் உண்மைத் திடமாகப் பொருந்த அமைய வேண்டுமென்பது சுவாமிகள் கருத்து.

பூசனை இடையீடு பட்டாலும் தவறில்லை. மீளத் தொடங்கிச் செய்ய வேண்டும் (பாடல்-32) உடல் வலிமை பொறுத்தே சரியை, கிரியை அமையும். யோக ஞானம் மனபலத்தால் அமையும் (31).

குரு பூசித்த மூர்த்தத்தை மாணவன் பூசிக்கலாம். உபாசனை செய்தவன் இறந்தால் அவன் உபாசனை மூர்த்தம்

ஆற்றவற்றது என்பதில்லை. பின்வருவோர் பூசிக்கலாம். (33).

பூசனை முறையால் அருச்சித்த மூர்த்தியின் உலகில் மூர்த்தியிடை அருகிருப்பதாம் சாமீபம் பயனாகிறது. இந்த அனுபவமும் அனுபவமுறையானே நான்காக விரியும் என்பார்.

**யோக நெறி**

மனவலியால், தியான வழி சித்தியாவது யோகம் அது ஆலய மூர்த்தியை, உபாசனை மூர்த்தியை உள்வாங்கும் அனுபவமே யன்றி மூச்சை இழுத்துப் பிடிக்கும் முரட்டுத்தனமன்று என்று,

''ஆலயத்து மூர்த்தியினைத் தியானித்தாலும்
அவனே ஒரு யோகி யென்றே அறைய வேண்டும்.
சீலமன நாட்டம் ஒன்றும் இல்லாதாரே
திகழ் சரியை கிரியையினிற் சேர்ந்தோராவார்
மூலமதில் நின்றெழும்பும் மூச்சைப் பற்றி
முயலுகின்ற யோக மெல்லாம் முரட்டுத் தன்மை
நீலகண்டன் அரிமுதலா மூர்த்தத் தொன்றை
நினைத்தசை யாதிருப்பது நன்னிலை யாமன்றே (37)

இப்பாடலில் உரைக்கின்றார் சுவாமிகள். வரங்களைப் பெறுவது யோகமன்று. 'மூர்த்தித் தியானமே மிக்கது' (39) என்று கூறுகின்றார்.

இறைவன் மண் சுமந்து பிரம்படி பட வந்தது, எலும்பு பெண்ணானது, கல் மிதந்தது, முதலை உண்ட மதலை மீட்பது ஆகிய செயல்கள் யாவும் மூச்சடக்கியதால் விளைந்தனவன்று, இறையைப் பொருந்திய தியானத்தால் வந்தது எனக் கூறுகின்றார் சுவாமிகள். அவ்வாறே வைணவச் செய்திகளான, இரணியனைப் பிளக்க வந்தது, திரௌபதைக்கு ஆடை தந்தது, முதலை கொன்றது முதலாயின திருமாலை நினைத்ததால் ஆன பயன் என்றார்.

அபிராமிபட்டர் போன்ற புலவர் வரலாறுகளை எல்லாம் இறை தியானத்தால் யோக நிலை அமைந்த வெற்றியாக எடுத்துக்காட்டி விரித்துச் செல்கின்றார். அவற்றை 'அன்பால்' சிந்தித்து வழிபடும் நல் தியானப் பேறே, (42) என்று கூறுகின்றார்.

எந்தக் கடவுளை தியானித்தாலும் பரம்பொருள் எனக் குறித்துத் தியானித்தலை அடிப்படையாக வைக்கின்றார்.

குருவடிவம் வந்து, யோக நிலையின் முடிப்பயனாக ஆன்மாவைத் தன்னுடன் இணைத்து 'தன்னைத் தான் ஆக்கும்' (49) நிலை வாய்க்கும் என்பார்.

மேனியினி வாராமை விழைவு (52)
திருமூர்த்தி உபாசனை புரிதல் (53)
அவர் வார்த்தை கேட்டல் (54)
கொள்ளும் குறிப்பறிதல் (55)
அசையா மெய்யுணர்வு பெறல் (56)

ஆகிய படிநிலைகளில் யோக நெறியைச் சுவாமிகள் குறிப்பிட்டுச் செல்வதை அறிய முடிகிறது. 'தியானத்தின் மூலமே அருள் தோன்றும்' என்பதைச் (62) சுவாமிகள் கூறியுள்ளார். அடியவர்கள் தியான முறையில் அனுபவித்து, தியான எண்ணச் சிறப்பால் உலகில் பணியாற்ற மீள வருகிறார்கள். அவர்கள் விருப்பம் இறைவனோடு இணைந்து வருவது. அத்தகைய உயர்ந்த நிலைக்கு ஆளாக்குவது 'தியானம்' என யோக நெறியைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார் சுவாமிகள்.

### ஞான நெறி

'சொருபசித்தி இயல்பு' என ஞான நெறியைச் சுவாமிகள் கூறுகிறார். ஆன்மாவின் சொருபம் ஞானம். அது ஞானம் பெறும் கருவிகளுடைய உடம்பை விட்டுச் சென்றால் முத்தியிலும் ஞான நிலையாகாது என சுவாமிகள் திட்டவட்டமாகத் தெரிவிக்கின்றார்.

வெளி, சோதி, பிற மூலப்பொருள் என எப்பொருளில் கலந்தாலும் அருள் உடம்பாக உடம்பு இருக்க வேண்டும். உடம்பு இருக்க வேண்டும். உடம்பு பார்க்கப்பட வேண்டும். தொடுதற்கு உரியதாக ஆக்கக்கூடாது. அருளுடம்போடு மகிழும் வாழ்வே 'சிவபர மெய்ஞ் ஞானநிலை' வாழ்வு. இதுவே ஞான நெறியின் முடிந்த நிலை என,

"எவ்வகைய சித்தி செய்வோன் எவன் ஆனாலும்
இலங்கு உடல் மற்றொருவர் தொடற்கு ஏற்றதாகில்
இவ் அகிலம் தனில் பிறக்கும் வினை மாய்ந்திலான்
இயற்பெயர் மா யோகி என்றே இசைக்கலாகும்

அவ்வகைய நாட் கழித்து வெளியில் சோதி
ஆதிகளில் கலப்பார் உண்டு அதுவும் நன்றே
தெவ்வர் ஒல்கத் தோற்றமட்டில் குலவும் வாழ்வே
சிவ பரமெய்ஞ் ஞானநிலைத் தெளிவாம் அன்றே'' (64)

என்ற பாடலில் குறிப்பிட்டுக் காட்டுகின்றார் சுவாமிகள்.

''துலங்கு உடல் மற்றொருவர் எடுத்து அடக்கம் செய்யல்
தொல்லுலகில் பின்னும் வந்து தோன்றுவார் என்று
அலங்கு பொழில் விருத்தகிரித் தவசி சொன்னான்'' (65)

என்று, உடல் வீழாத ஞானநிலை எய்தும் தன்மையை ஞான நெறியின் அடையாளமாகக் காட்டியுள்ளார் சுவாமிகள்.

சிவயோகியரைப் பழிக்காமை (66)
பரஞானிகள் தம் அருமை சொல்லல் (67)
உலகாயத நிலையினராயினும் ஞானியரைத் தெய்வமென
வணங்க வேண்டும் (68)

எனக் கூறி, கருதும் உபாசனையால் சொரூப சித்தி (ஞானம்) பெறலாம் என்பார் சுவாமிகள்.

ஞான உடம்பு கத்தியால் வெட்டுப் படாதது, சுட்டாலும் வேகாதது, தெய்வ வடிவு காட்டுவது, நாட்டிற்கு நலம் விளை விப்பது ஆகிய செயல்களில் பிறவா நெறியில் அமைவது என்று விளக்கிச் சொல்கின்றனர். சரியை, கிரியை, யோக, ஞான நிலைகள் அனைத்தையும் கருணை அடிப்படையிலேயே சுட்டிச் செல்வதே இன்றியமையாதது என விளக்குகின்றார்.

மூலமாயிருந்து குடி முதல் கோன் வரை ஆளும் இறைவனும்; வெளிப்பட நின்று நாட்டை ஆளும் மன்னனும் 'உயிர்க்கருணை' (100) ஒன்றின் அடிப்படையிலேயே செயல் மேற்கொள்ளல் அமைய வேண்டிய தன்மையை தெளிவுபடுத்தியுள்ளார் தண்டபாணி சுவாமிகள். மனிதன் மேல்நிலை அடைய முயற்சி செய்யும் நெறிகளாக கருணை அடிப்படையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு படி தவநிலைகளை விளக்கிய மையைக் காண முடிந்தது.

# அரசாட்சியில் மரபும் புரட்சியும்

## கோ. ப. நல்லசிவம்

உலக இலக்கியங்கள் பலவும் மன்னரைப் பற்றியும் மன்னராட்சியைப் பற்றியும் நேரடியாகவோ இலைமறை காயா கவோ பரவலாகப் பேசுகின்றன. இந்தியப் பேரிலக்கியங்கள் அரசாட்சி பற்றி அதிகமாகவே பேசுகின்றன. பாரத பூமியின் ஆதி காவியங்களாக விளங்கும் இராமாயணமும் மகாபாரதமும் முழுக்க முழுக்க அரசியலைச் சமூக உணர்வுடன் பேசியுள்ளன. மனுநெறியும் பொருள் நூல்களும் அரசியலைப் பெரிதும் அலசியுள்ளன. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்னும் கோட்பாட்டில் ஊறி நின்ற பாரத மக்கள் தாம் பெற்ற இலக்கியங்களிலெல்லாம் அரசாட்சியைக் கண்டனர். ஆம் "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்று பூரிக்கின்ற அளவுக்கு தம் வாழ்வில் நீக்கமற நிறைந்த இன்றியமையாப் பொருளாக அரசியலைக் கருதினர் எனில் அது மிகையாகாது. பட்டிதொட்டிகளில் வழங்கும் சிறுகதைகளில் கூட "ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தானாம்" என்று தொடங்கு கின்ற வகையிலேயே அரசியலைக் காணலாம். இம்மரபை நம் தண்டபாணி சுவாமிகள் நன்குணர்ந்தவராவார். ஆதலின் அவர் அருளாட்சி குறித்தும் அரசாட்சி குறித்தும் ஆங்காங்கே தம் இலக்கியங்களில் சுட்டியிருப்பதுடன் தனித்தனி நூலாகவே இவற்றைப் பாடிச் சிறப்பித்துள்ளார்.

சுவாமிகள் மனிதநேய சமரச நெறியினர். சமயவாதிகள். ஆதலின் மன்னரையும், அரசினரையும் சமய முத்திரையுடனேயே காண விரும்புகிறார். ஆயினும் பிணக்கிலா வகையில் அவர் கருத்தூன்றுகிறார். உயிர்க்கொலை மறுத்த பேரன்பை யாண்டும் பறைசாற்றியவர் சுவாமிகள். ஆதலின் மன்னர்தம் பேரறமும் பேராட்சியும் கொல்லாமையிற் காலூன்ற வேண்டும் என்பதில் குறியாக இருக்கின்றார். சுவாமிகள் காலத்தில் ஆங்கிலேயர் ஆட்சியே கொடிகட்டிப் பறந்தது. ஆங்கிலேயரின்

ஆட்சியை எதிர்த்து ஆங்காங்கே பாடியுள்ளார். "ஆங்கிலியர் அந்தாதி" என்றொரு தனி நூல் கூட அவர் எழுதினார். ஆங்கிலேயரை எதிர்த்ததற்கு அடிப்படை காரணம் என்ன தெரியுமா? அவர்கள் புலால் உண்கின்றனர். பசுவதை செய் கின்றனர். இதுதான், கொல்லாமை யாம் பேரறம் பூண்ட சுவாமிகளுக்கு இது சற்றும் உடன்பாடில்லை. ஆதலின் தம் நூல்களிலெல்லாம் பரவலாக அவர்களை எதிர்த்துப் பாடி யுள்ளார். ஒருவகையில் சுவாமிகளும் விடுதலை வேட்கையில் திளைத்திருந்தார் என்பதற்கு இது சான்றாக அமையும்.

**பாரத மண்ணில் அரசாட்சி**

சுவாமிகள் முன்னோரைப் போற்றும் மரபினர். சான்றோரை வியந்து பாராட்டும் பண்பினர். சுவாமிகளின் புலவர் புராணம் இதற்குச் சிறந்த சான்றாகும். எனவே அரசாட்சி, அருளாட்சி போன்றவற்றிலும் இந்திய மரபை ஆழமாகக் காட்டியுள்ளார். முறைசெய்து காப்பாற்றும் மன்னனை இறைவனாகவே போற்றுகின்ற மரபை அவர் போற்றத் தவறினாரில்லை. பாரத அரசர்களையும் இராமாயண மன்னர்களையும் தமிழக வேந்தர்களையும் அவர்தம் நூலுள் பரக்கக் காணலாம். மக்கள் தம்மை இறைவனாகவே பார்க்கின்றனர் என்பதனால் மன்னரும் தம் கடமையும் பொறுப்பும் உணர்ந்து நடந்து கொண்டமையை முந்தைய வரலாறுகளில் பரக்கக் காணலாம் சிபிச் சக்கரவர்த்தியின் நீதி முறையும், மனுநீதிச் சோழனின் வரலாறும், சாலமன் வரலாற்றைவிட பெருமை கொண்டன. பொற்கைப் பாண்டியன் வரலாறு, நெடுஞ்செழியன் வரலாறு, இளங்கோவின் அரிய காப்பியம் போன்றன தமிழரசர்களின் முறையான ஆட்சிக்குக் கட்டியம் கூறுவன. பிற்கால அரசர் களின் மெய்க்கீர்த்திகளைக் காணும்போது "தாயிலார்க்குத் தாயாகவும், மகனிலார்க்கு மகனாகவும், தந்தையிலார்க்குத் தந்தையாகவும்" மன்னர்கள் விளங்கியமையைக் காணலாம்.

தசரத மன்னனின் மாட்சியைக் கூறும் கம்பர்,

"வயிர வான்பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிர் எலாம் தன்னுயிர் ஒக்க ஓம்பலால்
செயிர் இலா உலகினில் சென்றுநின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பு ஆயினான்"

(அரசியற்படலம் 10)

என்னும் அற்புதத்தைக் காட்டுகிறார். ஆம் மன்னன் உயிர்கள் தோறும் உறையும் இறைவனுக்குச் சமமானவன். ஆதலின் அவனிடம் இயற்கையாகவே பேரருள் வெள்ளம் இருந்தது. கூடவே தீங்கு நடக்கும் போதெல்லாம் கூடுதல் பொறுப்பைச் சுமக்கும் தியாகமும் இருந்தது. சேரன் செங்குட்டுவன் நெடுஞ் செழியனின் முடிவைக் கேட்டு அஞ்சும் கடமையுணர்வை இளங்கோவடிகள் இயல்பாகப் படம்பிடித்துக் காட்டுதல் இங்கு நோக்கத் தகுவதாம்.

''தென்னர் கோமான் தீத்திறம் கேட்ட
மன்னர் கோமான் வருந்தினன் ... ...
... ... ... ... .. ... ... ...
மழைவளம் சுரப்பின் வான்பேர்அச்சம்
பிழைஉயிர் எய்தின் பெரும்பேர்அச்சம்
குடிபுரவுண்டு கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்''

(காட்சிக்காதை 93 – 105)

சுவாமிகள் இதனை நன்குணர்ந்தவர் ஆதலின் தம் அரசாட்சியில் மன்னன் இவற்றுக்கெல்லாம் பொறுப்பாவான் என்பதை வலியுறுத்துகிறார்.

மெய்யே பெருகி விளங்கற்கும் மேதினியில்
பொய்யே மிகவும் பொலிதற்கும் – மைஏழும்
சீர்அறிந்து பெய்தற்கும் செய்தபயிர் தீய்தற்கும்
காரணம் செங்கோல் வெங்கோல் காண்

(அரசாட்சி, 34)

அரசனின் செங்கோல் தன்மையும் கொடுங்கோன்மையும்தான் நாட்டின் நிகழ்ச்சிகளுக்கும் பருவமாற்றங்களுக்கும் காரணம் என்பதை மரபுவழியிலேயே சிந்தித்துத் தெளிவதில் சுவாமிகள் முன்னிற்பதைக் காணலாம்.

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலான்

(திருநகரச் சிறப்பு: 99)

என்றும்,

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக்கு இடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ?
(121)

என்றும் சேக்கிழார் சுவாமிகள் தம் பெரியபுராணத்தில் காட்டும் அரச இலக்கணத்தை ஈண்டு நினைவுகூர்தல் தகும். மரபு வழியைப் போற்றிச் சிந்திப்பதில் சுவாமிகள் தலைநிற்கும் பாங்கும் இன்னோரன்ன இடங்களில் எல்லாம் தெளிவாதல் காணலாம்.

### மரபு நிலை ஆட்சிகள்

சுவாமிகள் மரபுவழியில் சான்றோர் பெருமக்களை எடுத்தாண்டு போற்றிய உள்ளத்தினர். இவ்வரசாட்சியிலும் வள்ளுவப் பெருந்தகையாரையும் ஔவைப்பாட்டியையும் இணைத்துப் போற்றியுள்ளார். மன்னன் முறைசெய்து காப்பாற்றும் பொதுநலத்தன் ஆகவேண்டும். காட்சிக்கு எளியனாக இருக்க வேண்டும். இறைமாட்சியில் திருவள்ளுவர் இவற்றை வலியுறுத்துவார்.

எத்தகவோர் தற்காண்டற்கு எண்ணிவந்தார் ஆயிடினும்
அத்தருணம் காட்சி அருள்வானே – இத்தரைக்குஓர்
மன்ஆனேம் என்ன மகிழாதுஇவ் வாழ்க்கையினால்
என்ஆம்கொல் என்றுஇடைவோ னே (31)

வேந்தன் சினம்செய்யில் வேறுதுணை இல்லைஎன
ஆய்ந்து உரைத்தாள் ஔவை அதுவன்றி – வாய்ந்தஉலகு
எல்லாமும் கோன்நோக்கும் என்று உரைத்தார் வள்ளுவனார்
வல்லார் அறிவார் வசை (35)

எனச் சுவாமிகள் கூறுவதை ஈண்டு நினைவுகூர்தல் தகும்.

சுவாமிகள் தம் அரசாட்சி நூலில், சில மன்னர்களை நினைவு படுத்தியுள்ளார். பரசுராமர், விக்கிரமாதித்தன் ஆகியோரை நிலையாமையின் பொருட்டு நினைவுபடுத்துகிறார். வசிட்டர் முதலிய பெரியோர்களைத் துணைக்கொண்டு அரசாண்ட மன்னர் வரிசையில் தசரதனையும் இராமனையும் நினைவு படுத்துகிறார். ஆணவ ஆட்சியில் அழிந்த சூழலில்

சூரபன்மா, தக்கன், இரணியன், இராவணன் ஆகியோரையும், மகளிர் இழிவால் அழிந்த அரசு என்ற வகையில் துரியோதனன் அரசையும் சுவாமிகள் நினைவுபடுத்துகிறார். நீதி வழங்குதலில் சிறந்த அரசனாக மனுநீதிச் சோழனை நினைவுபடுத்தும் சுவாமிகள், நல்ல தமிழ்ப் புலவர்களால் பெயர்பெற்ற அரசர்களையும் குறித்துப் போற்றுகிறார். ஒட்டக்கூத்தரால் போற்றப்பட்ட குலோத்துங்க சோழனும் வாதவூரரால் பொலிவு பெற்ற அரிமர்த்தன பாண்டியனும் சுவாமிகளால் குறிப்பிடப் படுகின்றனர். மந்திர சுற்றத்தாரின் அறிவுரையை இகழ்ந்து வீழ்ந்துபட்ட இராவணனை, துரியோதனனை மீண்டும் நினைவு கூர்ந்து அரசாட்சியில் மந்திர சுற்றத்தைத் தெளிவுபடுத்துகிறார். இராவணன் அழிந்துபட்ட வரலாற்றைக் கூறும் சுவாமிகள், அவனோடு தொடர்புடைய விபீடணனின் செயலையும் மறவாது சுட்டியுள்ளார். விபீடணன் மன்னனோடு மாண்டிருக்க வேண்டும். இல்லையேல் துறந்து கானகம் சென்றிருக்க வேண்டும். இவற்றை விடுத்து அவன் சரணாகதி அடைந்தது புகழற்ற செயல் என்று இகழந்துரைக்கின்றார்.

> ''வீடணன் இராவணன் வேட்கைவிட்டுப் போய்அன்று
> காடடைந்து மாதவத்தைக் கைக்கொண்டால் – நாடு
> அனைத்தும்
> வேண்டிடினும் எய்தும்வியன் இலங்கைமட்டில் இச்சித்து
> ஆண்டு இயல்கைநீந்தி அல. (48)

இவ்வாறு இந்திய அரசு மரபுகளை எல்லாம் தக்க இடங்களில் நினைவுபடுத்தி மரபாட்சியை தம் அரசாட்சி நூலில் எடுத்துக் காட்டியுள்ளார், சுவாமிகள்.

**அரசாட்சியில் இறையுணர்வு**

ஆண்டவன் உண்மையை உணர்வதுதான் உண்மையான அறிவாகும் என்பர் சர் ஐசக் நியூட்டன் போன்ற விஞ்ஞானியரும். சுவாமிகள் அரசன் அறிவாளியாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை மதியுள்ள அமைச்சர்களைச் சுற்றமாக வைத்துக் கொண்டால் போதும், ஆனால் அவன் இறை நம்பிக்கை உள்ளவனாக இருப்பது கட்டாயம் என்கிறார்.

> ஆழி வளையும்உலகு அத்தனையும் தன்குடைக்கீழ்
> வாழ்இயற்கை எண்ணி மகிழாமல் — வீழிஇதழ்

மங்கை கொங்கன் ஆண்மைமதித்தாங்கு இறைக்குஅஞ்சி
அங்கை குவிப்போன் அரசு. (1)

இவ் இறை நம்பிக்கையும் நாயகி நாயக பாவ அமைப்பில் ஒன்றிய பத்தியாக இருக்கவேண்டும் என்கிறார். இன்னும் ஒரு படி மேலே சென்று அரசாள்வோர் சிவவேடர்களைத் தம்முடன் வைத்துக் கொள்ளவும் வேண்டும் என்பதில் சமய உணர்வுடனே காணப்படுகிறார் அவர்.

ஆலாலம் உண்டான் அருள்வேடத் தொண்டர்களைக்
கோலா கலத்தமிழ்ப்பாக் கூறுநரை — தோலாத
வீரத் தொழிலோரை வேண்டாத வேந்தர்பெறும்
பேர்அற்றுப் போம்உலகிற் பின். (10)

வீர மறவர்களுடன் இன்றியமையாச் சுற்றமாக, சிவவேடப் பொலிவழகினார், நற்றமிழ்ப்புலவனார் போன்றோரையும் அவன் அமைத்துக் கொண்டால் நிலைத்த புகழுடன் விளங்குவானாம். முறைசெய்யும் ஆட்சிகளில் மந்திரச் சுற்றத்தின் அளப்பரிய துணையை நாடுவது ஒருபுறம் சிக்கலான சூழல்களில், இவை போதா நிலையில் நீதி வழங்குவதில் கூட அரசினர் இறைவன் துணையை நாட வேண்டும் என்கிறார் நம் சுவாமிகள். எல்லா அறிவுக்கும் எல்லாவற்றுக்கும் மேலான பரம்பொருளின் துணைதான் எதையும் உறுதி செய்யமுடியும் என்பதில் சுவாமிகளுக்கு அழுத்தமான நம்பிக்கை.

அம்பால் மனைஇழந்த அந்தணனோடு ஓர்வழுதி
கம்பார் குழையான் கருணையால் — நம்பாரும்
நம்பும் திருக்கூத்துஓர் நாய்கன் இல்லிற் கண்டவிதம்
வம்புஉரை என்னான்சிறந்த மன். (7)

திருவிளையாடற் புராணக்கதையை நினைவூட்டும் இப்பாடல் வழி அரசர்களின் தெய்வபக்தி இந்த அளவுக்கும் உயர்ந்து நிற்க வேண்டும் எனச் சுட்டுகிறார். இவ்வாறு இறை நம்பிக்கையை அரசாட்சியின் முதலாகக் கருதுவது நம் சுவாமிகளின் மரபு வழிப்பட்ட சிந்தனை என்றால் அது மிகையாகாது.

### அரசாட்சியில் புரட்சி

ஆயினும் இந்திய அரசர்கள் பல்வேறு யாகங்களையும் உயிர்ப்பலியையும் மேற்கொண்டதைச் சுவாமிகள் சாடுகின்றார்

இதுவரை மரபு வழியிற் சென்ற அவர் தம் கோட்பாட்டை நிறுவ முனையும் போதெல்லாம் சிறித் சிலிர்த்துக் கொண்டு உறுதியாக இடித்துரைக்கின்றார்.

புற்கொய்தற்கு அஞ்சும் புனித மறையோரும்
சொற்க இச்சை மீமாஞ்சன் சொல்லால்கொண்டு —
அற்களந்தோன்
பாகமென்றும் ஊனைப் பகிர்கின்ற பார்ப்பாரும்
ஏகம்எனக் கொள்ளான் இறை. (12)

கூத்தம் இன்றி வேள்விகளால் சொர்க்கம் உறலாம்என்று
இத்தரையில் ஆடுமுதல் ஏழைமையால் — எய்த்த
மனிதர்வரை வெந்துதின்ற மன்னர் எல்லோங்கண்ட
பலிஎனப் போய் ஏற்றார்பழி. (15)

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் பிம்பிசாரனின் வேள்வி குறித்துப் பாடும்போது புத்தபிரான் இவ்வாறு கூறுவதாகக் காட்டுகிறார்.

வாழும் உயிரை வாங்கி விடல்
இந்த மண்ணில் எவர்க்கும் எளிதாகும்
வீழும் உடலை எழுப்புதலோ
ஒரு வேந்தன் நினைக்கினும் ஆகாதையா (ஆசியசோதி)

இத்தகு அருள்வேட்கையைத்தான் அரசாட்சியில் நம் சுவாமிகள் எதிர்பார்க்கின்றார்கள். மண்ணில் நின்றுகொண்டு விண்ணைப் பார்க்கும் அருளாளர்களின் அருமையில் சுவாமிகளும் மரபாட்சியில் நின்றுகொண்டு புரட்சியாம் பேரருள் வெள்ளத்தைக் காண்கிறார். இது சுவாமிகளின் தனிச்சிறப்பாகும்.

அரசர்கள் கொல்லா நெறிநின்று நல்லாட்சி செய்தல் வேண்டும். இக் கொல்லாநெறியைத் தம் ஆட்சிக்குட்பட்ட மக்களிடமும் பரப்பி அவர்களையும் அருளாளர்களாக மாற்ற வேண்டும். அதுதான் சிறந்த ஆட்சி.

“எல்லாரும் கொன்று அருந்தா ஏற்றம் உறத்திருத்தும்
வல்லாண்மை வேந்தன் மதிஅன்னான் — அல்லாத
மன்னர் உடுஇனத்தை மானுவார் இந்த உண்மை
சொன்னவர்யார் என்னினும்நம் தோள். (9)

கருணையாட்சியிற் கண்ட இவ்வுண்மையை எம்மதத்தவர் சொன்னாலும் அவர்கள் எமக்குத் தோள்போன்று உடனின்று தொண்டு செய்வாராவர் எனக் கொல்லாநெறி போற்றிய வரைச் சுற்றமாகவும், சூழலாகவும் கருதி மகிழ்கின்ற சுவாமிகளின் புரட்சி எண்ணம் வியப்பானது.

அரசாட்சியில் இந்திய மரபுகளைக் கண்ட சுவாமிகள் ஒரு குலத்துக்கொரு நீதி பேசும் நீதி முறையைக் கண்டித்துப் புரட்சி பேசுகின்றார்.

> குற்றத்தை விட்டுக் குலத்தளவில் தண்டனைகள்
> பெற்றபல நூலைத் துணைகொண்ட — கொற்றவர்கள்
> எல்லாரும் தங்கள் இனத்தோடு அழிந்த உண்மை
> நல்லான் அறிந்து நகும். (14)

மக்களாட்சி பேசும் இந்நாளிலும் பின்பற்ற இயலாத இப் பொதுமையைச் சுவாமிகள் அற்புதமாகப் புரட்சியாக்குகின்றார்.

இவ்வாறு சுவாமிகளின் நூல்களில் எல்லாம் அவை எப்பொருள் பற்றியதாக அமைந்தாலும் தம் மனிதநேயக் கொல்லாநெறி காட்டும் சமரசத்தையே உட்பொருளாக்கிக் காண்பதில் அவர் வல்லவர் என்பதைக் காணலாம். அரசாட்சியிலும் அவர்கண்ட காண விரும்பிய புரட்சியே இதற்குப் பெருஞ்சான்றாக அமையும்.

# தண்டபாணி சுவாமிகளும் பாம்பன் சுவாமிகளும்

**கு. நாகராசன்**

சந்தத் தமிழில் கந்தக் கடவுளைப் பாடிப் பரவிய கருணை வள்ளல் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் ஆவர். அவர் காட்டிய நெறியில் செல்லும் நியமம் கொண்டவர்கள் தண்டபாணி சுவாமிகளும் பாம்பன் சுவாமிகளும் ஆவர். தண்டபாணி சுவாமிகள் "வண்ணச்சரபம்" என்றே புகழ்பெற்றுச் சிறந்தவர்.

தண்டபாணி சுவாமிகள் தமது எட்டாவது வயதிலேயே தமிழ்ப் பாக்களைப் பாடும் ஆற்றல் கைவரப் பெற்றார். பாம்பன் சுவாமிகள் தமது பதினான்காவது வயதில் பாடிய பாடல்களிலேயே "மிருகேந்திர ஆகமம்" முதலிய நூல்களில் உள்ள கருத்துகள் இடம் பெற்றுள்ளன. பாம்பன் சுவாமிகளை யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளை 'உபய அருணகிரி' என்று புகழ்கிறார். தண்டபாணி சுவாமிகளையும் 'அபரஅருணகிரி' என்றே ஆன்றோர் வழங்குகின்றனர்.

பாம்பன் சுவாமிகளை விட தண்டபாணி சுவாமிகள் பதின் மூன்று ஆண்டுகளே வயதில் பெரியவர். பாம்பன் சுவாமிகள் 1929-ம் ஆண்டு வரை வாழ்ந்திருக்கின்றார். சமகாலத்தில் வாழ்ந் தவர்களாகிய இவர்கள் அருணகிரிநாதரையும், முருகனையும், தமிழையும் உயிரினும் மேலாகப் போற்றியுள்ளார்கள். தமிழ்மொழியின் மேன்மையினைப்பறைசாற்ற தமிழ் அலங்காரம், தமிழ்ப்புலவர் புராணநூல் போன்றவைகளை அருளிய தண்டபாணி சுவாமிகளைப்போலவே, 1906-ம் ஆண்டு வடமொழி கலவாத சுத்த தமிழ்ச் செய்யுட்கள் கொண்ட "சேந்தன் செந்தமிழ்" எனும் நூலைப் பாம்பன் சுவாமிகள் அருளினார்.

தண்டபாணி சுவாமிகளின் புலவர் புராணத்தில்,

12 தோள்கள் — தமிழின் உயிர் எழுத்துக்கள்
18 கண்கள் — மெய் எழுத்துக்கள் எனும் பொருளில்

'கண்ணிகர் மெய்யும் சென்னிக்
கனமுறழ் இனத்தின் கூறும்
திண்ணிய தோள்களே போல்
திகழ்தரும் உயிரும் ... ...

கூறியுள்ளார். பாம்பன் சுவாமிகள் தனது சக்தி வாய்ந்த சண்முகக் கவசத்தை உயிர் எழுத்து, மெய் எழுத்து இவைகளை முதல் எழுத்தாகக் கொண்டே துவக்கி 30 பாடல்கள் அருளியுள்ளது உலகம் அறிந்தது. எனவே இருவருக்கும் முருகனே தமிழாகத் திகழ்கிறார்.

**பெயரில் ஒற்றுமை**

தண்டபாணி சுவாமிகளை 'முருகதாச சுவாமிகள்' என்றும் பாம்பன் சுவாமிகளை 'குமரகுருதாச சுவாமிகள்' என்றுமே அழைத்தனர். தவிர வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்றும், திருப்புகழ் சுவாமியார் என்றும் பலவாறு மக்கள் வழங்குகின்றனர்.

**சென்னை நகரைச் சிறப்பித்தது**

இராமலிங்க அடிகளின் தர்மமிகு சென்னையை, சமீபத்தில் பலவாறாகப் போராடி பெயர் மாற்றம் பெற்ற சென்னையை, அருளாளர்கள் இருவரும் கீழ்க்கண்டவாறு போற்றுகின்றனர். தண்டபாணி சுவாமிகள்,

"அன்னையென நகரம் அத்தனைக்கும்
ஆதாரமாம் சென்னை நகர்"

கந்த கோட்டத்து திருப்புகழ் என்கின்றார்.

பாம்பன் சுவாமிகள்,

"வியனுலகருண் முதல் சென்னை"
"விளைநில நிரை வள சென்னை"
"பொருளருள் பெறவருள் சென்னை"

எனப் பலவாறாக தனது "குமாரசுவாமியம்" எனும் நூலில் கோத்திர காண்டத்தில் குறித்துள்ளார்.

"குருபரத்துவம்" என்ற பெயரில் தன்வரலாற்று நூலை எழுதித் தனிச்சிறப்பு பெற்றவர் தண்டபாணி சுவாமிகள்.

சைவப்பாதிரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க பாம்பன் சுவாமிகளும் தன் வரலாற்றைக் கூறியுள்ளார். இவரது திருப்பா எனும் நூலில் 'பெருமிறைக்கவி' என்ற செய்யுளுக்கு 14 விசேட அலங்காரங்களைக் கொண்ட விரிவுரை எழுதி உள்ளார். தண்டபாணி சுவாமிகள் அறுவகை சமயத்திற்கான தோத்திரங்கள், சமயாதீத நூல்கள், இலக்கணம், கீர்த்தனைகள் எனப் பலவாறாகச் சமயப்பணி ஆற்றியுள்ளார். சாத்திரம், தோத்திரம், காவியம், மொழிபெயர்ப்பு, மருத்துவம், அரசாட்சி எனப் பல துறைகளிலும் பற்பல நூல்களை இயற்றி உள்ளார். நூலாசிரியர், உரையாசிரியர், வரலாற்றாசிரியர், பதிப்பாசியர் எனப் பல நிலைகளிலும் சிறப்புற்று விளங்குகின்றார். பாம்பன் சுவாமிகள் தாம் இயற்றிய சில நூல்களுக்குப் பிற் காலத்தவர் வேறுபட்ட பொருளைக் கூறிவிடக்கூடாது என்பதற்காகத் தாமே உரை எழுதி உள்ளார். தாமே முன்னின்று பதிப்பித்தும் உள்ளார்.

**தந்தைக்கு உபதேசம் செய்த முருகன்**

தண்டபாணி சுவாமிகள் சுவாமி மலையில் வீற்றிருக்கும் நம்பெருமானை ''மறைதாரகம் சொல் புலவோன்'' என்று கந்தகோட்டத்து திருப்புகழில் குறிப்பிடுகின்றார். அருணகிரி நாதரும் 'சிவனார் மனம் குளிர உபதேச மந்த்ர மிகு' என்கிறார். முருகனைத் தகப்பன் சுவாமி என நாம் அழைக்கிறோம். பாம்பன் சுவாமிகள் போற்றி விண்ணப்பத்தில்,

''மதிபுனை பரமனார்க்கு மதலையாய் குருவாய்
தேவர் பதியென உளவேள் போற்றி''

என்று போற்றுகிறார்.

**இறைவன் ஒருவரே**

இறைவன் ஒருவனே என்ற கொள்கையை அழுத்தமாக வலியுறுத்தி, பல்வேறு உருவங்களிலும் பெயர்களுடனும் அந்த ஒரு இறைவனை வழிபடுவதில் சமயப்பூசல் எழுதல் கூடாது என்பதைக் கீழ்க்கண்டவாறு அறிவுறுத்துகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

''குருவும் கணபதியும் கொற்ற மழுவானும்
திருமடந்தை காவலனும் சேனில் – வருசுடரும்

தேவினத்தின் தாயான சிற்சத்தியும் முருகோன்
மூவிரண்டாக் காட்டும் முகம்.''

இதைப் போன்றே பாம்பன் சுவாமிகளும்,

''மன்றெனும் பதியுறை மழவிப் முகவனு
நன்றெனும் பிரணவ வவனிளை ஞனுமறை
தொன்றெனும் பொருளெனச் சுடர்சிவ னுமுமையு
மொன்றெனும் பெரியவருயர் பதம் பணிவேன்''

உமை, சிவன், கணபதி, முருகன் இந்நால்வரும் ஒருவரே எனும் பெரியோர் பதம் பணிவேன் என்கின்றார்.

மேலும் ஆறுமுகப் பரமனை வணங்கிடும் நம் அனைவருக்கும் இந்த இரு பெரியவர்களின் மனநிலையும் நன்கு தெரிந்திருக்க வேண்டும் என்ற நோக்கில் இருவரும் தமது மனப்பாங்கை வெளிப்படுத்துகின்றார்கள். பாம்பன் சுவாமிகள் தமது 'தாசப்பிரகாசம்' எனும் திருப்பாடலில் தன்னை யாரென்று கூறுகின்றார்.

''காங்கேயத் திருநாமக் கடவுற்குத் தாசன்
என்மனதில் உள்ளவயில் இறைவற்குத் தாசன்''

இதைப் போலவே தண்டபாணி சுவாமிகளும்

''திடமிஞ்சிய செங்கதிர் வேல்முரு கோன் – இடமென்
றொளிர் என் மனம்''

என்று முருகப் பெருமான் இருந்து ஒளிர்கின்ற இடம் தன் மனம் என்று கூறுவதால் இருவரின் எண்ணமும் செயல்பாடும் முருகன் செயலாகவே நடைபெற்று வந்தது கண்கூடாகும்.

### அருள் நிகழ்ச்சிகள்

தண்டபாணி சுவாமிகள் தமது 'குருபரத்துவம்' எனும் தத்துவ நூலில் காயம் தீர்ந்த சருக்கத்தில் கீழ்க்கண்ட நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார். 'திருமலையில்' ஏறி முருகனைக் காண வேண்டிய சமயம் காட்சி பெறாமையால் கீழே உருண்டார். கல்லில் உராய்ந்ததன் காரணமாக இடது தோளிற் சிறுகாயம் ஏற்பட்டது. அதுசமயம் வள்ளியம்மை குறிகூறுவாள் போல்வந்து தனது கையினால் நெற்றியிலும் புண்ணிலும் நீறு பூசித்தடவி வாயிலும் இட்டாள். புண் ஆறியது.

1923-ம் ஆண்டு சென்னை தம்புச்செட்டித் தெருவில் குதிரை வண்டியின் சக்கரம் பாம்பன் சுவாமிகளின் இடது காலில் ஏறிச் சென்றதால் கால் எலும்பு முறிவுபட்டது. காலைச் சோதித்த மருத்துவர்கள் கால் எலும்பு இணைவது கடினம் என்று கூறிவிட்டனர். இதனை அறிந்த அன்பர்கள் 'சண்முகக்கவச பாராயணத்தை' திடபக்தியுடன் நடத்தினர். அப்போது அடியார் ஒருவருக்கு சுவாமிகளின் முறிந்த கால் தரிசனமாயிற்று. பின் முறிந்த எலும்புகளை இரு வேல்முனை இணைத்து நிற்பது போலவும் ஒரு முனை தாங்குவது போலும் தெரிந்தது. இது போலவே சுவாமிகளின் காலும் கூடியிருப்பது கண்டு மருத்து வர்கள் அதிசயித்தனர். சுவாமிகளும் வானில் இரு மயில்கள் நடனமாடிக் கொண்டே தம்மை நோக்கி வருவது போலவும் மற்றுமொரு நாள் தம்முடன் செந்நிறக் குழந்தை ஒன்று படுத்திருந்து 'இன்னும் 15 நாள்களில் புண் ஆறிவிடும். அதுவரை மருத்துவமலனையை விட்டு வெளியே போக வேண்டாம்' எனும் திருவாக்கு அருளப்பட்டது. அவ்வண்ணமே குணமாகியது.

தாம் கண்ட அருட்காட்சியை 'அசோகசாலவாசம்' எனும் பெயரில் பதிகமாக அருளினார். இவ்வருட்காட்சியை போற்றும் வண்ணம் திருவான்மியூரில் 'மயூரவாகனசேவனம்' என்ற பெயரில் ஆண்டுதோறும் விழா நடக்கிறது. அசோகசாலவாசம் எனும் நூல் எம். ஏ. தமிழிலக்கியத்தில் (சென்னைப் பல்கலைக்கழகம்) ஒரு பாடமாக வைக்கப்பட்டு இருந்தது.

### ஆறெழுத்து உண்மை

தண்டபாணி சுவாமிகள் தமது ஆறெழுத்தலங்காரத்தில்,

"ஓங்காரம் பெற்ற எழுகோடி மந்திரத்துள் உயர்ந்த
பாங்காகும் ஆறெழுத் தேவடி வாகிய பண்ணவன்"

மந்திரவகை ஏழுவிதமான முடிபுகளை உடையன. அவ்வித எல்லா மந்திர மொழிகளினும் சிறந்த ஆறெழுத்தாயும் அதன் வடிவாயும், அதன் உட்பொருளாயுமுள்ளவன் முருகன் என கின்றார். பாம்பன் சுவாமிகள் தமது "ஆறெழுத்துண்மை" எனும் பதிகத்தில்

"பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்

முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே' – என்று கூறுகிறார்.

மேலும் இந்த இரு அருளாளர்களும் சிறப்பாக இல்லறம் மேற்கொண்டு இறையருள் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து பரமபதி நிலையை உலகிற்கு உணர்த்த வந்த தலசிலர்கள், விரத்துறவிகள்.

குருவருள்

'ஆயிரம் சூரியர் ஒன்றுகூடி தலையாலே எழுதும் தவ முடையவன் ஆனாலும் உலகில் பிறந்துவிட்டால் மாயை பற்றும்'' தண்டபாணி சுவாமிகளும் தனக்கு திருவருள் விரைவில் எய்தவில்லையே என்று ஏங்குகின்றார். இதைப் போன்றே பாம்பன் சுவாமிகள் தமது 'பெருவேண்டுகோளில்'

''வறிதேதுமில் குமராவெனை மறவேலெனை மறவேல்'
''வாடாமுக முனியேயெனை மறவேலெனை மறவேல்'

என்று தமது ஆதங்கத்தை வெளிப்படுத்துகின்றார்.

இவ்வாறு பல்வேறு ஒற்றுமைகளை இருவரின் படைப்புகள் பெற்றிருந்தாலும் வேற்றுமைகளும் சில உள்ளன. ஷண்மத ஸ்தாபகர் சங்கராச்சாரியார் என்பதையும் முருகனை வழிபடு வோர் கௌமார சமயத்தினர் என்பதையும் தண்டபாணி சுவாமிகள் வலியுறுத்துகின்றார். ஆனால் பாம்பன் சுவாமிகள் முருகனும் சிவனும் ஒன்றே என்று கூறுகிறார். முருகனை வழிபடு பவர்கள் சைவசமயத்தினரே என்று உபநிடதங்கள், வேதங்கள், ஆகமங்கள், திருமறைகள் ஆகியவைகளில் இருந்து நூற்றுக் கணக்கான மேற்கோள்கள் காட்டுகிறார். இலங்கைப் பல்கலைக் கழக மெய்யியல் பேராசிரியர் நா. ஞானகுமாரன் 'நயந்தரும் சைவ சித்தாந்தம்' என்னும் நூலில் வேதாந்தத் தெளிவே சைவசித்தாந்தம் எனப் பல மேற்கோள்களுடன் தமது கருத்தை நிறுவுகின்றார். சென்னை டாக்டர் B. இராமன் 'வேதாந்த சித்தாந்த சமரசம் ஓர் ஆய்வு' எனப் பாம்பன் சுவாமிகளின் கருத்தை விளக்கி உள்ளார்.

சுத்தாத்வைதம்

'சுத்தாத்வைதம்' எனும் தொன்மையான தத்துவத்தை அதுவும் மறைமொழியே எனப் பல சான்றுகள் தந்து பாம்பன்

சுவாமிகள் விளக்குகின்றார். இந்த மெய்யியல் தத்துவத்தை தாயுமானவ சுவாமிகள் பாடல்கள், உமாபதி சிவாச்சாரியார், வஜ்ரவேலு முதலியார் முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் இராதாகிருஷ்ணன் ஆகியோர் எடுத்தாண்டுள்ளனர். தண்டபாணி சுவாமிகள் உடல் முழுவதும் திருநீறணிந்து வலது தோளில் தென்கலையும் இடது தோளில் வடகலையுமாகிய திருமண் காப்பு அணிந்து 'சைவ வைஷ்ணவ சமரசர்' ஆகக் காட்சி அளித்துள்ளார். ஆயிரக்கணக்கில் (2100) திருமாலைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

பாம்பன் சுவாமிகள் 1904-ம் ஆண்டு தொடங்கி 11-ம் ஆண்டு வரை வைஷ்ணவ சமயக் கோட்பாட்டைப் புரிந்து கொள்ளாமலும் சைவ சமயத்தின் உண்மைகளைத் தெரிந்து கொள்ளாமலும் வாழ்ந்தவர்களுடன் வாத விவாதங்கள் நடத்தினார். நீதி மன்றம் சென்று சைவ சமயக் கொள்கையை நிலைநாட்டினார்.

**சமயாதீதக் கொள்கை**

வடிவம், பெயர், வரலாறு ஏதுமில்லாத பொதுக்கடவுள் மீது பல்லாயிரம் கவிகள் அருளியுள்ளார் தண்டபாணி சுவாமிகள். அவைகளில் சமரச உண்மை மதவாதமற்ற ஒருசமயக் கொள்கை போன்ற பல கருத்துகளை அறிய முடிகின்றது. பாம்பன் சுவாமிகள் சமயாதீதம் என்று எதுவும் கூறவில்லை. சுவாமிகள் இருவரும் வடமொழி, தென்மொழி இரண்டிலும் தேர்ச்சி பெற்றுள்ளனர்.

திருமலையில் முருகப்பெருமான் தண்டபாணி சுவாமிகளுக்கு 'சர்வசாதாரணி' என்ற எழுத்தாணியைக் கொடுத்து பாடல் எழுதச் சொன்னமையும் தச்சனார் ஒருவரின் கனவில் தோன்றி பாம்பன் சுவாமிகளுக்கு முருகன் பாதக்குறடு செய்து கொடுக்குமாறு கூறியதும் ஆகிய இரு நிகழ்ச்சிகள் முருகனின் அருளை நினைவுகூரத் தக்கனவாய் உள்ளன.

ஒருசமயம் செங்கோட்டைக்கு அருகிலுள்ள திருமலை என்னும் முருகன் தலத்தில் 'முருகன் தரிசனம் கண்டன்றி மீளேன்' என்று சொல்லி படிக்கட்டுகளில் இருந்து உருண்ட நிகழ்ச்சியும், பாம்பன் சுவாமிகள் பிரப்பன் வலசை என்னும் ஊரில் 41-வது வயதில் முருகனிடமே உபதேசம் பெறவேண்டும் என்று முப்பத்தி ஐந்து நாட்கள் தவம் இயற்றியதும் முருகன் அடியார்களாகிய நாம் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான செய்திகள் ஆகும்.

# வருக்கக் குறள் நூலில் எழுத்தியல்

ப. வெ. நாகராசன்

மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களைக் கொண்டு செய்யுள்களை இயற்றி இலக்கியமாக்குதலைத் தமிழ் இலக்கிய மரபில் நீண்ட காலமாகவே கண்டு வருகிறோம். ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பர் பெருமானின் திருக்குறுந்தொகையில் (தேவாரம் 5: 97) உயிரெழுத்துக்கள் 12, உயிர்மெய் எழுத்துக்கள் 14, ஆய்தம் 1 ஆக 27 எழுத்துக்களைப் பா முதலாக அமையுமாறு 27 பாடல்கள் நெடுங்கணக்கு வரிசையில் உள்ளதைக் காண்கிறோம்.

இன்று கிடைக்கும் பாட்டியல் நூல்களுள் தொன்மை வாய்ந்ததும் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதும் ஆகிய பன்னிருபாட்டியல் இத்தகைய இலக்கிய வகையை, ''மொழிக்கு முதல் ஆகிய எழுத்துக் கெல்லாம் வருக்கம் உரைப்பது வருக்க மாலை'' (நூற்பா 283) எனச் சுட்டுகிறது. இதில் யாப்போ பாடுபொருளோ வரையறை செய்யப் பெறவில்லை. அதனையடுத்துத் தோன்றிய வெண்பாப்பாட்டியல், ''மன் அகவல் எட்டாய் வருக்கஎழுத் தான்வருமேல் முன்வருக்க மாலை மொழி'' (செய்யுள். 36) என்கிறது. இங்கு ஆசிரியப்பா என்றும் யாப்புவரையறை தலைகாட்டுகிறது. பிரபந்த மரபியல், ''மொழிமுதல் உயிர்மெய் வருக்கத்தொகை போற்றி அகவலாற் புகல்வது வருக்க மாலை'' (10) என வழிமொழிகிறது. இதே நூல் வருக்க மாலையைத் தவிர முதன்முதலாக வருக்கக் கோவையை அறிமுகப்படுத்துகிறது. ''உயிரும்மெய் வருக்கத்து அடைவில் வருபொருள் துறையிற் கலித்துறை (அகப்பொருள் அமைய உலகெலாம்) மதிப்ப வழுத்தும் இயல்பது வருக்கக் கோவை'' (7) இதில் கட்டளைக் கலித்துறை என்ற யாப்பும் அகப்பொருள் என்னும் நுவல்பொருளும் தெளிவாக்கப்பட்டிருத் தலைக் காணலாம். இத்தகைய கோவை இலக்கியங்கள் தமிழில் ஒரு சில தோன்றியுள்ளன.

அடுத்துத் தோன்றிய சிதம்பரப் பாட்டியல், "வற்க உயிர் கசதநப மவஎட் டின்சூழ் மருவுஅகவல் வரின்வருக்க மாலை" (33) என்கிறது. இலக்கண விளக்கப் பாட்டியல், "வருக்கத் திணைச் சொலல் வருக்க மாலை" (826) எனவும், தொன்னூல் விளக்கம், "வருக்க மாலையாம் வருக்க எழுத்தென உயிரோடு கசதந பமவ எனஎண் வரிமுதல் வந்து/வரும் எண் அகவலே" (267) எனவும், முத்துவீரியம், "முதலாம் வருக்க எழுத்தினுக் கொவ்வொரு செய்யுள் அணிபெறச் செப்புவ தது‌தான் வருக்க மாலையாம் வழுத்துங் காலை" (1059) எனவும் கூறிச் செல்கின்றன. பிரபந்த தீபிகை, "செப்பும் மொழிக்கு முதல் அம்பெலம்மிகும் வருக்கத் தெழுத்திற்கொவ் வோர்செயுள் பேசுவது வருக்க மாலை" (12) எனவும், பிரபந்த தீபம், "வருக்க மாலையே வருக்கமாய்ச் செய்யுள் மொழிமுதல் எழுத்தெலாம் மொழிவது முறையே" (33) எனவும், பிரபந்தத் திரட்டு, "மன்அகவ லேவருக்க மாய் எட்டாய்ப் பாடினால் மன்னும் வருக்கமா லை" (28) எனவும் விளக்குகிறது.

இத்தனைப் பாட்டியல் நூல்களும் வருக்க மாலைக்கு இலக்கணம் வகுத்திருப்பினும் இதற்கேற்ற பழமையான இலக்கியம் ஒன்றுகூடக் கிடைக்கவில்லை என்பது உளங் கொளத்தக்கது. பெயரளவில் திருவேங்கட வருக்க மாலை, மதுரை மீனாட்சியம்மை உயிர் வருக்க மாலை, மருதாசலபதி உயிர் வருக்க மாலை போன்ற பிற்காலப் பனுவல்கள் இவ் விலக்கணம் நிரம்பப்பெற்றவை ஆகா என்பது வெள்ளிடை மலை. திருநாவுக்கரசரின் தேவாரமும் (V-97), ஔவைப் பிராட்டியின் ஆத்திசூடியும் அதனை அடியொற்றி எழுந்த பல ஆத்திசூடிகளும் வருக்க மாலை ஆகா. எனவே இருபது ஆசிரியப்பாக்களால் அமைந்த வருக்க மாலை என்னும் இலக்கியம் பாட்டியற் புலவர்தம் கற்பனையே எனக் கொள்ளலாம். ஆனால் மொழி முதல் எழுத்துக்களைக் கொண்டு யாப்பு, பொருள் வரையறை யின்றித் தோன்றிய வருக்கக் கோவை, ஆத்திசூடி முதலியன தொடர்ந்து வருகின்றன.

இத்தகைய ஆத்திசூடி மரபில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் (1839-1898) வருக்கக் குறள் எனப் பனுவல் ஒன்றைப் படைத்திருக்கிறார். பெயரினாலேயே அறியப்படும்படி குறள் வெண்பாக்களால் ஆன இந்நூல் நீதியை நுவல்பொருளாக

உடையது. மொழிமுதல் எழுத்துக்களை மட்டும் அன்றி மெய்யெழுத்துக்கள் உள்ளிட்ட 247 எழுத்துக்களிலும் தொடங்கிக் குறட்பாவை இயற்றியுள்ளார். இந்நூலுக்குச் சோழவந்தான் கிண்ணிமங்கல மடத்தைச் சேர்ந்த தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் அவர்கள் உரையெழுதியுள்ளார். மூலமும் உரையுமாக இந்த நூல் 1988 ஆம் ஆண்டு திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்தாரால் பதிப்பிக்கப் பட்டுள்ளது. எனினும் இந்நூல் எங்கும் கிடைப்பதில்லை.

மொழி முதலாகாத எழுத்துக்களை எல்லாம் முதலாக வைத்து ஆளும்போது இடத்திற்கேற்றபடி தக்க எழுத்துக்களைக் கூட்டி ஆண்டுள்ளார். பல இடங்களில் இயல்பாகப் பொருள் கொள்ள வாய்ப்பின்றி வலிதிற்கொள்ளலாக அமைந்துள்ளது. இதனால் நூலின் இலக்கியச் சுவை குறைந்துவிட்டது. நூலாசிரியராகிய வண்ணச்சரபம் சுவாமிகளே இதனை நன்றாக உணர்ந்துள்ளார். எனவே தான் இறுதியில்,

> "எல்லா வருக்கமும்சொல் என்குறட்பாக் கைத்திடினும்
> நல்லார் விரும்புவதே ஞாயம்என்னும் நானிலமே"

என்னும் குறள்வெண் செந்துறையை இணைத்துள்ளார்.

வண்ணச்சரபருக்குத் தம் பாடல்கள் சுவையற்றவை எனக் கூறும் வழக்கம் மிகப் பெரும்பாலும் இன்று இங்கு எல்லா வருக்க எழுத்தையும் சொல்லப் புக்கதால் இலக்கிய நயம் குறைந்துவிட்டது எனக் காரணம் காட்டுகிறார். இலக்கியச் சுவை இல்லாவிடிலும் இதிலுள்ள நீதிக்கருத்துக்களை (ஞாயம்) நல்லோர் ஏற்பர் என்கிறார். ஞாயம் என்னும் சொல்லை இரட்டுற மொழிதலாக்கி நல்லார் ஞாயம் (நீதி) விரும்புவதே என்றும் நல்லார் விரும்புவதே ஞாயம் (என் மீதுள்ள அன்பால் விரும்புவதே முறைமை ஆகும்) என்றும் கூறுகின்றார்.

இவ்வாறு பா முதல் எழுத்தினால் வடிவமைந்துள்ள இந்த வருக்கக் குறள்நூலில் மொழி முதலாகா எழுத்துக்கள் எவ்வாறு ஆளப்பட்டுள்ளன என நோக்குவதும், எழுத்துக்கள் தொடர்பான பிற செய்திகளைக் காண்பதுவும் இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். இது பற்றியே பொதுவாக எழுத்தியல் எனத் தலைப்பிடப் பெற்றது.

கடவுள் வாழ்த்தை விடுத்து, நூல் அகரத்தில் தொடங்கி, வரிசையாய் நடந்து, எனளகார முதலில் நிறைவு பெறும் 247 குறட்பாக்களால் ஆனது. ஈற்றில் உள்ள முன்பு காட்டப் பெற்ற குறள்வெண் செந்துறையோடு சேர்ந்து மொத்த செய்யுள் தொகை 249 ஆகும்.

நூலின் 13-31, 45-55, 71-73, 76, 78-103, 154-187, 192, 193, 197, 198, 200-247 ஆகிய குறள்கள் மொழிமுதல் ஆகாத எழுத்துக்களை முதலில் பெற்றனபோல் அமைந்தவை. இவற்றின் முதல் எழுத்தமைப்பே இங்கு சிந்திக்கப் பெறுகிறது.

எந்த எழுத்தும் தன்னைச் சுட்டும்போது மொழிமுதல் ஆகும். இந்த விதியைப் பயன்படுத்தி ஙகரம் (44), ஙாவில் (45), ஙிகரம் (46), ஙீகாரம் (47), ஙுவ்வனையார் (48), ஙூகாரம் (49), ஙெகரம் (50), ஙேகாரம் (51), ஙை அனையார் (52), ஙொகரம் (53), ஙோகாரம் (54), ஙௌவனையார் (55), ஞுகரம் (72), ஞூகாரம் (73), ஞோகாரம் (78), ஞௌவில் (79) என்பன குறள் வெண்பாவின் முதற்சொல்லாக ஆளப்பட்டுள்ளன.

வடசொற்களை அவ்வாறே தற்சமமாகக் கொண்டு, சௌவியம் (67), ஞேயம் (75), யக்கர் (யக்ஷர் 152), யுகம் (156), யூகம் (157), யோகம் (162), யௌவனம் (163) என ஆளுகிறார்.

மொழி முதலாகாத பல எழுத்துக்களின் முன் உயிர் எழுத்துக்களைச் சேர்த்துப் பயன்படுத்தியுள்ளார். அஃறிணை (13), அழகில் (200), அழாஅது (201), அழைக்கும் (208), அறமே (224), அறா மலம் (225), அறைப்பூடு(232), அறௌவ (அல்தௌவ 235), அனகன் (236), அனாசம் (237), அனிச்சம் (238), அனீங்க (அல்நீங்க 239) என்னும் இடங்களில் அகரம் முதலில் வந்துள்ளன.

இக்கு (14), இங்கும் (15), இச்சை (16), இஞ்ஞானம் (17), இட்டபடி (18), இண்உறுப்பில் (19), இத்தரையில் (20), இந்நகரே (21), இப் பார் (22), இம்மை (23), இய்யரை (24), இர்ரெனல் (25), இல்லும் (26), இவ்வகிலம் (27), இழ்காத (28), இள்ளதற்கு (29), இற்ற (30), இன்னல் (31), இடம்பன் (80), இடாதார் (81), இடி (82), இடீர் (83), இடெனில் (இடு எனில் 86), இடேன் (87), இடை (88), இடௌகாரம் (91), இணங்காரை (92), இணாப்பு (93), இணியில் (94), இணீற்றில் (இண்ஈற்றில்

95), இணென்பொறி (98), இணேய்ந்த (99), இணை (100), இணௌகாரம் (103), இயையா (160), இரவுபகல் (164), இராசபயம் (165), இரியா (166), இரீர்ங்கோட்டு (167), இரென்று (170), இரேணுகை (171), இரைக்கே (172), இரௌரவம் (173), இலகும் (176), இலாபம் (177), இலிங்கம் (178), இலீலை (179), இலென்று (182), இலேச (183), இலையில் (184), இலௌகிக (187), இழிவந்த (202), இழீனம் (203), இழுக்கு (204), இழூஉ (205), இளகா (212), இளாவிருதம் (213), இளிபட்ட (214), இளீ (215), இளெகரம் (218), இளேய்ந்த (219), இளையா (220), இளௌகாரம் (223), இறிக்கை (226), இறீது (இல்தீது 227), இறென்றற்கு (இல்தென்றற்கு 230), இறேதம் (231), இனென் (242), இனேயம் (இல்நேயம் 243) இனைய (244), இனௌவல் (இன்நௌவல் 247) என இகரம் சேர்ந்த எழுத்துக்கள் மொழிமுதல் ஆகி உள்ளன.

உடுக்கை (84), உடூஉ (85), உடொழில் (உள்தொழில் 89), உடோகை (90) உணும் (96), உணூஉ (97), உணொருவனை (101), உணோம்படி (உள்நோம்படி 102), உயொரு (161), உருவும் (168), உரூஉ (169), உரொக்கம் (173), உரோமசன் (174), உலுத்தர் (180), உலூகம் (181), உலொன்றி (185), உலோகத்தில் (186), உவுரு (192), உழூம் (193), உழொரூ (209), ஊழோடு (210), உளுத்த மரம் (216), உளுக்கம் (217), உளொரு (221), உளோம் (222), உறுக்கும் (228), உறூஉ (229), உறொகுத்து (உல்தொகுத்து 233), உறோங்காரம் (234), உனும் (240), உனூல் (241), உனொரு (245), உனோங்கல் (246), ஆகியன உகரத்தோடு சேர்த்துப் பயிலப்பட்டுள்ளன. எழென்றும் (206) என்று எகரமும் ஒரு குறளில் முன் எழுத்தாக இடம் பெற்று உள்ளது.

இவ்வாறு ஓர் உயிர்க்குறிலை முன்னால் சேர்த்ததால் கருதிய எழுத்து முதலாவது ஆகவில்லை என்பது வெளிப்படை. எனவே அதனைப் பா முதல் எழுத்து எனக் கூறலாகாது. அதனால் வருக்க முதன் மொழி என்னும் இன்றியமையாத இலக்கணம் இதில் இல்லாமல் போய்விடுகிறது என்பது வெளிப்படை. இக்கருத்து தேவாரப் பதிகத்திற்கும் (5-97) பொருந்தும்.

தான் விழைந்த எழுத்துக்களை இரண்டாவது இடத்திலும் எவ்வாறெல்லாம் இடர்ப்பட்டு வருவிக்கிறார் என்பதனை நோக்கல் தகும். யகர வருக்க எழுத்துக்களுக்கு இய்யரை (ய் 24), இயில் (யி 154), இயீ (யீ 155), இயென் (யெ 158), இயே (யே 159) என யகர உடம்படு மெய்யாக்கி ஆள்கிறார். இவ்வாறே இவ்வகிலம் (வ் 27), உவுரு (வு 192), உவூழ் (வூ 193), ஒவொரு (வொ 197), ஓவோடு (வோ 198) என்னும் இடங்களில் வகர உடம்படுமெய் வருகின்றன.

தமிழ்ப் புணர்ச்சி விதிகளைப் பின்பற்றியும் பல எழுத்துக்களை அமைத்துக் கொள்கிறார். அவை வருமாறு:

1. சுட்டெழுத்தை அடுத்து வந்து இனமெய் மிகல். இஞ்ஞானம் (ஞ் 17), இத்தரை (த் 20), இந்நகர் (ந் 21), இப்பார் (ப் 22).

2. மெய்யின் முன் உயிர் வந்து உயிர்மெய் ஆதல். இணீற்றில் (ணீ 95), இணென் பொறி (ணெ 98) இணேய்ந்த (ணே 99), உணொருவனை (ணொ 101), இணௌகாரத்தில் (ணௌ 103), உயொரு (யொ 161), இலென்று (லெ 182), உலொன்றி (லொ 185), இளெகரம் (ளெ 218), இளேய்ந்த (ளே 219). உளொரு (ளொ 221), இனென் (னெ 242), உனொரு (னொ 245), உனோங்கல் (னோ 246).

3. மெய்யின் முன் உயிர்மெய் வந்து திரிந்து, உயிர்மெய் ஆதல். உள்தொழில் - உடொழில் (89) உள்நோம்படி - உணோம்படி (102), இல்தீது - இறீது (227), இல்தென்றல் - இறென்றல் (230), உல்தொகுத்து - உறொகுத்து (233), அல்தௌவ - அறௌவ (235), அல்நாசம் - அனாசம் (237), அல்நீங்க - அனீங்க (239), உன்நூல் - உனூல் (241), இல்நேயம் - இனேயம் (243), இன்நௌவல் - இனௌவல் (247).

4. உயிர்மெய்யின் முன் உயிர் வந்து உயிர்மெய் ஆதல். இடு + எனில் - இடெனில் (86), உடுஔகை - உடௌகை (90), இரு ஈர்ங்கோடு - இரீர்ங்கோடு (167), இருஎன்று - இரென்று (170), இழுஈனம் - இழீனம் (203), எழுஎன்றும் - எழென்றும் (206), உழுஒரு - உழொரு (209), அழுஔவை - அழௌவை

(211), இறுஇக்கை - இறிக்கை (226), இறுஏதம் - இறேதம் (231) உறுஓங்காரம் - உறோங்காரம் (234).

மேலே 2, 3, 4 இல் காட்டப் பெற்றுள்ள சொற்களை உற்று நோக்கினால் அவை புணர்ச்சி விதிகளின்படி புணர்ந்து, செய்யுள் விகாரம் பெற்று அமைந்திருப்பது விளங்கும். அத்தகைய செய்யுள் விகார விவரம் வருமாறு:

1. புணர்ச்சியில் உடம்படு மெய் பெற்று செய்யுள் விகாரத்தால் தொக்கது:-

இடெனில் (இடுவெனில் 86), உடோகை (உடுவோகை 90), இரீர்ங்கோடு (இருவீர்ங்கோடு 167), இரென்று (இடுவென்று 170), இழீனம் (இழுவீனம் 203), எழென்றும் (எழுவென்றும் 206), உழொரு (உழுவொரு 209), அழௌவை (அழுவவ்வை 211), இறிக்கை (இறுவிக்கை 226), இறேதம் (இறுவேதம் 231), உறோங்காரம் (உறுவோங்காரம் 234).

2. புணர்ச்சியில் இன மெய் விரிந்து விகாரத்தால் தொக்கது:-

இணீற்றில் (இண்ணீற்றில் 95), இணென் (இண்ணென் 98), இணேய்ந்த (இண்ணேய்ந்த 99), உணொருவனை (உண்ணொரு வனை 101), இணௌகாரத்தில் (இண்ணௌகாரத்தில் 103), இயில் (இய்யில் 154), இயீ (இய்யீ 155), இயென் (இய்யென் 158), இயே (இய்யே 159), உயொரு (உய்யொரு 161), இலென்று (இல்லென்று 182), உலொன்றி (உல்லொன்றி 185), இளெகரம் (இள்ளெகரம் 218), இளேய்ந்த (இள்ளேய்ந்த 219), உளொரு (உள்ளொரு 221). இனென் (இன்னென் 242), உனொரு (உன்னொரு 245), உனோங்கல் (உன்னோங்கல் 246).

3. புணர்ச்சியில் மெய் திரிந்து மெய் விரிந்தபின் செய்யுள் விகாரத்தால் மெய் தொக்கது:-

உள் தொழில்-உடொழில் (உட்டொழில் 89), உள்றோம்படி உணோம்படி (உண்ணோம்படி 102), இல்தீது-இறீது (இற்றீது 227), இல்தென்றல் - இறென்றல் (இற்றென்றல் 230), உல் தொகுத்து - உறொகுந்து (உற்றொகுத்து 233), அல்தௌவ-அறௌவ (அற்றௌவ 235), அல்நாசம்-அனாசம் (அன்னாசம்

237), அல்நீங்க-அனீங்க (அன்னீங்க 239), உன் நூல்-உனூல் (உன்னூல் 241), இல்நேயம் - இனேயம் (இன்னேயம் 243), இன்நௌவல்-இனௌவல் (இன்னௌவல் 247).

இயல்பாக அமையாத எழுத்துக்களைக் கொண்டு அமைக்க முயன்றதால் இப்பனுவல் ஒரு சித்திரகவிபோல அமைந்து, வியப்பூட்டுகிறதே யன்றி இலக்கியச் சுவை பயப்பதில்லை.

இத்துணையே யன்றி ஒரு சொல்லின் எழுத்துக்களைத் தனித்தனியே பிரித்துக் கூறப்படுவதையும் வருக்கக் குறள் நூலில் காண்கிறோம். அவை வருமாறு:-

இர் எனல் முன் தவ்விடல் (தயிர் 25), இள் அதற்கு முன் ககரம் இட்டது (கள் 29), இண் ஈற்றில் புகரம் முதலில் மா இடல் (மாண்பு 95), இண் என் பொறிமுன் சாகாரம் (சாண் 98), இண் ஏய்ந்த வீகாரம் (வீண் 99), இஎன்பொறி பன்மூன்றாம் ஒற்று ஏய் சொல் (இல் 158), ஓவோடு மவ்வொற்று உறும் சொல் (ஓம் 198), இள் எகரத்தில் தோய்ந்தாங்கு (எள் 218), இள் ஏய்ந்த நாகாரம் (நாள் 219), இன்என் பொறிமுன் மவ்விகரம் ஏய்ந்தன்ன (மின் 242).

ஞை என்றற்கு ஒல்கா (இகழப்படுவதற்கு நாணாத 76), இயீ இரண்டும் சொற்றாங்கு எயிறு இலங்க ஏற்பீர் (பல்லைக் காட்டியாசிப்பவர்களே 155) என இரண்டு இடங்களில் எழுத்து குறிப்புப் பொருளில் ஆளப்பட்டுள்ளது. கணக்கில் இகரம் $\frac{1}{2}$ என்னும் பின்ன எண்ணின் குறியீடாவதும் ஓர் இடத்தில், "இ அரை ஆமாறே" (24) என இடம் பெற்றுள்ளது.

எழுத்தின் வரிவடிவத்தைப் பற்றிய சில செய்திகளையும் இந்நூலில் காணலாம். அவையாவன:-

1. ணகர ஒற்றில் மூன்று சுழிகள் உள்ளன. (19)

2. டௌ என்னும் வரிவடிவில் ளகரம் அமைந்திருப்பது பொருந்தம் அற்றது (91) இவர் எழுத்துக்களின் வரிவடிவத் திற்கும் ஒலிவடிவத்திற்கும் ஒப்புமை இருக்க வேண்டும் எனக் கருதுகிறார். ஔ என்னும் எழுத்தின் வரிவடிவத்தில் ளகரம் ஏன் என்பது இவருடைய வினா. "அகரத்து ஈர்ஏ ழாவது ஒற்று ஒன்றி ஔகாரம் ஆதல் அறிவுளார் அறிந்தும் அப்பொறிக்

குறியில் பதினா றாவது ஒற்று ஏதோ நிமித்தத்து இசைத்தது ஓர் வியனே'' என்பது அறுவகை இலக்கணம் (70)

3. இகர வரிவடிவில் எழுத்தின் தலை குனிந்துள்ளது. (154)

4. இகர வரிவடிவின் ஈற்றில் சுழித்து (இ) ஈ எனல் தவறு. (159) ''இகரத்து ஈற்றினைச் சுழித்து ஈ எனலும்...... போல்வன பிறவும் புரையினவாமே'' என்பது அறுவகை இலக்கணம். (48)

5. உகரத்தின் வரிவடிவம் பறையை முழக்கும் கோல் போன்ற உருவத்தை உடையது. (192)

6. ளகர வரிவடிவம் ஔகார உயிர், உயிர் மெய்கள் அனைத்தின் வரிவடிவிலும் பொருந்தியுள்ளது. (223)

சில எழுத்துக்கள் வரிவடிவில் பெரியதாக இருந்தும் ஆட்சியில் பயன்படுத்தப் பெறுவதில்லை எனக் குறிப்பிடுகிறார்.

''ஞூகாரம் போல்வளர்ந்து நூறாண்டு இருந்துமுத்திக்கு
ஏகாது இறத்தல் இழிவு'' (73)

''ஞோகாரம் போல்துலங்கி நுண்ணிமைஒன் றும்தெரியாப்
போகாங்கர் பூமிப் பொறை'' (78)

என்பன வருக்கக் குறள் நூலின் பாக்கள்.

பல எழுத்துக்கள் தமிழ் நெடுங்கணக்கில் மட்டும் இடம் பெற்று மொழிவழக்கில் பயன்படுத்தப்படுவதே இல்லை. ங வருக்க உயிர்மெய்கள் நின்று பயனில்லாதன என்பதை வருக்கக் குறளின் 45 முதல் 55 வரையான பாக்கள் காட்டு கின்றன. எடுத்துக்காட்டாக இரண்டு:-

''ஙாவில் பயன்இல்லான் ஒற்றாயர் தந்தையினது
ஆவிக்கு உதவாத வன்'' (45)

''ஙையனையார் மேலோர் நவில்கின்ற நன்மொழியில்
ஐயம் நினைக்கின்ற வர்.'' (52)

இவ்வாறே ஞு, ஞௌ, ணௌ ஆகியவற்றின் நின்று பயனின்மையையும்,

''ஞுகரம் எனப்பயன்இல் நூல்விரிக்கும் மாந்தர்
இகபரத்தும் பேறுஒன்று இலார்'' (72)

"ஔவில் கடையாய் நவிலப் படாதிருந்தும்
செவ்வில் திகழ்வார் சிலர்'' (79)

"இண்ஔளகாரத் தில்புணர்ந்தாங்கு ஈடேற்றம் வேண்டாது
உணவளவில் துய்ப்பார் உளர்'' (103)

எனச் சுட்டிக் காட்டுகிறார்.

ஙகர மெய் தன் வருக்கத்தோடும், தனக்குரிய வல்லின மாகிய ககர வருக்கத்தோடும் மட்டுமே மயங்கும். பிற எழுத்துக் களோடு பெரும்பாலும் மயங்காது. "ஙகரஒற் றின்பின்அவ் வினத்தொடு ககர உயிர்மெய் தோன்றும்" (அறுவகை இலக்கணம் 126) என இலக்கணம் வகுத்த இந்நூலாசிரிய சுவாமிகள் இதில்,

"ஙகரம் எனஇனத்தை நன்கு தழுவும்
மகன்நெடுமால் என்னமகிழ் வான்'' (44)

என அத்தன்மையைப் புலப்படுத்துகிறார்.

அனைத்து எழுத்துக்களையும் விடாமல் ஆளவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுவிட்டதால், இவர் இசைக் குறிப்பாகக் கையாள்வதையும் விட்டு வைக்கவில்லை. வண்டின் முரற்சியை ஞீ என்றும் ஒலியாகக் காட்டுவதை,

"ஞீஎன்று இரையாத நீலவண்டுஒப் பாம்விழியார்த்
தாய்என்றே கொள்வார் தவர்'' (71)

என்னும் குறளில் காண்கிறோம்.

இதுகாறும் நோக்கியவற்றால் வருக்கக் குறள் தமிழ் நெடுங்கணக்கில் உள்ள எல்லா எழுத்துக்களையும் எப்படி யாவது மொழி முதலாக்க முயல்கிறது என்பதனையும், அப்படிச் செய்ய மிகவும் இடர்ப்பட வேண்டியுள்ளது என்பதனையும் அறிய முடிகிறது. இம்முயற்சி சித்திரகவிகளைப் போன்று கற்போரை வியக்க வைக்கிறது.

வண்ணச்சரபர் இலக்கியத் துறையில் மேற்கொண்ட புதிது புதிதான பரிசோதனைகளுள் இதுவும் ஒன்றாகும். தனக்கென அவர் கொண்டிருந்த சில இலக்கணக் கோட்பாடுகளையும் இந் நூலில் காண முடிகிறது.

# குருமாமணி திருவடிகள் போற்றி செய்வாம்

ஐ. ஆர். நாகேசுவரசிவம்

அறுவகைச் சமயத் தோர்கு மவ்வவர் பொருளாய்வேறாய்
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்
கறிவினி னருளான் மன்னி யம்மையோடப்ப னாகிச்
செறிவொழியாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்
(சித்தியார்)

வேதத் தினிற்கூறும் மெய்நெறியாம் சன்மதத்தை
ஆதரித்த தன்றி ஆதீதபர – போதமுணர்
ஆதிசங்கரன் சொல்வழி ஆன்ற தண்டபாணி கோளும்
நீதிபற்றி யீதுரைப்பேன் நேர்ந்து.

என்ற வாக்கிற்கிணங்க உலகமும் வேதமும் மிகத் தொன்மை யானதாகும். வியாசர் வகைப்படுத்திய 1. இருக்கு, 2. யசுர், 3. சாமம், 4. அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களும் 1. கருமம், 2. பக்தி, 3. ஞானம் என முப்பெருங்காண்டங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மக்கள் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நிலைகளைக் கூறுவது "கர்ம காண்டம்". 2. கடவுள் வழிபாடு மந்திரம் உபாசனை முதலியன பற்றி கூறுவது "பக்தி காண்டம்". 3. இறுதியில் ஆன்மாவானது இறைவனோடு ஒன்றும் பேரின்ப இலக்கணத்தைக் கூறுவது "ஞான காண்டமாகும்" இப்படி வேதம் பக்தி காண்டத்தில் தெய்வ நிலைகளைக் கூறும் போது ஆறு வகைச் சமயங்களாக வகைப்படுத்திக் கூறுகிறது.

சமயம் என்பது பல வகை பொருட்களைக் கொண்டு மணம், குணம், சுவை இவைகளைக் கூட்டி பக்குவப்படுத்திச் செய்வது போல மக்களின் பக்குவப்பட்ட பேதங்களுக்கேற்பப் பல தரப்பட்ட கடவுள் நிலைகளை மக்களின் நிலைக்கேற்ப வகைப் படுத்தி கூறுவதேயாகும். அவ்வகையில் காலடியில் பிறந்த ஸ்ரீ ஆதிசங்கரர் முதன் முதலான "சன்மத தாபனம்" என்ற அறுவகை சமயங்களை வகைப்படுத்தி வடமொழியில் பல தோத்திரங்களை அருளியுள்ளார். அதே ஒப்புமையோடு

திருநெல்வேலியில் பிறந்த சங்கரலிங்கம் எனத் திருப்பேர் கொண்ட அருட்திரு தண்டபாணி சுவாமிகளும் தென் மொழியில் பல பாடல்களைப் பாடி உணர்த்தி உள்ளார்.

ஒவ்வொரு சமயமும் தனது சமயமே மேலான தலைமைச் சமயமென வற்புறுத்தும். பிறசமயம் தாழ்வு என்ற முரண்பட்ட கருத்து மேலோங்கி சமயப் பூசல்கள் உண்டாயின. சமயசரான முடையோர் மட்டுமே கடவுள் ஒன்று வேத வடிவங்கள் பல என உணர்ந்தனர். எல்லா மூர்த்தி அனுபவமும் ஏகபரத்தின் விளையாட்டே என சுவாமிகள் உணர்ந்தார். அறுவகை சமயத் தோடு சமயாதீதம் என்ற ஒன்றையும் சேர்த்து ஏழு வகைப்படுத்தினார்.

| | கிழமை | கடவுள் | சமயம் |
|---|---|---|---|
| 1. | ஞாயிறு | சூரியன் | சௌர சமயம் |
| 2. | திங்கள் | சிவன் | சைவ சமயம் |
| 3. | செவ்வாய் | சக்தி | சாக்தேய சமயம் |
| 4. | புதன் | விட்ணு | வைணவ சமயம் |
| 5. | வியாழன் | கணபதி | காணாபத்ய சமயம் |
| 6. | வெள்ளி | முருகன் | கௌமாரம் |
| 7. | சனி | குரு | சமயாதீதம் |

இவை ஆறும் வேத உடன்பாடு உடையவை, மற்ற சமயங்கள் யாவும் இதனுள் அடங்கும் என்பதனை,

"காணமறை நெறி ஆறே அவைக லந்தே
கழிக்களும்அ தீதம் ஒன்றும் கவினும் கண்டீர்
ஈனமிகும் புலைச்சமயம் இனி ஒன்று உண்டா
யினும் அதுவும் இவ்விருமுன்றினது சார்பே" என்றும்,

அநந்த பேதத்து அறுவகை சமயமும்
அவைமுழு தொருவலும் தழுவலு மாகும்
அதீதம் ஒன்றும் ஆன ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம் ஏழாயவே

என்று சத்திய சூத்திரத்தில் சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

"நூறு சமயம் உளவாம் நுவலுங்கால்
ஆறு சமயம் அவ்வாறுட் படுவன
கூறு சமயங்கள் ... ... ... என்ற திருமூலர் கருத்தை சுவாமிகள் காணுகிறார்.

**சௌர சமயம் - சிவ சூரியன் வழிபாடு**

"தாதிவர்தண் தாமரைக்கோர் நாயகனே! வானகத்து
தலைமை கொண்டாய்
யாதினும்நின் னருள்கலந்த விதமுணர்ந்தும் தயங்குமெனக்
கிரங்கு வாயே",

எனத் தனிப்பாடல் ஒன்றில் கூறும் சுவாமிகள் சூரிய மூர்த்தியே தலைமையாகக் கொண்டு வழிபடுவர் சௌர சமயத்தினராவர் என்றும், கிழமை என்ற சொல்லுக்குத் தலைமை எனப் பொருள்படுவதால் முற்கிழமையாகிய ஞாயிற்றுக்கிழமையே உலக முதல்வனாகிய சூரிய பகவானின் வாரமாகத் திகழ்கிறது. சூரியன் இல்லாத நாடுகள் இல்லை. நாட்கள் இல்லாத கிழமை இல்லை. ஆகையால் எல்லாக் கிழமையும் சூரியனுடையது என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆவணி மாதமாகிய சிம்ம ராசியில் சூரியன் உள்ளபோது ஞாயிற்றுக் கிழமைகளில் உதய சூரியனுக்குப் பொங்கலிட்டு நியமத்தோடு வழிபடுவது மிகச் சிறப்புடையதாகும் என்றும் சுவாமிகள் கூறுகிறார்.

சூரியன் வெப்பம் படாத எந்தத் தாவரமும் நன்கு வளருவதில்லை. அதேபோல சூரியன் வெப்பத்தில் காய்ந்த எந்த வித்தும் பழுதடைந்து போனதாகச் சரித்திரம் இல்லை. இதனால் சூரிய வெப்பத்திற்கும் நெருப்பின் வெப்பத்திற்கும் உள்ள வேறுபாட்டினை அறியலாம். சூரியனை வழிபட அறிவொளி பெருகும். எந்தக் கோயிலுக்கும் செல்ல வேண்டிய தில்லை. இருந்த இடத்திலிருந்தே தரிசிக்கலாம். கோயில் திருவிழாக்களில் "சூரிய பிரபை" என்ற வாகனம் ஒன்றுண்டு. அந்த சூரிய வட்டத்தினுள் இறைவனை வைத்து வழிபடுவதால் எல்லாக் கடவுளையும் வழிபட்ட பலனைப் பெறலாம் என்பதாகும். சிவபிரானின் வலக்கண்ணாகச் சூரியன் உள்ளார். சூரிய வழிபாடு எல்லா வழிபாட்டிற்கும் பொதுவான வழி பாடாகும். சூரியபூசை இல்லாத சிவபூசை பயனற்றதே எனச் சைவாகமம் கூறுகிறது. சூரியன் தன் வெப்ப மிக்க கதிர்களின் மூலம் கடல் நீரை ஆவியாக்கி மேக உருவாக்கி மழை பொழிவிக்கிறான்.

உத்தராயணத்தில் முதல் மாதமாகிய தை மாதம் முதல் நாள் மகர சங்கராந்தி சூரியனுக்காக ஏற்பட்ட வழிபாடே

ஆகும். சூரிய கிரகணத்தால் குந்தி, மகாராஜன் கர்ணனைப் பெற்றாள். ஆஞ்சிநேயர் "நவ வியாகரனம்" என்ற இலக்கண நூலைச் சூரியனை குருவாக கொண்டே கற்றார். நாகப் பாம்பின் குட்டிகள் முதலில் சூரியனிடமிருந்தே விடத்தைப் பெறுகின்றன. காலை, பகல், இரவு காலங்களில் மும்மூர்த்திகளாக சூரியன் செயல்படுகிறார். தாமரை மலர்க்குரிய கடவுள் ஆதலின் 'தாமரை நாயகன்' எனத் துதிப்பாடலில் சுவாமிகள் பாடுகிறார். சூரியன் தான் அசையாமலிருந்து எல்லாவற்றையும் அசைவிக்கிறார்.

சூரியனைப் பூசிப்பதற்கு தாம்பிரத் தகட்டில் தாமரை இதழ்போலக் கோடு வரைந்து அதன் மூல மந்திரத்தை எழுதி, செந்நிற மலரால் அர்ச்சித்து, செந்நிற அரிசியை அமுதூட்டி, செஞ்சந்தனம் அணிவிப்பதும் முறையாகும் எனச் சூரிய மந்திர பாடலில் அறியலாம்.

> "செய் தகட்டில் பிரணவத்தை திருந்தக் கீறி
> ஆரியத்து 'ஆம்' என்றுள்ளிட்டு இரண்டும் கூட்டி
> ஆதித்தாயநம என அறைந்து பூசித்து
> ஈரியல்பும் பெறலாகும், குந்தியாதி
> எண்ணில் பலர் பெற்றனள், வம்பெணல் கூடாதே"

மயூரன் என்ற கவிஞன் சூரியசதகம் பாடி கண்பார்வை பெற்றதாயும் அந்த சதகப் பாடல் கச்சபேஸ்வரர் கல்வெட்டில் உள்ளதாயும் அறிகிறோம்.

"நமஸ்கார ப்ரியோ பானு" என்பது போல அன்பரது வணக்கத்திற்கு மகிழ்பவன் என்று வடநூல் கூறுகிறது. ஞாயிறு போற்றதும் ஞாயிறு போற்றுதும் என்று பகருவது தென்மொழி சிலம்பு. வண்ணச்சரபம் அருட்டிரு தண்டபாணி சுவாமிகள் நாள்தோறும் நீராடிய பின் உடல் முழுக்க நீறு பூசி, உச்சி வேளையில் சூரியன் முன் இரு கைகளையும் விரித்து தியானித்து. கண்ணாற்கண்டும் நீண்ட நேரமிருப்பர். கீழ்விழ்ந்து வணங்குவர். வீதியின் கண் உள்ள மண் அடியார் பாதம் பட்ட மண் என்பதால் சிரசில் வைத்து கொண்ட பின்பே வேல் வழிபாட்டுக்குச் செல்வார்.

சூரிய பரத்துவம் வழிபாட்டு முறையில் சுவாமிகள் கூறும் போது,

"பிரணவ மந்திரம் தருப்பை பசுவின் சாணம்
பிழை என்னா நெறி ஆறும் பேணத் தக்க
வரமுதலாம் சூரியனை வழிபட்டு அந்த
வாரமதிற் பொங்கலிட்டு, வணங்கி போற்றி"

என்றும்,

"முப்பொழுதில் மூர்த்தியொரு மூன்றுமாக" ... ... ...
விளம்பு தெய்வம் யாதும் அதுள் விளங்கு மன்றே.
"சட்சமயத் தொண்டர்களும் பரிதி தன்னைத்
தங்கள் தங்கள் தெய்வமெனச் சாற்றும் பண்பால்"

என்றும் சூரியமாலை என்னும் நூலில்

புரவியே பூடையதனி இரதத்தில் ஏறி
பொருப்பை வல மாவை என்ன
சூரியனை பலவாய தெய்வத்து ஒன்றாய்ச்
சொல்வார் உண்டு ஆனாலும், துகளில் ஆற்றற்

சிரியர்க்கே அதன் மகிமை விளங்கும். ஆங்கே,
சிவன் முதலாம் தேவரெல்லாம் திகழ்வார் என்றே
ஆரியமாதிய கலைகள் யாவும் சொல்லும்" - எனவும்,
"நினைத்தபடி வாழ்வுடைவார் நிசம் சொன்னேனே" - எனவும்

சூரியனுள் மற்றிரண்டு அடரும் தோய்ந்து துலங்குதல் போல் - எனவும்

ஆங்காங்கே கூறுவர் தண்டபாணி சுவாமிகள். இவர் எழுதிய சௌர சமய நூல்கள். 1. சௌர சூத்திரம்-7. 2. சூரியமாலை 30 கவி. 3. சூரியன் எழுகூற்றிருக்கை-1. 4. ஏழாயிரப் பிரபந்தம் 100 பதிகம். 1000 கவி. 5 சூரிய தரிசன சருக்கம் முதலியன.

"அறுவகை சமயத்தோரும், அப்புறத்து ஆனார் தாமும்
பெருகதி இனைத்தென்று, ஒராய் பிழை நெறிப் பிசிதர்தாமும்
சறுஅறும் பொருளா விண்ணிற் காண்டரு கதிரோன் அன்றி
உறுதுணை வேறின் றென்பார் உணர்வும்அ தெர்ப்ப தாமே",

என சுவாமிகள் சௌர மண்டல கடவுளிவிய சூரிய வழிபாட்டின் அவசியத்தைப் பலவாறு விளக்குகின்றார். இவ்வாறே பிற ஐந்து மதக் கொள்கைகளையும் தத்துவங்

களையும் விளக்கிச் செல்கிறார். அவற்றையெல்லாம் விரிக்கின் பெருகும்.

**சமயாதீதம் பொது கடவுள் குரு வழிபாடு ஆகும்.**

பொதுவாய் உள்ள பரம்பொருளே குருவடிவம் என்பது சமயாதீத இயல்பாகும். தண்ணீர் ஆலங்கட்டி, பனிக்கட்டி ஆக ஆவதும் இளக்கமான நெய் குளிர்ச்சியால் இறுகியிருப்பது போலவும் ஆம் ஆகையால் அருவமே உருவம், உருவமே அருவமாகும்.

''நீராலங்கட்டி யெனத் தடித்தல் போலும்
நெய்யுறைந்து கையினிடை நிலவல் போலும்
பேராகம் கொண்டு தெய்வம் நிற்கும்''

என்பது தியானானுபூதி. தெய்வம் இல்லை என்ற நாத்திகனும் கூட இரு இல்லை எனக் கூறமாட்டான். கூற முடியாது. கெட்ட ஒரு நெறியை ஒருவன் கூறுவதைக் கேட்டு பலர் அவன் வழியிற் செல்பவராக இருப்பராயானால் அவன் குரு அல்ல அல்லவா. எனவே தெய்வமில்லை என்பவனும் கூட ஒப்புகின்ற தெய்வம் பெரிய தெய்வம் குரு என்பார். குருபரத்துவ நூலில் சுவாமிகள்,

''குருவருள் விட்டு உலகில் ஒரு சமயமில்லை
கூறரிய கடவுள் மகன் குரு என்றெண்ணித்
திருவருள் வேண்டுவதெவர்க்கும் இயல் பென்றாலும்
தெளிந்தோர்க்கு அவன்னானே தெய்வமாகும்''

என கௌமார முறையில் கூறுகிறார்.

ஆயிரம் சூரியர் ஒன்று கூடி தலையாலே எழுதும் தவமுடையவனானாலும் உலகிற் புறந்தாளேயானாற் மாயை பற்றும் எனக் கூறி பல ஆண்டுகளாகியும் இன்னும் மாயை விலகவில்லை, முருகன் திருவருளும் கிட்டவில்லையே என்கிறார்.

ஆயிரம் பரிதி தலையினால் எழுதும் அணிப்புகழ்
உடையவன் ஒருவன்
மாயிரு ஞாலம் தனிப்பிறந்தாலும் மாயையாற்
சளப்படும் என்ன
வாயினால் உரைத்துத் தேற்றி எத்தனையோ வருடமாகி
யும் எழிற் வடிவேற்

சேயிரங்கில்லான் உலகவா தனையும் தீர்த்திலேன் மிகத் திகைத்தேனே என மிக வருத்தமுற கூறுகிறார்.

குருவழிபாடே சிறப்புடையது என்பதைப் பலவாறு அறியலாம். சூரியர் குருவாக வந்து ஆஞ்சிநேயருக்கு நவ வியாகர இலக்கணம் போதித்தார். சிவபிரான் சனகாதியர்கட்கும், திருமால் அர்ஜுனனுக்கு கீதையையும், கணபதி நம்பியாண்டா ருடன் மெய்கண்ட தேவருக்கும் சைவ சித்தாந்த கருத்தினையும், முருகக் கடவுள், சிவன், அகத்தியர், அருணகிரி ஆகியோருக்கு பிரணவப் பொருளையும் குருவாகவே வந்து உபதேசித்து அருளினர். இப்படி அறுசமய கடவுளிடத்தும் குரு தன்மையை காண்கிறோம். சுவாமிகள் இயற்றிய சமயாதீத பாடல்கள் வருமாறு:

சமய சூத்திரத்தில், சமயாதீத சூத்திரம் 7 ஏழாயிரம் பிரபந்தத்தில் சமயாதீதப் பதிகம் 100-க்கு கவி 1000 பொது பதிகம் 17 திருப்புகழ் 100, சன்மத சிலேடைப் பதிகம் 7, சமரச முன்னிலை கவி 102, நீரோட்ட அந்தாதி கவி 100, சமரச பதிகம் 16-க்கு கவி 208, திருவருள் நாட்டம் கவி 1000, சிவ குருநாத வெண்பா கவி 100, தெய்வ திருவாயிரம் கவி 1000, மெய் விரோதய சதகம் 100 கவி, வண்ணக்கவி பெரியது 1, இப்படி பல. வடிவம், பெயர், வரலாறு ஏதுமில்லாத பொதுக்கடவுள் மீது இப்படி பல்லாயிரம் பாடல் பாடிய பெருமை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளுக்கு மட்டுமே உரித்தான தனிச் சிறப்பாகும்.

# குருபர தத்துவம்

நாகப்பா. நாச்சியப்பன்

தமிழ் இலக்கிய வகைமைகளுள் வரலாற்று இலக்கியங்கள் என்பவை குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றவை. இவற்றுள் தன் வரலாறு கூறுதல் (Auto Biography) பிறர் வரலாறு கூறுதல் (Biography) என்ற இரண்டு நிலைகள் உண்டு. இவ்விரண்டு நிலைகளிலும் நின்று தமிழ் உலகத்திற்கு முதன் முதலாகத் தன் வரலாறு, பிறர் வரலாறு என்ற இருபெரும் இலக்கியங்களைச் செய்யுள் வடிவில் செய்து அளித்த பெருமைக்கு உரியர் மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். அவர்தம் ஒப்பற்ற தன் வரலாறு (Auto Biography) நூலான 'குருபர தத்துவம்' என்ற நூலினை ஆய்ந்து காண்பதே இவண் நோக்கமாகும்.

### தமிழில் தன் வரலாற்று நூல்

1839 – 1898 ஆகிய கால வரம்பிற்குள் முதன் முதலாகத் தமிழில் செய்யுள் வடிவில் தன் வரலாற்று நூலை எழுதித் தொடக்கம் தந்தார் மகான் வண்ணச்சரபம். 'குருபர தத்துவம்' என்ற பெயரில் தமிழ் நாட்டில் தன் வரலாற்றை எழுதிய முதல் துறவி இவரேயாவார். தன் வரலாற்று நூல்களுக்கு ஜீவன் ஸ்மிருதி, சத்திய சோதனை, மெய்ம்மையைத் தேடல் என்று தலைப்பிட்டு எழுதும் போக்கு இருந்ததைப் போலத் தன் வரலாற்றுக்கு 'குருபர தத்துவம்' என்று பெயரிட்டார்.

'குருபர தத்துவம்' என்ற சொற்றொடர்க்கு நான்கு பொருள்களைக் கூறுவர்.

1. குரு + பர + தத்துவம் – குருவாக வந்து அருள்புரியும் பரம் பொருளினது உண்மை விளக்கம்

2. குரு – சகளம்
   பரம் – நிட்களம்
   தத்துவம் – அனுபூதி – சகள நிட்களத்தின் அனுபூதி

3. குருபர - குருமூர்த்தமாக உள்ள தண்டபாணி சுவாமிகள்
   தத்துவம் - வரலாறு
4. குருபர தத்துவம் - பரம குரு நாதனான முருகப் பெருமானுடைய திருவிளையாடல் என்பவையாகும்.

இந்நூல் இருபத்தொன்பது சருக்கங்களையும் 1240 திருவிருத்தங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

இதில் முதல் இருபத்திரண்டு சருக்கங்களில் சுவாமிகள் தன் வரலாற்றையும், அநுபவத்தையும், அருளாடல்களையும், அற்புதங்களையும் கூறுகிறார். பின்னுள்ள ஆறு சருக்கங்களில், சிவன், திருமால், கணபதி, முருகன், சூரியன், சக்தி என்ற அறுசமயக் கடவுளரும் தனித்தனியாகத் தனக்களித்த தரிசனத்தை, தன் அனுபவத்தை, அவர்களிடம் தனக்குள்ள உரிமையை எடுத்துக் காட்டுகிறார். இறுதியான சமயாதீதச் சருக்கத்தில் எல்லாவற்றுக்கும் பொதுக் கடவுளான சமரசக் கருத்தை எடுத்து மொழிந்துள்ளார்.

குருபர தத்துவ நூல் பாயிரத்தில் சுவாமிகள் இந்நூலின் நோக்கம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

''ஒருபர தத்துவம் உணரச்செய்திடும்
குருபர தத்துவம் குறித்துக்கொள்மினோ
உருபர தத்துவ மாகும் ஓர்வரும்
அருபர தத்துவம் ஆமென் போர்களே''

அருபர தத்துவம் வழிபடுவோர் பொருட்டு உருவங் கொண்டு உருபர தத்துவமாகும். குருபர தத்துவம் ஒருபர தத்துவத்தை உணரச் செய்திடும் என்ற வேண்டுகோளோடு நூலைத் தொடங்குகிறார்.

தமிழ் மொழியில் இலக்கிய வளமைக்கு என்றுமே குறைவில்லை. இச்சூழலில் குருபர தத்துவம் என்ற நூல் எப்படித் தோன்றியது என்ற வினாவிற்கு,

''இன்ன காவியத்து யானெடுத் திசைக்கும் மாண்சரிதம்
முன்னமோர் புலவோன் பகர் நூல் மொழி பெயர்ப் பன்று
என்ன துள்ளகக் கண்கொடு கண்டனவே...'' (24)

உள்ளக் கண்கொண்டு உணர்ந்து எழுதிய உண்மைச் சரிதம் இந்த மாண் சரிதமான குருபர தத்துவம் என்று கூறுகிறார். பெரியவர்கள், சான்றோர்கள் தம் வரலாற்றைத் தாமே எழுதி வைத்து விடுவது பின்னர் வருகின்ற அன்பர்களுக்கு, உள்ளதை உள்ளபடி உணர வைக்கும் அப்பெரியவர்கள் சென்ற வழியைப் பின்பற்றி நடக்கவும், மன உறுதி பெறவும் இது பெரும் வாய்ப்பாக அமையும். ஆகவேதான் வாழ்நாளில் வரலாறு படைத்தவர்கள் வரலாறு எழுதியுள்ளார்கள்.

இந்நூலுள் இடம்பெற்றுள்ள பல செய்திகள் இறைவன் சுவாமிகள் கனவில் எழுந்தருளிப் பேசியதாகவும், தியானம் செய்யும் போது பேசியதாகவும், சாக்கிர சொப்பனத்தில் பல செய்திகள் சொல்வதுமாகவும் உள்ளன. இறைவன் கனவுள் தோன்றி அரிய பல அற்புதங்கள் நிகழ்த்தியமையையும், அசரீரியாகச் சொன்ன செய்திகள் பலவற்றையும் நம் பக்தி இலக்கியங்கள் பல காட்டியுள்ளன. திலகவதியார், அப்பர் பெருமான், சுந்தரமூர்த்தி சுவாமிகள், சங்கிலியார் போன்ற அருளாளர்கள் கனவில் தோன்றி அருள் வார்த்தை பேசியது போல சுவாமிகள் கனவிலும் தோன்றிப் பல இடங்களில் பேசியுள்ளதை இந்நூல் எடுத்துக் காட்டுகிறது.

திருச்செந்திலாண்டவன் மேல் அளவிடற்கரிய பற்றுக் கொண்டவர் சுவாமிகள். தனக்கும் திருச்செந்திலாண்டவனுக்கும் உள்ள உரிமையைச் சுவாமிகள் மிக உருக்கமாகக் கூறுகிறார்.

"ஈன்ற தந்தையும் தாயும்என் றன்னைநான் மதியில்
ஆன்ற செந்திலிற் கொண்டுபோய் அங்கமர் அயில்வேல்
தோன்றல்பால் இதுன் அடைக்கலப் பொருளெனச் சொல்லி
ஏன்ற தொண்டும் நன்கியற்றினர் என்கை கேட்டுள்ளேள்"

என்று தான் திருச்செந்திலாண்டவனின் அடைக்கலப் பொருளான தன்மையைச் சுட்டுகிறார். திருச்செந்தில் ஆண்டவன் சுவாமிகள் கனவில் தோன்றி நூல் பாடுமாறு பணித்தமையை,

"பத்தருக் கினியசெந் தூரிடை வசிக்கைநற்
பண்பென்றோர் தடவை சென்றேன்
அத்தடவை அங்குற்று ஓர் மாதமட்டாயபின்
அயில்வேள் என் மனதில் வந்து என்

சித்தமும் சத்தியமுமே சாட்சியாகத்
திருக் குமுதவாய் திறந்து
சுத்தமதுரப் பனுவல் பதினாறுசொல் எனச்
சொல்லி, ... ... ... ...''

என்று கூறுகிறார். இதன்படி 'திருச்செந்தில் பிரபந்தங்கள் பதினாறையும் பாடி மகிழ்ந்துள்ளார் இச்செய்தி திருச்செந்தூர்ச் சருக்கத்தில் இடம் பெற்றுள்ளது.

பாண்டிய நாட்டிலுள்ள திருமலையில் முருகன் காட்சி வேண்டிச் சுவாமிகள் பாடினார். முருகன் காட்சி தரவில்லை முருகன் காட்சி தராமை கண்டு அம்மலை மீது இருந்து உருண்டு கீழே விழுந்தார். முருகன் அவரைத் தாங்கிப் பிடித்துத் தண்ணருள் செய்தான் இச்செய்தியை இவர்தம் திருமலைச் சருக்கத்தில், மலையிலிருந்து உருண்ட விபரத்தை அக்காலக் குறிப்போடு கூறுகிறார்.

''கன்னரவி சனிக்கிழமைக் காலை, இரேவதி நாளில்
மன்னியசீர்ப் பானுவெளி வந்தபின் அத்திசைப்பாலிற்
பொன்னிலங்கும் வேலானைப்
போற்றி இந்தப் புண்பாட்டில்
உன்னினைப்பு இன்றோ எனவும்
சிலபாடல் உரைத்தப் பால்
வடதிசையிற் றலைவைத்து
மறலிதிசைக் கால் நீட்டி
உடலையந்தத் திருமலையின்
உச்சியில் நின்று உருண்டிவிட்டேன்
விடலையிடுந் தேங்காய் போல்
வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனச் சென்றங்கோர்
மண்தரையில் வீழ்ந்ததுவே''

என்று தான் மலையில் இருந்து உருண்டு விழுந்த விபரத்தைக் கூட ஒளிக்காமல், மறைக்காமல் அப்படியே பாடியுள்ளார்.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் திருப்பரங்குன்றை முதலில் வைத்துப் பாடினார். சுவாமிகள் படைவீட்டுத் திருப் புகழ் பாடும்பொழுது திருச்செந்தூரையே முதற் படைவீடாகக்

கொண்டு திருப்புகழ் பாடினார். அதற்கான காரணத்தை குருபர தத்துவத்தில்,

"சூரனைப்பொருது வேலால்
    தொலைத்த செந்தூர் முன்னோ? அவ்
வீரமோர்ந்து அமரர் கோமான்
    வியந்தருண் மின்னை வேட்ட
சிரவிர்கிரி முன்னோ? நற்
    றெளிவுளார் தெரியலாகும்
கீரனுள் அபிமானத்தாற்
    கிளைத்தல் ஓர்ந்திலர்சில் லோரே" (54)

என்று நக்கீரர் தனக்கு நேர்ந்த விபத்தை நீக்கியது பற்றி திருப்பரங்குன்றத்தை முதலிற் கூறியதாகக் கூறுவார்.

சுவாமிகள், வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், ஆறுமுக நாவலர் காலத்தவர். சுவாமிகளும், வடலூர் வள்ளலாரும் சந்தித்து வண்ண இலக்கணம் பற்றி விவாதம் செய்து சமாதானம் அடைந்துள்ளனர். வடலூர் வள்ளலாரைப் பற்றிச் சுவாமிகள் தம் குருபர தத்துவத்தில்,

"அவனுட் கருணைப் பெருந் திறமும்
    அருமைத் தமிழ்ப் பாடலின் சுவையும்
தவமுற் றினராற் செயலரிதாம்
    தன்மை யிலையென் றறியுணர்வும்
புவனத் தினிற்கண் டிலன், அதனால்
    பொன்றாது உடலோ டெழுந்தொளிர்வான்
சிவனைப் பதிகந் தொறுந் துதிசெய்
    கின்றேன் செயுமா றறியேனே" (33)

என்று புதுவைச் சருக்கத்தில் பாடுகிறார். இங்கே சுவாமிகள் வடலூர் வள்ளலார்மீது கொண்டிருந்த உரிமையும், பரிவும் நன்கு தெரியவருகிறது. சுவாமிகள் முன்னைப் பிறப்பு அறியும் திறன் கைவரப் பெற்றிருந்தார். அவர் வடலூர் வள்ளல் பெருமானைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

"அந்த வடலூர்ப் புலவனுமென்
    அகத்துட் சிலகால் வந்துள்ளான்
இந்த வுலகில் அவன், தாயு
    மான முனியாய் இருந்ததுவும்

சந்தக்கிளியே யானெனலும்
சரதம் அறியும், இருவருக்கும்
முந்தப் பிறப்பால் உடலிழந்து
மோசம் போனவிதத் துறவே'' (36)

என்று பாடுகிறார். இப்பாடலில் தாயுமானவரே இப்பிறவியில், வடலூர் வள்ளலாராய் வந்துதித்தமையையும், அருணகிரி நாதரே (சந்தக் கிளியே) தண்டபாணி சுவாமிகளாய்ப் பிறந்த தாகவும் கூறுகிறார்.

இறைவன் பெயரால் நடைபெறும் உயிர்ப்பலி ஆகிய கொடிய செயல்களையெல்லாம் கண்டித்தார். வடலூர் வள்ளலார் ஜீவகாருணிய ஒழுக்கம், உயிர் இரக்கக் கோட்பாடு என்று வலியுறுத்தியதைப் போலச் சுவாமிகளும் பல இடங் களுக்குச் சென்று உருக்கமாகப் பல பாக்கள் பாடி அம் மக்களை விழிப்புணர்ச்சி பெறச் செய்தார். குருபர தத்துவத்தில் கொங்கு நாட்டுச் சருக்கத்தில், கொங்கு நாட்டுக் கவுண்டர் ஒருவரை இக்கொடிய பழக்கத்திலிருந்து மீட்டு பொங்கமுறும் ஆனந்தப் புணரியிடை குளித்ததாகக் கூறுகிறார்.

நூலின் இறுதிப்பகுதியான சமயாதீதச் சருக்கத்தில் சமயங் களுக்குப் பொதுவான சமரசக் கருத்தைக் கூறிக் குருபர தத்துவத்தை நிறைவு செய்கிறார் சுவாமிகள்,

''ஒரு சமயக் கடற்பெருக்கின் உள்ளழுந்திப் போகாமல்
அருள்நெறிக் கெல்லாம் பொதுவாம் ஆனந்தம் பெறவேண்டி
இருநிலத்தில் யானயின்ற இன்னல்கள் எத்தனையென்பேன்
திருவருளும் என்னதுபுன் சிந்தையும் ஓர்ந்தனவாமே'' (9)

ஒரு பொருளுக்குப் பெயர், நிறம், மணம், குணம், வடிவம், சுவை என்று பல இருப்பினும், அவை தனித்தனி இயல்பாயும், சேர்ந்தும் விளங்குதல் போல, சமயம் ஆறும் சமயாதீதமும் ஒன்றாயும் வேறாயுமுள்ள உண்மையைத் தெளிவாகத் தன் அனுபவத்தோடு குருபர தத்துவமாகச் சுவாமிகள் கூறியுள்ளார். குருபர தத்துவத்தின் நிறைவுப் பாடலில்,

''எத்தன் மையர்க்கும் அவரவர்தம்
எண்ணமெனநின் றிலங்கும் அது
பித்தன் புதல்வர்களில் இளையோன்
பெயர்கூ டொருமா தவனாகிக்

கைத் தண்டுடனென் வலப்புறத்திற்
கனவு நனவுகளிற் றோன்றிச்
சத்தம் ஒடுங்கும் அந்நிலையே
சமயாதீதம் என்றதுவே''

என்று கனவு நனவுகளிற் றோன்றிச் சத்தம் ஒடுங்கும் சமயாதீத நிலையாகக் காட்டுகிறார். நூலின் இறுதியில் வேதாந்த சித்தாந்த சமரசமே விளக்கும் மார்க்கம் மூவிரண்டும் களிகூரும் குருபர தத்துவத் திருநூல் முடித்திட்டேனே என்று தனிக் கவியாகப் பாடி நூலை நிறைவு செய்கிறார்.

குருபர தத்துவம் என்னும் சுவாமிகளின் தன் வரலாற்று நூல், சுவாமிகளின் தவமுயற்சி இறைவழிபாடு, கனவு, நனவு, நிட்டைகளில் இறைவன் தனக்குக் கூறிய அருளுரைகள், திரு அருட்சோதனை, தன் நலமே பெரிதென்று எண்ணுதலின்றிப் பிற உயிர்களுக்கு அருளுதல், கடன் பெற்றும் பெரும் பூசனை செய்தல், பல தலங்களுக்குச் செல்லுதல், ஆங்குள்ள கடவுளர் மீது தமிழ்ப்பாடல் பாடுதல், அப்பாடல்களை அரங்கேற்றுதல், சமயபேதமற்ற சமரசக் கொள்கை, தான் செய்த செயல்கள் குணமாயினும் குற்றமாயினும் உள்ளதை உள்ளபடி கூறுதல், கொலை, புலை அற்ற தூயநெறியை உலகில் அமைத்தல், அதை உலகிற் புரியுமுன் அழிவற்ற முக்தியை இறைவன் உதவினாலும் பெற விரும்பாமை ஆகியவைகளின் தொகுப்பான சிறந்த அற நூலாகத் திகழ்கிறது.

தன் வரலாற்று நூல் வெறும் தன்னிலை விளக்கமாய் அமையாமல் தன்னை யீந்த மண்ணை நன்னெறிப்படுத்தும் நன்னிலை விளக்கமாயும் அமைய வேண்டும் என்பதற்கோர் எடுத்துக்காட்டாய் தமிழில் இலங்கும் முதல் தன் வரலாற்று நூல் குருபர தத்துவம்.

# பழநித் திருவாயிரத்தில் சமுதாயக் கருத்துக்கள்

ப. பத்மாவதி

மகான் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளார் கடவுட் பற்றுடன் சமுதாயப் பற்றும் கொண்டவராக விளங்கினார். சந்தக் கவியவர்கள் பழநித் திருவாயிரத்தில் சமுதாயத்திற்கு எடுத்துக் கூறிய சீர்திருத்தக் கருத்துக்கள் சிலவற்றை எடுத்துக் காட்டி விளக்குவது சிறப்பானதாகக் கருதுகின்றேன்.

1. பஞ்சமா பாதகங்களுள் ஒன்றாகிய உயிர்க்கொலை, உயிர்ப்பலி இவற்றினை ஒழிப்பதையே தம் வாழ்வின் லட்சிய மாகக் கொண்டவர்.

2. மக்களிடையே காணப்படும் சமயப் பூசல்களை ஒழித்து மதக் காழ்ப்பினை அகற்றி சமய சமரசம் காண அரும்பாடு பட்டவர்.

3. உயர்தனிச் செம்மொழியாகிய தமிழின் தனித் தன்மையை எடுத்துக் கூறி, தமிழ் உணர்வும் தமிழ்ப்பற்றும் மக்கள் மனதில் இடம் பெறப் பாடியவர்.

இவை மட்டுமல்லாமல் தீய பண்புகள் கொண்டு வாழும் கயவர்களையும் சாடியுள்ளார். இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் ஆன்மீகக் கருத்தோடு சமுதாய விழிப்புணர்வு கருத்துக்களையும் பாடியிருப்பது விதந்து போற்றுதற்குரியது ஆகும்.

**உயிர்ப்பலி, உயிர்க்கொலை தடுத்தல்**

உயிர்களைக் கொல்வது என்பது மிகவும் கொடுமையானது. அந்த உயிர்க்கொலையைக் கண்டு உள்ளம் துடித்துப் புலம்பினார் நமது சுவாமிகள். அருட்பிரகாச வள்ளலார் அவர்களும் தண்டபாணி சுவாமிகள் போல் உயிர்க்கொலையைக் கண்டு

உள்ளம் வெதும்பினார். உயிர்க் கொலலயைத் தடுக்க வேண்டு மென்று இரவும் பகலும் வருந்தித் துடித்தவர் தண்டபாணி அடிகளார். பழநித் திருவாயிரத்தில் பல்வேறு இடங்களில் உயிர்ப்பலி, உயிர்க்கொலையைத் தடுக்க வேண்டுமென்று முருகனிடம் இறைஞ்சி வேண்டுகிறார்.

''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடியவர்'' அருட் பிரகாச வள்ளலார். வள்ளலார் கூறிய ஆன்மநேய ஒருமைப் பாட்டு உணர்வினை தண்டபாணி சுவாமிகளும் வலியுறுத்து கிறார். எந்தச் சீவர்களுக்கும் தீங்கு செய்யலாகாது என்று எடுத்துக் கூறுகிறார்.

''உயிர் வருத்தப் படுத்தாமை கொலை செய்யாமை
ஊன் உண்டு களியாமை உடையோர் எல்லாம்
பயிரனையர் எனலாகும் மற்றையோர்
பாவமிகும் களை எனவே பகரலாகும்''

என்று தண்டபாணி அடிகள் கௌமார முறைமை என்ற நூலில் குறிப்பிடுகின்றார். எவ்வுயிருக்கும் துன்பம் செய்யாமை, கொலை செய்யாமை, ஊன் உணவு உண்டு களிப்படையாமை உடையவர் எல்லாம் பயிர் போன்றவர்கள். மற்றையவர்கள் பயிரை அழிக்கும் களை போன்றவர் என்கிறார் அடிகளார்.

''கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர்''

என்ற திருக்குறள் சுவாமிகளது சீவ கருணையை விளக்கும் பாடல். அடிகளார் சீவ கருணையே கருணை என்று முழங்குவது

''அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று''

என்ற குறட்பாவுக்கு நிலைக்களமாக உள்ளது.

உயிர்க்கொலை, உயிர்ப்பலி ஆகியவற்றைத் தடுக்க வேண்டுமென்று அவர் கொண்டிருந்த வைராக்கியம் சொல்லில் அடங்காது.

ஆவினத்தைத் தெய்வமாகவும் திருமாலின் அம்சம் என்றும் போற்றுவது இந்து சமயக் கொள்கை ஆகும். இந்தக் கொள்கை யினையே தலையாய கொள்கையாகக் கொண்டு வாழ்ந்தவர் அடிகளார். பசுவைக் கன்றுடன் கொன்று தின்னும் ஆங்கிலேயர்

ஆட்சி இந்தியாவில் நடைபெற்ற காலத்தில் சுவாமிகளின் அருள் உள்ளம் கொதித்தது. பெரும்பாலும் ஆன்மீகத்துறையில் இருப்பவர்கள் அரசியல் பேசுவதில்லை. ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'' என்று சமணராட்சியை எதிர்த்து முழங்கிய வீரத்துறவியான அப்பர் அடிகளின் வழித் தோன்றலாவ தண்டபாணி அடிகள் ஆங்கிலேயர் ஆட்சிக்கு எதிராக முழங்கிய முழக்கங்களை அவரது அனைத்து நூல் களிலும் காணலாம்.

''நிரை படப் பசு வனந்தம் தினம் கொன்று தினும்
நீசர் குடை நிழலில் வெம்பி
தரைமகள் அழும் துயர் சகித்தறிகிலேன் - மனச்
சாட்சியது அன்றி உண்டோ''

என்று திருத்தணிகைப் பதிகத்திலும்

''கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முக்தி பதம் தந்தாலும் - மேவற்கு
இசையேன் காண் என்னையின்மை ஈடழிக்க வேண்டாம்
திசைதேர் பழனியரசே''

என்று பழநித் திருவாயிரம் வெண்பா மாலையிலும் குறிப்பிட்டு உள்ளார்.

'பசுவைக் கொன்று தின்னும் பொல்லார்களை நீ அழிக்க வேண்டும் முருகா' அதற்கு முன் நீ எனக்குக் கிடைத்தற்கரிய பேராகிய முக்தியைக் கொடுத்தாலும் வேண்டேன். எனக்கு முக்தி பெரிதல்ல, நான் உன்னிடம் கேட்கும் வரம் உயிர்க் கொலையைத் தடுத்து நிறுத்துவது தான் என்று முருகனிடம் வேண்டுகோள் விடுக்கிறார்.

ஜீவகாருண்யம் அருட்சித்தி தரவல்லது என்பதைத் தாம் பாடியருளிய நூல்களில் எல்லாம் மிகமிக வற்புறுத்திக் கூறுகின்றார்.

''உயிர் ஒன்றினுக்கும் இடர்சிறிதும் செயாமையே
உயர்வாய தருமம்''

என்று பழநித் திருவாயிரம் சிறுபறைப் பருவம் இரண்டாவது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

அடிகள் வாழ்ந்த காலத்தில் நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப் பட்டுக் கிடந்தது. வெள்ளையர் ஆட்சி வேரூன்றி இருந்தது. அவர்கள் அதிகாரச் செருக்குடன் மக்கள் மேல் ஆணை செலுத்தி வந்தனர். அதிகார வர்க்கங்களைக் கண்டு மக்கள் அஞ்சி நடுங்கி வாழ்ந்து வந்தனர் இந்தக் காலத்தில் அடிகளார் ஆங்கிலேயர் ஆதிக்கம் அழிய வேண்டுமென்ற எண்ணத்தில் ஆங்கிலேயரை எதிர்த்துப் பாடிய பாடல்கள் எண்ணற்றவை.

பழநித் திருவாயிரம் நடுஒலியல் அந்தாதியில் முதல் பாடலில்

"கா கூ எனுந்தோனி தோய்தரும் ஆகாரமுங்கொளும் நீசர்ம
காவீரன் என்று லகாள்வது முறை தானோ"

என்று ஆங்கிலேயரைச் சாடுகின்றார்.

கொலலைப் பாவம் செய்யும் கொடியவர்களின் ஆணவத்தை அழிக்க வல்ல வரத்தினை தனக்குத் தந்தருளுமாறு முருகனிடம் வேண்டுவதை பழநித் திருவாயிரம் "அலங்காரம்" என்ற பகுதியில் வரும்.

"குறுமா முயல் உடும்பு ஆடு ஏனம் ஆதிய கொல்லும்
பொல்லார்
இறுமாப் பழிக்கும் வரமெனக் கீந்தருள் இக்கணமே"

என்ற பாடல் மூலம் அறியலாம். பலியிட்டு வழிபாடு செய்பவர்கள் அனைவரையும் அத்தொழிலைச் செய்யாமல் தடுக்க வேண்டும் என்றும் பழநி மலையில் வந்து வழிபாடு செய்யும் மெய் மாதவர்கள் அனைவரும் கொலை, புலையற்ற வழிபாட்டினை உலகின்கண் நிறுவ வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் மெய் மாதவர்கள் என்னும் தகுதிக்குரியவர்கள் என்ற கருத்து விளங்க

"கொன்று செயும் பூசைக் கொடியார் அனைவரையும்
வென்று மகிழ் ஆடல் விளையாரோ – குன்றுபுரை
செந்தகரும் சேவலுங் கொள்சித்தன் பழநி வேற்பில்
வந்தமரும் மெய் மாதவர்"

என்று பாடியுள்ளமை அவரது உள்ளக் கருத்தினை தெளிவு படுத்துவதாக அமைந்துள்ளது.

"கொலை மறுத்தல்" என்ற நூலினைப் பாடிய சாந்தலிங்க அடிகளார் வேள்வியில் பலியிடுவதை ஒப்புக்கொண்டு பாடுகின்றார். அதைக் கண்டு மனம் பொறாதவராகிய நமது சுவாமிகள்

"வேள்வியிடைக் கொல்லல் மிகு பாவம் என்ற மொழி
கேள்வியிலார் போன்றும் கிளத்தியவாறு என்னை கொலோ
... ... ... ... ... சாந்தலிங்க தேசிகனே"

என்று சாடுகின்றார். சுவாமிகளுக்கு சமகாலத்தில் வாழ்ந்தவரான கருணைக் கடல் இராமலிங்க வள்ளலார்,

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம் உயிர்போல எண்ணி
ஒத்துரிமையுடையராய் உவக்கின்றார் யாவர்
அவர் உளம்தான் சித்த
சித்துருவாய் எம் பெருமான்
நடனமிடுமிடமென நான் தேர்ந்தேன்"

என்று பாடுகின்றார். மேலும் பழநித் திருவாயிரத்துள்,

"கொல்லாமை நாட்டம் குறிக்கும் குணத்தெனக்கு ஓர்
வல்லாண்மை நல்குகிலாய்"

"புசிப்பன ஆயிரம் இருந்தும்
பாற்றுணவு அருந்தும் பத்தர் கண்டிறைஞ்சாப்
பழநி மாமலைக் குருபரனே"

என்று குருபரமாலை 15வது பாடலிலும்

"கொன்றிரை அருந்தும் குணுங்கராம் அவரைக்
குலத்தோடு கெடுக்க மாதவம் செய்து
உன் திருவருளால் வென்றி பெற்றுள்ளார்
ஒருவரும் இன்று கொல் உரையாய்"

என்று குருபரமாலை 35வது பாடலிலும் "கொலைக் களங்கள் முழுமையும் அழிக்குந்திறமை தருவாயோ" என்று பதிற்றுப் பத்தந்தாதி 18-வது பாடலிலும் பாடியுள்ளார். இவை மட்டுமல்லாமல் எண்ணற்ற பாடல்களில் உயிர்ப்பலி, உயிர்க்கொலை தடுத்தலைப் பற்றிப் பாடியுள்ளார்.

### அடிகளார் கூறும் சற்சமய சமரசக் கொள்கை

தண்டபாணி சுவாமிகள் மக்கள் பணியே மகேசன் பணி என்னும் கொள்கை உடையவர். பல்லவர் காலத்திலிருந்து சமய பேதம் நம்மிடையே அதிகமாக நிலவி வந்தது. பல்வேறு சமயங்கள் தோன்றி சமயப் பூசல்களை ஏற்படுத்தி வந்தன. சங்கம் மருவிய காலத்தில் சமணம், பௌத்தம் போன்ற மதங்கள் ஆதிக்கம் பெற்று ஆட்சி செலுத்திய காலத்தில் நம் இந்து மதம் மறைக்கப்பட்டுக் கிடந்தது. சைவ சமயக்குரவர்களும், ஆழ்வார் களும் நாயன்மார்களும் தோன்றி இந்து சமயத்தின் புனிதத் தன்மையை உலகிற்கு எடுத்துக் காட்டினர். சமயக் காழ்ப்பு என்பது எல்லாக் காலகட்டத்திலும் இருந்து வந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களான தண்டபாணி சுவாமிகளும், இராமலிங்க வள்ளலாரும் சற்சமய சமரசம் பேசினர். எம்மதமும் சம்மதம் என்ற கொள்கையை நிலை நாட்டினர். தண்டபாணி சுவாமிகளின் விருப்பத்தில் உருவாகிய பல இலக்கியங்களே அவரது சற்சமய சமரச உணர்விவனைப் புலப்படுத்தும். முருக பக்தராகிய முருகதாச சுவாமிகள் பழநித் திருவாயிரம் பாடியதோடு திருவரங்கத் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம் போன்ற நூல்களும் பாடி யுள்ளமை அவரது சமய சமரச உணர்வினை உலகத்தார்க்கு பறைசாற்றுவதாக உள்ளது.

பழநித் திருவாயிரம், வெண்பா மாலை 51–வது பாடலில்,

> ''அற்பத மதவாதர் ஆணவமெல்லா மழிக்கும்
> சிற்பர ஞானத்தைத் தெரிவிப்போன்''

என்று முருகனை அருமையோடு பாடுகின்றார். மதவாதம் செய்யும் அற்பர்களின் ஆணவத்தை அழிப்பவன் முருகன் என்று மக்கள் மத்தியில் உள்ள மதப்பற்றினை மாற்றுகிறார்.

சமயங்கள் பலவென்று கூறுபட்டுப் பேசாமல், பிணங்காமல் எல்லாச் சமயமும் உன்னுடைய அங்கமென்றமையும் சமரச ஞானம் வேண்டுமென்று முருகனிடம் வேண்டுவதை வெண்பா அந்தாதியில் அமைந்துள்ள

> ''கூறுபட நாடிக்குலையாதுன் கோலமொன்றே
> தேறுகின்றேன் தென் பழநித் தேசிகா – ஆறு

சமயங்களும் கடந்த தத்துவமும் – என்னுள்
அமையுமநுபூதி அருள்''

என்ற பாடல் மூலம் அறியலாம்.

''சமரச மெய்ஞான நிலை தரவிரும்பும் தவத்தோர்க்குப்
பமரம் உலாம் மலர்ச்சோலைப் பழநி ஒக்கும் பதியின்றே''

என்ற வெண்பாமாலைப் பாடல் சமரச மெய்ஞான நிலை தரும் திருப்பதி பழநியம்பதி ஆகும் என்று அடிகளாரின் உள்ளக் கணிப்பைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

சூரியனை வழிபடும் சமயத்தோர், சிவபெருமானை வழிபடும் சைவ சமயத்தோர், சக்தியை வழிபாடு செய்யும் சாத்தேய சமயத்தோர், பிள்ளையாரை வழிபாடு செய்யும் காணாபத்திய சமயத்தோர், திருமாலை வழிபாடு செய்யும் வைணவ சமயத்தோர் எல்லோரையும் உன்னடி தொழும் பக்தர்கள் என நினைத்தேன் முருகா என்று ஒரு மா ஒரு பஃது 6வது பாடலில் பாடியுள்ளமை எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது.

மேலும் பழநித்திருவாயிரம் பதிற்றுப் பத்தந்தாதியில் வரக் கூடிய 18 ஆம் பாடல்

''தெய்வ நான் முகனைச் சிறை செய்தருள்
கைவலான் பழநிப்பதிக் காவலன்
சைவ ஆதி சம்சமயர் தொழும்
செய்வரோதயன் என்பது மெய்மையே''

இந்து சமயங்களாகிய ஆறு சமயத்தவர்களும் வணங்கும் மெய்மையானவன் முருகன் என்று கூறுகின்றது.

''மாறுபட்டிகல் சமயவாதர் முன்
ஊறு பட்டிடக் கறுவும் ஒள்ளியோர்
பாறு பட்ட வேற் பழநிப் பண்ணவன்
நீறு பட்ட மெய் நிறை வுள்ளார்களே''

பழநி மலையில் வந்து முருகனை வழிபாடு செய்யும் முருக பக்தர்கள் மாறுபட்ட சமயக் கொள்கை உடையோர்களை கறுவக் கூடிய மெய்மையாளர்கள் ஆவர் என்று குறிப் பிட்டுள்ளமை இவரது சற்சமய சமரசக் கொள்கையை நிலை நிறுத்தும் பாங்கில் அமைந்துள்ளது.

சித்திமலையில் அடிகளார்,

"சருவமத வாதருக்கும் - நட்பாம் ஓர்
சமரச வினோத சித்தியைத் தாராய்"

என்று வேண்டுகிறார். மேலும்,

"ஆதவனூடும் சந்திரனூடும் நின் - அருள்தோய்வீறு
ஆயுணர்வால் என்றுந் தொழுவேனெதிர் - மயிலின் மேல்
வேத வியாதன் சங்கரமாமுனி - முதலோர் போல்
மேதகு சீர் தங்கும் பொது வாழ்வுற விடுவாயே"

"சமரச சுபாவ ஞான சங்கரன் போலே
சரசுவதி பீடம்மேறும் வென்றி - யுந்தராய்"

ஆதி சங்கரன் போல் பொதுசமயக் கொள்கை வர வேண்டும் என்கிறார். ஆதி சங்கரர் சுத்தமான சமரச ஞானமும் பெற்றவர். ஆறு சமயங்களையும் கடந்தவர். அவர் அன்று சமயவாதிகளை வென்று சரஸ்வதி பீடமேறினார். ஆகவே ஆதிசங்கரர் போலவும் வேத வியாதன் போல சமய சமரசக் கொள்கை தனக்கும் வாய்க்க வேண்டும் என்று முருகனிடம் வேண்டிக் கொள்கிறார். இதுபோல் சமய ஒற்றுமை குறித்து எண்ணற்ற பாடல்களை மெய்யடியார் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ளார்.

அறியாமை கொண்ட மக்களினத்தை, பேதமை உடைய மானிட சமுதாயத்தை திருத்தி நல்வழிப்படுத்த வேண்டுமென்று ஓயாமல் பாடியவர் சுவாமிகள். அறியாமை இருளில் மூழ்கிக் கிடக்கும் மனிதர்களின் அறியாமையைப் போக்கி அறிவொளி பெறச் செய்ய உழைத்தவர் இவர். உயிர்கள் துன்பமில்லாத வாழ்வு வாழ வேண்டுமென்று முருகனிடம் அழுது புலம்பி வரம் கேட்டவர். ஆன்மீக இலக்கியங்கள் பலவற்றிலும் அடிகளாரது இலக்கியங்கள் தனித்தன்மை வாய்ந்தன என்பதை அவரது படைப்புகளைக் கருத்தூன்றிப் படித்துணரலாம்.

"எந்த வரமும் எனக்குதவ வேண்டாம், முன்
தந்த வரம் பலித்தால் தாரணியும் - அந்தரமும்
வாழச் செய்யேனோ! வயலூரில் வந்து வெள்ளை
வேழத்தார் போற்று தெய்வமே"

என்று முருகனிடம் வேண்டுவதை படிக்கும் பொழுது தாரணியையும் அந்தரத்தையும் வாழச் செய்ய விரும்பும் அவரது தன்னலமற்ற உள்ளம் நம் கண்முன் நிற்கின்றது தமிழ்ச் சமுதாயம் அடிகளாரின் நூல்களையெல்லாம் படித்துப் பயன் பெற வேண்டும் என்று கூறி இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

# சுவாமிகளின் இலக்கியக் கொள்கை

த கோ. பரமசிவம்

உலக இலக்கியங்களுள் இந்திய இலக்கியங்கள் தனிச் சிறப்புடையன. இவற்றின் போக்கிலும் நோக்கிலும் தனித்து வத்தைக் கண்டு மகிழலாம். இலக்கிய உணர்வுடையார், பயிற்சியுடையார், இன்பங்கண்டார் அனைவரும் உணரும் இலக்கிய உண்மையாக இது திகழ்கிறது இதில் கருத்து மாறு பாட்டுக்கே வழியில்லை இலக்கியத்தின் வடிவம், மொழி, காலம், பொருள், சூழல், உணர்வு, மரபு இவற்றுள் எது மாறினும் இலக்கியமாயினும் சரி, இலக்கணமாயினும் சரி அதற்கு ஓர் இலக்கு வேண்டும் நோக்கம் வேண்டும். பயன் சுட்டப்படும் சூழல் வேண்டும். இதனைத் தமிழிலக்கியம் முதலாக இந்திய இலக்கியங்கள் அனைத்திலும் பரவலாகவும் சிறப்பாகவும் காணலாம். பாயிரத்திலேயே நூற்பயன் சுட்டும் மரபைக் கூட நம் இலக்கியங்களில் காணலாம்.

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருளையும் பயக்கும் இலக்கியம் தலைசிறந்ததாகக் கருதப்படும். இம்மரபு இமயப்பெருமலை தொட்டுக் குமரிக் கடல் வரை போற்றப்படு இன்ற இலக்கிய நெறியாகும். இவற்றுள் ஒன்று குறையினும் அது சற்றுத் தாழ்ந்த இலக்கியமாகவே கருதப்படுகிறது. இப்பேருண்மை தண்டபாணி சுவாமிகளின் நூல்களிலெல்லாம் எதிரொலிப்பது நமக்கெல்லாம் மகிழ்வளிப்பதாகும்.

**சமரச மனித நேயம்**

தண்டபாணி சுவாமிகள் தமிழ் யாப்பிலும், கவிதை மரபிலும், சந்தக் குழிப்பிலும் திருஞானசம்பந்தர், அருணகிரி நாதர் போன்ற அருட்கவிஞர்களுக்கு இணையாகப் புரட்சியும் வளர்ச்சியும் கண்டவர். சித்திரக்கவிகளும் – வண்ணக்கவிகளும்– அவரிடம் தண்ணீர் பட்ட பாடாகத் தாண்டவமாடிப் பெருகின. அவரிடம் தோன்றிய தமிழ் வெள்ளம் கண்ட கரைகளும்

ஊர்களும் பேரளவின. கோக்கப்படும் பொருள் முத்தாகவோ, மணியாகவோ, பவழமாகவோ, அக்கமணியாகவோ, துளசிமணி யாகவோ எதுவாக இருந்தாலும் அவற்றினிடையே ஊடுருவி நிற்கும் நூல் ஒன்றாகவே இருப்பது போல் பொருள் வகையில் யாப்பின் வடிவு வகையில் மொழியிடை வகையில் மாற்றங்கள் இருப்பினும் நூற்பயன் சுட்டுவதில் மட்டும் ஒரே கொள்கையை நம் சுவாமிகள் கைக்கொண்டிருப்பது வியப்பாகவும் போற்று தலுக்குரியதாகவும் அமைந்திருக்கிறது.

மனித நேயம், அதற்கு அடிப்படையான உயிர்கள்மாட்டு இரக்கம், இவை இரண்டுக்கும் அடிப்படையான கொல்லாமை, இவற்றின் வெளிப்பாடாகிய சகிப்புத் தன்மை, சமரசம். இந்தப் பேருண்மைதான் சுவாமிகளின் தமிழ் வெள்ளத்தில் நாம் காணும் உள்ளீடாகும். இவ் உள்ளீட்டைச் சுவாமிகள் அறுசமயக் கடவுளரைப் போற்றித் துதிக்குமிடங்களிலும், மொழிவளம் காட்டும் இடங்களிலும், புலவரைப் போற்றும் புராணங்களிலும், சமூகக் கருத்துக்களைக் கூறும் பிற பாடல் களிலும் தவறாது கைக்கொண்டுள்ளமையைக் காணலாம்.

தில்லியில் தமிழ்க் கவிஞர் ஒருவர், ‘சேதாரம் இல்லாமல் நகை செய்ய முடியாது, சிலரேனும் மடியாமல் பகை வெல்ல முடியாது’ என்ற வகையிலும், ‘பெண்ணே, தலைவாரி பூச்சூட்டி நகை நட்டைப் போட்டு உன்னை மரப்பாச்சி பொம்மை ஆக்கிவிட்டார்கள்’ என்ற வகையிலும் கவிதைகளைப் படைத்து, தம்மைப் போல் கவிஞருண்டா எனக் கிண்டலடிப்பார். அப்போது என்னுடன் பணியாற்றிய திருமதி வாசுகி அம்மையார் அவர்கள், ‘இவன் எல்லாம் முக்காலணா கவிதை எழுதும்போதே இப்படிப் பேசுகிறான். இன்னும் நிறைவு வரவேண்டாமா? தமிழில் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ள பாடல்களைப் படித்துப் புரிந்து கொள்வதற்கு நமக்கு ஆயுசே போதாது. ஒரு லட்சம் பாடல்களைப் பாடிய பத்துக் கம்பன் அவர்’ என்று குறிப்பிட்டார்கள். அப்போதுதான் முதன்முதலாக தண்டபாணி சுவாமிகளைப் பற்றியறிந்தேன். அது முதலாக ஒட்டியும் ஒட்டாமலும், பயின்றும் பயிலாமலும், உணர்ந்தும் உணராமலும் அவ்வப்போது சுவாமிகளின் நூல்களில் ஈடுபட முனைந்தேன். ஒட்டு மொத்தமாகச் சுவாமிகளின் நூல்களை மேலோட்டமாகவே காண்பாரும் உண்மை ஒன்றை உணர்வர். அவ் உணர்வை

நானும் பெற்றேன். ஆம். மனிதநேய மாண்பின் அடித்தளம் பிணக்குகளில் இல்லை. சமரசத்தில் தான் உள்ளது. உயிர்க் கருணையாம் கொல்லாநெறி எல்லா நெறியினும் உயர்ந்தது என்பதுதான் அவ்வுண்மை. சுவாமிகள் பாடிய தமிழில் எல்லாம் இவ்வுண்மையே உள்ளீடாகவும் உணர்வாகவும் நின்று உயிர்த்தது. இன்று உயிர்க்கின்றது, என்றும் உயிர்க்கும் வண்ணம் நிறைந்துள்ளது.

## இலக்கிய மரபும் இலக்கிய நோக்கும்

நூற்பயனில், இலக்கிய இலக்கில் அவர் முனைந்து நின்றதற் கான காரணம்-இந்திய இலக்கிய மரபுகளில் அவர் ஆழங்கால் பட்டு நின்றமைதான் என்றால் அது மிகையாகாது. பதினெட் டாம் நூற்றாண்டு வரை இந்திய இலக்கியக் கர்த்தாக்களிடையே கலை கலைக்காகவே, கலை வாழ்க்கைக்காகவே என்ற இரு வேறுபட்ட கொள்கை காணப்படவில்லை. கலை வாழ்க்கைக் காகவே – அது இலக்கியமாயினும் சரி பிற நுண்கலைகளாயினும் சரி எல்லாம் வாழ்க்கைக் கலைக்குத் துணை செய்வனவாகவே இருத்தல் வேண்டும் என்னும் கொள்கையில் அவர்கள் அழுத்த மாக நின்றமை புலனாகிறது.

வாழ்க்கை பொருளுடையதாக இருக்க வேண்டும். வாழ்க்கை நோக்குடையதாக அதிலும் உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் எனும் தன்மையில் உயரிய நோக்குடையதாக இருக்கவேண்டு மென்பதில் உலக அருளாளர்கள் அனைவரும் ஒருமித்த கருத்து டையவர்களாகவே காணப்படுகின்றனர். இலக்கியம் வாழ்க் கையின் கண்ணாடி ஆதலின் இலக்கியத்திற்கும் இத்தகு நோக்கும் பொருளும் அமைந்திருக்க வேண்டும் ஒரு புல்லைப் பாடினாலும் சரி, ஒரு கல்லைப் பாடினாலும் சரி, அது பொருளுடையதாக இருக்க வேண்டும். நேர்ப்பயன் சுட்டமுடியாத இடங்களி லெல்லாம் உவமம், உருவகம், உள்ளுறை, இறைச்சி போன்ற தொனிப் பொருள்களை அணிநயங்களை இணைத்தாவது இலக்கிய நோக்கை நிறைவு செய்வது நம் இலக்கியங்களின் மரபாகக் காணப்படுகிறது.

‘புவியினுக்கு அணியாய் ஆன்றபொருள் தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி

சவியுறத் தெளிந்து தண்ணென் ஒழுக்கமும் தழுவி சான்றோர்
கவிஎனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்'

(கம்ப. சூர்ப்பநகைப் படலம் 1)

இயற்கைக் காட்சியை விளக்கி வருணிக்க வந்த கம்பர், கவிதை எப்படி இருக்க வேண்டும், காவியம் எவ்வாறு புனையப்பெறுதல் வேண்டும் அவற்றுள் எப்படியெல்லாம் நோக்கும் போக்கும் அமையவேண்டும் என்பதற்கெல்லாம் விடை வழங்குவார்போல இந்திய இலக்கிய மரபைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். இப்படி அமைந்ததால் தான் முன்னோர் கவிதை சான்றோர் கவிதையாகச் சிறந்தது என்பதையும் வலியுறுத்தினார். இளங்கோ அடிகளாரும்,

'அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற்றாவதும்
உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டுதும்'

என்பவற்றையே அடித்தளமாகக் கொண்டு காப்பியம் செய்தமை நூற்பயன் சுட்டிய தன்மையைக் காட்டுவதாகும். சங்க இலக்கியங்களின் வரலாற்றில், இது ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழறிவூட்டப் பாடிய பாட்டு, 'இது, உருத்திரங்கண்ணனார்க்குப் பொன் வழங்கிய பாட்டு' என்றெல்லாம் வருகின்ற குறிப்புக்களும் பிறவும் இலக்குடையதே இலக்கியம் என்பதை வலியுறுத்துவனவாம்.

## புலமை இலக்கணம்

மேலை நாடுகளில் தோன்றிய விவிலிய நூல், குர்ஆன், மில்டன் கவிதைகள், ஷேக்ஸ்பியர் நாடகங்கள் போன்றனவும் இலக்குடையனவாகவே காணப்பெறுகின்றன. கிங்லியர், ஒத்தெல்லோ, மாக்பெத் போன்ற நாடகங்களில் இவ்வுண்மையைச் சிறப்பாகக் காணமுடியும். ஆனால் எப்படியோ, மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வாளரிடையே கலை கலைக்காகவே என்ற மாற்றுக் கொள்கையும் உருவாகி விட்டது. ஆபர்குரோமி, ஹட்சன், வில்சன், பைரன் போன்றோர் நூல்களில் இவ்வேறுபாடுகள் தோன்றியமையைப் பரக்கக் காணலாம். மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வாளர்களை அடியொற்றும் இந்தியத் திறனாய்வாளர்களில் சிலர் இப்போக்குகளில் தலைப்பட்டு இங்கேயும் கலை கலைக்காகவே எனக் கதைக்கத் தொடங்கி

விட்டனர் இவற்றையெல்லாம் ஒருங்கே மறுப்பார் போல சுவாமிகள் தம் நூல்களிலெல்லாம் தம் இலக்கைக் காட்டத் தவறினாரில்லை.

கவிதை இலக்குடையதாக இருக்கவேண்டும் அதுவும் உயர்ந்த நோக்குடையதாக இருக்கவேண்டும் என்பதில் சுவாமிகள் உறுதியாக இருந்தார். அதனால்தான் புலவர் வரலாற்றுண்மை களை அருள்நெறியுடன் இணைத்துக் காண்கிறார். புலவன் இப்படித்தான் இருக்கவேண்டும் எனப் புதிய இலக்கணத்தை ஆறாவது இலக்கணமாகக் காட்டுகிறார் எழுத்தும் சொல்லும் பொருளும் யாப்பும் அணியும் பயில்வதன் பயன் யாது? நல்ல புலவனை உருவாக்கத் தானே? ஐந்திலக்கணத்துக்கே நூற்பயன் கற்பிப்பதுபோல, இலக்கு கற்பிப்பது போல அவர் புலமை இலக்கணத்தை உருவாக்கினார் எனில் அது மிகையாகாது. இதுவே அவர்தம் இலக்கியக் கொள்கையைக் கட்டியம் கூறுவதாக அமையும்.

> 'பிரதமத்தவன் என்பாள் முனாள்உயர்
> பொதியவெற்பில் இருந்தோதும் நூல்வழி
> பிழையில் நற்பிரபந் தாதிபாடி உளைந்தேனே'
> (பேரொலியந்தாதி, ப. 162)

> 'அலைகடற் பருகுந் தூய மாமுனி
> தமிழ்உணர்ச்சி பெறும்பாவ லார்தமது
> அருமை செப்பிடவுங் கூசுவாரொடு இணங்காதே' – '',
> (ப. 165)

என வரும் அடிகளைக் காணும்போது, முன்னோர் மரபைப் பின்பற்றி, அவர்தம் புகழ் பாடுவதில் பெருவிருப்புற்று, பிழையில் கவிதைகளைப் புனைவதே புலவர் தம் தொழிலாகக் காட்டுவதை உணரமுடிகின்றது. இக்கருத்தையே மாற்று வடிவில்,

> 'செறிதரு பொழிற்சந் தனந்தோய்தரு
> மலைய மலையி னிற்கும்பனுங் காமுறு
> தெளிவுறு தமிழ்ச் சந்தம்விண்டோர் உறவு ஒழியேனே'
> (ப. 154)

எனப் போற்றுகின்றார் சுவாமிகள்.

> 'ஏதும் நெற்றியில் இட்டிலர் துய்க்க
> ஒணாதவற்றின் விருப்பினர் முற்பதர்
> ஏதிலர்க்கு அருமைக் கவியிற் பல கூறாதே' (ப. 69)

'ஈர்வகைக்கும் உள்அச் சமுறத்தகு
பேரருட் புனிதக் குண முத்தரை
ஏசிடத் துணி வுற்றவர் சொற்றொனி கேளாதே' (ப. 69)

எனத் தொடரும் இடங்களிலெல்லாம் புலவர்க்குரிய இலக்கணத்தை வரையறுக்கின்றார். புலவர்க்கு இலக்கணம் வகுத்தமையே இலக்கியத்துக்கும் இலக்கு சுட்டியதாகக் கொள்ளலாம். புலமை உள்ளவன் பெரியோரைப் போற்ற வேண்டும் கடவுளுண்மையை ஏற்று மகிழவேண்டும். இவ்வாறு இலக்கணம் சுட்டுவது சுவாமிகளுக்கேயுரிய துணிவான கொள்கை யாகும். இந்தச் சட்டகத்தில் வைத்துப் பார்த்தால் இன்று எத்தனைப் புலவர்கள், கவிஞர்கள் அடிபட்டுப்போவர் துணிவான வியப்பான உண்மையாகவே இது தோன்றுகிறது.

மாய்வார்ப் போற்றி மகிழும் பாவலர்
வன்னச் சிவிகையில் வையகம் படைத்தோற்
கழறும் பாவலர் கையோடு உயர்வே (அறுவகை.இலக். 689)
சேவித்து ஒருவர் பின்செல்வார் புலமையில்
பாடல்விற்று அலைவார் பரிசுகேடு இனிதே (763)

கொல்லல் ஊன் சமைத்தல் ஆதியவிரித்துக்
கழறும் துணிவுடைக் கவிப்புல வோரைப்
பேயர் என்று உலகம் பெரிது இகழ்ந்திடுமே (690)

கால வேற்றுமை கருதாப் புலவன்
சீலனே எனினும் சிறுமை யினனே (693)

என வரும் நூற்பாக்களில் சுவாமிகளின் புலவர் கொள்கை தெளிவாகின்றது. காலமும், இடமும், கருத்தும் கைக்கொண்ட புலவனே சிறந்த புலவன். இவ்வாறே கவிகளின் தன்மையை நிறங்களோடு ஒப்பிட்டு வகைப்படுத்துகின்றார். இதுவும் இவரது தனிப்பண்பையே காட்டுவதாம்.

'இயல்இசை நாடகம் என்னும்முத் தமிழ்ச்சொல்
பொதிய மால்வரைப் பொழில் எனஇருண்டும்
உலவா முனிவோர் உடைஎனச் சிவந்தும்
வீழ்புனல் அருவியில் வெளுத்தும் தோன்றும்என்று
அறிவார் மலர்த்தாள் அணிதலை எமதே' (171)

இவ்வாறு சொல்லிலக்கணம் பேசும் இடங்களில்கூட தமது இலக்கியக் கொள்கையை ஊடுருவ விட்டிருப்பது இவரது தனிச் சிறப்பாகும்.

கொல்லா விரதக் குருவாம் குறள்போல
புந்தியின் அளவில் பொருள்தரும் சொற்கள்
பளிங்கு நிறம்எனப் பகர்வது முறையே (173)

எழுத்துஉரு அறியா இயல்பினர் தாமும்
அறியும் மாற்றம் அனைத்தும் வெண்ணிறமே (172)

நால்வரும் பதின்மரும் நவின்ற சொற்கள்
பொன்மை நிறமெனப் புகலத் தகுமே (176)

**இலக்கியத்தின் பயன்**

உரோம இலக்கியங்களும் அரேபிய இலக்கியங்களும் ஆண்டவனிடம் அச்சம்கொள் என்பதையே நூற்பயனாக்கு கின்றன. ஐரோப்பிய இலக்கியங்களில் நீதிக்குத் தலைவணங்கும் போக்கு பெரிதாக்கப்பட்டுள்ளது. அண்மையில் தோன்றும் சப்பானியப் படைப்புகளில் உழைத்தால் உயரலாம் எனும் உண்மையைக் காணலாம். சோவியத் நாட்டில் தோன்றும் தற்கால இலக்கியங்களில் இலக்கிய நோக்கையும் தாண்டிய பிரச்சார வாடையை நுகரமுடிகிறது. இவற்றையெல்லாம் உள்வாங்கிக் கொண்டு சுவாமிகளின் நூல்களை ஆய்வு செய்யும் போது, சுவாமிகள் தம் இலக்கியங்களில் மனிதநேய ஒருமைப் பாட்டைக் கொல்லா நெறியுடன் இணைத்துக் காட்டுவதில் தலைநிற்கின்ற பான்மையை உணரலாம்.

இலக்கியத்தின் பண்பாகவும் பயனாகவும் இக்கோட்பாடு காணப்படுகிறது. ஆதலின் தொனி, உள்ளுறை, உவமம், இறைச்சி, உருவகப்பொருளணிகளின் வழி இலைமறை காயாக விளக்க வேண்டுமே என்றெல்லாம் கவலைப்படாமல் நேரடியாக இடித்துரைத்தே இக்கோட்பாட்டைச் சுவாமிகள் பல்வேறு சூழல்களில் பல்வேறு இலக்கிய வடிவங்களில், பல்வேறு யாப்புகளிலும் அமைத்துக் காட்டுகிறார். இது சுவாமிகளின் தனிப் பண்பாகக் கருதப்படும்.

'வேதஞ் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க்குரித்தாம்' (சத்திய சூத். 8 )

என்று கொலைத் தொழிலை அடியோடு மறுக்கின்றார்.

தெய்வத்திற்காகப் பலியீடும் உயிர்க்கொலையையும் 'சுத்தமான முழு மூடத் தொழில்' என்றே சாடுகின்றார்.

பலியேற்கும் தெய்வங்கள் பேய்த் தெய்வங்கள் சண்டாளத் தெய்வங்கள் என்றே வேதனைப்பட்டு இகழ்கின்ற பான்மையைச் சுவாமிகளிடம் தான் காணமுடியும்.

சுத்த பூசை தோய்தரு மாயிற்
பேயும் தெய்வமாம் இனப்பலி ஏற்கின்
தெய்வமும் பேயாம் (சத்திய சூத். 81)

இன்னும் ஒருபடி மேலேச் சென்று பலியேற்கும் தெய்வத்தையே சாடி அறிவுரை கூறும் இலக்கியத்தையும் அவர் படைத்துள்ளமை வியப்பைத் தருகிறது.

கோலியனூர் மாரி குணங்கெட்ட சண்டாளீ
நீலி உனக்கோர் சொல்நிகழ்த்தக்கேள் – தாலி
அறுத்த முண்டை யானாலும் ஆடுதின்னலாமோ?
வெறுத்துவிட்டால் நன்று மிக. – (தண். சு. வரலாறு, ப. 5)

இப்படி ஒரு நிந்தனையே வேறு எவரால் செய்யமுடியும்? பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானைக் கூட சிறுத்தொண்டரிடம் பிள்ளைக்கறி கேட்டு உயிர்க்கொலையை ஆதரித்தமையின் இகழ்கின்றார் சுவாமிகள்.

சிறுத்தொண்டன் வீட்டில் வரும் ஈசனையும்
தானா இகழத் தலைப்பட்டார் (அருளாட்சி, 21)

இவ்வாறு வைதிக முறை, பெருந்தெய்வ வழிபாடு சிறுதெய்வ வழிபாடு என வழிபாட்டிற்காக நிகழ்த்தப்பெறும் உயிர்க் கொலையையும் சுவாமிகள் கண்டித்திருப்பது நோக்கத் தகுவதாம்.

யாக அக்கினி யிற்கு அருகிற் கொலை
பாதகத் தொழில் முற்சுருதிக் கடன்
ஈதெனச் செயும் விப்பிரர் சத்துரு வேயானேன்
(பேரொலியலந்தாதி, ப. 69)

நாயின் ஊனும் விழைந்து தினத்தகு
பாவமானிடர் சிந்தை உவப்பது
நாளும் நீடுதல் கண்டு தவிப்பதும் ஓராயோ (ப. 112)

கதறிய பசுக்கொன்று தின்பார்களை
அரசென மதிக்கும் பெரும்பாவிகள்
கனகமும் மணிப்பொங்கமுந் தானையும் உறுவாரோ
(ப. 156)

என வரும் இடங்களிலெல்லாம் அவரது பதைப்பும் தவிப்பும் பளிச்சிடுகின்றன.

இவற்றுக்கெல்லாம் முடிமணியாக அவர்தம் கொல்லாநெறி யின் உறுதிப்பாட்டை விளக்கும் இலக்கிய வரிகள் நம்மை நெகிழ்ந்து நெகிழ்ந்து வியக்க வைக்கின்றன.

'கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முத்தி பதம் தந்தாலும் – மேவற்கு இசையேன்'

'சிற்றெறும்பு ஒன்றை செகுத்தியேல் அதற்கும்
மற்றெலா உயிர்க்கும் வணங்கும் உன்தனக்கும்
நம் திருவடி நிழல் நன்களிக்குதும் என
முந்திய முதல்வனே முன்வந்துரைப்பினும்
ஐய, அம்முத்தி அடியனேற்கு ஆகாது'

(பேரொலியலந்தாதி, ப. 15)

ஒரு சிற்றெறும்பையாவது கொன்றால் போதும் உனக்கும் அதற்கும் முத்திப்பேறு வழங்குவோம் என்று முழு முதற்கடவுளே வந்து கூறினாலும் அப்படி உயிர்க்கொலை செய்தால்தான் முத்தி கிடைக்கும் எனில் அம்முத்திப் பேறே வேண்டா என மறுக்கும் அவர்தம் கொள்கையின் உறுதிப்பாட்டை என்னென வியப்பது! 'இச்சுவை தவித யான்போய் இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' எனப் பாடிய தொண்டரடிப் பொடியாழ்வாரின் பக்தியினும் இது உறுதிப்பாடு கொண்டதாகத் தானே புலப்படுகிறது! 'எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே' எனும் அப்பர் பெருமானின் விழைவுக்கு இவ்வுறுதி எள்ளளவும் குறைந்த தில்லையே!

இவ்வாறு கொல்லாநெறி காட்டும் சமரச மனிதநேயமே சுவாமிகளின் இலக்கியக் கொள்கையாக, இலக்கிய நோக்காக இலக்கியப் பயனாக விளங்குதல் காணலாம். இத்தகு இலக்கிய உறுதிப்பாடு இன்றைய இலக்கியப் படைப்பாளர்களிடமும் மலருமேல் தமிழ் வளம் பெறும், வாழ்வு பெறும் என்பதில் ஐயமில்லை. வாழ்க சுவாமிகளின் இலக்கியக் கொள்கை.

# திருச்செந்தூர் பன்னிரு பாமாலை

அ. மா. பரிமணம்

தண்டபாணி சுவாமிகள், நூறாகவும் ஆயிரமாகவும் அவற்றிற்கு மேற்பட்டனவுமான பாக்களால் பற்பல வகையில் நூல்களை இயற்றியுள்ளார். இந்து சமயத்தைச் சார்ந்தனவாய், ஆதி சங்கரரால் ஒழுங்கு செய்யப்பட்டன எனக் கருதப்படுவன வாய்க் கூறப்படும் ஆறு சமயங்களுக்குத் தனித்தனி ஆயிரம் பாடல்களில் அவற்றின் சாத்திர-தோத்திர நுட்பங்கள் விளங்கு மாறு நூல்கள் அமைத்துள்ளார். தென்னகத் திருக்கோயில் களில் பரிவார தெய்வங்களுள் ஒன்றாய், அந்தி வேளைகளில் காயத்திரி மந்திரத்தால் வழிபடும் தெய்வமாய் ஞாயிற்றுப் புத்தேள் வழிபாடு சுருங்கிய நிலையினை அறிந்தும், அதனைக் கருதாமல் அந்தச் சௌர சமயம் பற்றியும் நூல் இயற்றியது அடிகளின் சிறப்பாகும். அறு சமயத்தெய்வங்களுள் ஞாயிற்றைத் தவிர்த்து எஞ்சிய சிவன், சக்தி, திருமால், விநாயகர், முருகன் ஆகிய ஐவரும் தந்தை, தாய், மைந்தர் முதலிய நெருங்கிய உறவுகளால் பிணைக்கப்பட்டிருப்பதும், ஞாயிறு அங்ஙனம் பிணைக்கப்படாமையும் சிந்தனைக்குரியன.

மிகுந்த எண்ணிக்கையில் பாக்கள் கொண்டமைந்த நூல் களை இயற்றிய சுவாமிகள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் – பன்னிரு பாக்களில் ஒரு சிற்றிலக்கியத்தைப் படைத்திருப்பது வாசகரின் சிந்தனையைக் கவருவதாக உள்ளது. சுவாமிகளின், திருச்செந்திற் பிரபந்தங்களைத் தொகுத்து வெளியிட்ட அத்திருக் கோயில் தேவத் தானத்தார், தனிச்சிறுநூலாக அமைந்த 'பன்னிரு பாமாலை' என்னும் சிறு நூலின் பெருஞ்சிறப்பினை உணராது, அவ்வெளியீட்டின் பின்னிணைப்பில், தனிப்பாடல் வரிசையில் பதிப்பித்துள்ளார். சிறுகுவளையில் வைக்கப் பட்டாலும் கடல் நீரின் தன்மை மாறுபடாதது போல, இச்சிறு நூலிலும் சுவாமிகளின் இயல்பும் மாட்சியும் புலப்படுவதால் அவற்றை வெளிப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பன்னிரு பாமாலை**

பஞ்சகம், அட்டகம், நவமணிமாலை, பதிகம் என்று குறைந்த எண்ணிக்கைப் பாடல்களாலாகும் சிற்றிலக்கியங்களின் வேறாகப் பன்னிரு பாடல்களாலாயது இச்சிறு பிரபந்தம். தேவாரத்தில் 11, 12 பாடல் கொண்டனவும் பதிகங்கள் என்றே கூறப்படுகின்றன. ஆனால் இது 12 பாடல்கள் கொண்ட தனிச் சிற்றிலக்கியம் என்பதனை இதன் தொடக்கத்தில் அமைந்த காப்பு வெண்பாவும், இறுதியிலிடம்பெறும் பயன் கூறும் வெண்பாவும் (பலக்சுருதி) உணர்த்துகின்றன. வெண்பா, ஆசிரியம் என்னும் பாக்களும், துறை, விருத்தம் என்னும் பாவினங்களும் ஆகியவற்றில் அமைந்த செய்யுட்களும், சந்தக் குழிப்புடன் அமைந்த செய்யுளொன்றும் இதன்கண் அடங்கி யுள்ளன. பதினொரு சீரின் மிக்கு வருவனாம் ஆசிரிய விருத்தத்தை இரட்டை விருத்தம் அல்லது இரட்டை ஆசிரியம் என்று வழங்கும் மரபினை ஒட்டிப் பதினான்கு சீரான் அமைந்த ஓராசிரிய விருத்தப்பா 'இரட்டையாசிரியம்' எனுந் தலைப்பில் இதன்கண் இடம்பெற்றுள்ளது. 'செந்திலானே' எனத் தொடங்கும் இந்நூல், அந்தாதியாய்த் தொடர்ந்து 'செந்திலானே' என மண்டலித்து முடிவதால் மாலை என்னும் பெயருக்கு ஏற்புடையதாய்த் திகழ்கின்றது. செந்திற் பெருமானது அந்தமில் புகழைப் பரவும் நக்கீரரும், குமரகுருபரரும் அவன்றன் பன்னிரு கரங்களின் தொழில் நினைந்து போற்றியுள்ளதனை உளங் கொண்டு, பன்னிரு யாப்பு வகையால் இந்நூலினைச் சுவாமிகள் பாடினார் போலும் என்று நினைக்கத் தோன்றுகிறது. கவுமார சமயகுரவர் எனத்தக்க இவர், தமது 'சமயப் பொது நோக்க'க் கோட்பாட்டிற்கும், சிவச்சார்புறு நூல் தொடக்க மரபிற்கும் பொருந்தக் காப்புச் செய்யுளில் 'ஆனை எழிற் றாள்மலர்க் காப்பாம்' என்று மூத்த பிள்ளையார் வாழ்த்துக் கூறிக் காப்புரைத்துள்ளார்.

**செந்தூரும் பழனியும்**

நக்கீரர் முருகாற்றுப்படையில், தனியிடங்களாகவும் தொகை யிடங்களாகவும் குறிப்பிட்ட கூடற்குடவயின் குன்று (திருப்பரங் குன்றம்), சீர் அலைவாய், ஆவினன்குடி, ஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய ஆறும், பின்னர் ஆறு படைவீடுகளாய்ப்

போற்றும் மரபு தோன்றியது. அலைவாய் என்னுமிடம், சங்க காலத்திலேயே செந்தில் என்றும் வழங்கப்பட்டதனை, ''திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகுசேய்'', என்றும், ''வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில், நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை'' என்றும் அமைந்த சங்கப் பாடற் பகுதிகளால் அறியலாம். இன்று பழனிக் குன்றுறை முருகன் முதன்மையாகவும், ஆவினன்குடி அடுத்த நிலையிலும் சிறப்புற்றிருப்பினும், நக்கீரர் காலத்தில் பழனிக் குன்றுறை குமரன் கோயில் இருந்திருந்தால், அது முதன்மை பெற்றிருக்கவில்லை போலும்! பண்டு ஆவினன்குடியும், அதன் அருகுள்ள பழனிக்குன்றும் பொதினி என்னும் பெயரில் வழங்கியதனை, ''முருகன் நற்போர் நெடுவேள் ஆவி, அறுகோட்டு யானைப் பொதினி'' என்னும் அகநானூற்றுப் பாடற்பகுதியால் அறியலாம். பழனி (பழநி) என்னும் பெயர்க்காரணம், பழம் + நீ என்னும் புராண அடிப்படையிலானது, பழனம் சூழ்ந்தது என்னும் நிலவியல் அடிப்படையிலானது என்பதனின் வேறாகப், பொதினி எனும் வரலாற்றுப் பெயர் மருவிப் பழனியாயிற்று என்று கூறுதற்கான மூலச் சான்றாக மாமூலனாரின் அகப்பாடல் அமைந்துள்ளது (அகம். 2:3-4).

முருக பத்தர்களுக்குச் செந்தில் எக்காலத்தும் சொந்த இல்லாகவே இருந்துள்ளது. அந்த உரிமையால், தண்டபாணி சுவாமிகளின் தந்தையும் மைந்தனும் செந்தினாயகம் என்றே பெயர் சூட்டப் பெற்றனர். தம் மரபுத் தெய்வமாகவும், வழிபடு கடவுளாகவும் விளங்கும் முருகப் பெருமான், சூர்ப்போரில் வாகை சூடி, வேலோடும் மயிலோடும் விளங்கி, அருள்பாலிப்பதனால், சுவாமிகள் அந்தலத்தின்பால் பெரிதும் ஈடுபட்டுக் 'கனக்கவலைத் தொனி காட்டும் கடல் திருச்செந்தூர்' (3) என்றும், 'சீர்கள் யாவும் பெறுஞ் செந்தில்' (4) என்றும், 'கடவுட் செந்தமிழ்த் திருச்செந்தில்' (5) என்றும், 'தாவறும் பெருமைச் செந்தூர்' (7) என்றும், 'பரம்பரன் தொழு தெழும் புகழ்ச் செந்தில்' (8) என்றும் புகழ்ந்தேத்துகின்றார். செந்திலில் கடல் அலை எழுப்பும் ஓசை, ஓங்கார பிரணவமாய் இசைக்கண்டு அதனைச் சுட்டி, 'கனக்கவலைத் தொனி காட்டும் கடல்' என்று சிறப்பித்துள்ளார். இக்கருத்தினைப் பாரதியின், ''நீலக்கடல்... வேகத் திரைகளினால் வேதப்பொருள் பாடி, வந்து தழுவும்

வளஞ்சார் கரையுடைய செந்தமிழ்த் தென் புதுவை'' என்னும் பகுதியால் அறியலாம்.

செந்திலுக்கு அடுத்ததாகத் திருவாவினன்குடியாய பழனியைக் குறிப்பிடுகின்றார் (2,10). சுவாமிகளின் காலத்தில், பழனிக் குன்றின்மீது தண்டபாணியும், அடிவாரத்திலுள்ள திருவாவினன் குடியில் பாலசுப்பிரமணியனும் தனித் தனியாகக் கோயில் கொண்டுள்ள நிலைமை விளங்கியதால், இரண்டினையும் 'வானாடர் போற்றும் திருவாவினக்குடி' என்றும் (2), 'பன்மறை முழங்கும் பழனியங்கிரி' என்றும் (10) குறிப்பிட்டுள்ளார். சுவாமிகள் ஆவினன்குடியில் தங்கியிருந்தபோது அமைக்கப்பட்ட திருமடம், இன்றும் அவர் பெயரால், சரவணப்பொய்கையினை அடுத்து விளங்குகின்றது. சுவாமிகள் கூறிய 'வானாடர் போற்றும்' என்னும் அடைமொழியின் உண்மையைத் தேவர்கள் ''உறுமுறை மருங்கில் தம்பெறு முறை கொண்டார், அந்தரக் கொட்பினர் வந்துடன் காண ... ... ... ஆவினன்குடி அசைதலும் உரியன்'' என்னும் நக்கீரர் வாக்கால் உணரலாம்.

**சமயக் கோட்பாடு**

சுவாமிகள் தம் தீவிர முருக-பத்தி உபாசனையால் சில சித்தி நிலை எய்தித் திகழ்ந்தார் என்றும், அதனால் முருகப் பெருமானொடு நேரே உரையாடும் ஆற்றல் பெற்றிருந்தார் என்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. முருகனிடத்தே தீவிர பக்தி கொண்டவராயினும் பிற சமயத் தெய்வங்களை இகழாமல், அச்சமய நெறிகளும் ஆன்ம ஈடேற்றத்திற்காம் வழிகளேயாட் என்னும் தம் கருத்தினைத் தம் நூல்கள் பலவற்றிலும் வெளிப்படுத்தியுள்ளார். ஒருவன் தான் மேற் கொண்ட சமயநெறியில் தீவிரமான ஈடுபாடும், அதேபோழ்து பிற சமய நெறிகள், தெய்வங்களிடத்தே காழ்ப்பில்லாத பொதுமைப் பண்பும் கொண்டிருத்தல் வேண்டுமென்பதனை வலியுறுத்தியுள்ளார். இவற்றைப் பின்வரும் இவர் பாடற் பகுதிகளால் உணரலாம்:

> ''தற்பரம் ஒன்று சமயம் பலவாறு
> நிற்பதே உண்மை யென்று உந்தீபற
> நீங்கா நிறைவது என்று உந்தீபற'' (சதக உந்தி. 3)

''எப்பேரும் எவ்வடிவும் உடையானைப்
பலதேவென் றியம்பி வாடிப்
பொய்ப்பேதம் கருதிமிகப் பேராடும்
சமயத் தோர்'' (பிரணவாநுபூதி. 28)

''தெய்வம் பலவும் தெளிந்தோர்க்கு ஒன்றென்கை
மெய்வழக்கு ஆகுமென்று உந்தீபற
வேதத்தின் அந்தமென்று உந்தீபற (சதக உந்தி. 1)

''சமயநெறி அத்தனையும் தாண்டி உண்மைச்
சமரசம் தோய்ந் தவர்குரவன் தன்மை நேர்ந்தோர்
இமயவரிற் பெரிதுயர்ந்தோர் அவரே ஆவர்''
(நானிலைச் சதகம்-48)

சமயங்கள் பற்றி இத்தகு கருத்துடைய சுவாமிகள், ஆர்வ மிகுதியால் மும்மூர்த்திகள் போற்றிப் பரவும் முருகப்பெருமான் எனக் கூறுகையில் மும்மூர்த்திகள் முருகனோடு ஒப்பக் கருதப் படாமையைக் காணமுடிகிறது. சிவபெருமானின் இலிங்கோற்பவ மூர்த்திக் கோலம் சுவாமிக்கு நினைவிற்கு வருகிறது. திருமாலும், நான்முகனும் சிவபெருமானது அடி முடிகளை முறையே தேடமுயன்று காணாது மயங்குகின்றனர். அவர்களால் வணங்கப் பெறும் சிவபெருமானும், தொழுது எழும் புகழ் வாய்ந்தவன் முருகன் என்பது தண்டபாணி சுவாமிகள் கருத்து. இதனை அவர்தம் பன்னிரு பாமாலையில்,

''கரியமேனியங் கண்ணனும் நாண்மலர்க்
கமல நான்முகத்தோனும்
தெரியலாப் பாம்பரன் தொழுதெழும் புகழ்ச்
செந்திலம் பதியானே'' (8)

எனக் கூறுகிறார்.

இதில் மும்மூர்த்திகள்பால் காழ்ப்பில்லாவிடினும், முருக னோடு ஒப்ப நோக்காப் பொதுமையின்மை புலப்படுகின்றதே! பிரமனை முருகன் குட்டிச் செருக்கடக்கியதனை, ''ஆணவமுற்றங் கவண்பேசிய நான்முகனைச் சங்கடஞ்சேர-முனிந்தவேளே (12) என்பதிலும் இத்தகுநிலை வெளிப்படக் காணலாம்!

## முருக பரத்துவம்

இளமையில் விநாயகர் வழிபாடு போன்றவற்றில் ஈடுபட் டிருப்பினும் பின்னர் முருகப்பெருமானை முழுமுதலாகக்

கொண்டு, பயன் கண்டு, அவ்வழிபாட்டினைச் சிறப்பிக்கும் தோத்திர சாத்திர புராண நூல்களை இயற்றியுள்ளார் தண்டபாணி சுவாமிகள். ஆறு சமயங்களில் முருகனைத் தவிர்த்த ஏனைய தெய்வங்கட்கும் பரத்துவம் கூறும் பாங்கில் நூல்கள் இயற்றினாலும், இவர்பால் முருக பரத்துவமே ஓங்கி நின்றுள்ளது. இதனை, ''அரிய மெய்ப்பொருளாகிய நின்னருட்கு ஆசை கொண்டுள்ள என்னை'' (8) என்பதனால் காட்டியுள்ளார். முருகன் திருநாமங்களுள் ஒன்றாய சரவணபவன் என்பதன் அடியாக அமைந்த 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து மந்திரம் ஓம் எனும் பிரணவத்தோடு கூடிய நிலையில் அமையும், 'ஓம் சரவணபவ' என்பதனைப் 'பெரிய மந்திர தாரகம்' என்று குறிப்பிடுகின்றார் (8).

முருகப்பெருமானே சிவன் முதற்பல கடவுளராய்த் தம் உள்ளத்தில் தோன்றி, அறுமுகக் கடவுளாய் உருக்கொண்டு மன்னிய பாங்கினை,

'...தொழும்புசெயும் என்னுளத் தவன் எண்ணில்
பலவடிவுகொண்டு பின்னர்
அரவமணியுஞ் சிவன்முதற் சிலர்தமைப் பரவும்
அறுவகைச் சமயமும்தன்
ஆறுமுகம் எனக்காட்டி ஆறெழுத்துருவாகி
ஆறுதிசையாகி அப்பால்
குரவனது வடிவாகி இவ்விதம் எனக்கண்டு
கூறரிய குறியதாகி... ...'' (11)

என்னும் பாடற்பகுதியால் வெளிப்படுத்தியுள்ளார்.

## உயிர்க்கொலையும் ஊனுணவும் மறுத்தல்

தண்டபாணி சுவாமிகள், வேதங்களை உடன்படுபவ ராயினும், அவை கூறும் யாகங்களில் நிகழும் உயிர்க்கொலை யினையும், அதன்வழி ஊனுண்டலையும் உடன்படாது அறவே வெறுப்பர். கொலை புலைகளை அறவே மறுக்கும் தம் கோட்பாட்டினைத் தம் நூல்களிலும் செயல்களிலும் நன்கு புலப்படுத்தியுள்ளார். வேள்வியிற் கொலையையும் புலையையும் உவப்பவர்பின் சென்று உழல்தல் கூடாது என்பதனைப் பன்னிரு பாமாலையில்,

"ஆரண நுட்பம் தெரிந்தோமென
மேடமதைக் கொன்றுவெந் தூன்நுகர்
ஆசுபொறுக்கின்ற வம்பாளர்கள்
– பின்செலாதே" (12)

என்று தெளிவுபடுத்துகின்றார்.

பழனியில் சுவாமிகள் அவரது மடத்தில் தங்கியிருந்தபோது, அம்மடத்திற் கெதிரே அமைந்த பிறிதொருமடத்தில் (யாதவ மடம்) ஒருவர் ஒரு சிறு தெய்வத்தினைத் தம் உபாசனைத் திறத்தால் வயப்படுத்தி, நாடோறும் ஆடு மாடுகளைப் பலி யிட்டுப் பூசித்துப் புதைத்து வருவது கண்டு மனம் மிக வெதும்பினார். அதனை நீக்குமாறு பழனிப் பெருமானை வேண்டியதாகவும், அது நிறைவேறாமையால், வருத்தம் மிகக் கொண்டு 'முருகா, இனி உனை இங்கு வழிபட வாரேன்' என்று புலந்து கூறிப் பழனியை நீங்கியவர் பின்னர் அங்கு வரவில்லை என்றும் ஒரு செவிவழிச் செய்தி அந்நகரில் கேட்கப்படுகிறது.

## தன்னிலை இயம்பல்

'பன்னிரு பாமாலை' தோத்திர வகையில் அமைந்து பயில் வார்க்கு இருமைப்பயன் விளைக்கும் என்பதனைப் பலச்சுருதி வெண்பாவில் "படிப்போர்க்கு... வேலும் மயிலும் துணையாம் வெய்ய வினைவேரழுகும், பாலும் அனமும் கிடைக்கும் பார்" என்று காட்டியுள்ளார். எனினும், முருகன் அருள் கைவரப் பெற்றவராயினும், சுவாமிகளின் உள்ளத்தில் அதுகாறும் நிறை வெய்தாத சில விருப்பங்கள் இருந்துள வென்பதனை உணர்த்தும் தன் வரலாற்றுக் குறிப்புக்கள் சில காணப்படுகின்றன. அவற்றை அறிய முற்படுமுன், ஒரு கருத்தினைச் சிந்திப்பது தக்கதாகும்.

'பன்னிரு பாமாலை' எப்போது பாடப்பட்டது என்பதனை அறியக் கூடவில்லை. சுவாமிகள் முதன்முறை செந்தில் சென்ற தற்குப் பின்னரும் இறுதியாகத் திருவாமாத்தூர் அடைந்ததற்கு முன்னருமாகிய இடைக்காலத்தில் பாடப்பட்டிருத்தல் வேண்டும். பாடிய பின்வர்ச் சுவாமிகளின் மனக்குறை யகன்று, விருப்பம் நிறைவுற்றதா என்பதனை அறியக் கூடவில்லை.

'செந்திலானே பரமதேசிகன் என்று ஓர்ந்தும், என்பால் வந்திலான்; முன் உரைத்த வார்த்தை போல் தந்திலான்' என்ப

தனால் (1) அடிகளின் மனக்குறையினை உணரலாம். மேலும், "முன்னரிப் போல உன்னை நானே வேண்டி வந்தேன் என்று எண்ணிவிடாதே; ஆவினன்குடிவாணனிடம் தமிழ் கொண்டு சென்றபோது, அவன், செந்திலுக்குச் சென்றால் நலமாகும் என்றமையால் இங்கு வந்தேன் (2) என்பதனால், மீண்டும் செந்திலுக்குச் சென்று பாட நேர்ந்த காரணம் புலனாகின்றது.

"தனக் கவலைப் பிணிசூழத் தரணியிடைத் தளர்கின்ற
மனக்கவலை தீர்த்தருளும் மருந்தளிக்க மாட்டாயோ" (3)

என்றவர், 'ஊர்கள்தோறும் இரந்து அலைந்து உள்ளம் நொந்து உண்மையில்லவர் ஒத்து உழன்றாலும் (4) என்றும், 'அருட் செல்வமெய்திச் சிறப்புறச் செய்குவாய்' (4) என்றும் கூறுவத னால், சுவாமிகளுக்குப் பணத்தேவையும், உடல்-உளப்பிணிக் கவலையும், இருந்ததனையும், அதனால் பல்லூர் சென்று பலரை நாடி உழந்ததனையும் உணரமுடிகின்றது. இதனை,

"... ... .... உள்ளத்துரைத்த
வண்மை தோய்தரு மாற்றம் அனைத்தும்
மெய்ப்படக் காட்டி வினைத்தொகை இரண்டும்
பொய்ப்படு மாறு புரிய வேண்டும்
இன்னமும் தமியேன் ஈகிலார் பாலும்
நன்னயம் பேசி நகர்தொறும் திரியேன்"

எனும் செய்யுட்பகுதி உறுதி செய்யக் காணலாம் (10). பிறிதொரு பாடலில், "...செந்தூர்ப் புரவலனே மயிலூரும் புனிதவேளே, தநியிதுதான் என்றறிய மாட்டாய் கொல்லோ சகிக்கரிய துயர்முழுதும் தவிர்த்தாள்வாயே" (9) என்று அமையும் இவர்தம் வேதனை விரவிய வேண்டுகோள் முருகப் பெருமானால் நிறைவேற்றப்பட்டிருக்கும் என்று நம்பலாம். இல்லையேல்,

"அந்தவாறுநீ பகர்ந்திடக்கேட்டும் நான் அகிலத்து
இந்தவண்ணம் நொந்திடும்படி படுத்துவதென்னே" (5)

என்றும் பிறவாறும் இரங்கி ஏங்கி வேண்டியவெல்லாம் பயனில் கூற்றாகுமன்றோ!

தாமுற்ற துன்பங்களையும், குறைகளையும் கூறி வேண்டு தலால் இந்நூல், உலகவர் உறுந்துன்பங்களையும் குறைகளையும்

தம்மீது ஏற்றிப் பாடும் வகையில் அமையும் தோத்திர நூலாக அமைகின்றது. வழிபடுவோரின் அகப்புறப் பிணிகளை அகற்றி இன்பம் பயக்கும் ஆற்றல் முருகப்பெருமானுக்குண்டு என்பதனை உணர்த்தவே அவனை,

''மேவலர்க்கொரு கூற்றென்ன விளங்குசெஞ் சுடர்வேலேந்தித்
தாவறும் பெருமைச் செந்தூர்தனில் உறும் சகுணவாழ்வு''

(7)

என்று சுட்டுகின்றார். நூலினைப் படிப்போர் பெறும் பயனை, முன்னர்ச் சுட்டியவாறு,

''வேலும் மயிலும் துணையாம்; வெய்யவினை வேர்அழுகும்
பாலும் அனமும் கிடைக்கும் பார்'' (இறுதி வெண்பா)

என்று உறுதிப்படுத்தியுள்ளார். மூர்த்தி சிறிதெனினும் கீர்த்தி பெரிது என்னுமாப் போல, நூல் சிறிதாயினும் நூற்பயன் பெரிதாகும். இது கவுமார சமயத்தவர்க்குக் கிடைத்த சிறிய ஆனால் சிறந்த தோத்திரப் பனுவலாகும்.

# சுவாமிகளின் தத்துவங்களும் சித்தமருத்துவக் கொள்கைகளும்

மரு. சே. பிரேமா & மரு. ச. ரங்கராசன்

முருக வழிபாடு தொன்மையான வழிபாடு ஆகும். "மாதவிலக்கான பெண்கள் முருக கோட்டம் சென்று வழிபடாமல் இருந்ததுபோல" என்று பெரும்பாணாற்றுப் படையில் வருவதால் அறியலாம். தண்டபாணி சுவாமிகளின் வழிபடு கடவுள், முருகன் ஆவர். முருகனே - ஐவகையான திருமேனிகளை கொண்டுள்ளார். இக்கருத்தை "தெய்வம் உண்டென்று ஒப்புகின்ற சமயம் எல்லாம், தெளிந்தோர்க்கு கௌமாரச் சேர்க்கையேயாம்" என்பர். "கௌமாரம்" என்ற சொல், "குமார வழிபாடு செய்யும் நெறியினது" என்ற பொருளை உடையது. முருகக் கடவுளை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபாடு செப தியானம் - இவற்றை உறுதியுடன் செய்து அவன் அருட்பேற்றுக்கு உரியவராவர்; கௌமாரர் எனப்படுவர்". (கௌமார முறைமை பா. 15) ஏனைய வழிபாடுகளைப் புறக்கணிக்காமல் அவற்றையும் ஏற்றுக் கொண்டவர் தண்டபாணி சுவாமிகள். அனைத்து திருவுருவங் களையும் போற்றி வழிபட்டார். பாமாலைகளைச் சாற்றினார். இதைச் சூரிய மாலையில் தெளிவாக்குகின்றார்.

"கொன்றை பிரான் என்றுனைச் சிலர் விளம்பிடுவார்
குமாரவேள் என்பர் சிலபேர்
குஞ்சரமுகக் கடவுள் என்பர் சிலர்
மாவெனக் கூறி வழிபடுவர் சில்லோர்
குன்றைப் பொருந்தன முடைக்
கரிய குயிலெனக் கொள்வார்" (சூரியமாலை பா. 20)

இதே கருத்தை அகத்தியர், "ஞானகாவியம் 1000" என்ற நூலில் பேசுகின்றார்.

"பன்னவே, கடவுள் ஒருவர் என்று
பாருலகில் ஞானவான் சொனாரீது
தென்னவே, வெள்ளிக்கு நாமம் கூர்வேன்
தோற்றமுடன், ஆகமங்கள் பலது மாமே"
(ஞான காவியம்)

என்றும்,

"வடிவமா உலகு தனில் கடவுளப்பா
வன்மையுள்ள கடவுளே ஒருவராகும்"
(ஞான காவியம்)

என்றும் கூறுவர்.

இவர் சித்தர்களைப் பெரிதும் போற்றியுள்ளார். ஞான சித்தருடைய சிறப்புகளை ஐந்து பாடல்களில் இயற்றியுள்ளார். "ஞான சித்தரால் தமிழ்ப் பாமாரிபெய்யும் வானகமும், உலகமும் வாழும்" ஞான சித்தர், திருவிளையாடல் புரியும்போது, உயிர்க் கொலையும், புலால் உண்ணாலும் இன்றிக் கொற்றவனின் அறந்தவறாமையும் ஏற்பட்டுச் செந்தமிழ் நாடு சீருடன் இருக்கும். சிவயோகியின் இலக்கணத்தை தன் "இலட்சண காவியத்தில் கூறுகின்றார்.

"பெற்றாரே அனேக கோடி மான்ப ரெல்லாம்
பேரின்பக் கடவுள் பதங் காணாமல் தான்
சற்றேனும் சதா சிவத்தைத்துதியாமல் தான்
சாங்கமுடன் சதாகாலம் கல்லைச் செம்பை
நற்றவமாய, பணி மிகப் பூண்டு மல்லோ
நாகரிக உடைமான மேலே சாற்றி
குற்றமுடன் பொய்யான மதத்தை நம்பி
கும்பிட்டார் கோடி சன யோகியாமே".

"இன்னமும் கூறுகின்றேன் இனிய பாலா
எழிலான சிவயோகி லட்சணங்கள்
நன்னயமாய், நெற்றி தனில் வெணீறயா
நாயகனே, உத்தனமாய் பூடு என்ன
பன்னவே தேகாதி தேகமெங்கும்
பரமசிவன் போலாக வடிவு கொண்டு
நன்னயமாய் கடவுளதன்னைப் போற்றாமல்தான்
நானிலத்தில் கல்லதனைத் தொழுதிட்டாரே"

உயிர்க்கொலையை ''பலியிடுதல்'' என்ற பெயரில் செய்வதும் புலால் உண்பதும், கஞ்சா என்பன போன்ற போதைப் பொருட் களைப் பயன்படுத்துவதையும் மிக வன்மையாகக் கண்டித் துள்ளார்.

''கஞ்சா, அபின், கள்ளரக்குண்ட பேரும்
கழி திகழு மருள் பிடித்து'' (சூரிய மாலை பா. 10)

எனவும்

''எக்குலத் தோராயினும், ஊன் அருந்தாதவர்கள்
எனில் உயர்ந்தோர்கள்'' (சூரிய மாலை பா. 14)

இது போன்றே அகத்தியர் இலட்சண காவியத்தில் புலால் உண்ணலையும், உயிர்க் கொலையையும் கண்டிக்கின்றார்.

''மெப்பமுடன் பிரார்த்தனைகள் மிகவே கொள்வார்
மேதினிட பலியாடும் பூசை கொள்வார்''
(இலட்சண காவியம் பா. 98)

என்று உயிர்க்கொலை செய்து, ஊன் உண்ணலைக் கண்டிக் கின்றார்.

''போது எனும் பிடாரி முதல் பிசாசுக் கூட்டம்
பொங்கமுடன் கை தொழுது பணிதி கொண்டு
வாகினியாம் பலி முதலு மிக வாய்த் தந்து
வாகுடனே பூசை முகம் வெண்ணீறு பூண்டு
ஆகிடமாய், தேவனுக்கு விரோதமாக
அப்பனே, நடத்திட்டார் கோடி காணே''
(ஞான காவியம். பா. 19)

கள், அபின், சாராயம் போன்ற போதைப் பொருள்களை துறவிகள், பொது மக்கள் பயன்படுத்துவதை தண்டபாணி சுவாமிகள் பெரிதும் கடிந்துரைக்கின்றார். இக்கொள்கை களையே, அகத்தியர்

''பாரப்பா ஞானிகளின்றி வையப்பா
பாலகனே, அவர் கொண்ட போதை தன்னால்
நேரப்பா, தன்னறிவைத்தான் மறைக்கும்
நெடிதான போதையென்ற வஸ்துவாகும்''
(ஞான காவியம். பா. 98

''கறையான பழுத்த கனி தன்னைக்
காணப்பா, பச்சிலைதான் மறைக்கும்பாரு''
(ஞான காவியம். பா. 98)

''வேளப்பா, குடுப்பைக் கஞ்சாக் கொண்டால்
மெய் நிறைந்த கற்பமெல்லாம் வீணே''

**தண்டபாணி சுவாமிகள் செய்த சித்துகளும் இபற்றிய பாடல்களும்**

அருள் குரவர்களான மூவர் முதலிகளைப் போலப் பழந் தமிழ் மரபை ஒட்டிப் பாடல்களைப் பாடி, சித்துகளை நிகழ்த்தி யுள்ளார். இவருடைய சித்துகள் பற்றிய செய்திகள் பாடல் களில் உள்ளன. ''அட்டமா சித்திகளைக் கண்டவர்களே சித்தர்கள் ஆவர். இவ்வகையில் தண்டபாணி சுவாமிகளும், வாதம், வைத்தியம், யோகம், ஞானம் நான்கு வழிகளிலும் பாடல்களை சித்துக்களைச் செய்து காட்டியும் உள்ளார். சித்தர்கள் மீது பெருமதிப்புக் கொண்டவர் என்பதும் அவர்கள் வழியைப் பின்பற்றியவர் என்பது இவர் பாடல்கள்வழி உணரலாம்.

''நவநாத சித்தர்களும் மற்றுமுள முத்தர்களும்
நாடிப் பணிந்த சுடரே'' எனவும்

''அஞ்செ முன் நின்று சித்தி எட்டெட்டும் விளையாடி''

என்றும்

''கவுமார சித்தர் இதைக் காண்பார்''

என்றும் இவர் பாடல்களில் வருகின்றன. இது சித்தர்களிடம் அவர் கொண்ட ஆழ்ந்த மதிப்பைப் புலப்படுத்தும். திருஞான சம்பந்தர் ''திருக்கொடி மாடச் செங்குன்றூர்'' பதிகத்தில் குளிர்சுரம் அகலப் பாடியதும், முடக்கு வாயுத்துன் பம்நீங்க'' திருப்பாச் சிலா சிரம்பதிகம்'' பாடியதும், திருமருகல் திருப் பதிகத்தில் நஞ்சு நீங்கப் பாடியதும், நன்மகப்பேறு அடைய'' திருவெண்காடு திருப்பதிகத்தையும், சுரம் நீங்க திருநீறு திருப்பதிகத்தையும் முறிந்த என்பு கூட, திருமாகறல் திருப்பதி கத்தையும் பாடியுள்ளார். இது போன்றே, அப்பரும் தீராத குன்மம் தீரவும், நஞ்சு நீங்கி வாழவும், விடம் தீர்த்த திருப்பதிகத்தில் பாடியுள்ளார் சுந்தரர் வலக் கண்பார்வையைப் பெறத் திருவாரூர் திருப்பதிகத்தை அருளினார். இதைப் போன்றே தண்டபாணி சுவாமிகளும் பாடல்களை ''நோயும் பகையும்'' நொறுங்கப் பாடியுள்ளார் திவான் சண்முகம் பிள்ளையின் குன்மம் அகல மேற்படி பாடலைப் பாடி நலம் பெற

அருளியுள்ளார். ஆதிலட்சுமி என்ற பெண்ணை முனி என்பது பிடித்தது. இதை விரட்ட முருகன் கை வேலை விடவேண்டு கின்றார். நக்கீரனை திருப்பரங்குன்றத்தில், பூதத்திடமிருந்து விடுவித்தப் புராணக் குறிப்பை இங்கு புலப்படுத்துகின்றார். (தனிப். பா. 62) எட்டு வகையான சித்துகளில் ஒன்றாவது அளிக்க வேண்டுகின்றார். (தனிப் பா. 153) இது போன்றே அரிகர புத்திரியின் நோய் விலகவும் விண்ணப்பிக்கின்றார். இவளது நோய் இன்னது எனப் பாடலில் அறிய முடியவில்லை. இரங்கன் என்பவன் பித்த நோயில் வருந்தியபோதும், மல்லையா கண்பார்வை பெற்று சீரருளச் செய்யவும் பழனி முருகனை வேண்டுகின்றார். தன் அடியார்களுக்குக் குறைகளை நீக்கப் பாடல்களைப் பாடி அளிக்கின்றார். அம்மை நோய் பரவியபோது திருவாமாத்தூர் வராமல் தடுக்க மாரியம்மனை வேண்டி யுள்ளார். இதில் பேதி, வீடுசி, மாரி என்பனவற்றைக் குறிப்பிடு கின்றார். பேதி என்பது கழிச்சல் நோய், வீடுசி என்பது காலரா, மாரி என்பது அம்மை நோய் ஆகும். ''வெருட்டும் வீடுசி வியாதி இங்கு வாராது'' என்றும், மக்களுக்கு உறுதி அளிக்கின்றார். பேதி என்ற தேவதையை அழித்துவிடு என்பதாகக் கால கால சங்கரனை வேண்டுகின்றார். பேதியை ஓர் தேவதையாகப் பாடியது ஓர் புதிர் செய்தியாக உள்ளது. மாரி, பிளேக், சுரம் என்ற நோய்களைத் தெய்வங்களாக வழிபடும் முறை அக்காலத்தில் நிலவியதையும் இப்பாடல்களில் காணலாம். இவரின் ''திருவரங்கத் திருவாயிர நூல்'' அரங்கேற்றத்தின் போது, அவ்வரங்கேற்ற விழாவுக்கு வந்த பெண்ணை, பாம்பு தீண்டியது. அந்நஞ்சு நீங்கப் பாடியுள்ளார். இது ஞானசம்பந்தர் திருமருகலில் நஞ்சு நீங்கப் பதிகம் பாடியதற்கும், அப்பர் அப்பூதி அடிகள் மகனின் நஞ்சு நீங்கப் பதிகம் பாடியதற்கும் ஒப்பாக உள்ளது. தன்னுடலில் வெப்பம் அதிகமாய் இருக்க, அவ்வெப்பம் நீங்கவும் பாடல் பாடியுள்ளார். இவ்வெப்பத்தை நீக்க நன்னாரி என்ற வேரைப் பயன்படுத்தியதாகவும், நன்னாரி நல்ல பெண், இது நாமகள், மலைமகள் எனவும் புகழ்கின்றார். இன்றும் கோடையில் வெப்பமும், நீர் வேட்கையும் அகல, நன்னாரி சாரை நீரைப் பருகுகின்றார்கள். நன்னாரி மருத்துவப் பண்பு பற்றி சித்த மருத்துவ நூல்களில் ''சலதோடம், பித்த அதிதாக உழலை'' என்பன நீங்கும் என்று குறிப்பிடுகின்றன. நோய் கண்டபோது அது நீக்கும் வழியை அறிந்துள்ளமை, அவரின் மருத்துவ அறிவைச் சுட்டும். இது போன்றே வேர்க்கடலையின் பெருமையை நகைச்சுவையுடன் கூறுகின்றார். இதை உண்ண, அயன், அரியில் எவர்வரினும் காணார், வழிபடார், இவர்களுக்கு அறிவுக்கண் இல்லை என வருந்துகின்றார். உணவுப் பொருட்

களில் கேழ்வரகு சிறப்பானது. இது சாமை, தினை கூழ்வரகு என்பவற்றிலிருந்து மாறுபட்டது. கேழ்வரகைப் பிட்டாகவும், களியாகக் கிண்டியும், கூழாகக் காய்ச்சியும், தோசையாக வார்த்தும் உண்ண, இன்பம் நல்கும். 18 ஆம் நூற்றாண்டுகளில் புன்செய் தானியங்களைப் பயன்படுத்திய வகைகளை இதன் வழி அறியலாம். இவ்வழக்கம், இன்று அரியதாகிவிட்டது. கூழ் - களி, இவற்றுக்கு வாத - பித்தக் கலப்பு, வயிற்று நோய் என்பது நீங்கும். ஆயினும் சோறாக்கி உண்ண, நோய்கள் ஏற்படும் மகப்பேறு பற்றியும் பாடல்களைப் புனைந்துள்ளார். மதுரைப்பாக்கம் சாம்பசிவ ரெட்டியார் மகன் துரைசாமி ரெட்டியார் மலர்க்குளமும், கோவிலும் அமைத்தார். இதனால் அவருக்கு கன்னியும், காளையும் இருவர் பிறப்பார்கள். வாணி உரைக்கின்றாள் என்று பாடுகின்றார். முதலில் பெண் குழந்தை பிறக்க, ரெட்டியார் கவலைப்படுகின்றார். குமரேசன் அருளால் மகன் பிறப்பான் என்றும் உறுதியளிக்கின்றார். இது போன்றே வேலாயுதம் பாளையம் கவுண்டருக்கு மகப்பேறு ஏற்பட அருளுகின்றார். தன் மகள் மகப்பேறின்றி இருக்க, முருகனை வேண்டுகின்றார். மகப்பேறு ஏற்படுகின்றது.

பிறருக்குத் துன்பம் தரலாகாது என்ற உயர்ந்த தத்துவத்தை உணர்த்துகின்றார். கொத்தவரைச் செடியை, உச்சி வரை ஒடித்த தன் மகனுக்கு அறவுரை கூறுகின்றார். இதற்குக் கழுவாயாக வினாயக வணக்கத்தை வலியுறுத்துகிறார். தாவரங்கள் தன்னைப் பிடுங்கியவர்களுக்கு சாபம் தருவதாக மருத்துவ நூல்களில் வருகின்றது. சான்றாக அகத்தியர் "மாந்திரிக காவியத்தில்" கவிழ்தும்பை, தும்பை, நின்று சிணுங்கி சிறுபுள்ளடி, பொன் முசுட்டை, நத்தை சூரி, சூரியகாந்தி குப்பைமேனி, ஆணை வணங்கி, சோதி விருட்சம், தலைச்சுருளி, செந்தோட்டி கொல்லைப்பல்லி, விடதாரி, ஆகாச கருடன், தேவதா விருட்சம், திகைப்பூண்டு, கஞ்சாக் கோரை பெருவாகை, காசா முலி போன்றவைகளுக்குச் சாபம் கூறப்பட்டுள்ளது.

தண்டபாணி சுவாமிகளின் மருத்துவப் புலமைப் பற்றி ஆய்வு செய்தல் அவசியம். சுவாமிகள் வாகட நூல் யாத்துப் பின் அழித்ததாகச் செவி வழிச் செய்திகள் உள்ளன. அவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதற்கு அவரின் மருத்துவக் குறிப்புகள் சான்றுகளாகும். தண்டபாணி சுவாமிகளின் இலக்கண இலக்கியப் பணிகள் போன்றே மருத்துவப் பணிகள் பற்றிய செய்திகளையும் ஆண்டுதோறும் கருத்தரங்குகள் வழி — அறிஞர்கள் பெருமக்களைக் கூட்டி ஆய்வு செய்து, நூலாக்கம் செய்து வெளியாக்குதல் அவர் வழி நடப்பார்க்கு அழகாம்.

# அறுவகை இலக்கணத்தில் குறியீட்டு விளக்கம்

தி. புஷ்கலா

பொதுவாக எழுத்து வடிவங்கள் அனைத்துமே குறியீடுகள் ஆகும் என்பதை

"ஓர்ஒலிகலைதொறும் ஒவ்வோர் வடிவு உடைத்து;
ஆதலில் பொறிஇனம் அனைத்தும் குறிப்பே." (நூற்பா-41)

எனும் அறுவகை இலக்கண நூற்பா விளக்குகிறது. எனினும் சுவடியியலைப் பொறுத்தமட்டிலும் ஓலைச்சுவடிகள், கல்வெட்டுகள், செப்பேடுகள் போன்றவற்றில் இடம்பெறும் எண்குறிகள், அளவுக்குறிகள், கூட்டெழுத்துக்கள், சொற் சுருக்கங்கள் போன்றவையே சிறப்பாகக் குறியீடுகள் எனக் குறிப்பிடப் பெறுகின்றன. அறுவகை இலக்கணத்தில் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இதுபோன்ற குறியீடுகள் குறித்தும் சிந்தித்திருப்பதை எடுத்துக்காட்டும் விதமாக இக்கட்டுரை அமைகிறது.

அறுவகை இலக்கணத்தில் காட்டப்பட்டுள்ள குறியீட்டு விளக்கம் பற்றிக் கூறும் முன்பாக குறியீடுகள் மிகுதியாக பயிலப்படும் ஆவணச்சுவடிகள், 'அவற்றின் பயன்பாடு, அவற்றில் காணப்பெறும் குறியீடுகள், குறியீடுகள் பற்றியறிய உதவும் நூல்கள் போன்றவற்றை அறிமுகமாக சிறிது காண்போம்.

### ஆவணச்சுவடிகள்

அரசு ஆவணங்கள், நிலப்பத்திரங்கள் போன்றவை பெரும்பாலும் சென்ற நூற்றாண்டின் தொடக்கம்வரை ஓலைகளிலேயே எழுதப்பட்டு வந்தன. இவற்றை ஓலை ஆவணங்கள் எனலாம். இதுபோன்ற ஆவணங்கள் அவ்வக் காலத்தின் சூழல், மொழி, வரலாறு, பண்பாடு, சமூகப்பொருளாதாரம் ஆகியவற்றைச் சமுதாயத்தின் ஒட்டுமொத்த சார்புடன் வெளிப்படுத்துவன. இடைக்காலம் வரையிலான வரலாற்றையறிய கல்வெட்டுகளும்

செப்பேடுகளும் முதன்மை ஆதாரங்களாகப் பயன்படுதல்போன்று பிற்கால வரலாற்றையறிய இது போன்ற ஆவணச்சுவடிகள் பெரிதும் துணை செய்கின்றன. காட்டாகச் செங்கற்பட்டு ஆவணங்களைக் குறிப்பிடலாம்.

## செங்கற்பட்டு ஆவணங்கள் (1760-1860)

18-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செங்கற்பட்டு ஆவணங்கள் ஆங்கிலேயர் ஆட்சிக்கு முற்பட்ட இந்திய சமூகப்பொருளியல் நிலையினைத் தெளிவாகப் புள்ளி விவரங்களுடன் படம் பிடித்துக் காட்டுவன. இவ் ஆவணங்களில் குறியீடுகளும், கூட்டெழுத்துக்களும் மிக அதிக அளவில் இடம் பெற்றுள்ளன. இதுவரை பார்த்த வகையில் சுமார் 100-க்கும் அதிகமான குறியீடுகள் இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. இவற்றை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. எண்குறியீடுகள்
2. அளவுக்குறியீடுகள்
3. சொற்சுருக்கங்கள் அல்லது சொற்குறியீடுகள்
4. கூட்டெழுத்துக்கள்

இதுபோன்ற ஆவணங்களை ஆய்வாளர்கள் முறையாகப் பயன்படுத்தவும், ஆய்வாளர்க்கு பயன்படும் விதமாகப் பதிப்பித்தற்கும் குறியீடுகள் பற்றிய தெளிந்த அறிவு மிகவும் இன்றியமையாததாகும்.

## குறியீடுகள் பற்றிய நூல்கள்

குறியீடுகள் பற்றிய தனிநூல்கள் எதுவும் இல்லை எனினும் பின்வரும் நூல்கள் குறியீடுகளைப் பயிலத் துணை செய்கின்றன.

கணித நூல்களான கணக்கதிகாரம், ஆஸ்தானகோலாஹலம் மற்றும் எண்சுவடி ஆகியவற்றின் வாயிலாக எண்கள், அளவை பற்றிய குறியீடுகளை அறிந்துக் கொள்ளலாம்.

கல்வெட்டு, செப்பேட்டு நூல்கள், எழுத்து வளர்ச்சி பற்றிக் கூறும் நூல்கள், கட்டுரைகள் போன்றவற்றில் எண்கள், அளவை தவிர வேறு பல குறியீடுகளையும் காணலாம்.

அறுவகை இலக்கணத்தில், எழுத்திலக்கணத்தில் எழுத்துக் களின் வரிவடிவம் பற்றிக் கூறும்பொழுது அலகெழுத்துக்கள் எனும் தலைப்பில் எண்கள், அளவை பற்றியும், அக்காலத்தே வழக்கிலிருந்த கூட்டெழுத்துக்கள் மற்றும் குறிப்பெழுத்துக்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளது.

முன்னால் கூறப்பட்ட இருவகை நூல்களும் குறியீடுகளைப் பயில்வோருக்கு ஓரளவு அறிமுகமானவையே. ஆனால் அறுவகை இலக்கணம் போன்ற ஒரு இலக்கண நூலில் குறியீடுகளின் வரிவடிவம் பற்றி கூறியிருத்தல் மிகவும் புதுமையானதாகவும், சிந்தனைக்குரியதாகவும், பதிப்பு நோக்கில் பயன்தரத் தக்கதாயும் உள்ளது.

சுவடிகளில் காணப்படும் குறியீடுகளைப் பயில்வதிலும் பதிப்பித்தலிலும் ஏற்படக்கூடிய நடைமுறை சிக்கல்கள் பலப்பல. எனினும் கையெழுத்து வேறுபாடு ஒப்புமை வடிவுடைமை போன்ற சில அடிப்படைக் காரணங்களால் பாடவேறுபாடுகள் பெரிதும் தோன்றக் கூடும். பொதுவாக ஆவணங்கள் பலராலும் எழுதப்படுவதால் எழுதுவோர், எழுதுபொருள் ஆகியவற்றின் தன்மைக்கேற்ப ஒரே விதமான எழுத்துக்களும், குறியீடுகளும் பலவிதமாகத் தோற்றமளிக்கக்கூடும். காட்டாக 2, 3, 5, 1/8, 3/16 போன்றவற்றின் குறியீடுகளைக் குறிப்பிடலாம் (காண்க- பின்னிணைப்பு.

இவை அனைத்தும் அவ்வவ் வடிவங்களின் வெவ்வேறு தோற்றங்களேயன்றி தனித்தனி வடிவங்கள் ஆகா.

இவை தவிர சுவடிகளில் காணப்படும் மூலவடிவமாயினும் சரி அல்லது பதிப்புகளில் இடம்பெறும் நிலை வடிவமாயினும் சரி சில குறியீடுகள் குறித்து சந்தேகங்கள் எழவே செய்கின்றன. காட்டாக அரைவீசம், அரைமா, நான்குமா ஆகியவற்றின் குறியீடுகளைக் குறிப்பிடலாம். ஒரு நூலில் காட்டப்பட்டுள்ள அரைவீசம் என்பதன் குறியீடு வெவ்வேறு நூல்களில் நாலுமா, அரைமா ஆகியவற்றைக் குறிப்பதாக உள்ளது. இவற்றின் விரிவை பின்னிணைப்பில் காணலாம்.

இது குறித்து சிந்திக்கும்பொழுது நான்கு, அரை ஆகியவற்றின் வடிவங்கள் ஒப்புமை வடிவுடையதாய் விளங்குவது

தெளிவாகும். இதுபோன்ற குறியீடுகளை பதிப்பில் வெளிப் படுத்தும் பொழுது அவற்றின் நுட்பமான வேற்றுமைகளைக்கூட மிகத்துல்லியமாக எடுத்துக்காட்டுவது இன்றியமையாததாகும்.

அந்த வகையில் அறுவகை இலக்கணம் குறியீடுகளின் வரிவடிவ இலக்கணத்தை ஐயமறத் தெளிவாக எடுத்துரைப்பது மிகவும் பாராட்டிற்குரியதாகும். சான்றாக கலம் என்பதன் குறியீடு பற்றி இங்கே குறிப்பிடலாம். 'ள', 'களா' இவை முறையே 'கலம்', 'ஒருகலம்' என்பனவற்றைக் குறிப்பவை. இவற்றுள் 'ள' என்பதே முதன்மைக் குறியீடு ஆகும். இவை 'ஒருகலம்' என வருமிடங்களில் 'க' உடன் இணைந்து 'களா' என்றவாறு இடம் பெறுவதை செங்கற்பட்டு ஆவணங்கள் மிகத் துல்லியமாக எடுத்துக்காட்டுகின்றன. இதை அரண் செய்வது போல கெட்டி எண்சுவடி, வின்சுலோ அகராதி ஆகியவற்றிலும் சான்றுகள் கிடைக்கின்றன. இது இவ்வாறிருக்க எழுத்துவளர்ச்சி பற்றிக் கூறும் 'கல்லெழுத்துக் கலை' எனும் நூலில் முகத்தலளவை வாய்பாட்டில் 1 கலம், 3 கலம் இவை முறையே 1 களா, 2 களா என இடம் பெற்றுள்ளன. இது 'ஒரு ஒருகலம்' 'மூன்று ஒருகலம்' என்று கூறுவதற்கொப்பாகும். இது பொருத்தமற்றது என்பதை மேற்கூறிய சான்றுகளின் வாயிலாக நிறுவப் பெறுகிறது.

இதை மேலும் உறுதிப்படுத்தும் விதமாக அறுவகை இலக்கணமும், 'எகரமே கலம்' (நூற்பா--40) என்று கூறுவது இங்கு சிறப்பாகக் கருதத் தக்கது.

### அறுவகை இலக்கணத்தின் சிறப்பு

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இவ் அறுவகை இலக்கணத்திற்கே உரிய சிறப்புகளாக பின்வரும் சிலவற்றைச் சுட்டலாம்.

மற்ற இலக்கண நூல்களில் காணப்படும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி இவற்றோடு புலமை இலக்கணம் என்னும் புதுமை இலக்கணத்தையும் புகுத்தி அறுவகை இலக்கணமாக இந்நூலை அளித்திருப்பது இந்நூலின் தனிச் சிறப்பாம்.

தொல்காப்பியர் காலந்தொட்டு பல இலக்கண நூல்கள் இயற்றப் பெற்றிருப்பினும் அறுவகை இலக்கணமே முதன்

முதலாக எழுத்துக்களின் வரிவடிவம் பற்றி சிறப்பாக எடுத்துரைக்கிறது எனலாம். இம்முயற்சியைப் பற்றி புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் தம் இலக்கண வரலாற்றில், ''உரு ஓசை இயல்பில் அகரம் முதல் னகரம் ஈறாம் எழுத்துக் களின் உருவத்தையும் ஒலியையும் இவர் கூறுதல் புதுமையாகத் திகழ்வதுடன், எழுத்து வடிவக் காப்பாக என்றும் போற்றிக் கொள்ள வாய்ப்பதுமாம்'' என்கிறார்.

மேலும் அவர் ''இம் முயற்சியில் தொல்காப்பியர் ஊன்றி யிருப்பின் வடிவம், அதன் மாற்றம் பற்றிப் பலரும் பலப்பல பேசும் ஒரு நிலை தோன்றியிருக்கவே முடியாது போயிருக்கும் என்பது தெளிவாம்'' என்கிறார்.

உயிர், ஆயுதம், மெய், உயிர்மெய் ஆகிய நால்வகை எழுத்துக்களுக்கேயன்றி கணிதத்தில் பயன்படும் அலகெழுத் துக்கள், எழுத்துச் சருக்கத்தின் பொருட்டு ஆளப்படும் கூட்டு எழுத்துக்கள், குறிப்பெழுத்துக்கள் ஆகியவற்றின் வரிவடிவையும் இந்நூலின் எழுத்திலக்கணம் காட்டுகிறது. இதுவும் இந்நூலுக்கே உரிய தனிச் சிறப்பாகும்.

'காரணமின்றிக் காரியமில்லை' என்பது போல எந்த ஒரு செயலும் ஏதாவது ஒரு தேவையை ஒட்டியே உருப்பெறும். இதையே ஆங்கிலத்தில் 'Necessity makes Invention' என்பர். இவ் அடிப்படையில் நோக்கினால் இந்நூலாசிரியர் இந்நூலில் புலமையிலக்கணம் என்னும் புதிய இலக்கணத்தைப் புகுத்தி யிருப்பதும், குறிப்பாக எழுத்துக்களின் வரிவடிவம் (நால்வகை எழுத்துக்களுக்கேயன்றி எழுவகை எழுத்துக்களுக்கும்) பற்றி சிந்தித்திருப்பதும் காலத்தின் கட்டாயத்தால் விளைந்ததாகக் கருதலாம்.

''அச்சு நூல்கள் பெருகப் பெருகப் படிப்பவர்களின் எண்ணிக்கை தமிழகத்தில் அதிகமான காரணத்தினால் எழுத்துக் களின் வரிவடிவம் பற்றி சிந்தனை அவசியமாயிற்று'' எனும் அறிஞர் திரு. அ. சண்முகதாஸ் அவர்களின் கூற்று இங்கு கருதத் தக்கது இக்கருத்தினை அரண் செய்யும் விதமாக கணக்கதிகாரம் (கழகப்பதிப்பு) பதிப்புரையின் சில வரிகளைக் காண்போம் ''இந்நூல் எட்டுப்படியிலிருந்து அச்சுப்படியேறி ஆண்டுகள் பல

ஆயினவேனும், வெளியீடுகள் பல ஆயினவேனும் இதன் உண்மை வடிவம் ஒருவர்க்கும் புலப்பட இயலாத நிலையில் நின்றது. ......மா முதல் முக்கால் வரையுள்ள சின்னங்களும் வடிவங்களும் ஒன்று முதலாகிய எண் வடிவங்களும் தெற்றென விளங்காமல் வேறுபாடாகவும் தோன்றின''.

மேலும் அறுவகை இலக்கண ஆசிரியர் காலத்திலேயே தோன்றிய வின்சுலோ அகராதி (1862)யிலும் 'Indian Abbraviations' எனும் தலைப்பின் கீழ் சுமார் 40-க்கும் மேற்பட்ட குறியீடுகள் இடம் பெற்றுள்ளமை மேற்கூறப்பட்ட கருத்தினை அரண் செய்தல் காணலாம்.

### அறுவகை இலக்கணமும் குறியீடுகளும்

எழுத்திலக்கணத்தில் குறியீடுகள் பற்றி அலகெழுத்துக்கள், குறிப்பெழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள் ஆகிய தலைப்புகளில் 23 நூற்பாக்கள் இடம் பெறுகின்றன. எண்கள், அளவை இவற்றைப் பொதுவாக அலகெழுத்துக்கள் என்றும், ஒரு சொல்லாகப் படிக்கப்படும் குறியீடுகளை கூட்டெழுத்துக்கள் என்றும், வெறும் குறியீடுகளைக் குறிப்பெழுத்துக்கள் என்றும் இந்நூலாசிரியர் வகைப்படுத்தியுள்ளார்.

### அலகெழுத்துக்கள்

தமிழகத்தில் தொன்றுதொட்டு வழங்கிவரும் கீழ்வாய், மேல்வாய் இலக்கங்கள் மற்றும் நெல்லிலக்கம் ஆகியவற்றின் வரிவடிவ இலக்கணம் இங்கு தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. இவற்றுள் கீழ் முந்திரி (1/102400) முதலாக முந்திரி (1/320) வரையுள்ள பின்ன இலக்கங்கள் 'கீழ் அலகு' எனவும், முந்திரி முதல் ஒன்று வரையுள்ள பின்ன இலக்கங்கள் 'நடு அலகு' எனவும், ஒன்றுக்கு மேற்பட்ட முழுஎண்கள் 'மேல் அலகு' எனவும் வகைப்படுத்தப்பட்டு அவற்றின் வரிடிலவங்கள் முறையே நூற்பா 37, 38, 39 ஆகியவற்றின் வாயிலாகவிளக்கப்பட்டுள்ளது. (இவற்றின் வரிவடிவை பின்னிணைப்பில் காணலாம்.

இவற்றின் வரிவடிவைக் கூறும்பொழுது கணித நூல்கள், எண்சுவடி போன்றவற்றில் கீழ்வாயிலக்கம் என்றே அழைக்கப் பெறுகின்றன. மேலும் அவற்றில் கீழலகு பின்னங்களுக்கென தனிவடிவங்கள் காட்டப்படவில்லை. பொதுவாக முந்திரி

யிலக்கக் (நடு அலகு) குறியீடுகளின் முன்பாக 'ஃ' என்பதை சேர்த்து 'ஃ ஹ' என்பது போலவே எழுதப்பட்டு வந்துள்ளது. ஆனால் கீழலகிற்கெனத் தனிக்குறியீடு இருந்தமை இந்நூலின் வாயிலாகவே அறியப்படுகிறது. இது ஒரு சிறப்புச் செய்தி யாகும். குறியீடுகள் பற்றிய ஆய்வை மேற்கொள்வோர்க்கு இது மிகுந்த அளவில் துணைசெய்து புதிய செய்திகளைத் தரக்கூடும்.

இவ் அடிப்படையில் கீழலகுக் குறியீடுகள் பற்றி ஆராயும் பொழுது திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டுத்தொகுதி-6 கல்லெழுத்துக் கலை ஆகியவற்றின் வாயிலாக முந்திரிகை என்பதற்கு 'ள' என்றொரு வடிவம் இருந்திருப்பது தெரிய வருகிறது. இக்குறியீட்டின் வளர்ச்சியடைந்த வடிவமாக அறுவகை இலக்கணத்தில் காட்டப்பட்டுள்ள கீழ் முந்திரியின் 'ண' என்ற வடிவைக் கொள்ளவியலும்.

நெல்லிலக்கத்தில் இடம்பெறும் ஆழாக்கு, உழக்கு, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் ஆகியவற்றை அளவலகு எனும் பெயரில் நூற்பா-40 வாயிலாக விளக்கியுள்ளார். இவற்றின் வரிவடிவையும் பின்னிணைப்பில் காணலாம்.

**கூட்டெழுத்துக்கள்**

இரண்டு எழுத்துக்களின் கூட்டையே கூட்டெழுத்து என்று கொள்ளாமல் சொற்சுருக்கங்கள் அல்லது சொற்குறியீடுகளையும் அலகெழுத்தில் இடம்பெறும் குறியீடுகளின் கூட்டையும் இவர் கூட்டெழுத்துக்கள் என வகைப்படுத்தியிருப்பதை நூற்பாக்கள் 42, 43, 44 ஆகியன தெளிவாக உணர்த்துகின்றன. (காண்க. பின்னிணைப்பு)

கூட்டெழுத்துக்கள் பற்றிக் கூறும்பொழுது அக்காலத்தே வழக்கிலிருந்த சில பொருந்தாக் கூட்டுகளையும் ஆசிரியர் சுட்டிக் காட்டியிருப்பது (நூற்பா-43) குறிப்பிடத்தக்கது. மேலும் காலத்திற்கேற்ப சில குறியீடுகள் புதிதாகத் தோன்றுவதைச் சுட்டிக்காட்டும் விதமாகவும் (நூற்பா-44) நூற்பாக்களை அமைத்திருப்பதிலிருந்து குறியீடுகள் பற்றி சுவாமிகள் மேலோட்டமாக அன்றி நுட்பமாக தம் கருத்தை வெளிப்படுத்துவது உணரப்படுகிறது.

**குறிப்பெழுத்துக்கள்**

பிள்ளையார் சுழி, கூட்டல் குறி போன்று வெறும் குறியீடு களாகப் பயன்படும் எழுத்துக்களை இவர் குறிப்பெழுத்துக்கள் என்கிறார். (காண்க நூற்பா-46) இது போன்ற பல குறிப்பெழுத்துக்கள் இருப்பதால் காட்டாக சிலவற்றை மட்டும் குறிப்பிட்டுள்ளார். மேலும் ஓர் ஒலிவடிவிற்கு வரி வடிவம் கொடுக்கும் பொழுது ஒவ்வொரு மொழியில் ஒவ்வொரு விதமாகக் கொடுக்கப்படுவதால் எழுத்து வடிவங்கள் அனைத்துமே ஒன்றை உணர்த்துவதற்காக ஏற்பட்ட குறியீடுகளே என்று கூறி முடிக்கிறார்.

**அறுவகை இலக்கணக் குறியீடுகளின் சிறப்பியல்புகள்**

பொதுவாக அறுவகை இலக்கணத்தில் கூறப்பட்டுள்ள குறியீடுகளின் வரிவடிவங்களும், சுவடிகளிலும், பதிப்பு நூல் களிலும் காணப்படும் வரி வடிவங்களும் பெரும்பான்மையும் ஒரே மாதிரியாகவே உள்ளன. எனினும் இந்நூலுக்கே உரிய சிறப்பாக மற்ற நூல்களில் காணப்படாத சில அரிய வடிவங் களையும் இதில் காணமுடிகிறது.

1. குறிப்பாகக் கீழலகிற்கெனத் தனிக்குறியீடுகள் இருந்திருப்பதை இந்நூல் வாயிலாகவே அறிய முடிகிறது.

2. அளவலகில் குறுணி என்பதைக் குறிக்க ‘ப’ என்ற வடிவம் காட்டப் பட்டுள்ளது. பொதுவாக மற்ற நூல்களில் குறுணி ‘ங’ என்ற வடிவையே பெற்றுள்ளது. (காண்க பின்னிணைப்பு) இது நம் சிந்தனையைத் தூண்டி ஒரு புதிய கருதுகோளை முன் வைக்கத் தூண்டுகிறது.

கலம் என்பதன் குறியீட்டைப் போலவே குறுணி என்பதும் ‘ஒரு குறுணி’ என்று குறிப்பிடப்படுமிடத்து க (ஒன்று) ப (குறுணி) ஆகியவற்றின் கூட்டாக ங (1 குறுணி) என்று எழுதப்பட்டு இவ்வடிவைப் பெற்றிருத்தல் கூடும் என்று எண்ணத் தோன்று கிறது. கெட்டி எண்சுவடியில் இது இடம்பெற்றுள்ள விதம் இக்கருதுகோளை அரண் செய்கிறது.

மேலும் கல்லெழுத்துக் கலை, திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டு ஆகிய நூல்களிலும் மரக்காலை குறிக்க ‘ட’ என்ற வடிவமே காட்டப்பட்டுள்ளது. இதுகுறித்து சிந்திக்கும் பொழுது ‘ட’ என்பதன் வளர்ச்சியடைந்த அல்லது திருந்தி வடிவமாகவே ‘ப’ என்பதைக் கொள்ளத் தோன்றுகிறது.

இதுபோன்று குறியீடுகள் பற்றி ஆய்வோர்க்கு தோன்றக் கூடிய பல சந்தேகங்களைத் தெளிவாக்கும் விதமாகவும் புதிய சிந்தனைகளைத் தூண்டும் விதமாகவும் இந்நூல் அமைந்துள்ளது.

**பதிப்பு நோக்கில் அறுவகை இலக்கணம்**

குறியீடுகளை அலகெழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள், குறிப்பெழுத்துக்கள் என்று இந்நூலாசிரியர் வகைப்படுத்தி யிருக்கும் விதம் அவற்றில் முக்கியமானவற்றைப் பற்றியே கூறியுள்ள விதம், பொருந்தாக் குறியீடுகளைச் சுட்டிக்காட்டி யிருக்கும் விதம் போன்றவற்றைக் கூர்ந்து நோக்கும்பொழுது இவை குறித்து ஆசிரியர் கொண்டிருந்த தெளிவு நன்கு புலப்படு கிறது.

குறியீடுகளின் வடிவம் பற்றிக் கூறுவதில இவரது தெளி வான அணுகுமுறை பதிப்பு நோக்கில் மிகவும் பயனுடையது. ஒவ்வொரு அலகிற்கும் ஒரு வடிவத்தையே காட்டியுள்ளார். பொதுவாக பதிப்பு நூல்களில்கூட ஒரு சில குறியீடுகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட வடிவங்கள் காட்டப்பட்டிருப்பதைக் காண முடிகிறது. காட்டாக அரைக்கால், வீசம் ஆகியவற்றின் வடிவங்களை எடுத்துக் கொள்வோம் (காண்க. பின்னிணைப்பு) இவற்றைக் கூர்ந்து நோக்கும் பொழுது இவற்றில் அடிப்படை வேறுபாடுகள் இல்லை என்பது புலப்படும். இவை அவ்வக் குறியீடுகளின் வெவ்வேறு தோற்றமேயன்றி தனித்தனி வடிவம் ஆகா.

இது போலன்றி அறுவகை இலக்கண ஆசிரியர் குறியீடுகள் அனைத்தையும் கூர்ந்து நோக்கி, அவற்றை நிலைப்படுத்தி சிறப்பாகவும், தெளிவாகவும், பொருத்தமானதாகவும் தோன்றும் வடிவங்களையே கொடுத்திருக்கிறார் என்பது தெளிவாகிறது.

**முடிவுரை**

அறிவியல் நோக்கோடு (Scientific approach) அணுகப்படும் ஆய்வுகளுக்குத் துணைசெய்யும் வகையில் சிறந்த எழுத்து வடிவக் காப்பாகத் திகழும் அறுவகை இலக்கணம் குறியீடுகள் பற்றிய ஆய்வை மேற்கொள்வோர்க்கும், முதன்மைச் சான்று களான கல்வெட்டு, செப்பேடு, ஆவணச்சுவடிகள் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு ஆய்வை மேற்கொள்ளும் வரலாற்றாய் வாளர்க்கும், குறியீடுகள் அதிகம் இடம் பெறும் நூல்களைப் பதிப்பிப்போர்க்கும் சிறந்த வழிகாட்டியாகத் திகழும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

10

## மேல் அலகு

| | | |
|---|---|---|
| ௧ | ஒன்று | 1 |
| ௨ | இரண்டு | 2 |
| ௩ | மூன்று | 3 |
| ௪ | நான்கு | 4 |
| ௫ | ஐந்து | 5 |
| ௬ | ஆறு | 6 |
| ௭ | ஏழு | 7 |
| ௮ | எட்டு | 8 |
| ௯ | ஒன்பது | 9 |
| ௰ | பத்து | 10 |
| ௱ | நூறு | 100 |
| ௲ | ஆயிரம் | 1000 |

## கூட்டெழுத்துக்கள்

ஆ - ஆக
௮ - க்கு
௬ - க்க
௩ - ந்த
௬ - நெல்
௬ - சங்கிலி
ம - மாகாணி
௨ - இருமா
௩ - மும்மா
௪ - நாலுமா
௩ - மூன்றுமாகாணி
௬ - கோடி
௯ - கீழ்
௬ - சோறு
௬ - வரி
௳ - மாக்கால்
௩ - முக்குறுணி
௯ - கோட்டை
௮ - இலட்சம்

## 6. அளவலகு

ஞு - ஆழாக்கு
ஜு - உழக்கு
௨ - நாழி
ப - குறுணி
௩ - பதக்கு
௩ - தூணி
௭ - கலம்

## 8 குறிப்பெழுத்துக்கள்

௨ - பிள்ளையார்சுழி
+ - கூட்டல்
௳ - க்கு
௵ - கிழவும்

9

| நூல் | குறுணி - இடம்பெற்றுள்ளதரம் |
|---|---|
| செங்கற்பட்டு ஆவணங்கள் | ௩ |
| கணக்கதிகாரம் | ௩ |
| பெரியசெட்டி எண்சுவடி | அ நாழி - ௧ குறுணி - ௩ |
| வின்சுலோ அகராதி | ௩ |
| திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டு | ௳ |
| கல்லெழுத்துக்களை | ௳ |

10. ௩, ௩, ௩ - 1/8
ம, ம, மம - 1/16

# கணபதி ஆயிரம் — கவிதையும் கவிஞரும்

பா. புவனேசுவரி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நெல்லை தந்த பெருங்கவிஞர். நெல்லை சிவகுருதாசர், முருகதாசர், திருப்புகழ் சுவாமிகள் என்ற பெயர்களைப் பெற்றவர். இராமலிங்க அடிகளாரிடம் நட்புறவு பூண்டவர். அவருடன் சமநோக்கு கொண்டவர். சங்கரதாஸ் சுவாமிகளின் குருவாகத் திகழ்ந்தவர். சந்தக்கவிதை இலக்கணமும் ஐந்திலக்கணமும் தந்தவர். சௌரம், சைவம், சாக்தேயம், வைணவம், காணாபத்யம், கௌமாரம் ஆகிய அறுசமயக் கடவுளர்க்கும் பாடல் இயற்றியவர். இச்சமயங்களூடு திகழ் ஒருமை இறைமையை உணர்ந்தவர். கணபதி ஆயிரம் என்னும் இந்நூல் காணாபத்யம் என்ற சமயம் சார்ந்தது.

**கவிதை நூலமைப்பு**

கணபதி ஆயிரம் நூலின் பாடல்கள் ஒரு தொடராக யாக்கப் பட்டதல்ல. கிழமைதொறும் முறையே ஞாயிறு சூரியனுக்கும், திங்கள் சிவபெருமானுக்கும், செவ்வாய் சக்திக்கும், புதன் திருமாலுக்கும், வியாழன் கணபதிக்கும், வெள்ளி முருகனுக்கும், சனி பொதுக்கடவுளர்க்கும், ஒவ்வொரு நாளும் பத்துப்பாடல்கள் கொண்ட பதிகம் வீதம் மொத்தம் பாடப்பட்ட ஏழாயிரம் பாடல்களில் கணபதிக்குரியனவற்றைத் தொகுத்து வெளியிட்ட நூலே கணபதி ஆயிரம். சுவாமிகள் ஒவ்வொரு பதிகத்திலும் சமயத்திற்கேற்ற வகையில் எட்டு, ஒன்பது, பத்து பாடல்களை அமைத்துப் பாடுகின்றார். எட்டாம் பாட்டில் காவிரி, பொருநையாறுகளை இந்திரனும் அகத்தியரும் பெற்ற வரலாறும், ஒன்பதாம் பாட்டில் முருகன் வள்ளி திருமணமும், பத்தாம் பாட்டில் ஔவையைக் கயிலாயத்தில் விட்ட வரலாறும் சுட்டப் பெறுகின்றன. 'இந்திரன் குறுமுனியெனுமவர் நயப்பக் கவின் கொள் பொன்னியும் பொருநையும் உதவிய களிறே' (க.ஆ–338);

'கந்தன் உய்வுறக் குறமகட் புணர்த்தருட்களிறே'

(க.ஆ-339)

'கவிசொல் பாட்டியைக் கயிலைவெற்பினில் விடுகளிறே'

(க.ஆ.-340)

கணபதியின் பாடல்கள் வியாழன்தோறும் பாடப்பட்டவை. ஒவ்வொரு பதிகத்திற்கும் இடையே ஆறுநாட்கள் இடைவெளி இருந்துள்ளது. எனவே இப்பாக்கள் குறிப்பிட்ட பா அமைப்புடன் பாடப் பெறவில்லை. 'எது மனத்தெழுமோ அதனை ஒரு பதிகத்தமைப்ப தென்றுணர்ந்து கொள்வீரே' என்றும் 'கவிதை வந்தபின் பார்த்துவப்பதென் வழக்கம் உலகீரே' என்றும் இவர் குறித்துள்ளமையை நோக்கும்போது பா, பாவிலக்கணக் கட்டுப்பாடின்றி உணர்வுகளின் வெளிப்பாடாக இவர் பாடல்கள் அமைந்தமையும், அவ்வாறு அமைந்தபோதிலும் இயல்பான பா அமைதியினைப் பெற்றுள்ளமையும் தெளிவாகின்றது. என்னை யாண்டருள எண்ணிடே;' 'விக்கினம் தீர்த்தருள் விரைந்தே'; 'ஞாயமென்னோ சாற்றுவாயே! என்பன போன்ற அடிகளையும், 'செய்யாதிருக்கை விகிதமன்றே'; 'கணபதிக் கடவுளானே'; 'ஐந்துகரக் களிறே' என்பன போன்ற தொடர்களையும் ஒரு பதிகத்தின் பத்துப் பாடல்களின் ஈற்றடியிலும் அமைத்துப் பாடுவது இவர் வழக்கம். சந்த நயமிக்கப் பாடல்களும் இந்நூலில் உள.

**கவிதை நயம்**

இவர் கவிதைத் தொடர்கள் நுணுகி ஆய்ந்து பொருட்கண்டு இன்புற்றகுரியன. சுக்கிரன் சொல் குறியாது பொன்னன் சொற் கொள்வார் விக்கினம் தீர்ப்பவன் (க.ஆ-309) என்ற பாடல் அடியில் சுக்கிரன் என்ற சொல் வெள்ளி, அசுரகுரு, காதலுக்குரிய கோள் என்று பொருள்பட, பொன்னன் என்ற சொல் வெள்ளியின் மேலான பொன், தேவகுரு, ஞானகுரு என்று பொருள்பட நின்று இத்தொடர் ஆசையில் ஆழாமல் குருவழி சென்றவர் உயர்வெய்துவர் என்ற ஆழமான பொருளைத் தருகிறது.

'அரும்பார் நகைப் பைங்கிளியனையாள் அம்பித்தலை அன்றருள் மகன்' (க.ஆ-695) என்பது பரிமளகந்தை ஓடத்தினிடம்

பெற்ற மகன் வியாசன் என்று பொருள் தருகிறது. இத்தகைய அடிகள் பல இவர் நூலில் இருந்தாலும் எளிய நடையில் அரிய தத்துவக் கருத்துகளைக் கூறும் போக்கே மிக்குளது.

'மக்களினம் போல் விருகர்' (க.ஆ. 325); 'பூனை போல் பதுங்கி' (க.ஆ. 701); வெயிலிடை மென் புழுப்போல்' (க.ஆ. 447); 'இளங்கன்றைப் பசு நாடலிற்' (க.ஆ 447); புட்சிறதற்று உழல்கின்றது போல்' (க.ஆ. 582); 'தின்று கக்கும் ஊனருந்தும் நாய்போல் (க.ஆ. 630) 'கோடையில் கார்காலம் குலாவியவாறு' (க ஆ. 809) என்பன போன்ற உவமைகளும், 'வெறு வாயினை மென்றிடல்' (க.ஆ. 366) போன்ற பழந்தொடர்களும், 'பாவ வினைக்கடல்' (க.ஆ. 349) போன்ற உருவகங்களும் விரவியுள்ளன.

**சமயக் கருத்துகள்**

மாவுறுப்பும் தேவுறுப்பும் வன்பூதத்துறுப்பும் மூவுருவு முடைத்தாகும் முதற்பூசைத் தெய்வம் கணபதி (க. ஆ. 111); வல்லவை சித்தி புத்தியெனப் பகரொரு மூவரானவன் கணபதி (க. ஆ-124); அவரே அஞ்சை யடக்கும் அருந்தவரே அறிந்தறைவ தாம் விஞ்சை முதற்பொருள் (க. ஆ-305); அவன் அவள் அது எனும் மூன்றும் அவன் ஆட்டமே (க. ஆ-805); பதித்துவத்தில் பசுத்துவம் போய்ப் பாசமறக் கலந்திருக்கும் கதிக்கொரு விதை யாகிக் கவின்றவன் கணபதி (க. ஆ-6); சமரச மெய்ஞான வடிவம் அவனே (க. ஆ-11);

ஆறுசமயங்களும் அவர் பிரணவத்தில் அடங்கும் (க, ஆ-84); மதவாதர் எண்ணிலார்க்கும் பொதுவானது அது (க. ஆ-754); கன்மம், உபாசனை ஞானம் எனும் தொகை வகையே கழறா நிற்கும் பன்மறைக்கும் முதலானது பிரணவம் (க. ஆ-384); சத்தகோடி மறை மந்திரங்கள் தருதாரகத்தினிடை யாடுபவன் கணபதி (க. ஆ-357).

ஆழுணர்ச்சிப் பெரியோர்க்கும் அது புணராச் சிறியோர்க்கும் தடையறுப்பவன் அவன் (க. ஆ-467) அவன் ஆசைகளைக் கொடுத்து, துன்பம் ஏற்படுத்திப் புடமிடுகிறான் (க. ஆ-323).

சாதிச்சளமும் சமயத் தொடர்பும் தவச் சாதனர் தம் உறவால் ஒழியும் (க. ஆ-364); எனவே நல்லோர் இணக்கம்

தேவை. அங்கத்தை (உடலை) நாமெனக் கருதாது ஆன்ம உணர்வு பெறல் வேண்டும் (க'ஆ-731) போன்ற சமயக் கருத்துகள் இந்நூலில் உள.

### இறைவன் திருவிளையாடல்கள்

வெங்கயன், கமலன், அனலன் ஆகிய அசுரரைக் கொன்று விண்ணோர் துயர்தீர்த்தமை (க. ஆ-17); கச்சியில் திருமாலுக்குச் சக்கரமீந்தமை (க. ஆ-122); மேருவின் மீது பாரதக்கதையை எழுதியமை (க. ஆ-252) இந்திரனுக்கு அருள் புரிந்தமை (க. ஆ-253); சிவன் தேரை முறித்தமை (க. ஆ-311); முருகன் வள்ளி இருவரையும் இணைத்தமை; ஔவையைக் கயிலையி லிட்டமை; கச்சிநகர் சிறுவனுக்கு மெய்ஞ்ஞானப் பொருள் சொன்னது (க ஆ-528); பனகர் தலைவனுக்கு அருள்புரிந்தமை (க. ஆ-697); ஆகிய இறைவன் திருவிளையாடல்கள் நூலெங் கணும் விரவியுள்ளன.

### புராண வரலாற்றுச் செய்திகள்

திருமால் மருத மரத்தைச் சாய்த்தமை (க. ஆ-431); சிவன், பிரமன் தலையைக் கொய்தமை (க. ஆ-445); வியாசர் பிறந்த கதை (க. ஆ-695); திருமுறைகளைச் சோழன் வெளிக் கொணர்ந்தமை (க. ஆ-554) போன்ற புராண வரலாற்றுச் செய்திகளும் இந்நூற்கண் உள.

### பிற இலக்கியக் கருத்துகள்

தவத்திரு தண்டபாணி சுவாமிகள் தம் நூலின்கண் மணிவாசகர், இராமலிங்கர், வள்ளுவர் கருத்துகளையும் அடிகளையும் எடுத்தாண்டுள்ளார். 'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நானடுவே வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்' என்ற (திருச்சதகம்-11) திருவாசகப் பாடல் பொருள் ஒத்த பொருள் தரும் பாடல்கள் இந்நூலெங் கணும் உள்ளன. (எ.டு) உன்னடியார் பெருங்கூட்டத் தூடுற வைத்தாண்டு கொள்வாய் (க ஆ-4) எளிய தம்மை இறைவன் திருப்பெருந்துறையில் ஆண்டு கொண்ட திறம் வியந்து பலகாலும் மணிவாசகர் பாடியுள்ளது போலவே இவரும் 'புண்ணிய மெள்ளளவேனுமிலா எவனைப் புகுந்தாண்டதோர் புதுமை (க. ஆ-644)' என்று குறித்துள்ளார். 'பொய்ம்மையே பெருக்கிப்

பொழுதினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன்' (பிடித்த பத்து-திருவாசகம்) என்ற அடியும் பொருளும் இவருடைய பாடலில் எடுத்தாளப் பெற்றுள்ளது (க. ஆ-447). உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்தம் உறவு கலவாமை வேண்டு மென இராமலிங்கர் முறையிட்டது போன்றே 'சத்தியப் பண்பறியாதார் தம் இனத்தாற்றயங்கிப் பக்தி நலமிலார் போற் பரிசழியச் செயவேனோ' (க. ஆ-3) என்று இறைவனை இறைஞ்சுகிறார்.

திருக்குறளில் ஆழ்ந்த பற்று கொண்ட இவர் குறட்பாக் களின் பொருளைப் பல இடங்களில் அமைத்துப் பாடியுள்ளார். 'என்பிலதனை வெயில் போல் காயுமே' என்ற குறளடி 'வெய்யி லிடை மென்புழுப் போற்றுடித்து' (க. ஆ-447) என்று எடுத் தாளப் பெற்றுள்ளது. பிறவிப் பெருங்கடல் என்று வள்ளுவர் கூறுவதை இவர் பந்தவேதனைக் கடல் என்கிறார் (க. ஆ-2).

**உலகியல்**

உலகோர் இறை சிந்தனையற்று, பொன்னாசை, மண்ணாசை மிக்கவராய் உள்ளனர். அவர்களே பொதுவில் மதிக்கவும் பெறு கின்றனர். முகத்தே புகழ்ந்து புறத்தே தூற்றும் மக்கள் புவியில் அதிகம். உயிர்க்கொலை புரிவோர் மிக்குளர். இறையருள் பெற்றவரை நம்பாது அனைவரும் எள்ளி நகையாடுகின்றனர். பொன்னதைப் பரம் என்று துணிந்த புல்லர் வாழும் பூமி இது. இங்கு பொன்திரள் பெற்றவரே உயர்வெய்துவர். தமிழ்க் கவியைப் பலர் விரும்புவதும் இல்லை. அவற்றின் பொருளை உணர்வதும் இல்லை. அவர்கள்பால் சென்று பொருள் பெறு வதும் தீது (க. ஆ – 625) என்று உலகியலை வெறுத்துக் கூறுகிறார் கவிஞர்.

**கவிஞர்**

புலவரியல்புகள்: தவத்திரு தண்டபாணி சுவாமிகள் தேவர் வாழ்வை வெறுத்தவர். அடியார் தோழமை விழைந்தவர் (க. ஆ. 355); நாத்திகர்க்கு நடுங்குபவர் (க. ஆ. 632); ஆனினம் இன்புறச் செயல்படுபவர் (க. ஆ. 372); உலகுய்ய உதவி செய்ய விழைபவர் (க. ஆ. 323); கூறும் தமிழ்த்துதியன்றி பிற தொழில் செய்யாதவர் (க. ஆ. 306); மாதவர் தங்க மடம் கட்டியவர்

(க. ஆ - 293); மண்ணகத்து உயிர்கள் வாழ்வது குறித்து நோற்பவர் (க. ஆ - 166): தன் தவறுகளுக்காக வருந்துபவர் (க. ஆ - 351); எத்தேயத்து எச்சமயத்து யாவரருள் பெற்றாலும் மெய்த்தேவு அருட்செயலில் வேறல்ல (அருளாட்சி - 125) என்ற கருத்துடையவர், சீவகருணையை மக்கள் மேற்கொள்ள வேண்டிய அருள்நெறியாக அறிவித்தவர், சமயமும் சமுதாயமும் நன்னிலை பெற்றிடல் இவருடைய நாட்டமாக இருந்தது. அறுசமயக் கடவுளரையும் சமயங்கடந்த பொதுக் கடவுளாகப் போற்றும் பண்பினர்.

**கணபதி பக்தி**

தவத்திரு தண்டபாணி சுவாமிகளின் தந்தை செந்தில் நாயகத்தின் நண்பர் சீதாராம நாயக்கர், இவரது இளமைப் பருவத்திலேயே கணபதி இலக்குமி மந்திரங்களை இவர்க்கு உபதேசித்தருள இரண்டும் உச்சரித்து இவர் கணபதியின் காட்சியருளப் பெற்றார். இதனை 'பற்சில விழுந்து முளைத்துறும் இளமைப் பருவ நாளையில் எனைப் பற்றியே உபாசனை புகன்றான்' என்று தம் குருபர தத்துவ நூலிற் கூறியுள்ளார் (க. ஆ. முன்னுரை ப. V) 'செவ்வேற்கை தந்தையின் முன்னுதித்த பெரியப்பா' என்று முருகனைத் தந்தையாகவும், கணபதியைப் பெரியப்பாவாகவும் உறவு கொண்டாடுகிறார் (க. ஆ. 13); கணபதி ஆயிரம் ஐம்பத்தொன்பதாம் பத்தில் அப்பா என்றே கணபதியை அழைப்பதும் உண்டு. திருவருள் நாட்டம் என்ற நூலில் பெரியப்பாப்பத்து என்ற பதிகம் உள்ளது. திருவாமாத்தூரில் இவர் வழிபட்ட கெம்பீர விநாயகர் மேல், கெம்பீர விநாயகரே! என் சொல்கேளும் கேளும் ஐயா என்று ஒரு கீர்த்தனையைப் பாடியுள்ளார்.

கணபதி இவருக்குக் காட்சியருளி துதிக்கையால் நீராட்டி (க. ஆ. 567) நீறும் அணிவித்துள்ளார்.

'துதிக்கை நறும் புனலாட்டி தூநீறும் சாத்திய நீ' (க. ஆ-6) என்று இந்நிகழ்ச்சியை அவர் சுட்டியுள்ளார். 'திருநீறென்னு தற்கணிந்த செயல் விளக்கியருளே' என்று இரண்டாம் பதிகம் முழுவதும் ஈற்றடியில் இச்செய்தியை அமைத்துள்ளார். இறைவன் கனவில் வெண்ணீறு அணிவித்து, 'நீ என் மகவு;

உனக்கு அருள் சித்திக்கும்' என்று கூறியதாகத் தம் பாடல்களில் குறிக்கிறார்.

'வெண்ணீறணிந்த மகவாம் எனக்கொள் பெரியப்பனே'
(க. ஆ – 354)

'எளியேனுள் சித்தி நவம் எய்துமெனத் தோற்றியதேன்
மறந்தாய்' (க. ஆ – 791)

இந்நிகழ்ச்சி அருணையில் நிகழ்ந்தாகவும் (க. ஆ – 293), விளாம்பட்டூரில் நிகழ்ந்ததாகவும் (க. ஆ – 442) கனவில் நிகழ்ந்த தாகவும் (க. ஆ – 354) செய்திகள் உள.

**இறைவனிடம் வேண்டியவை**

கணபதியின் காட்சியும், திருவருளும் பெற்ற இவர் உரிமை யுடன் அவர்பால் இரக்கின்றவை பற்பல. அவ்வந்நோ உள்ள உணர்வுகளைப் பாவடிவில் யாத்து இறைவனை வேண்டும் இவர் தம் வாழ்க்கையின் அன்றாடச் சிக்கல்களையும் அவர்முன் வைத்துள்ளார்.

தேங்காய் உடைப்பவர்க்கும் (க. ஆ–36), செக்கடாயில் பூசிப் பவர்க்கும் (க ஆ–26), குட்டிக் கொள்பவர்க்கும் (க. ஆ–327), பச்சிலையிட்டவர்க்கும் (க ஆ–122) அருள் புரிபவர் கணபதி. வாழகத்திடத்தும் சாமனைக் கண்ணும் மகிழ்ந்து பூசனை கொள்ளும் (க. ஆ–171) அவர் அருந்தமிழால் துதிக்கும் தமக்கு அருள் செய்யாதது ஏன் என்று இவர் இறைவனை வினவுகிறார்.

**புலவர் கேட்கும் வரங்கள்**

1. இப்பூதலத்தில் திருமால் போல் புகழ் பெறவேண்டும் (க. ஆ–37). 2. மன்மதனை வெல்ல வேண்டும் (க. ஆ–435). 3. வன்கணர்பால் சென்று வாழ்த்துரை கூறி மாழ்கும் நிலை மாற வேண்டும் (க. ஆ–342). 4. வறுமை நீங்க வேண்டும் (க. ஆ–282). 5. சித்துகள் செய்ய வேண்டும் (க ஆ–261). 6 இதயம் குறித்துள பல போகமும் வேண்டும் (க. ஆ–405). 7. தவம் தடையின்றி நிறைவேற வேண்டும் (க. ஆ–333) 8. தமக்கு இறைவன் அளித்த வரம் பற்றிய செய்திகளை உலகம் அறிய வேண்டும் (க. ஆ–348). 9. கருங்கல் கிணற்றில் நீர் வர வேண்டும் (க. ஆ–58). 10. மேருவில் பேர்த்து ஒரு துண்டு (பொன்) வேண்டும் (க. ஆ–341) 11. தாம் கட்ட ஆரம்பித்த

மடத்தை முடித்துத் தருதல் வேண்டும் (க. ஆ-293); 12. யாவரும் கொன்றருந்தாமை நிறுவ வேண்டும் (க. ஆ-102). 13. மேடம் முதலிய பலி செய்வார்க்குத் தண்டனை யளித்தல் வேண்டும் (க. ஆ-441). 14. உலகோர் புகழ வேண்டும் (க. ஆ-167). 15. ஏறணி கொன்றுணும் ஈனர் ஆட்சியில் நீறணிவார் துயர் நீங்க வேண்டும் (க. ஆ-272). 16. அருச்சுனனும் கண்ணனும் மீண்டும் தோன்றி பாவம் அகற்றல் வேண்டும் (க. ஆ-560). 17. சம்பந்தர் போன்ற கவித்திறம் வேண்டும் (க. ஆ-707). 18. பல்கலைச் சிரியர்களும் புகழ வேண்டும் (க. ஆ-661). 19. ஏனைய நூல்களிலும் சிவாகம நூல்கள் உயர்வெய்த வேண்டும் (க. ஆ-446) 20. அன்பர் இனத்தில் சேர வேண்டும் (க. ஆ-454). 21. தொண்டருடன் கூடி தலம் தொறும் சென்று நால்வரைப் போல் வழிபாடியற்ற வேண்டும் (க. ஆ-474). 22. நானிகல் நடுவிருத்தல் வேண்டும் (க. ஆ-505). 23. பொய்ய னென்னும் ஊர் மெய்யனெனல் வேண்டும் (க. ஆ-616). 24. காலமொடு கன்ம மறுக்கும் கல்வி வேண்டும் (க. ஆ-618). 25. சனி, வறுமை, ஊழ்வினை விளைக்கும் தடைகள் நீங்க வேண்டும் (க. ஆ-821-830). 26. கண்ணோய் தீர வேண்டும் (க. ஆ-831-840). 27. பாமரச் சனங்கள் நிந்தையறல் வேண்டும் (க. ஆ-913). 28. ஏமவாதனைத் தொடர் அறல் வேண்டும் (க. ஆ-913), என்ற இன்னபிற வரங்களை சுவாமிகள் கணபதிபால் கேட்கிறார்.

### தமிழ்ப்பற்று

சுவாமிகள் தமிழ்ப்பற்று மிக்கவர். இளமை முதலே இலக்கிய இலக்கணப் பயிற்சி பெற்றமையால் ஓர் இலட்சத்திற்கும் மேற் பட்ட பாடல்களைத் தமிழில் இயற்றியுள்ளார். எனினும் இறைவனிடம் ஊடல் கொண்டு அவற்றில் பாதியைத் தாமே கிழித்தெறிந்துள்ளார். இன்று ஏறத்தாழ ஐம்பத்து நான்காயிரம் கவிதைகள் கிடைத்துள்ளன.

இவர் தமிழ்க் கவிஞரிடம் மாறிலா பக்தி கொண்டவர். வழுவிலாத் தமிழால் இறை திருப்பதத்தை வாழ்த்துவோர் குழுவினை வணங்கி வாழும் விருப்பு இவருக்கிருந்தது (திருமலை முருகன் பதிகம் 2). 'பண்கசிந் தொழுகும் தமிழ்க்கவி பாடும் தமியேனை' (திருப்பூர் சிவன் பதிகம்-2) என்பன போன்ற அடிகள் தம் கவிதைகளைப் பற்றிய பெருமிதம் இவருக்கு

இருந்ததைச் சுட்டுகின்றன. இறைவனுக்கு உகப்பாம் தமிழ்ப் பாடலியற்றுவதில் இவர் இன்பம் கண்டார். 'பாவியேன் தமிழ்ப் பாடற் கதியாசை வைத்த நீர்' (திருப்பூர் சிவன் பதிகம்-3) என்று இறைவன் தம் பாடலை விரும்பியதையும் இவர் குறிக்கிறார். பாடலுக்கேற்ற பயனை இறைவன் நல்காத குறை இவருக்கிருந்தது. (எ-டு) செந்தமிழ்ப் பாடல் நான் நவின்றிடில் கொள்கிலிர்' (தி. சி. ப-4).

தமிழின் சிறப்பை உணராரிடத்தில் சென்று தமிழ்ப் பாடல் களைப் பாடி பரிசில் பெறுவதை இவர் விரும்பவில்லை. 'முத்தமிழைக் கைத்தேசும் முழுமூடர்களை மதித்துப் பித்த னென்று திரிவேற்கு' (தி. முருகன், ப-2) என்பது போன்ற தன்னிரக்கம் தொனிக்கும் வரிகள் இவர் பாடல்களில் மிக்குள.

நால்வருக்கும் சமமாகத் தம் பாடலும் ஏற்றம் பெற வேண்டும் என்ற ஆசை இவருக்கு இருந்தது (க. ஆ-474). ஆட்சியில் உள்ளோர் தமிழார்வம் காட்டவில்லை என்பதை இவர் பல இடங்களில் சுட்டுகிறார். 'வண்ணநறுந் தமிழ் வாஞ்சையிலா மன்னருரம் புண்ணடைய வேலால் பொரும் நாள் வரும் நாளே (இராமேசுரம் பதிகம்-7) என்று தம் எதிர்பார்ப்புகள் எதிர்காலத்தில் ஈடேறும் என்று ஆறுதல் கொள்கிறார்.

எதுகை மோனை அறியாது (க. ஆ-211), கற்பனை சொற்கே உழைத்துக் கவிதொடுக்கும் புலவர் நடுவில் சிற்பமென நூலியற்றும் தன் திறமையை இவர் உணர்ந்துள்ளார் (க. ஆ-386) தமிழாற் செய்யும் பூசனைக்கு உரிய பயனை இறைவன் நல்குவார் என்ற நம்பிக்கை இவருக்கு இருந்தது (க. ஆ-26). இறையொடு ஒடுங்கும் உயர்நிலை தமிழால் எய்தும் என்று இவர் உறுதியுடன் இருந்தார் (க. ஆ-524).

**நாட்டுப்பற்று**

இவர் ஆங்கிலேயரின் அடாத ஆட்சி கண்டு மனம் கொதித்துள்ளார். கடல் சூழும் பார்மகள் பாவம் பொறாது கதறிடச் செய்து அடல் வேழ்க கூட்டங்கள் என்ன உலாவிடும் ஆங்கிலியர் (ஆங்கிலியர் அந்தாதி - 4), தம் கரிய குடைக்கு அழிவிலை என்று களி கூர்பவர் (ஆ. அ - 6); திருட்டுத்தன்மை கைவந்தவர் (ஆ. அ - 7); பொருளாண்மை தன்னைச் சில

யாறறிந்து அருளாண்மை சற்றும் அறியாதவர் (ஆ. அ-9), கேட்டுக்குக் கொள்கலம் (ஆ.அ - 14), என்று ஆங்கிலியரைச் சாடும் இவர் அவர்கள் ஆட்சிக்காலத்தில் பிறந்தமைக்கு வருந்துகிறார். (ஆ. அ. 7). அவர்களை அழிக்கத் தமிழ்ப் பாவிற்கு வண்மையில்லையே என்று ஏங்குகிறார். (ஆ. அ - 16) சண்டாளர் கருங்குடை நீழலின் வாய் தருமத்தொடு சத்தியமும் தளர்தல் கண்டு ஆவிதுடிக்கிறது (க. ஆ - 363) என்று இறைவனிடம் முறையிடுகிறார்.

**ஆன்கொலை தவிர்தலும் ஊன் உண்ணாமையும்**

கொலை தவிர்த்தலும் ஊன் உண்ணாமையும் புலவரின் முதற் கொள்கைகள். பசு வதையைத் தடுப்பதைத் தம் தலையாய நோக்கமாக இவர் கொண்டுள்ளார். 'கோகுலம் கதறக் கொல்லும் கொள்கையோர்' (க. ஆ - 637) என்று இவர் காலத்து ஆட்சிப் பொறுப்பிலிருந்த ஆங்கிலேயரைக் குறிக்கிறார். பசுக்கொலையைத் தவிர்க்க இவர் ஆங்கிலியர் அந்தாதி என்ற நூலை இயற்றியுள்ளார். இத்தகு பசுக்கொலை புரியும் 'புல்லறி வாண்மை பொலி ஆங்கிலேயருக்கு' இறைவனும் செல்வத்தை அளித்து மற்ற நல்லவர்களை வறியவர்களாக்கி வருத்து கிறானே என்று கலங்குகிறார் (ஆ அ. – 10). எம்மதமேனும் கொன்றுண்ணாததாகில் எனக்கினிதே (ஆ. அ. 50) என்ற சமயப் பொறை உடையவர் இவர். உயிர்ப்பலியிடும் வேள்விகளும் தீயன என்பதை 'ஆருயிர் கொன்றாகும் ஆக்கம் கடை' (அருளாட்சி - 4) என்பதால் தெளிவாக்குகிறார்.

கணபதி ஆயிரம் என்ற நூலின்வழி வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய சிரிய தமிழ்ப்பாக்களின் அழகிய அமைப்பும் இனிய பொருளும், அவருடைய மனித நேய மனப்பாங்கும், அக்கால மக்கள் நிலையும், ஆட்சியாளர் போக்கும், புலவரின் உலகுய்யப் பாடுபாடும் இயல்பும் கணபதி பக்தியும் தெளிவாகின்றன.

# சுவாமிகளின் கௌமார முறைமை

## த. பூமிநாகநாதன்

மன்னுபுகழ் தமிழகத்தின் தலையாய கடவுளர்களில் முருகன் தன்னேரில்லா இறைவனாகப் போற்றப்படுகிறான். 'முருகன்' என்ற சொல்லை ஆய்வு செய்யப் புகுந்த திரு. வி. க. அவர்கள் கூறும்போது, பண்டை நாளில் தமிழ்ச் சொற்கள் பல முதல் நிலையளவாக நின்று ஆட்சி பெற்று வந்தன. பின்னே, நாளடைவில் அவைகளுள் பல இடைநிலை இறுதி நிலைகள் பெறலாயின. அச் சொற்களுள், 'முருகு' என்பதும் ஒன்று. முருகு என்னும் முதல்நிலை 'அன்' என்னும் ஆண்பால் இறுதி நிலை ஏற்று முருகன் ஆயிற்று என்பார்.

முருகு அல்லது முருகன் என்னுஞ் சொல்வழக்கு மிகமிகத் தொன்மையானது. இரண்டு சிறப்பான இரண்டு குறிப்புக் களைக் கொண்டு இச்சொல்லின் தொன்மையை உணரலாம். ஒன்று முருகன் தமிழ்க் கடவுள் என்பது, மற்றொன்று முருகன் மலைநிலக் கடவுள் என்பது. தமிழன், தமிழ்ப் பெருமான், தமிழ் இறை, முத்தமிழோன் எனவும் குறிஞ்சிக் கிழவோன், மலைக் கிழவோன் எனவுந் தமிழ்ப் பெரியோர் முருகனை அழைத்திருத்தலைக் காணலாம் எனத் திரு. வி. க. அவர்கள் கூறுவது ஈண்டு எண்ணத்தக்கது.

தொல்காப்பியம் முருகனைப் பற்றிக் குறிக்கும் போது, 'சேயோன் மேய மைவரை உலகம்' எனக் குறிப்பதிலிருந்தும் முருகாற்றுப்படை என்ற நூலின் வாயிலாக சங்க இலக்கியம் முருகனைப் போற்றுவதிலிருந்தும் பரிபாடல் முருக வழிபாட்டினிற் தனியிடம் வகுத்தமையிலிருந்தும் முருகன் மற்றும் முருக வழிபாடு தமிழகத்தில் பெற்றுள்ள தொன்மையை உணரலாம்.

பக்தி இலக்கிய காலகட்டத்தில் தான் சமயங்களை அறு வகையாகத் தொகுத்துக் கூறும் போக்கு ஏற்பட்டது. முருகனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட நெறி கௌமார நெறி எனச்

சுட்டியுள்ளதைக் காணலாம். தமிழக அரசியல் வரலாற்றை உற்று நோக்கினால், பொதுவாகப் பக்தி இலக்கிய கால கட்டத்தில், சமயப் பூசல்கள் காரணமாக தமிழகத்தில் எந்நேரமும் கலகங்களும் ஒருவருக்கு ஒருவர் தாக்கிக் கொள்ளும் படியான இழிநிலைகளுமே பெரிதும் நிகழ்ந்துள்ளன.

சைவ, வைணவ சமயங்கள் சமணத்தை வன்மையாகக் கண்டித்தன; பௌத்தம் சைவர்களுடன் மதப்போர் செய்வதிலேயே பெரிதும் அக்கறை செலுத்தியது. சமணம் பௌத்தத்துடன் முரண்பட்டு நின்றது.

இப்படிச் சமுதாயத்தில் மதங்களின் ஆக்கிரமிப்பு முயற்சிகள் எந்த அளவு சீரழிவுகளை ஏற்படுத்தின என்பதற்கு மேலும் அகச் சான்றுகளாகப் பக்தி இலக்கியங்களான தேவாரம், திவ்வியப் பிரபந்தம் மட்டும் அல்லாது மகேந்திர பல்லவனின் மத்த விலாசப் பிரகரணம் போன்ற நூல்களின் துணைக் கொண்டும் நாம் அறிந்து கொள்ளமுடிகிறது.

இப்படிச் சமயக்குரவர்கள், பன்னிரு ஆழ்வார்கள் கால கட்டங்களில் சமயச் சழுக்குகள் காணப்பட்டாலும் ஆதி சங்கரர் காலகட்டத்தில் சமயக் காழ்ப்புணர்ச்சிகள் குறைவதற்கான வழிவகைகள் ஏற்பட்டன.

சமயங்கள் என்ற பெயரில் பல்வேறு கடவுளர்களாகவும் அக்கடவுளர்க்குரிய பல்வேறு கோட்பாடுகளாகவும் சிதறிக் கிடந்த தமிழகத்தில் உயர் கடவுளர்களின் தத்துவங்களை ஒருங்கிணைக்கும் வகையில், ‘அனைத்தும் பிரமம்; ஒவ்வொரு உயிரும் கடவுளே’ என்ற கோட்பாட்டினைக் கொண்ட அத்வைதம் என்ற தத்துவத்தின் வாயிலாக மத நல்லிணக்க முயற்சிக்கு ஆதி சங்கரர் வித்திட்டார்.

சங்கரரின் புதிய கொள்கை தமிழகத்தில் ஒரு புத்தொளியை ஏற்படுத்தியது. உணர்வுகளையும் உள்ளங்களையும் இணைக்கும் ஊடகமாக மட்டும் அல்லாது உறவுமுறைக்கு நிலைக்களனாக விளங்கும் அன்பையே மூலமந்திரமாக ஏற்று அன்பே சிவம் அன்பே கடவுள் என்ற புதிய கோட்பாட்டினை ஏற்படுத்திக் கடவுளர்களை ஒன்றுபடுத்த அன்றைய சமயவாதிகள் முயன்றனர். இதன் காரணமாக ஒரு கடவுள் மற்றொரு

கடவுளுக்கு உறவாவதால் பல கடவுளரையும் வணங்கும் முறைமை தமிழகத்தில் தோன்றியது.

அத்வைத கோட்பாட்டை ஒட்டித் தமிழகத்தில் தத்துவ ராயர், கண்ணுடைய வள்ளல், சிற்றம்பல நாடிகள், தாயு மானவர், குமரகுருபரர், அருணகிரிநாதர் போன்றோர் அன்பை யும் இறைவனையும் இணைத்துப் பல புதிய பாடல்களைப் பாடி அருளினர். வள்ளல் இராமலிங்க அடிகள் தம் கவிதைத் திறத்தால் சமரச சன்மார்க்கம் என்ற அமைப்பையே ஏற்படுத்தினார்.

இவர்களைப் போன்றே வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அறுவகைச் சமயக் கடவுளர்களையும் பாராட்டிப் போற்றிப் பல நூல்கள் செய்துள்ளார். தான் மேற்கொண்ட கௌமார நெறியைப் பற்றிக் குறிப்பிடும்போது கௌமாரக் கடவுளின் சிறப்புகள், இச்சமயத்தின் கோட்பாடு, மதச் சடங்கு கள், பூசை விதிமுறைகள் மேற்கொள்ள வேண்டிய விழாக்கள், முருகனின் அருட்திறம், தமிழ் கடவுளின் துயர் நீக்கும் பாங்கு போன்ற பல்வேறு செய்திகள் குறித்துப் பல நூல்கள் யாத்துள்ளார்.

தியானாநுபூதி, கௌமார விநோதம், கௌமாரலகரி, கௌமார தீபம், சமயசூத்திரம், திருப்பொதுச் சூத்திரம், ஞான வந்தாதி, பிராணாநுபூதி, சதகவுந்தி – பதிகவுந்தி போன்ற கௌமாரத்தின் பெருமைகளை விளக்கும்படியான எண்ணற்ற நூல்களை யாத்த பெருமை சுவாமிகளுக்கு உண்டு.

இவற்றிற்கெல்லாம் சிறப்புடைத்தாக, சிகரம் போல் விளங்கு வது சுவாமிகள் அருளிச் செய்த கௌமார முறைமை என்ற நூலாகும்.

கௌமாரத்தின் கோட்பாடுகளை இதற்கு முன்னே சுவாமி கள் முப்பத்து மூன்று பாடல்களில் தியானாநுபூதி என்ற நூலிலும் நூறு பாடல்கள் வாயிலாக நானிலைச் சதகம் என்ற நூலிலும் தொகை வகையாகக் கூறியுள்ளார். ஆனால் இந்நூல் அவற்றிற்கு விரிவாக முன்னூறு பாடல்களில் அமைந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இம்முன்னூறு பாடல்களும் நூறு, நூறு பாடல்களாக மூன்று காண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளன. அக் காண்டங்கள் முறையை கரும காண்டம், பக்தி காண்டம், ஞான காண்டம் என்ற பெயர்களைக் கொண்டு விளங்குகின்றன.

**கரும காண்டம்**

கருமம் என்ற சொல்லிற்குத் திவாகர நிகண்டு செயல் என்ற விளக்கத்தைத் தருகின்றது. சென்னைப் பல்கலைக்கழக வெளியீடான பேரகராதி தொழில், கடமை என்ற பொருட்களைப் பகர்கின்றது. தத்துவார்த்த முறையில் இதற்கு விளக்கம் இவ்வாறு கூறலாம். உயிருக்கு உறுதி தருவதான வீடுபேற்று இன்பம் என்று சொல்லப்படும் பேரின்பத்தை (Bliss) அடைவதற்கு மேற்கொள்ளப்படும் செயற்பாடே கருமம் ஆகும்.

இதுபற்றிக் கூறும்போது சுவாமிகள் உபாசகன் அல்லது இறைநேயர் முருகன் பாற் கொள்ளும் வழிபாட்டு செயல் முறையே கருமம் எனப் பொருள்படும் என்பர்.

கரும காண்டம் என்ற இப்பகுதியில் சமயப்பற்றாளன் அறிந்து கொள்ள வேண்டிய தத்துவார்த்த விளக்கங்கள், பூசை முறைகள், சடங்கு நெறிகள், நோன்பு நாட்கள், முருகன் பற்றிய விசேடச் செய்திகள் போன்ற பல அரிய கருத்துக்களைத் திரட்டித் தந்துள்ளார். அவை பின் வருமாறு:

கௌமார சமயத்திற்கும் சூரியனைத் தலைமைத் தெய்வமாகக் கொண்ட சௌரத்திற்கும் உள்ள தொடர்பு (24) பாடலிலும் சௌர முறைக்கான வழிபாட்டு முறை (26) பாடலிலும், சாக்தம் பற்றியும் அது கௌமாரத்துடன் எவ்வாறு தொடர்புடையது என்பது பற்றியும் சாக்த சமயத்திற்குரிய நோன்பு நாட்கள் பற்றியும் முறையே (29, 30, 31, 32) ஆகிய பாடல்களில் எடுத்துரைக்கிறார். இதே போன்று வைணவம், சைவம், காணாபத்தியம் போன்ற சமயங்களுக்கும் கௌமாரத்திற்கும் உள்ள தொடர்பினையும், அவ்வச்சமயங்களுக்குரிய நோன்பு நாட்களையும் வகை தொகை செய்து காட்டியுள்ளார். சுவாமிகள் இக் கரும காண்ட பகுதியில் சிறப்பாகக் கூறுவது விக்கிரக ஆராதனை பற்றியே. உருவ வழிபாடே இறைவனை உணர்த்துவதற்கும் உணர்வதற்கும் ஊடகமாகும். இதனை,

... ஆதலினால் விக்கிரக பூசை மார்க்க
அரன் விதித்த ஆகமங்கள் அறையுமேனும்
வேத விதிபோல் அவையும் மறைவேயாமால்
வேண்டிய மட்டொரு வாறு விளம்புகின்றேன்

என்ற கௌமார முறைமை கரும காண்டம் 56 ஆம் பாடல் மூலம் கூறுவது எண்ணத்தக்கது.

கொலை மறுத்தல் என்பது பூசை நெறியில் மேற்கொள்ள வேண்டிய கருமங்களில் ஒன்றாகவே சுவாமிகள் கூறுகின்றார்.

உயிர் வருந்தப் படுத்தாடை கொலை செய் யாமை
ஊன் உண்டு களியாமை உடையோ ரெல்லாம்
பயிரனையார் எனவாகும் மற்றை யோரைப்
பாவமிகும் களையெனவே பகரலாகும். (1)

எனக் கூறுவது ஈண்டு எண்ணத்தக்கது.

மேலும் அந்தணர் செய்ய வேண்டியது (82), செங்கோல் மன்னன் கீர்த்தி (83), வணிகர் மேற்கொள்ள வேண்டிய மாண்பும் மறக்க வேண்டிய மறத்தின் தாழ்வும் (85), மாதர்கள் வண்மை பற்றியும் (87), (88) முன்னை வினையின் பயனின் தன்மை பற்றியும் விளக்குகிறார். நான்கு வகை மரபினர் மேற்கொள்ள வேண்டிய கடமை பற்றிக் கூறும்போது,

கற்றறிந்து மற்றவருக்(கு) உரைத்தல் ஆதிக்
காரியங்கள் வேதியர்தங் கடமை யாகும்
கொற்றநெடு வாளேந்திப் பகைவென் றிந்தக்
குவலயமுற் றாள் கை மன்னர் கொள்கை யாகும்
விற்றல் கொள்ளல் ஆதியவை வணிகர்க் காகும்
வேளாண்மை அமைச்சுரிமை வினையம் ஆதி
நற்றகைச் சூத்திரர்க் காகும்; என்ன நாளும்
நான் மறை ஆதிய நூல்கள் நவிலு மன்றே (7)

மூர்த்தி வணக்கத்துடன் குருவணக்கமும் தேவை என்றும் அதுவே பக்தியில் பண்பினை வளர்க்க வல்லது என்பதனை;

குருவடிவ மாகவரும் மேன்மை தோய்ந்து
கொல்லாத பூசை கொள்ளும் கொள்கைத் தாகும்
பெரு மகிமைத் தெய்வ முற்றும் நலமாம் என்னம்
பேணலாம் மற்ற வற்றாற் பிழையுண்டாமே. (89)

மேற்கண்ட வரிகள் வழியாகத் தெளிவு செய்கிறார். இனிப் பக்தி காண்டம் பற்றிக் காண்போம்.

இப்பகுதியில் இறைநேயனுக்கும் (உபாசனுக்கு) பயன்படும் படியான நற் கருத்துக்களைத் தொகுத்துக் கூறுகிறார். அவை முறையே;

உபாசனுக்கு உருவ நாட்டம் உயர் வெனல் சூரிய மூர்த்தி பற்றிய விளக்கம் (28) பாடலிலும், பன்னிரு சூரியர் பற்றிய குறிப்புகளைத் தந்து சூரியர் பன்னிருவர் எனினும் அவர்களில் வேறுபாடு இல்லை என்றும் பாடல் (29) மூலம் சுவாமிகள் விளக்குவர்.

சைவ சமயம் சார்ந்த சிவமூர்த்த விளக்கம் (57) சிவ வடிவகை தட்சிணாமூர்த்தி (குருவடிவம்) பற்றி (57) சிகண்ட பரமேசுவரர் உபாசனை (40) நடராச மூர்த்த உபாசனை (41) போன்ற இறை வடிவங்கள் பற்றிய தத்துவங்களை விளக்குகிறார். உருவ பாவனையை அன்றி அருவ நாட்டம் ஆகாது என்றும் அருவ நாட்டம் பயன் ஏதும் நல்காது என பாடல் (42) வாயிலாக சுவாமிகள் அறிவுறுத்துகிறார்.

வயிரவர் உபாசனை (43,44) வீரபத்திரர் உபாசனை என்பதும் வயிரவர் உபாசனையும் வேறு அன்று என (48, 46, 47) பாடல்களில் கூறுவது சிந்திக்கத்தக்கது. சக்தி வடிவம் (48) வாலை உபாசனை (49) புவனை உபாசனை (59) மூன்றும் வேறல்ல என நமக்கு சுவாமிகள் தெளிவுபடுத்துகிறார்.

துர்க்கை வடிவ பேதங்கள் (53) வீரமாகாளி உபாசனை (54) பாடலிலும் கலைமகள் (56) திருமகள் (57) பார்வதி (58) பிறசக்தி பேதங்கள் (59) வைணவ சமய தலைமைத் தெய்வமான திருமால் உபாசனை (60. 61) கண்ணபிரான் பற்றி (62, 63) நரசிம்ம அவதாரம் மற்றும் அவ்வடிவ நிலை குறித்து (64, 65, 66) ஆகிய பாடல்களிலும் வண்ணச்சரபத்தார் விளக்கியுள்ளார். காணாபத்தியம் பற்றி (67) வல்லபை கணேசன் தியானம் குறித்து (68) கௌமார முருக வழிபாடு குறித்து (70) வள்ளி தெய்வயானை உடனாய முருகன் வழிபாடு பற்றி (71) சண்முக மூர்த்தி உபாசனை குறித்து (72) தண்டபாணி மூர்த்தி தியானம் பற்றி பாடல் (73) மூலம் சுவாமிகள் விவரிக்கின்றார்.

முருகன் சிறப்பைப் பற்றிக் கூறும்போது உபதேச குருவே உண்மைப் பரம் எனல் (72) நல்ல பொருள் குருவெனவே நாடும் (77) ஆகிய பாடல்களின் மூலம் குருவின் திறம் பற்றி இயம்புகிறார்.

இப்படிப் பல்வேறு கடவுளர்களின் உருவ நிலை, உபாசனை முறை முதலியவற்றைத் தெளிவுபடுத்தும் சுவாமிகள் பக்தியைப் பற்றிக் கூறும்போது பக்தி என்பது தெளிந்த உபாசனையே என்பர்.

பக்தி யென்கை தெளிந்த உபாசனையே யாகும். மேலும் கூறும்போது,

ஆலயத்தால் எந்திரத்தால் கும்பந் தன்னால்
ஆராதிக் கின்றவரும் அகத்தினூடோர்
கோலமமைத் திருப்பாரே யாகில் அன்னோர்
குறித்த பயன் சீக்கிரம் கை கூடும். (3)

மந்திர எந்திர பூசை என்றாலும் இறை வடிவம் என்பது அவசிய மானது; உபாசனை இன்றி எதையும் அடைய முடியாது எனச் சுவாமிகள் கூறுவது எண்ணத் தக்கது.

ஆலயத்து விக்கிரகந் தன்னையே நாடி
அகங்களித்தல் இளம்பருவம் அறவோர் சொன்ன
நூலகத்தில் உள்ளபடி மனத்தாற் செய்து
நோக்குவது நடுப்பருவம் நுவன்ற ஆசான்
கோலமதே மூர்த்தியென நம்பி அன்பாற்
குறிப்ப அழுற்றிய பருவம் கூறும் மூன்றும்
சால நினைந் திடுவார்க்குச் சித்தி முத்தி
தருபவே யொன்றுணர்வார் தவம் உள்ளோரே (17)

போலி ஞானிகள் பற்றிப் பேசும்போது, சுவாமிகள் கடுமை யாகவே கூறுவதைக் காணமுடிகிறது.

ஞானமடைந் துள்ளேமென் றிறுமாப் பெய்தி
நரபதியா தியர்க்கருதி நடுங்கும் பெட்பும்
பானல் வழிச் சிறுமியர் பூண் முலை கண்டேங்கும்
பாசமுமற் றனையவும் பரிப்பார் பல்லோர்

வானவர்கோன் முதலோர்தம் வேடமிட்டு
வார்த்தைகளும் இசைந்தபடி வசனித்தபால்
போனகமுந் தூசும் இரந் தலைவார் தாமும்
புலவனெனுந் திருநாமம் புனைதல் நன்றே (5)

மேற்கண்ட பாடலில் எத்தனை வன்மையாகப் போலி ஞானி யரைக் கண்டிக்கிறார் சுவாமிகள் என்பது தெளிவுறும். ஞானம் எத்தனை வகையாக அமையலாம் என்ற ஓர் வினாவிற்கு சுவாமிகள் தரும் விடை வருமாறு:

கானமறைப் பொருளறிதல் கல்வி ஞானம்
காதி ஒன்றைப் புசியாமை கருணை ஞானம்
தேனவிழ்பன் மலர் சொரிதல் பத்தி ஞானம்
சிந்தித்த படியாடல் சித்தி ஞானம்
காளவரனன் னுரைக்கு மிகு பொருளுந் தோய்ந்து
நடுநிலையில் நிற்பது மெய்ஞ்ஞான மாமே (14)

எனத் தெளிவுறுத்துவது அவரது நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுவதாகும்.

பெரியோரைப் போற்றுதல் என்பது அறிவுடைய செயலாகும். அறிவுடைய செயல் என்பது ஞானத்திற்கு வழி வகுக்கும் என்ற தத்துவத்தை சுவாமிகள் அவருடைய நூல்களில் பல இடத்தில் கூறிச் செல்வதைக் காணலாம். இங்குக் கூட

தன்னறிவுத் தற்சிவ சாட்சி தானும்
சரிபாதி யென்றொரு காற்றாயுமானார்
சொன்னதுண்மையே........ (15)

தாயுமானவரை வண்ணச்சரபத்தார் நினைந்து நெகிழ்வது காணத்தக்கது.

இப்பாடலின் மூலம் சுவாமிகள் உபாசனையினால் ஏற்படும் புலன் ஒடுக்கம், அப்புலன் ஒடுக்கத்தின் காரணமாக நிகழும் ஒரு முகச் சிந்தனை, அவ்வொரு முகச் சிந்தனையால் புறத்தே இருக்கும் இறைவனை, உபாசகன் தனது உள்ளத்துக்குள்ளே வடிவித்துக் கொள்ளக்கூடிய பயன் கிட்டுவதைச் சுட்டிக் காட்டியதோடு சித்தி முத்தி பெறுவதற்கு அதுவே ஓர் ஊடகமாக அமையும் என உபாசனையின் சிறப்பை கூறியுள்ளார்.

அடுத்து, ஞான காண்டம் என்ற பகுதியில் சுவாமிகள் கூறினவற்றைத் தொகுத்துக் காணலாம். இப்பகுதியில் ஞானம் என்பது என்ன? போலி ஞானிகள், ஞானம் பெற முடியாதார், ஞானத்தில் உயர்ந்து நின்ற ஞானியரைப் பாராட்டுதல் போன்ற பல செய்திகளைக் கூறுகிறார். அவற்றை ஈண்டு விரிவாகக் காண்போம்.

ஞானம் பற்றிக் கூற வந்த சுவாமிகள்,

'ஞானமென்னும் மொழியனுக்குப் பொருளே தென்னில்
நல்லறிவே யெனப் பெரியோர் நண்ணிச் சொல்வார்.' (1)

எனப் பகர்கின்றார்.

சாத்திரங்கள் நாலின்நெறி நான்கும் சொன்ன
சாந்தலிங்க மூர்த்தி (12)

என சாந்தலிங்கத் தம்பிரானையும்

சிவமாக்கி எனை யாண்டான் அத்தன் எனத்
திருவாத வூர்முனிவன் செப்பக் கேட்டும் (10)

என மாணிக்கவாசகரையும்,

ஒழுவி லொடுக்கப் பெயர்நூற் காரன் சொன்ன
உண்மை அறி வறிந்தவர்க்காம் (23)

எனப் பெரியோர்களை சுவாமிகள் போற்றுவதோடு ஞான வழிக்கு அதுவே துணை நிற்கும் செயல் எனவுந் தெளிவுபடுத்து கிறார்.

இறுதியாக ஞானத்தின் தன்மையை எவராலும் விவரிக்க இயலாது. அதன் உண்மைச் சுகம் இத்தகையது என்பதை உணர முடியுமே அன்றி, அறுதியிட்டுக் கூற முடியாது என்ற கோட்பாடு உடையவர் சுவாமிகள். இதுபற்றி அவர் கூறும் போது,

காமநூல் சொல்கின்றோன் இருவர் கூடும்
கலவினோ தங்களெல்லாம் கழறினாலும்
ஆமவர்தம் மனமறிந்த சுகத்தைச் சொல்லான்
அதுபோல ஞானநூல் அறைநின் றோனும்
நேமவழி பாடுநிலை மட்டும் சொல்வான்
நிசமான பரத்தினிடை நெஞ்சம் மாய்ந்து
போமதனை எந்த விதம் புகல்வான்? அந்தோ
புகன்றிட்டான் அது விளைந்த பொய்யாம் அன்றே. (51)

இவ்வாறு பகர்கின்றார்.

முருகவழிபாடே முதன்மையானது; தொன்மையானது எனவும் கொலை மறுத்தலே முக்திக்கு ஏற்ற ஊடகம் என்றும் பெரியோரைப் போற்றுதல் உள்ளத்தில் தூய்மையையும், பண்பாட்டையும் வளர்க்கும் என்றும் 'சரவணபவ' என்ற மந்திரமே உயிர் இறைவனை இடையூறு இன்றிச் சேர்வதற்கு ஏற்ற தந்திரம் என்றும் இந்நூலில் கூறியுள்ளார்.

மத நல்லிணக்கத்தைத் தனது உயிர் மூச்சாகக் கருதினார் சுவாமிகள். இதுபற்றி ஞானக் கோவை என்ற நூலில் த இராமச்சந்திரன் அவர்கள் சுவாமிகள் கூறியதாகக் கூறிய சொற்கள் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது: சமயத்தை வாதப் பொருள் ஆக்குவதால் வேறுபாடும், பிரிவு மனப்பான்மையும், விருப்பு வெறுப்பும் அகந்தையையுமே உண்டாகும். அதை வாழ்வதற்குரிய வழியாக்கிக் கொண்டால் அறிவிலே தெளிவுண்டாகும்; உணர்விலே உணர்ச்சி உண்டாகும் உயிரிலே அருட்பதிவு ஏற்படும். மன்பதையின் உயர்வும், முருக நெறியுமே தன் உயிர் மூச்சாகக் கொண்ட சுவாமிகள் அருளிச் செய்தவைகளும் சொல்லிச் சென்றவைகளும் என்றும் நமக்கு வழிகாட்டியாக விளங்குவன. தன்னடக்கம் என்பது ஞானியர்க்கே உரியது. அது நமது சுவாமிகளுக்கும் பொருந்தும்.

பண்பின் சிகரமாகத் திகழும் சுவாமிகள் எத்தனை எளியவர் என்பதற்கு அவர் வரிகளே சான்று. கற்றுத் துறை போகிய நம் அடிகள் அடக்க மிகுதியால் அன்று தன்னைப் பற்றிக் கூறும்போது,

> 'என்னையுமோர் பொருளாக மதிக்கின்றோரும்
> இருப்பார் என்றே துணிவுற் றியம்பினேனே' (100)

என்ற வரிகள் நூற்றாண்டு விழாக் காணும் நாம் இத்தருணத்தில் அவர் கூறிய கௌமார முறைமையைச் சிந்திக்கும்போது நம் உள்ளம் எல்லாம் அவர் நிறைந்திருக்கிறார் அன்றோ!

# பேரொலியலந்தாதியில் சூரிய வழிபாடு

தி. பெரியசாமி

பேரொலியல் என்பதற்குச் சந்த ஒலி பல இணைந்து பெருகிய ஒலியினது ஆனாலும், சூரியன், சிவன், அம்பிக்கை, திருமால், கணபதி, முருகன் என்ற ஆறு சமயக் கடவுளின் பெயருடன் அதீதமான பரம்பொருளையும் பெயர் குறித்துப் பாடப் பெற்றிருப்பதாலும் ஏற்பட்ட காரணப் பெயராகும்.

பேரொலியல் அந்தாதியில் முதன்முதலில் சூரியனைப் பாடியுள்ளார். ஆறு சமயக் கடவுள்களுள் சூரியனுக்கு முதலிடம் கொடுத்துள்ளார். இவர் சமய சார்பற்றவர். அனைத்துக் கடவுளையும் பாடியுள்ளார். அனைத்து மதங்களையும் சமமாக நினைத்து பாடல்கள் பாடியுள்ளார் இவர் பாடிய பாடல்கள் ஒரு லட்சத்திற்கு மேற்பட்டது. கிடைத்துள்ள 50,000 பாடல்கள் மட்டுமே.

## இயற்கை வழிபாடு

நமது ஆராய்ச்சியாளர்கள் வழிபாட்டு முறை பற்றிக் கூறும்போது பல கருத்துக்களை எழுப்புகின்றனர். இந்தப் பேரொலியல் அந்தாதியை கொண்டு பார்க்கும் போது மனிதன் முதன் முதலில் பல சீற்றத்தின் காரணமாக இயற்கையை வழி பட்டான் என்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது. பழங் காலத்தில் இயற்கையைக் கண்டு மனிதன் அச்சம் கொண்டான். அதன் காரணமாக இயற்கையை வழிபட்டான். அடுத்து நடுகல் வழிபாடு வந்தது. அதனை அடுத்து உருவ வழிபாடு வந்தது. இவ்வாறாக வழிபாட்டு முறைகள் தோற்றம் பெற்றன. இத்தகைய வழிபாட்டு முறைகளில் முதன்மையான இயற்கை வழிபாட்டு முறையைச் சார்ந்தது சூரிய வழிபாட்டு முறை. வண்ணச்சரபன் சூரிய வழிபாட்டு முறையில் நான்கு வகையான இசை அமைப்புகளைக் கொண்டு பாடல்கள் இயற்றியுள்ளார்.

1. தனை தனை தனை தனை தனை தனை-தனதனா
2. தான தந்ததன- தானன தனனா
3. தனதனத் தனனதன-தனதனா தனனா
4. தனன தந்தன தனதனா

இக்கட்டுரை மூன்று இயல்களாகப் பிரித்து விளக்கப்படுகிறது.

1. இயற்கையாகிய சூரியனைப் பேச வைத்தல்
2. வண்ணச்சரபன் தன் கருத்துக்களை வெளிவிடுதல்
3. கடவுள் தன்மை (தெய்வங்களின் சிறப்பு)

**1. இயற்கையாகிய சூரியனைப் பேச வைத்தல்**

**சூரியனின் பண்புகள்**

இந்த காலக்கட்டத்தில் சூரியனின் பண்புகளும் பயன் பாடுகளும் எண்ணில் அடங்காதவை. சூரிய கதிர்களைக் கொண்டு கார் இயக்கவும் மின்சாரம் தயாரிக்கவும் கணிதக் கருவிகளில் கணக்குப் போடவும் இந்த கதிர்கள் செயற்கை முறையாக பயன்பட்டு வருகிறது. இது மட்டுமல்லாமல் இயற்கையாக நிறையப் பணிகளைச் செய்து வருகிறது.

இயற்கையாகிய சூரியன் தான் பேசுவதாக இந்தச் சமுதாயம் சிறப்பாக இருக்க பல கருத்துக்கள் இவ்வியலில் வண்ணச்சரபன் கூறுகின்றார். ஓரிரு கருத்துகள் மட்டும் இங்கு கூறப்படுகிறது.

அருள் முகிலை அனைய புனிதர்
அறையு முறையின் வழிசெல்வேன்
அகமும் அயமும் மகவும் வதைசெய்(து)
அழல்முன் நுகரும் மகம் எள்வேன்
அடிமை செய்யும்நன் முனிவர் பதமென்
அலரின் மகரம் முடிகொள்வேனா

(பேரொலியலந்தாதி ப.23)

அருள்மேகம் ஒத்த தூயவர் கூறிய அறநெறிப்படி நடப்பேன். ஆடு, குதிரை அவற்றின் குட்டிகளைக் கொன்று தின்னும் வேள்வியை இகழ்வேன். தொண்டியற்றும் முனிவர் திருவடி மலரின் தூளியைத் தலை மீதணிவேன். இந்தச் சமூகத்தில் ஒரு மனிதன் தன் மனிதப் பண்போடு இருக்க வேண்டும் என்ற கருத்தை சூரியன் வாயிலாக வண்ணச்சரபன் எடுத்துக் கூறுகிறார்.

### சமூகம் கோயில் சொத்தை நுகரும் தன்மை

நமது நாட்டுப்புறங்களில் கோயில் சொத்தை திண்பவனுக்கு இன்றும் ஒரு பழமொழி உண்டு. ''சிவன் சொத்து குலநாசம்''

கடவுள் சொத்தை உண்பவன் குடும்பம் தலைக்காது. மேன்மை அடையாது என்ற கருத்தை வண்ணச்சரபன் கூறும்போது,

> ''தேவர் தங்குபல கோயி லின்பொருள்கொள்
> தீயர் தங்கள் குலம் வேரொடுகெடுமே''
>
> (பேரொலியலந்தாதி, ப. 75)

கோயிற்பொருளை நுகர்பவரது குலம் வேரொடு கெடும் என இயற்கையாகிய சூரியன் தன் கருத்தை கூறுவதாக அமைந்தது.

### நல்லவர்களின் தன்மை

இந்த சமூகத்தில் நல்லவர்களின் எண்ணம் எப்படிப்பட்டது என்பதற்கு ''மனம் போல் போக்கு, எண்ணம் போல் வாழ்வு'' என்று எம். எஸ். உதயமூர்த்தி கூறுகிறார். அவ்வாறாக அவர்கள் எண்ணும் செயல் எவ்வாறு வெற்றியடையும் என்பதற்கு சூரியன் சில கருத்துக்களைக் கூறுகின்றான். வேள்வி செய்பவர் எல்லா உயிரையும் கடவுளாய் எண்ணுவர். சிறப்பான மேழிக் கொடியினரான வேளாளர் எண்ணப்படி உரிய காலத்தில் மழை பெய்யும் உயிரைக் கொன்றுண்ணும் வேடர்கள் தூய உணவையே உண்டு வாழ்வார்கள். ஊர்ப்புறம் வாழ்பவர்கள் நல் உணவை உண்டு ஊனை வெறுப்பார்கள். சிவனது கண்களில் ஒன்றென்ற சிறப்பு விளங்கும் கண்ணன் போன்ற அருளாளன் சிறப்பு உலகில் நிலவும்,

### கடவுள் முனிவர்களின் செயல் தன்மைகள்

திருவள்ளுவர் கடவுள் பற்றிக் கூறும்போது, ''அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு'' என்று கூறுகிறார். அஃதே போல் வண்ணச்சரபன், திருமாலின் சிறப்பெல்லாம் என்னை அடைய வேண்டும் எனக் கூறுகிறார். சமணர், பௌத்தர் போன்றோர் இழித்துக் கூறிவாதிடவரினும் அழிவர். உமையவள் அருணையில் கனவினில் ஓதிய தமிழ்மொழியின் அருமை வெளிப் படும். கலைமகள் அன்பர்கள் பணம் - சொல் - ஆடை கருதி அலையமாட்டார்கள். தவம் புரிவோர் அறிவற்ற சிலர் கூறும்

பழிக்கு ஆளாக மாட்டார்கள். அருட்பேற்றுக்கு இணையில்லை என்று அறிபவர் சிறப்படைவர். கணபதிப் பெருமான் என்பால் கழறிய சொல் பயனின்றி மறையாது. மேற்கண்ட கருத்துக்களை கொண்டு சங்ககாலம் முதல் இன்றுவரை கடவுள் செயல்தன்மை பற்றிய கருத்துக்கள் நிலவி வந்துள்ளமையை அறியலாம்.

### வண்ணச்சரபன் எண்ணங்கள்

வண்ணச்சரபன் தான் எழுதிய பாடல்களை கடவுளின் மீது கொண்ட கோபம் காரணமாக கடலில் – தீயில், ஆறு முதலியவற்றில் எறிந்து விட்டார். அதை மீண்டும் பெற விரும்புகிறார் இந்த கருத்து சம்பந்தரும் சமணர்களும் எந்த மதம் பெரியது என்று தன் மதங்களின் சாரங்களை ஆற்றில் விட்டனர். சம்பந்தர் விட்ட காகிதம் எதிர் நோக்கி வந்து வெற்றி பெற்றது இது நிகழ்ந்தது திருவேடகம் ஆகும். இது போன்று வண்ணச்சரபன் எண்ணங்கள் அமைகின்றது. பாரதியார் தமது கவிதையில் ஒற்றுமைப் பற்றிக் கூறும்போது

ஒன்றுபட்டால் உண்டுவாழ்வு நம்மில்
ஒற்றுமை நீங்கின் அனைவருக்கும் தாழ்வு

என்று கூறுவதுபோல் வண்ணச்சரபன் அருவத்தையன்றி உருவமான கடவுள் உண்டு என்பவருடனும் ஒருமைப்பட வாழ விரும்பினார். வள்ளலாரின் திருவருட்பாவில், வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் என்கிறார். அதுபோல் வண்ணச்சரபன், அளவற்ற ஆசையிருந்தும் முடிவான திருவருள் பெற இமையளவும் மகிழாமல் வாடினார். இதிலிருந்து ஞானிகளின் மனத்தன்மை காலந்தொட்டு மறவாமல் வருவது தெளிவாகிறது.

### வண்ணச்சரபன் தன் கருத்துகளை வெளியிடுதல்

வண்ணச்சரபன் இந்த சமூகம் இந்த முறையில் அமைய வேண்டும் என்று பல கருத்துக்களை அள்ளித் தந்தார்.

### சூரியனின் அற்புதங்கள்

சூரியனின் அற்புதங்கள் இயற்கையாக பல செயல்கள் நடைபெறுகிறது. காலை முதல் இரவு வரை பூப்பது முதல் எரிப்பது வரை பல செயல்கள் நடைபெறுகிறது. இதுபோன்ற

இயற்கை நிலை பற்றி வண்ணச்சரபன் கூறுகிறார். இன்னும் பல செயற்கைச் செயல்களும் நடைபெறுகிறது.

### பன்னிரு இராசியிலும் உலவுபவன்

சூரியன் பன்னிரு இராசியிலும் உலவுவதால் பல நன்மை களையும் தீமைகளையும் செய்கின்றான். இதை வண்ணச்சரபன் தன் பாடல்களில் கலை நிரம்பிய சந்திரனை மனைவியாகக் கொண்டு அன்புடன் ஒன்றுபடுபவன் என்று கூறுகிறார்.

### சூரியனின் ஆற்றல்கள்

சூரியனின் ஆற்றல் பற்றி திருவள்ளுவர், "என்பி லதனை வெயில்போலக் காயுமே, அன்பி லதனை அறம்" எலும்பில்லாத உயிர்களை வெயில் வருத்தும் அதுபோல் அன்பில்லாத உயிர்களை அறம் வருத்தும் என்பது திருவள்ளுவர் கருத்து அதற்கிணங்க வண்ணச்சரபன் வெயிலின் நன்மை பற்றி கூறுகிறார். நோய்கள் அன்பரை அடையாமல் நலம் புரிபவன் வீரர் போரில் விளையும் செந்நீரான ஆறுகண்டு மகிழ்பவன் தவமுடையவர் மனவெளி தோறும் விளங்குபவன். வண்ணச்சரபன் சூரியனை நீ சிவனடி யார்களை ஒத்தவன் என்றும் முருகன் கொடியில் உள்ள சேவலுக்கு முதலில் தெரியும்படி வருபவன் என்றும் கூறுகிறார். சூரியனின் சிறப்பைக் கூறும் போது நமது கிராமப்புற மக்கள். "சந்திரரோ சூரியரோ" என்று கூறுகின்றனர். வண்ணச்சரபன் போர் புரிபவர் சேனையுடன் அழிவதைக் காண்பவன் என்றும் நடுங்கப் புரியும் பணியை அகற்றுபவன் கடலில் தோன்றி கடல் மகிழ மறையும் இயல்புள்ளவன் என்று கூறுகிறார்.

### கடவுளின் தன்மை

"நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே மஞ்சனநீர்
பூசைகொள்ள வாராய் பராபரமே"

என்று தாயுமானவர் பராபரக்கண்ணியில் இறைத்தன்மையை கூறுகிறார். அதுபோல் வண்ணச்சரபன் சிவன் உதவிய வரங்கள் அழியாது என்றும் உமையவளின் அன்பு தவறாது என்றும் இறைத்தன்மையைக் கூறுகிறார். "மனத்தில் ஒலி உண்டாயின் வாக்கினில், தெளிவு பிறக்கும்" என்று கூறுவதுபோல, வண்ணச் சரபன் மனதில் முருகன் பேராவலோடு ஒளியுண்டாவதாய் கூறுகிறார்.

அசுரர் போன்றவர் அழியும் காலம் உண்டாகும் இந்திரர் துன்பமடைவது நீங்கப்பெறும். இந்துக்கள் பசுக்களை தெய்வ மாகக் கருதுவர். இவ்வழிபாடு சிந்துவெளி நாகரிகம் முற்கொண்டு காணப்படுகிறது. அவ்வாறாக பசுவின் ஊன் உண்பவர் இவ் வுலகை ஆள்வது நியாயமற்றதென வண்ணச்சரபன் தன் கருத்தைக் கூறுகிறார். "நம்பினோர் கைவிடப் படார்" என்று கூறுவது போல் வண்ணச்சரபன் முருகனை நம்புவோர் நலமடை வதாகக் கூறுகிறார்.

திருக்குறளில் திருவள்ளுவர் கூறும் சொல் பற்றியதான சொல்லும் சொல்லை வெல்லாது பிறிதோர் சொல் இல்லாமல் கூறுவது போல், உமையம்மை கூறிய சொல் பயனுடையதாக வண்ணச்சரபன் கூறுகிறார். இதிலிருந்து சமூக மக்களாகிய நாம் எந்தவொரு சொல்லைக் கூறினாலும் அதற்கு சிறப்பு இருக்க வேண்டும் என்று பழங்காலந்தொட்டு இன்றுவரை நிலவி வருகிறது.

இவ்வாறாக இந்தக் கட்டுரையானது சூரியனின் பண்புகள், சமூக நன்மை தீமைகளும், கடவுள் முனிவர்களின் செயல் தன்மைகள், வண்ணச்சரபனின் எண்ணங்கள், சூரியனின் அற்புதங்கள், சூரியன் எங்கும் நிறைந்துள்ளமை, சூரியனின் ஆற்றல்கள், திருவருட் செயல்கள், இருளை அகற்றித் தோன்றுதல் போன்றதை கூறுகின்றது. மேலும் கடவுளின் தன்மையைப் பற்றியும் விளக்குகின்றது.

# திருமால் அந்தாதி காட்டும் வைணவ நெறி

சி. பேபிசித்ரா

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வாழ்ந்திருந்த காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டாகும். இவர் 'இறைவன் ஒருவனே' என்ற கொள்கையுடையவர். சமய சமரச நோக்கில் பாடல்கள் பாடுவதில் வல்லவர். ஸ்ரீவைணவ சமய முழுமுதற் கடவுளாகிய திருமாலைப் பற்றி பல பக்திப் பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் திருமால் அந்தாதியில் காணப்பெறும் இறைவனது பெருமைகள், திருமகளின் பண்புநலன்கள், ஸ்ரீவைணவத் தத்துவம், பக்தி-பிரபத்தியின் பெருமைகள், முக்தி நிலையில் பக்தன் பெறுகின்ற பேரானந்த நிலை, ஸ்ரீவைணவ நெறியின் எளிமைத்தன்மை ஆகியன பற்றி இக்கட்டுரை சுருக்கமாக ஆய்கிறது.

### திருமாலின் பெருமைகள்

நூலாசிரியர் ஸ்ரீமன் நாராயணனது பெருமைகளை பலவாறு போற்றிப் பரவுகின்றார். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற திருமால் திருப்பாற்கடலில் வீற்றிருப்பவன். சிறப்பேழ் விளை விக்கும் திருமகளின் கணவன். அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டி இவ்வுலகைக் காப்பதற்காக வேண்டும் வடிவம் எடுத்து நின்றாளும் வீறற்திருமால். அடியார்களைக் காக்கும் குணத்தினன். அன்பர்களின் தீராத வினைகளைத் தீர்த்து மீண்டும் பிறக்கக்கூடிய பிறப்பறுத்து வைகுந்த வீடு அளிப்பவன். விண்ணையும் மண்ணையும் அளந்த பெருமான். பாண்டவர் களுக்ககாப்போராடி அவர்களைக் காத்தவன். மருதமரமாயிருந்த நளகூபர மணிக்கிரீவர்களுக்கு நற்கதி அருளியவன். கீதா உபதேசத்தை அருச்சுனனுக்குப் போதித்த கருணை வள்ளல். பக்தர்களுக்கு இரங்கி அருள்புரியும் அருளாளன். 'ஓம் நமோ நாராயணாய' என்ற எட்டெழுத்து மந்திரத்தை ஓதும் அன்பர்களுக்குச் சோகம் நீக்கி அருள்பாலிப்பவன். வேதங்களைக்

கவர்ந்து கடலுள் மறைந்த அசுரனை வென்று வேதங்களைக் காத்தவன். பன்னிரு திருநாமமும் கூறி வழிபடுகின்ற பாகவதர் களுக்கு அருள் புரிவதோடு வைகுந்த பதவியும் அளிப்பவன்.

### திருமாலின் தசாவதாரச் சிறப்புகள்

உலகில் தர்மம் அழிந்து அதர்மம் தலைதூக்குகின்ற பொழுதெல்லாம் இறைவன் தன் உயர்நிலையிலிருந்து கீழிறங்கி உலக சக்தியாகவே மாறி தீயவற்றை அழித்து மீண்டும் தர்மத்தை நிலைநாட்டுகிறான். அவ்வாறு இவ்வுலகைக் காப்பதற்காக பல அவதாரங்கள் எடுத்தருளிய திருமாலைச் சிறப்பித்துக் கூறும் தண்டபாணி சுவாமிகள்,

''வேண்டும் வடிவம் எடுத்து நின்றாளும் வீறத்திருமால்''

(25)

என்று சிறப்பித்துக் கூறியுள்ளார். திருமால் எடுத்த ஒவ்வொரு அவதாரங்களிலும் நிகழ்ந்த அற்புதச் செயல்கள் புராண இதிகாச செய்திகளாகவும் வரலாற்றுச் செய்திகளாகவும் திருமால் அந்தாதியில் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன. அவற்றுள், முதலைவாய்ப்பட்ட கசேந்திரனைக் காத்தல், திரௌபதியின் மானம் காத்தல், அருச்சுனனுக்குச் சாரதியாக இருந்து அருளுதல், பிரகலாதனுக்குத் தாய் நிலையில் நின்று அருளுதல், அரக்கர் பலரை அழித்தல், காளிங்க நடனம் ஆடுதல், பரிமாமுகத் தேசிகனாகத் தோன்றுதல், கல்லைப் பெண்ணாக்கிய கோமகனாக விளங்குதல் ஆகியன சிறப்பிடம் பெறுகின்றன.

### திருமாலின் பரத்துவ நிலை

எம்பெருமானாகிய திருமாலின் மங்கள உருவமே பரத்துவம் என்று கூறப்பெறுகிறது 'பரம்' என்பது உயர்நிலையாகிய ஸ்ரீவைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவனுடைய உருவம். திருமால் தன்மீது உண்மையான பக்தி கொண்ட மெய்யன்பர்களுக்கு ஸ்ரீவைகுந்தத்தில் இடமளித்து அருள்புரிவ தோடு, தன் பன்னிரு திருநாமங்களைப் போற்றித் துதிக்கின்ற பாகவதர்களுக்கும் தமது திருநாட்டில் இடமளித்து அருள் புரிகின்றான். இதனை,

''பாங்கனைப், பன்னிரு நாமமும்
சாத்து மெய்ப் பாகவதர்க்கு
ஈங்கருட் பேறு அளித்து ஈபவனை
வைகுந்தமும் ஈபவனை'' (44)

என்று திருமால் தன் அடியார்களுக்கு ஸ்ரீவைகுந்தத்தில் இடமளித்து அருள்புரியும் பான்மையைச் சுவாமிகள் விளக்கி யுள்ளார். திருமால் வீற்றிருக்கின்ற ஸ்ரீவைகுந்தத்தை அடைதலே உண்மையான வீடுபேறாகும். திருமாலைப் போற்றி வணங்காத இருள் மனத்தார்க்கு என்றும் ஸ்ரீவைகுந்தப் பதவி கிட்டாது. ஆதலால் திருமாலின் நாமத்தைப் போற்றி வணங்கினால் வீடு பேற்றை அடையலாம்.

**அடியவர்களுக்கு அருளுதல்**

அடியார்களின் அன்பிற்கும் பக்திக்கும் இறங்கி அவர்களைக் காத்து அருளுவதே திருமாலின் அருட்குணமாகும்.

''தன்னிழற் பூம்புளி நீழல் உற்
றோன்தனைத் தன்வடிவென்று
எண்ணிடும் தொண்டர்க்கு இரங்கா
திரான் என்பது என்கருத்தே'' (10)

என்று தண்டபாணி சுவாமிகளின் பாடல் வரிகளால் திருமால் பக்தர்களுக்கு இரங்கி அருள்புரியும் பான்மையை உணரலாம்.

ஆழ்வார்கள் பதின்மரும் திருமால்மீது நீங்காத அன்பும் ஆறாத பக்தியும் கொண்டவர்கள். அத்தகைய ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார் திருமாலின் அருளைப் பெற்றதோடு, திருமாலின் அவதாரமாகிய கண்ணனை நேரிடையாகக் கண்டு களித்ததாகவும் தமது திருவாய்மொழியில் கூறியுள்ளார்.

''அருவாகிய வாதியைத் தேவர்கட்கெல்லாம்
கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே''
(திருவாய் 9.4.8)

என்பது நம்மாழ்வார் கண்ணனைக் கண்டு பாடிய பாடல் வரிகள். அதேபோல் தீயவழிகளில் மனதைச் செலுத்தாமல் தொண்ட ரோடு கூடிவாழும் சிறந்த நலத்தினையே வேண்டும் சுவாமிகளும், ''கரியானைக் கண்டு கொண்டேன் என்று நான் சொலும் காலம் உண்டோ?'' என்று திருமாலின் திவ்விய தரிசனத்தைக் காணும்

பேற்றினைத் தமக்கு அளிக்கும்படி வேண்டுகிறார். எம் பெருமானின் புகழை உள்ளம் உருகப் பாடும் அவர் அடியார்களின் கூட்டத்தில் சேரவே விழைந்தார். இதனை,

"ஆராதனம் செய்யும் அன்பரைச் சேர்வது என் ஆசை
கண்டாய்" (56)

"மாயவன் வந்து நெஞ்சின் ஏதங்களைந்து என்னை
அன்பரிற் கூட்டுவது எத்தினமோ?" (32)

என்பன போன்ற பாடல் வரிகளால் சுவாமிகள் தெளிவுறுத்தியுள்ளார். தண்டபாணி சுவாமிகள் திருமால் அடியார்களுக்குச் செய்யும் சேவையைத் திருமாலுக்குச் செய்யும் சேவையாக எண்ணினார். இதன்வழி திருமால் தன் அடியவர்களுக்குச் சேவை செய்பவர்களையும் தன்பால் ஈர்த்து அருள்வழங்குவான் என்பது உள்ளீடு.

**திருமால் அந்தாதியில் வெளிப்படும் ஸ்ரீவைணவத் தத்துவம்**

வைணவ நெறியை தத்துவம், இதம், புருஷார்த்தம் என்று மூன்றாகப் பிரிக்கலாம். இவற்றுள் தத்துவம் என்பது சித்து, அசித்து, ஈசுவரன் என மூன்று வகைப்படும்.

**சித்து:** சித்து என்பது உயிர் வகுப்பைச் சுட்டும். உயிர்களைப் பத்தர், முக்தர், நித்தியர் என்று மூன்றாகப் பிரிப்பர். பத்தர் என்பவர் தாம் செய்த நல்வினைத் தீவினைகளுக்கேற்ப மீண்டும் இவ்வுலகத்தில் பிறப்பெடுத்து அல்லலுறுபவர். முக்தர் என்பவர் இவ்வுலகக் கட்டுகளாகிய நல்வினை, தீவினை, மும்மலங்கள் ஆகியன நீங்கப் பெற்று இறைவனுடைய பரமபதக் காட்சியினைக் காணக்கூடிய முக்தி நிலையை அடைபவர். நித்தியர் என்பவர் என்றும் நித்தியமான பரமானந்தத்தை ஸ்ரீவைகுண்டத்திலிருந்து கொண்டு அனுபவிப்பவர்.

**அசித்து:** அசித்து என்பது உணர்வற்ற சடப்பொருள். இந்த அசித்து இராஜஸ தாமஸங்கள் கலவாத சுத்த சத்துவம், இராஜஸ தாமஸங்கள் கலந்த மிச்ர சத்துவம், சத்துவ சூனியம் என்று மூன்று வகைப்படும். இவற்றுள், சுத்த சத்துவம், மிச்ர சத்துவம் ஆகிய அசித்தின் இரண்டு பகுதிகளும் ஈசுவரனாகிய திருமாலுக்கும், நித்தியர், முக்தர், பத்தர் என்ற மூன்றுவித ஆன்மாக்களுக்கும் இடையே ஏற்படும் இறையின்ப அனுபவத்

திற்கு உபகரணங்களாகவும் அவை தங்க இடங்களாகவும் அமைகின்றன. அதனால்தான், தண்டபாணி சுவாமிகள் தன்னுடைய ஆன்மா சிற்றின்பங்களில் ஈடுபடுகின்ற பத்தர் என்ற நிலைமாறி திருமால் வீற்றிருக்கின்ற ஸ்ரீவைகுந்தத்தை அடையக் கூடிய முக்தர் நிலையை அடைய ஸ்ரீமன் நாராயண னிடம் வேண்டுகிறார்.

**ஈசுவரன்:** தத்துவம் கூறும் ஈசுவரன் என்பது திருமாலைக் குறிக்கும். ஸ்ரீவைணவ சமயக் கடவுளாகிய திருமாலின் மங்கள உருவங்கள் பரத்துவம், வியூகம் விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்ற ஐந்து நிலைகளில் உள்ளன. இவற்றுள் பரம் என்பது பரவாசுதேவனுடைய உருவமாகவும், வியூகம் என்பது வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்ணன், அநிருத்தன் என்ற உருவங்களாகவும், விபவம் எண்ணற்ற அவதார மூர்த்தி களாகவும், அந்தர்யாமி எல்லோருடைய இதயக்கமலத்தில் எழுந்தருளியிருப்பவனாகவும், அர்ச்சை திவ்விய தேசங்களில் திருமேனி கொண்டு எழுந்தருளியிருப்பவனாகவும், பக்தர்களின் விருப்பப்படி திருமேனி கொள்பவனாகவும் இருக்கின்றான் (திவ்விய தம்பதியார் புகழ்மாலை. பக். 3-4).

**இதம் (வழி):** ஸ்ரீவைணவச் சமய நெறிகளுள் ஒன்றான இதம் என்பது இறைவனை அடைவதற்குரிய வழி. அஃதாவது, ஆன்மா வீடுபேற்றினை அடைய கடைப்பிடிக்கும் வழி. இவ்வீடு பேற்றினை அடைய வைணவர்கள் இரண்டு வழிகளைப் பின்பற்றுவர். அவை, பக்தி நெறி, பிரபத்தி நெறி என்பனவாகும்.

**புருஷார்த்தம்:** புருஷார்த்தம் என்பது வீடுபேற்றை அடைவ தாகும். இவ்வுலகத்தில் துன்பத்தையே அனுபவிக்கின்ற ஆன்மா வீட்டுலகமாகிய பரமபதத்தை அடைந்து, ஆராவமுதமாகிய இன்பத்தை அடையவே விரும்புகின்றது. அதனால்தான் தண்டபாணி சுவாமிகளும் இவ்வுலக இன்பமாகிய சிற்றின்பங்களி லிருந்து தன்னை விடுவித்து பேரின்பமாகிய வீடுபேற்றை அளிக்கும்படி,

"பேராத வைகுந்த வீடு அளித்து
ஆளும் பெரிய பிரான்

வாராத தாற்படும் பாடு எடுத்து
ஓதும் வழியில்லையே!'' (65)

என்று திருமாலிடம் வேண்டுகிறார்.

**பக்தி-பிரபத்தியின் பெருமைகள்**

பக்தி பிரபத்தி என்ற இரண்டு நெறிகளுமே வீடுபேற்றை அடைவதற்கான வழிகளாகும். இவற்றுள் பக்தி நெறியைப் படிப்படியாகத்தான் கைகொள்ளுதல் வேண்டும். இப்பக்தி நெறிக்கு கன்மத்தையும், ஞானத்தையும் துணையாக்கிக்கொண்டு எவ்வித பிரதிபலனையும் எதிர்பாராமல் இறைவனுக்குத் தொண்டு செய்தல் வேண்டும். சிற்றின்பங்களின்பால் மனதைச் செலுத்தாமல் இறைவனையே தமது அன்புக்குப் பாத்திரமாகக் கொண்டு தியானித்தல் வேண்டும். அவ்வாறு தியானிக்கும் பொழுது பக்தியின் முதிர்ந்த நிலையில் இறைவனது காட்சி கை கூடப்பெறும். இதுவே பக்தி நெறியில் வீடுபேற்றை அடையும் வழி.

பிரபத்தி என்னும் சரணாகதி நெறியை எல்லோரும் எளிமை யாகப் பின்பற்றலாம். இந்நெறியில் இறைவனது வல்லமை யிலும் அருளிலும் பூரண நம்பிக்கை வைத்துத் தன்னை முழுமை யாக இறைவனிடம் ஒப்படைத்தல் வேண்டும் இந்நெறியை முறையாகப் பின்பற்றினால் ஆன்மா உலக வாழ்விலிருந்து விடுதலை பெற்று முத்தி நிலையை அடையும்.

திருமாலின் பெருமைகளைப் போற்றிப் புகழும் சுவாமி களும் சரணாகதி நெறியையே பின்பற்றி இறைவன் திருவடியை அடைய விரும்பினார்.

''பொருளாவல் கொண்டு பரதவிப்
பேனும் நின் பொன்னடியார்
அருளாண்மை முற்றி அளி கூர்வனோ?'' (20)

என்று திருமாலின் திருவடியை அடைந்து முத்தி நிலை எய்த விரும்பினார்.

**பக்தன் பெறுகின்ற பேரானந்த நிலை**

இறைவனுடைய பேரின்பமானது ஸ்ரீவைகுந்தத்தில் கிடைக்கப்பெறும். நான்கு மறைகள் கூறுகின்ற பேரறிவாளனாக

விளங்கும் ஸ்ரீமன் நாராயணனை முழுமையாக உணர்ந்து அவ்வறிவை பெற்றதினால் விளங்கும் பேரின்பத்தை அடைந்தவர் தண்டபாணி சுவாமிகள். தொண்டர்களைப் போற்றி துதிப்பதன் வாயிலாக எஞ்ஞான்றும் இறைவனின் பேரின்பத்தை அடையலாம்.

திருமால், பக்தர்களின் பக்திக்கு இரங்கி அருள்புரியும் பேரருளாளன். இரக்கத்திற்கு இடமாக இருக்கின்ற ஸ்ரீமன் நாராயணனுடைய இரக்கத்திற்கு ஆட்பட்டு பேரின்பப் பெரு வாழ்வை மீண்டும் அடைவதற்காகவே,

''முத்திக் கழல் பெறவே என்றன்
ஆவி முயல்கின்றதே!'' (33)

என்று தித்திக்கும் பேரின்பத்தை ஸ்ரீவைகுந்தத்தில் அளிப்பவனாகிய திருமாலின் பேரருளை இவர் வேண்டுகிறார்.

இரும்பைப் போன்ற கடுமையான மனம் படைத்தவர்களுடைய நெஞ்சமும் ஸ்ரீவைகுந்தநாதனை நேரில் பார்க்கின்ற பொழுது கனிந்து உருகும். ஸ்ரீவைகுந்தநாதனின் திருவுருவைக் கண்டு பேரின்பம் அடைகின்ற பேற்றினைப் பெற்றதினாலேயே தொடர்ந்து அந்த பேரின்பம் கிடைக்க அருளும்படி சுவாமிகள் வேண்டுகிறார்.

''இரும்பாய நெஞ்சம் உருகுந்திறற்
காட்டுவது என்று கொல்லோ?'' (58)

நான்மறைகள் கூறுகின்ற பேருண்மைகளையே தன்னுடைய வடிவமாகக் கொண்டிருப்பவன் திருமால். ஆதலால் நான் மறையை தினமும் ஓதி வழிபடுவதினால் இறைவனுடைய பேரானந்த நிலையை அடையலாம். அப்பேரானந்தத்தை அனுபவித்து உணர்ந்ததனாலே தண்டபாணி சுவாமிகள்,

''நான் மறையும் சத்தியமாகத் தினங்கூறக்
கேட்டு நின் தாள் பணியேன்'' (62)

என்று பாடுகின்றார். இங்கு 'தாள் பணியேன்' என்பது தாள் பணிந்து பேரானந்தத்தைத் தனக்கு அருள்வாய் என்று இறைவனிடம் முறையிடும் பான்மையைக் குறிக்கின்றது.

பக்தனுடைய ஆவலையெல்லாம் தீர்த்து வைக்கின்ற பேரழகைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டிருக்கின்ற திருமால்,

பக்தர்களுடைய குற்றங்களையும் குணமாகக் கொண்டு தன்னுடைய பெருங்கருணையினாலே அரவணைத்துக் கொள்பவன். எம்பெருமானுடைய பெருங்கருணை முழுவதையும் பக்தன் தன்னுடைய தலையிலே சுமந்து கொண்டிருக்கின்ற நிலையை,

"விழியாரக் கண்டு உன் திருத்தாள்
சுமப்பது வேண்டும் என்னை
வழிபாடு செய்யப் பணித்தாய்!" (68)

என்று சுவாமிகள் சுட்டுகிறார்.

இதுகாறும் கண்ட அனைத்துக் கருத்துக்களையும் ஒன்று படுத்தும் பொழுது தண்டபாணி சுவாமிகளின் திருமால் அந்தாதியில் எம்பெருமானது பெருமைகள் பல வகைகளில் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளதோடு, ஸ்ரீமன் நாராயணன் அடியார்களின் அன்பினை ஏற்று அருள்புரியும் பேராண்மையும் போற்றப்பெறுகிறது என்பது அறியக் கிடக்கிறது. மேலும், இந் நூலில் வெளிப்பெறும் தத்துவக் கருத்துக்களானது, அடியார்கள் இறைவனிடம் பக்தி கொண்டு வீடுபேற்றினை அடைவதற்கான வழிகளைக் கூறுவதோடு, எல்லோரும் எளிமையாக வைணவ நெறியைப் பின்பற்றி இறையின்பத்தைப் பெறலாம் என்பதையும் எடுத்துரைப்பது தெளியப்பெறுகிறது ஆகவே இந்நூலை தினமும் பாராயணம் செய்வதாலும், திருமாலின் திருவெட்டெழுத்து மந்திரத்தை ஓதி வழிபடுவதாலும் ஒவ்வொருவரும் எளிமை யாகத் திருமாலது பேரருளைப் பெற்று ஸ்ரீவைகுந்தப் பதவியை அடையலாம்.

**உசாத்துணை நூல்கள்**


கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதி). 1988 **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்**, திருச்சி.

ஞானசுந்தரம், தெ. 1988. **வைணவ உரைவளம்**, சென்னை.

நரசிம்மன், பி. ஆர். 1989. **வைணவ மரபும் மெய்ப்பொருளியலும்**, மதுரை.

மாதவன், வே. இரா. (பதி). 1993. **திவ்விய தம்பதியர் புகழ்மாலை**, தஞ்சாவூர்.

——— 1994. **நவநீதகிருட்டிணன் கலம்பகம்**, தஞ்சாவூர்.

# புலவர் புராணம் - வில்லிபாரதச் சருக்கம்

சொ. மணிவண்ணன்

கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கௌமார நெறியை முன்நிறுத்தி ஆன்மீகப் பணியில் ஈடுபட்ட வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பல உருவாக்கங்களுள் ஒன்றாகிய ''புலவர் புராணம்'' தமிழ்ப் புலமையாளர்கள் பலரது வாழ்வியல் நிகழ்ச்சிகளின் தொகுப்பாகும். இவற்றுள் பாரதத்தைக் காப்பியமாக்கித் தமிழுக்குப் பெருமை சேர்த்த வில்லிபுத்தூ ராழ்வாரின் வாழ்வியல் நிகழ்ச்சிகள் ''வில்லிபுத்தூரார் சருக்கம்'' என்ற தலைப்பில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. இப்பகுதி பற்றிய கருத்தோட்டங்களை எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### வில்லிப்புத்தூராரின் தோற்றம்-வாழ்வு

தமிழ்ப்பற்றும் சமயப் பற்றும் ஒருங்கே கொண்டதால், வரலாற்றில் அழியாத புகழ் பெற்ற வில்லிபுத்தூரார், திருமுனைப்பாடி நாட்டைச் சேர்ந்த சனியூர் என்னும் ஊரில் பிறப்பெடுத்த பெருமகனாவார். இவர் பிறந்ததைத் தண்டபாணி சுவாமிகள்,

'பையர வனையாள் தன்னை பணியும் ஓர் பனவன் இல்லில்
பொய்யறு புலமை தாங்கும் புண்ணியத்து ஒரு சேய் பூத்தான்''

என்று குறிப்பிடுகின்றார்.

வில்லிபுத்தூரார் தோன்றிய இடம் பற்றி பொதுவாகக் கூறப்படும் செய்திக்கும், சுவாமிகள் கூறுவதற்கும் வேறுபாடு உள்ளது. வில்லிபுத்தூரார் தோன்றிய இடம் ''தென்பாண்டித் திருவில்லிபுத்தூர்'' என்று சுவாமிகளால் கூறப்படுகின்றது. இக் கருத்து உருப்பெற 'வில்லிபுத்தூரார்' என்னும் பெயர் காரண மாக இருந்திருக்கலாம். ஆயினும் பாரத நூலின் பாயிரத்தில் ''சனியூர் அருள்பெறு வில்லிபுத்தூரார் என்னும் செய்தி இடம் பெற்றிருப்பது சுவாமிகளின் கருத்திற்கு மாறுபாடாக உள்ளது.

மேலும், ''ஸ்ரீவில்லிபுத்தூரார் பெரியாழ்வாரிடம் ஈடுபாடு மிகக் கொண்டவராதலால், வில்லிபுத்தூரார் என்ற பெயர் ஏற்பட்டது'' (எஸ். சௌந்தர பாண்டியன்: தமிழ்க் காப்பியங்கள் 1983; 445) என்ற கருத்தும் உள்ளது. இதனால் வில்லிபுத்தூரார் பிறந்த ஊருக்கும் பெயருக்கும் தொடர்பில்லை என்று கருத இடமிருக் கின்றது. வில்லிபுத்தூராருக்கு உடன் பிறந்த சகோதரர் ஒருவர் உண்டு. இருவரும் இளமையிலிருந்தே ஒற்றுமையுடன் வாழ்ந்த முறை அனைவரும் போற்றும் மாண்பமைந்த செயலாக அமைந்தது.

''ஓம் நமோ நாராயணா'' என்னும் எட்டெழுத்து மந்திரத்தைக் கூறி இறைவனை வழிபடும் மனவளமிக்க வில்லிபுத்தூரார் குடும்பம் செல்வ வளத்துடனும் திகழ்ந்தது. சகோதரர் இருவரும் செம்மையான வாழ்வு நடத்தி, உரிய பருவத்தில் மணம் புரிந்து இல்லற வாழ்வில் ஈடுபட்டனர். துணைவியர் இருவர் வந்த பிறகும் ஒற்றுமை குறையாது சிறப்பாக வாழ்ந்தனர்.

**பாரத நூலின் தோற்றம்**

திருமுனைப்பாடி நாட்டு மன்னனாகிய கொங்கர் குலத்தைச் சேர்ந்த வரபதியாட்கொண்டான் பாரத நூல் தமிழில் உருவாக்கப்பட வேண்டும் என்ற எண்ணத்தை உள்ளத்தில் கொண்டான். அவன் தன் எண்ணத்தை நிறைவேற்றும் தகுதி உடையவரைக் கூறுமாறு பலரையும் வினவினான். அனைவரும் வில்லிபுத்தூராரே இதற்குத் தகுதியானவர் என்று கூறுகின்றனர். ஆனால் செல்வவளம் மிக்க அவர் மன்னனை நாடி வரமாட்டார் என்றும், அவன் கூற்றுக்கு எளிதில் செவி சாய்க்க மாட்டார் என்றும் கூறுகின்றனர். வில்லிபுத்தூரார் குடும்பம் ஒற்றுமை யோடு விளங்குவதை மாற்றிச் சிக்கலை ஏற்படுத்தினால் அதனைத் தீர்த்துக் கொள்ள தன்னிடம் வருவர். அப்போது தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று மன்னன் கருதுகின்றான்.

கணவனை இழந்த முதியவள் ஒருத்தியை அனுப்பி வில்லிபுத்தூரார் இல்லத்து மகளிர் மூலமாக மன வேற்றுமை தோன்றச் செய்கின்றான். இதனால் வில்லிபுத்தூராரும் அவரது சகோதரரும் செல்வத்தைப் பாகப்பிரிவினை செய்து தனித்

தனியே வாழ முடிவெடுத்தனர். இதற்கான வரபதியாட்கொண்டானைச் சந்தித்தனர். மன்னன் தன் எண்ணம் நிறைவேறும் சூழல் அமைந்ததை எண்ணி மகிழ்ந்தான். பாரத நிகழ்ச்சிகளை இரு பகுதிகளாகப் பகுத்து, சகோதரர் இருவரும் பாட வேண்டும் என்றும் அதன் பிறகு பாகத்தைப் பிரித்துக் கொடுப்பதாகவும் கூறினான். சகோதரர் இருவரும் மன்னன் வேண்டுகோளை ஏற்றுப் பாரதத்தைக் காப்பியமாகப் பாடி முடித்தனர். இதனைச் சுவாமிகள்,

> ''முப்பழச் சாறும் பாகும், முதிறவே அட்டபாலும்
> ஒப்பவே வண்ணப் பாட்டும் உடனுடன் கலந்து பாடி
> எய்ப்பறு கவிகள் ஆறாயிரந்தான் முடித்திட்டாரே''

என்று குறிப்பிடுகின்றார்.

இருவரும் பாரத நூலைப் பாடியதாக சுவாமிகள் குறித்தாலும் இக்கருத்து பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. வில்லிபுத்தூரார் மட்டுமே பாரத நூலைப் படைத்தார் எனவும், அவரது புதல்வர் வரந்தருவார் நூலின் பாயிரத்தைப் படைத்தார் எனவும் உள்ள செய்தியே அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் பட்டதாக இருக்கின்றது. இதுபற்றிப் பாரதத்தை வில்லியும் அவர் தம்பியும் பாடியதாகவும் வில்லியின் புதல்வர் வரந்தருவார் கடைசி எட்டுப் பருவங்களைப் பாடியதாகவும் சில கதைகள் வழங்குகின்றன. அவை ஒப்புக் கொள்ளற்குரியனவல்ல'' என்று மு. கோவிந்தசாமி (பெருங்காப்பியம் – சிற்றிலக்கியப் பெருந் தமிழ் 1975 : 26) கூறுகின்றார்.

பாரத நூல் தோற்றம் பெறுவதற்காகவே வில்லிபுத்தூரார் குடும்பத்தில் கிழவி ஏற்படுத்தப்பட்டசிக்கல், பிறகு அவளாலேயே தீர்த்து வைக்கப்பட்டது. பாட்டி ஏற்படுத்திய சிக்கலே பாரத நூலின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்ததை சமூகத்தில் பலரும்,

''மொட்டைச்சி ஒருத்தியாலே பாரதம் முடிந்ததென்று'' பேசியதாக சுவாமிகள் கூறுகின்றார். விரித்த கூந்தலுடன் விளங்கி, பாரதப் போர் நிகழக் காரணமாக இருந்த திரௌபதியைத் தலைவியாகக் கொண்ட பாரத நூல், ''மொட்டைச்சியால் முடிந்தது'' என்று கூறுவதை எள்ளற் சுவையுடன் சுவாமிகள் குறிக்கின்றார்.

மிகுதியான பாடல்களைப் பாடும் புலவர்களை "அளவில் மிகுதி" என்ற காரணத்திற்காகப் புகழ்ந்து உரைப்போர் அறிவில்லாதவர்களேயாவர். மருந்து அளவில் குறைந்தாலும் மிகுதியான பயனைத் தருவது போன்று வில்லிபுத்தூராரின் ஒவ்வொரு பாடலும் தகுதியிற் சிறந்ததாகும். இத்தகுதியை உணரக் கூடியவர்கள் சிலரேயாவர்.

இலக்கண உறுப்புகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கேட்போரை சோர்வடையச் செய்யும் பாடல்களில் தொகுதியைக் காப்பியத் தகுதியாகப் புலவர்கள் கருதலாம். ஆனால் அவர் தம் பாடல்கள் வில்லிபுத்தூராரின் சிறந்த காப்பியத்திற்கு ஈடாகாது. தகுதியற்ற காப்பியங்கள் பலவும், ஆமை, தவளை போன்று சிறப்பு குன்றி இருக்க, வில்லிபாரதமோ விண்ணில் பறந்து செல்லும் வெள்ளைக் குதிரை போன்று உயர்ந்து விளங்குகின்றது.

**வில்லிபுத்தூராரின் தமிழ் ஈடுபாடு**

பாரத நூல் பாடிய வில்லிபுத்தூராரின் வாழ்வில் நிகழ்ந்ததாக வேறு சில நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. அவற்றைச் சுவாமிகள் விளக்கமாக தம் நூலில் இடம்பெறச் செய்திருக்கின்றார்.

தமிழில் தவறாகப் பாடும் புலவர்களின் காதுகளை அரிந்து ஒறுப்புக்கு உள்ளாக்கும் செயலை வில்லிபுத்தூரார் செய்திருக்கின்றார். இந்நிகழ்வு கொடுமையானதாக இருந்தாலும், தமிழ் மொழியில் தரமில்லாத பாடல்கள் இடம் பெறுவதை வெறுத்த அவரது தமிழ்ப் பற்றை உணர்த்தும் செயலாகவும் கருத இடமிருக்கின்றது. தமிழ் காக்கும் முயற்சியில் இறைவனையே எதிர்க்கத் துணிந்த நக்கீரரின் செயல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

வில்லிபுத்தூரார் தமிழைப் பாதுகாக்க செய்த முயற்சியில் "அனந்தன்" என்பவன் அவரிடம் அகப்பட்டுக் கொண்டான். பிழையான பாடலைத் தந்த அவனுடைய காதை அரிய வில்லிபுத்தூரார் முயன்றபோது அவன் தன் பெயரைக் கொண்ட ஆதிசேடனுக்கு காது இல்லை. எனவே விட்டு விடுமாறு பணிந்து கேட்டுக் கொண்டான். வில்லிபுத்தூராரும் அவனை

விடுவித்திருக்கின்றார். ஆதிசேடன் பெயரைச் சொன்னவுடனே தன் செயல்பாட்டினை மாற்றிக் கொண்ட வில்லிபுத்தூராரின் வைணவ சமய ஈடுபாடு போற்றத்தக்கதாக உள்ளது. இவ்வாறு தமிழ்ப் பற்றும் சமயப் பற்றும் ஒருங்கே பெற்றுச் சிறப்புடன் திகழ்ந்த வில்லிபுத்தூராரும் தோல்வி அடையும் நிலை அருணகிரிநாதரால் ஏற்படுகின்றது.

அருணகிரிநாதர் இயற்றிய கந்தரனுபூதியின் ஒரு பாடலுக்கு விளக்கம் கூற வில்லிபுத்தூராரால் இயலவில்லை. ஆயினும் அருணகிரிநாதர் வில்லிபுத்தூராரரைத் தண்டிக்கவில்லை. பெருந்தன்மையுடன் பொறுத்துக் கொண்டார். சந்தம் பாடுவதில் மன்னனாகத் திகழ்ந்த வில்லிபுத்தூரார், தன்னை மிஞ்சி சந்தம் பாடுவதில் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்த அருணகிரி நாதரின் அற்புதக் கவி ஆற்றலை நேரில் உணர்ந்த போது தோன்றிய தடுமாற்றமே, உரை விளக்கம் சொல்ல இயலாததற்கு ஒரு காரணமாக இருக்கலாம். தமிழுக்குத் தகுதி மிக்க பாடல்கள் கிடைப்பதை எண்ணி வில்லிபுத்தூரார் மனத்தில் ஏற்பட்ட பெருமகிழ்வே அவருக்கு அறிவு தடுமாற்றத்தை ஏற்படுத்தியிருக்கலாம்.

இத்தகைய வில்லிபுத்தூராரின் தமிழ் காக்கும் செயலினை,

"தேளினில் துயர் செய்வாரைச் செகம் பெரும் புலவர்
என்றும்
வாளினாற் புலவர் பல்லோர் வார்செவி அரிந்து வாழ்ந்த
ஆனிநேர் பனவன் மாட்சி அறிந்தவர் சிலர்தாம் அம்மா"

என்று சுவாமிகள் போற்றுகின்றார்.

இதனால், தேள் செய்யும் கொடுமையினை பாடல் வழி செய்வோரை வில்லிபுத்தூரார் ஒறுப்புக்கு உள்ளாக்கிய செயல், தமிழைப் பாதுகாக்கும் நன்முயற்சியின் வெளிப்பாடே என்று கருத இடமிருக்கின்றது.

இவ்வாறு வில்லிபுத்தூரார் பற்றி பல செய்திகள் கூறப் பட்டாலும், அருணகிரிநாதரிடம் வில்லிபுத்தூரார் தோல்வி அடைந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சி கற்பனையாக இருக்கலாம் என்று கருதுவாருமுண்டு.

"அருணகிரியார் வில்லிபுத்தூராருக்குப் பிற்பட்டவராதல் வேண்டும். எனவே அவர்கள் இருவரையும் தொடர்புபடுத்தி வழங்கும் கதைகள் பொருத்தமற்ற வெறும் கட்டுக் கதைகளே எனத் துணிதலே தக்கது." என்று சு. வள்ளியம்மாள் "வில்லிபாரதத்தில் கண்ணன்" (1980; 20) என்னும் நூலில் குறிப்பிடுகின்றார். எவ்வாறாயினும், வில்லிபுத்தூராருடைய தமிழ்ப் பற்றையும், சமயப் பற்றையும் எவரும் குறைத்து மதிப்பிட முடியாது.

**நிறைவுரை**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் "புலவர் புராணம்" நூலில் இடம் பெற்ற வில்லிபாரதச் சருக்கம் வில்லிபுத்தூராரின் வாழ்வியல் நிகழ்ச்சிகளை செவி வழியாக கூறப்பட்ட செய்திகளின் அடிப்படையில் தொகுத்துத் தருகின்றது. இதனுள், வில்லிபுத்தூரார் பிறப்பிடம் பற்றியும், பாரத நூலைப் பாடியவர் பற்றியும் கருத்து வேறுபாடான செய்திகள் இடம் பெற்றிருப்பது உண்மையே. ஆயினும், கௌமார நெறியைப் பின்பற்றி வாழ்ந்த சுவாமிகள், வைணவ நெறியைப் போற்றிய வில்லிபுத்தூராரையும், அவரது காப்பியத்தையும் புகழ்ந்துரைப்பது சமயப் பொதுமைக்கு மிகச் சரியான சான்றாக அமைகின்றது.

# குருநாதனும் குருவடியாரும்

மு. மணிவேல்

கடந்த நூற்றாண்டில் வாழ்ந்த அருளாளர், மகான், பக்தியாலான பல்லாயிரம் பாடல்களைப் பாடிய பெருங்கவி வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். 1839-ம் திருநெல்வேலியில் ஞானப் பிறப்புக் கொண்ட அடிகளார் 1898-ல் திருவாமாத்தூரில் ஞானச் சமாதி அடைந்தது வரை அவர் வாழ்ந்த அறுபதாண்டு காலத்தில் அறுபதாயிரத்திற்கு நெருங்கிய அருட்பாடல்களை அருளியிருக்கிறார். அவருக்கு முன்னர் வாழ்ந்த 'திருப்புகழ் அருட்கவி' அருணகிரியார் போலவும் அவருக்கு மேலாகவும் போற்றத்தக்க பக்திக் கவிதைகள் அடிகளாரின் கவிதைகள். முருகப் பெருமானே தம் வாழ்வாகவும் பற்றாகவும் கொண்டு புகழ் செய் பாடல்கள் பாடியும் பூசைகள் செய்தும் வாழ்ந்த வாழ்க்கையை உடையவர் அவர்.

தமிழ்க் கவிதைகளையும் தமிழ்க் கடவுளர்களையும் ஆழக் கற்றவர் அடிகளார். ஆழக் கற்ற தமிழ்க் கவிதை அனுபவத்தால் அருட்பாடல்களைப் பாடித் தம் மனம் கொண்ட கடவுளை ஆட்கொள்ள வேண்டி வாழ்ந்தவர். திருமுருகன் அவர் பற்ற நினைத்த, பற்றிய கடவுள். அக்கடவுளின் ஆயுதமாம் வேல் அடிகளாரின் பூசைக்குரிய பொருள். முருகனே அவருக்கு எல்லாம்; முருகனே நாதன் – குருநாதன். அந்நாதனைப் பாடுவதே அவர்தம் நெறியாக இருந்திருக்கிறது.

இலக்கணம் தெரிந்த அருட்கவி தண்டபாணி சுவாமிகள். இலக்கண நூல்களோடு இலக்கிய நூல்கள் பலநூறு செய்தவர். பதிகங்களாய் அவர் பாடிய பாமாலைகள் பல. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ் என்றிவ்வாறான இலக்கியங்களும் பல. அங்ஙனம் பாடிய, முருகப்பெருமான் குறித்தமைந்த 'குருநாதன் அந்தாதி' என்னும் இலக்கியத்தில் அவர் குறித்த செய்திகளை எடுத்துக்காட்டுவது இக்கட்டுரை.

'அந்தாதி' என்பது ஒரு பாட்டின் இறுதி எழுத்து/அசை/சீர்/சொல்/தொடர் அடுத்த பாட்டின் தொடக்கமாகவும் இறுதிப் பாட்டின் முடிவு முதற் பாட்டின் தொடக்கமாகவும் அமையப் பாடுவது. இங்ஙனம் அமைய நூறு பாடல்கள் பாடுதற்குப் பெரும் புலமை வேண்டும்; தாம் கருதிய பொருளையும் புலப் படுத்துதல் வேண்டும். அவ்வகையில் புலமை நலம் கூடிய வகையில் குருநாதன் அந்தாதியை அடிகளார் பாடியிருக்கிறார்.

நூற் பாடல்கள் நூறினோடு முன்னதாகக் காப்புப் பாடலொன்றும் பின்னதாக நூற்பயன் கூறும் பாடலொன்றும் கொண்டமைந்தது இந்நூல். முன்னும் பின்னும் அமைந்த பாடல்கள் வெண்பாவிலும், நூற் பாடல்கள் கட்டளைக் கலித் துறையிலும் அமைந்தவை.

தமிழ் நூல் பாடிய பாவலர் பலரும் விநாயகர் காப்புப் பாடியிருக்க, தண்டபாணி சுவாமிகள் முருகனைப் பாடும் அந்தாதி நூலில் முருகனின் வேலாயுதத்திற்குக் காப்புப் பாடியிருக்கிறார். அரக்கத்தை அழித்து விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் காப்பாக அமைந்த வேலாயுதத்திற்குக் காப்புப் பாடியது பொருத்தமுடையதும் பொருளுடையதுமாகும்.

உலகின் ஒரு நாதனாகவும் ஒப்பில்லாக் குருநாதனாகவும் விளங்கும் குருநாதனாகிய முருகனுக்கு அந்தாதி பாடினால் பெருநாதன் என்னும் பெயர் பெற்று இவ்வுலகத்தும் மறுமையுலகத்தும் பெருமைகொள் வாழ்வு பெறலாம் என்கிறார் சுவாமிகள் (காப்பு).

தண்டபாணி சுவாமிகள் முருகப் பெருமானை அருள் தரு கடவுளாக மட்டுமன்றி அறிவு தரு கடவுளாக - குருநாதனாகக் கொண்டவர். முருகப் பெருமான் தன் தந்தை சிவக் கடவுளுக்கு வேதப் பொருளை, பிரணவ மந்திரப் பொருளை உரைவிளக்கம் செய்தவன். அதனால் நாதனுக்குக் குருவான சிவகுருநாதன் ஆனவன். அவனையே தமக்குக் குருவாகக் கொண்டவர் சுவாமிகள். அவனது அருள் ஞானத்தால ஆன அறிவு பெற்றவராகவே தம்மைக் கூறுகிறார். கந்தர் அனுபூதியில் அருணகிரி நாதரும், 'குருவாய் வருவாய் அருள்வாய்,' என்றார். அருமறையை உபதேசித்த குரு தேசிகனாகிய முருகப்

பெருமானைத் தம் அந்தாதிப் பாடல்கள் நூறிலும் 'குருநாதா' என்றே தண்டபாணி சுவாமிகள் விளித்துப் போற்றுகிறார்.

தண்டபாணி சுவாமிகள் தம் அந்தாதிப் பாடல்கள் அனைத்திலும் முருகனைப் போற்றுதலும் அவனிடத்தில் தமக்கு அருள் வேண்டுதலும் செய்கிறார். அவ்வகையில் ஒவ்வொரு பாடலிலும் தொடக்கத்தில் தம் குறை கூறி வேண்டுதலும், இறுதியில் முருகனின் நிறை கூறி வியத்தலும் செய்வதைக் காணலாம்.

முருகன் அழகானவன், அறிவானவன், ஆற்றலுடையவன், இங்ஙனம் அவனைக் கருதுதற்குரிய காரணம் காட்டியவன். அத்தகைய முருகனின் அருமை பெருமைகளை அடிகளார் பாடிப் பரவுகிறார். தண்டபாணி சுவாமிகள் தம் குருநாதனை, மெய் குருநாதன் (23), கருணைக் குருநாதன் (9), பரமகுருநாதன் (7), பூரண சற்குருநாதன் (16), அருமைக் குருநாதன் (96), ஞானம் தழைத்த குருநாதன் (97), சுந்தரக் குருநாதன் (99) என்றெல்லாம் போற்றி அம்முருகன் 'என் நேயத்தான்' (59); 'என்னை ஆண்டவன்' (69) என்று கூறுகின்றார்.

முருகன், கந்தன், சண்முகன், ஆறுமுகன், குகன் என்றெல் லாம் வழங்கும் ஆயிரத்தொரு நாமங்கள் உடையவன் என்கிறார். சுயம்பாகத் தோன்றிய சிவக்கடவுளின் விழியில் தோன்றிய வித்தின் மைந்தன் அவன். அதனால் அச்சிவத்தின் பாகத்தில் அமர்ந்த உமைக்கும் சேயானவன். இது முருகனின் பிறப்புக் குறித்த புராணவழி வந்த இலக்கிய ஆளுமை பெற்ற செய்தி. இச்செய்தியைத் தண்டபாணி சுவாமிகள் தம் பாடல்களில் பலவிடங்களில் கூறுகின்றார். 'சிவன் விழியில் உத்தமச் சேயென வந்தாய்' (28), 'நஞ்சுண்டோன் பாலன்' (14), 'புலித் தோல் உடுத்தோன் கண்' (7), 'உமை பெற்ற சேய்' (12), 'உமையாள் மைந்தன்' (31) எனக் குறிப்பன காட்டத்தக்கன.

முருகனுக்கு என்று தனித்ததோர் உருத்தோற்றம் உண்டு. அவனைப் பாடும் அடியார் 'ஆறுமுகத் தண்ணல்' (6), பன்னிரு தோளும் (70) பன்னிரு கையும் (77) உடையவன், 'சேவற்கொடிக் கையன்' (5) 'கூராரும் வேற் கையன்' (13), தோகை மயில் வாகனன்' (36), 'கடம்பு புனைந்தவன்' (51) என அவன்தன் உருவும் சேர்க்கையும் கூறுகிறார்.

எங்கும் இருக்கும் முருகன் சிறப்பாக மலைமீது நின்று மக்களைக் காப்பவன். அதனால் குறிஞ்சிக் கடவுள் என்று முன்னாளில் குறிக்கப்பட்டவன். தண்டபாணி சுவாமிகளும் முருகனை, 'பல்கோடி வெற்பு ஆள்பவன்' (7), 'மலையில் ஆடும் குருநாதன்' (39) 'குன்று தோறாடிய கூத்தன்' (42), குன்று தோறாடும் குருநாதன்' (48) என்றெல்லாம் குறிக்கிறார்.

முருகன் திருமால் மருகன்; விண்ணுலகத்துத் தெய்வப் பெண்ணையும் மண்ணுலகத்து வேடர் பெண்ணையும் மணம் கொண்டவன். 'மாயவன் பரவும் மருகன்' (60), 'சங்கம் ஊதிய மால் மருகன்' (41), 'விண்ணவர் குலசேகரன்' (35), 'குறவள்ளி விழிக் கயலால் மருண்டவன்' (42), 'தினைக் காட்டு வள்ளி தாள் வணங்கும் நாதன்' (60), 'புனத்து ஏனல் வள்ளி நண்ணிய தோட் குருநாதன் (34) என வரும் பாடலடிகளில் மேற்குறித்த செய்தி யினைத் தெரியலாம்.

முருகன், 'என்றென்றும் இளையவன்' (30), 'மூவில் சற்குரு நாதன்' (94); 'முற்றுமான ஞானம் தழைத்தவன்' (97), தந்தைக்கு ஞானம் தந்த நாதன். முருகனின் ஆற்றலையும், அச்சம் கொண்டவர்க்கு அருள் செய்தலையும் காட்டும் முருகனின் செயல், சூரனைக் கொன்று வென்றதாகும். விண்ணவர்க்குப் பகையாய் விளங்கிய சூரனை வேலால் வெற்றி கண்டவன். 'சூழ்வினையை வெல்லும் வேல் கொண்டவன்'. அதனால் விண்ணோரையும் விண்ணவரையும் காத்தவன் (26, 37); விண் கொண்ட சோகம் தவிர்த்தவன்.

முருகன் தமிழ்ப் புலவராய் இருந்தவன் என்பது பண்டை யோர் குறிப்பு. அக்குறிப்பையும் தண்டபாணி சுவாமிகள் காட்டுகிறார்: 'முச்சங்கத்து நாவலன்' (34), 'பொதியை முனிநாதன் போலும் சிறப்பினன்', 'செந்தமிழ்ச் சொற் பக்தருக் கான குருநாதன் (76), தமிழ்ப் புலவர் குருநாதன் (9, 58), 'குறுமுனி தியானிக்கும் குருநாதன்' (30).

'ஒரு தண்டோடு தோன்றும் தனித்தெய்வம்' (3), 'நாதன் அல்லாத தெய்வம் வேறில்லை' (22), 'தெய்வம் எல்லாம் நின்சீர் வடிவே' (4) என்றிவ்வாறு முருகன் உன்னதமான ஒரு தெய்வம் என்கிறார் தண்டபாணி சுவாமிகள்.

இவை முருகனின் நலமும் திறமும் அறிந்த அடிகளார் குறிக்கும் அவர்தம் அந்தாதி நூலில் அமைந்த செய்திகள். அம் முருகன் தம் மனதிலும் நினைவிலும் நிறைந்தவன்; மனக்காட்சி யில் தோற்றம் காட்டியவன். ஆயின் நேர் காட்சியில் நில்லாதவன். அம்முருகன் நேர் வந்து அருள் தந்து குறை நீக்க வருதல் வேண்டும் என வேண்டுவது அவர்தம் அந்தாதிப் பாடல்களின் அடிக்கருத்து.

முருகனைப் படிந்தும் பணிந்தும் வாழ்வு பெற்றோர் அளவற்ற கோடி உண்டு (74); அதற்காகப் பல்கோடி விழி கொண்டவன் முருகன் (8) என்கிறார் சுவாமிகள். அக்கருணை விழிக் கந்தன் தன்னைக் கண்டு கொள்ளாமையைப் பாடல்கள் தோறும் வருந்துகிறார். தம் கடந்தகால வாழ்க்கையின் சிறுமைகளிலிருந்தும் தம் வறுமையிலிருந்தும் விடுபட அருள் தர வேண்டுகிறார்.

செந்தமிழால் பல்லாயிரம் 'திருப்புகழ்' பாடி நின் தாட் கணிந்தேன் (5); நெஞ்சத்தால் நின் மலரடியே வணங்கினேன் (2). என்னை ஆட்கொள்ளாது என் நெஞ்சம் வாட விடுதல் நீதியில்லை. உன்னையே வாழ்த்தியும் வணங்கியும் திரியும் என்னைப் புன்னெறிக்கு ஏன் விடுத்தாய்?' 'என்னை வஞ்சம் செய்வதும் ஓரம் செய்வதும் நீதிகொல்?' (1, 6), 'உன்னைச் செந்தமிழால் புகழ்ந்ததற்குப் பயன் இது கொல்?' (10) என் றெல்லாம் தண்டபாணி சுவாமிகள் பாடுகிறார்.

தமக்கு அருளும் காட்சியும் தாராதிருக்கும் நிலைக்குத் தாம் வருந்துதலைக் கூறும் சுவாமிகள், 'முன்னர் தொழும் அடியார்க்கு அருள்தர இரங்கும் கடவுள் என்று உன்னைச் சொன்னதைப் பொய்யாக்கினாயே' என்கிறார்.

> ''பாதங் கருதித் தொழுவார்க் கிரங்கும் பரமகுரு
> நாதன்என்று உன்னை அறியார்தம் பாற்பொய் நவில
> வைத்தாய்'' (26)

தமக்கு இறைக் காட்சியும் இறையன்பும் வேண்டும் அடிகளார், அவை பெறாது போனால் உலகத்தார் என்னைப் பலவாறு ஏசுவர் என்றும் கூறுகிறார்.

> 'பித்தனென்று ஊரவர் ஏசுகின்றார்' (28)

'பேயன் என்றேச விடலாகுமோ' (49)

'அகந்தை உள்ளார்க்கு அஞ்கின்ற தறிந்தும் அருள் செய்
திலாய்' (10)

'வெஞ்சகத்தார் நிந்தை கேட்பதற்கு ஆளென விட்டு
விடேல்' (2).

என்னும் பாடலடிகள் காட்டத்தக்கன.

கடந்த காலத்தில் கொடியோர் மத்தியில் தாம் வாழ்ந்த வாழ்க்கைத் துயரையும், தம்மை ஆட்கொண்ட காமத்துயர் வாழ்க்கையையும், தம்மை ஆட்கொள்ளாமையால் இப்போதும் அத்துன்பத்தில் ஆழ்ந்து கிடப்பதையும் அடிகளார் குறிப்பிடு கின்றார்.

''கொடியோர்கள் வாழ்வது கண்டு எனதுள்ளம் கொதித்
தயரும்'' (6)

''தீராக் கயமை உடையோர்தம் முன்றிலில் சென்றலைந்து
பேராண்மை முற்றும் இழந்து இளைத்தேன்'' (13)

''மங்கையரை நந்தும் அவப்புலை யாட்டில் விடலாமோ''(91)

''மோகக் கடலில் குளிக்கின்ற என்னை முதிரருள்சீர்த்து
ஆகத்து அழுந்தவும் கண்டனையே'' (64)

''மீளாத் துயரக் கடலூடுழல விடுத்தனை'' (3)

இறையருளைப் பெறவேண்டித் தாம் அலைந்து திரிந்து அருந்துயரம் அடைந்த நிலையை அழகிய உவமையால் நயம்படக் கூறுதல் காட்டத்தக்கது. ஆனைமீது செல்லும் அரசனிடம் குள்ளன் ஒருவன் அண்ணாந்து பார்த்து சுண்ணாம்பு கேட்டது போல் தம் நிலை ஆனதாகக் கூறுகிறார். அவ்வுவமை அமைந்த பாடல் இங்குக் காட்டப்படுகின்றது.

''அண்ணாந்து ஒருகுள்ளன் ஆனையில் ஏகும் அரசனிடம்
சுண்ணாம்பு கேட்டுத் தவித்திடல் போல்உன் தொழும்பு
செய்து
தொண்ணாந்து அலைந்து துயரமுற்றேன் புலித்தோல் உடுத்
தோன்
கண்ணாம் பரமகுரு நாதனே அருட்காட்சி நல்கே'' (7).

முன்னர் முருகன் தமக்கு வரம் தருமாறான காட்சியும் வார்த்தையும் தந்து இப்போது அதனைத் தாராதிருக்கும் தன்மையைச் சுட்டிக் காட்டுகிறார் சுவாமிகள்.

'ஆதியில் நீசொல்ன சொற்களை நாடி அலமருவேன்' (84)

'தூய வெண்ணீற்றணி தோன்றவந்து என்னுடன் சொன்ன சொற்கள்
மாய வுலகில் நிசமாக வேண்டி வருந்தும் என்னை' (27)

'வரம்தந்த வண்ணம் பலியாது கண்டு வருத்தி விட்டாய்' (56)

என்றெல்லாம் வருந்துகிறார் ஆதலின் சமயங்கள் ஆறிலும் சார்ந்து நின்று உதவி செய்யும் குருநாதன் தன்னை வாடவிட்டு உறங்குதல் நன்றோ? (4) என்றும், 'என் வினை முழுதும் ஒழிக்கும் திறமை உனக்கிலையோ? (9) என்றும், அவன் அருளே கதி என்று எண்ணி அவன் தாள் சுமை வேண்டி இளைக்கும் (48) தம்மை அவன்தன் அடியாரோடு வாழ்வுற வைத்தல் வேண்டும் (60) என்றும் கேட்கிறார்.

முருகப் பெருமானின் திருப்புகழை ஆயிரமாயிரம் பாடல் களில் பாடும் தம்மை அருளால் ஆட்கொண்டு, மெய்ஞானம் ஈந்தருள்தல் வேண்டும் என்ற கருத்தையும் அடிகளார் தெரிவிக் கிறார். அவனையே குருநாதன் என்று ஓர்ந்து கருதும் தன்முன் வந்து ஆர்வம் நல்கத் தாமதம் ஏன்? என்னும் அடிகளார், தமரோடு வந்து தொழும் தம்மை, மயில் வாகனத்தில் மாதர் இருவர் தம்மொடு வந்து ஆண்டருள் (86, 98), ஆடாவது, மயிலாவது, யானையாவது ஏறிவந்து ஆள் (75) என்கிறார். 'இன்றே என்னை ஆண்டுகொண்டு உன் அருள் ஏற்றம் நல்கு' என்றும் வேண்டுகின்றார். இங்ஙனம் இறையருட் சித்தம் தமக்கு விரைந்து கிட்டுதல் வேண்டும் என்ற விருப்பினை அவர் வெளிப்படுத்துகின்றார்.

'முருகன் கதிர் வேலோடு வந்து தமக்கு அருளுதல் வேண்டும்' என்னும் அடிகளார், 'சித்தரும் மெச்சத்தகும் வாழ்வில் சேர்த் தருள்க' (76) என்கிறார். 'வேதம் நான்கும் தேடும் சேவடி தந்தருள்க' (15), 'புரந்தரன், வேதன் திருமால் ஒப்போரும் புகழும் நலம் நிரந்தரம் நல்குக' (17), 'சித்தியும் முத்தியும் ஈந்தருள்க (11) எனக் கேட்கிறார். இங்ஙனம் பாடும் இவ்வடி யாரின் பாடல்கள் இவருக்கு முன்னவர்களான மாணிக்கவாசகர்,

அருணகிரிநாதர் போன்றோர் பாடல்களை நினைவுபடுத்து வனவாக அமைதல் தெரியலாம்.

தண்டபாணி சுவாமிகள் பாடிய குருநாதன் அந்தாதி நூல் இலக்கியச் சிறப்புக்களோடும் இலங்குவது. எல்லாப் பாடல்களும் எதுகையோடு அமைந்த இசைக் கட்டுக்குள் அமைந்தவை. உவமை, உருவகம் என்பனவும் பாடல்களில் அமைந்து சிறப்புச் செய்கின்றன.

தாம் பாடிய பாடல்களை உவந்து பல்கோடி வார்த்தைகள் உரைத்த தம் கடவுளைத் தாம் இன்னும் பாடும் பாடல்களைப் புவி முழுவதும் போற்றுமாறு செய்தல் வேண்டும் என்கிறார் சுவாமிகள்;

'கந்தக் கடம்ப மலர்மாலை போல்என் கவியையும் கொண்டு
இந்தக் கடற்புவி முற்றும் புகழும் இயல்பளித்து ஆள்'' (83)

அடிகளார் வணங்கிப் போற்றிய முருகப்பெருமான் அவர்க்கு அருள் தந்து அவர் பாடிய அருட்பா மாலைகளை அவனியெங்கும் தெரிந்திடச் செய்திருக்கிறான் என்பது இப்போது உண்மையாகிறது.

# முருகதாசரின் முத்தமிழ்ப் பாமாலை

வே. இரா. மாதவன்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமிழ்த் தெய்வ மாகிய முருகன் புகழையும் அருளையும் எடுத்துக் கூறுவதில் இன்பம் கண்டவர். தம் இறை அனுபவத்தைப் பல பாடல்களில் பொதிந்து வைத்தவர். முதிர்ந்த முத்தமிழ்ப் புலமை பாலிக்க வேண்டும் என்று முருகப் பெருமானிடம் வேண்டிய இவர் முருகதாசர் என்றும் போற்றப் பெறுகிறார். தமிழ்க் கடவுளாகிய முருகன் அருளால் மூங்கைத் தன்மை நீங்கித் தமிழ்ப் பாக்கள் இயற்றத் தொடங்கிய குமரகுருபர சுவாமிகள் தாம் இயற்றிய மதுரைக் கலம்பகத்திலே தமிழ்மொழியின் இனிமை, செழுமை, பெருமை ஆகியனவற்றைச் சித்திரிக்கு மிடத்து, தண்டமிழ், தெய்வத்தமிழ், பைந்தமிழ், வண்டமிழ், தெளிதமிழ், புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழ் என்றெல்லாம் அழைத்ததுடன் 'மும்மைத் தமிழ்' என விளிப்பதிலே பெருமிதம் மிகக் கொள்வர். அத்தகைய மும்மைத் தமிழால் பாமாலைகள் பல சூட்டி மகிழ்ந்த தண்டபாணி சுவாமிகள் இயற்றிய முத்தமிழ்ப் பாமாலை நூல் பற்றி இவண் நோக்குவோம்.

எல்லாம் வல்ல பரம்பொருள் ஒன்று. அது ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலைச் செய்யும் பொருட்டு, பிரமன், திருமால், உருத்திரன் என்ற மூவுருவம் கொண்டது. இதை 'ஒருருவே மூவுருவம் ஆன நாளோ' என்பர் அப்பர் பெருமான். அதுபோல, தமிழ்மொழி ஒன்று. அது, இயல், இசை, நாடகம் என மூவகைப் பட்டிருக்கிறது. மும்மூர்த்திகளும் அவ்வவ் வகையில் தலைமை பெற்றிருப்பது போல, முத்தமிழும் தனித் தனி சிறப்புடையனவாம்.

இயற்றமிழ், சுவைமிக்க தேனை ஒத்த சுவையினது. எல்லோராலும் மிகுதியாக உண்ணமுடியாத கடுஞ்சுவை யுள்ளது. எளிதிற் கற்றுப் பொருளையும் அறிய முடியாததாகும். இதன் நிறம் கறுப்பு.

இசைத்தமிழ், இனிய சுவையுடைய அமுதத்தை ஒப்பது. நடுத்தரப் புலமையினரும் கற்றுப் பொருளறியும் இயல்பினது. நிறம் சிவப்பு.

நாடகத்தமிழ், வெண்ணிறமுடையதாய், பால் போல சிறு சுவையுள்ளதாய் எளியவரும் கற்றுணர வல்லதாய் அமைந்தது.

மேலும், உமையவள், திருமகள், கலைமகள் என்ற மூவருடன் ஒப்பிட்டு மேற்கண்ட தெய்வப் பண்பையும் அமைத்துப் பாடுகிறார் முருகதாசர்,

''வள்ளை யங்குழைப் பார்ப்பதி மலர்த்திரு மடந்தை
வெள்ளை வாணி, என் றுளஒரு மூவரில் விளங்கிக்
கள்ளை, வானகத் தமுதினைப், பாலினைக் கடுக்கும்
கொள்ளை முத்தமிழ், பிறப்பிடம் குலவுதென் பொதியை'
(புலவர் புராணம்: பொதியாசலப்படலம்.)

என்பது பாடல். இதில், நிறம், சுவையின்தரம், தெய்வப்பண்பு இம்மூன்றும் முத்தமிழின் சிறப்பைக் காட்டுகின்றன.

முத்தமிழ்ப் புலமை முருகதாசர் தாமியற்றிய வண்ணத் தியல்பு நூலின் பாயிரத்தில் ''முத்தமிழ்ப் புலவன் வண்ணத் தியல்பு'' என்றே கூறியுள்ளனர். இதற்கேற்ப, இயல், இசைக் குரிய பல நூல்கள் இயற்றியதுடன், நாடகத் தமிழ்க்கென ''முசுகுந்த நாடகம்'' என்ற நூலையும் கந்தபுராணத்தின் கந்தவிரதப் படலத்தின் துணைகொண்டு இயற்றியுள்ளார் இவர்.

சுவாமிகள் தமது உபாசனையின் முதிர்வினால் அறுவகைச் சமயங்களையும், அப்புறப்பட்ட சமயாதீதமாகப் பரம்பொருள் ஒன்று உண்டென்ற அநுபவம் பெற்றவர். அம்முறையில் அப்பரம்பொருளை முன்னிலைப்படுத்தி, தம் அநுபவங்களை, சமரச அநுபவத்தை, உலக நலம் செய்ய விரும்பும் தம் கருத்தினை விளக்கி முத்தமிழ்ப் பாமாலையாகத் தொடுத்து உள்ளார்கள்.

இந்நூலில், இயற்றமிழுக்காக ஆசிரியப்பா, இசைத் தமிழுக்காக விருத்தப்பா, நாடகத் தமிழுக்காக கீர்த்தனை என இவ்வாறு பத்தடுக்காக முப்பது பாடல்கள் அமைந்துள்ளன. முன்னாலுள்ள பாயிரப் பகுதியில் காப்பாக மூன்று பாடல்கள் உள்ளன.

அகண்டமான பரம்பொருளே, திருவருட்சந்தி, சற்குருநாதன் என விளங்கும். அத்தகைய பொதுக்கடவுளை முன்னிலையாக்கி இந்நூலைப் பாடுகின்றேன். இது இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் வரிசையில் அமைந்திருக்கிறது. இதை அகத்தியர் வகுத்தார். எனவே அவரே இதற்குக் காப்பு என்பர். 'முத்தமிழ்ப் பாமாலைக்குத் தென்றல் மணங்கவரும் சந்தனப் பூஞ்சோலைக் கிரியோன் துணை' என முதற்கண் துதிக் கின்றார்.

நூலின் தொடக்கப் பாடல், நிலைமண்டில ஆசிரியப்பாவில் அமைய, ஈற்றுப் பாடல் கீர்த்தனையாக முடிகின்றது. மேலும், 'பொதிய மால்வரை' என முதற்பாடல் தொடங்கி, 'புண்ணிய மேவடி வாகவிளங்கிய பொதிய மாமலையே' என இறுதிப் பாடல் முடிவதும் குறிப்பிடத்தக்கது.

'பொதிய மால்வரைப் புண்ணியம், புகழ்ச்சீர்
அதிக மாதவம், அன்ன முத்தமிழ்க்கு
மகுட மேநிர் வண்பெறு முப்பால்
தொகுதி யாவையும் தோய்வுறு சுவடி...'' (1)

என முதற் பாடலிலேயே முப்பாலாம் திருக்குறளின் பெருமையை எடுத்துரைக்கின்றார். அடுத்து,

''இன்னமுதம் அனையதமிழ்க் கிச்சையுள்ள
குருநாதன் எவன்ஆ னாலும்
என்னகத்தில் எண்ணியவா வடிவெடுத்து
வருவானேல், இகழ மாட்டேன்
அன்னவன்றன் புகழ்பாடச் சலிப்புறேன்
எனப்பகர்வேன் அவமாப் போனால்,
முன்னளவில் பெரியோர்வீட் டடைந்ததெல்லாம்
என்னளவில் முழுப்பொய் யாமே'' (2)

என வரும் விருத்தத்தில் தம் எண்ணங்களை வெளிப்படுத்து கிறார்.

இவ்வாறே, தெரியொணாத திருக்கூத்துக்காரனாக விளங்கும் பரம்பொருளைத் தம்முன்னே காட்சிதர வேண்டு கிறார் இவர்.

எடுப்பு

காரணப் பொருளே – எனக்கொரு
காட்சி தந்தருளே.

தொடுப்பு

வாரணக்கொடிக் கந்தனைப் போலென்னுள்
வந்து புகுந்தொரு வாறு விளங்கிய (காரணப்)

முடிப்பு

பன்னிரு பேதம் படும்சமை யங்களைப்
பற்றியும் பற்றாமல் நின்ற பரஞ்சுடர்
என்னிரு கண்ணின் மணிக்கொளி யாகும்என்
றெண்ணி யிருந்தும் இடைந்திடப் போகுமோ
(காரணப்)

சாக்கிரஞ் சொற்பனம் ஆதிய வத்தை
சகலமும் நின்னருட் சக்கரத் தாட்டென்று
கூக்குர லிட்டுக் கிடக்குஞ் சுருதிகள்
கோடானு கோடியும் கோதற்ற தாமாகிற் (காரணப்)

விண்முத லாகிய பூதங்கள் ஐந்துள்ளும்
வெய்யவன் சந்திர னாதிய வைக்குள்ளும்
கண்முத லான கருவிக ளுள்ளும்
கலந்து நடிக்கும் கடவுள்என் றோதிடும்
காரணப் பொருளே – எனக்கொரு
காட்சி தந்தருளே. (18)

என இதை எல்லோருக்கும் புரியும் வண்ணம் கீர்த்தனையாகப் பாடுகின்றார்.

'எல்லாவற்றிற்கும் மூலம் ஒன்றே என்பதில் இவர் உறுதியாக இருக்கின்றார். அம் மூலப்பொருளையே முன்னிற்க வேண்டுகிறார்.

''உய்வதே எண்ணி உருகிக் கதறியநான்
செய்வதே தென்னும் திகைப்புற்றேன் – சைவ
முதலா நெறிக்கெலாம் மூலமாம் ஒன்றே
நிதம்நா டியபடிமுன் னில்'' (10)

என்பது முருகதாசரின் விண்ணப்பம்.

இவ்வாறு வேண்டிய இவருக்குக் கனவில் வந்து தோன்றிய பரம்பொருள் வரலாறுகளையெல்லாமும் இந்நூலில் கூறுகிறார்.

"அறிவெ னச்சிலர் அதுவெ னச்சிலர்
பொறிஎ னச்சிலர் புலன்எ னச்சிலர்
அவன்எ னச்சிலர் அவள்எ னச்சிலர்
தவமெ னச்சிலர் தயைஎ னச்சிலர்
பகர்தர அனைத்துமா கியும்அல்ல தாகியும்
வினைத்து ணைப்பிணி வேரறுத் தருளப்
பரமே! திருவருட் பார்வைக்
குரவா என்னைக் கூவியாண் டருளே." (16)

என்னும் குறளடி வஞ்சிப்பாவிலே அவர்தம் எண்ணக் குவியல்களை அப்படியே கொட்டுகின்றார். 'ஒன்றே தெய்வம்' என்ற அருமறையை வலியுறுத்த மேலும் ஒரு கருவியாக இந்த முத்தமிழ்ப் பாமாலையைக் கைக்கொள்கிறார்.

மெய்த்தெய்வம் ஒன்று என்ற இறைஞானத் தத்துவத்தினை மிக எளிமையாகப் பாமரத்தமிழிலே வழங்கவே இப் பாமாலையை சுவாமிகள் பாடியுள்ளார்.

'நீதரும் முத்தமிழ் பாடிய தாற்பலர் நித்திய வீட்டினில் நிலைத்தனர் என்றுணர்ந்து ஆதரவாற்றுதி செய்தேன்' (30) எனத் தாம் முத்தமிழ்ப் பாமாலை பாடிய விதத்தையும் இவர் கூறி முடிக்கின்றார்.

"முப்பதெனப் பாடிவைத்த முத்தமிழ்ப்பா மாலைதனைச்
செப்பவல்லார்க் கெய்துவது சித்தியெட்டும் – அப்படியே
வேணமட்டும் பாடும் விதிகாரர்க் கெய்துவது
காணரிய ஞானக் கதி."

என இவரே இந்நூற்பயன் கூறுகிறார். இவ்வகையில் இம் முத்தமிழ்ப் பாமாலையிலுள்ள முப்பது பாடல்களையும் கருத்தூன்றிக் கற்பவர்கள் முருகதாசரின் இறையநுபவம், தமிழுணர்வு, சமரசப் பாங்கு ஆகியவற்றை முழுமையாக உய்த்துணரலாம்.

# வருக்கக் குறளில் வாழ்வியல் அறங்கள்

சு. மாதவன்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், வடலூர் வள்ளலாரின் சமகாலத்தவர் (1839-1898). பத்தொன்பதாம் நூற்றாண்டில் உலகெங்கும் துளிர்விட்டு மறுமலர்ச்சியுடன்வளரத் துவங்கிய சமூக மாற்றத்திற்கான சிந்தனை வரலாற்றில் வள்ளலாருக்குக் குறிப்பிடத்தக்க இடம் உண்டு. அவருக்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணத்தக்கவாறு சமூகச் சிந்தனையுடன் தொண்டாற்றியவருள் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் ஒருவர். இவர் தமிழிலக்கிய இலக்கண வரலாற்றில் கருதத்தக்க அளவிலான பல நூல்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய 'வருக்கக் குறள்' என்னும் நூல், திருக்குறளைப் போல் குறள் வெண்பா யாப்பில் அமைந்துள்ளதோடன்றி, அகர முதல் னகர இறுவாய் உள்ள உயிர், மெய், உயிர்மெய் என்னும் வர்க்க எழுத்துக்கள் 247 ஐயும் முதல் மற்றும் இடை எழுத்துக்களாகக் கொண்டும், இவக்கிருந்த ஆன்மீகச் சிந்தனைகளோடு வாழ்வியல் சிந்தனைகளை ஒருங்கிணைத்தும் எழுதப்பட்டுள்ளது. இந்நூலில் வலியுறுத்தப்படும் வாழ்வியல் அறங்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## வாழ்வியல் அறங்கள்

ஒரு மானுடன் சமூகத்தோடு கலந்து வாழ்வதற்குத் தேவையான ஒழுகலாறுகளை பல்வேறு மாறுதல்களோடு தொடர்ச்சியாக இச்சமூகம் உருவாக்கி வருகிறது. அந்தந்த சமூக அமைப்பின் நிலைப்புத் தன்மையையும் இயக்கத் தன்மையையும் உள்ளடக்கி மக்களின் ஒழுகலாறுகளைக் கட்டமைக்கும்; மாறும் இயல்பினதான வரையறைகளை அறங்கள் எனலாம். இவை தனிமனிதனின் வாழ்க்கை நடவடிக்கைகளை ஒழுங்கமைக்க முயலுகின்றன. மக்களின் வாழ்க்கைப் போக்கும், வாழ்க்கைத் தரமும் (கலைக்களஞ்சியம், பக். 491- 92) ஒரு நிர்ணயிக்கப்பட்ட தளத்தில் இயங்குகின்றன. இத்தளமானது மக்களின் மதிப்புகளால்

விளைந்த ஒழுகலாறுகளை மையப்படுத்தி உருவாக்கப்படுகின்றது. ''தனிமனிதனுடைய உரிமைகளும், கடமைகளும், சமூக இணைப்பும், பழக்க வழக்கங்களும், விருப்பு, வெறுப்பு என்னும் இயல்புகளுமாகிய அனைத்தும் அறத்தின் கோட்பாட்டினால் கட்டுபடுத்தப்பட்டுள்ளன'' (திருக்குறள் நீதி இலக்கியம், ப. 49). இவ்வாறு வரையறுக்கப்பட்ட ஒழுகலாறுகளைக் கொண்டு வாழ்வியலைத் தகவமைத்துத் தருவனவற்றையே வாழ்வியல் அறங்கள் என்கிறோம்.

### வருக்கக்குறள்: நோக்குநிலை

இந்நூலின் ஆசிரியர் கடவுட் கொள்கையின்பால் அளவற்ற ஈடுபாடு கொண்டவராதலின் நூலில் ஆங்காங்கே இறைவனையும் விதிக்கோட்பாட்டையும் முன்னிலைப்படுத்தி அறம் உரைத்துள்ளமை புலனாகிறது. எனினும், இக்கட்டுரை இறைவன் குறித்து ஆராயப் புகவில்லை. மாறாக, இந்நூல் ஆன்மீகம் தழுவிய வாழ்வியல் அறங்களை எவ்வாறு வலியுறுத்துகிறது என்பதையே ஆராய்கிறது

'வருக்கக்குறள்' கூறும் வாழ்வியல் அறங்களைக் கீழ்க்கண்ட மூன்று தலைப்புகளில் இக்கட்டுரை ஆராய்கிறது:

1. மெய்ப்பொருள் காணல்
2. பெண்ணிச்சைக் கட்டுப்பாடு
3. கொல்லாமை
4. ஈகை

### 1. மெய்ப்பொருள் காணல்

உரைபொருள், உறைபொருள் எதுவாயினும் அவற்றினிடையே ஊடாடும் உண்மைநிலையைப் பகுத்தாய்ந்து அறிவதையே 'மெய்பொருள் காணல்' என்கிறோம். இதைத் திருவள்ளுவர்,

'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு'' (குறள். 43. 3)

என்றும்,

''எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்பொருள் காண்பது அறிவு'' (குறள். 36. 5)

என்றும் நுட்பமாக விளக்கியுள்ளமை இங்கு நோக்கத்தக்கது. இந்நூலில் வண்ணச்சரபத்தாரும் இதை அழுத்தமாக வலியுறுத்தியுள்ளார்.

எவனொருவன் எதைப்பற்றியும் ஐயமற ஆராயப்பட்ட தெளிந்த சிந்தையோடு உள்ளானோ - அவனது வாழ்க்கை ஒப்புயர்வற்றதாக விளங்கும் என்பது கண்கூடு. தெளிந்த சிந்தனையானது மெய்ப்பொருள் காணலின் பல்வேறு மட்டங்களுக்கேற்ப உருவாகிறது. மெய்ப்பொருள் காணலின் மட்டம் மேனிலை பெறப்பெற வாழ்வியல் மட்டமும் மேனிலை பெறும் எனவே இதிலிருந்து வாழ்வியலில் உயர்நிலை பெற முதன்மையானதும், முக்கியமானதும் மெய்ப்பொருள் காணலே என்பது பெறப்படும்

"நுவ்வனையர் தம்மை நுவலின் நுடங்குமின்னற்
பௌவ மதிற்றாழ் பவர்" (வ.கு.48)

என்ற வருக்கக்குறள், இரண்டுபட்ட கருத்துடையவர் பெருந் துக்கத்தில் ஆழ்வார் என்கிறது. இரண்டுபட்ட கருத்துடையவர் மெய்ப்பொருளை அறியமாட்டார். மெய்ப்பொருளை அறியாதவரிடம் சிந்தைத் தெளிவும், நன்னடத்தை ஒழுக்கமும் இராது என்பதைத் தெளிவுறுத்துகிறது.

மெய்ப்பொருள் காணல் என்பது காண்பான், காட்சி, காணப்படும் பொருள் (ஞாதுரு, ஞானம், நேயம்) என்னும் மூன்றினது தொடர்பை ஆராய்ந்து அறிவதே என வருக்கக்குறள் வரையறுக்கிறது (ப.29) இக்கட்டுரையில் இவ்வாறு பக்கம் மட்டும் குறிக்கப்பட்டுள்ளவை வருக்கக்குறள் உரையைக் குறிக்கின்றன. மேற்கண்ட மூன்றினது தோற்றம், இயல்பு, செயல்பாடு, விளைவு ஆகியவற்றை ஆராய்ந்த பின்னரே இறுதிக்கருத்து நிலைபெறும். எனவே, மெய்ப்பொருள் காண இவற்றின் உண்மை இலக்கணங்களை அறிவது இன்றியமையாத தாகிறது என்று வருக்கக்குறள் வலியுறுத்துகிறது. இதை,

"ஞேயமே யீறா நிகழ்த்துமொரு மூன்றினுண்மை
ஆயவல்லார் ஞானம் அழகு" (வ.கு. 75)

என்ற செய்யுள் தெளிவுபடுத்துகிறது.

**வாய்மை**

''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்'' (குறள்.30:1)

என்பது வள்ளுவம். பாரதியார், ''ஸத்யத்தாலாகும் ஒரு பயன் நித்யம். மற்றொன்று முக்தி. இவ்விரண்டு பலன்களும் அதைக் கைப்பற்றும் யாருக்கும் சித்திக்கும்'' (பாரதி மணிவாசகம், ப.19) என்கிறார். எனவே மெய்ப்பொருள் காணும் முயற்சியை வாய்மையின்வழி நின்று செய்வதே நலம் பயக்கும். இவ்வாறு சத்தியம், தவம், புண்ணியம் ஆகியவற்றின்படி நில்லாதார் மெய்ப்பொருள் காணாது அறியாமையில் சிக்கிக் கொள்வர் என்று,

''தெளவைக் கினியோர் சரதந் தவம் தருமம்
கெளவையென நீத்தார் களே'' (வ.கு. 115)

என்ற வருக்கக்குறள் எச்சரிக்கிறது. சத்தியம், தவம், புண்ணியம் ஆகிய நெறிகள் உலக இயல்பு, வைதீக இயல்பு இரண்டினுள்ளும் அடங்கியுள்ளன. இவற்றைக் கடைப்பிடித்து வாழ்வதே எக்காலத்துக்கும் வலிமை தருவதாய் அமையும் என்பதை,

''இலெளகீக வைதீகத் தெந்நிலைக்கும் என்றும்
உலவாத மெய்யே உரம்'' (வ.கு.187)

என்ற செய்யுள் எடுத்துரைக்கிறது.

**தன்னம்பிக்கை, தன்முயற்சி**

மெய்ப்பொருளை வாய்மையின் வழிநின்று அறிந்து கொண்டவர் அதன்படி நின்று ஒழுகத் தளர்வுறா மனவுறுதி பெறுவது அவசியமாகும். இம்மன உறுதியைத் தன்னம்பிக்கையும் தன்முயற்சியுமே பெற்றுத் தரும் என்ற செய்தி வருக்கக்குறள்-களுக்கிடையே இழையோட்டமாக அமைந்து நிற்கிறது.

''இட்டபடி வருமென் றேமாந்து நாட்கழிக்கப்
பட்டவர்க ளெல்லாம் பதர்'' (வ.கு.18)

என்ற வருக்கக்குறள் தலைவிதித் தத்துவத்தைத் தகர்த் தெறிந்து, தன்முனைப்பு, தன்னம்பிக்கை, தன்முயற்சி ஆகியவற்றின் தேவையை முன்னிறுத்துகிறது. இங்கு,

"தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்" (குறள்.62:9)

என்ற திருக்குறள் ஒப்புநோக்குதற்குரியதாய் உள்ளது.

## 2. பெண்ணிச்சைக் கட்டுப்பாடு

பெண்ணிச்சைச் கட்டுப்பாடு, சமூக வாழ்க்கையில்; தாம்பத்ய உறவு முறைகளில் குளறுபடிகள் ஏற்படாமலிருக்கச் செய்வதற் கான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது இல்வாழ்க்கையின் இன்னலில் மட்டுமன்றி, இகவாழ்க்கையினின்றே விடுபட்டு ஆன்மீக மெய்ஞ்ஞான வாழ்க்கை (துறவறம்) வாழ இவ் அறஒழுகலாறு அவசியமானது என்ற நோக்கில் வருக்கக்குறள் இவ்வறத்தை அணுகுகிறது.

### துறவறத்தின் மேன்மை

கள்ளானது போதை தந்து சிந்தனைப் பாதையைச் சிதறடிப்பதுபோல் பெண்ணாசைப் போதையும் வாழ்க்கையைச் சிதறடிக்கிறது என்னும் பொருளில்,

"இள்ளதற்கு முற்ககரம் இட்டதின்ன இன்சொல்லார்த்
தள்ளலரி தாய தவம்" (வ. கு. 29)

என்றும், ஞானிகள் பெண்களின் சொற்களைக் கேட்பதைக் கூட வெறுப்பர் (வ. கு. 60) என்றும் குறிப்பிடுவன கவனத்திற் குரியவை. இவ்வாறு பெண்களின்பால் எந்தவொரு ஈடுபாடும் கொள்ளாமல் இருப்பதன் மூலம் ஞானிகள் தங்களின் சிந்தையை உயர்ந்த இலட்சியங்களை நோக்கிச் செலுத்துவதும், மக்களின் வாழ்வியல் மாற்றங்களுக்கான சிந்தனைகளை வழங்குவதுமான உன்னத வாழ்க்கையை மேற்கொள்கின்றனர் என்பது வருக்கக் குறளின் உட்கிடக்கை.

### இல்லறத்தின் மேன்மை

பெண்ணிச்சையின் பொருட்டுத் தங்களைக் கெடுத்துக் கொண்டோரால் எவருக்கும் உதவிகரமானவர்களாக வாழ இயலாது. கெட்டவர்கள்பால் கொள்ளும் நட்பை எவரும் விரும்பார். எனவே, அவர்கள் பகைவர்களைப் போலவே அணுகப்படுவர் என்பதை,

"உடுக்கை நிகரிடையார் ஒண்முலைமால் விஞ்சிக்
கெடுக்கையுற் றார்க்கில்லை கிளை" (வ. கு. 84)

என்ற செய்யுள் தெளிவுபடுத்துகிறது. மங்கையர்பால் மோகத்தை உண்டாக்கும் கண்களாகிய வேலாயுதங்களை 'வேற்படை' என்று கூறுவதன்மூலம் அழிவு தரக் கூடியது என்பதை,

"இடையுண் டிலையெனும்சிற் றேந்திழையார் கண்வேற்
படைவென் றோர்க்கில்லை பழி." (வ. கு. 88)

என்ற செய்யுள் உணர்த்தி நிற்கிறது.

தவ வாழ்க்கையிலும், இல்வாழ்க்கையிலும் பெண்ணிச்சைக் கட்டுப்பாடு என்னும் நன்னெறி நின்று அனைவரும் விரும்பும் படியும், பழியற்ற வாழ்வு வாழும் வகையிலும் தங்களை அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கம் கொண்டதாக இந்நூல் விளங்குகிறது.

### 3. கொல்லாமை

உயிரிரக்கக் கோட்பாடு, ஆன்மநேயத்தை அடித்தளமாகக் கொண்டு வள்ளலாரின் சன்மார்க்க நெறியிலிருந்து வளம் பெற லாயிற்று. அவர், "ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை எல்லோரிடமும் விளங்க வேண்டும். ஆன்மநேய ஒருமை வளரு மானால் பேதங்கள் மறையும். அன்பு வளரும், ஈகை சிந்தை பெருகும். இரக்கம் உண்டாகும்" (பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமூகச் சீர்திருத்தங்களில் வள்ளலாரின் பங்கு-ஓர் ஆய்வு, ப. 82) என்று ஆன்மநேயத்தில் வளர்ச்சி நிலைகளைக் குறிப்பிடுகிறார். வள்ளலாரின் சமகாலத்தவரும், இதே ஜீவகாருண்யக் கோட் பாட்டில் அழுத்தம் கொண்டவருமான தண்டபாணி சுவாமிகளும் இத்தகைய சிந்தனையை 'வருக்கக்குறள்' என்னும் தனது நூலில் விரிவாக எடுத்துரைத்துள்ளார்.

#### அருள் உள்ளம்

உயிரிரக்கம், ஒருவனுக்கு கைவரவேண்டின் அவன் அருள் உள்ளம் நிறைந்தவனாக இருத்தல் வேண்டும். எனவேதான், இந்நூலின் முதற்குறளே அருள் உள்ளத்தின் முக்கியத்துவத்தை உணர்த்துவதாய் அமைந்துள்ளது. சீவகாருண்யமாகிய அருள் வழியில் நடப்பவர்கள் இருள்வழியில் நடப்பவர்களுக்குப் பகைவராவர் என்பதை,

''அருள்வழியிற் சோர்வடையா ஆர்வமுளார் எல்லாம்
இருள்வழியிற் சேர்வார்க் கிகல்'' (வ. கு. 1)

என்ற செய்யுள் விளக்கி நிற்கிறது. இதையே வள்ளலார், ''ஜீவகாருண்யமே சன்மார்க்கம், அல்லாத வழி துன்மார்க்கம்'' (மேலது, ப. 79) என்று மென்மையாகக் கூறுகிறார். சுவாமிகளும் இதை,

''இவ்வகிலம் நிற்குநிலை யீதென் றுணராதார்
செவ்வருட்பே றெய்தார் திறம்'' (வ.கு.27)

என்று குறிப்பிடுகிறார். அருள் உள்ளம் கொண்ட இந்நெறியில் நின்றால் உயிர்வதை உட்பட எந்தத் தீயநெறியும் இன்றி உலகம் அமைதியான வாழ்வில் திளைக்கும் என்பது வெளிப்படை.

### வேள்வி எதிர்ப்பு

உயிர்வதையை; ஆன்மச் சிதைவை; அறிவின் அழிவைச் சகிக்காத பலரால் வேள்வி எதிர்ப்புச் சிந்தனை வளர்ந்தது. இச்சிந்தனை இந்நூலிலும் காணப்படுகிறது. இதை,

''சேணாட் டரம்பையர்க்காத் தின்னாத தின்னுமவர்
காணார்க ளுண்மைக் கதை'' (வ.கு.63)

என்ற செய்யுளில் தேவலோக போகத்திற்காக வேள்வி செய்து தின்பது உண்மை அறியாதவர்கள் செயல் என்று வலிவோடு கூறப்பட்டுள்ளது. மேலும்,

''யாகக் கொலைபழியன் றென்றிச்செப்பார் யாரெனினும்
ஏகத் துவமுணரா ரே'' (வ.கு.153)

என்ற செய்யுள் வேள்வி செய்தலை வன்மையாக எதிர்க்கிறது. வேள்வியாளர்கள் விரும்பும் சிவபர ஐக்கியத்தைப் பெறுவதற்கு இஃது வழியன்று என்பதனால் யாகத்தின் நோக்கம் அறிவார்ந்தது அன்று என்பதும் பெறப்படுகிறது.

### புலால் உண்ணாமை

அருள் உள்ளம் கொண்டு கொல்லாமை அறத்தை மேற் கொண்டொழுகுபவரில் பெரும்பான்மையோர் புலால் உண்ணாமை அறத்தையும் போற்றுபவராய் இருப்பர். பிற

உயிரியைக் கொன்று புலால் உண்ணுவதால் பாவம் தன்னைச் சேர்வதாக இவர்கள் எண்ணுகின்றனர் வண்ணச்சரபத்தாரும்,

''ஊனருந்தல் தீதென்(று) உறுத்தாதார் உற்றணையை
ஞானமுற்றும் தேரில் நகை'' (வ.கு.6)

என்று பாடியுள்ளார். ''புலால் உண்ணுதலால் உண்டாகும் கொடுமையை உலகத்துக்கு நன்கு அறிவித்து நீக்கமாட்டாதவர்களுடைய ஞானம் பழியை உண்டாக்கும்'' (ப.3). எனவே இத்தகையவர்கள் ஞானம் உடையவர் எனினும் ஞானமில்லாரோடொக்கும் என்கிறார். இவர்களின் அழிவை விரும்புவோர் யாவரும் என் உறவினர் என்பதை,

''புற்கறிப்பால் நீடும் புலாலும் புசிக்கும் அவர்
அற்கை விழைவாரெம் மவர்'' (வ. கு, 131)

என்று செய்யுள் அறிவிக்கிறது. வள்ளுவரும்,

''தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்'' (குறள். 26:1)

என்று வினவியுள்ளது எண்ணத்தக்கது.

உயிரிரக்கச் சிந்தை உள்ளவர் எவரும் பிற உயிரைக் கொன்று புலால் உண்ணமாட்டார்கள் என்று பொதுவாக கருதப்படுகிறது. ஆனால் உலக – உயிரியல் வாழ்க்கையில் இயல்பானது ஒரு உயிரியை மற்றொரு உயிரி உண்டு வாழ்வதாகவே உள்ளது. மனித வாழ்க்கையிலும் இது தவிர்க்க இயலாததாய் உள்ளது. எனினும், கொல்லாமைக் கோட்பாட்டின் உயிர்நாடியான ஜீவகாருண்ய உணர்வு அனைவர்க்கும் தேவையானதே.

இந்நூல் சமய–ஆன்மீகம் தழுவிய வாழ்வியல் அறங்களை எடுத்துரைக்கின்றது. இறைவன் பெயர் எதுவும் குறிப்பிடப் படாமல் சமயச் சார்பற்று, ஜீவகாருண்யச் சிந்தனையை மனிதனிடம் உருவாக்கவும், நடைமுறைப்படுத்தவும் தேவையான அடிப்படை அறங்களை வலியுறுத்துகிறது.

தெளிந்த சிந்தையை உருவாக்கும் மெய்ப்பொருள் காணல், உயிரிரக்க உணர்வை ஏற்படுத்தும் கொல்லாமை, இல்லற–துறவற

வாழ்க்கையைச் செம்மைப் படுத்தும் பெண்ணிச்சைக் கட்டுப் பாடு, அறிவு, செல்வம் ஆகியவற்றைப் பகிர்ந்து வாழும் ஈகைக் குணம் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளது. மெய்ப்பொருள் காணலில் முழுமை பெற்றால் பிற அனைத்து அறங்களும் கைவரப்பெறும் என்பது இந்நூலின் திட்பமான கருத்து.

ஈகையை வலியுறுத்த பிறவிக்கோட்பாட்டை இந்நூல் முன்னிறுத்துகிறது. இதில் குறிக்கப்பெறும் வினைக்கோட் பாட்டின்படி வறியவராய் உள்ளோர் அனைவரும் முற்பிறப்பில் தீவினை புரிந்தவர் என்னும் கருத்து ஏற்புடையதாகாது. செல்வர்கள் மனமுவந்து ஈதல் செய்ய வேண்டும் என்று கேட்ப தாலோ அவர்கள் கொடுப்பதாலோ மட்டுமே சமுதாயம் முழுமையும் பயன்பெற்றுவிடாது. இவ்வாறு ஒருசில அடிப்படைக் கருத்து வேறுபாடுகளுக்கு இடமிருப்பினும் இந்நூல் சமூக சீர்திருத்தத்தின் பாற்பட்டதாய் உள்ளது என்பது கண்கூடு.

# சுவாமிகளின் எழுகூற்றிருக்கைகள்

பா. மீனாகுமாரி

தண்டபாணி சுவாமிகள் மொத்தம் 12 கூற்றிருக்கைகளைப் பாடியுள்ளார். இவற்றுள் எட்டு கவிகள் எழுகூற்றிருக்கைகள் ஆகும். இவருக்கு முன்பும் பின்பும் அதுபோன்ற அமைப்பில் எவரும் கூற்றிருக்கைகளை அமைக்கவில்லை. கூற்றிருக்கையின் பாடல் ஆசிரியப்பாவில் அமைவது மரபு. கூற்றிருக்கைகளில் "பொதுக் கடவுள் தசாங்கக் கூற்றிருக்கை அதி அடிகள் (96 அடிகள்) கொண்டது. குறைந்த அடிகள் கொண்டது திருவரங்கத் திரு எழுகூற்றிருக்கை (22 அடிகள்) ஆகும்.

**பராசக்தி எழுகூற்றிருக்கை**

பராசக்தியைக் கூறும்போது எல்லா உயிரிகளையும் தோற்று விக்கும் தாயாய், சிவத்துடன் வேறுபட்டவளாயும் ஒன்றி இருவகையாயும் இருப்பவள். இச்சா, கிரியா, ஞானசக்தி என்பதாக மூன்று திருவுடையவளாயும் சக்தி, சிவம் வேறு வேறன்று ஒன்றே என்பவருக்கு இம்மைக்கும், மறுமைக்கும் எல்லாப் பொருளுமாகியும் சங்கராச்சாரியாருக்கு கல்வி ஞானம், அனுபவ ஞானம் இரண்டையும் கருணையால் உதவியும் அகச் சமயம் ஆறும், பிறச்சமயம் ஆறும் ஆகப் பன்னிரண்டு சமயங்களை யும் அந்தந்த நிலைகேற்பப் பேணியும் கணபதியையும், முருகனை யும் மக்களாகப் பெற்றும் போரில் அஞ்சாத நால்வகைப் படை கொண்ட கொடிய அசுரர்களது மனைவிமார்கள் நரி கூட்டம் போல யாவரும் கூடி அழுமாறு செய்யும்படி இரண்டு வேளையும் தவம் இயற்றும் உலகநலம் பேணுவோர் சகலம், கேவலம், சுத்தம் என்ற மூன்று நிலைகளில் நான்கு வகைப்பட்ட அங்க இலக்கணமுடைய மகளிர் இனத்தை அழகிய வேல் போன்று கூர்மையான அம்பிகையின் இனமாக பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்றுள்ள மகளிரின் பருவம் ஏழும் தன்னுடையதாகவே காட்டியும்

தன்னைப் பாடித் துதித்த கவிராச பண்டிதருக்கு அவர் காசிக்குப் போய்த் திரும்பும் வரையும் ஆறு மாதகாலம் மகளுருக் கொண்டு சோறு சமைத்து உண்பித்து, அவர் பின்னே பெண் யானை போல நடந்தும் அடியேன் எண்ணியுள்ளவாறு செயல்புரியும்படி தான் செய்ய இருப்பதான உண்மையை நான் அறியுமாறு விளக்கியவளும் என்று பராசக்தியைப் புகழ்ந்து அவள் உயிர்களைக் காத்து அருள் பாலித்த திறமும் காட்டித் தன் கனவில் வந்ததாகக் கூறுகிறார்.

### திருமால் எழுகூற்றிருக்கைகள்

### திருமால் எழுகூற்றிருக்கை

திருமால் காலை, உச்சி, மாலை என்ற மூன்று வேளையும் நிகழ்காலம் வருங்காலமும் அறியக் கூடிய வகையில் இலக்குமி தேவியுடன் யோக நித்திரையில் இருக்கிறார். ஆணவத்தில் நிகரற்ற இரணியன் மண், விண், பாதலம் என்ற மூவுலகினுக்கும் நானே தலைவன் என்பதாகக் கூறி ஆட்சி செய்த போது உன்னையே தியானித்த பிரகலாத பாலகன் பேரின்பக் கடலில் மூழ்கும்படி இரணியனது அரண்மனைத் தூண் ஒன்றிலிருந்து வீரமுழக்கத்துடன் நரசிங்க வடிவில் தோன்றி தன் தோள்களில் அவன் உடல் தொங்கும்படி எடுத்து மாலை நேரத்தில் இரு கூறாகும்படி கொன்றாய். ஒரு பக்கமான துரியோதனனது சபையில் அழுகையுடன் கோவிந்தா என்ற திரௌபதியின் மனம் அமைதியுறும்படி ஐந்து நிறமுடைய ஆடைகளை நல்கினாய். கஜேந்திரன் என்ற யானை ஒரு குளத்தில் 'ஆதிமூலமே' எனக் கதறியதும் உடனே ஓடி வந்து முதலையைக் கொன்று கஜேந்திரனுக்கு அருளினாய். நால்வகைக் கவிப்புலமை மிக்க திருமங்கை ஆழ்வாரை வீடுபேறு செய்தருளினாய் என்பதை,

> "ஆறலைத் துவக்கும் அஞ்ச மேனி
> நாற்கவி நம்பியை முத்தியிற் சேர்த்தனை"

என்கிறார். பூதகியான பேயை உயிருண்டதையும், பாரதப் போரில் அர்ச்சுனனுக்காகத் தேர்ப்பாகனாகிச் செலுத்தினாய் என்றும் சாற்றுவதோடு உம்மை நம்பாத நாத்திகரும் கூட உண்மை யறியும் படி திருவருள் செய்வீரானால் குதிரை முகங் கொண்டு எழுந்தருளப் போகும் எதிர் காலத்தில் உமக்கு அதிக மான வேலையில்லாதபடி அருளாமல் செய்தற்காக முன்னேற்

பாடாகப் பல தீய செய்கைகளைச் செய்து வைப்பேன் என்பதை,

"ஒருமையின் வலியோர் உளந்தொறும் அமர்ந்தனை
என்னை நீயன்று இனிதாண் டருளியது
உன்னைநம் பாரும் உணர்தரப் புரியின்
மாமுகங் கொடுநீ வருறோள் வருந்தாது
ஆடற்கு ஏற்கும் அசைசெய் குவனே".

என்கிறார்.

**திருவரங்கத் திரு எழுகூற்றிருக்கை**

ஒரே கடவுளாக இருப்பினும் சிவன், திருமால் என்று வேறுபட்டு நிற்பதையும் முத்தியில் உயிரும் இறையும் ஒன்றென்றும் இரண்டும் வெவ்வேறு என்றும் கூற இயலாதபடி ஒன்றே என்ற தத்துவத்தை நிறுவியும் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பயன் தருபவனும் என்பதை,

"ஒருமை கண்(டு) இருமையின் மூவா நாற்பயன்
முத்தமிழ் இருங்கட லோ(டு) ஒருங்குதவலும்"

என்றும் கூறுகிறார்.

இராவணன் இருபிளவாகி இறங்கும்படி ஒப்பற்ற அம்பு ஒன்றை ஏவிய வீரனும், நீலாதேவியைக் கைக் கொண்டவனும், கஜேந்திரனை முதலை வாயிலிருந்து காத்தவனும் வேத ஒலி மிக்கதும் இரத்தினங்களாலான சுற்றுச் சுவர்களினைக் கொண்ட திருவரங்கக் கோயிலின் நடுவில் கொடிய பற்களையுடைய அகன்ற ஆயிரம் வாயுடைய ஆதிசேட பாம்பணையின் மீது யோக நித்திரை செய்பவனுமான திருமாலே! திருவரங்கப் பெருமானே! எனப் போற்றுகிறார்.

**திருவல்லிக்கேணி திரு எழுகூற்றிருக்கை**

கைச் சண்டு விரலில் கோவர்த்தனகிரியைத் தூக்கிப் பசுக் கூட்டத்தைக் காத்தருளினாய். கம்சனது ஆணைக்கு அஞ்சு தேவகியின் மகனாகப் பிறந்து யசோதையின் மகனாய் வளர்ந்தாய். உறியில் வைக்கப்பட்ட தயிரைத் திருடி உண்டாய். இரண்டு திருப்பாதங்களால் சகடாசுரனை வதைத்தாய். ஆறுவகைச் சமயங்களான சௌரம், சைவம், சாத்தம்,

வைணவம், காணாபத்தியம், கௌமாரம் என்ற ஆறு சமயங்களில் பொருத்தப் பெற்ற கடவுளர் யாவரும் என்னைத் தவிர வேறாக இல்லை என அருச்சனனுக்குக் கீதை மூலமாக அறிவுறுத்தினாய். ஆயிரம் புலங்களையுடைய வாணாசுரனைக் கொன்றருளினாய். மலரம் புகளையுடைய மன்மதனை மகனாகப் பெற்றாய். கண்ணபிரான் என்றத் திருப்பெயர் குற்ற மற்றதனால் எமது வருத்தமான நிலையை அறிந்து இருப்பாய் ஆதலால் துன்பம் தீரும்படி நன்மை என்பன யாவையும் பெறத் தந்தருள வேண்டும் எனப் பார்த்தசாரதி பெருமாளைப் புகழ்ந்துரைக்கிறார்.

**யானை முகன் எழுகூற்றிருக்கை**

பிரணவம் என்ற எழுத்தின் உருவமும் பொருளாய் இருந்தாய். திரிபுரத்து அசுரர் மீது சினம் எய்தி செலுத்திய தேரினது ஒரு அச்சினை இம்மென்ற ஒலி எழும்பும் படி ஒலியும் படி செய்தாய்; பாடல் ஒன்றினைப் பாதிபாதியாகப் பாடுபவரான இரட்டைப் புலவர்கட்கு அருள் புரிந்தாய்; கரியமலை போன்ற கயமுகத் தசுரனை மூன்று உலகமும் அறியும்படி அழிவு செய்தாய்; நெருப்பு மலை போன்ற அனலாசுரனை உண்டருளினாய்; எவரும் போற்றும் பொதுக்கடவுளாக மனித வடிவும் விலங்கு வடிவுமான திருவுருவுடையனாய்; இரண்டு தடவை அறயேனுக்கு அருளுரைக் கூறினாய். ஒரு தடவை பகைமையுடையோர் போலத் தோன்றி, உரிமைப் பாராட்டினால் எனக்குத் திருவருளைக் கொடுத்து மறுபடியும் பிறவாதவாறு வீடுபேற்றில் சேரும்படி இப்போதே திருவுள்ளத்தில் எண்ணுவாயாக என்று கூறுகிறார்.

**முருகவேள் எழுகூற்றிருக்கை**

வேற்படையைக் கையிற் கொண்டவன் வள்ளி, தெய்வயானை என்ற இருசக்திகளைக் கொண்டவன். மயிலை வாகனமாகக் கொண்டவன். வணிக மாதான முருகம்மை கணவனால் தாக்கப்பட்டு வருந்தியபோது வெட்டப்பட்ட கையினை மீண்டும் விளங்குமாறு தந்தருளியவன். நக்கீரர் பாடிய ஆறு தலங்களின் திருமுருகாற்றுப்படையை ஏற்றருளியவன். எழுவகைப் பிறப்பிலும் அடியேன் ஆறு வயதளவிலேயே ஆட்கொண்டருளிய பெருமான் வள்ளி கைகளில்

ஒப்பற்றக் குழந்தை வடிவாகி வந்து தென்னாடு உய்வடையும்படி உக்கிர குமாரபாண்டியனாகத் தோன்றி ஆண்டவன்.

பார்க்கும் இடமெல்லாம் நீக்கமற நிறைந்திருப்பவன். முனிவர்களுக்கு சாயுச்சியம் என்ற வீடு பேற்றில் மீண்டும் பிறவியில் வாராமல் பரத்துடன் ஒன்றும்படி அருள் புரிந்தாய் நான்மணி மாலை, மும்மணிக்கோவை, இரட்டை மணிமாலை முதலானவை அணிந்தருளினாய். சூரபன்மனை வேலாயுதத்தால் கொன்றருளினாய். ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களைப் போக்கி சனகாதி முனிவர்களுக்கு அருள் பாவித்தாய். அகத்திய முனிவர்க்குப் பிரணவப் பொருளை உபதேசித்தாய். உனது இருப்பிடமான மலைக்கோயில்கள் தோறும் சென்று வருவது நலம் எண்ணுவதும் அதன் படி நடப்பதும் எனது வேண்டுகோள் என்கிறார்.

**சூரியன் எழுகூற்றிருக்கை**

ஒப்பற்ற ஒளிப்பிழம்பாகியவன், இருண்ட கொடிய தன்மை உடைய ஆணவம், மாயை, கன்மம் என்ற தீராப் பிணியில் உழலும் போது அடியேன் மயங்காதபடி காலை, உச்சி, மாலை என்ற மூன்று வேளையாம் இரண்டு கைளையும் குவித்து வணங்குவோர் மன ஒருமைப்பாடு அமையாராயினும் அவர்கட்கும் கருணையுடன் அருள் புரிவதாகியவன். ஒப்பற்ற சத்தியம் திறம்பாத அரிச்சந்திரன் மனைவி சந்திரவதி, மகன் லோகிதாசன் ஆகிய இருவரோடு தானும் என்னும் இவர்கள் மூவரும் விலைப் பொருளாக விற்கப்பட்டதனால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளையும் அடக்கிய விசுவாமித்திர முனிவனை வெற்றி கொள்ளல், மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என்ற மூவகைக் குற்றங்களையும் உடைய நான் எண்ணுகின்ற செயல்களைப் பலவற்றையும் கொடுத்தருளுபவனும், ஒவ்வொரு நாளையும் உண்டாக்கிய நீக்கமற்ற புகழ் வாய்ந்த சூரிய மூர்த்தியே திருமலை என்ற மலைமீது திருவருள் காட்சி காண வேண்டி உருண்டபோது எனது உடல் அழியாத வண்ணம் உய்வடையுமாறு காத்தருளியதும் திருச்செந்தூரினிடத்து கடலில் விழுந்து அழுந்தி யான் உயிர்விடப் போன போது காத்து சமரச ஞான அறிவாகிய புத்துணர்வைக்

கொடுத்தருளியதும் எனவே உலகவேட்கைகள் அனைத்தையும் போக்கி உன்னிடமே ஒன்றும்படி செய்தவன் என்று கூறுகிறார்

இவ்வாறாக வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமது எழுகூற்றிருக்கைகளில் சமயத் தத்துவங்கள் பல பொதித்து எளிய நடையில் யாப்பு பிறழாமல் வடித்துத் தந்துள்ளார். அருணகிரி நாதருக்குப் பிறகு எழுகூற்றிருக்கை அமைத்துத் தந்த பெருமை இவரையே சாரும். இவர் இலக்கண இலக்கிய பன்மொழிப் புலமைகள் பெற்றுள்ளாரி என்பதை இவர் யாத்த நூல்கள் மூலம் அறியலாம். இவர் தம் எழுகூற்றிருக்கைகளில் தத்துவத் துடன், சமயக் கருத்தையும் பொதித்து தனிச் சிறப்பு பெற்று விளங்குகிறார் என்பதை அறியலாம்.

**துணை நூல்கள்**

1. வே. ரா. மாதவன், சித்திரகவிகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1983.
2. வித்வான் ஸ்ரீ ஜகந்நாதாசாரியார், திருஎழுகூற்றிருக்கை, திருவண்ணாமலை திருக்கோயில் வெளியீடு.
3. வே. ரா. மாதவன், திருஎழுகூற்றிருக்கை (கட்டுரை)

# ஆறெழுத்தலங்காரமும் சமயப் பொதுமையும்

இரா. முத்துக் குமாரசாமி

தண்டபாணி சுவாமிகளின் கௌமாரத் தமிழ்ப்பணியின் சிகரமாக விளங்கும் ஆறெழுந்தலங்காரப் பெருமையினையும், அதில் அமைந்துள்ள சமயப் பொதுமையினையும் மொழியியல் பகுப்பாய்வின் மூலமும், வானியல் அறிவியல் வாயிலாகவும் சமய தத்துவ வாயிலாகவும் ஆராய்ந்து, தவத்திரு தண்டபாணி சுவாமிகளின் கௌமாரத்தமிழ்ப்பணியின் சிறப்பினையும் பெருமையையும் எடுத்துரைப்பதும் தண்டமிழ்க்குமர இளைஞர்களை ஓரமைப்பின் கீழ் குமரத்தொண்டாற்றச் செய்வதுமே இவ்வாய்வுக் கட்டுரையின் இருபெரு நோக்கமாகும்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எழுதியுள்ள பாடல்களில் நமக்குக் கிடைத்தவை 49722 இவையனைத்தையும் தம் எட்டாம் அகவை முதல் ஐம்பத்தொரு வயதிற்குள் (1847–1898) பாடி முடித்துள்ளார். தமிழகம், கேரளம், ஈழம் ஆகிய மூன்று நாடுகளிலுள்ள 224 திருத்தெய்வத் தலங்களில் பாடியுள்ளார். இவர் பாடிய பாடல்களைக் கௌமாரத் தமிழ்த் தேசியப் பாடல்கள் எனலாம். தம்முன்னைய பிறப்பில் குமரிக் கண்டத்தில் வழங்கிய கௌமாரத்தைக் கண்ணுற்றவராக இருந்து இப்பிறப்பில் அத்தெய்வக் கொள்கையைப் பரப்பிய பெரியார் அவர். தேவராய சுவாமிகள், கவசம் வாயிலாகக் கௌமாரம் பரப்பியது போன்று தண்டபாணி சுவாமிகள் பரப்பியுள்ளார். அறுவகைச் சமயத்தில் கௌமாரம் பற்றிப் பாடியவை அறுபத்தாறு விழுக்காட்டிற்கு மேல் செல்வதால் கௌமாரத்திற்கே தண்டபாணி சுவாமிகள் முதலிடம் கொடுத்துள்ளார் எனலாம். கௌமாரத்தின் உயிர்நாடி ஆறு எழுத்தலங்காரமாகும்.

ணகரமெய்யில் மூன்று வட்ட முகமும், மூன்று வளை முகமும் காணப்பட்டு அறுமுகமாக ணகரம் காட்சி தருகிறது.

அதற்குள்ளே அனைத்து எண்களும் எண்ணங்களும் அடங்கி யுள்ளன. அத்துடன் 'ஓம்' என்ற மந்திர மொழியும் அமைந் துள்ளது. எழுமலைச் சிகரம் உடைய விண்ணளாவிய குமரிக் கோட்டினையும், அதனைச் சார்ந்துள்ள குறிஞ்சி, முல்லை, மருதம் என்ற மூவகை நிலங்களையும் குறிக்கும் வகையில் ணகரமெய் அமைந்துள்ளது. இந்த ணகர உயிர் மெய் எழுத்துடைய சண்முகப் பெருமாள் பிரபந்தத்திரட்டு என்னும் தண்டபாணி சுவாமிகள் எழுதிய நூல் சண்முகப் பெருமையை விரித்துரைக்கும் ண–உயிர் ஒன்றும் அறியாத நிலை. 0, இரண்டா வது அறிவிக்க உணரும் நிலை 0, 0–மூன்றாவது ஞானம் 000–மும்மை ஞானம் வணக்கத்தால் பெறுவது என்ப.

பகர உயிர் மெய் பழமைக்கும் பழமையோன் ஆன பகல வனையும் அப்பகலவனுக்கும் பழமையோன் ஆன பரமனையும் பரமனின் குமரனான பழம் முருகனையும் குறிக்கும். பழனிவாழ் முருகனைப் பற்றி அவன் பெருமையைப் பற்றிப் பழனித் திருவாயிரம்; படைவீட்டுப்பதிகம், பன்னிரு பதிகம் போன்ற தம் நூல்களில் தண்டபாணி சுவாமிகள் 1274 பாடல்கள் மூலம் முருகுப் பெருமையை மும்மையிலும் மறவாதபடி முழுமையாக எடுத்துரைக்கிறார்.

வகர உயிர்மெய் வ்+அ–ஒடுக்கப் பிரணவமான அகரத்தை வணங்கித் தன் அகத்தில் கொண்ட உயிர்மெய்யாக விளங்கு கிறது. இதன்கண் பிள்ளையார் சுழி, அதாவது நாதமும் விந்து வும் அடங்கியுள்ளமையை உணர்த்தும் எழுத்து, உம்பர் உயிரை உணர்த்தும் எழுத்து, உமையைச் சுட்டிக்காட்டும் உகர எழுத்து அமைந்துள்ளது. உயிர் உடலின் வணக்கத்தைப் பணிவைச் சுட்டிக் காட்டுவது வகர உயிர்மெய் 0–உயிர்க்கரு, எ உயிர்ப் பிறப்பு,–தவழ்தல் 1 எழுந்து நிற்றல் என்பர்.

இதுகாறும் மேலே உள்ள ஆறுபத்திகளில் முதலில் வந்துள்ள ஆறெழுத்து அருமறையைப் பற்றி ஆறெழுத்தலங்காரம் என்னும் தம் நூலில் 103 பாடல்கள் 412 வரிகளில் எடுத்துரைக்கும் சுவாமிகளின் கௌமாரத் தமிழ்ப்பணியே. இதுவரையாரும் கூறாத புதுக் கருத்துகள் ஏந்திய நூற்பணியாகும். நூறாண்டும் நூற்றாண்டைக் கடந்தும் பயன்தரும் பணியாகும். யாண்டும் பயன் தரும் பணியாகும், அந்நூற்பணியினைப் பழுத்த

தமிழ்ப்பாடு முனிவன் அகத்தியனைப் பணிந்து சுவாமிகள் பாடியுள்ளார். ஆறெழுத்துப்பற்றி நூறு பாடல் கொண்ட அவ்வலங்கார நூல் ச, ர, வ, ண, ப, வ என்று ஆறு அக்கரம் பற்றி அதன் சிறப்பு பற்றிக் கூறுகிறது. 'செவ்வேற்குகன் ஆறெழுத்தும் ஒன்றே பரம்' (50 – 1, 2 நற்பூவெடுத்து ஆறு எழுத்தோதி அருச்சியுமே (54 – 4) என்று ஆறெழுத்தை வழிபடும் முறையையும் சுவாமிகள் கூறியுள்ளார். அத்துடன் (59 – 1, 2) "பிணியாவும் தீரும் பிறவாத பேறு பெறப் பிறந்த மணியாம் எனத் திகழ்வார்க்கு உறவாகும். நல்வாழ்வும் எய்தும் என அதன் பயனையும் எடுத்துரைக்கிறார். சரவணபவ என்பதில் வந்த எழுத்தே திரும்ப வந்துள்ளதால் ஐந்து எழுத்து என்று சிலர் கூறுவர். அதனால் ஓம் சரவணபவ என்று ஓதுவது உத்தமம் (20) என்று சுவாமிகள் கருதுகிறார்.

ஆறெழுத்தின் அலங்காரம் பொருள் யாது? அதன் அருமறைப்பொருள் யாது? என்பன அனைவரும் கேட்கும் கேள்வியாகும். இதற்குரிய விடையினைத் தண்டபாணி சுவாமிகள் பின்வருமாறு கூறுகிறார். 'ஆதாரம் ஆறும் எழுத்தாறு (25 – 7) சவ்வாதியாம் எழுத்தாறு (21) ச - சக்தி- சத்தி. சத்துவத்தி ஆதீ ஆதியாகும் சத்திமாதர் ஆறுபேரையும் குறிக்கும், சகத்தி சத்தி ஓங்காரத்தின் ஒன்று கூடிய நிலை கூடிய நிலை குருவே நமக' 'குகனே போற்றி' 'பெருமாளே நம' 'குமரா போற்றி' 'சரவணபவ' செவ்வேளே நம' 'முருகோனே நம' நெட்டிலை வேலே போன்றவை ஆறெழுத்தைக் குறிக்கும் ஆறுதிசை, ஆறுமுகம், ஆறு சமயம். ஆறுதிசை முகமாய்ச் சமையங்கள் ஆறு (30 – 1). ஐம்பூதமும் பரிபூரணம் ஒன்று ஆக ஆறும் (40 – 1) ஆறு அங்கம், அறுவகை விண்மீன்குழு, அறுமீன் போன்றவை ஆறெழுத்தின் அழகிய பொருளாகும். விரிவான பொருளை ஆறெழுத்தலங்காரம் என்னும் தண்டபாணி சுவாமிகளின் நூலில் காண்க.

ஆறெழுத்தில் அமைந்துள்ள சமயப் பொதுமை யாது? சத்தி-சாத்தேயம், குமரன் – கௌமாரம், வ – சைவம் – சிவன், ண – கணபதி காணாபத்தியம், ப – பகலவன் – சூரியன் – பகவன் சௌரம்;வ – வைணவன். என்ற அறுவகைச் சமயங்களை ஆறெழுத்துச் சுட்டிக்காட்டி அவற்றின் பொதுமையை 'எல்லாக் கடவுளும் ஒன்றாய் விளக்கும்' எழிற் குமரன் (98 – 1) என்ற

சொற்றொடர் வாயிலாகச் சுவாமிகள் விளக்கியுள்ளார். ஆறு எழுத்தும் நிலத்தாறு நிலத்தை அரிப்பது போல, அறுப்பது போன்று சரவணபவ என்ற எழுத்தாறு பவநிலத்தை அரித்து வினைப்பவத்தை அறுத்து முத்திபேறு அளிக்கிறது. அளிக்க ஓயாமல் ஆறு எழுத்தோதிக் கருதி உருக வேண்டும் என்பது சுவாமிகளின் கருத்தாகும்.

மொழியியல் பகுப்பாய்வுப் பிணைப்பாக்கம், சரவணபவ என்பதற்கு அறுபதுக்கு மேற்பட்ட பொருள் இருப்பதை வெளிப் படுத்துகிறது. 'சரவணப் பொய்கைச் சரவணா வாழ்க' என்ற அகத்தியக் குமரக் கவசத்தின் ஒருவரிக்கு மொழியியல் பகுப் பாய்வுப் பிணைப்பாக்கத்தைப் பயன்படுத்தின், ண்=ன்+ன், ன்-எ, ம; பரனே வாழ்க பரணே வாழ்க, அரணே வாழ், அன்னம் வாழ்க, அண்ணனே வாழ்க, வண்ணனே வாழ்க, வானவனே வாழ்க. மாணவனே வாழ்க, அரனே வாழ்க. அ+அ=ஆ, ஆரனே வாழ்க, வரனே வாழ்க, வாரனே வாழ்க, மணமே வாழ்க, மன்னனே வாழ்க, சாரனே வாழ்க, அகனே வாழ்க, ஆகனே வாழ்க, மகனே வாழ்க, மானனே வாழ்க, சமரனே வாழ்க, அமரனே வாழ்க, அரவனே வாழ்க, மனனே வாழ்க, உரனே வாழ்க 'பண்ணவனே வாழ்க' வண்ணச்சரபனே வாழ்க, பவனனே வாழ்க, சப்பரனே வாழ்க, பம்பரனே வாழ்க, பாவாணனே வாழ்க, சமரசனே வாழ்க, ஆனே வாழ்க, ஆவணனே வாழ்க, சாபனே வாழ்க, வாணனே வாழ்க, அரனானவனே வாழ்க, பணமானவனே வாழ்க, பாணமானனே வாழ்க, வாணமானவனே வாழ்க வ – /4 காலான வனே வாழ்க, காவனே வாழ்க வ+வ=இ அரையானவனே வாழ்க, இறைவனே வாழ்க, இன்னோரன்ன அறுபதுக்கு மேற்பட்ட புதுமைப் பொருள்களை, விரிதிரைப் பொருளை அருமறைப் பொருள் ஆறெழுத்து அலங்காரம் கொண்டிருப்பது அனைவரையும் வியப்பில் ஆழ்த்திக் குமர முருகிளைஞர்களை மகிழ்ச்சிக் கடலில் திளைக்க வைக்கும் தகையது. மருட்கை என்னும் வியப்பில் ஆழ்த்த வல்லது. சரணம் என்பது வானில் அமைந்துள்ள ஒரு பொய்கை அறுவகைச் சக்திகளை அரணாகக் கொண்டதோர் உயர்ந்தவானிடம் வானத்திலோர் இடம் என்ற மெய்ப்பொருள் ஆறெழுத்து அலங்காரம் நமக்கு உணர்த்துகிறது.

ஆறெழுத்திற்கு வானியல் அறிவியல் பொருள் யாது ச – திருவாதிரை, ர – சித்திரை, வ – உரோகணி, ண – அஸ்தம், ப – பூராடம், வ – உத்திரம் முறையே மிதுனம் (நம்பி நங்கை), கன்னி, துலாம், இடபம், தனுசு, ஐந்து விண்மீன் குழுக்களைக் குறிக்கும். எனவே அறுவகை விண்மீன்களையும், நால்வகை விண்மீன் குழுக்களையும் ஆறெழுத்து அலங்காரம் வானியல் பொருளாக நமக்கு அளிக்கிறது. இடபராசியில் உள்ள மிருக சிரிடம் – முக்கண் போன்றுள்ள விண்மீன் அருகில் திருவாதிரை உள்ளது. சித்திரை துலாம் ராசியில் சுவாதி அருகில் உள்ளது. இடபராசியில் உரோகிணி கார்த்திகை அருகில் உள்ளது. கன்னி ராசியில் உள்ள அஸ்தம் உத்திரம் – சித்திரைக்கு நடுவில் உள்ளது. பூராடம் மூலம் அருகில் தனுசுவில் உள்ளது. உத்திரம் பூரம் அருகில் சிம்மராசியில் உள்ளது. எனவே இடபம், துலாம், கன்னி, தனுசு, மிதுனம் என்ற ஐந்து ராசிகளையும் ஆறெழுத்து அலங்காரம் உணர்த்தினாலும் அவற்றின் நடுநாயகமாக விளங்கும் கன்னி, துலாம், விருச்சிகம். சோதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம் உள்ளடக்கிய ஓங்காரத்தினுள் அனைத்து ஆறெழுத்து அலங்காரமும் அமைந்துள்ளது உலகின் நேற்றைய, இன்றைய, நாளைய அனைத்துச் சமயச்சின்னங் களையும் ஒருங்கே வானியல் ஆறெழுத்து அலங்காரத்தினுள் விண்மீன்களின் பேரரொளியாய்க் காணலாம். வானில் இன்றும் நாளையும் என்றும் என்க.

சமய தத்துவ ஆய்வு உலகச் சமயச்சின்னங்களின் அடிப்படையில் நிகழ்ந்துள்ளது. ஆறெழுத்து அலங்காரமும் அவ்வாறே ஆராயப்பட்டுள்ளன. அனைத்து உலகச் சமயத் தத்துவ சின்னங்களையும் ஆறெழுத்தலங்காரத்தைச் சுற்றிக் காணப்படும். தமிழ் ஓங்காரத்திலுள் வானில் காட்டிவிடலாம். எனவே கௌமாரமே குமரிக்கண்டத்துத் தமிழ்க் குமரச் சைவமே உலகின் அனைத்துச் சமய தத்துவங்களைத் தன்னகம் கொண்டுள்ளது. இன்றைய உலகச் சமயதத்துவங்களை இணைத்து உலக அமைதியை அறிவியல் அடிப்படையில் ஏற்படுத்த வல்லது என்பதை ஆறெழுத்து அலங்காரம் விளக்கு கிறது. இவ்விளக்கமே தண்டபாணி சுவாமிகளின் கௌமாரத் தமிழ்ப்பணியின் சிகரமாகும்.

# பழனி முருகன் பிள்ளைத்தமிழ்

ச. முத்துலட்சுமி

தமிழில் தொன்னூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்கள் இருப்பதாகச் சொல்வது மரபு. அதில் பிள்ளைத் தமிழ் இலக்கிய வகையும் ஒன்று. சேயோன் என்று முருகனை பிள்ளையாகக் குறிப்பதால் முருகனைப் பற்றிய பிள்ளைத் தமிழே தமிழில் மிகுதியாகக் காணப்படுகின்றது. அதில் பழனி முருகன் பிள்ளைத் தமிழை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அவர்கள் இயற்றியதும் ஒன்று. தமிழ் அருளியல் இலக்கிய வளம் நிறைந்தது. தண்டபாணி சுவாமிகளும் அருளியல் கவிஞருள் ஒருவராவார். இவரது பாடல்களில் அருளியல் அனுபவமும், அருளியல் இலக்கணக் கூறுபாட்டை உணர்த்தும் தத்துவ விளக்கக் குறியீடுகளும் விளங்கக் காணலாம். அத்துடன் பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் இலக்கணமும், இலக்கிய நயங்களும் சிறப்புற அமைந்து விளங்கும் திறத்தையும் காணலாம்.

**அருளியல் அனுபவம்**

இலக்கியத் திறனாய்வில் (Mysticism) மிஸ்டிஸிஸம் என்று குறிக்கப்படுவதே அருளியல் ஆகும். ''தமது பகுத்தறிவுக்கு எட்டாத உண்மைகளை ஆன்மீக அடிப்படையில் உணர்வுக் காட்சிகளாக உணர்வதில் நம்பிக்கை உடையவன்'' என்று மிஸ்டிக் (Mystic) என்ற சொல்லுக்கு ஆக்ஸ்போர்டு அகராதிச் சுருக்கம், பொருள் கூறி; இதனடிப்படையாக மிஸ்டிஸம் என்பது உருவாயிற்று என்று உணர்த்தும் 'Mysticism' என்ற சொல்லுக்கு ''மறை பொருள்'' என்னும் கருத்தும் இணைந்தே வருகிறது.

அருளியல் அனுபவம் மொழியால் வெளிப்படுத்த இயலாதாக இருப்பினும் -அருளியாளர் கவிஞராக இருப்பின்தம் அனுபவத்தை அவர் எவ்வாறாயினும் வெளிப்படுத்தவே விரும்புவர். குறியீடுகள் அவர்களுக்குப் பெரிதும் கை கொடுக்கின்றன. புராணக் கதைகளும் குறியீடுகளுமே அவனதுமொழியாகும்.அருளியலாளன்

நேரிடையாக அனுபவத்தால் உண்மை ஒன்றை அறிகிறான். அது அவனுக்குத் தனிப்பெரும் பேருண்மை.அருளியலாளன் தத்துவம், கவிதை, கலை, மதம் எனப்படும் பலதுறைகளுள் தான் எதைச் சார்ந்திருப்பினும் இறைவனோடு ஒன்ற வேண்டும் என்பதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்கிறான். அப்படி ஒன்ற நினைக்கும் அனுபவத்தைத் தகுந்த முறையில் ஆராய்ந்து தெளிந்தோ கற்பனையாகக் கண்டோ பிறர்வாயிலாக அறிந்தோ பாடுவதில்லை. ''பொறி புலன்கலாளால் நுகரப் படுவதைவிட மிகுதியான விளக்கமும் உண்மையும் வாய்ந்து பெரிதும் நம்பக் கூடியதாக உள்ள தமது சொந்த அனுபவத்தையே பாடுகிறான்'' (2).

அருளியல் கவிஞரான தண்டபாணி சுவாமிகள் அருணகிரி நாதரைப் போன்றே பக்தி, யோகம், தத்துவம் மூன்றும் ஒருங்கிணைந்த (Synthetic Mysticism) அருளியல் அனுபவத்தைக் கவிதையில் வடித்தனர். தண்டபாணி சுவாமிகள் முருகனது அருட்காட்சியைக் கனவில் காணுகின்றார். அதனை நனவிலும் காணவேண்டும் என்ற பேரவா அவருக்கு ஏற்பட்டது. இறைக் காட்சியைப் பெற்று அருளியல் அனுபவஞ் சிறிது பெற்றவுடன் அதற்கும் உலகியல் அனுபவதிற்கும் மலையனைய வேறுபாடு புலப்படுகிறது. முருகனிடம் அடிமையான சுவாமிகள் தமது அருளியல் அனுபவத்தை ஒன்பது பாடல்களில் கூறுகிறார். முருகனுக்கும், தனக்கும் உள்ள உறவை தந்தை மகன் உறவு என்றும், கனவில் முத்தங்கள் பல தந்ததையும் கூறுகின்றார். ''அந்நாள் எனது கனவில் வலிது அளித்த முத்தம் பலவுள', (பா.42) என்றும், ''என்னை நீ மகவென்றதும் படிறோ'' (பா.42) என்கிறார். அருள் காட்சி அளித்த ஆனந்தம் கனவில் கிட்டி, மறைந்தமையால் துன்பம் உற்ற அடிகள் திருமலையின் மீது ஏறி உருளுகிறார். ஆயின் எந்தத் தீங்கும் ஏற்படவில்லை. இதனை,

> ''திருமாலை மேற் சென்றுருள் கால்
> செத்துத் தொலையாது அளித்ததுவும்'' (பா.43)

அவருக்கு முருகன் பலவிதமாகக் கனவில் காட்சி தருகிறான். அதில், பசும்பொற் கலாபமயில் மீதும், பரணிற் கலந்தாளொடும் வருகின்றான் (பா.52). அத்துடன் ஒருமுறை வேலாயுதத்துடன் சிறந்த தண்டாயுதத்தையும் மார்பிலும் தனது தின்கரத்திலும் ஏந்தி நிற்கின்றான். சிவபெருமானின் சேய் என்பதற்கிணங்க,

அக்கமணி மாலைகளும் அணிந்துள்ளான். கைலையின் கிரியின் இரசிதம் போல் அழகிய கோவணமும் சீரோடு தரித்து, வீரக் கழலணிந்த திருவடிகட்கு அருளாகிய பாதுகை சாத்திக் கனிந்த முறுவலுடன் காட்சி அளிக்கிறான் (பா.47) இந்தத் திருக்கோலம் தான் தண்டபாணி சுவாமிகளைக் கவர்ந்த கோலம் 'தன் கோலமே கொள், என்று முருகன், சுவாமிகளைக் கேட்டதாலேயே அவரந்தக் கோலம் பூண்டார்.

உளநூல் அறிஞரான ஜஸ் என்பார் மனிதனுக்குத் தன்னைப் பற்றிய நினைவு மட்டுமின்றி, தன் இனத்தின் நினைவுகளும் அடிமனத்துள் உறைந்துள்ளன. அவை காலத்திற்கு முந்தினவை களாகவும், தெளிவான உள்ளடக்கம் இன்றியும் இருக்கும் என்கிறார் (8). அருளியலாளன் மன உணர்வினைக் கடந்தோர் உயர் உணர்வு நிலை வந்து வாய்த்தமையையும், அந்த உணர்வில் இறைக் காட்சி வந்து வாய்த்தமையையும் உணர்கிறான். தண்டபாணி சுவாமிகளும், உணர இயலாத இன்பமாகவும் உள்ள அவ்வுணர்வு நிலையே,

''அறிவினை அறி:வர் அனுபவ முழுமையும்
அதுவா மிளிர அருள் செய்குவாய்''

என்று குறிக்கிறார் (பா.58).

**தத்துவ நெறி**

காப்புப் பருவத்தில் சிவபெருமானை அழைத்து முருகனைக் காக்கும்படி அழைக்கையில் வேதங்களின் தத்துவசாரமான, தத்துவமணி (நீ அதுவாக இருக்கிறாய்) என்பதனை,

''அசபதாதி முப்பதமும் நினைகுவார் தமக்குதவி'' என்கிறார்.

மேலும் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்றுருவும் அவனே என்றுணரும் அடியவர்க்கும் எல்லோர்க்கும் நடுநின்ற நல்லானாக இருக்கின்றான், என்பார்க்குந் அவர்தம் பான்மை அளவில் அருள்புரிகிறான். பக்தி நெறியில் தோன்றித் தத்துவ வித்தக சித்தர்கள் பலபெற்று முக்தி நெறியை அடைய முயலும் ஞானியர் தம்மையை –

''பாரதியின்மால் அணுகா பரமானந்தத் தவசிகளுள்
பதுமம் புரையும் மனத்தமர்ந்து''– (பா.68)

கௌமார நெறிஎன்பது முருகனையே முழுமுதற் கடவுளாகக் காணும் ஒருவகைச் சமய நெறியாகும். அக்கௌமார நெறியை மேற்கொண்ட தண்டபாணி சுவாமிகள் "மருவார் குடிக்கு நெருப்பாய கவுமாரர்" (பா-92) என்றவர்களைக் கூறுவர். தாலப் பருவத்தின் ஐந்தாவது (5-வது) பாடலில் முருகனை முழுமுதற் கடவுளாய், வேத, வேதாங்களின் முடிவாய், தத்துவத்தின் சிகரமாய் அனைத்துப் பொருட்களின் மூலமாய்க் காணுகிறார். பாராதி ஐம்பூதங்களால், உலகில் பௌதிகப் பொருட்களும், இகமோடு புகழையும் தரும் கணக்கில்லாத சமயப்பெருங்காட்டில் தனித்து நிற்கும் பரம்பொருளாய்க் காணுகிறார்.

**நூல் நயம்**

பேசும் பிள்ளைக்கவிக்கு அம்புலி என்று கூறுவர். அம்புலிப் பருவமானது நிலவைப் பாட்டுடைத் தலைவனுடன் விளையாட அழைப்பதைக் கூறும். அவ்வாறு அவன் அழைக்கும் போது, நிலவு வந்து விளையாட வர வேண்டும் என்பதற்கான காரணங்களை சாம, தான, பேத, தண்ட முறைமைகளில் - பாட்டுடைத் தலைவனின் புகழைப் பேசுவார். இது கவிஞர்களின் புலமைத் திறத்திற்கும் அறிவுத் திறத்திற்கும் ஒரு போட்டியாக (சவாலாக) அமையும். மற்ற பிள்ளைத் தமிழ் ஆசிரியர்களைப் போன்றே தண்டபாணி சுவாமிகளும் அதில் வெற்றி அடைந்துள்ளார். பங்கய மலர்த்திரள் எலாம் ஒல்கு பேரெழில் கொண்ட முருகன் அங்கை மலரால் உன்னை ஆட அழைக்கின்றான் என்று கூறும் போது,

> "கங்கம் நரி நாயை அனையார்புரி புலைப் பூசை
> கருதாமையும்"

என்று உயிர்க்கொலை புரியும் பூசனையை வெறுக்கும் தன்மையைக் காணலாம். உயிர்ப்பலி கொடுத்துப் பூசனை புரிவதை பல இடங்களிலும் இவர் கடிந்தோதுவார் - (அம்புலிப் பருவம் பாடல் - 63, பக். 173 பாடல் - 8, 37, 56, 59, 63, 76, 85, 92, 99).

வண்ணப் பாக்கள் பாடினமையால் வண்ணச் சரபம் என்று பெயர் பெற்ற சுவாமிகள் பழனிப் பிள்ளைத் தமிழிலும் ஓசை நயமிக்க பாடல்கள் பாடியுள்ளார். செங்கீரைப் பருவத்தில், முருகனைச் செங்கீரை ஆட அருளுமாறு வேண்டும் போது, ஆட என்ற சொல் மீண்டும், மீண்டும் வரும்படியாக அமைத்து குழந்தை ஒன்று தலையசைத்து ஆடும் திறத்தினை அழகுபட

உரைக்கிறார். அழகிய பொன்னணிகள் ஒளிவீச, திருவாயில் நகையானது மலர, சீர்மிகு நெற்றியில் வியர்வை அரும்ப ஆடுகிறான் முருகன். அதனை,

செம்பொற் பணிகள் அவிர்ந்தாடத்
திருவாய் மலரில் நகையாடச்
சீரார் நூலில் வெயர்தாடச்
செழுமா மலர்ச்சீர் அடியாடல் (பா.16)

என்று பாடுகிறார். அவ்வாறு ஆடும் போது கொம்பு ஒற்றை யுளான் ஆன கணபதி உடனாட, அதனைக் கண்டு சேவலும் மயிலும் ஆடுகிறது. இந்த ஆடலைக் கண்டு அன்னை மனம் களியாடுகிறது. பாம்பும் புலியும் அதனைப் பார்த்து ஆடஅம்பெற் சிலையோனான நடராசன் ஆனந்தக் கூத்தாடுகிறான் என்று கூறுகிறார்,

நீர்வளம், வயல் வளம் நிறைந்த நாடுகளின் சிறப்பினைக் கூறவரும் புலவர்கள் அந்நிலத்தில் ஏற்படும் பலவகை ஒலியைப் பற்றிக் கூறுதல் மரபு. சிலம்பிலும் கம்பராமாயணத்திலும் அந்தப் போக்கினைக் காணலாகும் – (கானல்வரி. 4) அப்பண்பினை ஒட்டி; பழனியம்பதியின் சிறப்பினைக் கூறவரும் தண்டபாணி சுவாமிகள் கழங்காடும் பெண்கள், ஏற்படுத்தும் தொனியும், காளை அனைய இளைஞர்கள் பயிற்சிக் கூடத்தில் ஏற்படும் தொனியும், சோலைகளில் பறவைகள் பழங்களை உண்ண வருகின்ற பறவைகளின் தொனியும் பற்றிக் கூறுகிறார்.

பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் தாலப் பருவம் என்பது நாவசைத்து அன்னை தாலாட்டுப் பாடிக் குழந்தையைத் தூங்கச் செய்வதற்காகப் பாடப் பெறுவதாகும். ஆனால் கண்ணன் காவியத்தில் கண்ணதாசன் கண்ணனைத் தூங்கவிடா தீர்கள் என்று அன்னையரிடம் வேண்டுகிறார்.

"கண்ணனவன் தூங்கிவிட்டால் காசினியே தூங்கிவிடும்
அன்னையரே துயிலெழுப்ப வாரீரோ"

இதற்கு முன்னதாகவே நமது வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தாலப் பருவத்தில் முருகனைத் தூங்காதே என்று கூறுகிறார். ஆயினும் ஏன் நான் தாலாட்டுப் பாடுகிறேன் என்றால் முன்பு தமிழ்ப்பா துறைகளை வகுத்த முனிக் கோனாகிய அகத்தியரின் இலக்கணமுறைமை வழுவாதிருக்கவே

இத்தாலாட்டுப் பாட்டினை யான் இசைக்கிறேன் என்கிறார். மெய்யடியார் நினைக்கும்போது உபநிடதக் காட்டின் முடிவாக விளங்குபவன் துயின்றுவிட்டால் எல்லா உலகங்களின் இயக்கங்களும் நின்றுபோகும் என்று கருதி, இதனை ஊசல் துதியாக ஏற்பாயாக என்கிறார்.

**சுவாமிகளின் தமிழ்ப் பற்று**

சுவாமிகள் தமிழ் மொழி மீது அளவிலாப் பற்று உடையவர். வடமொழியாளர் ஒருவர் தம் மொழி அனைத்து மொழிகட்கும் தாய்மொழி என்று ஆணவத்துடன் மொழிகையில், சுவாமிகள் தமிழலங்காரம் எனும் தம் நூலில் ''வடமொழி தாயெனில்; வண்தமிழ் தந்தையாம்'' – என்று பாடுகிறார். ஏனெனில் அறியா இளமைப் பருவத்திலேயே தமிழ்ச்சீர் கொடுத்து முருகன் ஆட்கொண்ட செய்தியை,

> ''கோங்கே அனைய முலைமடவார்
> குளிர்கேல் விழிப் பார்வையின் அருமை
> குறியா இளமைப் பருவத்து ஆட்கொண்டு
> தமிழ்சீர் கொடுத்ததுவும்''

என்று தமிழினைத் தந்தே முருகன் தன்னை ஆட்கொண்டான் என்று கூறுகிறார். எனினும் வடமொழியின் மீதும் வெறுப்பு கொள்ளாமல் தமது பாடல்களில் வடமொழிச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார். தாலப் பருவத்தில், பாலா, விகாதா, மாபோதா, அகாரா, ஒகாரா, மாயவாசனை, சேகர, சிகாவல என்று பல சொற்களைக் காணலாம். இதுபோல் நூல் முழுவதும் மிகுந்த சொற்களைக் காணலாம். சமய இலக்கியம் என்பதால் இது தவிர்க்க இயலாததே ஆகும்.

**பிறநூல்களோடு ஒப்புமை**

முன்னோர் மொழியையும், அவர்தம் கருத்துக்களையும் எடுத்தாளாத கவிஞர்களே இல்லை. தண்டபாணி சுவாமிகள் முருகனது அடியவர்களின் பெருமையை நன்குணர்ந்தவர். எனவே அவர்தம் நூற் கருத்துக்களை, முருகன் பற்றிய சொற்களை எடுத்தாளுகிறார். ஏனைய முருகன் பற்றிய பிள்ளைத் தமிழ் நூற்கள் போல தண்டபாணி சுவாமிகளும் வருகைப் பருவத்து இறுதிப் பாடலை அடிதோறும் ''வருக!! வருகவே'' என்று முருகனை அழைத்துப் பாடுகிறார். – முத்துக்குமார் சுவாமி

பிள்ளைத் தமிழில் தாலப் பருவத்தில் இறுதிப் படலத்தில் அடி தோறும் ''தாலோ, தாலேலோ'' என குமரகுருபரர் அமைத் துள்ளார். அதுபோலவே சுவாமிகளும் தமது தாலப் பருவத்தின் இறுதிப் பாடலில் அவ்வாறே அடிதோறும் ''தாலே தாலேலோ'' என அமைத்துள்ளார்.

வருகைப் பருவத்தில் குழந்தையை அன்னை அழைப்பது போன்ற பான்மையில் சுவாமிகள் பாடியுள்ளார்.

பெரியாழ்வாரின் திருவாய் மொழிப் பாடல்களில் கண்ணனை யசோதை அழைப்பது போன்ற பான்மையின் காணப்படும் - அதே சாயலை தண்டபாணி சுவாமிகளது, ''எடுக்க வருக! மலர்க்கரத்தில் ஏந்த வருக! தளிர்மடி மீது இருக்க வருக! உச்சி முகந்து இணையில் உவகையுற வருக! வடுக்கண் களிக்கும்படி வருக! வனசமுகை மென்முலைத் தீம்பால்வழிய வருக! (55) என்ற பாடலில் காணலாம். அருணகிரிநாதர் திருப்புகழில் மனந் தோய்ந்தவர். ஆதலால் அருணகிரியின் முதற் பாடலான ''முத்தைத் தரு பத்தித் திருநகை'' என்ற பாடலடிகளை மனத்திற் கொண்டு ''கதிர்கோர் விதையென உரைத்த கிளியின் கனத்த திரள்தோளா'' (.98) என்றுரைக்கிறார் சுவாமிகள் இல்லறத் துறவியாவார்: எனவே அவர், பிரமசாரியம், கிருகஸ்தம், வானப் பிரஸ்தம பரமபதமுக்தி என்ற நான்கினையும் குறிப்பிடுகிறார். மார்க்கண்டேயரே பிரமசாரியருள் சிறந்தவர் என்றும், வள்ளுவரே சிறந்த இல்லறத்தார் என்றும், வசிட்டரே சிறந்த வானப்பிரஸ்தர் என்றும், அல்லமரே சிறந்த பரமபத முக்த ரென்றும் சிறுபறைப் பருவத்தில் குறிப்பிடுகின்றார் - (83). ஔவையாரின் பாடல்களில் கொண்ட ஈடுபாட்டின் காரணமாக வீடு பற்றிய ஔவையின் கருத்துக்களை அப்படியே தமது பாட்டில் எடுத்துரைக்கிறார் - (82)

**உயிர்க்கருணை நெறியும் சமணர் காழ்ப்பும்**

கொல்லா நெறி குவலயம் எல்லாம் ஓங்கி வளர்ந்திடவே அருளாளர்கள் பெரிதும் முயன்றனர். தண்டபாணி சுவாமிகளும் உயிர்க் கொலையை அறவே வெறுத்தார். தமது பழனி முருகன் பிள்ளைத் தமிழ் என்ற நூலில் பல இடங்களிலும் உயிர்க் கொலை செய்வதை மிகவும் வன்மையாக கண்டிக்கிறார்.

அவ்வாறு உயிர்க் கொலை செய்யும் பூசையை கொடும் பூசை, புலைப் பூசை, என்றே குறிக்கிறார் – (8,63). பிரமன் மீது பழியைச் சுமத்தி எரிகின்ற தீயில் ஆட்டைப் பலியிடுவாரைப் பேயர் என நினைக்கிறார். தமது நூலில் பத்து இடங்களில் இவ்வுயிர்க் கொலையினை வன்மையாகக் கடிந்தொதுக்குவார் – (பா.8, 37, 45, 56, 59, 63, 76, 85, 93, 97).

உயிர்க் கருணை நெறியைத் தங்களது பெரும் நெறியாகக் கொண்டவர்கள் சமணர்கள். அறுவகைச் சமயமும் ஒன்றெனக் காட்டிய தண்டபாணி சுவாமிகள் சமணரிடம் காழ்ப்பு உணர்ச்சியைக் காட்டுவது முரண்பட்ட நிலையையே உணர்த்துகிறது வருகைப் பருவத்தில், "நிசமில் அவுணர்கழுவில் மடிய நிகரில் கவிகள் பகர்பவா!" என்று கூறி அடுத்த மடியிலேயே "நிதமும் உயிர்கொல் வினைசெய் புலைஞர் நிரையம் முழுக முடுகுவாய்"– (59) என்று கூறுகிறார். அத்துடன் நில்லாது "புத்தர்க்கு அமணர் தமக்கும் புனைமலி பொக்கர்க்கும் எமணவாய்" என்கிறார் – (பா. 3, 18, 19, 23, 31, 48, 58, 59, 78).

சமணரிடம் ஏன் இத்தனைக் கடுஞ்சினம் தண்டபாணி சுவாமிகளுக்கு என்றால்; சுவாமிகள் இல்லறத் துறவி. முருகனையே முழுமுதற் கடவுளாய்க் கொண்டு பக்தி செய்பவர். அவருக்கு சமணரின் அருவ வழிபாடும், உலகாயுதக் கொள்கை களும் ஏற்புடையதாக இல்லை. முருக பக்தியில் ஆழ்ந்த அவருக்கு, சமணர்கள் தமிழ்ப் பண்பாட்டு நெறிமுறைகளுக்கு மாறான நெறி முறைகளைக் கடைப்பிடித்தால் பிடிக்கவில்லை" பக்தியை வெறுத்திகழ் படிற்றறிஞர் பகைவா" என்று புகழ்வார்.

### பேச்சு வழக்குச் சொற்கள்

இனிய சொந்த நயத்தோடும், சொல் வளத்தோடும் பாடல்கள் பாடும் சிறப்புப் பெற்ற தண்டபாணி சுவாமிகள், தமது நூலில் இடையிடையே, பேச்சு வழக்கினையும் இணைத்து எழுதுகின்ற பான்மையையும் காணலாம். வணிகர் பற்றிக் குறிக்கையில் "கொருள் செட்டு ஒழியா வணிகர்" – (52) என்று சிக்கனத்தை உணர்த்தி பேச்சு வழக்கான செட்டு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். "மசசுமனை" – (50) என்று மாடி வீட்டைக் குறிக்கையில், மச்சு என்ற சொல்லையும், "நினக்

கடங்காதவர் போல'' ''அதட்சில் சில சொல் அறைந்தோமோ''– (43) என்றில் சிற்றில் பருவத்தில் 'அதட்டி' என்ற சொல்லைக் குறிக்கிறார். முருகனது அடியவர் முக்தி பெறவே விரும்புவர். பிணமாக விழுவதை இசையார். இதை ''சவமா விழுதற்கு இசையா முழுத் தவர்''– (100) என்று 'சவம்' என்ற சொல்லைப் பயன்படுத்துவதையும் காணலாம்.

இனிய அழகுத் தமிழில், சொல்வளத்தோடும் தொடை, அணி நலன்களுடனும் தனது அருளியல் அனுபவத்தைப் பிள்ளைத் தமிழாகத் தண்டபாணி சுவாமிகள் தந்த சிறப்பினை இக்கட்டுரை எங்கும் பரக்கக் காணலாம். எனினும் இன்னும் ஆய்வியல் நோக்கில் ஆராய்வோருக்கு மேலும் கருத்துக்கள் சுரக்கும் சுரங்கம் தண்டபாணி சுவாமிகளின் பழனி முருகன் பிள்ளைத் தமிழ் என்று கூறினால் அது சாலவும் பொருந்தும்.

# சுவாமிகள் பார்வையில் அருணகிரிநாதர்

அரங்க. மு. முருகையன்

ஆறு நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றி ஆறுமுகப் பெருமான் அருள்பெற்றுத் திருப்புகழ் முதலிய நூல்களைப் பாடிய அருணகிரிநாதர் பற்றிய வரலாற்றைப் பலரும் உரை நடையில் எழுதி உள்ளனர். சுவாமிகள் அருணகிரிநாதரின் மறு அம்சம் எனும் கருத்து நிலவுதலால் அவர் அருணகிரியாரின் வரலாற்றைப் புராணமாக எழுதி உள்ளார். ''அருணகிரி நாதருடைய அமிசமாகத் தோன்றியுள்ளார்'' எனப் பலமுறை முருகப்பெருமான் அருளக் கேட்டதாக குறிப்புகள் சுட்டுகின்றன. எனவே இவ்வெழுத்துரை, தண்டபாணி சுவாமிகள் எழுதிய 'அருணகிரிநாத அடிகள் புராணம்' எனும் நூலில் காணப்படும் அருணகிரிநாதரின் வரலாற்றை எடுத்தியம்புகின்றது.

## அருணகிரிநாதர் வரலாறு

அருணகிரிநாதர் வரலாறு பற்றி பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. ''திருவண்ணாமலையிலிருந்த ஒரு சூத்திர கணிகைக்குப் புதல்வராயுதித்த அருணகிரிநாதர் என்பர், தமது இளமைப் பருவத்திலேயே தாயிறந்தமையின் தமது சகோதரி யிடம் வளர்ந்து, குமாரக் கடவுளின்றிருவருட் பிரசாத பலத்தாற்றம்மில் ஒப்பாரும் மிக்காரும் இன்றிச் சந்தக்கவி பாடுதலில் வல்லுநராய், அருணாசலத்தில் எழுந்தருளி யிருக்கையில்,, (திருபுகழ் சுந்தரம் பிள்ளை உரை பக்–1) எனும் குறிப்பு இவர் சூத்திரக் கணிகைக்குப் புதல்வராய் உதித்தமையைக் கூறுகிறது.

''அருணகிரிநாதர், செங்குந்தரான மூதண்ட முதலியார் மகனென்பாரும் வடமொழிக் கலப்பான பாடல்களிருப்பதால், வைணவ அந்தணர் மகன் என்பாரும் உளர். கணிகைமைந்த னென்பது குறுகிய மனப்பான்மையுடையார் கூற்றென்பார்''– அருணகிரிநாத அடிகள் புராணம்.15. ஆய்வாளர்.

இந்நூலில் அருணகிரிநாதரின் முற்பிறப்பையும், அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளையும் பூருவ புண்ணிய சருக்கம் திரு அவதாரச் சருக்கம், மாயை விளையாட்டுச் சருக்கம் அருட்பேற்றுச் சருக்கம், வில்லிபுத்தூராழ்வார் கலகச் சருக்கம், சம்பந்தாண்டான் பகைமைச் சருக்கம், பாரிசாதச் சருக்கம்,கிளிவாழ்க்கைச்சருக்கம், கோபுரத்துச் சருக்கம் எனுமாறு ஒன்பது சருக்கங்களின் வாயிலாக தண்டபாணி சுவாமிகள் விளக்குகின்றார். இந்நூலை எழுதுவதற்கு முருகப்பெருமானின் அருளும், அவரது ஒப்புதலும் கிடைத்ததாக இந்நூலின் பாடல் வழி அறியமுடிகின்றது.

"பக்தியினால் இப்படிநான் பாடுமிந்தக் காவியத்தைச்
சத்தியமாய் செவ்வேள் சரிஎன்றான் புத்தியுள்ளீர்
ஐயமுற வேண்டாம் அருணகிரி நாதனன்பால்
மெய்யடிமையாகி மகிழ்வீர்" (பக்.180)

## பூருவ புண்ணியச் சருக்கம்

இச்சருக்கத்தின் பாடல்களில் அருணகிரிநாதரின் முன்னைய பிறப்புக்கள் ஏழு என்றும் அவர் கிளி உருவில் ஞானாநுபதி எழுதிய வடிவத்தோடு பெற்ற பிறப்புகள் எட்டு என்றும் கொள்வார் உண்டு.. ஏழு பிறப்புக் கொண்டதை,

"அருணையின் சிகரிக்கோயில் அதனிடத்தயில் கொண்டோங்கும்
முருகவேளருளாற் கிள்ளை முகமுனி அழுக்காறெய்தும்
திருவுருப் பெற்றோன் முன்னைத் திறம் சில தெரிந்தோம் அன்னோன்
ஒரு சிறு மதலையாகி உதித்தவாறுரைக்கலுற்றாம்" (34)

எனும் பாடலால் அறிய முடிகின்றது.

## திரு அவதாரச் சருக்கம்

அருணகிரிநாதரின் பிறப்பு, மரபு, அருட்பேறு, அவரின் வாழ்க்கை நிலை பற்றிய பல்வேறு கருத்துக்கள் வழங்கப்படினும் தண்டபாணி சுவாமிகள் இவரை வேளாள மரபுக்குரியவராய்க் கூறுகின்றார். திருவிடைமருதூர் பெருமானை வணங்கும் காவிரிப்பூம்பட்டினம்வாழ் வேளாள மரபில் பிறந்து வணிகம் செய்து வாழ்ந்த வெண்காடர் முற்பிறவியில் சிவனுக்குத்

தோழனாக இருந்த குபேரன் எனவும் திருவெண்காடரின் சிறப்பை எடுத்தியம்புகின்றார்.

''பொன் மலி நலந்திகழ் புகார்நகரில் வந்தோன்
கன் மனமுறாது தவுகங்கைகுல முற்றோன்
மன மகிழ் பொருட் கோடுயர் வாணிப முயன்றோன்
நன் மருத நாதரடி நாள்தோறும் நினைப்போன்'' (23)

எனும் சிறப்புக்களைக் கொண்ட மரபின் வழி பிறந்தவர். இவர் கருவாக உருவாகும்போது ஆடவன் உள்ளம் எவ்வாறு இருக்குமோ அவ்வாறே மகவுபிறக்கும் என்கின்ற அடிப்படையில், திருவெண்காடர் மகளிர் இச்சையால் வெளிப்பட்ட வீரிய மாதலின் அருணகிரியாரும் மாதரிச்சையில் ஈடுபட்டார். அடிகளது தவ வலிமையின் காரணமாக முருகனின் அருட்பேறும், தமிழ்ப்பாடல் இயற்றும் திறனும், துறவு பூண்டு அதை நெறியாக்கிக் காத்த நிலையையும் பெற்று விளங்கினார் என்பதைக் கீழ்வரும் பாடல் வழி அறியலாம்.

"கந்தலோகத்திலுறை பொய்யா மொழிப்பேர்க்
கவி அவள் கருப்பையுட் புகலும்
சுந்தரக் களப முலைமினார் கலவிச்
சுகப்பெருங் கடலும்நற் சுவைதோய்
செந்தமிழ்க் கடலும் செழிக்கு மென்றருளாற்
சேணிடத் திந்திரா தியரும்
சந்தனப் பொதியை முனிவனா தியரும்
தனித்தனி கருதினர் தாமே.'' (32)

எனும் பாடல் விளக்கத்தால் அறியமுடிகின்றது.

### மாயை விளையாட்டுச் சருக்கம்

இச்சருக்கத்தில் அருணகிரியார் புவியில் பிறந்து பல மாதர் களோடு தொடர்பு கொண்டவராய் இருந்தார். சிறுவயதிலேயே பாட்டி இறந்தார். பின்பு அவரின் தமக்கைக்குப் பொட்டுக் கட்டும் சடங்கு நிகழ்கின்றது. கிடைத்த வருமானத்தில் தாயின் அறிவுரையின்றி பெண்களோடு உழலும் தன்மைபெற்றவராய் அருணகிரியார் இருந்தார். இதனால் பெருநோய் அவரைப் பற்றியது. உடல் நலத்தில் கவனம் கொள்ளாதவராய் பிறமாதர்களோடு இன்பம் துய்த்த நிலையைக் கண்டு வெகுண்ட தமக்கை தன்னையே விலைமகளாக எண்ணி நடந்து

கொள் என கடுமொழி கூறியதால் மனம் மாறி செம்மையான வழியில் நடக்கலானார். தமக்கையின் கடுஞ்சொல்லும், தன்னுடைய கட்டுக்கடங்காத மோகநிலையும் அவரைத் திருவண்ணாமலையில் உள்ள வல்லாளன் கோபுரத்தின் மேல் ஏறி குதிக்க வைத்தது. அப்போது முழுநீற்றுப் பொலிவு இலங்கோடு, கோவணவுடை கையில் தண்டாயுதம் உடைய வனாகத் தோன்றிய முருகன் அருணகிரியாரைக் காத்து அருளுரை வழங்கினான்.

"இப்படிநீ உயிர்வெறுத்து விழலாமா?
முறைமையிதன் றினிமேல் செய்யேல்
அப்பவத்திற் செய்ததவம் காத்ததிவ்வா
றுயிரிழந்தோர் அனந்தம் கோடி
மெய்ப்பயனெல் லாமுனக்கிம் மூர்த்திநல்கும்
என்றொரு சொல் விளம்பிச் சுட்டி" (29)

ஆறெழுத்தின் விளக்கத்தைத் தந்தான் முருகன் என்கிறார்.

### அருட்பேற்றுச் சருக்கம்

அருணகிரிநாத அடிகள் திருவருணை எனப்படும் திருவண்ணாமலையின் கண் எழுந்துள்ள முருகப்பெருமானை வழிபட்டு, அருள்பெற்று பல நூல்களை எழுதி அனைவருடைய மனத்தையும் கவர்ந்தார்.

### வில்லிபுத்தூராழ்வார் கலகச் சருக்கம்

வில்லிபுத்தூராழ்வார் அருணகிரிநாதரிடம் வந்து தன்னிடம் வாதிட அழைத்தார். சந்தக்கவிபாடி அதில் தோற்பவர் காதை அறுப்பது வில்லிப்புத்தூரரார் வழக்கமாகக் கொண்டிருந்தார். எனவே மன்னர் முதலானோர் வில்லிபுத்தூராரிடம் வாதிட புலவர்களை அனுப்பத் தயங்கினர். கடைசியில் அருணகிரி நாதரை வேண்ட அவரும் வாதிட ஒப்புக்கொண்டார். வில்லிப் புத்தூரரார் ஆணவ மிகுதியால் கோடைக்காலத்து இடியைப் போல சந்தக்கவி பாடினார். அருணகிரிநாதரும் சிறப்பான சந்தக்கவிகளைப் பாடினார்.

"கோடையிடி யிடித்தாற்போல் முழக்கம் கொண்டான்
கூறி மற்றோர் கவிதொடுத்துக் கொள்ளும் முன்னம்
ஆடையம்பொற் பணியாதி யணியும் மற்றோன்

அவையறிய இக்கவிந மடைப்பைக் காரன்
சாடையினிற் சொல்லிடுவான் என நாள்தோறும்
தலைக்கேறு மாணவத்தால் தவறிச் சொன்னான்'' (32)

என ஆழ்வாரின் ஆணவத்தைச் சுட்டிக்காட்டுகிறார் சுவாமிகள். பின்னர் சந்தக்கவிக்குப் பொருளுரைக்கும் நிலையில் அருணகிரி நாதரிடம் வில்லிபுத்தூரார் தோல்வி அடைகின்றார். மேலும் அவரது காதை அறுக்காமலும் பெருந்தன்மையோடு அருணகிரியார் நடந்து கொண்டதை பாடல்களின் வழி அறிய முடிகின்றது.

**சம்பந்தாண்டான் பகைமைச் சருக்கம்**

திருவண்ணாமலையில் வாழ்ந்த சம்பந்தாண்டான் உமையம்மையை வணங்கி அருள் பெற்றவன். அருணகிரிநாதரின் புகழுக்கு இழுக்கிழைக்க வேண்டும் என எண்ணி, அருணகிரியார் தாம் வணங்கும் கடவுளைக்காட்ட முடியுமா என அரசனிடம் சம்பந்தாண்டான் கேட்டான். மன்னன் வேண்டுதலுக்கு ஏற்ப அருணகிரியாரும் முருகனை வேண்டி வரவைத்து காட்டினார். இதில் சம்பந்தாண்டான் அம்பிகை வராமையால் தோற்றான். இதை ஆசிரியர் அருணகிரியார் வேண்ட முருகன்,

''ஏறியதும் தூணிடைவந் தெய்தியதும்
ஒருகண மென்றியம்ப வந்தான்
வேறிணைதீர் அருணகிரிநாதனந்தக்
கணத்தில்மிக வெதும்பியேங்கிக்
கூறியபோ தெதிர்வரும் நீ இன்றெனக்கு
வருத்தமிகக் கொடுத்தாய் என்றான்'' (40)

வெளியில் வந்து அரசன் முதலானவர்களுக்கு முருகனின் அருள் முகத்தைக் காட்டினார். மன்னன் முருகன் ஒளி கண்ட அளவில் கண்பார்வை மங்கியது பின்பு இறைவனை வேண்ட கண்பார்வை வந்தது எனவும், இதைக் கண்ட அரசன் தான் செய்ய வேண்டியது என்ன என்று அருணகிரியாரிடம் வேண்ட முருகரின் தூணை ஒட்டி கோயில், கோபுரம், மதில், ஆயிரம்கால் மண்டபம் அமைக்கக் கூறினார். தன்னிடம் வாதிட்டு தோற்ற அழுக்காறுடைய அமணன் சம்பந்தாண்டான் நினைவாக திருக் குளம் ஒன்றும் அமைக்கச் சொன்னான். இந்நிகழ்ச்சியின் வாயிலாக அருணகிரியார்க்குப் பிற மதத்தினரையும் மதிக்கின்றப் பண்பு இருந்தமையை அறியமுடிகின்றது.

**பாரிசாதச் சருக்கம்**

சம்பந்தாண்டான் அருணகிரியாரின் பேரில் உள்ள பொறாமையின் காரணமாய் மன்னனிடம் பாரிசாத மலரைக் கொண்டுவர அருணகிரியாரை வேண்டுமாறு கூறினான். மன்னனும் முழுமனமில்லாமல் அருணகிரியாரை வேண்ட அடிகள் தம் தூல உடம்புடன் வானுலகம் செல்ல இயலாமையால், உடலை கோபுரத்தின் மேல்மாடத்தில் வைத்துவிட்டு கிளி உருவில் தேவருலகம் சென்றார். இவ்வேளையில் சம்பந் தாண்டான் கோபுரத்தில் கண்ட அருணகிரியாரின் உடலை மன்னனுக்குக் காட்டி இவர் போட்டியில் தோல்வி தாங்காமல் இறந்துவிட்டார் எனக்கூறி உடலை எரித்து சடங்குகள் செய்ய மன்னனை வேண்டினார். பின்பு தேவருலகம் சென்ற அடிகள் மலரோடு வந்து நடந்ததை அறிந்து சிறிதும் கலக்கம் இல்லாமல் மன்னனிடம் மலரைக் காட்டினார். மன்னன் சம்பந்தாண்டானின் சூழ்ச்சியில் மயங்கியதை எண்ணி வருந்தினான். இதிலும் தோல்வியுற்ற அமணன் காளியிடம் வேண்டி பூசைசெய்து அக்கிளியைக் கொல்ல வேண்டினான் முருகப்பெருமான் அருணகிரி நாதரிடம், நீ அம்பிகை மீது ஒரு திருப்புகழ்க்கவி சத்துருசங்காரம் வேண்டிப்பாடு என்றனர். இதனால் சிங்கவாகனத்தின் மீது வந்து காளி அமணனையே கொன்றாள், இதில் முற்பகல் செய்யும் வினை பிற்பகல் அவனையே கொல்ல வழிசெய்தது என்பதை ஆசிரியர் அழகுபட விளக்குகின்றார். மேலும் வழிபாட்டில் மது, மாமிசம் படைத்துச் செய்பவர் இறுதியில் இறப்பார் என்பதையும் கீழ்வரும் பாடலால் தண்டபாணி சுவாமிகள்

கண்ணி ரண்டுநா வொடுமிகப் பிதுங்கின
கருங்குருதியின் சோரி
மண்ணிலோடின மலசலங் கழிந்தன
வஞ்சகத் தொடு மாண்டான்
புண்ணியத்தினர் நினைக்கரும் வெறிப்புனல்
புலைத்தசை யிடும் பூசை
பண்ணி டும்பல ரிவ்வணமடிவது
பாரினில் வழக்காமால்'' (33)

என அழகுபடக் கூறுகின்றார்.

மேலும் கிளிவடிவோடு ''ஞானாநுபூதி'' பாடி முருகனின் வலத்தோளில் அமர்ந்தது.

### அருணகிரிநாதரின் வீடுபேறு

அருணகிரியார் அவதாரம் செய்த நாள் புரட்டாசி மாதம் செவ்வாய்க்கிழமை உத்தரநாள். அவதாரம், வீடுபேறு இவை இரண்டும் ஒரேநாள் என்பதை ஆசிரியர் விளக்குகிறார். "அருணகிரிநாதரது தூல உடம்பின் மறைவு முழுமதி நாளென்றும் உத்தரநாள் கிளியாகியிருந்தவர் வீடுபேறுற்றநாள் என்றும் கொள்வது முறை" என விளக்க உரைசெய்த திருமுருகதாச அடிகள் கூற்றின் வழி அறியலாம்

### கோபுரத்துச் சருக்கம்

சிவத் தொண்டனான வல்லாளன் என்பவனின் பக்திப் பெருக்கையும், தொண்டினையும் இச்சருக்கம் உணர்த்துகின்றது. வல்லாளனின் பக்திச் சிறப்பை இறைவன் காணவேண்டிக் கிழப்பருவமெய்தி பெண் வேண்ட, தனது மனைவியையே அடிகளார்க்குத் தந்தவன் வல்லாளன் என்பதால் இச்சருக்கத்தில் மன்னனது பக்தியுணர்வை விளக்குவார் சுவாமிகள்.

இவ்வாறு அருள்மிகு தண்டபாணி அடிகளால் எழுதப்பட்ட 'அருணகிரிநாத அடிகள் புராணம்' அருணகிரியாரின் வாழ்வியல் கூறுகளைத் தக்க உவமைகளோடு எடுத்துக் கூறுகின்றது. மேலும் அனைத்துப் பாடல்களிலும் சந்த அமைப்பு மேலோங்கி நூலிற்குப் பெருமை சேர்க்கின்றது.

# சுவாமிகள் காட்டும் அறம் பொருள் இன்ப-கொள்கைகள்

மு. மூர்த்தி

வீட்டை உள்ளடக்கி அறம், பொருள், இன்பத்தைச் சுவாமிகள் அமைத்த திறம் நோக்கி அறம், பொருள், இன்ப – கொள்கை பற்றிய ஆராய்ச்சி அமைகின்றது. அறம், பொருள், இன்பம், வீடு என்பதைப் பற்றி 'நான்குநூல் – அருளாட்சி, என்னும் நூலில் தண்டபாணி சுவாமிகள் கூறினாலும், மக்கள் வாழ்வியலைக் கூறிய மனுநெறித் திருநூலில் அவற்றைத் தனித்தனிப் பிரித்துக் காட்டாமை நோக்கி அறம் பொருள் இன்ப அடிப்படையிலேயே வீடு பற்றி சுவாமிகள் கொள்ளுவதால் அறம், பொருள், இன்பத்தை முன்னிலைப்படுத்தி இக்கட்டுரை அமைகின்றது.

தண்டபாணி சுவாமிகள் 'கொல்லாமை' என்ற ஒன்றை மிகவும் வலியுறுத்தி அதன் அடிப்படையிலேயே எல்லா அறங் களையும் விளக்கிச் செல்லுகின்றார். ஏறத்தாழ நாற்பத் தொன்பது அதிகாரங்களை அறச்செயல்கள் அடிப்படையில் மனுநெறித் திருநூலில் பேசியுள்ளதைக் காணமுடிகின்றது. 'நான்குநூல் – அருளாட்சி' என்னும் நூலில், தண்டபாணி சுவாமிகள் பொது நூல் என்னும் முதற்பகுதியில் அறம், பொருள், இன்பத்தை பொது அடிப்படையிலும், சிறப்பு அடிப்படையிலும் பேசியுள்ளார்.

### அறத்தின் தலைமை

'நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே'

என்பது சங்க இலக்கியப் பாடல். நடை என்பது ஒழுக்கத்தைக் குறிக்கும். அந்நல்லொழுக்கத்தை மக்கள் கடைப்பிடித்து ஒழுகு வதற்காக மன்னன் நல்நெறியில் நடந்து மக்களை நல்வழி நடத்தும் கடப்பாடுடையவன் என்ற அடிப்படையில், தவசி கள் கடமைகளாக,

"செங்கோல் மன்னர்ச் சீர்பெறத் தாங்கலும்
கொடுங்கோல் அரையர்க் குலத்தொடு கடிதலும்
தவசிகள் கடன்எனச் சாற்றிடல் முறையே"

(சத்திய சூத்திரம் சத்தியவாசகம்-ப. 7)

என்ற சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

**அறத்தின் செயல்**

"கொல்லாமை" என்பதை எல்லா வகையிலும் எடுத்துக் காட்டும் சுவாமிகள் கொல்லும் தொழில் உடையவனையும் நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்ற அடிப்படையில் கூறினாலும், கொல்லுதலாகிய தொழிலை உடையவனைக் கொல்லும் கொலையை அறமே செய்யும் என்று,

"கொல்லுந் தொழிலோரைக் கொன்று கொலைநீக்குமறம்
புல்லுமொருவன்புவி யனைத்து – மெல்லுறழத்
தோன்றும் பெருநலத்திற் றோய்வதன்றி மற்றவர்தா
மேன்றுமுயன் றாலுமிலை."

(நான்குநூல்-அருளாட்சி, பொதுநூல் பா. 4)

என்ற பாடலில் கூறுகின்றார் சுவாமிகள்.

கொலை நீக்குகிற அறத்தைப் பொருந்தி ஒருவன் பூமியில் பெரிய நலன்களையெல்லாம் பெறலாம். அவ்வாறின்றி எவ்வகை முயற்சியாலும் நன்மைபெற முடியாது என்று அப்பாடலில் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.

**அறக்கூடு**

வீடு அடங்கிய அறம், வீடு அடக்கிய அறம் எனவும் அறமானது விளங்குகின்றது. 'வீடு' என்பது கூடுபோல இருக்க அதற்குள்ளே அறமே அமைதல் என்பதும்; அறம் என்பது கூடு ஆகவும் அதனுள்ளே வீடு அடங்குகின்றது என்பதும் அதன் விளக்கமாகும். அவ்வகையில்,

"எல்லாத் தவமும் இறைவணக்கம் என்பது போற்
கொல்லாமையே அறத்தின் கூடென்று – சொல்லாத
நூலோன் எவனெனினு நுண்ணியன் அன்றென்று நல்ல
மேலோர்தம் வாயுரைக்குமே."

(நான்குநூல்-அருளாட்சி-பொதுநூல், அறம், பா. 7)

என்ற பாடலை தண்டபாணி சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.

தவசிகள் செய்கின்ற எல்லாத் தவமும், இறைவனிடம் சென்று சேர்வதுபோல கொல்லாமையின் மூலமாகச் செயல்கள் அனைத்தும் அறத்தைச் சாரும் என்று மேற்பாடலில் காட்டினார் சுவாமிகள்.

தண்டபாணி சுவாமிகளிடம் கேரள நாட்டில் வள்ளுவர் ஒருவர் உங்களுக்கு பிறவி கிடையாது என்று கூறினார். அப்போது சுவாமிகள் இறைவனிடம் உலகில் கொலையை நீக்குவதற்காக எத்தனை பிறவி வேணுமானாலும் எடுப்பேன் என்று கூறுகின்றார்.

'வீடும் வேண்டா விறலின் நீங்கினார்'

என்பது நாயன்மார்களைச் சேக்கிழார் கூறுவதைப் போன்று சுவாமிகள் 'கொல்லாமை' என்ற அறம் நிலைநாட்டப் பெறுவதற்காக வீடும் வேண்டாம் என்று குறித்தார். அவ்வகையில் 'கொல்லாமை' என்ற அறமே வீட்டின் உள்ளடக்கியிருப்பதை அறியலாம்.

**அறக்கூறுகள்**

மனுநெறித் திருநூலில் அறக்கூறுகளை பலபட விளக்கியிருக்கிறார். 'கொல்லாமை' இல்லாமல் எந்த தருமமும் அறமாக ஆகாது என்ற அடிப்படையில் சுவாமிகள் 'நான்குநூல்-அருளாட்சி' எனும் நூலில் கூறியுள்ளார்.

''கொல்லாமை யின்றித் குறிக்குந் தருமங்கள்
எல்லாம் புரிந்திடினும் எய்தாதே – இல்லாமை
உற்றோர்க்கு நன்றா வுயர்தரு மமவ்வொன்றே
கற்றோர்க்குந் தோன்றுங் கதி.''

(நான்குநூல் அருளாட்சி, பொது நூல்-அறம், பா. 5)

என்ற பாடல் கொல்லாமை அடிப்படையிலேயே எல்லா தருமங்களும் அமையும் என்று உணர்த்துகின்றது.

பிற உயிர் உடம்பை உண்ணுபவர்க்கு மானம், கற்றோர் உறவு, கல்வி, பெற்றோரைப் போற்றுதல், புகழ், புண்ணியத்து ஏற்றம், வீடு ஆகியன இல்லை என்றவாறு,

''மற்றோருடலருந்து மானிடர்க்கு மானமில்லைக்
கற்றோருற வில்லைக் கல்வியில்லைப்-பெற்றோரைப்

போற்றல் வினவும் புகழில்லைப் புண்ணியத்து
ஏற்றமில்லை வீடுமிலை''
(நான்குநூல் அருளாட்சி, பொதுநூல்-அறம், பா. 8)

என்ற பாடலை அமைத்தார். இப்பாடலில் ஊன் உண்ணாது மானம், கற்றோர் உறவு, கல்வி, பெற்றோரைப் போற்றுதல், புகழ், புண்ணிய ஏற்றம் போன்ற செயல் அறங்களும் வீடும் கைக் கொள்ளப்பெற வேண்டும் என்பதை சுவாமிகள் உணர்த்தி யுள்ளார். மானம் முதலாக வீடுவரை அனைத்து அறவிளைவு களையும் 'கொல்லாமை' என்ற அடிப்படையில் விளக்கியுள்ளார்.

'கொல்லாமை' என்ற செயலானது அறத்திலறம் என்றவாறு எல்லா அறங்களையும் உள்ளடக்கியதாக,

''அறத்திலறம் கொல்லாமை ஆமென் றுணரும்
திறத்தினர்க்கே உண்மைத் திரு''
(மனுநெறித்திருநூல்-கொல்லாமை-5, குறட்பா-1)

என்னும் குறட்பாவில் கூறப்பெற்றது. 'கொல்லாமை' என்பது 'உயிரிரக்கம்' என்ற செயல் தன்மையில் நிலைநாட்டப்படும் என்பது சுவாமிகள் கருத்தாகும்.

சுவாமிகள் வாழ்வியலிலும் அறவெற்றியை நிலையாட்டிய வரலாறு, வயிற்றுவலிப் பிள்ளைக்கு அந்நோயைப் போக்க உயிர்ப்பலியிடாது தடுத்து திருநீற்றினால் நீக்கிய நிலையில் அறியப்பெறும்.

''அயிற்றலைவா தென்பழனி அப்பா இவ்சேய்தன்
வயிற்றுவலி முற்றும் அறமாற்றி - வெளிற்புழுப்போல்
ஏழைகள்வா டப்படுத்தும் இப்பேய் உயிர்குடித்திட்டு
ஊழைவென்றோர் உண்டென் றுணர்த்து''

என்னும் பாடல்வழி பிள்ளை வயிற்றுவலி நீக்கியது அறியப் பெறுகின்றது.

### பொருட்கொள்கை

பொருள் பற்றிய கொள்கைகளை ஏறத்தாழ 38 அதிகாரங் களில் மனுநெறித்திருநூலில் எடுத்துக் கூறியுள்ளமையை காண முடிகின்றது. உழவுத்தொழில், கலைத்தொழில், வாணிகம், அரசன், தெய்வம், படை, குடி முதலான கூறுகளை விளக்கிப்

பயன்பாட்டு அடிப்படையில் பொருளியலைத் தண்டபாணி சுவாமிகள் விளக்கியுள்ளார். தண்டபாணி சுவாமிகள் அன்பினுடைய செயல்நிலையாகிய உயிரிரக்கத்தை வைத்து அறத்தை விளக்கியதைப் போல அருளினுடைய அடிப்படையில் பொருளைக் காண வேண்டும் என்று விளக்குகின்றார்.

''அருளும் பொருளும் ஒன்று என்று அறியவல்லார்
பொருளும் அருளும் பொதுவே – தெருளும் உயர்
நெஞ்சுடையாறும் பொதுவே நீணிலத்தோர் கண்ட தொழில்
அஞ்சுடையானும் பொருவேயாம்''
(நான்குநூல் அருளாட்சி, பொதுநூல், பொருள்-பா. 10)

இப்பாடலில் இறைவனுடைய அடிப்படையில் பொருளை மனித நோக்கில் நான்கு வகைகளில் பிரித்துக் காட்டுகிறார்.

1. அருளும் பொருளும் ஒன்று

உலகில் உள்ள பொருள்கள் யாவும் அருள் என்பதாகிய அன்பின் மூலம் செயற்படுத்துவதற்கு உரிய வகையில் ஒன்றே. பொருள்கள் உலகில் பலவாறாகக் காணப்பட்டாலும் எல்லாப் பொருள்களையும் பயன்படுத்த விழைகிறோம். அணுவைக்கூட அழிப்பதற்காகப் பயன்படுத்தாமல் ஆக்கத்திற்குப் பயன்படுத்த வேண்டும் என்பது இன்று உலகம் வலியுறுத்தும் கொள்கை. பொருள்கள் மறத்திற்காகப் பயன்படுத்தப்படலாம். ஆனால்' மக்கள் பயன்பாட்டிற்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்று கூறப்படுவது உயிர்களுக்கு அன்பு செய்யும் அடிப்படையிலானது. எனவே, அருளே பொருளாக வேண்டும் என்ற அடிப்படையில் அருளும் பொருளும் ஒன்று என்று கூறினார் சுவாமிகள்.

2. பொருளும் அருளும் பொதுவாதல்

பொருட்பயன்பாடு அருளாகிய அன்பின் மூலமாகச் செயல் படுத்தப்படும் வகையில் அதனைச் செயல்முறைப்படுத்தி அருளும் பொருளும் ஒன்று என, அறிந்தவருடைய பொருளும் அவருடைய அன்புநிலைச் செயலும் பொதுவுக்கு அமைவதாகிறது. அதாவது அவருடைய பொருளும் அன்பினுடைய செயலும் சமுதாயத்திற்கு ஆகிறது என்பதாகும்.

### 3. பொருள் பயன்படச் செய்த நெஞ்சம் பொதுவாதல்

சமுதாயத்திற்குப் பொருள்கள் யாவும் பயன்படுமாறு செயல் படுத்தியவருடைய நெஞ்சம் பொதுநலம் நோக்கியபொதுமை நெஞ்சம் ஆகிறது. தண்டபாணி சுவாமிகள் அதன் மூலம், பொருள் பயன்பாடு பொதுமை நெஞ்சத்தை உண்டாக்க வேண்டும் என்பதைக் குறித்தார்.

### 4. உலகுக்கு ஐந்தொழில் செய்த இறைவனும் பொது

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் இறைவன் உயிர்களுக்காகச் செய்வதாகக் கூறுவர். உயிர்கள் ஈடேறுவதற்காக இறைவன் பொருள்களைப் படைத்துத் தருவது பொருளின் மூல நிலை யாகும். இறைவன் உயிர்கள் குறிக்கோள் அடைய பணியாற்றி பொருளைத் தந்த அந்த மூலநிலைத் தன்மையில், உயிர்களுக்கு உலகில் பொருள்கள் பயன்பட வேண்டும் என்பது தண்டபாணி சுவாமிகள் கருத்து.

மேற்கண்ட நான்கு கூறுகளில் பொருள்களின் படைப்புத் தன்மை நோக்கியும் செயல்பாட்டுத் தன்மையை நோக்கியும் பொதுவாகப் பயன்படுத்தப் படுதலையும் அன்பின் அடிப்படையில் செயல்படுத்தப்படுவதையும் சுவாமிகள் கூறினார்.

பொருட்பாலில் முதற்கண் அமைந்தது 'அரசியல்'. அதனுள்ளும் முதற்கண் அமைந்தது 'இறைமாட்சி' என்னும் அதிகாரம். அரசினுடைய செயல்தன்மையில் திருவள்ளுவர் கூறிய பல நிலைகளில்,

> ''இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
> வகுத்தலும் வல்லது அரசு''

> ''முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப்படும்'' (திருக்குறள் 385, 388)

என்ற இரு குறட்பாக்களில் கூறப்பெறுவன பொருட்கொள்கை நோக்கிய கருத்துக்களாகும்.

பொருளைச் செய்தல், ஈட்டுதல், காத்தல், முறைப்படி வகுத்துத்தருதல் ஆகிய நால்வகைச் செயலாலும் அரசானது பொருளியலை மக்களுக்கு ஆக்கவேண்டும் என்றும்; முறைவழி

பொருளை செயற்படுத்துகின்ற மன்னவனே இறைவன் ஆவான் என்றும் திருவள்ளுவர் கூறினார். இறைத்தன்மையில் பொருளைப் பொதுவாகப் பயன்படுத்தவேண்டும் என்று சுவாமிகள் கூறியதுடன்,

> ''வேந்தன் கைகோற்கும் விறல்வீரர் வெம்போர்க்குஞ்
> சாந்தமிகுத் தோங்குந் தவத்தினுக்கு-மேந்துமுலை
> மாதர் நல்லாரின்ப வளமைக்கும் மற்றெவைக்கும்
> போதநலங் காட்டும் பொருள்''
>
> (நான்கு நூல் அருளாட்சி, பொதுநூல்-பொருள் பா. 1)

என்ற பாடலில் வேந்தன், வீரர், தவம், இன்பம் ஆகிய கூறுகளால் பயன்படுத்தற்குரிய அடிப்படையில் சுவாமிகள் காட்டியுள்ளார்.

முதற்கண் வேந்தர்களால் கைக்கொள்ளப்படுவதாகப் பொருள் இருக்க வேண்டும் என்று கூறினார். அதன்மூலம் நாட்டினுடைய மன்னன் அல்லது தலைவன் பொருள்களை முறைப்படி செயல் படுத்துபவனாக அமைய வேண்டும் என்று கூறினார்.. அவ்வாறு வேந்தன் தொடங்கி போர், தவம், இன்பம் ஆகிய எல்லாநிலைகளிலும் அறிவின் அடிப்படையிலும் நன்மையின் அடிப்படையிலும் பொருளானது செயல்படுத்தப் பெற வேண்டும் என்பதை,

> ''எவைக்கும் போத(ம்) நலம் காட்டும் பொருள்''

என்பதாற் குறித்தார். பொருளியலிலும் தண்டபாணி சுவாமிகள் வீடு பற்றிய நிலையை அமைத்துக்காட்டியமையை பொருளானது தவத்திற்கும் பயன்படவேண்டும் அறிவையும் நன்மையையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் என்று சுட்டியதால் உணரலாம்.

### இன்பக் கொள்கை

பெண்களை அடிப்படையாகக் கொண்டு 'இன்பவியல்' பொதுவாகக் கூறப்பெறும் நிலையினை வள்ளுவர் அமைத்த காமத்துப்பாலால் உணர முடிகின்றது. அத்தகைய இன்பத்தை அடைய வைக்கிற ஒருவகை நிலையிலும் பொருளானது பயன்பட வேண்டும் என்று பொருளியல்ல் தண்டபாணி சுவாமிகள் கூறியுள்ளார்.

ஐம்புல அடிப்படையில் காம இன்பத்தை ஏறத்தாழ 28 அதிகாரங்களில் விளக்கியுள்ளமையை காணமுடிகிறது.

காம இன்பத்தை உலகில் பொருள்கள் உலவுவதற்கு அடிப்படை என்ற வகையில்,

''காமப் பெருக்கமின்றேல் காய்கதிரும் வான்மதியும்
நேமத் துலவா நிதம்''
(மனுநெறித்திருநூல் - இன்பம், குறட்பா 2)

என்ற குறட்பாவில் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார்.

காம இன்பத்தை 'காமம்' என்ற தலைப்பில் விளக்கும் சுவாமிகள், ஐந்து பொறிகளுக்கும் அகத்திற்கும் ஆனந்தத்தைத் தருவதாக,

''ஐந்து பொறிக்கும் அகத்தினுக்கும் ஆனந்தம்
தந்துறுதல் காமத் தகை'' (மனுநெறித்திருநூல், இன்பம் குறட்ா 1).

என்ற பாடலில் 'காமத்தகை' கூறியுள்ளார்.

''இன்பம் பலவும்வலி தெய்து நலந்தேர்ந் தோர்க்குத்
துன்பமனைத்துந் தொலையுமே - யன்பது
இருணலியச் செய்துவக்கு மெம்பிரானீயு
மருணலமே பேரின்பமாம்'
(நான்கு நூல்-அருளாட்சி பொதுநூல்-இன்பம், பா. 10)

என்ற பாடலில் உலகில் உள்ள இன்பங்கள் யாவும் வலிது எய்தப்பெறுவன என்றும் நன்மையில் தேர்ந்தவர்களுக்கு துன்பம் நீங்கும் என்று அன்பின் செயலால் அறியாமை நீக்கி இறைவன் தரும் அருள்நலமே பேரின்பம் என்று கூறினார். இதில் சுவாமிகள் இருவித நன்மையைக் குறிப்பிடுகின்றார். ஒன்று நாம் தேர்ந்த நலம்; மற்றொன்று இறைவன் தரும் அருள்நலம். நாம் தேர்ந்த நன்மையின் செயலால் இறைவன் அருள் நலத்தைத் தருவான் என்பது தண்டபாணிசுவாமிகள் கருத்து. இக்கருத்தினை காமம் முடிவில் பேரின்பம் பெறலாம் என்றவாறு காமம் என்ற தலைப்பின் இறுதிக் குறட்பாவில் சுவாமிகள் கூறியுள்ளார்.

''பத்தி முதல் மூன்றினுக்கப் பாலாய்ப் பரத்தொடுசேர்
முத்தியதே காம முடிவு'' (மனுநெறித்திருநூல் - காமம், குறட்பா 10)

என்பது அப்பாடல். காமத்தின் இன்பநிலைச் செயலானது பக்தி, வைராக்கியம், ஞானம் ஆகிய மூன்றினை தோற்றுவிக்கும் பால் போல அமையவேண்டும். பாலில் இருந்து தயிர், வெண்ணெய், நெய் ஆகிய மூன்றும் படிப்படியாகக் கிடைப்பது போல காமப்பால் அதனைத் தர வேண்டும் என்றார் சுவாமிகள். அந்த மூன்றால் பரம்பொருளோடு சேருகின்ற முக்தி கூடும் என்றார் சுவாமிகள்.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கில் வீடு பற்றி 21 தலைப்புகளில் தண்டபாணிசுவாமிகள் மனுநெறித்திருநூலில் பாடியுள்ளார். சாலோகம், சாமீபம், சாருபம், சாயுச்சியும் ஆகிய முத்திநிலைகளைக் கூறுவதுடன் 'திருவருட்சார்பு'என்ற அதிகாரத்தை வைக்கின்றார் 'திருவருட்சித்து' என்ற அதிகாரத்தில் ஒருவருக்கும் தீங்கு தராத உள்ளம் உடையவர் களுக்குத் திருவருள் சித்திகள் கைகூடும் என்று; முத்தியின் முடிநிலையை – பிறருக்குத் தீங்கியற்றா நிலையை முதற்செயலால் இணைத்து,

"ஒருவருக்கும் தீங்குஇயற்றா உள்ளம் உடையார்க்குத்
திருவருட் சித்து எய்துவது உண்டோ''
(மனுநெறித்திருநூல் – 115 – 1)

என்ற குறட்பாவில் கூறினார். அத்தகைய திருவட்சித்து நிலையின் சார்பை 'திருவருட்சார்பு' நிலையால் பெறலாம் என்று இறுதியாக வைத்து மனுநெறித்திருநூலை முடித்துள்ளார் சுவாமிகள்.

அறம், பொருள், இன்பம் என்ற மூன்றாலும் பயிற்சியமைப் பில், வீடு என்பதனை, சுவாமிகள் இணைத்தே காட்டியுள்ளார். கொல்லாமை அடிப்படையில் அறத்தில் வீட்டை இணைத்தும்; தவமாக்கும் பயன்பாட்டில் பொருளில் வீட்டை இணைத்தும்;. முத்திக்கு பக்தி, வைராக்கியம், ஞானம் தரும் நிலையில் இன்பத்தில் வீட்டை இணைத்தும் சுவாமிகள் காட்டிய வண்ணம் தண்டபாணி சுவாமிகள் காட்டும் அறம், பொருள், இன்ப கொள்கைகள் அறியப் பெற்றது.

# சம்பந்தருக்குச் சம்பந்தம் உண்டா?
# (வண்ணச்சரபத்தின் எண்ணச்சரங்கள்)

சி. மெய்கண்டான்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சென்ற நூற்றாண்டில் (1839 - 1898) புகழ்பட வாழ்ந்த அருளாளரும்' ஆன்மீக இலக்கியவாதியும் ஆவார். 'கௌமாரம்' எனப்படும் முருகவழிபாட்டு நெறியாளர் முருகனை நேரிற்கண்ட மூவரில் இவரும் ஒருவர்! கொல்லா நெறியினை மேற்கொண்டு ஒழுகிய பேரருளாளர்! எல்லா மதங்களையும் சமமாக நேசித்த சமரச ஞானி!

இத்தகு அருளாளராம் வண்ணச்சரபம் சுவாமிகள் செய்த பலநூல்களில் 'புலவர் புராணம்' என்பதும் ஒன்று. புலவர் புராணம், 'அகத்திய மாமுனிவர்' முதலாகக் 'கண்கண்ட புலவர்' ஈறாக உள்ள தமிழ்ப் புலவர் பெருமக்களைப் பற்றிப் பேசுவது. எழுபத்திரண்டு சருக்கங்களைக் கொண்டது; செய்யுள் நடையது; புலவர் வரலாற்றினைப் புகல்வது.

அவ்வரலாற்றுள் ஆறாவது சருக்கமாகத் திகழ்வது 'திருஞான சம்பந்தர் சருக்கம்' ஆகும். இச்சருக்கம் 78 செய்யுள்களைக் கொண்டது. ஞானப்பிள்ளை, சைவந்தழைக்க வந்த சிவப் பிள்ளை, எல்லா வழக்கினையும் தென்தமிழே வெல்லவந்த தமிழப் பிள்ளையான திருஞானசம்பந்தர் வரலாற்றினை உரைப்பது. திருஞானசம்பந்தர் வரலாற்றினைப் பெரிய புராணம் விரிவாகப் பேசுகின்றது. 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்பது பழமொழி. சேக்கிழாரால் மிகவிரிவாகப் பேசப்பெற்ற ஞானசம்பந்தர் வரலாற்றை மீண்டும் இங்கே பேசுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

திருஞானசம்பந்தரின் வாழ்வில் நிகழ்ந்த – அவர் நிகழ்த்திய – தலைமையான செயல் பாண்டி நாட்டைச் சைவம் தழைக்கும்

நாடாக மீண்டும் மாற்றியது. பாண்டிநாடும், அந்நாட்டு மன்னனும் வேத மறுப்புச் சமயமாகிய சமண சமயத்தைக் கைக் கொண்டு ஒழுகிவந்தனர். சைவசமயம் தன்நிலை குன்றிச் சிறுமை நிலை உற்றது. திருஞானசம்பந்தரின் வரலாற்றைப் பேசுகின்ற தண்டபாணி சுவாமிகள் சமண முனிவர்களை வாதில் வென்று மேம்பட்ட அந்தச் செயலையே விரிவாகப் பேசுகின்றார். ஆனால், பெரிய புராண ஆசிரியர் இக்கட்டத்தினை விவரிக்கும் முறைக்கும், தண்டபாணி சுவாமிகள் விவரிக்கும் முறைக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. அதுபற்றி விளக்குவதே இக்கட்டுரையின் குறிக்கோள்.

எண்ணாயிரம் சமணர்கள் கழுவேறிய இந்நிகழ்ச்சியினை வேறு சில நூல்களும் கூறுகின்றன. பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்தில் சமணரைக் கழுவேற்றிய படலம் (63) இதுபற்றிப் பேசுகின்றது. திருவாலவாயுடையார் திருவிளை யாடற் புராண ஆசிரியர் பெரும்பற்றப் புலியூர் நம்பியும் இது குறித்துக் கழுவேறின திருவிளையாடல் (38) என்ற பகுதியில் பேசுகின்றார்.

தம் மதக் கொள்கையினை எடுத்து முன்னிறுத்தி வாது செய்து தன் கொள்கையினை நிறுவிப் பிற மதத்தினரை வெல்லுவது எந்நாளும், எந்நாட்டிலும் உள்ள ஒன்றுதான். மணிமேகலை அவ்வாறு வாதுசெய்து பிற மதங்களை வென்று தன் மதமாகிய புத்த மதத்தையே 'மெய்ச்சமயம்' என நிறுவு கின்றார் என்பதைச் சாத்தனார் காட்டுகின்றார்.

வெப்பு நோய் தீர்த்துத் திருநீற்றின் பெருமையினை உலகுக்கு வெளிப்படுத்திய திருஞானசம்பந்தர் அனல்வாதமும், அதன்பின் புனல்வாதமும் செய்ய ஒப்புகின்றார். அனல் வாதத்திலும், புனல் வாதத்திலும் இறைவன் திருவருளால் வென்று உயர் கின்றார். சமணர்கள் எண்ணாயிரவர் தோற்றுப் போகின்றனர். எண்ணாயிரம் பேரும் கழுவில் ஏறுகின்றனர். ஏறுகின்றனரா? ஏற்றப்படுகின்றனரா? என்பது கேள்வி.

சேக்கிழார் என்ன கூறுகின்றார்? வாதில் தோற்ற இந்தச் சமணர்கள் "கொல்நுனைக் கழுவில் ஏற முறை செய்க" (திருத். செ. 853) என மன்னவன் மாறன் அமைச்சர் குலச்சிறை யாரைப் பணிக்கின்றான் என்கின்றார்.

இதனைக் கேட்டிருந்த சம்பந்தர் அப்பொழுது என்ன செய்தார்? வாளா விருந்தார்; ஏதும் பேசாது சும்மா இருந்தார்! ஏன் அவ்வாறு பேசாது இருந்தார்? அந்த நிலையில் அவ்வாறு பேசாது இருந்தமை அவரின் அருள் உள்ளத்திற்குப் பொருந்துமா? வேண்டாம் - கழுவேற வேண்டாம் - என்று ஒப்புக்காவது தடுத்திருக்கலாமே! அருள்நிறை ஞானக்கண்ணு அவ்வாறு பேசாது இருந்தமை சேக்கிழார் உள்ளத்தையும் பாதித்திருக்கும் போலும்! எனவேதான், சம்பந்தரின் நிலை குறித்து ஒரு விளக்கம் கூறுகின்றார்.

"புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினும், சைவர் இருந்து வாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடாதிருந்த வேலை"
(திருத். செ. 854)

என்கின்றார்.

உண்மையில் சமணர்கள்மேல், ஞானசம்பந்தருக்கு 'இகல்' (மாறுபாடு / வெறுப்பு) இல்லை; என்றாலும், மன்னன் கூறி அதனைக் கேட்ட சம்பந்தர் ஏன் அதனைத் தடுக்காது வாளா இருந்தனர் என்றால், சைவர்கள் இருந்த மடத்தில் தீவைத்த அந்தத் தகவிலாச் செயலுக்கான தண்டனை, எனவே அது சாலும் (பொருந்தும்) என்பதனால் 'வேந்தன் செய்கை(யினை) விலக்கிடாதிருந்தார்' என்கின்றார்.

எண்ணாயிரவரும் கழுவில் ஏற்றப்படவில்லை; தாமே ஏறினார்கள் என்றார் சேக்கிழார்

ஆனால், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், இந்த நிகழ்வு குறித்து அவர் காலத்தே உலகில் வழங்கி வந்த ஓர் உலக வழக்குச் செய்தியினைத் தம் நூலுள் பதிவு செய்கின்றார்; அது தொன்று தொட்டு உலகில் வழங்கி வருகின்ற செய்தியே! புலவர் புராண நூலுடையார், இதுபோன்று உலகில் வழங்கி வரும் செய்திகளையும் தம்நூலுள் பதிவு செய்து விடும் இயல்புடையவர் என்பதனைப் பல இடங்களில் காணலாம்.

திருஞானசம்பந்தர் வாதத்தில் வென்ற அந்நிலையில்; சமணர்களைப் பிடிக்காத சிலர் இதுதான் தக்கசமயம் என்று

சமணர்களைக் கழுவேற்றும்படி மன்னனிடம் கூறியிருக்கலாம்; இது இயல்பானதுதான். மன்னனும் அதற்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கலாம்; இதுவும் இயல்பானதுதான். எண்ணாயிரம் சமணர்களும் வேறுவழி இல்லாது தாங்கள் கூறியதற்கேற்ப ஒத்துக்கொண்டதற்கேற்ப-கழுவில் ஏறி உயிர்விட்டிருக்கலாம்; இதுவுங்கூட நடக்கக் கூடிய இயல்பான ஒன்றுதான்! ஆனால், அருள்பெருகு தனிச் சிவத்தின் பிள்ளையாகிய ஞானசம்பந்தர் இந்நிலையில் இவ்வளவையும் பார்த்துக் கொண்டு ஏதும் பேசாது 'வாளா' –சும்மா– இருந்தார் என்பது இயல்பாகத் தோன்றுகின்றதா? அது அவரின் அருளாண்மைக்குப் பொருந்துவ தாகுமா?

சேக்கிழார், 'இகலிலர்' எனக்கூறுகின்றார். அவர்கள்மேல் 'வெறுப்பற்றவர்' என்றால் தடுத்திருக்க வேண்டும். அதுதானே 'அன்பேசிவம்' என்ற கோட்பாட்டினை நிறுத்தவந்த ஞான சம்பந்தரின் பண்பாக இருந்திருக்கமுடியும். "சைவர் இருந்து வாழ் திரு மடத்தில் தீ வைத்ததனால் பேசாமல் இருந்தார், அவர்களுக்கு அந்தத் தண்டனை தக்கதே என" என்றால், சைவர் இருந்த மடத்திற்கா தீ வைத்தார்கள். சம்பந்தர் தங்கி இருந்த மடத்திற்கா தீ வைத்தனர். (அவ்வாறு இல்லை என்றால், சம்பந்தர் வருவதற்கும் முன்பேயே சைவ மடங்கள் அனைத்திற்கும் அல்லவா? தீ மூட்டி இருக்கவேண்டும் அச்சமணர்கள்.)

உண்மையில் அப்பொழுது நடந்த நிகழ்ச்சி இதுவே எனக் கூறும் சேக்கிழார் கூற்றுப் பொருத்தமாகத் தெரியவில்லை. சேக்கிழார் கூறும் சமாதானம், ஞானசம்பந்தரின் இயல்பினைச் சரியாகப் புலப்படுத்துவதாய் இல்லை; அவரின் புகழைக் கூட்டு வதற்கு மாறாகக் குறைப்பதாகவே உள்ளது.

இங்குதான், இந்நிகழ்ச்சி குறித்து உலகில் 'வாய்மொழி'யாக வழங்கிவரும் ஒரு வழக்காற்றினைக் கூறுகின்றார் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள். அது என்ன?

"அவர் எண்ணாயிரம் பேர்களும் கழுவால் ஆவி
 விட்டனராம் அதை விரித்து
விவரமாச் சொல்வார் சிலர் அதுவீணே! வென்றி
 தோய் தமிழ் விரகனார் தமது

பவளவாய் கொடன்னவர் முனிரெம்மைப் பழித்திடாது
நும் பதத்தில் வாழ்மின் எனா
உவகையோடுரைத் தமையும் அன்னவர் தாம்
ஒப்பிடாமையும் உலகம் ஓதிடுமே! (43)

என்கின்றார்.

எனவே, அந்தக் கழுவேறும் நிகழ்ச்சி நடந்தபோது அங்கிருந்த அருள்பெருக்கும் திருஞானசம்பந்தர் அவ்வாறு செய்ய வேண்டாம் எனத் தடுத்தார் என்று உலக வழக்கில் வழங்கிவரும் செய்தியே உண்மையானது; அன்பு நெறியாம் சைவ நெறியைப் பரப்ப வந்த அருளாளர் அவ்வாறுதான் நடந்திருப்பர்; அதுவே இயல்பான ஒன்று. அதுதான் அவ்வருளாளரின் உண்மை இயல்பினை உள்ளவாறு படம் பிடித்துக் காட்டுவது.

இது ஆசிரியரே படைத்துக் கூறுவது அன்று. இதனை, ''உவகையோடு உரைத்தமையும், அன்னவர்தாம் ஒப்பிடாமையும் உலகம் ஓதிடுமே'' (43) என்பதனால் அறியலாம். 'உலகம் ஓதிடுமே' என்ற சொல்லாட்சியினை நோக்குக.

இந்நிகழ்ச்சி குறித்து வேறு சிலர் கூறுகின்ற கருத்தையும் வண்ணச்சரபம் கூறுகின்றார். ஏன் இவ்வாறு கழுவேறும்படி நிகழ்ந்தது? என்ன காரணம்?

''மடத்தில்தீயிடல் கழுமரச் சவதம் வலிதுதாம்
வகுத்திடல்எனும் இரண்டும்
திடத்த சாரணர்க் காவதன்றதனால் தீங்கவ்வா
றடைந்தார் என்பர் சிலர், முன்
நடத்திற் சேர்த்ததாள் கருதிஓர் பதிகம் நன்கு காழியூர்
நாதன் ஓதுவனேல்,
வடத்திலன்றுயு நால்வர்போன்ற வரும் வாழ்வர்
என்னும் வல் வழக்கரும் உளரே'' (44)

என்கின்றார்.

அதாவது, இவ்வாறு சமணர்கள் தீங்கடைந்தமைக்குக் காரணம் அவர்கள், திருமடத்தில் தீயிட்டமையும், தோற்றால் நாங்கள் கழுவேறி உயிர்விடுவோம் என்று அவர்கள் போட்ட சபதமும் ஆகிய இரண்டுந்தான். இவ்வாறு அவர்கள் செய்த இரண்டு செயல்களுமே உண்மைச் சமணர்களுக்குப் பொருந்துமா

என்றால் பொருந்தாது. எனவேதான், இந்தத் தீங்கினை அவர்கள் அடைந்தார்கள் என்று உலகில் ஒரு சிலர் கூறுவார்கள்.

வேறு சிலர், 'அவ்வாறு அவர்கள் கழுவில்ஏறி உயிர் விட்டாலும், ஞானசம்பந்தர் நினைத்திருந்தால் கூத்தப் பிரானின் திருவடிகளை எண்ணி ஒரு பதிகம் பாடியிருந்தால் அவர்கள் எண்ணாயிரம் பேரும் பிழைத்து உயிர் பெற்றிருப் பார்களே' என்று கூறுவார்கள், இவ்வாறு கூறுபவர்களை 'வல் வழக்கினர்' என்று உரைக்கின்றார். அதாவது, 'வலிந்து வாதம் செய்பவர்கள்' என்பதாம். அவ்வாறு பதிகம் பாடி அவர்களை ஏன் உயிர்ப்பிக்கவில்லை? அவர் நினைத்திருந்தால் செய்திருக்கலாமே? என்ற வல் வழக்கினர் கேள்விக்கு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பின்வருமாறு கூறுகின்றார்,

''ஒறுத்தலால் சிறிதின்பமே எய்தும் ஊறுசெய்தவர்
உளம்மிக நாணப்
பொறுத்தலே பெரும் புகழ் எனவுணர்ந்தும் புகலியூர்
வரு புண்ணியன் தன்னை
வெறுத்து சாரணருயும்படி பாடல் விளம்பச் செய்திலான்
வெளுத்த பாற்கடலின்
கறுத்த நஞ்சமுண்டு உலகெலாமுய்யக் காத்துளான்
செயல் காணரிதம்மா'' (45)

அவர் ஏன் அவ்வாறு செய்தார்? நஞ்சமுண்டு உலகையே காப்பாற்றிய சிவபெருமான் சமணர்களை ஏன் காக்கவில்லை? இதுகுறித்து வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், ''காத்துளான் செயல்காண் அரிதம்மா!'' என்கின்றார். இறைவனின் செயலைப் புரிந்து கொள்வது அரிது! என்கின்றார். ஏன், இவ்வாறு செய்தான்? என நம்மால் உணர இயலாது; அது 'இறைவனின் சித்தம்' என்கின்றார்.

மேலும்,

''யாவும் வல்லவன் எம்மதத்தினர்க்கும் இறைவன்
எங்கணும் என்றும் வாழ்ஒரு மெய்த்
தேவுளான்அவன் தன்மை யாரறிவார், சிலரை
வாழ்வித்துச் சிலர்தமைக் கெடுப்பான்

காவுளார்தமைத் தகுவராற்கலக்கிக் கரிய
தானவர்க் கடவுளர் தம்மால்
ஓவுவானவன் பொதுவனே அன்றி ஒருவர்
பங்கினில் உற்றவ னன்றே'' (46)

என்கின்றார்.

இறைவன் திருவுள்ளம் பற்றவில்லை. ஆகையினால் ஞானசம்பந்தரும் பதிகம் பாடி அவர்களை உயிர்ப்பிக்கவில்லை எனவே இது ஞானசம்பந்தரின் குறையன்று என்பதாம்.

இந்த நிகழ்ச்சி நமக்கு உணர்த்துவதென்ன? நாம் அறிவது என்ன?

''ஆதலான்மதக் குறும்பினர் தம்மை அடக்கல் வேட்டுளீர்
அருந்தவம்செய்து
நாதன்மெய் யருள் பெற்றபின் அடர்மின், நன்றுதீதென
நவின்று நாய்ச்சமர்போல்
வாதமிட்டுழன் றரசனாணையினான் மாழ்குறேன்மின்
மெய்வத்து உண்டெனற்கும்
ஏதம்ஒருயிர்க் கியற்றொணா தெனற்கும் இசைபவா
மதமியாவு நல்லனவே'' (48)

எனக் கூறுகின்றார்.

இவ்வாறு இவர் கூறியது எப்போது? மதவேறுபாடுகள் மிக்கிருந்த சென்ற நூற்றாண்டில்! பிற நாட்டிலிருந்து வந்த சமயங்களும் (கிறித்துவம், இசுலாம் முதலாயின) வைதிக சமயங்களும் (சைவம், வைணவம் முதலாயின) அவைதிக சமயங்களும் (சமணம், புத்தம் முதலாயின) தத்தம் சமயங்களே உயர்ந்தன என்று வாதிட்ட காலத்தில்!

சமயப்பொறையும், மனவிரிவும் கொண்டு விளங்கிய காரணத்தினால்தான் இசுலாமியப் பெரும்புலவர்களையும் தம் புலவர் புராணத்துள் சமமாக வைத்துப் பாடுகின்றார்.

''எக்குலத் தெவரானாலும் இயலருட் புலமை வாய்ந்த
பக்குவர் என்னிற்பேசும் பண்பிந்நூற் குரியதாமால்''

என்று, 'முத்துலுக்கப் புலவர் சருக்கத்தில்' (69) தான் அவர்களைப் பாடுவதற்கான காரணத்தைக் கூறுகின்றார். (இவரால் பாடப் பெற்ற துலுக்கப் புலவர்கள், சையது மொய்தீன், உமருப்

புலவர், சவ்வாதுப் புலவர் என்ற மூவர்). எனவே, இவரின் சமரச சமயப் பொதுமைப் பண்பு நன்கு விளங்கும்.

சமயக் கலகங்கள் விளைகின்ற இந்நாளிலேயே இக்கருத்தை ஏற்காத பலர் இருக்கும் இத்தமிழகத்தில், அவர் வாழ்ந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் இவரின் இக்கருத்தினை எவரும் ஏற்பரோ? எதிர்த்தவர்தாம் பலர்! உண்மைக்கு என்றும் எதிர்ப்பு தானே! இதனைத் தம்நூலுள்,

"இந்த ஞாயங்கள் சிலசொலுமாற்றால் என்னை ஞான
சம்பந்த மூர்த்தியின் பால்
அந்தரங்க நண்பில்லவன் என்றே அறைகுவார்இளஞ்
சைவர்கள் அயில்வேற்
கந்தனேஎனச் சொற்றுளன் முன்னாள் கழறிடுங்
கவுமாரரும் பலரே
சொந்தநூல் பகர்சேக்கிழார் முதலாம் தொண்டர்
தாமும்அத் துணிவடைந்திலரே" (50)

என்கின்றார்.

இன்னும் திருஞானசம்பந்தரின் வாழ்வில் நிகழ்ந்த அவரின் அருள் உள்ளத்தினைப் புலப்படுத்தும் மற்றொரு நிகழ்ச்சியினையும் குறிக்கின்றார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

நல்லூர்ப் பெருமணம். திருஞானசம்பந்தருக்குத் திருமணம் நடந்தேறுகின்றது. அப்பொழுது அங்கு ஒரு சோதி – ஒளிப் பிழம்பு – தோன்றுகின்றது. அருள் ஞானசம்பந்தர் அனைவரையும் அதன் உள்ளே போகும்படி பணிக்கின்றார். அனைவரும் அதனுட் சென்று 'அத்வைத நிலை'யினை – இரண்டற்ற நிலையினை – பெரும்பத நிலையினை அடைகின்றனர். அப்பொழுது ஒரு பெண் அதனைக் கண்டு ஓடோடி வருகின்றாள்; தனக்கும் அச்சோதியுள் சென்று கலக்கும் நல்வாய்ப்பு கிட்டுமா என்ற எதிர்பார்ப்போடு ஓடிவருகின்றாள். ஓடிவந்தவள் பெரும் தயக்கத்தோடு ஞானசம்பந்தரைப் பார்க்கின்றாள். ஏன்? அவளோ மாத விலக்காகி இருக்கின்றாள். அசுத்தம் அல்லவா? தீட்டு அல்லவா? என்ன செய்வது? மனத் தடுமாற்றத்துடன், முத்திப் பேறடைய வேண்டும் என்ற ஆராக் காதலுடன் அருளாளராம் ஞானசம்பந்தரிடம் கேட்கின்றாள்;

அவரிடம் தன் உண்மை நிலையினை எடுத்துக்கூறி, 'எனக்கும் அருள்பெற வாய்ப்புண்டோ?' என்கின்றாள்.

ஞானசம்பந்த சுவாமி,

"ஏங்குறேல் பெருநெருப்புக்கு ஈரமின்று! ஏகு!" (49)

என்கின்றார். தூய்மையற்ற அவளும் சோயிற் கலந்து முத்திப் பேறடைகின்றாள். ஞானசம்பந்தப் பெருமானின் அருள் உள்ளமும், வெறும் சடங்கினை மட்டுமே பற்றுக்கொண்டு ஒழுகாத நடைமுறை ஆன்மீக ஒழுங்கும் நமக்கு நன்கு புலனாகின்றது.

இவ்வாறு நூல் முழுவதும் பல்வேறு செய்திகளை, உலக வழக்கில் வழங்கி வரும் வழக்காற்றினை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சுட்டிச் செல்கின்றார்.

இத்தகைய அருள் உள்ளம் கொண்ட ஞானசம்பந்தப் பேரருளாளரா, எண்ணாயிரம் பேர் கழுவேறியபோது வாளா இருந்திருப்பார்! இல்லவே இல்லை என்க. இவ்வுண்மையினை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளே நமக்கு உணர்த்து கின்றார்.

# வருக்கக் குறளின் அமைப்பும் அழகும்

இரா. மோகன்

'மகான்', 'வண்ணச் சரபம்', 'அபர அருணகிரி', 'திருப்புகழ்ச் சுவாமிகள்', முருகதாச சுவாமிகள்' என்னும் சிறப்புப் பெயர்களால் தமிழ் கூறு நல்லுலகில் மதிப்போடும் மரியாதையோடும் சுட்டப்பெற்று வரும் தண்டபாணி சுவாமிகள் (1839-1898), திருநெல்வேலிப் பரம்பரைச் சைவ வேளாண் மரபில் செந்திலாயகம்பிள்ளை என்பாரது புதல்வராகத் தோன்றியவர்; தாய் தந்தையர் செய்த பெரும்புண்ணியப் பயனேயன்றித் தமிழ்நாடு செய்த தவப்பயனாகவும் ஐம்பத்தொன்பது ஆண்டுக்காலம் இவ்வுலகில் நல்ல வண்ணம் வாழ்ந்தவர்; 'அருளாட்சி', 'ஏழாயிரப் பிரபந்தம்', 'புலவர் புராணம்', ,அறுவகையிலக்கணம்', 'ஏழாம் இலக்கணம்', 'வண்ணத்தியல்பு என்னும் சந்த இலக்கணம்', 'தமிழலங்காரம்' முதலான இருநூற்று ஐம்பதுக்கு மேற்பட்ட ஏற்றமிகு நூல்களின் ஆசிரியர்; துறவுக் கோலம் பூண்டு, திருவாமாத்தூரில் கௌமார மடாலயம் நிறுவியவர்; சண்மத சமயாதீத அத்துவித கௌமார விளக்கம் பொருந்தியவர்; 'உலகில் பசுக்கொலை முதலிய உயிர்க்கொலை எதுவும் இல்லாமற் செய்வதற்கு ஏற்ற திருவருட்பேறு பெற்றாலன்றிச் சோறுண்ணேன்' என்று இருபது ஆண்டுகள் நோன்பு மேற்கொண்டு இருந்தவர். இத்தகைய சீரும் சிறப்பும் பீடும் பெருமையும் வாய்ந்த தண்டபாணி சுவாமிகள் இயற்றியருளிய 'வருக்கக் குறள்' என்னும் நூலின் அமைப்பையும் அழகையும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

இந்நூல் திருவாரூர் தி நா. சபாபதி முதலியாரின் மணிவிழா வெளியீடாகச் சென்னை 'தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தினரால் 28-04-1946-இல் வெளியிடப் பெற்றுள்ளது. சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள் இந்நூலுக்குப் பதவுரை, கருத்துரை என்னும் முறையில் உரை எழுதியுள்ளார்.

**'வருக்கக் குறள்' நூலின் அமைப்பு**

தமிழ் நெடுங்கணக்கில் உள்ள எழுத்துக்களை அகர வரிசைப்படுத்தி முறையே ஒலிக்கச் செய்யும் 'வருக்கநூல்கள்' எனப்படும். அவை சூத்திரம் போலவும், வெண்பா, கட்டளைக் கலித்துறை முதலான பல்வேறு யாப்பு வடிவிலும் புனையப் பெறும். அவற்றுள், இந்நூல் 'குறள் வெண்பா' வால் அமைந்த ஒன்றாகும். ஏனைய நூல்கள் எல்லாம் மொழி முதல் நில்லா எழுத்துக்களை வாளாவிடுத்தன. ஆயின், இந்நூல் அவ்வெழுத்துக் களையும் உயிருடன் இயக்கி எல்லா எழுத்துக்களையும் முறையே ஒலிக்கவும், முகப்பில் இயங்கவும் செய்துள்ள பெருமை படைத்ததாகும். உயிர் வருக்கம் (1–13), மெய் வருக்கம் (14–31), உயிர்மெய்-ககர வருக்கம் முதல் னகர வருக்கம் முடிய (32–247) என மூன்று பிரிவினதாக இந்நூல் விளங்குகின்றது.

இந்நூலைப் பரிசோதித்துள்ள தி. செ. முருகதாச பிள்ளை தம் 'முகவுரை'யில் குறிப்பிடுவது போல், 'தமிழுலகம் இத்தகைய மாட்சியுடைய புதுநூலை இதுகாறும் பெற்றதில்லை, அழுக்காறில்லாத நோக்குடன் ஆராய்வார்க்கு இந்நூல் களிப்பும் வியுப்பும் அளிக்கும் என்பது ஒருதலை' (வருக்கக்குறள் மூலமும் உரையும், 'முகவுரை', p. vi) 'தமிழ் எழுத்து வருக்கத்தில், திருக்குறளின் உயர்ந்த கருத்துக்களை, இந்நூல் குறள் நடையில் எடுத்துச் சொல்வதனால், வருக்கக் குறள் என்று நூலாசிரியர் இதற்குப் பொருத்தமான பெயர் அளித்திருக்கிறார்கள்' என இந்நூலின் பதிப்புரையில் இடம்பெற்றிருக்கும் கருத்தும் (p.ix) இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

**'ஔவையொடு வள்ளுவனும் ஆராய்ந்து உரைத்த நெறி'**

தண்டபாணி சுவாமிகளுக்குத் 'திருக்குறள்' என்னும் உலகப் பொதுமறையைத் தந்த திருவள்ளுவர், 'ஞானக் குறள்' தந்த ஔவையார் ஆகிய இருபெரும் புலவர்களின் மீதும் ஆழ்ந்த ஈடுபாடு உள்ளது; அவர்களது நூல்களின் மேல் மிகுந்த மதிப்பு உள்ளது. இந்த ஈடுபாடும் மதிப்பும் 'வருக்கக் குற'ளில் ஐந்து இடங்களில் (குறள் 12, 126, 207, 211, 247) அழகுற வெளிப்பட்டிருக்கக் காண்கிறோம். 'அநாதியாகிய கைலையங் கிரியில் சேரும்படி விநாயகக் கடவுளின் துதிக்கரத்தால் தூக்கி விடுத்து அருளப் பெற்றவர்' (211) என்றும், 'இனிய நாவற்

பழத்தை மரத்தினின்றும் பறித்தெறிந்த முருகக் கடவுளுக்கு ஏற்ற தமிழ்ப் பாடலைப் பாடியருளியவர்' என்றும் (247), 'நோன்பு என்று சொல்லப்படுவது ஓர் உயிரைக் கொலை செய்து அதன் ஊனைத் தின்னாமையே என்று உரைத்த ஔவையாரே / பெண்ணினத்தில் தலையாயவர்' (126) என்றும் ஔவையாரை செல்லும் இடமெல்லாம் உயர்த்திப் பேசும் சுவாமிகள்,

'நக்கீரர் முதலிய சங்கப் புலவர்களை வெற்றி கொண்ட திருக்குறள் என்னும் முதல் நூலே மெய்ந்நூல் ஆகும்' (207) என ஓர் இடத்தில் திருவள்ளுவர் அருளிய திருக்குறளுக்குப் புகழாரம் சூட்டி மகிழ்கின்றார். மேலும், ஔவையாரும் திரு வள்ளுவரும் அரிதின் ஆராய்ந்து உரைத்துள்ள நன்னெறிகளைக் கற்குமாறு உலகிற்கு அறிவுறுத்தும் சுவாமிகள், அவற்றைக் கசடறக் கற்போர் - கற்றபின், அந்நெறிகளைத் தம் வாழ்வில் பின்பற்றி நடப்போர் - உலகில் மிகச் சிலரே என்ற நடப்பியல் உண்மையையும் எடுத்துக்காட்டத் தவறவில்லை.

> 'ஔவையொடு வள்ளுவனும் ஆராய்ந்த உரைத்தநெறி
> செவ்வையெனத் தேர்ந்தோர் சிலர்' (12)

என்னும் குறட்பா இவ்வகையில் நினைவுகூரத் தக்கதாகும்.

### 'குறியில் நின்றால் வந்து திகழ்வான் வரன்'

'ஈசன்' (8), (10), (238), 'ஈசுவரன்' (9) என்றாற்போல் ஒரு சில இடங்களில் சிவபெருமானைப் பெயர்சுட்டிக் குறித்துச் சென்றாலும், தண்டபாணி சுவாமிகளுக்கு ஒரு தெய்வக் கொள் கையிலேயே அழுந்திய - ஆழ்ந்த - ஈடுபாடு உள்ளது; 'தெய்வம்' (2), (63), 'இறை' (9), 'கடவுள்' (42), 'மேலவன்' (69), 'இறைவன்' (123) என்றாற்போல் பொதுவான பெயர்களாலேயே அவர் பெரும்பான்மையான இடங்களில் இறைவனைச் சுட்டிச் செல்கின்றார். சுருங்கக் கூறின், 'அறுவகைச் சமயத்தோரும் தனித் தனியே உரைக்கும் தெய்வங்கள் எல்லாம் வேறுவேறு அன்று, அனைத்தும் ஒன்றே; ஒரு தெய்வமே பல தெய்வங்களாக விளங்குகின்றது என்று மெய்யறிவுடையோர் கூறுவதே அடிப் படையான உண்மை ஆகும்' எனக் கருதுகின்றார் அவர். இதனை,

> ஆறுசமயத் தவர்உரைக்கும் தெய்வ முற்றும்
> வேறுவேறு அல்லஎன்கை மெய்' (2)

என்னும் குறட்பாவின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார் சுவாமிகள்.

சுவாமிகளின் கருத்தில், இறைவன், உண்மையான தொண்டர்கள் - மெய்யன்பர்கள் - விரும்பிய எல்லாப் பேறு களையும் கொடுக்கவல்லவன்; ('இச்சித்தபேறு அனைத்தும் ஈயும் திருவருள்', 3); எள்ளிடத்தில் எண்ணெய் என எங்கும் நிறைந்து நிற்கும் இயல்பினன் ('எள்ளிடத்தில் எண்ணெயென எங்கும் நிறைந்தான், 6). அவனை எளிதில் அடைவதற்கான வழி எது தெரியுமா? இதோ, சுவாமிகளின் சொற்களிலேயே அதனைக் காண்போம்:

'ஐந்து பொறியும் அடங்கும் குறியில்நின்றால்
வந்து திகழ்வான் வரன்' (9)

'பஞ்சேந்திரியங்கள்' என்று சொல்லப்படும் ஐந்து பொறிகளும் ஒடுங்குவதற்கு ஏதுவாகிய ஓர் இலட்சியத்தில் ஒருவனது மனம் அசைவற்று நிலைத்து நிற்குமாயின், அங்கே இறைவன் எளிதில் வந்து காட்சியளிப்பான்' என்பதே சுவாமிகள் விழுமிய கடவுட் கொள்கை ஆகும்.

**'தயையுறுத்து மாறே தவம்'**

சிவகாருணியம் என்னும் நன்மார்க்கத்திற்குத் தண்டபாணி சுவாமிகள் தரும் பெயர் 'அருள்வழி' (குறள் 1) என்பதாகும்; இதற்கு மாறானது 'இருள்வழி' ஆகும். மேலும், ஒருவர் செய்யும் தவத்தினுக்கு இன்றியமையாத் துணையாக அமைவதும் சிவகாருணியமே எனக் கருதுகின்றார் சுவாமிகள்:

சாலும் கருணை தவத்திற்கு உறுதுணைஎன்று
ஓலும் பலநூல் உள' (57)

'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடும்' இரக்க மனத்தைப் பெற்றிருந்தார் இராமலிங்க அடிகளார்; தண்டபாணி சுவாமிகளோ, நம்மோடு உடன்படாத, மனம் என்று சொல்லப்படும் ஆண்யானையோடு எப்போதும் எதிர்த்துச் சண்டையிட்டு, சிவகாருணியம் என்னும் நன்னெறி பதியும்படி வற்புறுத்தி மனத்திற்கு உணர்த்துவதே தவமாகும் என்கின்றார்.

'இயையா மனக்களிற்றோடு என்றும்போர் செய்து
தயையுறுத்து மாறே தவம்' (160)

'உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை, அற்றே 'தவத்திற்கு உரு' (குறள் 261) என்றார் வள்ளுவர்; சுவாமிகளோ, 'கொடிதாகிய மனத்தை எவ்விதத்திலாயினும் சீவகாருணிய வடிவமாக்குவதே தவம்' – 'தயையுறுத்து மாறே தவம்' எனக் கருதுகின்றார்.

### பெண்ணினத்தும் 'புருடரினும் மிக்கவர் உண்டு'

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள?' என்னும் வள்ளுவரின் வாக்கினை (குறள் 54) அடியொற்றித் தண்டபாணி சுவாமிகளும் 'வருக்கக் குற'ளில் ஒருசில இடங்களில் பெண்ணின் பெருமையைப் பேசியுள்ளார். 'கரும்பு போன்ற இனிய சொல்லை உடைய பெண்கள் கூட்டத்துள்ளும், ஆடவரினும் சிறந்தவர் சிலர் உண்டு என்று சொல்லுதல் உண்மையாம்' என ஓர் ஆண்பாற் புலவராக இருந்துகொண்டு சுவாமிகள் தந்திருக்கும் ஒப்புதல் வாக்குமூலம் இவ்வகையில் முதலில் குறிப்பிடத் தக்கதாகும்.

> 'இக்குஅன்ன சொல்லார் இனத்தும் புருடரினும்
> மிக்கவர்உண்டு என்றுஉரைக்கை மெய்' (14)

இங்ஙனம் பெண்ணினத்தின் உயர்வைப் பாங்குறப் பறை சாற்றியுள்ளசு வாமிகள், பிறிதொரு குறட்பாவில் பெண் கல்விக்கு ஆதரவான தம் கருத்தை அழுத்தமாக வெளியிட்டுள்ளார்; பெண்கல்வியை நிந்தித்துப் பேசும் மூடர்கள் பலர் இவ்வுலகில் இன்னமும் இருப்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

> 'நாரியருங் கற்கை நலம்என்று உரைக்குநரைப்
> பாரில் இகழ்வார் பலர் (117)

கைம்பெண் மறுமணம் பற்றிய முற்போக்கான சிந்தனையும் சுவாமிகளிடத்தில் காணப்படுவது வியப்பாக உள்ளது. 'பெண்களுக்குள்ளே கற்புடையவர்களுக்கு மாத்திரமே எவ்வுல கத்திலும் பெருஞ்சிறப்பு உண்டாகும்' ('நங்கையரிற் கற்பினர்க்கே நானிலத்தும் மேனிலத்தும், கங்கையற்ற மேன்மை தகும்', குறள் 116) எனக் கூறும்போது முன்னைப் பழமையின் சார்பாளராகத் தோன்றும் சுவாமிகள், 'காம இன்பத்தில் மிகுந்த விருப்பம் உடையவள் ஆகில், கைம்பெண்ணும் வேறொரு நாயகனை மணம் செய்து கொள்வதே நல்லது' எனக் கருத்துரைக்கும் போது பின்னைப் புதுமையைப் போற்றும் முற்போக்குச் சிந்தனையாளராகக் காட்சியளிக்கின்றார்.

'நூல்இழந்தும் கேளியிச்சை நூறாதாள் மற்றொருவன்
தாலிகட்டிக் கொள்ளத் தகும்' (121)

என்னும் குறட்பா, சுவாமிகளின் சீர்திருத்த உணர்வினைப் புலப்படுத்த வல்லதாகும்.

பெண்களின் மறுபக்கத்தையும் சுவாமிகள் ஒரு குறட்பாவில் படம்பிடித்துக் காட்டியுள்ளார். 'சொந்த மனைவியரால் இடப் பட்ட நஞ்சினை உண்டு இறந்த ஆட்வரும் உலகில் சிலர் உள்ளனராம்!'

'இல்என்று அமைந்தார் நஞ்சுண்டு இறந்தாரும்உண்டே
கல்என்றுஇரைந்த நீர்வைப்பின் கண்' (182)

இங்ஙனம், 'பெண்ணியம்' (Feminism) பேசும் இன்றைய அறிஞர்கள் கருத்தில் கொள்ள வேண்டிய சில அடிப்படையான கருத்துக்கள் தண்டபாணி சுவாமிகளின் 'வருக்கக் குற'ளில் காணப்படுகின்றன.

**'உள்நோம்படி சொற்றேனும் உணர்வுறுத்துவார்'**

மேலோர், கேட்போருடைய மனம் வருந்தும்படி கடுமை யாகச் சொல்லியாவது அவர்களிடத்து நல்லறிவு வரும்படி செய்வார்கள்; இங்ஙனம் செய்யும் மேலோரின் தன்மை மலையினும் மாணப்பெரிது என்பது சுவாமிகளின் அழுத்தம் திருத்தமான கருத்து.

'உள்நோம்படிசொற் றேனும் உணர்வுறுத்து வார்நீர்
திண்ஓங்கலின்மேல் என்கை திறம்' (102)

இக்கருத்துக்குச் சான்றாக அமையவல்ல இடங்கள் ஒருசிலவற்றை 'வருக்கக் குற'ளிலேயே காண முடிகின்றது.

இவ்வுலகின்கண் உண்ணல், உறங்கல்களையே பெரிதும் விரும்பி வாழ்கின்றவர்களை – வாழ்நாட்களை வீணாகப் போக்குவோரை – சுவாமிகள் கடுமையான சொற்களால் சாடு கின்றார். 'அஃறிணையே போலும் அவர்' (13), 'பதர்' (18), (59), (111), கண்ணில்லார்கள்' (32), 'கீழோர்' (38), 'சூகரமே போலும் தொடக்கர்' (61) 'ஈனர்' (87), 'நாயிற் கடையாம் நரர்' (107) என்றாற் போல் வரும் வசைச் குறிப்புக்கள் இவ் வகையில் குறிப்பிடத் தக்கவை. இங்ஙனம் மனம் புண்படும்படி

கடுமையான சொற்களைக் கையாண்டு சொல்லியாவது, உலக மக்களுக்கு உண்மையை உணர்த்தி, அவர்கள் அறிவு பெறுமாறு செய்துவிட வேண்டும் என்னும் நல்லெண்ணமே – விழுமிய நோக்கமே – இத்தகைய வசைமொழிகள் சுவாமிகளின் 'வருக்கக் குற'ளில் இடம்பெற்றிருப்பதற்கான காரணம் ஆகும்.

**உவமை நயம்**

'வருக்கக் குறள்' என்னும் நூலின் அமைப்பிற்குப் பொருந்தும் வண்ணம் புதிய, சுவையான உவமைகள் பலவற்றைத் தண்டபாணி சுவாமிகள் கையாண்டுள்ளார். ஈண்டு, இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒருசில உவமைகளைக் குறித்துக் காண்போம்.

ணகர ஒற்றினிடத்து அமைந்துள்ள மூன்று சுழிகளைப் போல் சிவன் முதலிய மும்மூர்த்திகளையும் இறைவனிடத்து அமைந்துள்ள முக்குணங்கள் எனத் தெளிந்துகொள்ள வல்லாருக்கு மயக்கம் என்னும் குற்றம் அழிந்துபோகும்.

'இண்உறுப்பில் தோய்சுழிபோல் ஈசன்முதல் மூவரையும்
நண்ணவல்லார்க்கு இல்லை நவை' (19)

'ணகரத்தின் மூன்று சுழிகளைப் போல் மெய்க்கடவுளின் முக்குணங்களே மும்மூர்த்திகள்' என்பதே சுவாமிகள் இங்கே தெளிவுறுத்த விரும்பும் உண்மை ஆகும்.

பிறிதோர் இடத்தில் 'பெண்ணாசை இல்லாத் தவமே பெருந்தவம்' என்னும் கருத்தை விளக்க முற்படும் சுவாமிகள், பெண்களைச் சுட்டுவதற்கு ஓர் அழகிய உவமையைக் கையாண்டுள்ளார். ளகர ஒற்றிற்கு முன்னே ககரக் குறிலையும் கூட்டிக் கூறப்படும் 'கள்' என்னும் தேனை ஒத்த இனிய சொற்களை உடையவர்களாம் பெண்கள்.

'இள்அதற்கு முன்ககரம் இட்டதுஅன்ன இன்சொல்லார்த்
தள்ளர்அரி தாய தவம்' (29)

ஒருவன் தன் இனத்தை எங்ஙனம் தழுவி வாழவேண்டும் தெரியுமா? இவ் வினாவிற்கான விடையை ஓர் உவமையின் வாயிலாகப் பயில்வோர் நெஞ்சில் பதியும் வண்ணம் உரைக்கின்றார் சுவாமிகள்,

"ஙகரம் எனஇனத்தை நன்கு தழுவும்
மகன்நெடுமால் என்னமகிழ் வான்' (44)

ஔவையாரின் 'ஙப்போல் வளை' என்னும் ஆத்திசூடிக் கருத்தை அடியொற்றி, சுவாமிகள் இவ்வுவமையைப் படைத்து உள்ளார். 'ங என்னும் எழுத்தானது தான் பயனுடையதா யிருந்து பயனில்லாத ஙா முதலிய தன் வருக்க எழுத்துகளைத் தழுவிக் கொள்ளுதல் போல, நீ பயனுடையவானாயிருந்து உன் இனத்தார் பயனில்லாதவராயினும் அவரைத் தழுவிக் கொள்' என்னும் நாவலர் ந. மு வேங்கடசாமி நாட்டாரின் ஆத்திசூடி உரை விளக்கம் (ப. கஉ) இங்கே ஒப்புநோக்கி மகிழத் தக்கதாகும்.

ஓர் ஆண்மகன் தனது சுற்றத்தைத் தழுவிக்கொண்டு வாழ வேண்டிய முறையின் இன்றியமையாமையை உடன்பாட்டு முகத்தான் உணர்த்திய சுவாமிகள், அடுத்த குறட்பாவிலேயே எதிர்மறை வாய்பாட்டால் தாய்தந்தையருக்கு உதவாமல் வாழும் ஒருவனின் இழிந்த பண்பினை எடுத்துரைக்கின்றார். நற்குணமுடைய தாய்தந்தையரின் உயிர்களுக்கு உதவாதவன், ஙா என்னும் எழுத்தைப்போல், பயனற்றவனாம்!

"ஙாவில் பயன்இல்லான் நற்றாயர் தந்தையினது
ஆவிக்கு உதவா தவன்' (45)

இங்ஙனம் வையத்துள் வாழ்வாங்கு வாழாமல் - ஈடேறுவதற்குக் காரணமான அறச்செயல்களைச் செய்ய விரும்பாமல் - நன்றாக உண்டு உடுத்தி உறங்குவதையே விரும்பி எவ்விதப் பயனு மின்றித் தம் வாழ்நாளை வறிதே கழித்துக் கொண்டிருப்பவர்கள் இவ்வுலகத்தில் பலர் உள்ளனராம். 'ஙௌ' எழுத்து வரிசையில் இருந்தும் எப்பயனும் இல்லாதது போல' என்னும் உவமையின் வாயிலாக அவர்களைச் சாடுகின்றார் சுவாமிகள்.

'இங்ஔகாரத்தில் புணர்ந்தாங்கு ஈடேற்றம் வேண்டாது
உணவுஅளவில் துய்ப்பார் உளர்' (103)

இத்தகைய அழகிய உவமைகளின் ஆட்சியை 'வருக்கக் குற'ளில் பரவலாகக் காண முடிகின்றது.

'பாக மதுரப் பனுவல்பகர் பாவலவர்'

'பக்குவமும் சுவையும் பொருந்தும்படி இனிய நூல்களை இயற்றும் புலவர்கள் இவ்வுலகில் சிலர் ஆவர்' எனப் 'பகர

வருக்க'த்தில் இடம்பெறும் குறட்பா ஒன்றில் குறிப்பிடுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

'பாக மதுரப் பனுவல்பகர் பாவலவர்
சீகரநீர்ப் பாரில் சிலர்' (129)

என்னும் வாக்கிற்கு இணங்க, பக்குவமும் பொருத்தமும் மிகுந்த சுவையும் இனிமையும் அமையும் வண்ணம் நூல்களை இயற்றும் ஒருசிலருள், சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் தண்டபாணி சுவாமிகள் என்பதற்கு அவர் படைத்துத் தந்துள்ள 'வருக்கக் குற'ளே போதிய சான்றாக விளங்குகின்றது எனலாம். சுவாமிகளின் சொற்களிலேயே சொல்ல வேண்டும் என்றால், 'குன்றுறா வருக்கக் குறள்' (குறைவுபடாத வருக்கக்குறள்) என்னும் இந்நூல், 'எல்லா வருக்கமுஞ் சொல் குறட்பாக்க'ளைத் தன்னகத்தே கொண்ட தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த புதுநூல் ஆகும்.

# சுவாமிகளின் இசை நாடகப் படைப்புகள்

## சு. வெங்கடேசன்

தமிழே இயல், இசை, நாடகம் என மூன்றாகப் பிரிக்கப் பட்டு, 'முத்தமிழ்' என வழங்கப்படுகிறது. இயற்றமிழுக்கு எவ்வாறு இலக்கணங்கள் காணப்படுகின்றனவோ அவ்வாறே இசைக்கும், நாடகத்துக்கும் இலக்கணங்கள் இருந்தன. தொல் காப்பியர் தமது நூலில் எழுத்துக்களின் மாத்திரைகளை

"அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்பனார் புலவர்"

என்பதனால் தொல்காப்பியருக்கு முன்பே இசை இலக்கண நூல்கள் இருந்தன என்பது தெளிவாகிறது. நாயன்மார்களின் "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்", என்றும் "ஏழிசையாய் இசைப்பயனாய்" எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும் பாடிய திருமுறைகளினின்று இசையைப் பற்றி அறிகிறோம். இப்படி இசையோடு கூடிய வரிப்பாடல்கள் முத்துத்தாண்டவர் காலத்திலிருந்தே தமிழில் கீர்த்தனை களாக வடிவம் பெற்றன. தமிழில் 18-ம் நூற்றாண்டினைச் சேர்ந்த ராமநாடகம் பாடிய அருணாசலக் கவிராயர், மற்றும் மாரிமுத்தாப் பிள்ளை ஆகியோரும் முக்கியமாக கருதப்படுகிறார்கள். இவ்வாறு விருத்தம், வரிப்பாடல்கள், தாழிசைகள் என்றிருந்த உருப்படிகள் கீர்த்தனைகளாக வடிவம் பெற்று இசை நாடகங்களிலும் இடம்பெற்றன. நம் நாட்டில் இசை சமயத்தொடர்பு கொண்டே விளங்கியதால் இசை நாடகங்களும் ஏதாவது ஒரு சமயத்தைச் சார்ந்தே விளங்கின. இவ்வரிசையில் 19-ம் நூற்றாண்டில் தோன்றிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பட்ட முசுகுந்த நாடகம் குறிப்பிடத்தக்கது.

முத்தமிழில் மிகக் கற்றோரே அறியும் இயற்றமிழ் கடும் சுவையும், ஓரளவு கற்றாரும் அறிவது இசைத்தமிழ் இன்சுவையும்,

எத்தகையோரும் எளிதில் அறிவது நாடகத்தமிழ் இளஞ்சுவையும், உள்ளதென்பதாம் என்பது பொதுக்கருத்து. இதுவே இவரது கருத்தாகவும் தெரிகிறது. நம்மிடையே வாழ்ந்து தமிழ் நாடகங்கள் பலவற்றை உருவாக்கியும், நடித்தும், பிறரை நடிக்க வைத்தும் மகிழ்வித்தவர் தவத்திரு சங்கரதாஸ் ஸ்வாமிகள். அவரது குரு, வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகள் ஆவார்.

### தண்டபாணி ஸ்வாமிகளின் இசை நாடகத்தொண்டு

வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகள் 19-ம் நூற்றாண்டில் தோன்றிய மாபெரும் புலவர்களுள் ஒருவராவார். இவரது முசுகுந்த நாடகம் என்னும் கீர்த்தனை நூல் இங்கு கூறப்படு கிறது. இதைத் தவிர "முத்தமிழ்ப் பாமாலை" எனும் சிற்றிலக் கியத்தையும் படைத்துள்ளார். அது இயற் தமிழ்ப்பா ஒன்றும், இசைத் தமிழ்ப்பா ஒன்றும், நாடகப்பா ஒன்றும் முப்பது பாடல் களால் இயன்றது. இந்நூலால் இவ்வாசிரியர் ஆசிரியப்பா, வெண்பா, மருட்பா, குறளடி வஞ்சிப்பா ஆகிய யாப்புகளை இயற்தமிழாகவும், ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, தாழிசை, கட்டளைக் கலிப்பா, கொச்சகக் கலிப்பா, சந்தப் பாடல்கள் ஆகிய பாவினங்களை இசைத் தமிழாகவும், கீர்த்தனை களை நாடகத்தமிழாகவும் கருதுகிறார் எனத் தெரிகிறது. இவைத் தவிர சில தனி இசைக் கீர்த்தனைகளையும் பாடியிருப் பதாகத் தெரிகிறது. இவரால் இயற்றப்பெற்று தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் வழியாகப் பதிப்பிக்கப்பெற்ற அறுவகை இலக்கணம் எனும் சிறந்த இலக்கண நூலின் அடிப்படையில் இசைத்தமிழ், நாடகத்தமிழ்ப் பற்றிய கருத்துக்களை அறியலாம்.

அறுவகை இலக்கணத்தில் நான்காவது பெரும்பிரிவான யாப்பிலக்கணத்தின் முதல் உட்பிரிவு இயலிசைத் தமிழ் இயல்பு உரையாசிரியர் இவ்வியல்பை இயற்றமிழ், இசைத்தமிழ் என இரு பிரிவுகளாக பிரித்துள்ளார். இசைத் தமிழ் பகுதி 18 நூற்பாக் களால் ஆனது. இவர் நாட்டியத்தோடு பாடுவதற்கு ஏற்ற உருப்படிகளை (பதம், சிந்து, கீர்த்தனை) நாடகத்தமிழ் என்கிறார். இதனை விளக்கும் யாப்பிலக்கணத்தின் இரண்டாவது பிரிவு நாடகத்தமிழ் நிலை எனப்படும். நாடகத்தமிழின் இலக்கணம் அதன் இராகம், தாளம் ஆகிய இசையையும், பாடு பொருளாகிய இயலையும் சார்ந்தே கூறப்படுகிறது எனவே,

இப்பிரிவு நாடகத்தமிழ் இயல்பு எனப்பெயர் பெறாது நாடகத் தமிழ்நிலை எனப் பெயர் பெற்றது.

**முசுகுந்த நாடகம் கதையும் அமைப்பும்**

முசுகுந்த நாடகத்தின் மூலக்கதை கச்சியப்ப சிவாசாரியாரால் தம் கந்தபுராணத்தில் தட்ச காண்டத்தில் கந்தவிரதப் படலத்தில் நூற்று இருபத்தேழு விருத்தங்களாகப் பாடப்பட்டுள்ளது. இதனை நாடகமாகப் படைத்தவர் வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகள் ஆவார். இதனை ஆசிரியர்,

''கந்தனது புராணமதில் கச்சியப்பன் சொன்ன
கந்தவிர தப்படலக் கதையதனை நாடி
இந்த வண்ணம் முசுகுந்த நாடகம் என்று இசைத்தேன்''

என்று குறிப்பிட்டுள்ளார்.

கருவூர் எனும் ஊரைத் தலைநகராகக் கொண்டு நாட்டைச் சிறப்பாக ஆட்சி செய்த அரசர்களுள் முசுகுந்தன் குறிப்பிடத் தக்க அரசனாவான். இவர் வசிட்டர் உபதேசித்த விரதங்களைப் பலகாலம் நோற்றார். இதனால் மனமகிழ்ந்த குமரக்கடவுள் முசுகுந்தன் வேண்டிய வரத்தைத் தந்தருளினார். அப்போது தேவரீரின் தம்பியர்களாகிய நவவீரர், ஒன்பதின்மரையும் தனக்குத் தோழர்களாக வழங்க வேண்டும் என வேண்டியதன் பொருட்டு வேலாயுதப்பெருமான் நவவீரர்களையும் முசுகுந்தன் பால் சென்று அடையும்படிக் கட்டளையிட்டார். இதனை நவவீரர்கள் செவிமடுக்காததால் குமரக்கடவுள் அவ்வொன் பதின்மரையும் மானிடராகப் பிறந்து முசுகுந்தனின் படையில் பணிபுரிவீராக எனச் சாபமிட்டார். சாபத்திற்கேற்ப நவவீரர்கள் முசுகுந்தனின் படையில் வீரர்களாக இருந்தனர். அச்சமயத்தில் மானிட மங்கையராகப் பிறந்த பல தெய்வ மகளிரை நவவீரர் களுக்கு முசுகுந்தன் திருமணம் செய்து வைத்தான். நவவீரர் களுள் முதன்மையானவராகிய வீரவாகுவின் மனைவி புட்பகந்தி, சித்திரவல்லி என்னும் அழகிய மகளையும் அனகன், சனகன் என்னும் ஆண்மக்களையும் ஈன்றாள். வீரவாகு சித்திரவல்லியை முசுகுந்த மன்னனுக்கு மணம் முடித்தான். சித்திரவல்லி ஓர் அழகிய கிளியை வளர்த்து வந்தாள். அக்கிளியின்மீது எமனின் மனைவி ஆசைகொள்ள அதை எமப்படைகள் கவர்ந்து சென்றன. கிளியைக் காணாமல் வருந்திய சித்திரவல்லி முசுகுந்தனிடம்

செய்தியைக் கூற அக்கிளி எமபுரத்தில் தர்மனின் மனைவியிடம் இருப்பதை அறிந்து எமபுரத்தின் மீது படையெடுத்து வென்று கிளியை மீட்டான். பிறிதொரு சமயத்தில் வலாசுரன் எனும் கொடிய அவுணன் இந்திரனுடைய அமராவதியை முற்றுகையிட்ட போது, முசுகுந்தன் தேவேந்திரனின் படைகளுக்கு தலைமைப் பொறுப்பு ஏற்று போராடி வெற்றி பெற்றான். இதனால் பெருமகிழ்ச்சி அடைந்த இந்திரன் முசுகுந்தனை தன் அரண் மனைக்கு அழைத்துச் சென்று அங்குதான்வழிபடும் சோமாஸ் கந்தமூர்த்தியைப் போற்றி வழிபடச் செய்தான். இதனால் மனமகிழ்ந்த சோமாஸ்கந்தன் ''நீ எம்மை நில உலகத்திற்கு எடுத்துச் சென்று வழிபடுவாயாக'' என்று அருள் பாவித்தார். பின் முசுகுந்த மன்னன் இந்திரனிடம் விடைபெறும்போது சோமாஸ்கந்தமூர்த்தி தனக்கு வேண்டுமெனக் கேட்டான். அப்போது இந்திரன் இது தனக்குச் சொந்தமானதல்ல திருமாலுடையது என்றும் கூறி அவ் வரலாற்றையும் கூறினான். அவ்வரலாற்றைக் கூறியதும், சோமாஸ்கந்தரை முசுகுந்தனுக்கு கொடுக்க திருமாலின் ஒப்புதல் வேண்டும் என இந்திரன் உரைத்தான். முசுகுந்தனும் திருமாலை அடைந்து இசைவு பெற்றான். சோமாஸ்கந்தரை பிரியமனமில்லாத இந்திரன் ஒரு சூழ்ச்சியைச் செய்தான். வெவ்வேறு சிலைகளை வடித்துக் கொடுத்து முசுகுந்தனிடம் காட்டியும் அவன் மனம் மாறவில்லை. இறுதியில் உண்மையான விக்ரகத்தை காட்டவும் இதுவே என உரைத்துப் பெற்றுக் கொண்டான். முசுகுந்தன் ஏழு திருவுருவங் ளையும் நிலவுலகத்திற்குக் கொண்டு வந்து பின்னால் செய்யப் பெற்ற ஆறுமூர்த்தங்களையும் நாகப்பட்டினம், திருநள்ளாறு திருக்காராயில், திருக்கோவில் (திருக்குவளை), திருவாய்மூர், திருமறைக்காடு (வேதாரண்யம்) ஆகிய தலங்களிலும், திருமாலால் வழிபடப் பெற்ற மூலமூர்த்தியை திருவாரூரிலும் எழுந்தருளச் செய்தார்.

இந்திரன் தான் வழிபடும் கடவுளை வேறொருவனுக்கு கொடுத்துவிட்ட பாவத்தால் தன் சிறப்பிழந்து ஒரு புலையனாக மாறினான். பின், திருவாரூரை அடைந்து, கோவில் திருவிழாவை யானையின்மீது இருந்து ஊரவர் பலருக்கும் அறிவிக்கும் பணியைச் செய்து வந்தான். பல ஆண்டுகள் இப்படிச் செய்ததனால் அவன் தன் புலை வடிவம் மாறி மீண்டும் இந்திரனாக மாறினான்.

முசுகுந்தனும் கருவூரிலிருந்து நீண்டகாலம் அரசு செலுத்திய பின் தனது மகன் அங்கிவன்மனுக்கு முடிசூட்டிவிட்டு கைலையை அடைந்தான். நவவீரர்களும் தவம்புரிந்து மீண்டும் கந்தகிரியை அடைந்தனர்.

கச்சியப்ப சிவாச்சாரியார் உரைத்த மூலக்கதையே, தண்டபாணி ஸ்வாமிகளின் முசுகுந்த நாடகத்திலும் இடம் பெற்றுள்ளது. முசுகுந்தனின் முற்பிறப்பு வரலாறுடன் –1968 ல் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் வெளியிட்ட சரஸ்வதி மகால் நூலில் இவரது வாழ்க்கை வரலாறு விளங்குகிறது. உமாதேவியரும் ஒருநாள் வில்வமரத்தின் நிழலில் அமர்ந் திருந்தனர். அப்போது, அம்மரத்தின் மேலிருந்த குரங்கு அதற்கே உண்டான சேட்டையால் வில்வ இலைகளை பறித்து மரத்தின் நிழலில் அமர்ந்திருந்தவர்களின்மேல் போட்டுக் கொண்டிருந்தது. இதனால், உமாதேவி சற்று சினம் கொண்டார். ஆனால் சிவபெருமான் அம்மையின் கோபத்தை மாற்றி வில்வத்தால் அர்ச்சித்த குரங்கு உலகம் முழுவதையும் ஆளக்கூடிய ஒரு சக்ரவர்த்தியாகட்டும் என அருளினார் ஆயினும் உலகில், உலகியல் அரசாட்சி தனக்கு வேண்டாம் என்றும் எப்போதும் தங்கள் முன்பு இருக்கின்ற நிலையே வேண்டுமென்றும் அக்குரங்கு கூறியது. அதற்குச் சிவபெருமான் எம்உரை பொய்க்காது செல்க என்றார். உடனே, அக்குரங்கு மன்னனாகும் அப்பிறப்பிலும் இன்றைய நிகழ்ச்சி மறவாது இருக்க வேண்டும். இக்குரங்கு முகமே அப்போதும் நிலைத்திருக்க வேண்டுமென்றும் விண்ணப் பித்துக் கொண்டது. இறைவன் அவ்வாறே திருவருள் பாவித்ததால் அக்குரங்கு ''மாந்தாதா'' என்னும் மன்னனின் மகனாகப் பிறந்தது. இதுவே முசுகுந்த சக்ரவர்த்தியின் முற்பிறப்பு வரலாறு.

ஒருசில நூல்களில் முசுகுந்தனின் முற்பிறப்பிற்கும், முற்பிறப்பு கூறப்பட்டுள்ளது. அதில் ''விதூமன்'' என்ற கந்தர்வன் மறுபிறவியில் குரங்காகி அதனை அடுத்த பிறவியில் ''திலீப'' மன்னனின் மகனானான் என்பது ஒருசில வேறுபட்ட கருத்தாகும்.

தண்டபாணி ஸ்வாமிகளின் முசுகுந்த நாடகத்தின் அமைப்பில் மொத்தம் 81 பாடல்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் முதல்

9 பாடல்கள் பாயிரமாக அமைந்துள்ளன. மொத்தப் பாடல்களுள் அறுசீர் விருத்தம் ஒன்பது, எண்சீர்விருத்தம் 22, கண்ணிகள் 12, கீர்த்தனைகள் 33, கொச்சகக் கலிப்பா 2, சந்த விருத்தம் 2 மற்றும் சிந்து விருத்தம் ஒன்று ஆகியவை காணப்படுகின்றன.

இந்நூலில் கண்ணிகள் தனித்தனியாக பன்னிரண்டு எண்கள் கொடுத்திருப்பினும் இவை அனைத்தும் இசைமரபின்படி ஒரே உருப்படியாக கொள்ளப்படுகிறது. இது குறிஞ்சி ராகத்தில் திஸ்ரசாபு தாளத்தில் அமைந்துள்ளது.

### முசுகுந்த நாடகம் – இசைச் சிறப்பு

இசை நாடகங்களுள் வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகளால் இயற்றப்பெற்ற முசுகுந்த நாடகத்தைப் பற்றிக் காண்போம். இந்நாடகம் மொத்தம் 81 பாடல்களால் ஆனது.

| | | |
|---|---|---|
| அறுசீர் விருத்தம் | ... | 9 |
| எண்சீர் விருத்தம் | ... | 22 |
| கண்ணிகள் | ... | 12 |
| கீர்த்தனைகள் | ... | 33 |
| கொச்சகக் கலிப்பா | ... | 2 |
| சந்த விருத்தம் | ... | 2 |
| சிந்து விருத்தம் | ... | 1 |
| மொத்தம் | ... | 81 |

இதில் கண்ணிகள் 12-ம் இசைமரபின்படிக் குறிஞ்சி ராகம் திஸ்ரசாபு தாளத்திலேயே அமைந்துள்ளதால் ஒரே உருப்படியாகக் கொள்ளலாம். மேலும், 33 கீர்த்தனைகளில் 18 உருப்படிகளுக்கு மட்டும் ராகதாளக் குறிப்புகள் கொடுக்கப் பட்டுள்ளன. 2 கீர்த்தனைகளுக்கு இராகம் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது. எஞ்சிய 13 கீர்த்தனைகளுக்கு ஒரு குறிப்பும் தரப்படவில்லை. இந்நாடகத்தில் ஒரு வாக்கியம் கூட உரை நடையாக இடம்பெறவில்லை. ஆதலால் இந்நாடகம் நடிக்கப்பட வேண்டும் எனும் நோக்குடன் இயற்றப்படவில்லை என ஊகிக்கப்படுகிறது.

முசுகுந்த நாடகம் எனப் பெயர் சூட்டப்பட்டிருப்பினும் இதில் கவியின் கூற்றே மிகுதியாக இடம்பெற்றுள்ளது. ஒரு சில

பாடல்கள் இசையரங்குகளில் பாடுவதற்கும், நடன அரங்கு களில் நாட்டியமாடவும் பயன்படும் எனக் கூறப்பட்டிருப்பதன் மூலம் இந்நாடகம் நடிக்கப்படுவதற்காக ஏற்பட்டது அல்ல என்பது தெளிவாகிறது. இந்நூலாசிரியர் காலத்துக்கு பிறகு இந்த முசுகுந்த நாடகத்தை நாராயணசாமிப் பிள்ளை கம்பெனி யார் மேடை நாடகமாக நடிக்க விரும்பியபோது நூலாசிரியர் மைந்தர் திரு. செந்திநாயகம் பிள்ளை அவர்களால் இயற்றப் பட்டு உரிய இடங்களில் இடைச்செருகலாக 30 பாடல்கள் சேர்க்கப்பட்டன. இதன் பின்பே இந்நாடகம் மேடையேற ஓரளவு வாய்ப்பாக மாறியிருக்கிறது. இந்நூலில் சந்த விருத்தங் களாக உள்ள மூன்றாவது, நான்காவது பாடல்களுக்கும், சிந்து விருத்தமாக உள்ள 8-வது பாடலுக்கும், கண்ணிகளுக்கும் இசைக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. ராகத்தின் பெயர் கொடுக்கப்பட்டுள்ள 23 உருப்படிகளில் பழமை ராகங்கள் இடம் பெற்றுள்ளன.

**அவையாவன**

ஹம்ஸத்வனி, ஆரபி, ஆனந்தபைரவி, கமாஸ், கம்பீரநாட்டை, கல்யாணி, காம்போஜி, குறிஞ்சி, சங்கராபரணம், சஹானா, சுருட்டி, தோடி, பியாகட பிலஹரி, பைரவி, மாஞ்சி, முகாரி.

இந்நாடகத்துள் அறுவகையான தாளக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு.

ஆதி, ஏகம், திஸ்ரஏகம், திஸ்ரசாபு, மிஸ்ரசாபு, ஜம்பை, இந்நாடகத்தில் 14 உருப்படிகள் மட்டும் நாடகப் பாத்திரங்கள் பேசுவதாக உள்ளன. மற்றவை யாவும் கவியின் கூற்றாகவே உள்ளன. பிற்சேர்க்கையாக சேர்க்கப்பட்டுள்ள 30 பாடல்களும் நாடகப் பாத்திரங்களின் கூற்றுகளாக அமைந்துள்ளதும் இங்கு குறிக்கப்பட வேண்டியதாகும். பிற்சேர்க்கையின் 17 விருந்து 24 என எண் அளிக்கப்பட்டுள்ள நாதநாமக்கிரியை கண்ணிகள் ஒரு சிறந்த சம்வாத தருவாகும். இசைமரபின்படி இவ்வெட்டுக் கண்ணிகளும் ஒரு உருப்படியாகவே கொள்ளலாம்.

தண்டபாணி ஸ்வாமிகள் முசுகுந்த சக்கரவர்த்தியின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதிய முசுகுந்த நாடகத்தில் விநாயகர், சுப்ரமணியர் கீர்த்தனைத் துதிகளை

அடுத்து முசுகுந்தனின் வரலாறு பல கீர்த்தனைகளாக அமைந் துள்ளன. இக்கீர்த்தனைகள் அனைத்திலும் இசைப் பாடல் களுக்கு உரிய யதி, பிராஸம் போன்ற அணிகள் சிறப்பாக அமைந்துள்ளன.

சந்தக்குழிப்புடன் பாடல்கள் இயற்றியுள்ளார் என்பதற்கான ஒரு பாடல் எடுத்துக்காட்டு:-

ராகம்: கம்பீரநாட்டை தாளம்: ஜம்பை

தனனதன தந்ததன தனனதன தந்ததன
தனனதன தந்ததன தனனதன தனனா-தனதானா.
கயிலைமலை யின்தலையில் அமரரொடு தொண்டர்நனி
கழறியபெ ரும்துதிகள் செவியில்இரு வளைபூண்ட-அரனாரே
வெயில்நில உமிழ்ந்தஇரு சுடரெனவி ளங்குபடை
விரலுருமு குந்தனுரு வமும்உடைய குயில்போல்-உமையாளே
அயிலணித ரும்பவள மலையெனநெ டும்புவியின்
அசலமுக டெங்கும்நடம் இடுசரண குருவாம்-முருகோனே
மயிலுறழ் கவின்சசியும் மகபதியும் இன்பமுற
மகிழும்முசு குந்தனது கதைபகரும் வலிநீர்-அருள்வீரே

இதில் திருப்புகழில் இடம்பெறும் தொங்கல் எனும் அணி அமையப் பெற்றது.

முசுகுந்த நாடகத்தில் வருகின்ற ஒவ்வொரு பாடலை ஒட்டியும் ஒரு விருத்தம் தொடர்கின்றது. தண்டபாணி ஸ்வாமிகள் அரியணை, பொருள் செல்வம் முதலியவற்றை விரும்பியதாகத் தெரியவில்லை. உதாரணமாக:

கரஹரப்பிரியா ராகம் திஸ்ரசாபு தாளத்தில்
அரசு செய்வது வேண்டாம்-நின் சன்னிதி
அதில் இருந்தால் போது''

எனக் கூறுகின்றார். இதிலிருந்து அரசவையை ஏற்பதில் அவருக்கு விருப்பம் இருந்ததாகத் தெரியவில்லை. இவரது முசுகுந்த நாடகம் தோடயம், தோத்திரக் கீர்த்தனை விநாயகர் கீர்த்தனை, சுப்ரமணியர் கீர்த்தனை, கட்டியக்காரன் வருகையைத் தொடர்ந்து முசுகுந்த நாடகம் கீர்த்தனைகளாகத் தொடர்கிறது. இதில், வத்து நிச்சயக் கீர்த்தனை என்ற சுருட்டி ராக திஸ்ர ஏகதாள கீர்த்தனையில்

"கந்தன் வசிக்கும்தலம் இந்தலமே என்று
கணித்துச் சொல்லிடப் போமோ"

என்கிறார். இதில் "வத்து" என்பது "வக்து" என இருந்திருக்க வேண்டும் என்பது என் கருத்து. வத்து எனில் உறுதியாகச் சொல்லுதல் எனப்படும்.

தொடக்கத்திலுள்ள விநாயகர் துதியாக கல்யாணி ராகம்–ஆதிதாளத்திலமைந்த உருப்படி பக்திச் சுவை மிளிர அழகிய இசையுடன் அமைந்துள்ளது.

பல்லவி

முசுகுந்தன் சரித்திரக் கீர்த்தனை பாடிட
முதிரருள் புரிவீரே என் மீது அன்பாய்
முதிரருள் புரிவீரே கடாட்சம் வைத்து
முதிரருள் புரிவீரே.

இதில் அனுப்ராஸம் என்பது ஒருவரியிலோ, ஒரு ஆவர்த்தனத்திலோ ஒரே மாதிரியான சொல் மீண்டும் மீண்டும் வருவதாகும். இங்கு பல்லவியில் "முதிரருள் புரிவீரே" என்ற தொடர் மீண்டும் மீண்டும் வந்து இக்கீர்த்தனைக்கு அழகூட்டுகிறது. அதே போன்று அடுத்ததாக வரும் விநாயகர் ஆரபிராகத்திலும் திஸ்ரசாபு தாளத்திலும் அமைந்த கீர்த்தனையில்

"ஆனைமுகத்துடன் ஐந்து கரங்கொளும்
ஐயனைக் கைதொழுவாம்"

என்று தொடங்கி அதனுடைய முதல் சரணத்தில் முடிந்திட, விடிந்திட, படிந்திட, ஒடிந்திட என்ற தொடர்கள் இறுதியில் வரும் ப்ராஸமானது அந்திய ப்ராஸமாக ஒலிக்கிறது. காம்போஜி ராக திஸ்ரசாபு தாள சுப்ரமணியர் துதியில்

"கருணாகர முருகா கதிர்வேலவா
கருணாகர முருகா"

என்று பல்லவி அனுப்ராஸத்திலும், சரணம் வர்காட்சர ப்ராஸத்தில் கொண்டும் விளங்குகிறது. அதாவது ப்ராஸ அட்சரங்கள் ஒரே எழுத்தாகவோ (அல்லது) அதன் வர்க எழுத்துக்களாகவோ இருக்கலாம் என்பது நியதி. அதுபோல இக்கீர்த்தனையின் சரணத்தில் "திருமாமலை, தீவினைப்பயன், ஒருபேராயிலும், ஒதிடும்படி எவ ஆரம்ப எழுத்துகள் முதல் வரியில் தி எனவும் இரண்டாவது வரியில் தீ எனவும் மூன்றாவது

வரியில் ஓ எனவும் நான்காவது வரியில் ஓ எனவும் ப்ராஸ எழுத்தின் தொடர்புடைய எழுத்துக்களே வருவதால் இது வர்காட்சர ப்ராஸம் எனப்படுகிறது. பொதுவாக வீரரசத்திற்கு சிறந்த ராகம் அடாணா, சங்கராபரணம் முதலியவைகளாகும். ஆதலினால் கட்டியக்காரனின் வருகை பற்றிய கீர்த்தனை வீரரசம் உடைய சங்கராபரண ராகத்தில் அமைந்துள்ளது. கட்டியங்கூனில் என்பது யாதெறல் அதிகாரத்தில் பெரியவர்கள் ஓர் இடத்திற்கு வருவதை முதலில் அறிவிப்பதாகும். அரசவைக்கு அரசன் வரும்போதும் இறைவன் திருவீதி உலா எழுந்தருளும் போதும் கட்டியம் கூறப்படும். மற்றுமொரு கீர்த்தனை கந்தன் முசுகுந்தனுக்கு காட்சி கொடுத்ததை விவரிக்கும் கமாஸ் ராக, ஏகதாள கீர்த்தனையில் 3 சரணங்கள் இடம் பெற்றிருக்கின்றன. இதன் ஆரம்ப எழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஆறு, ஏறு, மாறு, கூறு என்ற நெடில் எழுத்துக்களை கொண்டு ஒலிக்கின்றன.

சித்திரவல்லியை முசுகுந்த சக்கரவர்த்தி திருமணம் செய்துக் கொள்வதை விவரிக்கும் கல்யாண கீர்த்தனையாக அமைந்த "கலியாணம் செய்து கொண்டானே" என்பது ஓரளவு ராக முத்திரையாகவும் அனுபல்லவியும் 3 சரணங்களும் விளம்ப காலத்தில் தொடங்கி மத்யமகாலத்தில் நிறைவுபெறுமாறு அமைக்கப்பட்டுள்ளது.

சித்திரவல்லியின் கிளியை எமன் தன் மனைவிக்காக கவர்ந்து சென்ற போது அதனைக் காணாமல் மனம் வருந்திய சித்திரவல்லியைப் பார்த்து முசுகுந்தன் கூறுவதாக உள்ள கீர்த்தனை கம்பீரரசம் மிக்க காம்போதி ராகத்தில் அமைந்துள்ளது. அடுத்து முசுகுந்தனால் தோற்கடிக்கப்பட்ட எமன் வருந்துவதாக அமைந்த உருப்படி சூழ்நிலைக்கு ஏற்ப இரக்கத்தைப் பொழியும் நாதநாமக்ரியா ராகத்தில் உள்ளது, மிகப் பொருத்தமாக உள்ளது. கீர்த்தனைகள் பல்லவி மற்றும் சமஷ்டி சரணம் ஆகிய இரு பகுதிகளை மட்டும் உடையதாக அமையலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக முசுகுந்தன் வீரபாகுவைத் துதித்த கீர்த்தனை, பல்லவியை அடுத்து நான்கு சரணங்களுடன் அமையப் பெற்றுள்ளது.

'கந்தவீரதப்படலம் கேளும்' எனும் கிர்த்தனையில் கந்த விரதத்தை அனுஷ்டிப்பதால் கிடைக்கும் பயன்களைக் கூறி

பயன்பெற்றவர்களையும் கூறி, இவ்விரதத்தால் ஒருவன் சமயக் காழ்ப்பற்ற சமரச ஞானத்தை எளிதில் அடையும் வழியையும் மற்றும் உலகியல் நோக்கையும் எளிய தமிழில் நன்கு புரிந்து கொள்ளும்படியாக பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

இந்த நாடகத்தின் கடைசியில் ஸ்வாமிகள் தம் கூற்றாக கூறுகின்ற விருத்தத்தில் கச்சியப்ப சிவாச்சாரியார், தம் கந்த புராணத்திலே கூறியதை அடியொற்றி, நான் இந்த முசுகுந்த நாடகத்தை இயற்றியுள்ளேன். இப்பாடல்கள் இசை அரங்கு களிலும், நடன அரங்குகளிலும் பாடவும், ஆடவும் பயன்படும். இதனைக் கையாளும் கலைஞர்கள் முறையே தமிழறிவு பெற்றவர்களாகவும், நாட்டியக் கலையில வல்லவர்களாகவும், பாடுபவர்கள் பொருளுணர்ந்து அனுபவித்து பாடினால் கேட்பவர் களால் சுவைக்க முடியும். அவ்வாறே நாட்டியக் கலையை நன்கு உணர்ந்தவர்களே தகுந்த முத்திரைகளை அமைத்து பாவங் களைச் சிறப்பாக வெளிப்படுத்த முடியும்; என ஒரு படைப்பாளி தன் படைப்பு நிகழ் கலைஞர்களால் எவ்வாறு பயன்படுத்தப் பட வேண்டும் என எதிர்பார்க்கிறார் என்பதனை இவ்விருத்தம் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இதனையடுத்து மரபுப்படி மங்களம் பாடி நாடகத்தை முடிக்கின்றார்.

19-ம் நூற்றாண்டில் தொடங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகள் பல நூல்களை படைத்தும், தனி நாடகக் கீர்த்தனைகளாக இயற்றியும், இசை உலகிற்கு பல வழிகளில் சேவை செய்துள்ளார். இக்கட்டுரையின் மூலம் இவர் சந்தப்பாக்களுக்கும், இசை நாட்டிய நாடக இலட்சிய இலட்சண மரபிற்கும் இவர் ஆற்றியுள்ள தொண்டு மிக உயர்ந்த இடத்தைப் பெறுகின்றது எனலாம்.

## சுவாமிகளின் பல்சமய நோக்கு

### வேடசந்தூர் பாவா

வடிவேலன் பேரருளால் வண்டமிழை வளப்படுத்தவந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பேரருளும் பெரும் புலமையும் கொண்ட அருளாளர் ஆவார். கவிதை என்பது கடவுளின் நன்கொடை என்று சான்றோர் சாற்றுவதற்கேற்ப கந்தப் பெருமான் பேரருளால் சந்தக் கவிமழையைப் பொழிந்து வண்ணச்சரபம் என்ற வையப் புகழை அடைந்தார்.

கந்தவேள் அருள்கொண்ட காரணத்தால் இளமை முதலாகவே இன்தமிழ் இசைக்கத் தொடங்கிய இவரின் கருது கோள் முற்றிலும் கந்தவேள் இடத்திலேயே இருந்ததால் கௌமார மார்க்கத்தில் ஒப்புயர்வற்ற பெரும்புலவராக அருந்தமிழ் மழையைப் பெய்வித்து பேரின்பம் ஊட்டியுள்ளார்.

#### புலவர் புராணம்

வண்ணச்சரபம் அவர்கள் இயற்றிய பன்னூற்களில் பொன்னூலாக விளங்கும் புலவர் புராணம் புகழ் கொண்ட பெருநூலாகும். அந்நூல் வழிவழியாக வரும் வரலாறுகளையும் தாம் கேட்டுணர்ந்தவற்றையும் கொண்டு பாடப் பெற்ற பெரும் நூலாகும்.

அத்தகைய புராணத்துள் தமிழ்ப்புலவர்கள் என்பது மட்டு மின்றி சைவ, வைணவ, பிற சமயப்புலவர்களையும் பாடி மகிழ் கின்றார். இந்த பெரும்பேற்றைத் தான் பெற்றது பற்றிப் பெரிதும் வியக்கின்றார். சொற்சுவை சொல்லுணர்ந்து காவியங் களைச் செய்த வாணர்கள் பலரினும் தாம் பெரும் வாய்ப்புப் பெற்றவராகவே கருதுகின்றார். உண்மையில் பெருமிதம் அடைகின்றார்.

#### மூன்று இஸ்லாமிய புலவர்களைப் பற்றிய புகழுரை

அத்தகையவர் சமய ஒருமைப்பாட்டுணர்வால் இசுலாமிய சமயத்தைச் சார்ந்த மூன்று புலவர்களைத் தேர்ந்தெடுத்து

முத்துலுக்கப் புலவர் சருக்கத்தில் 55 கவிதையில் சையது மொய்தீன் புலவர், உமறுப்புலவர், சவ்வாது புலவர் ஆகிய மூவரைப் பற்றியும் மிகவும் சிறப்பாகப் பாடியுள்ளார்.

பொதுவாக, தமிழிலக்கியம் சிறந்து விளக்குவதற்குக் காரணம் பற்பலவாகும். பல்வேறு சமயத்தினரும் தத்தம் சமயக் கருத்துக்களை வெளிப்படுத்தும் கருவியாகத் தமிழ் மொழியைப் பயன்படுத்திக் கொண்டதுடன் அற்புதமான உயரிய காவியங்களையும் அவரவர் சமயத்தின் சார்பாக ஆக்கியும் வழங்கியுள்ளார்கள்.

இந்துக்கள், சமணர்கள், பௌத்தர்கள், கிறித்தவர்கள் இப்படி வெவ்வேறு சமயத்தவர்களும் ஆக்கிக் குவித்த இலக்கியங் களைப் போல இசுலாம் சமயமும் தனது பங்கைச் செவ்வை யுடன் செய்து முடித்துள்ளது.

சைவமும், வைணவமும், சமணமும், பௌத்தமும், கிறித்தவ மும் தமிழுக்கு வெவ்வேறு இலக்கியங்களை வழங்கியுள்ளது போன்றே இசுலாமும் இன்பத் தமிழ்ச்சோலையை வளப்படுத்தி யுள்ளதை வரலாறு நன்குணர்த்தும்.

சுமார் அறுநூறுக்கும் மேற்பட்ட முஸ்லீம் புலவர்கள் ஆயிரத்துக்கு மேற்பட்ட இலக்கியங்களை இயற்றி வழங்கி யுள்ளனர். பைந்தமிழ் பேரிலக்கியங்களும் பிரபந்தங்களும் பக்திப் பனுவல்களும் ஞானச் சோலைகளும் குன்றாப் புகழுடன் இன்றும் நின்று நிலவக் காண்கின்றோம்.

இந்த வகையில் இசுலாமியர்கள் ஆற்றிய அருந்தமிழ்ப் பணியைப் பொதுமக்கள் உணர வாய்ப்பிலாவிடினும் தமிழ்ப் புலவர்கள் அதனை மறந்திலர்.

அவ்வகையில்தான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி களும் அறுநூறுக்கும் மேற்பட்ட புலவர்களில் முழுமை நல முடைய முத்தமிழ்க் காவலர்களாக மூவரைத் தேர்ந்தெடுத்து முத்துலுக்கப் புலவர் சருக்கத்தை அமைத்துள்ளார்.

மும்மணிகளைப் போல ஒளிர்ந்த அந்த மூவர் 1. புலவர் சையது மொய்தீன் 2. உமறுப் புலவர் 3. சவ்வாது புலவர் ஆகியோராவர்.

இவர்களின் வரலாற்றை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் மிகவும் அற்புதமாகவே செய்துள்ளார் எனலாம். செவிவழிச் செய்தியாகவே இவர்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகள் உள்ளபோதும் அவை சிறப்பான செய்தியாகவே உள்ளன.

வரலாற்று நோக்கில் நாம் புராணங்களை அணுகுவதில் பயனில்லை. காரணம், புராணம் என்பதில் கற்பனைகள் கலக்கவே செய்கின்றன. அதில் நமது புலவர் புராணம் விலக்கல்ல. என்றாலும் வண்ணச்சரபம் அவர்களின் வளமார்ந்த தமிழுக்காகவும் வாஞ்சைமிகு நெஞ்சத்திற்காகவும், வரலாற்று ஆய்வை விடுத்து புலவர் அவர்களின் வழியே நாம் சென்று பார்ப்பதே இவ்வாய்வின் நோக்கம்.

**சுவாமிகள் புகழும் முதல் இஸ்லாமிய புலவர்**

அருஞ்செயல் நிறைந்த புலவராகவே முதலாம் புலவர் சையது மொய்தீன் விளங்குகிறார். இளமையில் இவர் இஸ்லாமிய சடங்குகளில் முற்ற, தம்மதமாகிய இஸ்லாமியக் கலைகளைக் கற்றதுடன் தமிழையும் செவ்வையுறக் கற்று விளங்கலானார். பின் ஓர் மகானின் வழி மறையும் பெற்று அம்மந்திரத்தால் அவன் அன்னையின் தரிசனம் பெற்று அற்புதமான கவிதைகளைப் பாடுகின்றார்.

இத்தகைய கவிதையாற்றலைப் பெற்ற அவர் கேரளம் முதலிய நாடுகளுக்குச் சென்று பாராட்டைப் பெறுகின்றார். அங்கு பல சோதனைகளுக்கு ஆட்பட்டு, அந்த நாட்டு மன்னன் இறந்துபோகும்படி பாவிசைத்து, தமிழகம் வந்து வாளினால் செய்யலாகாவற்றை எல்லாம் வாக்கினால் செய்து சிவக்காட்சி கண்டு பரகதி அடைந்தார்.

**சுவாமிகள் புகழும் இரண்டாம் இஸ்லாமிய புலவர்**

அடுத்து பேராப் புகழ் கொண்ட பெருங்கவிதை புராணத்தை வழங்கிய உமறுப்புலவர் வரலாறாகும். இவர் சேது நாட்டில் உள்ள கீழக்கரையைச் சேர்ந்தவர். இவர் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தவர். தமிழ்மொழியை நன்கு கற்றவர். இஸ்லாமிய மதத்தின் மீது ஆழ்ந்த பற்றுடையவர். முகமது நபிகள் நாயகத்துடைய வரலாறுதான் சீறாப்புராணம். சீறாப்புராணத்தை 5000 பாடல்களாகச் செந்தமிழ் நடையில் பாடி முடித்தார்,

உமறுப்புலவரின் தந்தை பெயர் மாப்பிள்ளை முகமது நைனார். 1642-ஆம் வருடத்தில் நவம்பர் மாதம் 2-ஆம் தேதி பிறந்தார். 1703-ஆம் வருடம் ஜூலை மாதம் 8-ஆம் தேதி மறைந்தார். 61 ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்தார். சீறாப்புராணத்தை கர்ணப் பரம்பரை கதைகள் மூலம் விளக்க முற்பட்டார். அதை அமைக்க கீழக்கரை சதக்கத்துல்லா அப்பா மகானிடம் பாட உரை வேண்டிச் சென்றார். மகான் அதை அக்கோணத்தில் எழுத மறுத்தார்கள். பின்னர் இவர்கள் இருவர் கனவிலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தோன்றி ஒருவருக்கொருவரை அறிமுகம் செய்து வைத்து உமறுப்புலவரை மீண்டும் சதக்கத்துல்லா அப்பா மகானிடம் செல்லுமாறு உத்தரவு கொடுத்தார்கள். அதைப்போலவே நாகூரில் சமாதி கொண்டுள்ள நாகூர் ஆண்டகை ஷாகுல் ஹமீது பாதுஷா நாயகம் அவர் களிடம் சென்று பாடும் வரத்தைப் பெற்றார். சீறாப்புராணம் இயற்றப் பெற்று 140 ஆண்டுகளுக்குப் பின்னரே அது அச்சு ஏற்றப் பெற்றது. முதல் அச்சு கி. பி. 1842-ஆம் ஆண்டு வெளி யானது. சீறாப்புராணத்தில் முதலில் இறைவனின் தன்மை யையும் அவனது ஆற்றலையும் குறிப்பிட்டு விட்டு முகமது நபி நாயகம் அவர்களுடைய பிறப்பைப் பற்றிப் பாடியுள்ளார். சீறா என்றால் அரபு மொழியில் வரலாறு என்று பொருள்படும். வள்ளல் சீதக்காதி அப்பா அவர்களின் வேண்டுகோளின்படி இச் சீறாப்புராணம் இயற்றப் பெற்றது.

உமறுப்புலவர் கீழக்கரையில் திருமணம் புரிந்து அங்கேயே வாழ்ந்து வந்தார். அந்த ஊரில் நடக்கும் ஒவ்வொரு திருமணத் திலும் புலவர் பணம் என்று ஒரு காணிக்கை ஏற்படுத்தி இன்று வரை அதை நடத்தி வருகிறார்கள். இவ்வாறு அந்த ஊர் மக்கள் உமறுப்புலவரை கௌரவப் படுத்துகிறார்கள்.

உமறுப்புலவர் பெருமையைச் சொல்லும் முகத்தான் அவரை சதுர்வேத சித்தாந்தி என்றும் வீண்போது போக்காமல் தமிழைக் கற்றவர் என்றும் குறிப்பிடுகின்றார்.

காண்போர்கள் நெற்றிக்கண்
அடல்வேர்வை மீறிக் கழிந்துற்றதோர்
மாண்போங்கு சதுர்வேத சித்தாந்தி
என்றெண்ணும் வடிவத்தினான்;

வீண்போது போக்காது தமிழ்கற்றனன்;
தங்கள் வேதத்தின் மிக்
கேண்போந்த முதல்மந் திரம்சொல்லும்
வழிபாடி கழ்ந்தோவிலான்.

இத்தகைய உமறுப்புலவர் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு வந்த போது கம்பன் இயற்றிய கவின் காதையான இராமகாதையில் ஈடுபட்டு, தான் வழிபட்டு வரும் தனித்தேசிகனான நபிகள் நாயகப் பெருமானை பெருந்தகையின் செம்மையான பண்புகள் துலங்க அற்புதமான சீறாப்புராணத்தைப் பாடி முடித்துள்ளார்.

முழுமையாக இவர் அக்காவியத்தை நிறைவு செய்யவில்லை என்பதையும் சீராம சரிதத்தின் எதிர் என்றதால் மன்னு சீரா எனும் பேரமைத்தார் என்பதையும் தெளிவாக விளக்கி யுள்ளார்கள்.

கற்றவர்களில் சிறந்தோர் தனக்குப் பிடித்த ஏதேனும் ஒரு தெய்வத்தை நாடிச் சென்று அதன் அருளைப் பெற்று மேலோர்கள் ஆவார்கள். அம்முறையில் மிகச் சிறந்த மேதை யானவர் உமறுப்புலவர் என்பது இவர் நாட்டியுள்ள முடிவாகும்.

சுவாமிகள் புகழும் மூன்றாவது இஸ்லாமிய புலவர்

ஒப்பற்ற பெரும் வீரம் கொண்ட துலுக்கர் குலத்து உதித்து, செவ்விய செந்தமிழைக் கற்று, முருகப் பெருமான் அருளாலே அவர் மந்திரத்தை ஓதி, இலக்கிய உலகில் பெரும்புகழைக் கொண்ட சவ்வாதுப் புலவரைப் பற்றி இறுதியிலே நமது வண்ணச்சரபம் அவர்கள் சிறப்புடன் பாடி உள்ளார்.

வரகவி மகான் சவ்வாதுப் புலவர் அவர்கள் 1745–ஆம் ஆண்டில் எமனீசுவரம் என்னும் நகரில் பிறந்தார்கள். இராமநாதபுரம் சமஸ்தானத்தில் அரசவைப் புலவராக விளங்கி னார்கள். இவர்களின் முன்னோர் அரேபியாவிலிருந்து தமிழகத் திற்கு வந்தனர் என்றும் கூறப்படுகிறது.

கொடைத்தன்மையும், குணநலனும் புலவருக்குப் புகழ் சேர்த்தன. அமைதியும் ஆழ்ந்த சிந்தனையும் கொண்ட சவ்வாதுப் புலவர் சில சமயங்களில் ஆர்ப்பரிக்கும் ஆழியாக ஆவதுண்டு. அப்போது இவர்களின் நாவில் வருவது நடந்தே

திருமாம் தரம் மாறி நடந்தவர்களை இவர்களின் "அறம்" ஏறி வதைத்ததாகப் பல செவிவழிச் செய்திகள் சுவையானவை. 1808 ஆம் ஆண்டில் பரமக்குடி என்னும் நகரில் தன் பூதவுடலை அடக்கிக்கொண்ட புலவர் அவர்கள் தன் புகழுக்காக அருமை யான பிள்ளைத்தமிழை நமக்குத் தந்துள்ளார்கள். அவர்கள் இயற்றிய நூல்களுள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது வழித் தோன்றலில் வந்த ஞானமகான் கோமான் கௌதுல் அஃலம் முஹிய்யுத்தின் அப்துல் காதிர் ஜிலானி (ரலி) அவர்களைக் குழந்தையாகக் கற்பனை செய்து புனையப்பட்டதே முஹிய்யுத்தின் ஆண்டவர் பிள்ளைத்தமிழ்.

**நூலமைப்பு**

பருவம் ஒன்றுக்கு பத்து பாடல்களாக பத்து பருவங்களுக்கு நூறு பாடலாகி காப்பு செய்யுளோடு 101 பாடல்களாக நிறை கிறது. இந்நூல் ஞானியர் திலகம் முஹிய்யுத்தின் அப்துல் காதிர் ஜிலானி (ரலி) அவர்களது உபதேசங்களும், அற்புதங்களும் பகுதாது நகரின் வளமும் பற்றிப் பாடப்பட்டுள்ளது.

**புலவர் பெருமானின் அரபு, தமிழ் இலக்கியப் புலமை**

அம்புலி பருவத்தில் வரும் அனல் ஹக்கைச் சொல்லும் பிள்ளை மாணிக்கமொரு அம்புலியாடவே எனும் ஒரு அடி வருகிறது. (அனல் ஹக் – நானே இறை – நானே – பரப்பிரம்மம்) எனப் படிக்கும் பொழுது புலவர் பெருமானின் இலக்கண பெருமையும் மெய்ஞான கலையில் கரைகடைந்த ஞான மாமேதை என்பது விளங்குகிறது.

அன்னார் மறைந்து பல வருடங்களுக்குப் பின் அன்னவரின் முஹிய்யுத்தின் ஆண்டகை பிள்ளைத்தமிழ் என்றும் காப்பியத் திற்குத் தமிழறிந்த மக்கள் அனைவருக்கும் எளிய நடையில் விளக்கமளிக்கக் காலமும் கனிந்தது. முஹிய்யத்தின் ஆண்ட கையின் தகுதி நூதலில் (வழிமுறையில்) வந்த அன்னவரின் திருபேரர் ஷைகுனா ஸய்யீத் கலீல்அவ்ன் மௌலான நாயகம் அவர்கள் புலவர் பெருமானது பாக்களுக்கு விளக்கமளித்து உள்ளார்கள்.

அறுமுகச் செவ்வேளைத் துதித்தும் மதித்தும் அவன் அருள்கொண்ட தண்டபாணி சுவாமிகள் தன்னைப்போல்

முருகன் அருள்வேண்டி தண்டமிழ் இசைத்த சவ்வாதுப் புலவரை மிகவும் சிறப்பாகப் போற்றுகின்றார்.

பணிகின்ற தேவாய பன்னிருகைப் பெருமான்மேல்
அணிகின்ற பலபாடல் அஞ்சாமல் அறைந்திட்டான்;
துணிகின்ற நெஞ்சுடைய தொண்டரையார் என்செயலாம்?
திணிகின்ற தோளாரும் திடுக்கமுற்றுப் பணிந்தாரே.

சேதுபதி ஆதியரால் சிங்கமுகப் பொற்சிவிகை
மீதுலவும் தகைதோய்ந்து வேலு மயிலும் துணைஎன்று
ஓதுமொழியோடு சபைதோறும் உற்று உலப்பில்
சயங்கொண்டு,
வாதுசெயும் புலவர்பலர் வாயடங்க மகிழ்ந்தானே.

இசுலாம் மதத்தில் இருந்தாலும் ஈராறு கையன்மேல் மனத்தைப் பறிகொடுத்து செல்லும் இடங்களில் வெல்லும் கவியிசைத்த சவ்வாதுப் புலவரின் முருக பக்தியை எண்ணி எண்ணி இன்புற்ற வண்ணச்சரபம் அவர்கள் சவ்வாதுப் புலவரின் ஒப்புயர்வற்ற முருகபக்தியை வியப்புடன் விளக்கி இன்பமுற்றதாகவே தெரிகின்றது. இல்லை எனில் இப்படி பாடியிருக்க முடியுமா?

கோலத்தில் ஒரு துலுக்கன்; குணத்தில் ஒரு கவுமாரன்,
ஆலத்தில் கொடும்சினமும் அமிழ்தில் இனித்திடும் அன்பும்
சீலத்தால் கொடு வாழ்ந்தான்! செயல் அனந்தம்
எனச்சொல்வார்;
ஞாலத்தில் பிறர்உரைப்ப நான்அறிந்த திவ்வளவே.

என்று கூறும் வண்ணச்சரபம் அவர்கள் இவர் வரலாற்றை முடிக்குமிடத்து,

ஒருமதத்தோன், மற்றொர்மதத் துறுதேவைப் பணிந்தாலும்
அருளடைந்தால், உலகம்முழுதும் அவன்மொழிக்கு
அஞ்சுவது உண்மை;
குருவிகற்பமே மதங்கள்; குறித்தபரம் ஒன்றென்னும்
தெருள் அடைவ தெளிதன்று; செய்தவம் முற்றிடில் ஆமே.

என்கின்ற பொதுமைப் பாங்கை நாம் எண்ணி எண்ணி வியக்கலாம்.

குருக்கள் பலர் எனினும் குறித்த பரம் ஒன்றென்னும் தெருள் அடைதல் எளிதன்று என்கின்ற உயர்ந்த கருத்து

மிகவும் சிந்திக்கத் தக்கதாகும். அட்டாவதானம் முதலிய அரிய கலைகளில் வெற்றி கண்ட சவ்வாதுப் புலவர் இறுதியில் முருகப்பெருமானிடம் அருள் கொண்டு அவன் உலகே புகுந்தார் என்கிறார்.

விளங்கும் துறைகளாகிய சமயங்கள் பலவாக இருப்பினும் வணக்கத்திற்குரிய இறைவன் ஒருவர்தான் என்பதை நன்கு உணர்ந்திருந்ததுடன் அவனை அழகாக உணர்த்தியவர் வண்ணச் சரபம் ஆவார்.

எனவேதான் சமயக் காழ்ப்பின்றி பிற மதப் புலவோர் ஆயினும், பேராற்றல் வாய்ந்தவர்களைப் பெரும் புகழ் கொண்ட மூன்று இசுலாமியப் புலவர்களை, அவரால் தம் புலவர் புராணத்துள் இணைக்க முடிந்தது.

தண்டபாணி சுவாமிகள், பிற சமய வெறுப்பேற்ற பெரும் பண்பில் சிறந்தோங்கி நின்ற சீர்கையை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது.

இன்றைய நிலையில் நாம் பல்சமய ஒருமைப்பாட்டைப் பெரிதும் வலியுறுத்துகின்றோம். ஆனால் 1839 ஆம் ஆண்டில் தோன்றிய சுவாமிகள் பரந்த நிலையில் பல்சமயப் பெரு நோக்கைக் கொண்டிருந்ததுடன் அதனை உலகோர்க்கு எடுத்து உரைத்த பாங்கை வியந்து போற்ற வேண்டியுள்ளது.

எல்லாச் சமயங்களும் குறிப்பிடுவது ஓர் பரம்பொருளையே என்ற கருத்தில் முதன்மை கொண்ட வண்ணச்சரபம் அவர்கள் இந்த மூவர் வரலாற்றில் கையாண்டிருக்கின்ற சொற்கள், மரபுகள் யாவும் மிக்குயர்ந்த முறையில் அமைந்துள்ளன.

**முஹம்மது நபியைப் புகழும் சுவாமிகள்**

பிறமத நூல்களையும் பிறமதத் தலைவர்களையும் பிறமத மந்திரங்களையும் குறிப்பிடும்போது எவ்வளவு கண்ணியமாகக் குறிப்பிட வேண்டும் என்பதை மிகவும் சிறப்பாகவே செய்து உள்ளார். இசுலாம் சமயத்தில் இறைத் தூதராகவும் இறைவனுக்கு அடுத்து இசுலாமிய மக்களால் போற்றப்படும் பெருமைக்குரிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் குறிப்பிடும்போது ... தம்பந்து

சனம் முற்றும் வழிபாடு செய்யும் தனித் தேசிகன் (2860) என்று ஒரு ராகமாய் தனி நாயகமாய் விளங்கும் பெருமானாரைத் தனித்தேசிகன் என்பது எவ்வளவு பொருந்தும். இவ்வாறு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பல்சமயப் பெரு நோக்கிற்கு வழிகாட்டியுள்ளதை நாம்பாராட்ட வேண்டியுள்ளது.

நல்ல கல்வி கற்றவர்கள் தமக்குப் பிடித்த ஏதேனும் ஓர் தெய்வத்தை ஓர் சமயத்தை நாம் நாடுதல் வேண்டும், பாடுதல் வேண்டும். அவரவர்கள் சமயம் அவரவர்களுக்கு அமைதல் வேண்டும் என்பதை, கற்றோரில் ஏதேனும் ஒரு தெய்வம் நாடிக் கவின்று இட்டருள் பெற்றோர்களே மேல் என்றுரைக்கும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பொதுமை உணர்வு போற்றற்குரியதாகும்.

எச்சமயம் என்றாலும் எல்லாம் நமதென்றே
மெச்சும் நிலையில் மிகவிரும்பி – இச்சகத்தில்
எண்ணம் மணக்க எழில்மணக்க பாடியநம்
வண்ணச் சரபத்தை வாழ்த்து.

# சுவாமிகள் காட்டும் கல்வியியல்

இரா. வேலாயுதம்

"கற்க வேண்டும்" என்பது இதனை கற்பாயாக என்று வேறொன்றை அடையாளம் காட்டுவதும், இதனை கற்க வேண்டும் என்று கூறும் தன்மையை உணர்தலுமாகும். ஒரு நூலில் வேறொரு நூலைப் படிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது என்று சொன்னால் முதலில் அச்செய்தியைக் கூறிய நூலைத் தெரிந்து கொள்ளுதல்; பிறகு அந்த நூலில் கூறப்பட்ட வேறொரு நூலைத் தெரிந்து கொள்ளுதல் என்பது போல 'கற்க வேண்டும்' என்பது ஒருவன் கற்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளுதலும் கற்றலாகிய செயல்முறையை மேற்கொள்ளுதலுமென சுட்டி நின்றது.

கல்வியினுடைய முறை இன்னவாறு அமைய வேண்டும் என்று கூறுவது ஒருமுறை. இன்னவாறு அமைய வேண்டும் என்று கூறுவதைப் படிப்பது ஒருவகை. கல்வி என்பது தெரிந்து கொள்ளுதலும், செய்தலும் என இரண்டாலும் இணைத்துக் காணப்பட வேண்டிய ஒன்று. அதனாலேயே கற்றலையும் நிற்றலையும் வள்ளுவர் வலியுறுத்தினார்.

தண்டபாணி சுவாமிகளின் நூல்களைப் படிப்பது ஒருவகை கல்வி. சுவாமிகள் கல்வியைப் பற்றி கூறிய கல்வி ஒருவகை. இரண்டாலும் இணைத்து கல்வியியல் பற்றிய சிந்தனையை இக்கட்டுரையில் ஓரளவு காணலாம்.

## முதுநெறியும் புதுநெறியும்

ஒவ்வொரு காலத்திலும் மக்கள் சிந்தனை வளர்ச்சிக்கேற்ப கருத்தியல் உயர்வு பெறுகிறது என்பதை விடவும் கருத்தியல் உயர்வு நோக்கி சிந்தனையை வளப்படுத்துகிற செயல் முயற்சிகள் இன்றியமையாததாகும். அத்தகைய நிலைக்கு சிந்தனையை முதுமை, புதுமை ஆகிய இரண்டாலும் இணைத்துக் காணுகிற நிலை வேண்டும். காலந்தோறும் சிந்தனைமுறை வளர்ந்து வந்த

அடிப்படையிலும் உயர்ந்த சிந்தனையைக் காணும் அடிப்படை யிலும் தொன்மைக் கூறுகளை அறிந்து, இன்றைய தேவைக் கேற்ப அதே சமயத்தில் குறிக்கோளடிப்படையில் உயர்ந்த நிலையை காணுகிற புதுமையை இணைத்துக் காட்டுவதாக அறிவு பற்றிய கூறுகள் அனைத்தும் அமைய வேண்டும்.

மும்மணிக் கோவை பல, மாலை பல, அந்தாதி
மூவகை பல இன்னவா
முதுநெறிப் பனுவல் பல, புதுநெறிப் பனுவல் பல
முத்தமிழ்ச் சுவை வழாமல்
இம்மணிற் புலவர் பலர் மகிழ்வுறக் கொடுத்துளேன்
இப்போதும் சொல்கின்றேன்
இன்னமும் பகருவேன்...

என்ற தண்டபாணி சுவாமிகள் பாடல், முதுமையையும் புதுமை யையும் இணைத்துக் காண வேண்டும் என்ற அடிப்படையை உணர்த்திய பாடலாகும். நூல் இலக்கண அடிப்படையில் இலக்கிய வடிவங்களை முதுநெறியின் அடிப்படையிலும் புது நெறியின் அடிப்படையிலும் பாடியதாக அப்பாடலில் தண்டபாணி சுவாமிகள் கூறியுள்ளார். அதனுடைய அடிப்படைக் கருத்து தொன்மைக் கூறுகளை புதுமைக் கூறுகளை இணைக்கின்ற பணி சிந்தனையில் மலர வேண்டும் என்று காட்டியதாகும்.

கல்வி என்பது சிந்தனை வளர்ச்சி முறைகளை இணைத்துக் காணுவதுடன் புதுமையை நோக்கி முதுமையோடு இணைத்துக் காணுவதாக அமைய வேண்டும் என்ற நெறிமுறையை தண்டபாணி சுவாமிகள் காட்டுவதை மேற்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது.

சொல்லுகிற முறைமையில், அறிகிற முதுமையில் முதுமை யையும், புதுமையையும் இணைத்துக் காட்டுகிற கல்வியியலை வலியுறுத்திய சுவாமிகள் செயல் முறையிலும் செய்து காட்டியவர். ஆறுவகைச் சமயங்களை இணைத்துக் கண்டு அதன் மேல் பொதுநெறியாக புதுநெறியை வாழ்வியலில் அமைத்துக் கொண்டவர் தண்டபாணி சுவாமிகள். அத்தன்மை தொன்மைக் கூறுகளாக உலகில் விளங்கும் எல்லாச் சமயங்களையும் இணைத்து அவைகளுக்கு மேலாக புதுநெறியைக் காட்டியவர்

என்ற வகையில் கல்வியில் செயல்முறையை தம் வாழ்வியலில் ''நிற்றல்'' என்பதாக நெறிப்படுத்திக் காட்டியவர் தண்டபாணி சுவாமிகள். குறிக்கோளடிப்படையில் கல்வியினுடைய நிறைநிலை முழுமை பெறும். அத்தன்மையில் கல்வியியலைக் காட்டிய பெருமையும் சுவாமிகளுக்கு உண்டு.

**மொழிக்கல்வி**

மொழிக் கல்வியைப் பொறுத்தவரை இலக்கண, இலக்கியங்களே பயிலப் பெறுகின்றன. இலக்கண, இலக்கியங் களைப் படைப்பதில் தண்டபாணி சுவாமிகள் 19-ஆம் நூற்றாண்டில் முன்னிலை வகிப்பவராக வாழ்ந்தவர்.

புராணம், இலக்கணம், நாடகம், சரித்திரம், தோத்திரம் என்ற வகையில் முதுநெறி நூல்களும் புதுநெறிப் பனுவல்களும் அருளியிருக்கிறார். 'சத்திய வசனம்' என்ற உரைநடை நூலும் அமைத்திருக்கிறார்.

தனித்தமிழில் எழுதிய அருளாளர்; வடமொழிக் கலவாதவர்; ஆங்கிலத்தை எதிர்த்தவர். நீரோட்டக அந்தாதியை 'இதழகல் அந்தாதி' என்று தமிழில் அழகாக எழுதியவர். நூலுக்கு உரையும் எழுதியுள்ளார். பொருள், கருத்துரை, ஞாயம், இலக்கணம் என நான்கு பிரிவாக உரை எழுதிய மொழிச் செம்மல்.

எழுத்து, சொல் என்பதாக மட்டுமின்றி முதலொலியியல் அந்தாதி, நடுஒலியியல் அந்தாதி என ஒலி அடிப்படையில் அந்தாதி பாடியவர் தண்டபாணி சுவாமிகள்.

**பொருட்கல்வி**

அருளாளர்கள் இறைவனை அனுபவித்த அருளனுபவத்தை பாடுவது என்பதுடன் மக்களை நல்வழிப்படுத்தும் நெறிகளில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நெறிகளில் பாடியுள்ளனர்.

தண்டபாணி சுவாமிகள் சூரியன், சிவன், திருமால், உமை, கணபதி, முருகன் ஆகிய ஆறு சமயக் கடவுளை வழிபடும் பொருளாகக் கொண்டவர். அதற்கு மேலும் ஏழாவதாக பொதுநெறியை கடந்த நெறியாக மூலப்பொருளை காட்டியவர்.

சமயங்கள் பலவற்றிலும் ஆறு சமயங்கள் சிறந்தன. அவை சௌரம், சைவம், சாக்தம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம் என்பவையாகும். இவற்றுடன் ஒன்றுபட்டதும் வேறாவதும் ஆக அதீதம் என்று ஒன்றுண்டு. இந்த ஏழு சமய வழிபாட்டின் முறை பற்றியே கிழமைகள் ஏழாயின என்றவாறு தண்டபாணி சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

| சமயம் | கிழமை | கடவுள் |
|---|---|---|
| சௌரம் | ஞாயிறு | சூரியன் |
| சைவம் | திங்கள் | சிவன் |
| சாக்தம் | செவ்வாய் | சத்தி |
| வைணவம் | புதன் | திருமால் |
| காணாபத்தியம் | வியாழன் | கணபதி |
| கௌமாரம் | வெள்ளி | முருகன் (குமரன்) |
| சமயாதீதம் | சனி | பொதுக்கடவுள் (பரம்பொருள்) |

என்பதாக தண்டபாணி சுவாமிகள் அமைத்துள்ளார். இதனை சத்திய சூத்திரம் என்ற நூலில் 'பொது ஞாயம்' என்ற தலைப்பில்,

அநந்த பேதத்து அறுவகைச் சமயமும்
அவைமுழு(து) ஒருவலும் தழுவலும் ஆகும்
அதீத நெறி ஒன்றும் ஆய ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம் ஏழாயவே (பா. 7)

என்ற பாடலில் சுட்டுகின்றார்.

**கல்வியியல் பார்வை**

தண்டபாணி சுவாமிகளின் கல்வியியல் பார்வை 'உருவகம், என்பதாகவும் 'பொருள்' என்பதாகவும் காட்டப் பெற்றுள்ளது; நான்கு நூல் அருளாட்சியில் இரண்டு தலைப்புகளில் அதைப் பற்றி பேசியிருக்கிறார். கல்வி பற்றி விளக்கியும் சத்திய வாசகம் என்ற நூலில் உரையாகவே விளக்கியுள்ளார்.

1. தெய்வ நிச்சயம், அருள்நோக்கம் ஆகியன பெறும் முயற்சியைத் தருவதாக கல்வி அமைய வேண்டும் என்ற அடிப் படையில் சுவாமிகள் கல்வியியலை சத்திய வாசகத்தில் விளக்கு கின்றார்.

> கல்வி என்பது சகல நூல்களையும் கற்றுப் பிரசங்கிப்பதல்ல. தெய்வ நிச்சயமும், திருவருட் பிரசாத விருப்பமும், அதற்குத் தக்கமுயற்சியும் ஏற்படப் பெறுதலேயாம்.
> – சூத்திரம் 62.

> தெய்வ நம்பிக்கையாகிய ஞானமும், விற்பத்திப் பெருக்க மாகிய கல்வியும் பொருந்தினால், பொன்மலரில் வாசனையும் பொருந்தியதற்கு ஒப்பாகும். – சூத்திரம் 63.

2. பழமை நூல்களை தற்காலத்திற்குச் சிறந்த ஆதாரமாகக் கொள்ள வேண்டும். அதனடிப்படையில் தீமை நீக்கியும் நன்மை நோக்கியும் கல்வியியல் மலர வேண்டும் என்பதை,

> பூர்வ காலத்தில் பாவலர்களாற் பாடப்பெற்ற நூல்களே தற்காலத்தில் பண்டிதர்கட்கு ஆதாரமாய் விளங்குகின்றன.
> – சூத்திரம் 67

என்றவாறு விளக்கியுள்ளார்.

3. கல்விவாணர்களாகிய பாவலர்கள் நூல்களைப் பெறு கின்ற தாயாகவும், அதனை வெளிப்படுத்திப் பயிற்றுவிக்கும் பண்டிதர்கள் செவிலித்தாய் போலவும் கல்வி வளர்ச்சிக்கு அமைபவர்கள் என்ற கருத்தை,

> எல்லா நூல்களுக்கும் பாவலர் பெற்ற தாயும், பண்டிதர்கள் வளர்க்கும் தாயும் போலாவார்கள். – சூத்திரம் 68.

என்றவாறு கூறியிருக்கிறார்.

4. கல்வியாளன் ஒருவனே, பாவலத் தன்மை, பண்டிதத் தன்மை இரண்டையும் பெற்று படைப்போனாகவும் செயல் படுத்துவோனாகவும் அமைய வேண்டும் என்ற தன்மையினைச் சுட்டி,

> ஒருவன் பாவலத் தன்மை, பண்டிதத்தன்மை இரண்டும் அடைந்திருந்தால் மிகவும் மேலதாகும். – சூத்திரம் 69.

என்று கூறினார்.

5. கல்வியினுடைய பயனை துர்க்குணம் இல்லாமை என்றவாறு அமைத்து தண்டபாணி சுவாமிகள் அரசனையும், புலவனையும் ஒப்புமைப்படுத்தி விளக்கியுள்ளார்.

கல்விக் கடலைக் கடந்த புலவனுக்கும், பொருட் கடலைக் கடந்த அரசனுக்கும் நாய் போன்று இனத்தைப் பகைக்கின்ற துர்க்குணம் உண்டாகாது. – சூத்திரம் 76.

என்பது 76–ஆம் சூத்திர விளக்கம். இதில் புலவன் கல்விக் கடலை கடக்க வேண்டும் என்றும் அரசன் பொருட் கடலைக் கடக்கவேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றார். அவர்களால் துர்க்குணம் இல்லாமை என்ற பயன் விளைகிறது என்று கூறுகின்றார்.

**எழுத்தும் சொல்லும்**

எழுதுதலும் சொல்லுதலும் முறையே படைத்தலும் விளக்குதலும் என அமைவன.

சித்திமுத்தி எய்துனரில் செய்யுள் நூவன் றார்புகழே
நித்தியமா மன்னும் நிலத்து.
கற்றோர்தம் வாய்நரர்வாய் கல்விநலம் பயிலா
மற்றோர் வாய் புள்விலங்கின் வாய்.

மேற்கண்ட இரண்டு குறட்பாக்களும் மனுநெறித் திருநூலில் வருவன. கல்வியை சொல்லுவது என்பது நித்தியப் புகழ் எனவும், கல்வி நலம் பயிலுவதே மனிதப்பிறவியின் பயன் என இரண்டாலும் சொல்லுகிற அல்லது கல்வியைச் செயல்படுத்துகிற நிலையில் கல்வியினுடைய பயன்பாட்டு ஆக்கத் தன்மையைக் கூறினார்.

எல்லா நலமும் எழுத்தில் அடக்கம் எனச்
சொல்லாதார் இல்லை தொகுத்து.
எழுதும் தொழிலேமிக் கேற்றமெனத் தேர்தல்
முழுதுங் கடந்தோர் முறை.

முன்னர் கல்வியினுடைய நலம் பயிலுதல் வேண்டும் என்று அறிவுறுத்தியவர் இங்கு கல்வியினுடைய நலம் என்பதே எழுத்தில் அடங்குவது என்று கூறுகின்றார். எழுதும் தொழிலையே ஏற்றம் உடைய தொழிலாகவும் மக்களை ஏற்றும் தொழிலாகவும் கூறுகின்றார். அதன் மூலம் கல்வியியல் படைப்பாளர்களை கொண்டிருக்க வேண்டும் என்று அறிவுறுத்து கின்றார். நாலடியார்,

குஞ்சி அழகும் கொடுந் தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல; நெஞ்சத்து
'நல்லம் யாம்' என்னும் நடுவு நிலைமையால்,
கல்வி அழகே அழகு.

என்றவாறு ஒழுக்கத்தைத் தரும் கல்வியே சிறந்தது என்று கல்வியை முதன்மைப் படுத்துகிறது.

படைப்பாளருடைய தன்மையினை 'தேர்ந்து முழுதும் கடந்தோர்' என்று கூறுகின்றார். சொல்லப் புகுந்தப் பொருளைத் தேர்ந்து அதற்கு மேலும் நின்ற அறியும் தன்மையுடைய ஆற்றலுடையவனே கல்வியியலுக்கு அடிப்படையாளனாகக் காட்டுகின்றார் தண்டபாணி சுவாமிகள்.

**கல்விப் பொருள்**

கல்விப் பொருள் என்ற தலைப்பில் சுவாமிகள் 10 பாடல்களை அமைத்துள்ளார். கல்வி என்ற பொருளே பொருள் என்ற வகையில் 10 பாடல்களைப் பாடி கல்விப் பொருளை விளக்கியுள்ளார். கற்றோர் இரந்து வாழும் வாழ்க்கை பெற்றிருந்தாலும் அவர்கள் கண்ணுடையவர்கள். ஆனால் மிகப் பெரிய தனவந்தவர்களாக வாழ்ந்தாலும் கல்வி இல்லாதாராயின் அவர்கள் குருடர்கள். பொருள் வகையில் கல்வியாகிய பொருளே இன்றியமையாதது என்ற வகையில் அக்கருத்துகளை விளக்கி,

கற்றோரிரந்தாலுங் கண்ணுடையார் காசினியின்
மற்றோர்கள் வாழ்ந்தாலும் வன்குருடர் - பொற்றோகை
யன்னமட நல்லாரு மாமென்பாராகையினா
லென்ன சென்மங் கல்வி யிலார்.

என்ற பாடலைப் பாடினார் சுவாமிகள்.

பொருளால் பெருமையுடையவர்கள் கற்றும் கேட்டும் தெரிந்த அறிவைப் பெற்றவர்களே தூய நிலையினர். அவருடைய தமிழையே அவர்கள் காலத்தின் பின்னும் இவ்வுலகம் பேசும் என்பதை,

சுருதிமுடிவுணர்ந்த தூயோர் பொருளாற்
பெருமையுற்றோர் தம்மையன்பிற் பேசா - ரொருபுலவற்

செத்தாலு மன்னோன் றெளிதமிழாற் சிந்தை செய்வா
ரித்தாரணி யறிந்த தே.

என்றவாறு சுட்டியுள்ளார்.

கல்விப் பொருளைப் பற்றி சுவாமிகள், தலைமைப் பொருளை மூலப்பொருளை-உணர்தலே மக்கள் உடம்பின் மூலமாக பொருளைப் பயன்படுத்தி பெறவேண்டிய உயர்ந்த ஒன்று என்று கூறுகின்றார். இக்கருத்தை,

அக்கரமுஞ்சொல்லு மதன்பொருளுந் தேராதார்
மக்களுடம்பின் மருவிடினு - மிக்க
பொருளாட்சி பெற்றிடினும் போக்கரிய மாயை
யிருளார் விருகமொப்பா ரே.

என்ற பாடலில் இறைவனை 'அக்கரன்' என்ற சொல்லால் சுட்டி அப்பொருளையே தேறுதற்கு கல்விப் பயன்பட வேண்டும் என்றவாறு கல்விப் பொருளைக் காட்டினார் சுவாமிகள்.

அடியார் பாடிய நூல்கள் அத்தனையும் படிக்கவில்லை என்று சொன்னாலும் சிலவற்றேனும் படிக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார் தண்டபாணி சுவாமிகள்.

உலகில் மனிதர் நாய்போல் சினம் உடையவராகவும், நரி போல் பயம் பெருகுபவராகவும், பேய் போல் பறந்து இருப்பவ ராகவும் உள்ளனர். இவர்களை எல்லாம் தாய்போல் பிணங்காமல் இரவும் பகலும் ஆற்றுப்படுத்தி அவர்களை உயர்த்துவது என்றவாறு கல்வியின் பயன் அமைய வேண்டும் என்று தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார். கல்விப் பொருளை பயன் நோக்கி உரைத்த அந்தப் பாடல் பின்வருவ தாகும்.

நாய்போற் சினந்து நரிபோற் பயம்பெருக்கிப்
பேய்போற் பறந்து பிணங்காமற் - றாய்போ
லிரவு பகலாற்றானை யெண்ணித் தினமும்
பரவுவதே கல்விப் பயன்.

# சுவாமிகள் காட்டும் இறைவடிவங்கள்

ஆ. வேலுசுவாமிசுதந்திரன்

சுவாமிகளின் திவ்விய தம்பதியர் புகழ்மாலை, தஞ்சைக் கோயிற் பாடல்கள், வைத்தீசுவரன் கோயிற் பதிகங்கள், கணபதி ஆயிரம், சிதம்பரம் - பாண்டிநாயகம் ஸ்ரீ முருகப் பெருமான் பிள்ளைத்தமிழ் போன்ற நூல்கள் காட்டும் பாடல் வரிகளில் சில இறைவடிவங்கள் காட்டப்படுகின்றன.

நம்படிமை உய்க்காப்பான் நரசிங்க வடிவெய்தி, ஆடகனைக் கீன்றாகனும், கஞ்சன் தலை களந்தது (தஞ். பா. 4:9, 5:8, 5:2) போன்ற வரிகளில், விஷ்ணுவின் இறைவடிவங்கள் வெளிக் காட்டப்படுகின்றன. பக்தன் பிரகலாதனைக் காக்கும் பொருட்டு, நரசிங்க வடிவத்துடன், தூணிலிருந்து வெளிவந்து, இரணியனைக் கொன்று, பின் அருள் கொடுத்தார். விஷ்ணுவின் நரசிங்க வடிவங்கள் குகைக் கோயில்களிலும், கட்டுவித்தக் கோயில் களிலும், இடம் பெறுகிறது. ஆனைமலைக் குகைக்கோயிலில் இச்சிற்பம் இடம் பெற்றிருப்பது, பாண்டியர் கலைக்கு பெருமைச் சேர்க்கிறது. விசயநகர, நாயக்கர் கால மண்டபங்களின் தூண் களிலும் இச்சிற்பம் இடம்பெறும். திருச்சி அரங்கநாதர் ஆலய குதிரை மண்டபத்திலும், திருமெய்யம் முன்மண்டபத்திலும், மதுரைக் கள்ளழகர் கோயில் மண்டபத்திலும், தூண்களிலும் இச்சிற்பம், பத்து அவதாரங்களில் ஒன்றாக இடம் பெறும். செப்புத்திருமேனிகளுமுண்டு. எட்டுக் கைகளுடன் சிங்க முகம் கொண்டு, இரண்டு கைகளால் இரணியனின் வயிற்றைக் கிழிப்பது போன்று சிற்பங்கள் அமைந்திருக்கும்.

பணவாள் அரவனை மேற்துயில் கூரும் பழம் பொருளே' என்ற வரிகள், (திவ். 19) விஷ்ணுவை பள்ளிக்கொண்ட பெருமாளாகக் காட்டுகிறது. அனந்த சயனமூர்த்தியென்றும் அழைக்கப்படும். பல்லவர் கால சிற்பத்தை, மகாபலிபுரம் மகிசாசுர மண்டபத்தில் கண்ணுறலாம். திருமெய்யம்,

மலையடிப்பட்டிக் குகைக் கோயில்களிலும் இச்சிற்பம் இடம் பெறுகிறது. அருமறைபுங் கவன் தோன்றும் அலருந்தித் தலைவா, (தஞ். பா. 4:2) என்ற வரி விஷ்ணுவின் தொப்பிளில் மலர்ந்த பிரம்மாவைக் காட்டுகிறது. திருமெய்யம், சத்திய மூர்த்தி, திருவனந்தபுரம், பத்மநாதசுவாமி ஆலயங்களில் தாமரையில் உதித்த பிரம்மாவைக் கண்ணுறலாம். அரவணையில் துயிலும் திருமாலைப் பற்றி முதன் முதற் கூறும் நூல் பெரும் பாணாற்றுப்படையாகும். (பெரும். 371-73)

செங்கையில் ஆழியும் சங்கமும்
தோன்றத் திருவுடன் பார்
மங்கையும் பாங்குறச் செஞ்சிறைப்
புள்ளில் வருவது என்றோ? (திவ். 22)

என்ற வரிகள் கைகளில் சங்கும், சக்கரமும், மார்பில் திருமார்பும் இடம் பெற்ற திருக்கோலத்தைக் காட்டுகிறது சங்க இலக்கியங் களிலும், ஆழியை ஏந்தியிருப்பவன், (புறம் 58:15) சங்கையும், சக்கரத்தையும் கையிலே ஏந்தி மார்பில் திருமகளை வைத்தவன் (முல்லைப்பாட்டு. 1-3) என்ற குறிப்புகள் இடம் பெறுகின்றன. விஷ்ணுவை திரு மார்புக் கொண்டவனென்று மலைபடுகடாம் (356) குறிப்பிடுகிறது.

பல்லவர் காலச் சிற்பங்களில் விஷ்ணுவின் திருமார்பில், இலக்குமி பெண் வடிவமாகக் காட்டப்படுவாள். தஞ்சை அருங் காட்சியகத்தில் இன்றும் இத்தகுச் சிற்பங்களை கண்ணுறலாம் விசயநகர, நாயக்கர் காலச் சிற்பங்களில், இலக்குமி, முக்கோண வடிவில் மட்டுமே இடம் பெறுவாள்.

செய்ய தண்டாமரைப்பூமி திருந்த திருமடந்தை
உய்ய நின் மார்பில் இடங் கொடுத்தாய் என்ற வரிகளிலும்
(திவ். திருமால் அந்தாதி. பா. 2)

தாமரைப் பூவில் அமர்ந்திருக்கும் இலக்குமி திருமாலின் மார்பில் இடம்பெற்றக் காட்சி விளக்கப்படுகிறது. திருமகள் குலவும் மார்பன் (திருமால் பத்துப்பதிகம், பா. 10) என்ற வரியும் திருமகள் தாங்கிய விஷ்ணுவைக் காட்டுகிறது.

சங்குடன் ஆழியும்
தாங்கிய கைப்பெருமான் என்ற வரிகளிலும், சங்கு, சக்கரம் தாங்கிய விஷ்ணுவின் வடிவம் காட்டப்படுகிறது.

ஆலிலையிற் பெரும்

பாம்பில் அறிதுயில்கூர் என்ற திவ்வியத் தம்பதியர் புகழ்மாலை வரிகளில் ஆலிலையில் கிடந்த கிருஷ்ணனைக் காட்டுகிறார். (திருமால் அந்தாதி. பா.22) சிற்பங்களில் ஆலிலையில் கிருஷ்ணனை விசயநகரக் கால முதல் காணலாம். பல்லவர் சோழர் காலச் சிற்பங்களில் இத்தகு சிற்பங்களைப் பார்க்க முடியாது.

அசையாத குன்றெடுத்து ஆவினங்
காத்தவன் அன்பெனக்கே. (திருமகள் அந்தாதி பா. 74)

என்ற வரிகள் கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து ஆவினங்களைக் காத்து நிற்கும் சிற்ப அழகை நம் முன்னே நினைவூட்டுகின்றன. திருச்சி அரங்கநாத ஆலயத்தில், கிருஷ்ணன் சன்னதியில் மேல் விதானத்தில் இடம்பெறும் ஓவியத்தில், கோவர்த்தன கிருஷ்ணனைக் கண்டுகளிக்கலாம்.

மதர்ச் செவ்வரிக்கண் குறப்பேதை மார் அஞ்சக் குன்றெடுத்து
ஆடிய கொற்றவனே. (திருமால் அந்தாதி பா. 29)

என்ற வரிகளிலும், குன்றெடுத்து, ஆநிரைகளைக் காத்த நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது.

அரக்கர் சிதைய வென்றாய். (திருமால் அந்தாதி பா. 6)

என்ற வரி இராவணனை இராமன் வதம் செய்த செயலைக் காட்டுகிறது.

வானவர் தம்மை குரங்காக்கி மானிட மாகி வந்து
கானகத் தூடு மனையோடு சென்று கடல்கடந்து
தானவர் கோன்தலை பத்து அறுத்தாய்
(திருமால் அந்தாதி பா.5)

என்ற வரிகளில் பத்து தலைக் கொண்ட இராவணனின் வடிவம் காட்டப்படுகிறது. இராமன் மானிட வடிவத்துடன் மட்டுமே விவரிக்கப்படுகிறான். சிற்பங்களில் பொதுவாக, சிவன் தன் பெருவிரலால், மலைக்கு அடியில் இராவணனை வைத்து இருக்கும் காட்சி இடம் பெறுகிறது. எல்லோரா கைலாசநாதர் ஆலயத்தில், இக்காட்சி பாங்குற சிற்ப வடிவில் இடம் பெறுகிறது. இராமன் இராவணனோடு போர் செய்யும் காட்சி தமிழகக் கோயில்களில், புடைப்புச் சிற்பமாகவே இடம்

பெறுகிறது. உதாரணமாக புஞ்சை நல்துணை ஈசுவரர் புள்ளமங்கை பிரம்மபுரீசுவரர் ஆலயங்களைக் கூறலாம்.

எய்து மராமஞ் சாய்த்து அடல் வாலிதன் ஈடழித்து
(திருமால் அந்தாதி பா.71)

என்ற வரிகள் இராமன் வாலியைக் கொன்ற காட்சியைக் காட்டுகிறது. இக்காட்சியை மேற்குறிப்பிட்ட இரண்டு கோயில்களிலும் புடைப்புச் சிற்பமாகக் கண்ணுறலாம்.

நடமாடிக் காளியன் தன்னை வென்றாய்
(திருமால் அந்தாதி பா.16)

என்ற வரிகள், காளிய நர்த்தன கிருஷ்ணனைக் காட்டுகிறது. தமிழகத்தில் காளியநர்த்தன கிருஷ்ணனின் சிற்ப. வடி.வங்கள் விசயநகர கால முதலே தோன்றின. கோபுரத்தின் அடிப் பகுதிகளில் இச்சிற்பம் இடம்பெறும். சிறந்த உதாரணமாக திருக்கண்ணபுரம் ஸ்ரீசௌரிராஜப் பெருமாள் ஆலய முன் கோபுரச் சிற்பத்தை எடுத்துக் காட்டலாம். காளிங்க நர்த்தனச் செப்புத்திருமேனிகளுமுண்டு. தமிழகத்தில், எந்தக் கோயிலிலும், கருவறையில் இச்சிற்பம், வழிபாட்டில் இடம் பெறவில்லை எனலாம்.

சுடர் ஆழி ஒன்றும் வாட்டை ஒன்றும், வளை ஒன்றும் தண்டு ஒன்றும், வல் அவுணர் தூட்பட வெற்றிச் சரம் தூற்றும் வில் ஒன்றும் தொட்டவனே! (திருமால் அந்தாதி பா.17) என்ற வரிகளில், சங்கு, சக்கரம், தண்டு, வில் தாங்கிய விஷ்ணுவின் வடிவம் விளக்கப்படுகிறது. ஆனால் சிற்பத்தில் எங்குமே இவ்வடிவத்தைப் பார்க்க முடியாதெனலாம்.

விஷ்ணுவைப் போன்று, சிவனின் வடிவத்தைக் காட்டும் வரிகளுமுள.

சிவ சமய மகுடநிகர் கனகசபை தனில் நடம் செய்கின்ற
புனிதன் (முருக.பிள்.காப்பு:1)

என்ற வரிகளில் சிதம்பரத்தில், பொன்னம்பலத்தில் நடனம் புரியும் நடராசப் பெருமானைக் குறிப்பிடுகிறது. புனிதன் என்ற பெயர் நடராசருக்கு வழங்கப்பட்டிருப்பது தனிச்சிறப்புக் கொண்டதாகும். தேவார இலக்கியங்களில், குனிப்புடையன் என்ற சொல் கையாளப்படுகிறது. நடராசர் வடிவம் முதன்

முதலாக இடம் பெற்ற இடம் சியமங்கலம் குகைக் கோயிலென்று கருதுகின்றனர். இடைக்காலச் சோழர் காலத்தில், குறிப்பாக இராசராசன், இராசேந்திரன் காலங்களில், நடராசர் வடிவங்கள் எண்ணிக்கையில் அதிக இடம் பெற்றன. கோயில் அர்த மண்டபச் சுவரிலும், இக்காலக் கட்டத்தில், நடராசர் வடிவங்கள் இடம் பெற்றன. தஞ்சை மாவட்டம் கோனேரிராசபுரத்தில் சோழர் காலத்திய அழகிய செப்புத்திருமேனி இடம்பெறுகிறது. இராஜராஜன் காலத்து கல்வெட்டுக்களில் மட்டுமே, நடராசன் ஆடல் வல்லானென்று குறிப்பிடப்படுகிறார்.

சிற்சபையில் ஆடும் தில்லை வித்தகனிடத்து (செங். 2)

என்ற வரிகளில் நடராஜனுக்கு தில்லை வித்தகன் என்ற பெயரைச் சூட்டுகிறார். தில்லைப் பெருமான் பல்வேறு பாடல் களில் குறிக்கப்படுகிறார்.

குஞ்சர முகத்தவன் என்ற வரி யானையை உரித்து, ஆடையாக அணிந்து, நடனம் புரிந்த கஜசம்ஹார மூர்த்தியைக் காட்டுகிறது. அப்பர், சம்பந்தர், சுந்தரர் போன்ற மூவரின் தேவாரப்பாடல்களில், கஜசம்ஹாராமூர்த்தியைக் குறித்த குறிப்புகள் பலவுண்டு. சோழர் காலத்தில் கஜசம்ஹாரமூர்த்திச் சிற்பங்களைக் கண்ணுறலாம். சிவனின் எட்டு வீரச் செயல்களில், யானையின் தோல் உரித்ததும் ஒன்றாகும். இச்செயல் நடந்த இடம், தஞ்சாவூர் பகுதியைச் சார்ந்ததாகும். ஏனைய ஏழுச் செயல்களும், தமிழகத்தில் நடந்தன என்பதை ஒரு பாடல் காட்டுகிறது. தஞ்சை கலைக்கூடத்தில், சோழர் காலத்திய கஜசம்ஹாரமூர்த்தி இடம் பெறுகிறது. சிவனின் அருகில் நிற்கும் உமை, முருகப்பெருமானை தாங்கியிருப்பது ஒரு சிறப்புக்கலை அம்சமாகும். "கூர்த்த நெடுங்கோட்டுக் குஞ்சரத்தைக் கொன்றுரித்துப் போர்த்த பெருமான்" என்ற வரிகளும் (வைத். பதிக. 8) கஜசம்ஹாரமூர்த்தி வடிவத்தைக் காட்டுகிறது.

கட்டு. பூ மாலையருள் சிவகாமி யாண்டார்
களி கூரப்பலரொடொரு களிறு வதைத்தளித்தீர்

என்ற வரிகளில் (தஞ். பா. 2:5) சிவகாமி அம்மை மகிழ்ச்சி பெற, கஜசம்ஹார மூர்த்தியாக நடனமாடினார் என்றச் செய்தி குறிப்பிடப்படுகிறது.

வாட்கைத் தகுவர் பலர் வாழ்புரமும் நீறாகச்
சேட்கை தொடும் பொற்சிலை வளத்துச் செற்றான்

என்ற வரிகள், சிவனின் திரிபுரம் எரித்த வடிவத்தை நினைவூட்டுகிறது. இச்சிற்பம், பல்லவர் காலம் முதல் கோயில்களில் இடம் பெறுகிறது. சோழர் காலத்தில், செப்புத் திருமேனிகள் அதிகம் தோன்றின. நான்கு திருக்கரங்களில், மேலிரு கைகளில், பரசும், மானும் இடம்பெறும். கீழிரு கைகள் வில்லையும், அம்மையும் பிடித்திருப்பது போன்று போற்றம் காட்டும் தஞ்சைப் பெரிய கோயிலில் இரண்டு கரங்கள் கொண்ட திரிபுராந்தகச் சிற்பங்களைக் கோயில் சுவர்களின் மேல்புறத்தில் கண்ணுறலாம். கைகளில் கேடயமும், வாளும் இடம்பெறும். மேவலர் புரமூன்றெரிய நக்காரை, முப்புரம் எரித்து நடம் ஆடியவன் எயில் மூன்று எரித்து கனகசபை இடத்தில் நடப்போன், 'புரம் மூன்றும் பொடியாக நகைத்தீர் என்ற வரிகளும் திரிபுராந்தக மூர்த்தியைக் குறிப்பிடுகின்றன.

காமன் உருவைக் கனற் கண்ணால் சுட்ட பின்னும்

என்ற வரி, சிவனை, காமாந்தகமூர்த்தியாகக் காட்டுகிறது. (புள். வேளூர். பா. 2) காமாந்தகமூர்த்தி சிற்பத்திற்கு சிறந்த எடுத்துக்காட்டு, கங்கைகொண்ட சோழபுரம், கங்கைக்கொண்ட சோழபுரீசுவரர் ஆலயத்தில் இடம்பெறுகிறது. உட்கார்ந்த நிலையில், ஒருகை சூச்சி முத்திரைக் காட்டும்.

அன்றாலின் நால்வர்களுக்கருள்புரிந்த, என்ற வரி, (தஞ். பா. 3:10) ஆலமரத்து அடியில் நான்கு முனிவர்களுக்கு, ஞானமுரைக்கும், தட்சிணமூர்த்தி வடிவத்தைக் காட்டுகிறது. ஆல நிழல்தவர் எய்திய ஞானமும், என்ற வரியும், (வேளூர் கணபதி பதிகம் பா. 9) ஆலமர் செல்வனின் வடிவமைப்பை நினைவூட்டுகிறது. பேயுடன் ஆடிய பிஞ்ஞகனார், (கணபதி ஆயிரம். 5:44) என்ற வரியில் பைரவர் வடிவம் காட்டப்படுகிறது. பைரவரைக் குறிக்கும் பிஞ்ஞகன் என்ற தமிழ்சொல், தேவாரப் பாடல்களிலும் இடம்பெறுகிறது.

ஆறுமுகப் பெருமானின் வடிவங்களையும் பாடல் வரிகள் காட்டுகின்றன. பெரும்பாலான பாடல் வரிகள், மயிலை வாகனமாகக் கொண்ட முருகப்பெருமானைக் குறிப்பிடுகின்றன சங்க காலத் தமிழ் இலக்கியங்களில் முருகன் பிணிமுக ஊர்தி

யென்று குறிக்கப்படுகிறான். யானையை ஊர்தியாக கொண்ட சிற்பங்களைத் தமிழகக் கோயில்களில் காணலாம். சுவாமிகளின் பாடல்களில், பிணிமுக ஊர்தியாக முருகன் குறிக்கப்படவில்லை யென்றே கருத முடிகிறது. தண்டாயுதமும் வடிவேலும் தாங்குங் கரத்துப் பெருமானே (முரு. பிள். சப், 2) என்ற வரி, கையிலே தண்டாயுதமேந்தி தோற்றம் காட்டும் பழனி முருகச் சிற்பத்தை நினைவூட்டுகிறது. மேலும் பல வரிகள் ஆறுமுகங்களையும், பன்னிரு கைகள் கொண்ட வடிவத்தைக் காட்டுகின்றன. அருணகிரிநாதரைக் கிளியாக முருகப்பெருமான் கையில் அமர்த்தி யதாகப் பாடல் வரியொன்று காட்டுகிறது. (தஞ். பா. 6:8) இது போன்ற முருகப்பெருமானின் வடிவத்தை பார்ப்பது அரிதாகும். சரசுவதியின் கையில் கிளி இடம்பெறும். காளியின் கையிலும் இடம்பெறும். மேற்குறிப்பிட்ட இரண்டுச் சிற்பங்களையும், திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் திருக்கோயிலில் பார்க்க லாம். மேலும் மதுரை மீனாட்சியம்மன் ஆலயத்திலும், மீனாட்சி சிற்பத்திலும் கிளி இடம் பெறுகிறது.

வேழமுகத்துடனாடும் முதல்வர் என்ற வரி, நடமாடும் விநாயகர் தோற்றத்தைக் காட்டுகிறது. (கணபதி ஆயிரம், 9:81) சோழர் காலக் கோயில்களில், அர்த மண்டபத் தெற்குச்சுவரில் நடமாடும் விநாயகரைக் கண்ணுறலாம்.

அமர்ந்தருளும் ஐந்து கரத்தப்பா என்ற வரி (கணபதி ஆயிரம். 11:102) விநாயகரை ஐந்து கரங்களையுடையவராகக் காட்டு கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேற்குறிப்பிட்ட இறைவடிவங்களே இறைவழிபாட்டில் அதிக இடம் பெற்றிருந்தது என்ற உண்மையைப் பாடல் வரிகள் தெளிவுறக் காட்டுகின்றன. இறைவடிவங்களின் விளக்கம் படிமக்கலை இலக்கணத்திற்கு உட்பட்டு இருந்தன என்ற உண்மையையும் உணர முடிகிறது.

# வருக்கக் குறளும் திருக்குறளும் காட்டும் கொல்லாமை

ஜலஜா கோபிநாத்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி அருளிச் செய்த வருக்கக் குறள் ஒரு நீதிநூல் ஆகும். இந்நூலில் இறை வழிபாடு, இல்வாழ்வின் சிறப்பு, துறவறத்தின் மாட்சிமை, அரசியலறம், கல்வி, ஊழ், உழவு, மழை, நிலையாமை, மோட்சம் ஆகிய வற்றைப் பற்றித் தான் கூறவந்த கருத்துக்களை தமிழ்மொழியில் உள்ள உயிர், மெய், உயிர்மெய் என்னும் எழுத்துக்களை முதலா வதாக அமைத்து குறட்பாக்களில் வடித்துத் தருகிறார். மேலும் ஔவையார், திருவள்ளுவர் ஆகிய இருவரின் நூல்களையும் பலவாறாகப் புகழ்ந்து கூறுகின்றார்.

ஔவையோடு வள்ளுவனும் ஆராய்ந்துரைத்தநெறி
செவ்வையெனத் தேர்ந்தோர் சிலர் (12)

இவர் தம் நூலில் கூறும் கருத்துக்களில் ஒன்றான ''கொல்லாமை கோட்பாட்டினைப்'' பற்றிக் குறளுடன் ஒப்பீட்டுக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கொல்லாமை – விளக்கம்:** கொல்லாமை என்பது கொலைக் குற்றம் செய்யாமை அதாவது உயிர்க்கொலை செய்யாமை ஆகும்.

கொல்லாமை அதாவது அஹிம்சை என்னும் மேன்மையான இந்தக் கோட்பாட்டை உலகிற்கு அளித்தவர் சமணர்களே ஆவர். இச்சமயம் இந்தியாவில் தோன்றிய சமயம். இச்சமயத்தில் ஆதிதீர்த்தங்கரரான ரிஷபதேவர் முதல் கடைசி தீர்த்தங்கரரான வர்த்தமான மகாவீரர் வரை வற்புறுத்தி வந்துள்ளனர்.

சமணர்கள் போற்றும் தலையாய அறங்களில் ஒன்று கொல்லாமை. வேறு எந்த மதத்தினரும் இக்கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் தரவில்லை. ஏனெனில் பிறசமயத்தரான

வைதிக சமயத்தார் ஆடு, குதிரை போன்றவற்றை வேள்வியில் பலியிடுவதை ஆதரித்தனர் என்பதை திருஞானசம்பந்தர்

> வேதவேள்வியை நிந்தனை செய்துழல்
> ஆதமில்லி அமணொடு தேரரை
> வாதில் வென்று அழிக்கத் திருவுள்ளமே
> பாதி மாதுடனாய பரமனே.

என்று பாடுவதால் உணர முடிகின்றது. ஆயின் காலஞ்செல்ல செல்ல வைதீக சமயத்தாரும் வேள்வியில் விலங்குகளைப் பலியிடுவதற்குப் பதிலாகத் தானியங்கள் முதலியவற்றைப் பலியிட்டனர்.

வேள்வியில் மட்டுமன்று உணவாக உட்கொள்வதற்கும் உயிர்க்கொலை செய்தனர். இந்தப் புலால் உண்பதையும் முதன்முதலில் ஏற்றுக் கொள்ளாதவர் சமணரே.

கொல்லாமையைப் போற்றும் பௌத்த சமயமும் தானே இறந்து போன பறவை, விலங்கு முதலியவற்றின் புலாலை உண்ணலாம் என்று கூறிப் புலால் உண்பதைத் தடை செய்ய வில்லை. ஏனெனில் உயிர் பிரிந்த உடலாகையால் அது உயிர்க் கொலை ஆகாது என்று அச்சமயம் கருதிற்று.

வைதிக சமயத்தாரும் புலால் உண்பதை பாவம் என்று கூறவில்லை என்பதை

> ஆவுரித்துத் தின்று உழலும் புலையரேனும்
> கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
> அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளே

என அப்பர் சுவாமிகள் பாடுவதால் அறியலாம்.

இவற்றை எல்லாம் நோக்கும்போது கொல்லாமை கோட்பாட்டை முதலறமாகக் கொண்டு போற்றியவர் சமணர்களே எனலாம். சமணர்களால் போற்றப்பட்ட இந்தக் கோட்பாடு இந்தியர்களின் பழக்க வழக்கங்களிலும் பண்பாட்டிலும் ஊடுருவிக் கலந்ததன் பயனாகப் பிற வைதிக சமயத்தாராலும் பின்னர் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பது வெளிப்படை. இக்கோட்பாட்டை உலகப் பொதுமறையாம் திருக்குறள் புலால் உண்ணாமை, கொல்லாமை என்னும் இரு அதிகாரங்கள் வழிப்

போற்றியது. 247 குறட்பாக்களைக் கொண்ட வருக்கக் குறளிலும் ஏறக்குறைய 12 பாக்களில் தண்டபாணி சுவாமிகள் வற்புறுத்துகின்றார். இவ்விரு நூல்களில் திருக்குறள் சமயஞ் சாராத நூல் எனப் போற்றப்பட்டாலும் எல்லா சமயத் தாராலும் தத்தம் சமயஞ் சார்ந்தது என உரிமை கொண்டாடப் படுகிறது. முருகனருள் பெற்ற சுவாமிகளும் இக்கோட்பாட்டை போற்றியுள்ளமைக்கும் அவர்தம் குறட்பாக்களே சான்றாகும்.

வள்ளுவர் தம் முப்பாலுள் துறவறவியலில் இக்கொல்லாமை அறத்தை அமைத்துள்ளமையால் துறவியர் மேற்கொள்ளும் அறங்களுள்-விரதங்கள் பலவற்றுள்ளும் இது செயற்கரியது என அவர் கருதுவது புலப்படுகின்றது.

**கொல்லாமை - அறவினை**

தவத்தின் இயல்பு துறவின் இயல்பே. பிற உயிர்களின் துன்பத்தைத் துடைத்து எவ்வுயிரையும் கொல்லாமையாகிய அறவியல்பினை யுடையவராக விளங்குபவரே உயர்ந்தார். மேலும் அவர் பிற உயிர்களுக்குத் துன்பம் இழைக்காதவராகவும் விளங்குவர். இத்தகையோர் குற்றத்தினின்று நீங்கிய தெளிந்த அறிவினை உடையோர் உயிர்க்கொலை அறமற்ற பிற செயல் களைச் செய்ய வழிவகுக்கும். எனவே கொல்லாமை என்பது அறச்செயல் எனக் குறள் போற்றுகின்றது (321).

வள்ளுவர் மிகச் சிறந்த அறங்களாகப் போற்றுவது கொல்லாமை, பொய்யாமை என்பன. அவற்றுள் கொல்லாமை அறத்திற்குத் தான் அவர் முதலிடம் அளித்தமையை

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று (கு. 323)

என்பதால் அறியலாம். எனவே தான்

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை (கு. 327)

என்று தன் உயிரே உடம்பிலிருந்து நீங்கிப் போக நேர்ந்தாலும் பிறருடைய உயிரை அழிக்கும் வினையைச் செய்ய வேண்டாம் என்று வற்புறுத்துவர்.

வண்ணச்சரபம் தண்டபாணியார் தம் நூலில்

கொல்லும் தொழில்போல் கொடும்பாவம் இல்லைஎனச்
சொல்லும் சொல் பன்னூல் துணிவு (வ. கு. 40)

எனக் கொல்லாமையை பிற நூல்கள் போற்றுவதைக் காண முடிகிறது. இதனால் வள்ளுவத்தின் கருத்தை அவர் ஏற்றுக் கொண்டமையை வெளிப்படுத்துகின்றது எனலாம்.

## கொல்லாமையும் அருளுடைமையும்

வள்ளுவர் மன்னுயிர் ஓம்புபவன் அருளுணர்ச்சி மிக்கவன். ஒருவனிடம் அருள் இல்லாமையே உயிரைக் கொல்லும் தன்மையை வளர்க்கும் என்பர். ஊன் உண்பவனுக்குக் கருணை ஆகிய அருள் ஆட்சி இல்லை என்றும் (குறள் 252) கூறுவர். இதனை உட்கொண்ட தண்டபாணி சுவாமிகள் மனத்தின்கண் எள்ளளவும் அருளுடைமையாகிய இரக்கப் பண்பு இல்லாதவர்கள் தான் ஊன் தின்பார்கள் என்பதை

இள்எகரத்தில் தோய்ந்தாங்கும் ஈரமிலார்க்கு இல்லை
தள்எலும்புஊன் தின்னாத் தகை (வ.கு. 218)

என்பர். இதனால் மனத்தின்கண் இரக்கப் பண்பு இல்லா விட்டால் பயனற்றது எனத் தள்ளத்தக்க எலும்பும் புலாலும் உண்பர் என்று கூறி கொல்லுதலுக்கு அடிப்படையாக அமைவது இரக்கமின்மையே என்று கூறுவதைக் காண முடிகிறது.

## கொல்லுதலும் தீமையும்

இரக்கமின்மையால் தான் கொல்லும் தன்மை நிகழ்கின்றது எனக் கூறிய வள்ளுவரும் தண்டபாணியாரும் கால்லுதலால் வரும் தீமையையும் விளக்குகின்றனர்.

கொலைச் செய்யும் மாக்களைப் புலையர் என்றும், அதனால் கிடைக்கும் செல்வம் இழிவானது என்றும் கீழ்வரும் பாக்களால் வள்ளுவர் நவில்வர்.

கொலை வினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து (கு. 329)
நன்றாகும் ஆக்கம்பெரிது எனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை (கு. 328)

தண்டபாணியாரும் இரவினைப் பகலாக மாற்ற வல்லவர் களாக இருந்தாலும் அவர்கள் கொலைசெய்து ஊன் உண்பவர

களாக இருந்தால் அவர்கள் இழிந்தவர்கள் என்று கூறுவர். அத்தகையோர் அஞ்ஞானிகளைவிட இழிந்தோராவர் என அவர் கருதுவது

இரவுபகல் மாற்றவல்லார் என்றாலும் கொன்றுண்
கரவுடையார் ஆயின் கடை (வ.கு. 164)

என்னும் பாடலால் வெளிப்படுகிறது.

**புலால் உண்ணலும் கோறலும்**

கொல்லுதல் என்னும் செயல் ஊன் உண்பதற்காக பெரும் பாலும் நிகழ்கின்றது. புலால் உண்ணலும் ஒருவகைக் கொலையைக் குறிப்பதாகும். புலால் உண்ணாமை என்னும் அதிகாரம் வழியும் வள்ளுவர் கொலையை ஒழிக்க எண்ணு கிறார். இப்புலால் உண்ணுதல் என்பது எதன் பொருட்டு நிகழ்கிறது என்றால் ஒருவன் தன்னுடைய உடம்பு பெருக்கு வதற்கும் (கு. 251) சுவைபட உண்பதற்கு (கு. 253) மட்டுமே என்பதையும் தெளிவுபடுத்தியவர் அவர். எனவே தான் புலால் என்பது எதனை என்று காட்ட வந்த வள்ளுவர்.

உண்ணாமை வேண்டும் புலால் பிறிதொன்றன்
புண்அது உணர்வார்ப் பெறின் (கு. 257)

என்று புலால் என்பதைப் புண் என விளக்குகிறார். தண்டபாணி யாரும் தள்ளலும்பு ஊன் தின்னாத்தகை (வ.கு 218) என்று கூறுவதால் ஒதுக்கித் தள்ளத்தக்கவை தான் புலால் என வெளிப் படுத்துவர்: இதற்கு மேலும் ஒருபடி சென்று

புல்கறிப்பால் நீடும் புலாலும் புசிக்கும் அவர்
அற்கைவிழை வார்எம் மவர் (132)

என்பதால் புற்களைத் தின்று வாழும் உயிர்களைக் கொன்று உண்பவர்கள் அழிய வேண்டும் என விரும்புவதாகத் தெரிகிறது.

**வேள்வியும் கொல்லாமையும்**

வேள்வி செய்யும் போது உயிர்களைப் பலியிட்டு மேன்மை அடையமுடியும் என்ற எண்ணம் அக்காலத்தில் நிலவியது. இதனால் தான் சமயஞ்சாராத வள்ளுவர்

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டல்' (கு. 259) எனக் கூறுவது அறியமுடிகிறது. வேள்வி செய்வதை விட ஒரு உயிரைக் கொன்று

உண்ணாமை நன்று எனப் போற்றுவதும் அவரிடம் காணமுடி கிறது. வேள்வி செய்வதைவிடக் கொல்லாமையே தலை சிறந்த அறம் என வள்ளுவம் போற்றுகிறது.

வண்ணச்சரபம் தண்டபாணியாரும்
யாகக் கொலைபழியன்று என்றிசைப்பார் யாரெனினும்
ஏகத் துவம் உணரா ரே! (153)

எனக் கூறுவதால் யாகத்தில் உயிர்க்கொலை செய்யப்படுவதை ஏற்றுக்கொள்பவர் உண்மை முத்திநிலையை அடையாதவர்கள் என்பது உணர முடிகிறது. மேலும் அக்காலத்தில் வேள்வியில் உயிர்க்கொலை செய்து ஊன் தின்பதால் தேவலோக போகத்தை அடையமுடியும் என்று நம்பி அதன் பொருட்டு கொலைமேற் கொண்டமையைச் சாடியதோடு அவர்கள் முத்தியின்பத்தை அடைய முடியாதவர் என்றும் கூறுவதைச்

சோணாட்டு அரம்பையர்க்காத் தின்னாத தின்னுமவர்
காணார்கள் உண்மைக் கறி (63)

என்பதால் உணரலாம்.

வேள்வியையே வள்ளுவர் உடன்படவில்லை. ஆயின் வேள்வியில் கொலை புரிவதை தண்டபாணியார் உடன் படாமையை அறிய முடிகிறது.

வள்ளுவர் வேள்வி செய்வதைவிட கொல்லாமை சிறந்தது எனத் தண்டபாணியார் யாகக் கொலையைச் சாடுவதை நோக்கும் போது பரிமேலழகரின் உரையே இதற்கு விளக்கமாக அமைவதைக் காண முடிகிறது. நன்றாகும் ஆக்கம் (328) என்னும் குறள்வரிக்குப் பரிமேலழகர் "தேவர் பொருட்டு வேள்விக்கண் கொன்றால் இன்பமிகுந் செல்வம் பெரிதாம்" என விளக்குவர்.

**கொல்லாமையின் சிறப்பு**

வள்ளுவர் துறந்தவர்களுக்குள் கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுபவன் சிறந்தவன் (கு. 325) என்றும் கொல்லாமையைக் கடைபிடிப்பவன் வாழ்நாள் சுருங்காது என்றும் கூறுவதைக் குறட்பாக்களால் அறிய முடிகிறது.

நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை (கு. 325)

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணும் கூற்று (கு. 326)

மேலும்

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் (கு. 260)

என்றும் கூறுவதால் மனித மானிடர்கள் மட்டுமல்ல உலகத்துயிர் களால் வணங்கப்படும் தன்மை மிக்கவனாக கொல்லாமையும் புலால் உண்ணாமையும் உடையவன் போற்றப்படுவதை வள்ளுவம் காட்டுகின்றது.

உலகின் சமயங்கள் பல. அவற்றின் வேறுபாட்டால் துறவுக்குரிய சடங்குகளும் ஒழுக்கங்களும் வேறுபட்டு உள்ளன. எனவேதான் தண்டபாணியார்

உலோகத்திலுள்ள நெறி ஒக்க நன்றே யாகும்
கொலோர் தொழில் தீ தென சொற்கேளில் (வ.கு. 186)

எனச் சமயங்கள் பலவாக இருப்பதற்குக் காரணமே கொலைத் தொழில் எனக் கூறுவதை அறிய முடிகிறது. இதனால் சமயங்கள் சில கொலைத்தொழில் ஏற்றுக்கொண்டது உண்மை எனலாம்.

புலால் உண்ணாதவனின் மேன்மையை தண்டபாணியாரும் விளக்குகின்றார்.

இராசபயம் தெய்வபயம் என்னும் இரண்டும்
வராவுயிர்கொன்று உண்ணாதார் மாட்டு (வ.கு. 165)

என்பதன் வழி கொல்லாநெறி மேற்கொள்ளும் மனிதனுக்கு இவ்வுலகில் எவ்வித அச்சமும் அதாவது நாட்டையாளும் மன்னனாலும் தெய்வத்தாலும் ஏற்படும் அச்சங்கள அண்ட முடியாது என்று நவில்கிறார்.

வள்ளுவம் இந்த உயிர் நிலை பெற்றிருக்க ஊன் உண்ணாமையே காரணமாக (கு. 255) அமைகிறது எனவும் விளக்குகிறது.

இதனால் மனிதன் இவ்வுலகில் அச்சங்கள் நீங்கி உயிர்நிலை பெற்று வாழக் கொல்லாமையே காரணமாக அமைவதை இவ்விரு நூல்களும் வற்புறுத்துகின்றன.

### கொல்லாமையும் தவத்தோரும்

துறவறத்தோருக்குச் சிறப்புபாகச் சொல்லப்படுவன கொல்லாமை, புலால் உண்ணாமை. இருநூல்களிலிருந்தும் இதனை அறிய முடிந்தாலும் தண்டபாணி சுவாமிகள் இந் நெறியைப் போற்றித் தாமும் பின்பற்றுவதோடு பிறர்க்கும் எடுத்துரைத்து இந்நெறியைப் பின்பற்றச் செய்ய வேண்டும் என்றும் அவர்களே உண்மைத் துறவிகள், சான்றோர் எனவும் போற்றபடுவர் என்பதை,

> ஊனருந்தல் தீதென்று உறுத்தாதார் உற்ற உண்மை
> ஞானமுற்றும் தேரில் நகை (வ. கு. 6)
>
> வீரத்தவம் பழுத்தோன் மேதினிக்குச் செய்வதெண்ணில்
> ஆரத் தகாதனநீத் தல் (வ. கு. 191)

என்னும் பாக்கள் கூறுவர்.

### முடிவுரை

சமணர்களின் தலையாய அறமாகப் போற்றப்பட்டவை கொல்லாமை, புலால் உண்ணாமை. இவ்வறங்களைச் சமயஞ் சாராத வள்ளுவமும் நீதிநூலாகிய வருக்கக் குறளும் போற்று வதில் வியப்பில்லை. ஆயின் வள்ளுவரைப் போற்றிய தண்டபாணியார் அவரை ஒட்டியே பல கருத்துக்களையும் நவில்வதை உணர முடிகிறது.

துறவறத்தின் மாட்சிமை கூறவந்த வள்ளுவம் துறவியர் மேற்கொள்ள வேண்டிய நெறியை வகுக்கும்போது எல்லா சமயத்திலிருந்தும் நற்கருத்துக்களைக் கூறும் முகத்தான் கொல்லாமையின் சிறப்பை நவில்வர்.

சமயஞ்சார்ந்த முருகனடிமையாகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் இக்கோட்பாட்டை தவத்தோர் பின்பற்றுவது மட்டுமல்லாமல் பிறரையும் பின்பற்றச் செய்ய வேண்டும் என்று விரும்புவதோடு அவர்களே உண்மையில் ஞான மடைந்தோர் எனப் போற்றுவதையும் காண முடிகிறது.

# தமிழ் மரபுக்கவி

கே. ஏ. ஜோதிராணி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஒரு பாட்டுக் கலைஞர். பல்வேறு இலக்கணப் 'பா' வடிக்கும் பாடலாசிரியர். ஒரு இலட்சம் பாடல்களைத் தாமே ஓலைச்சுவடிகளில் எழுதி முடித்த பாடற்திறத்தோர். எளிமையை நாடி வாழ விரும்பிய அவர் தாம்கொண்ட பக்திப்பெருக்கால் இறைவன் இயற்கை எனத் தாம் கண்ட கற்பனை உணர்வை உண்மைப் பாட்டாக்கி நமக்குத் தந்திருக்கிறார். ஓலையில் எழுத்தாணி கொண்டு தாமே எழுதவேண்டும் என்ற கொள்கையினைக் கொண்டிருந்த தால் இன்று நாம் அவர் கூறும் நேரடிப் பொருட்களைச் சிறிதும் பொருள் மயக்கமின்றி அறிந்து கொள்ள முடிகிறது. சொல் மயக்கம், பொருள் மயக்கம் இல்லாமல் அவரது பாடல்களின் பொருள்களைப் பெறும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறோம். இசையாய் வையத்தை வலம் வந்தவர் என்று சொல்லுமளவில் அவரது பல்வேறு பக்திப் பாடல்கள் நமக்குச் சொல்லும். முருகனின் அருளைப் பெறவும் அவனை நேரில் தரிசிக்கவும் மனம் கனிந்து, வேண்டி, புகழ்ந்து, பணிந்து பாடிய அருட்பாக்களின் பாடல் பொருள் பற்றி விளக்கப் பல நூறு பக்கங்கள் வேண்டும். இங்கு அவற்றுள் பொருளின் மைய நோக்கும் பாடல்களின் இசைப் பாங்கும் முதற்படியாய் விளக்கம் பெறும். அவரைப் பற்றிய நூல்கள், அவரது பாடல்கள் என அனைத்தும் பல ஓலைச்சுவடிகளிலும் இருப்பதால் முழுமையான தொகுப்பினை ஓர்ந்து நோக்கிட இயலாமற் போனது. ஆதலால் கிடைத்த ஏழு நூல்கள் மட்டும் இக்கட்டுரையின் மூலங்களாக அமைகின்றன.

'பரம்பொருள் ஒன்றே' என்ற நிலைத்த வாக்குச் சொன்ன அநுபவ உபாசகராக வாழ்ந்த இவரது வரலாறு தமிழ் இசைப் பிரிவில் பாராட்டுக்களைப் பெறும் வகையில் அமைந்தன. இலக்கண வகையுள் இனிய 'பா' வகைகளையும் பாடி இசை வளர்த்த பெருமான் இவர்.

'எழுவகை மதம்' என்பது இலக்கணப்படி கொள்கை என்றே விளக்கம் பெறுகிறது. சமயங்களின் உட்கருத்துக்களைக் கொண்டதே மதம் என்றும் சமயம் என்றால் மக்களின் பக்குவ பேதங்களுக்கு ஏற்ப பல திறப்பட்ட கடவுள் நிலைகளை மக்களின் நிலைக்கேற்ப வகைப்படுத்திக் கூறுவதென்பது' 'கௌமார விளக்கம், ப. 3). அதாவது மக்களின் மனநிலைக் கேற்ப பல்வேறு திறன்களைக் கொண்ட தெய்வ நிலைகளை வகைப்படுத்திக் கூறுவதைக் குறிப்பிடுகிறது. குறிப்பாக, சமையலைப் போல பல பொருள், சுவையைக் கொண்டது என உலகியலில் சமயங்களின் தன்மையைக் கூறும் ஞானியாக இருந்து எளிய பாடல்களின் வழி நெறிப்படுத்தியவர். பல்வேறு சமயங்கள் பல தெய்வங்களுக்கு உரிய வழிபடு முறைகளும் வகைப்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளது என்ற உண்மையை விளக்கியவர். கௌமாரம் என்னும் சமயத்திற்குரிய இறைவன் 'குமரன்' என்று சொல்லப்பட்டது. சிவனின் குமாரனையே 'குமாரன்' என்பதும் அது பழமையான மரபாக இருக்கிறது என்றும் பல்வேறு பாடல்களில் தமிழ் மரபு பற்றிய குறிப்புக்களைக் கூறிச் செல்கின்றார். 'கு-மாரன் என்ற சொல் அஞ்ஞானத்தை அழிப்பவன் என்றும் 'குரு' எனும் பதத்துக்கும் உரிய பொருளாக விளங்குகிறது. கந்தன் என்பவன் ஸ்கந்தன் என மாறியது போல கு-மாரன் என்பது கௌமாரன்/ கௌமாரர் என்றும் நிலைபெற்றிருக்கலாம். 'கு' என்பதே காலப்போக்கில் 'கௌ' எனத் திரிந்திருக்கலாம். இவ்வாறு பல்வேறு சிந்தனைகளுக்கு இவரது பாடல் குறிப்புக்கள் நம்மை இட்டுச் செல்கின்றன.

''பத்தமின்றிய பாவியேன் தமிழ்ப் பாடற்கதியாசை
வைத்தநீர்அடி யாரோடதன்புறம் வாழ்வோர் – அருள்
கில்லீர்
சித்தசன்பொடி யாகுமாறொரு செங்கம்பொறிவிட்டீர்
உத்தமத்தவர் நத்திடும்திருப் பூர்வாழ் சிவனாரே''
(திருப். தெய். பாமாலை)

(தானதந்தன தானதந்தன தானதந்த னானே)

எனப் பழம்மரபுப் பாடலான காவடி ஆட்டப் பாடலின் நடையை ஒத்ததாகப் பெரும்பான்மையான பாடல்கள் அமைந்துள்ளன.

''கரகத்திடை வந்தானிகர் கருணைத்தவ முனிவர்
பரவப்பெற லால்எங்கதி பழுதென்றிகழ் வீரோ?
குருவர்க்கர செனலிடை குருகிக்களி கூர்வீர்
உரகப்பணி அணிவீர்திருப் பூர்வாழ் சிவனாரே'' (மேலது)
(தனதத்தன தனதத்தன தனதத்தன தானே)

எனச் சிவனை வேண்டிப் பாடும் போதும் காவடிமெட்டினை யொட்டியே பாடியுள்ளார். இதேபோல,

''நிலவார் சடையாரை திருநீறாடிடுவாரை
உலவா முழுவாரைத் திருப்பூர்வாழ்சிவனாரைப்
பலவாழ்வொடுநீடுத் தமிழ்ப்பாண்டிக்கிடைநெல்லை
தலவாணினுரைக்கும் கவிதனை ஓதிடல் தவமே''
(தனதானனனானா தனதானனனானா)

என இல்லறம், துறவறம் என இரண்டையும் துய்த்து திருநெல் வேலியில் பிறந்தார் என்பதைச் சொல்லும் இப்பாடலும் காவடி மெட்டிலேயே பொருந்தி வரக் காணலாம்.

''பாமர மக்களிடம் அருள் விளக்கும் பாடல்களைப் பாடும் போது/ அவர் வாழ்நாளே பாடும் தொழிலாகிப் போனதால் தாம் பாடுவதும் பாடும் பொருளும் அந்நிலத்தில் வாழும் மக்களின் தேவையொட்டியே அமைந்தன. உலகம் உய்வு பெறவேண்டும் என்பதற்காகவும் மக்கள் வாழும் நெறியுடன் அருள்வேண்டும் முறையும் கற்றுத் தருவதாகவே இவரது பாடல்கள் அமைந்தன. பாடல்கள் எளிய நடையில் அமையவேண்டும் என்று எண்ணி சிறுசிறு அடிகளாகவே கொடுத்திருக்கிறார். அவ்வக் காலத்திய இறைவனை வழிபடும் மக்கள் ஒரு குறிப்பிட்டவர்களாக இருந்ததால் பாடிப் புகழ் பரப்பும் ஓதுவார்கள் வகையிலும் இலக்கண முறைப்படியும் பாடல்கள் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது. மனத்துள் கந்தனை வழிபடும் எந்த வேளையிலும் மகிழ்வூட்டும் வகையில் அமைவதாக வழிநடைப்பாட்டுக்களான காவடியாட்டப் பாடலின் மெட்டுக்கள் ஏற்றவையாக அமைந் திருக்கின்றன. இடையிடையே திருமாலைப் பற்றிப் பாடும் போது,

''நாணாமல் ஊர்தோறும் நான்போய் இரந்திரந்து
வீணாட்கழியாமல் மெய்யருட்பே ரீந்தருள்வாய்

ஆணாகிப் பெண்ணாய் அலியுருவம் ஆனவனே!

சேனாடர் போற்றும் திருப்பூர் பெருமானே! (மேலது)

எனப் பாசுரமாகவும் பாடியுள்ளார்.

அறுசமயம் பற்றி வடமொழியிலும் தமிழிலும் உள்ள அரிய கருத்துக்களை ஒன்றுதிரட்டி, 'அறுசமய விளக்கம்' என்ற நூலை இவர் எழுதியுள்ளார். வேதத்தை வகைப்படுத்திய வேதவியாசர் எனும் பெயர் பெற்ற வியாசமுனிவர் 18 புராணங்களையும் கூறியவர் என்பது வெளிப்படை. புத்தரைத் தலைவராக பௌத்தமும், அருகனைத் தலைவராகக் கொண்டு சைன சமயமும் உருப்பெற்றது. 'மதம்' என்றால் 'கொள்கை' எனக் கொண்டு சமயங்கள் பல தோன்றின (கௌமார விளக்கம், ப.2–3). சேவல் ஒலித்தால்தான் சூரியன் உதயமாகும் என்பதை, "சேவல் ஒலித்தல்லது உதியாது என்று ஆதிசிறப்படைவார் கவுகாரச் சித்தர் தாமே" கண்ணுடையாரில் மயிலின்கவின் கொடிதென்று எண்ணுனர்இல்லை என்றவாறு சேவலையும் மயிலையும் சிறப்புறக் கூறி வேலாயுதத்துக்கு மேலாயுதம் ஒன்ன வேறில்லையே" என்று வேற்படையைப் புகழ்வார் (மேலது, ப. 100). மலைகள் யாவும் முருகனுடையது. குறிஞ்சிக்கு அதிபதி முருகன். சிவன் பாலன், குமாரன், கிழவன் என இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழாய் உள்ளான் என்று தமிழையும் முருகனையும் பொருத்திப் பார்த்துள்ளார்.

களவு, கற்பு என்ற இருமுறைத் தமிழ் மணத்தை ஏற்று வள்ளி தெய்வானையை திருமணம் செய்தவன் என்றும், 'பூமி உருண்டை வடிவம் அதனால் அண்டை என்றனர். அண்டை என்பது முட்டையின் பெயர். அப்படி நீண்டு காணும் மலை. எனவே குறிஞ்சிக்குப் புறம்பாக எதுவுமில்லை? என்பதைக் கூறவும் 'கவி' பாடியுள்ளார் (மேலது,ப.101).

தண்டபாணியின் உருவ முறையினைக் கூறும்போது,

"முண்டிதமும் கோவணமும் கீளும் தங்கும்
பழுநீறும் பதுகையும் முறுவல் வாயும்
கண்டிகையும் கதிர்வேலும் இரண்டு தோளும்
கமலமல ரடித்துணையும் காட்டும் மூர்த்தி
தொண்டினர்சிற் சிலர்உளத்திற் சடிலத் தோடு
தோற்றம் உண்டுஅவன் பெருமை வொண்ணாது"

என நிறம் 'சிந்து' வடிவிலேயே அமையும் மெட்டுக்களுடன் தண்டபாணியின் பாடல்கள் அமைவதாகவும் காண முடிகிறது.

வெண்பா விருத்தம் என இலக்கண வரையறைகளைப் படிக்கும் வாய்ப்புப் பெற்றிருந்ததால் 'சைவமும் தமிழும்' தழைத்தினிதோங்கும் வகையில் தாழிசை, வெண்டளை கலிப்பா, கொச்சகக் கலிப்பா எனப் பல்வேறு செய்யுள் இலக்கண வகைகளைப் பாடித் தமிழுக்கு வளம் சேர்த்தவர் சுவாமிகள். தமிழ்மரபுக் கடவுளான முருகனின் வேல், மயில், சேவல், கடம்பம் என மரபு இலக்கிய வடிவமாயும் தமிழரின் வாழ்வியல் மரபான கற்பு, களவு என்ற நெறிமுறைகளுடனும் தமிழ்க் கடவுளான அழகு எனும் முருகனின் அருள் வேண்டிப் பாடப்பெற்ற பாடல்களும் கௌமார சமயத்திற்குப் பேறு சேர்த்து தனிச்சிறப்பைப் பெற்றிருக்கின்றன.

இசை என்பது அனைத்து உயிரையும் இணங்க வைக்கும் என்ற பேருண்மையை நிலைநாட்டுவதற்காகவே தண்டபாணி சுவாமிகள் அரிய கருத்துக்களை நீண்ட நெடிய மாலைகளாக நமக்குப் பாடல் வடிவில் தந்திருக்கிறார். இசைக்கலையில் அவருக்கு இருந்த ஈடுபாட்டை விளக்கிக் காட்டுவதாக அவரது பாடல்கள் அமைகின்றன.

# சுவாமிகளின் புதுமை நோக்கும் முத்தமிழ் நலமும்

அ. கோபிநாத்

**எழுத்திலும், எழுதும் முறையிலும் புதுமை:** சுவாமிகள் எழுதும் முறையிலும் புதுமை படைத்தவராவார். அவர் முருகன் அருளால் பெற்ற எழுத்தாணியின் பெயர் 'சர்வ சாதாரணி' என்பதாம். பனையோலை ஏட்டில் எழுத்தாணி கொண்டு பழைய பாடல் போல வரி கோணாமல் தனித்தனி அக்கரமாகப் பிழையின்றி, ஒற்றெழுத்துக்கு மேலே புள்ளியிடல், 'ர'கரத்திற்கு கீழே கோடிடல் இன்றி விரைவாக எழுதும் ஆற்றல் பெற்றிருந்த நிலையைக் காண்கின்றோம்.

வண்ணக் கவிக்கே அதுவரை அமையாத 'வண்ணத்தியல்பு' என எழுதியமையும், ஐந்து இலக்கணங்களோடு அமையாது, அது கற்றதனால் புலமைக்கும் ஒரு முறைமை அமைய வேண்டும் என்ற காரணத்தால் எழுந்த நூலில், புலமை இலக்கணத்தையும் சேர்த்து அறுவகை இலக்கணம் பாடியமையும் குறிப்பிடத்தக்கது. இதில் அமைந்துள்ள புதுமை யாதெனில், தமிழ் மொழியின் அக்கரங்களின் வரிவடிவம் அமைய வேண்டிய முறையை எழுதியிருப்பதாம்.

> "மும்மணிக் கோவை பல மாலை பல அந்தாதி
> மூவகைய பல இன்னவா
> முதுநெறிப் பனுவல் பல புதுநெறிப் பனுவல்
> முத்தமிழ் சுவை வழாமல்
> இம்மணிற் புலவர் பலர் மகிழ்வுற மொழிந்துள்ளேன்
> இன்னமும் பகருவேன்"

என்ற பாடல் இக்கட்டுரைத் தலைப்புக்கு அரண் செய்வதாம். பழமையேயன்றிப் புதுமைப் போக்கும், பாடல்களில் முத்தமிழ் சுவை கெடாமல் பாடுவேன் என்று சுவாமிகள் உரைப்பதும் அவர்தம் புதுமை நோக்கும் முத்தமிழ் நலமும் காட்டுவதாம்.

அறுவகைச் சமயமெனக் கூறும் கதிரவன், கணபதி, சிவன், சக்தி, திருமால், முருகன் வழிபாடுகளும் அச் "சன்மதமும் சண்முகனே" என்பதே சுவாமிகளின் அடி நாதமாகும். தம்மைப் பாடச் செய்த சிறப்பும் புதுமையும் முருகனுக்கே உரியது என்பதனை,

"ஒரு கனவிலே தோன்றி வெண்ணீறு உற்ற இலை
கருவகபிரசாதம் எனத் தந்த —குருபரனே
மானம் உனக் கின்றோ மறந்து விட்டாற் சொல்லோ வந்து
ஏன் அருள கின்றாய் இலை"

என்ற பாடலால் அறியலாம். இங்கு முருகனுடன் சுவாமிகள் உரிமையுடன் உறவாடும் முறையையும் அறிய இயல்கின்றது.

உறவும் உரிமையும் மருமகனிடம் கொண்டிருந்தாலும் வஞ்சம் புகழ்ச்சிக்காகக் கூட முருகனைக் குறைத்துப் பாடாமல் இருந்தமையும் புதுமையானதாம். திருப்புகழ் சந்தப் பாக்களின் இலக்கண நுட்பத்தை உலகறியச் செய்தவர் தண்டபாணி சுவாமிகள் என்பதும் ஆன்றோர் முடிவாம்.

திருத்தொண்டர் புராணத்தில் 63 திருத்தொண்டர்களையும் 9 தொகையடியார்கள் என 72 பேர் அமைந்திருத்தல் போல சுவாமிகள் பாடிய புலவர் புராணத்தில் 72 திருவருள் பெற்ற புலவர்களைப் பாடியுள்ளது ஒப்பிடத் தக்கதாம். தமிழலங்காரம், மநுநெறித் திருநூல், 96 பிரபந்தங்களில் பாடப்படாத ஒலியலந்தாதி வேலங்காரம், மயிலலங்காரம், ஆறெழுத்தலங் காரம், யமகம் திரிபு, ஏகபாதம், இதழகல் (நீரோட்டம்) எனப் பலபடியான புதுமைப் படையல்களை சுவாமிகள் அமைத்துள்ளதனைக் காண்கின்றோம்.

**வாழ்வியல் புதுமைகள்:** வளர்ந்த வாலிப நிலையில் திருமலை என்ற பாண்டி நாட்டு முருகன் திருக்கோவில் முன்பு முருகன் காட்சியை நேரில் பெற இயலவில்லையே என்ற நிலையில், மலை மீதிருந்து சந்நிதி முன் உருண்ட செய்தியையும், தாம் ஊனமின்றி எழுந்த நிலையையும் வள்ளியம்மை, புண்பட்டு உரசிய தோள் பகுதிக்கு மன வெளியில் திருநீறிட்டும், நெற்றியிலணியச் செய்தும் ஆறச் செய்த புதுமையை,

"வடதிசையில் தலை வைத்து மறலிசை கால் நீட்டி
உடலையந்த திருமலையின் உச்சியில் நின்றுருட்டி விட்டேன்
விடலை விடும் தேங்காய் போல் வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனக் கொண்டாங்கோர் மண்தரையில் விட்டதுவே'
(குருபர தத்துவம்)

என்ற பாடலில் கூறியுள்ளார். சுவாமிகள் வாழ்வியல் செய்திகளை வரலாறென்று கூறாமல் குருபர தத்துவம் என்று கூறியுள்ளதும் நோக்கத்தக்கது.

சிவகாருண்ய வேள்வியில் கோவிலில் உயிர்க் கொலையைப் பலியெனச் செய்தல் அறவே கூடாது என்பது சுவாமிகளின் அழுத்தமான கோட்பாடாம். பழனிப்பக்கம் துமிசம்பட்டியில் சந்நாசப்பான் என்பான் ஆட்டைப் பேய்க் கோயிலின் முன் பலியிடமுனைந்தபோது அறவுரை கூறி அவனைத் திருத்தியமையும் தன் மகன் வயிற்றுவலி தீரப் பலியிட முயன்ற ஒருவனை,, பையனுக்கு மருந்து கொடு, உயிரைக் கொல்ல விடேன் என்று சுவாமிகள் கூறியதனைப் பொருட்படுத்தாது அவன் பலியிட முயல, பையன் அதீத வலியால் துடித்தான். அதனைக் கண்ட சுவாமிகள் தன் பூசைத் திருநீற்றைப் பையனுக்கு அணிவித்து, பிரம்பால் பையனைத் தடவி ஒரு பாடல் பாடிட பையன் வயிற்று வலி மறைந்தது; பலியிட வேண்டிய ஆட்டைப் பெரிய தனக்காரரிடம் ஒப்படைத்து அது தானே இறந்தபின் மண்ணில் புதைக்கவும் சுவாமிகள் ஏற்பாடு செய்தனர் என அறிகின்றோம். அப்பாடல்,

"அயிற் றலைவா தென்பழனி யப்பா இச்சேய்தன்
வயிற்றுவலி முற்றுமற மாற்றி - வெயிற்புழுப்போல்
ஏழைகள் வாடப் படுத்தும் இப்பேய் உயிர் துடித்துவிட்டு
ஊழை வென்றோர் உண்டென் றுணர்த்து".

என்பதாம். மேலும் வாழும் சமுதாயத்தில் கட்டாய மணம் கூடாது; கைம்பெண் மணம் தேவை என்பன போன்ற புதுமைக் கருத்துக்களும் காணத்தக்கது.

சமகாலச் சான்றோர்களான சுவாமிகளும் வள்ளலாரும் கொல்லாமையான ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும், சுத்த சமரச சன்மார்க்க நெறியைப் பின்பற்றியவர் என்பதும் நோக்கத்தக்கது.

"கோ வதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன் முன்
சாவதற்ற முத்தி பதம் தந்தாலும் – மேவற்கு
இசையேன் காண் என்னை யின்னும் ஈடழிக்க வேண்டாம்
திசைதேர் பழனி யரசே".

என்ற பாடலாலும் சுவாமிகளின் ஜீவகாருண்ய நெறியைக் காணலாம். சிறு தெய்வங்களை முன்னிலைப்படுத்தி உயிர்ப் பலியிடுதலை கோலியனூர் மாரி, திருவொற்றியூர் காலை இடும்பன், கறுப்பன் கோவில்களில் பலியிடாமல் தடுத்தாண்டமை நடைபெற்ற அருட்செயல்களைப் போன்றே சுவாமிகளும் பல புதுமைகளைத் தம் வாழ்வில் நடத்தியுள்ளார். மல்லையர் என்பவர் கண்பார்வை பெறவும், கறுப்வேல் கவுண்டர், சிவகுரு நாத பிள்ளை, துரைசாமிரெட்டியார், தேவகோட்டை சிதம்பரஞ் செட்டியார் போன்றோருக்கு மக்கள் பேறு அமையும்படி திரு வருளிடம் முறையிட்டுப் பாடினார். தன் தந்தை மக்களின்றி அவதியுற்ற நிலையைச் சுவாமிகள் அறிந்த விளைவிதுவெனலாம். மலை மீது கிணறு அமைத்துத் தர திருவருளை வேண்டியதும் தன்னைக் கொல்ல ஏவல் செய்தவரையும் முருகனருளால் பாடி உய்ந்த நிலையையும் சுவாமிகள் வாழ்வில் நடந்ததாக அறிகின்றோம். ஆங்கிலேயரை எதிர்த்து நின்று அவர் கொடுமையையும் பாடுகின்றதனைக் காண்கின்றோம்.

### முத்தமிழில் புதுமை

பிறப்பிலும், இளமை வளர்ப்பிலும், எழுத்து எழுதும் முறையிலும், வாழ்வியலும் பல்வேறு புதுமைகள் படைத்த வண்ணச்சரபனார், முத்தமிழிலும் பல்வேறு புதுமைகள் புரிந் துள்ளார். இயற்பாக்கள் எண்ணற்றன எழுதிக் குவித்தமையே பெருஞ்சிறப்பாம். மேலும் இயல், இசை, நாடகமென மூன்றினும் தான் பெற்றிருந்த புலமையை,

"முகமெனப் பார் மகட் கமையும் நெல்லையில்
முத்தமிழ் புலமை கொள் முருகதாசன் வாய்
திகழ்தரு கோயமுத் தூரிற் சொல்லிலை
செப்புநர் தமைக் தியக்கம் தீர்ப்பமே"

(முருகன் மூவாயிரம்: முதலாயிரம் 3
சுப்பிரமணிய மூர்த்தியே: 39)

என்ற பாடல் வாயிலாகக் கூறுவதால் அறியலாம். இயல், இசை, நாடகம் மூன்றனுக்கும் நிறம், சுவை, தெய்வத்தையும் படைத் தளிப்பது காண்டற்குரியது.

**இயற்றமிழ்**

இயற்றமிழ் கற்றறிந்தாரே பொருளறியும் படியும் உயர்ந்த பொருள் எளிதிற் பெற முடியாது; அதிகம் உண்ண முடியாது; தெவிட்டும். எனவே தேன் என்று பெயர்க்கும் காரணமாயிற்று; நிறமும் கறுப்பாயிற்றென்பர். மலைமகள் கறுப்பு நிறச் சக்தியாவாள்.

**இசைத்தமிழ்**

ஓரளவு கற்றவரும் பொருள் உணர முடியும். எனவே வேண்டிய அளவு உண்ணத்தக்க செம்மையான அமுதமாயிற்று; சுவை அமுதமாகவும், நிறம் செம்மையாகவும் செந்தாமரை மலராள் தெய்வமானாள்.

**நாடகத்தமிழ்**

கல்லாரும் கற்றாரும் அறிய வல்லது பாடவும் படிக்கவும் இனியது எளியது; எனவே பாலின் சுவையும் வெள்ளை நிறமும் கொண்டு, வெண்டாமரையில் உறையும் கலைமகள் தெய்வமகளாகின்றாள். இதனை,

> ''வள்ளையங் குழை பார்ப்பதி மலத்திரு மடந்தை
> வெள்ளை வாணி என்றுள ஒரு மூவரில் விளங்கி
> கள்ளை வானகத் தமுதினை பாலினைக் கடுக்கும்
> கொள்ளை முத்தமிழ் பிறப்பிடம் தென் பொதிகையே''

என்ற புலவர் புராணப் பொதியாசலப் படல வழி அறியலாம்.

இன்பத்திலும் துன்பத்திலும் முத்தமிழ்ச் சுவையைச் சுவாமிகள் விடுவதில்லை. ''முத்தமிழ்ப் புலமை தத்தை வாழ்வுறும்'' ''முத்தமிழ் புலமைகொள் முருகதாசன்'' ''சிரிய முத்தமிழின் சுவை உண்டவர்'' (முருகன் மூவாயிரம்) ''முத்தமிழ் தைத்த மனத்தினன் என நீ முன்னிடல் என் செய்கேன் என்றும்,

> ''இகல் மலிசூர் தடிந்தாய் ஈண்டினிது நாடி
> இயலிசை நாடகம் கொடு போற்று என்னை''

என்று கூறுவதாலும் சுவாமிகளின் முத்தமிழ் ஈடுபாட்டை அறிந்து கொள்ளலாம்.

"சங்கக் குழை அணிவார் மகிழ்தரு முத்தமிழ் விரகன்
பொங்கப் புகழ் முழுவதும் புணர் புனிதப் புலவோனே"

எனப் பலவிடத்தும் முருகனை முத்தமிழின் உருவகமாகக் காணும் காட்சியையும் காணலாம்.

**இசைத்தமிழ்**

இசைத்தமிழின் ஏற்றத்தைப் பலவிடங்களிலும் சுவாமிகள் காட்டியுள்ளார்.

"கற்பும் எழில் பொலிவுமுறு மங்கை நல்லார்
கழறு மொழிச் சுவை நாணக் கனிந்த பாடல்"

என அழகுக்கு அழகு சேர்ப்பது போன்று கற்பாகிய எழிலுடன், பொலிவுபெறு எழிலும் கூடி அதற்கு மேலும் அவர் கழறு மொழிச் சுவை நாணக் கனிந்த பாடல் சர்க்கரைப் பந்தலில் தேன் மாரியன்றோ?

"பல்லவத் திருபங் கனுபல் லவமும்
அதனிரு பங்காஞ் சரணமும் தானம்
பிழையா தமைத்து அதிற்பேரின் பஞ்சொலின்கீர்த்தனை"
(அறுவகை இலக்கணம்: 85)

எனக் காட்டுகின்றார். கீர்த்தனைப் பாடல் திரட்டில் முப்பத்து நான்கு கீர்த்தனைத் தந்துள்ளார். "தனித்தெய்வ வணக்கமாக இருந்தால் இசைப்பாடல் என்ற பெயர் பெறும். அப்படியின்றி ஒரு கதையின் பகுதியை எடுத்துச் சொல்லும் போது அதே கீர்த்தனை, தரு என்று சொல்லப்படுகின்றது" எனச் சிலர் விளக்கம் தருவர். (கருதாம் சங்கீதம் பக். 101) கீர்த்தனைத் திரட்டுப் பாடல்கள் ஒன்றிரண்டு பாடல்கள் தவிர வேறுபட்ட இராகங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

**இராகங்கள்**

முப்பத்து நான்கு கீர்த்தனைகளில் பயின்று வந்துள்ள இராகங்கள் நாட்டை, கௌளை, எதுகுலக் காம்போதி, மலயமாருதம், நாதநாமக்கிரியை, மோகனம், சாவேரி, கமாஸ், நவ்ரோஸ், அம்சத்வன், பியாகடை, மத்யமாவதி, குந்தவைராணி,

கரகரப்பிரியா, பைரவி, தோடி, பூர்வி கல்யாணி, தன்யாசி, காபி, பிலகரி, செஞ்சுருட்டி, சிந்துபைரவி, ஆனந்தபைரவி, சுக்ரவாகம், தேவமனோகரி, சங்கராபரணம், ஹரிகாம்போதி, சிம்மேந்திர மத்யமம், சண்முகப்பிரியா, நீலாம்பரி, கானடா, மாயாமாளவ கௌளை, ஸ்ரீராகம் இவற்றுள் தன்யாசி மட்டும் இரண்டு கீர்த்தனைகளில் வந்துள்ளன. மற்றவை அனைத்தும் மாறு பட்டனவாம்

**தாளங்கள்**

கீர்த்தனைப் பாடல் திரட்டில் ஆதி தாளமே மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. இருபத்து ஒன்பது கீர்த்தனைகளில் ஆதி தாளம் இடம்பெற்றுள்ளன. ரூபக தாளம் மூன்றனுள்ளும், மிஸ்ரசாபு ஓரிடத்திலும், சாபு தாளம் ஒன்றனுள்ளும் பயின்று வந்துள்ளன.

**கீர்த்தனை அமைப்பு**

கீர்த்தனை அமைப்பு இயல்பான பல்லவி, அனுபல்லவி, சரணம் என்பதுனுடன் தமிழ் முறைப்படியான எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்ற அமைப்பும் காணப்படுகின்றது. இறைவனைப் பாடிய பாக்களே மிகுதி; ஆங்கிலேயர் கொடுமையை 'அநியாயக் கொடுமை என்னென்று சொல்லுவேன்' என்ற கீர்த்தனையும், பதினைந்தாவது கீர்த்தனையில் வீரகேரளம்புதூர் ஜமீன்தார் இருதயாலய மருதப்ப தேவர்க்கு அழைப்பனுப்பியும் வராமைக்குப் பாடியதான பாடலும் மனிதரைப் பற்றியனவாம். 22-வது கீர்த்தனை 'பதம்' என்ற அமைப்பிலும், 24-வது கீர்த்தனை ஓரடிக் கீர்த்தனை என்றும் அமைந்துள்ளன.

முதற் கீர்த்தனை கெம்பீர விநாயகர் துதியாக நாட்டை இராகத்தில் ரூபக தாளத்தில் அமைந்துள்ளது. எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்பவற்றுடன் பல்லவி, அனுபல்லவி சரணங்கள் என்ற தொடர்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

எடுப்பு

கெம்பீரவி நாயகரே என் சொல்
கேளும் கேளும் ஐயா

தொடுப்பு

தம்பி என்று வேலனைக் கூப்பிட்டென்
சஞ்சலம் தீர்த்திடச் சாற்றும் ஐயா

முடிப்பு

மேரு மலைத் துண்டு தாருமென் றும்மிடம்
வேண்டிக் கொண்டேன் வெகு நாளையும் அப்படி
நீருத வாதிருக் கின்றீரே உம்மது
நெஞ்சிரங் காதது நீதிக் கொப்பாகுமோ (கெம்பீர)

என அக்கீர்த்தனையின் அமைப்பு அமைந்துள்ளது. எனவே கீர்த்தனைப் பாடல் திரட்டு-பால் திரட்டுப் போல் செய்தித் திரட்டாகவும், இசைத் திரட்டாகவும் இராக தாளத் திரட்டாகவும் அமைந்து இசை நலம் சிறப்புற அமைந்துள்ளதனைக் காண்கின்றோம். நாட்டிய அமைப்பிற்கான 'பத' அமைப்பினையும் ஒரு கீர்த்தனை கொண்டுள்ளது. இறைவனைப் பாடும் பாடல்களே மிகுதியாகவும், மானிடரை அவர் தம் குறையைச் சுட்ட இரு கீர்த்தனைகளும் அமைந்துள்ளன.

## நாடகத்தமிழ்

முத்தமிழின் ஒரு பகுதியான நாடகத் தமிழிற்குச் சுவாமிகள் ஆற்றிய தொண்டும் குறிப்பிடத் தக்கதாம். குறிப்பாக முசுகுந்த நாடகத்தைக் கூறலாம். கந்தபுராணம் கந்த விரதத்தைத் தழுவியும், தெய்வயானை திருமணப் படலத்தும் வரும் கதையமைப்பைக் கொண்டு இஃது எழுதப்பட்டது. முசுகுந்தன் வரலாற்றை நாடகமாகப் பாடும்படி முருகன் உத்தரவின் பேரில் இந்நூல் படைக்கப்பட்டுள்ளதனைப் பாயிரத்தால் அறிய இயல்கின்றது. அதுசமயம் வளவனூரை அடுத்துள்ள குமாரபுரி மடத்தின் ஆதி முதல்வரான சண்முக சுவாமிகளும், காரணப் பட்டு கந்தசாமிப் பிள்ளை என்பவரும் ஒத்தோதினர் என்றும் காண்கின்றோம்.

முசுகுந்தன் குரங்கு நிலையிலிருந்து ஈசன் மீது வில்வ இலை பறித்து இட்ட விளைவால் அரசு பதவி கிடைத்தும் விரும்பாது நின்றவன். ஈசன் ஆணையால் ஏற்றவன், முருகன் திருமணக் காலத்து உடனிருந்து கண்டு களித்தவன். தமிழ்நாட்டை தமிழ் மன்னனே ஆள வேண்டும் என்ற சுவாமிகளின் விருப்பமும் இதில் ஈடேறிற்று எனலாம்.

முசுகுந்த நாடகம், பாயிரம் தந்திமுகன் தாள் பணிந்து தொடங்குகின்றது. பின்னர் முருகன், சிவபெருமான், சக்தி அருள்

வேண்டிப் பாடிய பாடல்களும் தோத்திரக் கீர்த்தனைகளாகவும் அமைந்து விளங்குகின்றது. விநாயகர் கீர்த்தனை ஆரபி ராகத்தில் சாப்பு தாளத்தில் அமைந்துள்ளது.

பல்லவி

ஆனை முகத்துடன் ஐந்து கரங்க கொளும்
ஐயனைக் கை தொழுவாம் (ஆனை)

அனுபல்லவி

சோனைமு கிற்குலமும் நாணம தம்பொழி
தூயனைச் செல்வவி நாயகமூர்த்தியை (ஆனை)

சரணங்கள்

எண்ணரிய எண்ணமெல் லாமும்மு டிந்திட
ஈனக் கலியிருள் ஓடி விடிந்திட
எண்ணிடும் ஞானக் கடலிற் படிந்திட
ஞானப் பெருக்கும் அஞ்ஞானம் ஒடிந்திட (ஆனை)

என அமைந்துள்ளது.

சுப்பிரமணியர் கீர்த்தனை காம்போதி திஸ்ரசாப்பிலும், கட்டியங்காரன் வருகையை சிந்து விருத்த அமைப்பில் அம்சத் தொனி இராகத்திலும் பிஸ்ரசாப்பு தாளத்திலும், கட்டியங்காரன் பாடும் கீர்த்தனை சங்கராபரண இராகம் ஆதி தாளத்திலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாம்.

முசுகுந்தன் கதை வரலாற்றோடு தொடர்புடைய இன்றியமையாத செய்திகளை மட்டும் கீர்த்தனைகளாகப் படைக்கப் பட்டுள்ளதனைக் காணலாம். உரையும் செயலும் கீர்த்தனை முடிவில் விருத்த அமைப்பில் கூறப்பட்டுள்ளது காணத்தக்கது. நாடகத்தின் வேகத்திற்கு ஊறு விளைவிக்காதபடி இஃது அமைக்கப்பட்டுள்ளது எனலாம். மேலும் இது நடிப்பதற்குரிய காட்சி நாடகமல்ல என்பதாலும் கேள்வி நாடகத்தில்–இங்கு கதைப் பொழிவிற்காகவும் கூறப்படுவதாலும் விருத்த அமைப்பு வேண்டியுள்ளது.

# கட்டுரையாளர் முகவரி

தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்
சிரவையாதீனம்
கௌமார மடாலயம்
கோவை-641 006

முனைவர் சா. அங்கயற்கண்ணி
பி 88/1 என்.ஜி.ஓ.பி. காலனி
திருநெல்வேலி-627 007

வ. ச. அபிராமவல்லி
எத்திராஜ் மகளிர் கல்லூரி
எத்திராஜ் சாலை
சென்னை-600 105

முனைவர் இரா. அரங்கசாமி
3, டி. கே. ரங்கபாஷ்யம் நகர்
கோவை-46

முனைவர் ஜெ. அரங்கசாமி
இணைப்பேராசிரியர்
தத்துவமையம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-613 005

முனைவர் தி. அரங்கநாதன்
தமிழ்த்துறை
அரசு ஆடவர் கல்லூரி
கும்பகோணம்-1

முனைவர் பா. அருள்செல்வி
தமிழ் வளர்ச்சி இயக்ககம்
குறளகம், 2-ம் தளம்
சென்னை-600 108

முனைவர் வே. சா. அருள்ராஜ்
இணைப்பேராசிரியர்
இந்திய மொழிகள் பள்ளி
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-613 005

முனைவர் அ. அறிவுநம்பி
பேராசிரியர்
தமிழியல்துறை
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி-605 014

முனைவர் அ. ஆலிஸ்
தமிழியல்துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சி-7

த. இரத்னமாலா
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
ஸ்டாண்டர்டு ஃபயர் ஓர்க்ஸ்
இராஜரத்தினம் மகளிர் கல்லூரி
சிவகாசி

திரு. இராகவன்முத்து
பாங்க் ஆப் இந்தியா
அ. பெ. எண். 208
9-எ, கீழ ஆவணிமூல வீதி
மதுரை-625 001

முனைவர் நா. இராசகோபாலன்
63, டாக்டர்அரங்காச்சாரிசாலை
சென்னை-600 018

முனைவர் இரெ. இராச பாண்டியன்
திரு வி.க. அரசு கலைக் கல்லூரி
கடாரம்கொண்டான்
திருவாரூர்-610 003

வே. இராசேசுவரி
த. சா. அ கலை அறிவியல்
தமிழ்க் கல்லூரி
பேரூர்
கோவை-10

மா. இராமச்சந்திரன்
ஆதித்தனார் கல்லூரி
வீரபாண்டியன் பட்டினம்
திருச்செந்தூர்

சி. இலட்சுமணன்
உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்
தமிழூர்
அடைக்கலப்பட்டணம் அஞ்சல்
நியூ காலனி
சிங்கம்புணரி-630 502

முனைவர் க. இளமதி
சானகிராமன்
முதுநிலை விரிவுரையாளர்
தமிழியல்துறை
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி-605 014

முனைவர் தா. ஈசுவரபிள்ளை
இணைப்பேராசிரியர்
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் வீ. உண்ணாமலை
இணைப்பேராசிரியை
தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்

தவத்திரு. ஊரன் அடிகள்
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி
நிலையம், வடலூர் – 607 303

முனைவர் ந. கடிகாசலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113

முனைவர் ஆர். கண்ணன்
அருள்மிகு பழனியாண்டவர்
கலை & பண்பாட்டுக் கல்லூரி
பழனி – 624 602

முனைவர் இரா. கண்ணன்
தமிழ்த்துறை
திரு. வி. க. அரசு கலைக் கல்லூரி
திருவாரூர் – 610 003

முனைவர் மு. கண்ணன்
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர் - 628 216

முனைவர் ச. கண்மணி
எஸ். எஃப். ஆர். மகளிர் கல்லூரி
சிவகாசி – 626 123

புலவர் பொன். கணேசன்
புன்செய்ப் புளியம்பட்டி
ஈரோடு மாவட்டம்
அ. எண். 638 459

எஸ். கதிர்வேலு
பெரியார் ஈ. வெ. ரா. கல்லூரி
திருச்சிராப்பள்ளி–23

வித்துவான் க. கதிரேசன்
ஆதீனப்புலவர்
குன்றக்குடித் திருவண்ணாமலை
ஆதீனம் – 630 206

முனைவர் கு. கதிரேசன்
விரிவுரையாளர், தமிழ்த்துறை
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர் – 628 016

முனைவர் பொ. நா. கமலா
எஸ். எஃப். ஆர். மகளிர் கல்லூரி
சிவகாசி (ஓய்வு)
14என்/3எ பெரியகருப்பன் தெரு
சிவகாசி கிழக்கு–626 189

முனைவர் தி. கமலி கஜேந்திரன்
அன்னை தெரசா மகளிர்
பல்கலைக்கழகம்
கொடைக்கானல் – 624 102

பி. கரிகாலன்
ஆய்வாளர், இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

கருவூர் எறிபத்தன்
அமைப்பாளர்
சைவர் கழகம்
17பி வாய்க்கால் சந்து
கரூர் – 639 001

தி. கலா
ஆய்வாளர், ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் இரா. கலைவாணி
விரிவுரையாளர், இசைத்துறை
அவினாசிலிங்கம் நிகர்நிலைப்
பல்கலைக்கழகம்
கோவை – 641 043

கா. கவிதா
தவத்திரு க்ந்தசாமி சுவாமிகள்
மெட்ரிகுலேஷன் பள்ளி
கௌமார மடாலயம்
சின்னவேடம்பட்டி
கோவை – 6

முனைவர் இரா. காஞ்சனா
இணைப்பேராசிரியர்
ஒப்பிலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 21

ந. காந்திமதிலட்சுமி
ஏ. பி. சி. மகாலட்சுமி மகளிர்
கல்லூரி
எட்டையபுரம் ரோடு
தூத்துக்குடி – 628 002

த. காமராஜ்
ஆய்வாளர், தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி
சென்னை – 600 005

சி. காயத்திரிதேவி
ஆய்வாளர், திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 21

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இணைப்பேராசிரியர்
அறிவியல் தமிழ்த்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

அ. கிருபானந்தம்
சி. பா. சு. தமிழ்க் கல்லூரி
மயிலம் – 604 304

ச. குமார்
ஆய்வாளர், தமிழ்த்துறை
கேரளப் பல்கலைக்கழகம்
காரியவட்டம் – 695 581

தி. வே. கோபாலையர்
16, துய்மா தெரு
புதுச்சேரி – 605 001

முனைவர் அ. கோபிநாத்,
தமிழாய்வுத்துறை
பிசப் ஈபர் கல்லூரி
திருச்சி – 17

எஸ். வி. கோபிநாத்
அருள்மிகு பழனியாண்டவர்
மகளிர் பாலிடெக்னிக்
பழநி – 624 601

மு. கோமதி
உதவி ஆசிரியை
அரசு உயர்நிலைப்பள்ளி
மாத்தூர் – 602 105

முனைவர் எஸ். ஆர். கோமதி
சூரியமூர்த்தி
இணைப்பேராசிரியை
சைவ சித்தாந்தத்துறை
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 21

மோ. கோ. கோவைமணி
ஆய்வு உதவியாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் இராம. கௌசல்யா
முதல்வர்
தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி
திருவையாறு – 613 204

முனைவர் சு. சண்முகசுந்தரம்
முதுநிலை விரிவுரையாளர்
தமிழ்த்துறை
தியாகராசர் கல்லூரி
மதுரை – 9

வெ. சத்யநாராயணன்
ஆய்வாளர், இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் த. சந்திரகுமார்
பேராசிரியர், சிற்பத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

இரா. சந்திரசேகரன்
தமிழ்த்துறைத் தலைவர்
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை – 641 046

சொ. சந்திரவாணன்
தொல்பொருள் ஆய்வுத்துறை
காப்பாட்சியர்
அகழ்வைப்பகம், குற்றாலம்

சு. சந்திரா
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 21

முனைவர் சா சரவணன்
சைவசித்தாந்தத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

முனைவர் மா. சற்குணம்
சி. பா. சு. தமிழ்க் கல்லூரி
மயிலம்-604 304

மு. சற்குணவதி
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

இரா. சாந்தி
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் செ. சாரதாம்பாள்
ஒப்பிலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை–21

முனைவர் எச். சித்திரபுத்திரன்
தலைவர், அகராதியியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் ச. சிவகாமி
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113

முனைவர் பா. சிவநேசன்
தமிழ்த்துறை
அரசு ஆடவர் கல்லூரி
கும்பகோணம் – 612 001

வை. வ. சிவப்பிரகாசம்
தெற்குத் தெரு
மானோஜிப்பட்டி
தஞ்சாவூர் – 613 004

கு. சிவலிங்கம்
தவ. இரா. அ. மேனிலைப்பள்ளி
சின்னவேடம்பட்டி
கோவை – 6

ஆ. சிவலிங்கனார்
5/15 முருகன் கோயில் தெரு
மயிலம் – 604 304

பெ. சிதாலெட்சுமி
ஆய்வாளர், இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் வே. சீதாலட்சுமி
ஸ்ரீ கா. சா. சு. கலைக் கல்லூரி
திருப்பனந்தாள்
தஞ்சை மாவட்டம்

முனைவர் தி. சுந்தராம்பாள்
21, மாலைப்பேட்டைத் தெரு
விருதுநகர் – 626 001

முனைவர் சி. சுந்தரேசன்
நாடகக் களஞ்சியம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

முனைவர் கே. சுப்பிரமணியன்
இணைப்பேராசிரியர்
அரசு கலைக் கல்லூரி, கோவை

முனைவர் பெ. சுப்பிரமணியன்
தமிழ்ப் பேருரையாளர்
அ. வீரையாவாண்டையார்
நினைவு திருபுட்பம் கல்லூரி
பூண்டி, தஞ்சை மாவட்டம்

முனைவர் பெ. சுப்பிரமணியன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை, அருள்மிகு
பழனியாண்டவர் கலை,
பண்பாட்டுக் கல்லூரி
பழனி – 624 601

ச. வே. சுப்பிரமணியன்
உலகத்தமிழ்க்கல்வி இயக்கம்
தமிழூர்
அடைக்கலப்பட்டணம் அஞ்சல்
அ. எண். 627 808

புலவர் கோ. சுப்பிரமணியனார்
'ஐயாறப்பர் அருளகம்'
99எ, தெற்கு வீதி
திருவையாறு – 613 204

முனைவர் பெ. சுயம்பு
தமிழ்த்துறை
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர் – 628 216

மெ. செந்தாமரை
ஆய்வாளர், தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம்
மதுரை – 21

அ. செந்தில்குமரன்
ஆய்வாளர், தமிழ்த்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005.

முனைவர் மா. செந்தில்
செல்வக்குமரன்
தொல்பொருள் ஆய்வுத்துறை
83, தெற்குக் கடைத் தெரு
பாளையங்கோட்டை
அ. எண். 627 002

முனைவர் அர. செயச்சந்திரன்
தமிழ்த்துறை
திரு. கொளஞ்சியப்பர் அரசு
கலைக் கல்லூரி
விருத்தாசலம் – 606 001

வே. செல்லாத்தாள்
தவத்திரு சா. அ. க. த. கல்லூரி
பேரூர், கோவை - 10

முனைவர் தா. சேதுபாண்டியன்
இணைப்பேராசிரியர்
இலக்கணத்துறை தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை – 21

தவத்திரு. சொக்கலிங்க
சுவாமிகள்
மீனாட்சி சொக்கலிங்கத்
திருமடம்
தாத்தோஜியப்பா சந்து
கீழவீதி, தஞ்சாவூர் - 1

முனைவர் தே. சொக்கலிங்கம்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி

முனைவர் நெல்லை
ந. சொக்கலிங்கம்
பேராசிரியர்
அஞ்சல் கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம்
மதுரை - 625 021

முனைவர் சோதிபாய் தேவதாஸ்
தமிழ்த்துறை
தொலைக்கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம்
மதுரை - 21

செ. சௌந்தரராசப்பெருமாள்
தலைமைக் கண்காணிப்பாளர்
நிதித்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை - 46

எம். ஞானப்பூங்கோதை
244, ஆழ்வார் நகர்
நாகமலை, மதுரை - 625 019

முனைவர் ப. சு. ஞானப்பூங்
கோதை
முதுநிலை விரிவுரையாளர்
தமிழ்த்துறை
த. சா. அ. க. அ. தமிழ்க்
கல்லூரி, பேரூர்
கோவை - 641 010

முனைவர் ப. ஞானம்
இணைப்பேராசிரியர்
தமிழியல்துறை,
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் - 608 002

முனைவர் சு. தங்கத்துரை
முதுநிலை விரிவுரையாளர்
திரு. கொளஞ்சியப்பர் அரசு
கலைக் கல்லூரி
விருத்தாசலம் - 606 001

புலவர் கி. தங்கவேலு
புன்செய்ப் புளியம்பட்டி
ஈரோடு மாவட்டம்
அ. எண். 638 459

வே. தட்சிணாமூர்த்தி
227, சிவன் அருள் இல்லம்
இராமகிருட்டிணபுரம்
கணபதி அஞ்சல்
கோவை - 641 006

முனைவர் வை. தட்சிணாமூர்த்தி
தமிழகம்,
16சி, வெள்ளைபிள்ளையார்
கோவில் தெரு
சோமசுந்தரம் காலனி
மதுரை - 625 010

இராம. தனசேகரன்
ஆய்வாளர், தமிழியற்புலம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை - 21

புலவர் ப. தனலக்குமி
தவ. இரா. அ. மேனிலைப்பள்ளி
சின்னவேடம்பட்டி, கோவை-6

அ. தனலெட்சுமி
இராதாகிருட்டிணன்
ஆய்வாளர், இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

முனைவர் சிவ. திருச்சிற்றம்பலம்
முதுநிலை விரிவுரையாளர்
அரசு ஆடவர் கல்லூரி
கும்பகோணம் – 612 001

இரா. திருஞானசம்பந்தம்
ஆர். கே. ஸ்ரீ. ரங்கம்மாள்
கல்வி நிலையம்
அவினாசி சாலை, கோவை–18

முனைவர் சு. திருநாவுக்கரசு
முதல்வர்
சி. பா. சு. தமிழ்க் கல்லூரி
மயிலம் – 604 304

வெ. திருநாவுக்கரசு
அரசு மகளிர் மேனிலைப்பள்ளி
குடவாசல்
திருவாரூர் மாவட்டம்

முனைவர் ம. திருமலை
ஒப்பிலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை

புலவர் நிலகவதி சண்முகசுந்தரம்
தமிழாசிரியை
மாநகராட்சி ஆண்கள்
மேல்நிலைப்பள்ளி
இர. ச. புரம்
கோவை – 641 002

டாக்டர் தி. நடராசன்
தமிழியற்புலம்
தலைவர் & ஒருங்கிணைப்பாளர்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 625 021

நந்தினி சண்முகலிங்கம்
ஆய்வாளர்
சைவசித்தாந்தத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

கோ. ப. நல்லசிவம்
மணிகர்னீசர் கோயில் தெரு
கீழவீதி, தஞ்சை – 613 001

முனைவர் நாகப்பா நாச்சியப்பன்
தமிழ் ஆராய்ச்சித்துறை
கா. மு. பட்டமேற்படிப்பு
ஆராய்ச்சி மையம்
இலாசுப்பேட்டை
புதுச்சேரி – 605 008

புலவர் ப. வெ. நாகராசன்
கௌமார மடாலயம்
கோவை

கா. நாகராசு
த. சா. அக. அ. தமிழ்க் கல்லூரி
பேரூர், கோவை – 641 010

கு. நாகராஜன்
மகரிஷி, தியான யோகாசன
பயிற்சி நிலையம்
146, எஸ். கே. சி. ரோடு
ஈரோடு – 638 001

ஐ. ஆர். நாகேசுவரசிவம்
த/பெ. இராமசாமி
சிவாச்சாரியார்
7/9 அக்ரஹாரம்
இருகூர் அஞ்சல்
கோவை – 641 103

முனைவர் பா. நீலாவதி
தமிழ்த்துறை
அவினாசிலிங்கம் பல்கலைக்
கழகம்
கோவை – 641 043

முனைவர் ப. பத்மாவதி
விரிவுரையாளர்
தமிழ்த்துறைத் தலைவர்
ஸ்ரீசாரதா நிகேதன் மகளிர்
அறிவியல் கல்லூரி
ஸ்ரீசாரதாபுரி, கரூர்–5

முனைவர் த. கோ. பரமசிவம்
பேராசிரியர் & தலைவர்,
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

முனைவர் அ. மா. பரிமணம்
சி. 169, முனிசிபல் காலனி
தஞ்சாவூர் - 613 007

புலவர் இல. பழநிச்சாமி
ஸ்ரீசாரதாபுரி, கரூர் - 5

மு. பழனியப்பன்
ஆய்வு மாணவர்
தமிழியல் துறை
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுவை - 605 014

இ. பார்வதி
ஆய்வாளர், தமிழ்த்துறை,
கேரளப் பல்கலைக்கழகம்
காரியவட்டம் - 695 581

டி. பாலசுப்ரமண்யன்
அரசு மேல்நிலைப்பள்ளி
மீன்சுருட்டி - 612 903
பெரம்பலூர் மாவட்டம்

மீ. பாலமுருகன்
அங்கப்பா கல்லூரி
டி.ஏ.ஆர். பள்ளி வளாகம்
அழகேசன் சாலை
கோவை - 641 001

எம். பானுமதி
தவ. இரா. அ. மேனிலைப்பள்ளி
சின்ன வேடம்பட்டி, கோவை-6

முனைவர் அ. பாஸ்கரபால்
பாண்டியன்
தமிழ்த்துறைத்தலைவர்
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர் 628 216

மரு. சே. பிரேமாரங்கராசன்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

ந. புவனேஸ்வரி
ஆய்வாளர், மொழியியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

முனைவர் பா. புவனேசுவரி
செல்லம்மாள் மகளிர் கல்லூரி
கிண்டி, சென்னை - 600 032

தி. புஷ்கலா
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

த. பூமிநாகநாதன்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை - 600 113

தி. பெரியசாமி
ஆய்வாளர், தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை

பேபிசித்ரா
ஆய்வாளர்
தத்துவமையம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

சொ. மணிவண்ணன்
முதுநிலை விரிவுரையாளர்
அரசர் கல்லூரி, திருவையாறு.

முனைவர் மு. மணிவேல்
இணைப்பேராசிரியர்
தலைவர், தமிழியல்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை - 21

புலவர் சு. மதியழகனார்
அரசு மேல்நிலைப்பள்ளி
வீரகனூர்
சேலம் மாவட்டம்-636 116

முனைவர் சி. மனோகரன்
எஸ். கே. எஸ். எஸ் கலைக் கல்லூரி
திருப்பனந்தாள் - 612 504

டாக்டர் ம. மனோன்மணி
முதல்வர், தமிழ்க் கல்லூரி
தவத்திரு சா. அ. த அ. கல்லூரி, பேரூர்
கோவை - 10

முனைவர் வே. இரா. மாதவன்
இணைப்பேராசிரியர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

சு. மாதவன்
ஆய்வாளர், தத்துவமையம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

அ. மாதவி
விரிவுரையாளர்
திரு ஆ. கோவிந்தசாமி அரசு கலைக் கல்லூரி
திண்டிவனம்

பா. மீனாகுமாரி
ஆய்வாளர், தமிழ்த்துறை
தூய வளனார் கல்லூரி
திருச்சி - 2

முனைவர் இரா. முத்துக்குமாரசாமி
திட்ட இயக்குநர்
ஆசிரியர் யுனெசுகோ கழக ஆராய்ச்சிப் பிரிவு
9, சிறிய தெரு
மாத்தூர் - 602 105

புலவர் அழ. முத்துப் பழனியப்பன்
சிரவையாதீனம்
கோவை - 6

முனைவர் ச. முத்துலட்சுமி
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி
பழனி - 624 615

பொன். முத்தையன்
அரசு ஆடவர் கல்லூரி
கும்பகோணம் - 612 001

முனைவர் தெ. முருகசாமி
முதல்வர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி - 630 003

முனைவர் ந. முருகன் (சேயோன்)
உதவி நிலைய இயக்குநர்
சென்னை வானொலி நிலையம்
சென்னை - 600 004

முனைவர் அரங்க. மு. முருகையன்
ஆய்வு உதவியாளர்
தமிழியல்துறை
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி - 605 014

மு. மூர்த்தி
ஆய்வாளர், தமிழ்மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005

சி. மெய்கண்டான்
தமிழ்த்துறை
பெரியார் ஈ. வெ. ரா. கல்லூரி
திருச்சி - 620 023

முனைவர் இரா. மோகன்
பேராசிரியர், ஒப்பிலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை – 21

முனைவர் து. லலிதா
அவினாசிலிங்கம்
பல்கலைக்கழகம்
கோவை – 641 043

பொ. பா. லோகாபிராமன்
ஆய்வாளர்,
தமிழிலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

முனைவர் சு. லோகாம்பாள்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
சித்தூர் அரசுக் கல்லூரி
பாலக்காடு – 678 104

முனைவர் மு. வசந்தமல்லிகா
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அவினாசிலிங்கம் நிகர்நிலை
பல்கலைக்கழகம்
கோவை – 641 043

இரா. வசந்தமாலை
தமிழியல்துறை
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி – 605 014

முனைவர் மு. வள்ளியம்மை
தமிழியல் துறை
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்

சை. வஹிதாகௌசியா
ஆய்வாளர், திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 21

முனைவர் கா. வாசுதேவன்
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அரசு ஆடவர் கல்லூரி
கும்பகோணம் – 612 001

முனைவர் திருமதி விஜி சந்தோஷ்
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை

சு. வெங்கடேசன்
முதுநிலை விரிவுரையாளர்
தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி
திருவையாறு – 613 204

முனைவர் சு. வேங்கடராமன்,
தலைவர்
இக்கால இலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 21

வேடசந்தூர் பாவா
பாவா ஆசிரமம்
221, நேதாஜி நகர்
பழநி – 624 602

இரா. வேலாயுதம்
ஆய்வாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

முனைவர் ந. வேலுசாமி
பதிவாளர்
பெரியார் பல்கலைக்கழகம்
அரசினர் பொறியியல் கல்லூரி
வளாகம், சேலம்–
அ. எண். 636 011

முனைவர் ஆ. வேலுசுவாமி
சுதந்திரன்
தலைவர், சிற்பத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

முனைவர் ஜலஜா கோபிநாத்
தலைவர், திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

முனைவர் த. ஜெயபிரேமா
ஆய்வாளர், தமிழ்த்துறை
கேரளப் பல்கலைக்கழகம்
காரிய வட்டம் - 695 581

முனைவர் ந. ஜெயவித்யா
திட்ட உதவியாளர்
இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

முனைவர் எஸ். ஆர். ஜெயவேலு
இயக்குநர், (ஓய்வு)
77, தங்கசாலைத் தெரு
சென்னை – 600 079

முனைவர் வ. ஜெயா
இணைப்பேராசிரியர்
தமிழியல்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை – 641 046

கே. ஏ. ஜோதிராணி
இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ம. ஷீலா
ஆய்வாளர்
டி/370 'மணி பவன்'
கீழப்பள்ளம்
வில்லுக்குறி – 629 180
கன்னியாகுமரி மாவட்டம்.